உ

சிவமயம்.

வியாசர் வடமொழியிற்செய்தபுராணம் (கஅ) உள்

கரு—வது

# கூர்மபுராணம்;

மதுரையி லரசுசெலுத்திய

## ஆதிவீரராமபாண்டியர்

தமிழில் மொழிபெயர்த்தருளியது.

இஃது

ம-ா-ா-ஸ்ரீ, கொன்றமாநகரம்

**சண்முகசுந்தரமுதலியாரவர்களால்**

பரிசோதித்து,

**பு,சு,கிருஷ்ணசாமிப்பிள்ளையவர்களாலும்**

**வேலூர் - குமாரசாமிஐயராலும்**

சென்னைத்

தண்டையார்ப்பேட்டை

இலக்ஷ்மீவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சல்வாஷூ சித்திரைமீ

உ

சிவமயம்.

# முகவுரை.

அநாதிமுத்த சித்துருவாகிய சிவபெருமான், அநாதிமல பந்தராகிய வான்மாக்கள் ஆணவமலநீங்கி முத்தியடைதற் பொருட்டுத் திருவாய்மலர்ந்தருளிய வேதாகமங்களை யோதியுணர்தற்குரியோர், பிராமணர், க்ஷத்திரியர், வைசியரென்னு மூன்றுவருணத்தவர்களேயாம்.

கொலைமுதலிய பஞ்சபாதகங்களைத் தவிர்ந்து நற்குண நற்செய்கையை யுடையராய்ச் சற்குருவையடைந்து சிவ தீட்சதாவான்களாய சற்சூத்திரர், சிவபெருமானருளிய சைவாகமங்களை யோதற்குரியராயினும், ஆரியபாடையைப் பயின்று தருக்கவியாகரணங்களை யுணர்ந்து மேற்கூறிய சிவாகமங்களை யோதல் இக்கலியுகத்தில் பலர்க்கும் அரிதாகலின், யாவரு மெளிதிலோதி யுணரும்பொருட்டு வேதாகமங்களின்விரிந்தபொருள்களைச் சுருக்கி வியாசரால் வடமொழியிற் புகன்ற புராணம்பதினெட்டுள.

அவற்று ளிவ் வுலகோற்பத்தியும், அதில் உற்பவித்த வான்மாக்க ளித்தனைவகைத்தென்றும், இவைகளை யுற்பவிப்பித்தோரின்னாரெனவும், மேல் ஆன்மவருக்கங்களிலுயர்ந்த தேவமானுடர்சந்ததிகளும், இவர்களிற் புண்ணியஞ்செய்தோ ரடைந்த பலனும், பாவஞ்செய்தோரடைந்த துயரும், இவ்விரண்டிற்குரிய விதிவிலக்குகளையும் திருவாய்மலர்ந்தருளி யிருக்கின்றன.

இப்புராணங்களை, நால்வகையோனி யெழுவகைத்தோற்றத்துள்ளு முயர்ந்த மானிடப்பிறப்பையடைந்த நாம் ஓதியு

ணர்ந்தாலன்றி, நாம்செய்யும் புண்ணியபாவங்களையும் அவற்றைக்கூட்டி முடிப்போனையுந் தெளிதலரிது. ஆதலால், இப்புராணங்களை வியாசரால் வடமொழியிற் றிருவாய்மலர்ந்தருளிய வண்ணம் பலஆசிரியர்களாற் றமிழில் மொழிபெயர்க்கப்பட்டதை யானச்சிடத்துணிந்தனன். சமயாபிமான சாத்திராபிமானமுடைய நம்மவர்கள் தத்தமிடத்திலுள்ள பிரதிகளையுதவுவார்களாயின், சிவதருமோத்திரத்திற் சிவஞானதானவியலிற் சொல்லிய பலன்களைப் பெறுவரென்பது, சரதம், சரதம், சரதம்.

சிவதருமோத்திரம் சிவஞானதானவியல்

(௩௭) வது செய்யுள்.

"இத்தகையபுத்தகத்தை யீந்தாருமெழுத்தொன்றற்
கத்தனமர்புரத்துறைவ ராயிரமாக்கற்பமுற
முத்தனையமுறுவனகை முளைத்தபிறைவளைத்தருதற்
றத்தையெனமொழிமடவார் தங்கியதேர்த்தானத்தே"

இங்ஙனம்,

☞ கொ—சண்முகசுந்தரமுதலியார்

---

உ

கணபதிதுணை.

# கூர்மபுராணம்

## பூருவகாண்ட அத்தியாய அட்டவணை.

பூருவகாண்ட அத்தியாய அட்டவணை முற்றிற்று.

பாயிரமுட்படஅத்தியாயம் (ருக) க்கு திருவிருத்தம்—உஎஉகூ.

## உத்தரகாண்ட அத்தியாய அட்டவணை.

உத்தரகாண்டஅத்தியாயஅட்டவணை முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—(௯அஅ)

காண்டம் (௨) க்கு பாயிரமுட்பட அத்தியாயம் (௯௭) க்கு திருவிருத்தம் (௩௭௧௭

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ருக | ங0 | னீன்முன் | னீன்முள் |
| ருஉ | ஙஉ | வேதாச்வனும் | வேதாச்சுவனும் |
| அரு | அ. | வெறுக்கொள | வெருக்கொள |
| கஎங | கங | பாலகந்து | பால்கலந்து |
| ஙஙரு | உஉ | சைய்கி | சைகி |
| ஙஙஎ | உங | சவுனகாராதி | சவுனகராதி |
| ஙகூங | க | சாதியினுதீங் | சாதியினுங்தீ |
| சஉஉ | கசா | ரொட்டியண் | றெட்டியாண் |
| சஙஉ | உஎ * | முப்பத்துமூன்றுவது | முப்பத்துநான்காவது |
| ஙஙகூ | ங0 | வென் | வெங் |
| சசா | ககூ | சிவழி | சிவிழி |
| சஅ | உ0 | மணிசிவிழி | மணிச்சிவிழி |

* இதுமுதல் நாற்பத்தொன்றுவது அத்தியாயவரை ஒவ்வோரொண் குறைந்திருப்பதை சரிசெய்துகொள்ளவும்.





உ

சிவமயம்.

# கூர்மபுராணம்.

## காப்பு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வெண்ணிலாக்கற்றைகான்று விளங்குமோர்பி
றைக்கோடின்றி, யெண்ணிலோர்பாகங்கூந்தற்பிடி
யெனவிருந்தவாற்றூற், பெண்ணொருபாகம்வைத்த
பிஞ்ஞகனுருவுகாட்டு, மண்ணலங்கவிகல்யானைய
டிமலர்சென்னிவைப்பாம்.



# பாயிரம்.

## கடவுள் வணக்கம்.

### நடேசர்.

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

சீர்பூத்தகுழவிமதி யமுதிறைப்பக்கங்கையெழுந் திவலைதூ
ற்ற, வார்பூத்தபொம்மன்முலைக்கௌரியிருகண்களிப்பவானோர்
போற்ற, வேர்பூத்தமணிமன்றத்தானந்தநடம்புரியுமெண்டோ
ண்முக்கட், கார்பூத்தமணிமிடற்றோன்கமலமலர்ச்சேவடியெங்
கருத்துள்வைப்பாம். (க)

### உமாதேவி.

வேறு.

புலவியிலுடைந்தசங்கம்புரிசடைத்திங்கட்கீற்றின்
மலைவறவிணைக்குமேல்வைமழுவலான்குறிந்துநோக்க
முலைமுகங்கோட்டிநோக்கிநாணொடுமுறுவல்பூத்துக்
கலைநிறைமதியிற்செய்யுங்கௌரிநாள்சென்னிசேர்ப்பாம். (உ)

### விநாயகர்.

மற்றையகடவுட்போற்றிவரம்பெறவிடையூறொற்றா
தொற்றைவெண்கோட்டுவேழமுவப்பமுன்வழுத்துமென்றோர்
முற்றுமக்களிற்றையேத்திமுன்னியயாவும்வாளா
பெற்றிடாதயலார்போற்றும் பேதைமையென்கொல்மாதோ.

### முருகக்கடவுள்.

வேறு.

கள்வாய்மடுத்துப்புரையேறிக்கனைத்துக்குமட்டியெதிரொடுக்கும்
புள்வார்கடப்பநறுந்தெரியல்புரளுந்தடந்தோள்வரையணைத்தும்
வெள்வேனெடுங்கட்குறத்திமுலைவேழமுழக்கக்களிகூருந்
தள்ளாமதுகைமுருகனிருசரணமெமதுதலைக்கொள்வாம். (௪)

### திருஞானசம்பந்தர்.

வெள்ளாங்குருகினிளம்பிள்ளைவிளையாட்டயரமுகையவிழுங்
கள்ளார்கமலத்தடம்புடைசூழ்காழிநகரினிடைத்தோன்றி
நள்ளார்சமயக்குறும்பெறிந்துநங்கைபாகன்பதம்போற்றித்
தெள்ளாரமுதக்கவிதைபொழிசிறுவன்பாதந்தலைக்கொள்வாம்.

## திருநாவுக்கரசர்.

[illegible]ல்லைராய[illegible]பூலையர்பொருந்தவிக்கிக்கட்ற்புகுத்துங், கல்லேபுணையாக்க[illegible]யெமிக் கவர்வாய்ப்புள்ளின்வாய்கிழித்த, கொல்லேறுயர்க்குங்காமாரிகுளிர்பொற் கமலத்தாள்பழிச்சுஞ், சொல்லேபுணையாய்ப்பவக்கடலுங் கடந்தோன்பாதந்துதித்திடு வாம். (சு)

## சுந்தரமூர்த்தியார்.

வேறு.

உரவுநீர்த்திரைக்கடலின்மலரயனேடுலகளைத்து முந்திழூ ந்த, கரியமால்வெண்கேழலுருவாகித்தனித்தேடி யின்னுங்கா ணு, முருகுலாந்தாமரைத்தாள்சிவப்பூரப்புரமெரித்தமுறுவலா னைப், பரவைபாற்றூதேகப்பணித்தநாவலன்மலர்த்தாள் பணி தல்செய்வாம். (எ)

## மாணிக்கவாசகர்.

வேறு.

உரைத்தற்கரியமுதுக்குறைவினூமைபேசவுரைபுகன்று [ந்து நிரைத்தெதற்றெதிர்ந்தசாக்கியர்புன் சமையக்குறும்பினிலையெறி வரைத்தோள்வழுதிதனைவிடுப்ப வைகையழைத்துமணிமன்றிற் பரத்தாடமர்ந்தவாதவூர்ப்பரமன்பாதம்வணங்குவாம். (அ)

## குருவணக்கம்.

எழுசீரடியாசிரியவிருத்தம்.

பாழியங்குடுமிப்பொலங்கிரிகுழைத்துப்படிந்தபின்பாயி ருள்செறிந்து, காழ்பழுத்தொழுகுமெம்மனக்கருங்கல் குழை ததுநற்கருணைநீராட்டி, யாழ்கடற்பிறவித்துன்பமுற்றழுந்தாத டிமலர்ப்புணையளித்தாண்ட, சூழ்சுடர்ஞானத்திருவுருவமைந்த சுவாமிதேவன்பதம்பணிவாம். (கூ)

## முதனூல்வழியும், ஆக்கியோன்பெயரும்.

கட்டலகமுழுதும்பொதிந்தபேழ்வயிற்றுக் கடவுண்மோட் டாமையம்பெருமான், வடமொழிதொகுத்த தெய்வமாக்கதை யைவடித்தசெந்தமிழினுற்செய்தான், படிமதஞ்செருக்கிப்பா குடல்பிளந்துபடர்சிறைமழலைவண்டோச்சு, மடிசினக்களிற்று மானவேல்வழுதியடலதிவீரபூபதியே. (௧௦)

பாயிரமுற்றிற்று.

# அநுக்கிரமணி.

---

## அறுசீரடியாசிரியவிருத்தம்.

சீர்கெழுமாயனொடுஞ்சிறப்புடைக்காதைகேளா
வேர்குலாய்க்கிடந்ததிண்டோளிந்திரத்துய்மனென்னும்
பார்புகழ்ந்தினிதினேத்தும்பஞ்சவர்குலத்திற்றோன்றும்
வேரியந்தொடையன்மார்பன்வீட்டின்பமடைந்தவாறும். (௧)

வளிதட்வரினும்பாடுமகதியாழ்முனிவனொடுந்
தளிமதுப்பிலிற்றுமென்பூந்தருநிழலரசன்கேட்ப
வளியுடன்கூர்மமுன்னமறைந்திடும்வருணநான்கின்
றெளிவுறுமொழுக்கநான்காச்சிரமமுந்தெரித்தவாறும். (௨)

எள்ளருஞ்சிறப்புவாய்ந்தவியல்பிரகிருதித்தோற்றந்
தெள்ளிதினுரைத்தவாறுந்தேன்றுளிமாரிசிந்தும்
வள்ளவாய்க்கமலப்புத்தேட்கினிதின்வகுத்தகாலம்
பள்ளநீருலகம்யாவுமறிந்திடப்பகர்ந்தவாறும். (௩)

துறுமயிர்க்குறுந்தாட்செங்கட்டுணிகதிர்நிலவுகாலம்
பிறைநிகரெயிற்றுப்பேழ்வாய்ப்பிறங்கொளிவராககற்பம்
பறிவுறவறைந்தவாறும்பல்வகைத்தோற்றத்தோடுஞ்
செறிதமோகுணச்சிருட்டிசிறப்புடனுரைத்தவாறும். (௪)

தண்ணறுந்துளவினோனுந்தாமரைப்பொகுட்டின்மேய
விண்ணவன்றானும்போற்றவிழைவொடுவரத்தைமுன்னங்
கண்ணுதலீந்தவாறுங்காலனைக்காலாற்செற்ற
வண்ணலன்பொழுகவட்டமூர்த்தியாயமர்ந்தவாறும். (௫)

பொற்பிதிரணிந்துவீங்கும்புணர்முலையமுதத்தீஞ்சொற்
கற்பகக்கொம்பர்போலுங்கௌரியைத்தவங்களாற்றி
யற்பொடுமிமையவேந்தனரிதினிற்பயந்தவாறும்
வெற்பிளங்கொடியையீசன்விழைவொடுவேட்டவாறும். (௬)

பிருகுவைமுதலாயுள்ளமுனிவரர்பிறந்தவாறு
மருவுமீரைந்துமன்னர்க்கொருத்தியவ்வயிற்றிற்றோன்ற
வரிதுணர்தக்கன்றன்னையரன்முனிந்துரைத்தவாறும்
வெருவுறவன்னோன்வேள்விவீரன்முன்னழித்தவாறும். (௭)

இரணியனிரணியாக்கனிறந்தபின்னமரினேற்று
மருமலிதுளவத்தண்டார்மாயவன்முதலினோனைப்
பொருவருஞ்சமத்தில்வென்றுகாரிசூலத்திற்பொன்றி
யரனுடைப்புருவமந்தகாசுரன்பெற்றவாறும். (௮)

மாவலியளிப்பஞாலமுழுவதுமாயனெய்திப்
பாவடிப்படுத்திமுன்னமபண்பொடுகவர்ந்தவாறுந்
தேவரும்புகழும்வாணன்சிவனுருப்பெற்றவாறு
மோவில்சீர்ப்புலத்தியன்றன்மரபுநன்குரைத்தவாறும். (௯)

இருட்குறும்பெறியும்வெய்யோன்மரபினிதிசைத்தவாறுந்
திருத்தகுகுலத்திராமன்சிறப்புடனுதித்தவாறு
மருத்தியினன்னோன்கானமடைதலுமணங்கைவவ்வவ்
வெருக்கொள்வாளரக்காகோனைவேரொடுமறுத்தவாறும். (௧௦)

சேதுவினிராமனெய்திச்சிவலிங்கமமைத்துத்தூய
தாதவிழ்மலர்கடுவித்தாழ்ந்தருச்சித்தவாறு
மேதமிலயோத்தியெய்தியெரிமணிமௌலிசூடி
மாதவரோடுந்தீயோர்வரன்முறைகேட்டவாறும். (௧௧)

வண்டுழாயலங்கற்றோளான்வைகுந்தமடைந்தவாறு
மண்டாபாற்கடலைமுன்னங்கடைதலுமமுதத்தோடுந்
தெண்டிரைமுகட்டிற்றோன்றுந்திங்கணன்மரபினூற்ற
வொண்டிறல்வேந்தர்தூயமரபினையுரைத்தவாறும். (௧௨)

வெண்மதிமரபிற்கண்ணன்மேதகவுதித்துவெம்போர்
நண்ணியகஞ்சன்றன்னைநாமறக்கொன்றுவிட்டிப்
பண்ணமையமுதத்தீஞ்சொற்பாவைநற்பின்னையாதி
யெண்ணருமடவாரின்பமினிதினிற்றுய்த்தவாறும். (௧௩)

கண்ணய்வெண்பூதிபூசிக்கண்டிகைமாலைசூடிப்
புண்ணியத்திங்கள்வேணியானிருபாதம்போற்றித்
தண்ணறுந்தாமத்திண்டோட்சாம்பனைப்பயந்தவாறு
நண்ணருமிலிங்கபூசைநயப்புடன்புரிந்தவாறும். (௧௪)

உலகெலாம்விழுங்குஞ்சோதியுமிழ்ந்தழற்பிழம்பாய்நின்ற
கலைமதிகண்ணிப்புத்தேள்கழலிணைசென்னிதேடி
யலர்செழுங்கமலத்தோனுமாயனுமறிந்திடாத
மலைவறுகாதைகண்ணன்மார்க்கண்டர்க்குரைத்தவாறும். (௧௫)

ஈனுலகத்திலுள்ளவிடர்தணிந்தீர்ந்தேன்பில்குங்
கானவர்துளவமாயன்வைகுந்தங்கலந்தவாறு
மூனமில்வியாதனெய்தியுகத்தியல்புரைத்தவாறும்
வேனில்வேட்செற்றோன்காசிவிழுச்சிறப்பிசைத்தவாறும். ௧௬

மனுமரபுரைத்தவாறுமண்டலத்தளவையாவு
மினிதினிலிசைத்தவாறும்பனிக்குறும்பெறியும்வெய்யோர்
புனிதமாமியற்கையாவும்புகாறப்புகன்றவாறுங்
[illegible]ரைத்தவாறும். (௧௭)

உரைத்திடுமூலகீரோழின்செய்தியோர்ந்துரைத்தவாறும்
வரைத்தநாவலந்தீவுற்றவண்மைகடெரித்தவாறும்
பரித்திடுமேருவெற்பின்சிறப்பினைப்பகர்ந்தவாறு
நிரைத்திடுநவகண்டத்தோரியற்கைகணிகழ்த்துமாறும். (௧௮)

மாலைவெள்ளருவிக்குன்றின்வானவர்வதிந்தவாறுஞ்
சால்புறுமேனைத்தீவினியற்கைகள்சாற்றுமாறும்
பால்படவெய்துமன்வந்தரவிதிபகர்ந்தவாறுஞ்
சீலநூல்வியாதன்மூன்றுமுகந்தொறுஞ்சேர்ந்தவாறும். (௧௯)

வதரிகாச்சிரமந்தன்னின்மகேசுரன்மேயவாறுந்
ததைமலர்த்துளவோன்கேட்பச்சாங்கியமறைந்தவாறுஞ்
சிதைவில்சம்பிரதாயத்தைத்தெளிவுறப்பகர்ந்தவாறும்
பதமலர்பணிந்துபோற்றப்பத்திமையுரைத்தவாறும். (௨0)

விச்சுவவுருவங்காட்டிவிமலன்முன்னின்றவாறு
மிச்சையிற்சத்திபின்னுமியல்பினையிசைத்தவாறு
நச்சரவணிந்தபுத்தேள்விபூதியைநவின்றவாறு
மெச்சுசீர்ப்பிரவஞ்சத்தின்மிகுதியையுரைத்தவாறும். (௨௧)

மாயையின்புணர்ப்பைநன்கின்வகுத்தெடுத்துரைத்தவாறு
மாயதத்துவத்தினுற்றதரிசனமறைந்தவாறும்
பாயநல்யோகமியாவும்பாற்படவிசைத்தவாறு
மேயநற்கருமந்தன்னையினிதினிற்புகன்றவாறும். (௨௨)

ஆசமனத்தின்செய்தியரில்கெடவுரைத்தவாறுந்
தேசுடைப்பிரமசாரியியற்கையைத்தெரித்தவாறு
மாசிலில்லறத்தின்செய்திமாண்புடனுரைத்தவாறும்
பூசுரர்மகிழ்ச்சிறப்பப்பொதுவிதியுரைத்தவாறும். (௨௩)

அல்லவைமொழிந்தவாறுநித்தியகருமமாய்ந்து
சொல்லியவாறுந்தென்னம்புலத்திறோர்தெவிட்டத்துய்ப்ப
நல்லனவூட்டுமாறுநவையறுசிராத்தத்துண்ணப்
புல்லியோர்தம்மைநீக்கிநல்லவர்பபுகன்றவாறும். (௨௪)

தென்புலத்தோர்கட்கூட்டுமுறைநனிதெரித்தவாறு
மன்பெருஞ்சூதகத்தோடியலுமாச்சௌசவுண்மை
நன்கினினுரைத்தவாறுநவையிரீக்கருமமியாவு
மன்பினில்லறத்தோர்தங்கள்பகுதியுமறைந்தவாறும். (௨௫)

எண்ணிரண்டாயதானமுதலவாவியம்புகின்ற
புண்ணியதானமியாவும்புகரறவுரைத்தவாறு
நண்ணும்வானப்பிரத்தர்செய்தியைநவின்றவாறு
மெண்ணருஞானம்வல்லவெதியொழுக்கிசைத்தவாறும். (௨௬)

துறந்தவர் தண்டச்செய்திதொகுத்தினிதுரைத்தவாறு
மறங்கெழும்பிரமகத்திதண்டத்தைவகுத்தவாறு
நிறங்கிளர்கமலப்புத்தேணெடுந்தலையுகிரிற்கொய்து
பிறங்குசீர்க்காரியையம்பெட்பொடுமேற்றவாறும். (உஎ)

புகலுமாபாதகத்தின்றண்டங்கள்புகன்றவாறு
நிகழுமப்பாதகத்தின்றண்டத்தைநிறுத்துமாறு
மிகலுறுபுரங்கண்மூன்றுமெங்தைநக்கெரித்தவாறு
மகிழ்சிவபூசைசெய்யுமான்மியமுரைத்தவாறும். (உஅ)

கறைமிடற்றெந்தைநாமங்கருதலனுகிவாளா
வறைதருபுளிஞன்பெற்றபேற்றினையறைந்தவாறு
மிறைவனோர்பாலனுண்ணப்பாற்கடலீந்தவாறு
முறுசலந்தரனைவெய்யநேமியாலொறுத்தவாறும். (உகூ)

கண்மலர்பறித்துச்சாத்திக்கமழ்நறுந்துளவப்புத்தேள்
பெண்ணொருபாகற்போற்றித்திகிரிமுன்பெற்றவாறும்
வண்ணவிற்சுவேதனீசன்மலரடிக்கன்புபூண்டு
நண்ணியமறலிசீர்த்திநாமறவென்றவாறும். (கூ0)

உலகினிற்கடவுட்டீர்த்தமியாவையுமுரைத்தவாறு
மிலவிதழ்மாயைபொம்மலிளமுலைவனப்புநோக்கி
நிலவுநாற்றன்னபித்தைநெடுந்தவர்மருளவையன்
பலியிரந்தன்னோர்மாதர்நாண்பலிகொண்டவாறும். (கூக)

முனிவரர்தெருளவையன்முதுமறையுரைத்தவாறும்
பணிவரையணங்காங்கெய்தியவர்க்கருள்பயந்தவாறும்
வினையறுசிலாதன்மைந்தன்மெய்த்தவநோக்கியெந்தை
தனதுபேருருவுமியார்க்குந்தலைமையுமளித்தவாறும் (கூஉ)

நால்வகையொடுக்கத்துள்ளபகுதியுநவின்றவாறும்
பால்புரைநீற்றுமேனிப்படர்சடைப்பவளக்குன்றை
மாலயன்முதலோரேத்துங்கருணைவாரிதியைப்போற்றுஞ்
சீலமுமுலகில்யாருந்தெருளுறவுரைக்கலுற்றேன். (கூகூ)

அநுக்கிரமணி முற்றிற்று.

---

காப்பும் பாயிரமுமுட்பட திருவிருத்தம் - சச.



# பூருவகாண்டம்.

—ഗ0ഗ—

முதலாவது

## இந்திரத்துய்ம்மன் முத்திபெற்றவத்தியாயம்.

(அறுசீரடியாசிரியவிருத்தம்)

திருவீற்றிருக்குமணிமார்புந்திண்டோளுங்குமுகையவிழ்ந்து
மருவீற்றிருக்குந்துழாய்முடியும்வயங்குங்கதிர்காலைம்படையு
மருளூற்றிருக்குந்தடங்கமலக்கண்ணுமாகிமோட்டாமை [ம்.
யுருவேற்றிருந்தோற்போற்றியவனுரைத்தகாதையுரைசெய்வா

சீற்றங்காமமயக்கமறவெறிந்துஞானப்பொருடேர்ந்து
மாற்றவரியபுலனைந்துமடக்குமறைதேர்முனிவோர்கள்
போற்றும்பருவமீராறுபுரியுமுயர்சத்திரயாக
மாற்றுநைமிசாரணியத்தருள்கூர்சூதமுனியடைந்தான். (உ)

வந்தமுனிவன்றனைப்போற்றிவயங்குமணியாசனமளித்துப்
புந்திமகிழ்ந்தாங்கருக்கியமேமுதலபூசைபுரிந்ததற்பி
னந்தமில்லாவியாதமுனிபுராணநினைக்குநவில்போதிற் [றல்
சிந்தைமகிழ்ந்துமயிர்பொடிப்பவதன்பேர்நினைக்குச் சேர்த்தின

கமலப்பொகுட்டுவட்டவணைக்கடவுள்வேள்வியியற்றுதலுந்
தமரத்திரைப்பாற்கடற்றுயிலுமுகுந்தன்றானேநின்றுருவா
யமர்கூற்றனநற்புராணமுற்றுமறையவேண்டியாணவமாந்
திமிரக்கடற்குப்புணையிது மொழியென்றெவருஞ்செப்புவார்.

கேட்டோர்மம்மர்க்கிழங்ககழுங்கூர்மபுராணங்கிளத்துகென
மோட்டாமையினல்லுருவெடுத்தமுதல்வனுலகமுழுதளந்த
தாட்டாமரைத்தாளினிதேத்திவியாதன்பாதந்தலைக்கொண்டு
வேட்டோருள்ளங்களிந்துருகவதனைவிரித்துவிளம்புவான்.(ரு)

மறுமையிலதென் றுரைத்திடுவோர்க் குரைப்போர்தவம்
வாணெடுங்கண்ணு, ரிறுமென்மருங்குல்போற்றேயுமிகழாவுண்
மையறிவினர்கட், கறியவுரைப்பினவர்செய்யுந்தவங்கண்மேன்
மேலளவிலறிப், பிறைவெண்முத்தங்கிடந்தொளிருமுலைபேர
ணூரும்பெருக்குமால். (சா)

தோற்றமூலகமீண்டொடுங்கறுக்டீர்மன்வந்தரமுனிவ
ராற்றலரசர்மரபவர்தஞ்சரிதமென்னுமோரைந்துஞ்
சாற்றுபுராணவிலக்கணமென்றறிஞருரைப்பர்தவறின்றிப்
போற்றுபுராணம்பதினெட்டின்பெயருமுறையிற்புகலுவாம். ௭

வேறு.

பிரமநற்பதுமம்வைணவஞ்சைவம்பேருலகேத்துபாகவத, மருமறைதெளித்தபவுடிகநாரதீய மார்க்கண்டமாக்கினேயங், கருதரும்பொருள்சேர்பிரமகைவர்த்தமிலிங்கநல்வராகமெய்க்காந்த, மருவுவாமனஞ்சொற்கூர்மநீண்மச்சங்காருடஞ் சிறந்தவாயுவியம். (௮)

வேறு.

எனவீரொன்பான்புராணமுளபிரமாண்டப்பேரியைந்தோங்கும், பனிதோய்விசும்புதனிபுரக்கும்புத்தேண்முதலோர்பயின்றேதுந், தனியோர்புராணமுளதிவற்றின்சார்பின்முனிவர்வகுத்தினிதிற், புனையும்புராணமீரொன்பானுளவாமவற்றின்பெயர்புகல்வாம். (௯)

வேறு.

நவையில்சனற்குமாரம்வளர் நாரசிங்கம்புகழ்நந்திதுருவாசஞ்சொற், சிவதருமமியனுரதீயங்காபிலம்புகழ்மானவஞ்சீர்வாய்ந்த, வவுசனம்வாசிட்டலைங்கம்வாருணங்காளிகமுலகத்தருள்சாம்பேசஞ், சவுமியமங்கிரஞ்சவுரமுயர்பராசரமாரீசம்பார்க்கவமாஞ்சாற்றின். (௧0)

வேறு.

செஞ்சேறாட்டுஞ்சிற்றறுவைமுனிவீர்கூர்மந்தெளிந்தோர்க
ளெஞ்சாதுரைக்கின்மூவைந்தாம்புராணமென்பர்மற்றீது
நஞ்சார்மிடற்றுப்புத்தேளின்சீர்த்திநவிலுமிதனைநவின்
றுஞ்சோர்பலராங்கதனளவையாறுயிரமென்றுரைப்பரால். ௧௧

கரைகொண்டிரங்குதிரைக்கடல்வான்குழிசியாகக்கறையனல்வா
ளரவங்கயிறுய்மதிதறியாவமரரமுதங்கடைந்தெடுப்ப
வரைமுன்னிடலுந்தாழாதுமாயோன்வளர்கூன்புறத்தாமை
யுருவிற்றுங்கிக்கடன்மதித்துவானோர்க்கமுதமுதவினான். (௧௨)

அன்னோன்மாயைப்படாம்புதைப்பவண்ணலயிராவதப்பாகன்
றன்னோடமரர்நாரதனேமுதலமுனிவர்தாம்ரைக்கண்
முன்னோன்மருங்கினினிதிருக்குமுளரித்திருவையுணராம
லின்னோள்யாவளெனவுலகமீன்றோனிதனையியம்புவான். (௧௩)

வேறு.

சங்கொடுநேமிகிள்ளைதாதவிழ்கமலத்தண்போ
தங்கையோர்நான்கினேந்தியாயிரம்பசும்பொற்றோட்டுப்
பங்கயமலரின்வைகும்பைந்தொடியிவளேபார்க்கி
னெங்கண்மாஞாலமாதியுலகெலாமடைவினீன்றாள். (௧௪)

பொறிவரிச்சுரும்புண்டாடுந்தாமரைப்பொகுட்டின்மேய
விறைவனேமுதலதேவரீங்கிவள்புணர்க்குமாயைச்
சிறையிடைப்படுநரல்லாற்றீர்க்குநரில்லையென்ன
வுறிதடவந்துவெண்ணெயுண்டசெங்கமலம்விண்டான். (௧௫)

ஈங்கிவள்புணர்க்குமாயைக்கடல்கடந்தேறினோர்கள்
யாங்குளரிசைத்தியென்னவின்னநற்காதைமுன்னாந்
தீங்கறவென்பாற்கேட்டோன்மறையவர்திலகன்யார்க்கு
நீங்கருமாயைநீங்கிச்சிவனடிநீழல்சேர்ந்தான். (௧௬)

ஆயநான்மறையோன்முன்னைப்பவத்தினிலாழிசூழ்ந்த
மாயிருஞாலங்காக்கும்வழுதியர்குலத்திற்றோன்றல்
பாயொளிப்பரிதிவைவேலிந்திரத்துய்மன்பைந்தார்ச்
சேயனெனதுதொண்டிற்சிமிழ்ப்புறுமனத்தனானான். (௧௭)

அத்தகைவழுதியென்பாலடைவினிப்புராணங்கேட்டு
முத்தகமுரிஞ்சுகொம்மைமுகிழ்முலைக்கிடப்பானல்குந்
தத்துவங்கடந்தஞானத்தனிப்பொருள்பதத்திற்சேர்வான்
சித்தமாலுற்றதென்னத்தெருளுறவணங்கிச்சொன்னான். (௧௮)

வருபிறப்பதனிலிம்மைப்பெயரொடுமம்மர்நீங்கித்
தெருளின்முற்பவங்களங்கைநெல்லியிற்றெளிந்துதோன்ற
விருபிறப்பாளனாகியென்னுழைப்போந்தியார்க்கும்
கருதருஞானமீயாவுந்துகளறக்கற்றபின்னர். (௧௯)

வேறு.

வைவச்சுதமன்வந்தரமகல்வுற்றுழிமன்னு
வெவ்வக்கடலிடுமாணவமகலத்துவரிலவங்
கொவ்வைக்கனிநிகர்வாயுமைபங்கிற்றிகழ்குழகன்
றெய்வக்கமலசசேவடிசென்றெய்துவையன்றே. (௨0)

அந்நாள்வருகாறுஞ்சுடரவிர்வெண்மதிமரபிற்
றென்னாமணிமுடிமன்னவர்திறைதந்தடிபரவப்
பைந்நாகமிசைத்தங்கியபாரேழுமளிப்பா
யென்னாவுரைசெய்யத்தொழுதெழின்மாநகர்புக்கான். (௨௧)

உலகம்பொதுவறநான்முறையோராழிசெலுத்தி
யலகில்லனபரிமாமகமறையின்வழியாற்றி
நிலவும்புகழுலகேழினொடேழுஞ்செலநிறுவிக்
கலையின்கடல்களைகண்டவன்வாழ்நாள்களைகண்டான். (௨௨)

தோலாவிறன்முடியோனுயிர்தொலைவுற்றபினெறிநீர்ப்
பாலாழியுடுத்தோங்கியபடர்தீவினிலெய்தி
மாலோனெனவைகுண்டநகர்ப்போகமகிழ்ந்து
மேலோனருமறைநன்குலமேம்பாடுறவுதித்தான். (௨௩)

அருமாமகமுறுநற்பலன்விழையாதினிதாற்றி
வருநாளிலென்னுருவாமொருகலைவந்தெதிர்மன்ன
விருதாண்மலர்பணியாமகிழ்வெய்தாவடையாளந்
திருமாலதுநீயாரைகொலெனமாதுரைசெய்வாள். (௨௪)

மன்றற்றுளவத்தார்புனைமாயன்றனிமாயை
யென்றற்புதமொடுநீயெனைநினைவாயிறையடியிற்
சென்றுற்றவர்மருளும்படிசெய்யேனுயர்ஞானத்
தோன்றிச்சிவனருளாலவனடிநீழலிலுறைவாய். (௨௫)

எனலும்புவிபுனறீவளிவெளியாயிவையெய்தாத்
தனியோர்பொருடனையானறிவகைசாற்றுதியென்ன
நினையும்படியுலகுண்டருணெடுமால்சொலுமென்ன
வனையோனுடறடவந்தலர்மயிலன்பினகன்றாள். (௨௬)

புருவத்திடையிருகண்கள்புகுத்திப்புலனைந்தும்
வெருவுற்றிடுவிடயங்களினெய்தாதுவிலக்கி
யருவத்துறுமான்மாவினையான்மாவினொடுக்கி
மருவுற்றிடுதுளவோனடிமன்னுற்றிடுபோழ்தின். (௨௭)

செந்தாமரைமலர்மாதிருமுலையானைதிளைக்கு
மந்தாரகலத்தோனுயர்மறையோனெதிரணுகக்
கொந்தார்மலர்தூவாமொழிகுழறுவிழிகளியா
வெந்தாயெனவிருதாண்மலர்தொழுவண்ணலிசைப்பான். (௨௮)

வேறு.

கருதருதத்துவம்விபூதிகாரிய
மருவுகாரணம்பெறவாற்றிமற்றவை
தெருளினோர்ந்துயர்நெறிசெல்லவேண்டுந
ரரனடிப்பூசனையாற்றல்வேண்டுமால். (௨௯)

ஓதியவருணநல்லொழுக்கம்பூண்டுறு
காதலில்வருசிமிழ்ப்பனைத்துங்கையொரீஇ
மாதர்கூர்சகத்தினைமாயையென்றுயி
ராதியம்பரஞ்சுடராகப்பாவிப்பாய். (௩௦)

பாவனைதானுமுப்பகுதியென்னுரு
வேறறவுணர்வதொன்றவ்வியத்தமேற்
றுவறவுணர்வதொன்றென்றுதற்பர
மேவரும்பாவனையென்பர்மேலையோர். (௩௧)

முடிவினின்மொழிந்தருள்பிரமமாலயற்
கடிமுடிதேடுதற்கரியதாகுமச்
சுடரினைநறுமலர்தூவிக்கைதொழு
ஞொடிவறமுத்திவீடதனிலொன்றுவாய். (௩௨)

எனத்தொழுதிந்திரத்துய்ம்மனைத்துருத்
துணிப்பரதத்துவம்விபூதிகாரிய
நினைப்பருங்காரணம்பெறவிருத்திநீ
மனக்குறவுரையெனமகிழ்ந்துகூறுவான் (௩௩)

நித்தியானந்தமாய்நிமலமாயருஞ்
சித்தமாயேகமாம்பிரமந்தோபர
தத்துவமதனயிசசொரியந்தாவில்சீர்
வித்தகமுனிவர்விபூதியாகுமால். (௩௪)

காரியஞ்சகமதன்காரணந்தனித்
தேருமவ்வியத்தமவ்விறைவன்செய்தொழி
னோர்பொறப்படைத்தவையளித்துநீக்குத
லோரில்யானதற்குயிராகுமொண்சுடர். (௩௫)

என்பவையறிபவினிதிஞோர்ந்துயர்
வன்புலனடக்கியயோகமாட்சியாற்
றென்புலக்கூற்றுயிர்குடித்தசேவடிக்
கன்பூண்டிடுதியென்றறையக்கூறுவான். (௩௬)

தத்தமவருணநல்லொழுக்கஞ்சார்ந்துவெம்
பைத்தலையரவணிபவளவார்சடை
யத்தனைப்போற்றுகென்றருளிற்கூறினு
யுத்தமவருணம்யாதொழுகம்யாதரோ. (௩௭)

மூன்றுபாவனையுடைத்தெனமொழிந்ததோ
ரான்றமெய்ஞ்ஞானமேதளப்பருஞ்சகந்
தோன்றியவாறெதுதோற்றமெந்துணை
யென்றநன்மரபினதியல்பியாவையால். (௩௮)

அறையுமன்வந்தரத்தளவையாதுகொல்
பெறலரும்விரதமாசாரமியாவைபின்
னிறைபுனற்றீர்த்தமெத்துணையநீள்சுட
ரொளிகதிர்முதலகோணிலைகளெய்கொலாம். (௩௯)

நீணிலப்பரப்பதனளவுமெத்துணை
காண்வருதீபமால்வரைதடங்கடல்
யாணர்வெண்டிரைநதித்தலங்களெத்துணை
மாணுறவினிதினின்வழங்கென்றோதினான். (௪௰)

கோட்டமில்குணத்தினன்குடந்தம்பட்டெமைக்
கேட்டவைமுழுவதுங்கிளத்தியம்பினால்
வேட்டிடுவரம்பலவீந்துவிண்ணவர்
நாட்டினோபரவுவைகுந்தஞ்சார்ந்தனம். (௪௧)

வேறு.

ஆங்கவன்ருனுந்துயிலுணவருந்த லரும்பெறற்குமரர்மேலாசை, கோங்கெழில்கவற்றிச்சுணங்குபூத்தலர்ந்தகுவிமுலைமகளிரின்புறுத, லீங்கிவைமுதல யாவையுநீத்திட் டியானெனதென்பவைநீக்கி, யோங்குசிவனன்மாவினைப்பரமான்மாத் தன்னொடும்பிறிதறவொடுக்கி. (சஉ)

தன்னுளமதனிற் சகமெலாநோக்கித் தானதிற்புகுந்திடாதொழுகி, முன்னதின்முன்னுயுரையுணர்விறந்தமுழுமுதலாகியொன்ருகிப், பின்னமற்றின்றிக்குணங்குறிகடந்தபிரமபாவனையினிலடையா, வுன்னருமியோகத் துறங்கிநற்சிவன் முத்தனுயொழுகிடுநாளில். (சங)

பரிதியஞ்செல்வனுன்முகக்கடவுள் பதியினிலேகெனப்பணிப்ப, மருவியயோகமாட்சியிற்பனிதோய் வானிடைப்படர்ந்துசெல்போதின், விரிகதிர்விமானமெய்தலுமதன்மே லிவர்ந்துயர்விண்ணவர்முதலோ, ரிருபுடைநடப்பமானசோத்திரமால் வரைமிசையினிதுசென்றிறுத்தான். (சச)

ஆயிரகோடிவெங்கதிர்ச்செல்வ ரள்ளிருட்பிழம்பெடுத்தருந்தும், பாயொளிமழுங்கப்புதுவெயிலெறிக்கும் பனிவரைமுகட்டினுட்புகுந்து, தாயெனவுலகமுழுவதும்பூத்த தனிச்சுடரதனைமுன்னுதலு, மேயபேரொளியாயருவுருவாகுமெய்ப்பொருளுருவினெய்தியதே. (சரு)

எய்தியவொளியிற்ரேன்றியவுருவை யிருகணுங்களிப்புறநோக்கிக், கையிணைமுகிழ்ப்ப வுளங்கனிந்துருகக் களிப்பொடுமெய்ம்மயிர்பொடிப்ப, வையனதடியிற்பணிதலுமெழுகென்றன் பினிற்றழுவமாமறையோன், மெய்யினின்றநந்தகோடிசூரியரில் விரிகதிர்ப்பிழம்பெழுந்ததுவே. (சசு)

எழுந்தநற்சோதியிரணியகருப்பனுறையுளாயாவரும்யாவுந், தொழுந்தகுமுத்தர்புகும்வழியாகுஞ்சுடரவன்மண்டலத்தடைந்து, செழுங்கனற்பிழம்பாமுக்கணெம்பெருமான்றிருவருள்பெற்றுவேறின்றி, யழுங்கலில்சிவமாந்தன்னுருத்தானுயமர்ந்துயரின்பமுற்றதுவே. (சஎ)

இன்னணங்குழந்தைமதிதவழ்குடுமி யிறைவனையேத்துநரல்லான், மன்னுதற்கரிதாமுத்திவீடதனின்மருவுதற்கரிதெனவழங்க, வன்னவற்குளாத்தகாதையையெமக்குவிரித்துரையெனவருமறையோன், பொன்னகர்க்கிறைவன்கேட்டலுமுலகம்பொதிந்தசேவடிப்பிரானுன்புகல்வான். (சஅ)

என்றருந்தவத்துச்சூதமாமுனிவன் முனிவரர்க்கினிதினி னிசைத்தான், மன்றலிக்காதைகேட்டுளோர்பயின்றோர்மற்றதி னேரொழுத்துணர்ந்தோ,ரொன்றியசெல்வத்தமர்ந்துகிண்கிணி க்காற்சிறுவனாயினிதினினுயிர்த்துக், கொன்றைதேன்றுளிக்க மன்றினின்றுடுங்கூத்தனதடிநிழலுறைவார். (சசு)

இந்திரத்துய்ம்மன்முத்திபெற்றவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கூசு.

---

இரண்டாவது

## வருணாச்சிரமதன்மமுறைத்தவத்தியாயம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பொன்னகர்க்கிறைவனாதியமரரும்புலன்களைந்துந்
தன்னுழையடக்கும்வீணைமுனிவனுந்தாழ்ந்துகேட்ப
மின்னகுநேமிசங்கம்வெங்கதைசிலைவாளேந்தி
மன்னியகூர்மரூபமான்முகமலர்ந்துசொல்வான். (க)

நித்தியமாகியொன்றாய்நிமலமாயெங்குமாகித்
தத்துவங்கடந்துநின்றமகேச்சுரன்றன்னுண்மைகாச்
சித்துருவாகியான்முற்றோன்றினேன்சிறந்தவென்பே
ருய்த்தினிதுணரிநாராயணனென்னவிளைப்பர்மேலோர். (உ)

பாய்திரைசுருட்டுநீத்தண்ணீர்ப்பளிக்கலன்முகட்டிற்செங்க
ணாயிரஞ்சூட்டராவின்றிதுயிலமர்ந்தபின்னர்க்
காய்கதிர்தோன்றுமேல்வைக்கண்மதர்நீந்தியாங்கு
மீயுயருலகமூன்றும்படைத்திடவிழைவுற்றேனால். (ங)

ஆயிடையெனதுநெஞ்சத்தருளொடுமகிழ்ச்சிபூப்ப
மாயிருஞாலம்போர்த்துமல்கிருட்பிழம்புசிக்கும்
பாயொளிப்பரிதிகோடியெழுந்தென்பசுந்தேன்பில்குஞ்
சேயிதழ்க்கமலப்போதிற்செல்வன்முன்றோன்றக்கண்டேன். ()

அவ்வழிகுழவித்திங்களடுசிலைவடிவேற்செங்கேழ்க்
கொவ்வையங்கனிவெண்முத்தங்குலவுமோர்கமலம்பூத்துத்
தெய்வமென்கொம்பிரண்டுசெவ்விளநீருந்தாங்கிப்
பௌவவாரிதியிற்பொன்னம்பங்கயத்துதித்ததன்றே. (ரு)

மங்கலையாகியாவுமயக்குறுபொருளாயென்றுந்
தங்குமாமாயையாகித்தனிப்பிரகிருதியாகுஞ்
செங்கயனெடுங்கட்செவ்வாய்த்திருவினைக்கண்டுவேதன்
பொங்கியவுவகையோடுமெய்க்கிலைவபுகலலுற்றான். (சு)

யான்படைப்பவைகளெல்லாமவிதல்காரணமாயென்றும்
வான்படுபூதமியாவுமருளுருபந்தமெய்தந்
தேன்றெளிந்தமுதினோடுங்கலவியகனிவாய்த்தீஞ்சொற்
கான்படுநறுமென்கூந்தற்கமலையைப்பணித்தியென்றான். (எ)

என்றலுங்கமலவீட்டிலிளங்கொடிவதனநோக்கி
நின்றபல்லுயிர்களியாவுஞ்சகத்தினினீங்காவாகி
வன்றிறற்குயவனாளும்வனைகலத்திகிரிபோலச்
சென்றியல்கருமத்தாம்பிற்றிரிதரப்புரிதியென்றே. (அ)

தந்தமவருணத்தோறுமொழுக்கினிற்சார்ந்துநாளுஞ்
சித்தமாசெறிந்துபொய்யிற்றீர்ந்துநான்மறையுந்தோந்து
மைத்தவழ்மிடற்றுப்புத்தேண்மலரடிபோற்றினோர்பா
லுய்த்திடேல்மாயையென்னவங்கெறியொழுகல்செய்தாள். (கூ)

ஆங்கதன்பின்மரீசியங்கிராப்பிருகுதக்க
னோங்குமத்திரிவதிட்டன்புலத்தியன்புலகனுற்ற
நீங்கெறிகிருதுவென்னுமொன்பதுதிறத்தினோரைப்
பாங்கினில்வேதன்யோகமாயையிற்படைத்தல்செய்தான். (க0)

வேதியர்முகத்தில்வேந்தர்விறல்கெழுதுணைத்தோள்வெற்பிற்
றீதறுவணிகர்செம்பொற்குறங்கினிற்சூத்தர்செய்ய
பாதபங்கயத்திலீன்றான்பதுமன்முன்படைத்தநால்வ
ரோதியமகங்களியாவுமாற்றுதற்குரியராவார். (கக)

வேதமோர்நான்குமாதியந்தம்வேறிலவாய்முன்ன
ரோதியவாக்கநாகுமுளைத்தவிம்முறையிற்சார்ந்த
வேதமினூல்களியாவும்விழுமியவிவற்றிற்றீர்ந்த
தீதுநூலவற்றினின்றோர்செல்வியரல்லரன்றே. (கஉ)

தோற்றுழியுயிர்களியாவுமறிவின்றித்தோற்றுந்தத்த
மாற்றுநல்லொழுக்கந்தன்னாலறிவுறுமதற்குநாளு
மேற்றதோர்காலந்தன்னில்விருப்பொடுவெறுப்பாங்கெய்திப்
போற்றுறுதருமநீக்கித்தீவினைபுகுதுமன்றே. (கங)

உரைத்திடுமணிமாவாதிசித்திகளுறுதவாற்று
னினைத்தநற்பொருள்கள்வாளாபுகுந்திடாநெறியிற்றீர்ந்து
வருத்துதாமதத்தினையசித்திவந்தெய்துமீதும்
பொருந்துகாலங்கடம்மிற்பொன்றிடுமென்பமாதோ. (கச)

வேறு.

உடுப்புமுகத்தகூர்ங்கொழுவினுழுதற்செயலாளுணரு
மடுத்துமுயன்றவாணிகத்தாலடைவர்பயன்மற்றவர்புரிவான்
றொடுத்தகருமத்தொடர்பனைத்துந்தொகுத்தான்வேதன்சுவாய
யிடுத்தற்கரியகருமங்களனைத்துமுறையின்விளம்பினான். [மபு

மனுவாண்டுரைத்தகருமத்தின்வழியேபிருகுமுதலான [நெறி
முனிவோர்யாருந்தெளிவுறமுன்மொழிந்தாரன்னோர்மொழிந்த
யினிதினோதலோதுவித்தலியல்பின்வேட்டல்வேட்பித்தல்
புனிதர்க்கீதருமேற்றன்மறையோர்புரியுந்தொழிலன்றே. (க௬)

ஓதல்புரவிமகமுதலவேள்வியாற்றலமருடற்ற
லீதலரசர்தொழிலியல்பிற்கொடுத்தலோதன்மகமியற்றல்
நீதிலுழவுவாணிகமானளித்தல்வணிகர்செயலடுதல் [ர்
கோதின்றேவல்செயல்பாகவெச்சம்பின்னோர்க்கெனக்குறித்தா

இனையவாறுதொழிலமைத்தாங்கியலாச்சிரமநிறுவினு
ரனையயாவையெனிற்பிரமசரியமமைந்தவில்வாழ்க்கை [டி
புனைபொற்சடைவள்ளுகிர்குறை யாவானப்பிரத்தம்புலன்வாட்
மனமுற்றடக்கியெவற்றினையுமறுக்குஞ்சந்நியாசமன்றே. (க௮)

இல்வாழ்வுற்றோர்தருமமழற்கருமமதிதிபூசையெச்சங் [யல்
கொல்லேற்றண்ணலடிபணிதல் கொடுத்தல்வானப்பிரத்தர்செ
தொல்லாரணங்கள்பயிற்றலழற்கருமமூலமடகுதுய்த்த [ல்
னல்லோரொதிரிற்பகுத்தருந்தனையேறுயர்த்தோனடிபோற்ற

முற்றுந்துறந்துமுதுக்குறைந்தோர்தருமமையமேற்றுண்டல்
பற்றற்றிருந்துதவமாற்றன்மவுனம்பரபாவனைபுரிதன்
மற்றைப்பிரமசரியத்தோர்தருமம்வளர்தீத்தொழில்சந்தி
யற்றநோக்கிச்செயல்பலியேற்றுண்டல்குரவனடிபணிதல்(௨0)

நீத்தபருவமோரைந்துநீக்கித்தனதுமனைக்கிழத்தி
பூத்துநீராடியநாடொட்டுரைத்தநாளிற்புணர்கிற்போன்
வாய்த்தவில்வாழ்பவனென்னும்வானப்பிரத்தனறத்துறந்தோ
னேத்தும்பிரமசாரியனும்பிரமசாரியென்பரால். (௨க)

அருப்புமுலையார்பூப்பெய்திநீராட்டயருநாண்முதலாய்த்
தெரித்தநாள்களீராறிற்றிங்கடோறுமகிழ்சிறப்பக்
கருப்பமினிதினுறுமளவுங்கலவாளுகிற்கருவழித்தோ
னுருப்பநரகமிவற்காகுமென்னமறைகளோதுமால். (௨௨)

நெற்றிற்றனிக்கண்வானவனைவழுத்தலவுபாசனநெறியின்
முற்றத்தமர்ந்தவிருந்தினருக்கருத்தல்வேதமுறையுணர்தல். [ல்
சொற்றநெறியிற்றென்புலத்தோர் துய்ப்பவினிதினுணவளித்த
கற்றோரெவருமில்வாழ்வோர்கடனென்றுலகிற்கழறுவரால். ( )

வேற்றோர்புலத்தினெய்தினுந்தன்மனைவிவீந்தாளாலும்
போற்றுமவுபாசனமொழிதல்புலவோர்புரியாரில்வாழ்வோன்
மாற்றவரியமூவர்க்கும்வருந்துப்புரவுவழங்குதலா
லேற்றமாகுமுலகுநெறியல்லாவொழுக்கமியல்பாகா. (௨௪)

மருவற்கரிதாமுயர்வீடுசேர்த்திமல்லற்பெருஞ்செல்வந்
தருமத்தளவின்வந்தடைந்தவாற்ருற்றருமம்விடாது
பெருகுந்தருமம்பொருள்காமமிவைகள்பேசிற்சாத்துவிதந்
கருதற்கரியராசதந்தாமதத்தின்வழியேகலந்திடுமால். (௨௫)

ஆசின்றுயர்ந்தசாத்துவிதத்தமர்ந்தோர்மேலாங்கதியடைவர்
பேசவருராசதகுணத்திற்பொருந்தினோர்கள்பெட்பினொடு
தேசினுறுமத்திமகதியிற்சேர்வர்வளர்தாமதகுணத்தோர்
மாசுபூத்தவிழிகதியினுலகமிகழமன்னுவார். (௨௬)

வேறு.

அறந்திறம்பாதுநாளுமரும்பொருள்காமந்துய்ப்போர்
சிறந்தவிவ்வுலகந்தன்னிலளப்பருஞ்செல்வமெய்தி
மறங்கிளர்வடிவேலுண்கண்வானவர்மகளிரோடு
முறங்கிடாதின்பந்துய்க்குமுலகினிலினிதுவாழ்வார். (௨௭)

அறம்புரிந்தன்றியோங்குதுறக்கத்தினடைதலாகா
சிறந்தநற்பொருள்செய்தல்லாற்றிகழ்தருமின்பஞ்சேரா
வுறைந்தகாரணத்தினன்றிக்காரியமாகாவோடு
கறங்குபோற்பிறவிஞானத்தல்லதுகடக்கலாகா. (௨௮)

தாமரைப்பொகுட்டின்மேயசதுமுகக்கிழவனாதி
தேமலர்த்தருக்களீறுச்செறியுநல்லுலகமியாவு
நாமநூற்றருமந்தாங்கிநின்றனநல்லோர்யாருங்
காமுறல்வேண்டுமென்றுங்களைகணுந்தருமமென்றே. (௨௯)

வைதிகத்தருமம்வாய்ந்தபிரவர்த்திநிவர்த்தியென்ன
வெய்துமந்நிவர்த்திஞானத்தொழுகன்மற்றையதென்ஞான்றுங்
கைதவத்தெவையுமாற்றலாங்கதுகடிந்துமுன்னைச்
செய்தவஞானந்தன்னினிற்பதேசெவ்விதாமால். (௩0)

பொறைகொடைகருணைதானம்பொய்ம்மொழியழுக்காறின்மை
யுறைபுமுட்கரணங்காத்தல்பயில்புறக்கரணமோம்பல்
குறளைசொல்லாமைநாளுமுனிவின்மையுயிர்கொல்லாமை
பிறர்மனைநயத்தலின்மைநன்மொழிபிறழாவாய்மை. (௩௧)

புண்ணியநன்னீராடல்கடவுளர்பூசையாற்ற
லுண்ணிறைமகிழ்ச்சிவேதபாரகர்க்கூட்டநீய
கண்ணயவாமைகள்ளாதொழுகுதல்கடுஞ்சொலின்மை
யெண்ணியவிவைகளுன்குகுலத்திற்குமியைந்தவாமால். (௩௨)

தம்மொழுக்கியன்றபார்ப்பார்சார்குவர்பிரமலோகந்
தெம்முனைப்பட்டவேந்தர்கற்பகநீழல்சேர்வார்
மெய்ம்மையவணிகர்வாயுபுவனத்தின்மேவுவார்க
ளிம்மையிற்றுறந்தோர்சேர்வரிரணியகருப்பலோகம். (௩௩)

காழ்த்தவைம்புலனுஞ்செற்றுக்கரணங்களடக்கினாரு
மூழ்த்தமென்சருகுமாந்தியோகினிலுறங்குகின்றோர்
சூழ்த்துநான்முகனும்விண்ணோர்தொகுதியுஞ்சுருதிநான்கும்
வாழ்த்துதற்கரியமுத்திவீட்டின்பமருவிவாழ்வார் (௩௪)

என்னலுமகதிவீணைநாரதர்முதலோர்யாரு
மன்னுமாச்சிரமநான்காய்வகுத்தினிதுரைக்குமேல்வைப்
பின்னுமோர்யோகிதன்மைபேசினையைந்துண்டாங்கொல்
பன்னுமாச்சிரமமென்னப்பைந்துழாய்முகுந்தன்சொல்வான்.()

உரைத்தவாச்சிரமநான்கேயொவ்வொன்றேயிரண்டதாகும்
வரைத்தவையுரைத்துங்கேண்மினுலகுருவாணனென்றுந்
திருத்தகுநெறிவழாதநயிட்டிகனென்றுஞ்செவ்வண்
விரித்தநூற்பிரமசாரியொழுக்கிரண்டாகமேவும். (௩௬)

உவகுருவாணனென்போன்மறைமுழுதுணர்ந்தபின்னர்
நவையறுமகளிர்தம்மைவேட்டுளோனயிட்டிகன்சீர்
தவலருங்கேள்விமுற்றித்தன்னுயிருலக்குங்காறுந்
துவரிதழ்மடவாரின்பந்துய்த்திடாதொழுகுவோனே. (௩௭)

ஓதுமில்லறத்தினின்றேனுயருதாயினன்மிக்க
சாதகனெனவிரண்டாந்தன்மையனவற்றின்முன்னோ
னேதமில்கடன்கண்மூன்றுங்கழித்தபின்னில்விற்றீர்ந்தோன்
றீதில்சாதகன்சாங்காறுமில்லொழுக்கதனிற்சேர்வோன்.(௩௮)

வேறு.

வானப்பிரத்தன்சந்நியாசிவளர்தாபசியென்றிருவகையாய்த்
தானத்துறும்வானப்பிரந்தர்தம்மின்முன்னோன்மனைநீத்துக்
கானத்துறைவோன்மற்றையவன்கன்னிக்கற்பின்மனைவியொடு
மோனத்திருந்துதீக்கருமமுறையினுற்றுமுரவோனே. (௩௯)

பரவுஞ்சந்நியாசியரிற்பாரமேட்டியோகியென
விருவருளர்மற்றவரின்முன்னோனிகலும்புலன்களுள்ளடக்கி
மருவும்யோகத்திருந்துமுத்தியடையமுயல்வோன்மற்றையவன்
கருதுமெவையுந்தானுகிக்கைவல்லியத்திற்களிப்போனே. (௪0)

இனையநான்காச்சிரமமொவ்வொன்றிரண்டாயியன்றவாறின்வி
னினையிலஞ்சாமாச்சிரமநிகழ்த்தாச்சிரமம்படைத்ததற்பின்
கனைவண்டிமிருந்தாமரைமேற்கடவுடக்கன்முதலோரைத்
துணைவினைக்கியனைத்துயிரும்படைத்தீரென்னச்சொற்றனனால்

புவனமனைத்துமாங்கவரும் படைத்தார்கமலப்பொகுட்டு றைவோ, னவையில்சிருட்டியிவ்வாறுபுரியுநாமற்றவையளிப் போங், கவர்முத்தலைவேற்படைக்கடவுளவற்றைக்கருணையொ டுந்துடைக்குந், நவவில்லொருமூவருமொன்றேயென்னமறை கள்சாற்றுமால். (௪௨)

திங்கட்குழவிகிடந்துறங்குஞ் செம்பொற்சடையெம்பெருமாற்
தங்குபிராமிமயேச்சுரியக்கரபாவனையாந்தனிமூன்று [குத்
துங்கமுறுபாவனையுளவாமவற்றிலெனக்குச்சொல்லுங்கா
லெங்கும்விளங்குமக்கரபாவனையொன்றென்றேயியம்புவார். ()

கமலப்பொகுட்டுப்புத்தேளுங்காயர்மேனித்திருமாலு
மிமிழ்தென்கடலின்விடநுகர்ந்ததேவுமொருவரிங்கிவரி
லமைவுற்றொருவர்தமைப்பூசையன்பிற்புரியினொருமூவர்
தமைமுற்றுணர்ந்துவழுத்துவோர்பெறுபேறதனிற்சார்குவார்

இனையமூவர்தமைநாளுமலர்தூஉப்பழிச்சியிறைஞ்சுவோ
ரனையகடவுளடையாளந்தரிக்கநுதலிலயனடியார்
வனைகதிலகமாலடியார்நீற்றுற்சாந்தாற்சூலம்போற்
புனைகதிரிபுண்டரநீற்றுற்புராரியடியார்வனைந்திடுக. (சரு)

அருளினோடுமெவரவர்தஞ்சின்னம்புனையினத்தேவைத்
தெருளிற்றரித்தவாறுகுந்திரிபுண்டரம்வானுதற்றீட்டிற்
கருதவரியமுத்தேவுந்தரித்ததாகுங்கலைமதிக்கீற் [ன்.
றுருவச்சடையோற்றொழுமவரோமுத்தியடைவரெனவுரைத்தா

வருணாச்சிரமதன்மமுரைத்தவத்தியாய முற்றிற்று.
ஆ திருவிருத்தம்—கஙசு.

---

மூன்றாவது
## ஆச்சிரமமுறையுரைத்தவத்தியாயம்.

ஓதுவருணாச்சிரமமியாவையுமுரைத்தாய்
நீதறவவற்றின்முறைசெப்புகெனநல்யாழ்
மாதவன்முதற்கடவுள்வானவனுரைப்பத்
தாதவிழ்நறுந்துளவமாலினிதுசாற்றும். (க)

பிரமசரியங்கருணைபெற்றுமனைவாழ்தன்
மருவரியகானினிடைமாதவமியற்ற
லொருவியெவையுந்தினமுமொவ்வொருநகர்க்கட்
டிரிதலெனவோதுமுறையேமுறைதெரிக்கின். (உ)

சங்கிவைபிறழ்ந்துவருமியாவையவையென்னிற்
கோங்குமுலைமாதரொடுகூடுவதன்முன்ன
மோங்கியசந்நியாசியெனவுற்றிடலுமாகுந்
தீங்கெறிமெய்ஞ்ஞானநெறிசிந்தைதனிலெபற்றால். (ங)

இல்லறமுயன்றுகடன்மூன்றுமினிதீர்ந்தா
லல்லலறவேடவும்பாடியாயபணிகிற்பா

முல்லைநகைமாதர்கடிமுற்றியதினைத்தி
னெல்லையதியாகியுணர்வுற்றிடலுமாமால். (௪)

ஈங்கிதினுயர்ந்தநிலையெய்திடுவதல்லா
லாங்கதினிழிந்தநிலையெய்திடுதலாகா
மூங்கைமுடவன்செவிடன்முற்றுநிதியற்றோன்
வீங்கறிவிலாரெனினுமேவுமெதியாவார். (௫)

முதுக்குறைவின்ஞானநெறிமுற்றியபினல்லா
லெதித்திறமடைந்திடினிழுக்குறுமிவற்றின்
மதித்தொருநல்லாச்சிரமமன்னிவிளிகாறும்
விதித்தநெறிநிற்பினுயர்வீடடைவரன்றே. (௬)

கொடுப்பவர்கொடுத்தபொருள்கொள்பவர்களியாரு
மெடுத்துமறைசொல்பிரமமென்றுநனியீவோ
ரடுத்தவிரதங்களினிதாற்றுபலன்யாவும்
விடுத்தவர்மெய்ஞ்ஞானநெறிவீடடைவரன்றே. (௭)

போக்குவழிகண்டிடைபுகாதுறுமுலண்ட
மாக்கியிடுகூடதனையாத்திடுதல்போல
நீக்குகருமம்பலநினைந்துபுரிவோனை
வீக்கியிடுமக்கருமம்வேதனையுறுத்தே. (௮)

ஆதலினறம்பலன்விழைந்திடுதலின்றி
மேதகவியற்றுநர்கள்விஞ்சையிலரேனுந்
சாதல்பிறவித்துயர்தவிர்ந்துவிடமுண்டோன்
பாதநிழலுற்றினிதுவாழ்வர்பலகற்பம். (௯)

பலன்விழைவுறாதுகருமம்பலவியற்றி
னலகறுபவத்திலுளபாபமறுமற்று
னிலவியமனம்புனிதமாவதுநிகழ்ந்தால்
மலைவிலுயர்ஞானம்வரும்வரிலடைவனவீடே. (௧௦)

பிஞ்சுமதியஞ்சடைமிலைந்தபெருமானை
நெஞ்சுறநினைந்துபுலனைந்தையுநிறுத்தி
வஞ்சமுறுமாணவமெறிந்தமதிவல்லோ
ருஞ்சிடுவரென்பதனையாவருணர்கல்லார். (௧௧)

நன்னெறியினாச்சிரமநான்குமுறைசெய்தே
மின்னெறியினின்றவர்களின்பமடைகிற்பா
ரன்னெறிதிறம்பினரழன்றுதழல்கக்கும்
வெந்நரகில்வீழ்வரெனவிண்டுவுரைசெய்தான். (௧௨)

ஆச்சிரமமுறையுரைத்தவத்தியாயமுற்றிற்று.
ஆக திருவிருத்தம்—௧௫௪.

நான்காவது

## பிரகிருதித்தோற்றமுரைத்த வத்தியாயம்.

இன்னணம்வருணச்சிரமநல்லொழுக்கம்யாவையும்வழுவறக்கேட்டுக், கன்னியம்படலைத்துழாய்துயல்வருதோட்கருமுகில்வண்ணனைநோக்கிப், பொன்னவிர்திதலைமுலைசுமந்தொல்கும் புலோமிசைநகைவிருந்தயரு, மன்னவர்திலகன்மகதியாழ்முனிவன்மகிழ்சிறந்தீங்கிவைபுகல்வான். (க)

அளப்பரும்புவனமொருங்களிப்பவர்யாராங்கவையாருழையுதிக்குந், துளக்கறயார்மாட்டொடுங்குமெவ்வாறுநியமிக்கப்படுமவைதொகுத்து,' விளக்குறவுணர்வினியமனஞ்செய்வானெவனிவைவிளம்புதியென்னக், களக்கனியனையதிருமறுமார்பன்கருணைகூர்ந்தாங்கவைபுகல்வான். (உ)

பொருவிலவ்வியத்தமாயழிவின்றிப்புனிதமாயனந்தமாயார்க்குந், தெரிவரிதாகியெங்கணுமுகமாய்ச்சிறப்புடனெவற்றினுநிறைந்த, கருதரும்பொருளாமகேச்சுரன்முனுங்காரணமாய்ச்சதசத்தாய், பெருகுமவ்வியத்தமுயர்பிரகிருதிப்பிரதானமென்றினியம்பும். (ங)

சத்தமுன்கிளக்கும்விடயமோரைந்துந் தாழ்ந்திடும்விடயமோரைந்துஞ், சித்தமீருயகரணமோர்நான்குஞ் சிறந்தஞானேந்தியமைந்து, மொத்திடுகருமவிந்தியமைந்துமின்றியேமுழுமுதலாகி, நித்தமாயொன்றாயசலமாயொளியாய் நிருமலமாய்வெறுவெளியாய். (ச)

தன்னுழைத்தானேயுறைவதாய்த்தன்னைத்தான்பணிகொள்வதாயார்க்கு, முன்னையதாகிப்பிரமமாய்ச்சிவமாய்முதலொடுமந்தமில்லதுவாய், மன்னுமுக்குணமுக்காலமில்லதுவாய்வாக்கொடுமனந்தொடர்வரிதாய்த், துன்னுதற்கரிதா யெங்கணுநிறைந்தசோதியாம்பிரமமென்பதுவும். (ரு)

புருடனுமாகநான்கும்வைகுதலும்பிரகிருதிக்குமுன்புகன்ற, விரியுமுக்குணமுந்தூக்குபோற்றுலைநாவெனச்சமமெய்துறுசிறப்பின், வருபிராகிருதப்பிரளையமாகுமற்றிஃதுயர்மகேச்சுரற்கோ, ரிரவுநற்றிருட்டிபகலிவைமாற்ற மலதவற்கிராப்பகலிலையால். (சா)

அன்னதோர்கங்குற்புலரியிலுலகுக் காதியாயநாதியாமகேசன், கன்னியர்முலைமேற்புனிற்றிளந்தென்றற் கன்றுதைவருதலுங்காம, மன்னியுள்கலங்குமாறுபோற்புருடன்வளர்பிரகிருதியைநோக்கத், தன்னிலைகலங்குமதனிடையுதித்ததுயர்மகத்தெனுமங்கதனே. (எ)

அனையநன்மகதத்துவத்தினைப்புத்திமகான்மதிபிரக்கினையா ன்மா, வனைதருங்காதிமேதையீச்சுரனென்றுரைப்பர்மற்றிதனி ல்வைகாரி, யினியதைசதம்பூதாதியாங்காரந்தோன்றுமற்றிவற் றினைக்கருதாப், புனையபிமானம் புட்கலனுன்மாச் சீவன்மந்தர மெனப்புகல்வார். (அ)

உரைத்தவாங்காரமூன்றினும்விளங்கு பஞ்சதன்மாத்திரை யோங்கி, நிரைத்திடுபஞ்சபூதமிந்தியங்க ணிகழ்த்துமிந்தியத்தி னுக்கியைய, வரைத்ததெய்வதங்கடோன்றுமவ்வியத்தந்தனில் மனந்தோன்றுமம்மனத்தாற், றிருத்தகுகருத்தா யானெனதெ ன்னும்விகாரத்திற்சேர்குவனென்றே. (௯)

சொன்னவாங்காரமூன்றில்வைகாரிதுலங்குசாத்துவிதவா ங்கார, மன்னதில்வருமிந்தியவதிட்டானதெய்வதந்தைச்சதமத னின், மன்னுமிந்தியங்கடோன்றிடுமனமும் ஞானத்துங்கருமத் தும்வழங்கும், துன்னுபூதாதிதன்னில்வான்முதலாம்பூததன்மா த்திரைதோன்றும். (௧0)

வேறு.

விளம்பரியபூதாதியாங்காரம்விகாரமுறிற்
றுளங்கலருஞ்சத்ததன்மாத்திரைதோன்றுமாங்கதனிற்
களங்கமறுமாகாயந்தோன்றுமதன்குணங்கருதி
லளந்தறியவரிதாகுஞ்சத்ததன்மாத்திரையாமால். (௧௧)

பனிவிசும்புவிகாரமுறிற்பரிசதன்மாத்திரையடையு
மனிலமதனிடைத்தோன்றுமதன்குணமுமூன்றுருந்
துணைவில்வளிவிகாரமுறிலுருபதன்மாத்திரைதோன்றுங்
கனலதனிற்றோன்றுமதன்குணங்கருதிலுருபமாம். (௧௨)

எய்துமழல்விகாரமுறவிரததன்மாத்திரைதோன்று
மையபுனலிதிற்றோன்றுமதன்குணமுமிரதமாம்
பெய்புனலின்விகாரத்தாற்கந்ததன்மாத்திரைபிறக்கும்
வையமதிற்றோன்றுமதன்குணந்தெரிகின்மணமாகும். (௧௩)

ஒலியுடைத்தாமாகாயமூறுடைத்தாம்வளியதனைச்
சுலவலாற்றோன்றும்வளியிருகுணமாமிருகுணத்த
வுலவையுருவடைந்தவழல்பொதிந்ததனாலொழிவரிதாய்
நிலவுமொருமூன்றுகுணம்வெய்தாயநெருப்பினுக்கே. (௧௪)

முக்குணமாமழலிரசகுணப்புனலைமூடியதால்
மிக்கபுனற்கொருநான்குகுணமேவுநான்குகுணந்
தொக்கபுனல்மணமுடைத்தாய்புவியதனைச்சூழ்தலாற்
புக்குகுணமோரைந்துமுரியவாம்புவியினுக்கே. (௧௫)

கருதரியவவ்வியத்தத்தருளானுங்காண்வருசீர்ப்
புருடனுஞூற்றிடலானும்பொருவரியமகத்தாதி,
மருவியிடும்விசேடாந்தமேழுமேவான்புனலி
னுருவமுறுகுமிழிபோற்பிரமாண்டமாயுதிக்கும். (கசு)

வடமேருவுயர்கொப்பூழ்க்கொடியாகமற்றதனை
யடையாகும்வரையனைத்துமவையாகவாழிநீர்ப்
புடைமேவிவருகருப்பசலமாகப்பொருவின்மறை
நடையாவும்வகுத்தருளுநளினத்தோனுதித்தனனால். (கஎ)

முருகவிழுஞ்செங்கமலப்பொருட்டிலுறைமுன்னவனே
யுருவுடையோரியாவரினுமுந்தியநல்லுருவுடையோன்
புருடனிரணியகருப்பன்மறைக்கிழவன்புவனத்துக்
கொருமுதல்வன்கஞ்சனெனவவனையேயுரைத்திடுவார். (கஅ)

தோற்றிடுமண்டத்தின்பதின்மடங்குபுனல்சூழு
மேற்றபுனல்பதின்மடங்காங்கெரிசூழுமவ்வெரியைக்
காற்றதனிற்பதின்மடங்குசூழ்ந்திடுமக்காற்றதனைப்
போற்றரியதனிவிசும்புசூழ்போகப்புதைத்திடுமால். (க௯)

அகல்விசும்புபுதைக்குமயராங்காரமாங்கதனைப்
புகலுமகத்துவமேபுதைக்குமகத்துவத்தைத்
துகளறநல்லவ்வியத்தஞ்சூழ்போதுமாங்கதனி
னிகலுடையோவிருபெயரிந்தசிவசித்தரினிதுறைவார். (உ0)

எவ்வுயிர்க்கும்வித்தாகுமீசனாமகேச்சுரனுஞ்
செவ்விதருமவ்வியிரண்டாமுருவண்டஞ்செறிந்ததனிற்
றிவ்வியத்தின்முதலுதித்ததேவன்மூன்றாமுருவ
மவ்விறைநான்முகமுறுதலாங்கவனான்காமுருவம். (உக)

இரசதத்தின்குணமெய்திமுன்முகனாயுலகீனும்
பரவுற்றசாத்துவிதப்பண்பின்மாலாயளிக்கு
முறைபெற்றதமோகுணத்தாலுருத்திரனாய்த்துடைத்தருளு
மருவுற்றவிசையிருனுமருவாமல்மகேச்சுரனே. (உஉ)

வேறு.

ஆதியிலுதித்தவற்றாலநாதியம்பரமன்மிக்க
மூதுணர்வுடைமைதன்னால்முதுக்குறைவினெஞ்ஞான்றுஞ்
சாதலும்பிறப்புந்தோயாத்தன்மையாலயன்மற்றியார்க்கு
மேதகுவீரமாற்றல்விண்டுவென்றுரைப்பர்மாதோ. (உ௩)

நாரத்திலமர்ந்தவாற்றால்நாரணனிமையோர்தம்மிற்
சீருற்றமகத்தாம்வாற்றான்மகேச்சுரன்சேர்ந்தோர்மாயை
வேர்முற்றுமரிந்தவாற்றானிவன்விளையாட்டதன்றே
நீர்முற்றுமடங்கலின்றுகாந்தருவவிக்கும்பண்பே. (உ௪)

இன்னணம்பகுதிதோற்றஞ்சுருக்கிமற்றியம்பல்செய்தே
மன்னியபுத்திமுன்னும்மலரயன்வகுத்தயாவும்
நன்னயத்துரைத்துமென்னாகிளவண்டுபாடுங்
கன்னியந்துளவமாலைக்கார்முகில்வண்ணன்சொல்வான். (உ௫)

பிரகிருதித்தோற்றமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கஎ௫.

ஐந்தாவது

## பிரமாவினுடையகாலவளவையுரைத்தவத்தியாயம்.



தாதளவிமணிவண்டுவிளையாடுந்தாமரைமென்றவிசின்மேலோற், கோதுறுகாலங்கணிப்பினளப்பினுள்கழிந்திடிலுமுரைத்தலாகா, தாதலினுலிங்கதனைமிகச்சுருக்கியுரைப்பனவர்க்கறைந்தகால, மூதறிவினோரொவருமோரிரண்டுபரார்த்தமெனமொழிவரன்றே. (க)

உரைத்தவிருபரார்த்தமுமேமலரயனுக்காயுளளவுரைக்குங்காலம், விரைக்கமலத்தவன்மானத்தாங்கவையும்விளம்பியவாண்டொருநூறென்ப, வரைத்தபரமிருதிதனினொருபாதிபரார்த்தமெனவகுப்பரீண்டு, நிரைத்துவருகாலங்கள்பிறழாமலுரைப்பனெனநிகழ்த்தலுற்றான். (உ)

ஈரொன்பான்முறையிமைத்தலொருகாட்டைகாட்டைமுப்பானியைந்துசேர்த, லோர்கலையக்கலைமுப்பானென்றியதோர்முகுர்த்தமுயர்முகுர்த்தமுப்பான், சேர்தல்மானுடர்க்கொருநாளன்னுள்மூவைந்துறுதல்சிறந்தபக்க, மார்வமொடுமிரண்டுபக்கமியைந்ததொருதிங்களெனவறைவர்மாதோ. (ங)

திங்களோராறுகொண்டதயனமுத்தராயனமுஞ் சிறப்பினோடு, தங்குதக்கணாயனமுமெனவிரண்டாமிவையிரண்டுந்தழுவலோர்யாண், டிங்குரைத்தவுத்தராயனம்பகலாமிருவிசும்பினுறையுந்தேவர், கங்குல்தக்கணாயனமாமிவைகூடநாளொன்றாய்க்கணிப்பர்மாதோ. (ச)

இன்னநாளொருமுன்னூற்றறுபதுறல்திவ்வியவாண்டென்பரீது, பன்னீராயிரம்புணர்தல்சதுர்யுகமாதியுகத்தளவைபார்க்கி, னன்னநாலாயிரம்யாண்டடுத்தயுகமொருமூவாயிரம்யாண்டாகு, மன்னதுவாபரமிரண்டாயிரம்வருடங்கலியாண்டாயிரமாமென்றே. (௫)

ஆதியுகந்தனிற்சந்திநானூறாண்டியர்சந்தியஞ்சனூ
றேதுதிரேதாயுகத்துச்சந்திமுன்னூறுயர்சந்தியஞ்சமுன்னூ

றேதில்துவாபரசந்தியிருநூறேரிருநூறுசந்தியஞ்ச
மாதர்கலியுகச்சந்திநூறுசந்தியஞ்சநூறென்பமாதோ. (கூ)

ஆகவுயர்திவ்வியவாண்டாறிரண்டாயிரஞ்சதுரியுகமதாகு
ம், பாகுபடுசதுர்யுகமெழுபானென்றிறத்தல்மன்வந்தரமாம்ப
ண்பிற், சேகின்மனுப்பதினால்வரிறந்திடுகாலத்தளவைதிருமா
லுந்திப், போகுயர்தாமரைப்பொகுட்டுப்புத்தேளின்பகலென்
னப்புகல்வர்மாதோ. (எ)

பகலளவெத்துணைக்காலமத்துணையகங்குலுக்கும்பகர்ந்த
காலம், புகல்பிரமன்பகற்போதைக்கற்பமெனப்புகல்வரொருக
ற்பந்தன்னை, வகைதருகாலத்தளவேகற்பமெவற்றினுக்குமொரு
மனுவின்காலம், நிகழ்வதெவனவ்வளவேபதினான்குமனுவினுக்
குநிகழ்த்துங்காலம். (அ)

கற்பமுன்னூற்றறுபதுசெல் காலமறைக்கடவுளுக்கோர்வ
ருடமாகுஞ், சொற்றயாண்டொருநூறுகழித்தல்பரம்பரமற்கு
த்தொகுத்தவாயுள், மற்றிவ்வாறொருநூறுவருடமுநான்மறை
யோர்க்குசென்றகாலே, யுற்றசராசரமனைத்தும்பிரகிருதியதனி
டைப்போயொடுங்குமன்றே.

ஆதலினப்பிரளயத்தைப் பிரகிருதப்பிரளயமென்றறைவ
ரந்தண், போதுறைபுத்தேள்முதலாமெத்தேவுமிறந்துபிறந்து
ழல்வர்போற்று, மேதகுகாலத்துருவாய்க்காலவளாகடந்துவெ
றுவெளியாயென்றுஞ், சாதல்பிறப்பில்லாததனைப்பிரமமகேச்
சுரனென்றுரைப்பர்தக்கோர். (க0)

படைத்தருளுமெனவுரைத்தகடவுடனக்காயுளினோர்பரா
ர்த்தம்போக, நடப்பதெவனெனிலிரண்டாம்பரார்த்தத்தின்மு
தற்கற்பம்நவின்றகற்பத், தெடுத்தவேழாங்கற்பம்பாற்மகற்பமி
னிதினீண்டியலுங்கற்ப, மடுத்துலகைக்கூறெயிற்றிற்கீண்டெடு
த்தவுயர்வெள்ளைவராககற்பம். (கக)

ஈங்கிதனைத்தெருளுறயான் விரித்துரைப்பன்கேட்டிரொன
விலவச்செவ்வாய்க், கோங்குமுகைகவற்றுமுலையிராணிவரி
நெடுங்கட்குவளைபூத்த, வீங்குதடங்தோட்கடவுள்வளிதடவந்தி
டின்வாளாமிழற்றுபாணித், தூங்கிசையதிவ்வியாழ்முனிகேட்
பமணிவண்ணன்சொல்லலுற்றான். (கஉ)

பிரமாவினுடையகாலவளவையுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ_திருவிருத்தம்—கஅஎ.

---

ஆருவது

## சுவேதவராககற்பமுறைத்தவத்தியாயம்.

மீபுயருங்கரைக்குறம்புபடவெறிந்துமூவுலகும்விழுங்கிமே ல்போய்ப், பாயசெழுந்திரைகரத்தாலுயிரனைத்துமெடுத்தருந் தும்பரவைநாப்ப,ணாயிரங்கையாயிரங்காலாயிரநீண்முடியினெ டுமயன்மாலாகித், தூயமலர்க்கண்முகிழ்த்துககடவுளாயிரம்ப ருவந்துயின்முனன்றே. (க)

துயின்றபழமறைக்கிழவனவ்விருள்போய்த்தொலைந்துபடு புலரிக்காலைப், பயின்றவுலகொருமூன்றும்படைப்பலெனவுள த்தெண்ணிப்பார்க்குமேல்வை, யியன்றபுவிபாதலத்தினிடைப் போகியொளித்ததனுக்கிரங்கிவெண்ணெ,யயின்றமலர்சசெங்க னிவாயாழியான்றனையுளத்திலமைத்தல்செய்தான். (உ)

எண்ணிமலரயன்பழிச்சவுறிதடவந்தாச்சியரில்லிடங்கடோ றும், வெண்ணைகவர்ந்தினிதருந்திவிசித்தவுரலொடுந்தவழ்ந்து மருதஞ்சாய்த்த,வண்ணலெறும்வலிக்குறுந்தாட்சுவேதவராக த்துருவமமைந்துகீழ்போய், மண்ணுலகுமுழுவதுமோர்கூன்பி றைக்கோட்டினிதேந்திவந்தானன்றே. (௩)

சுறவமெறிகடல்வலையமுழுவதுமோர்நுண்டுகளிற்றுலங்கு கோட்டி, னுறைவதனைத்தனிநோக்கிச்சனலோகமுதலுலகத்து றைவோர்யாருங், கறையடியபுகர்முகத்தகடக்களிற்றினிடர்த விர்த்தகாயாமேனி, மறைமுதலேமுதலேயென்றுளங்கனியவி ழிபனிப்பவாழ்த்தல்செய்தார். (௪)

கோவரணங்கட்டழித்துத்தொல்லிலங்கைக் குடிமிகொண் டுநிருதர்ச்செற்றோய், மாவலிபாற்குறளுருவின்மூவடிமண்டரு கென்னவாங்கிநீர்சூழ்,பூவலையமுழுவதுமோர்மலரடிசேர்நுண் டுகளிற்பொதிந்துவிட்டுங், காவல்புரிந்துண்டுசையடங்காம லோர்கோட்டிற்கவர்ந்ததெந்தாய். (௫)

வேறு.

நாரணனாகியொன்முய்ககனந்தலையுலகுக்கெல்லாங்
காரணனாகியந்தக்காரணங்கடந்துநின்ற
பூரணனாகிப்பூமேலுறைந்திடும்புனிதனாகி
யாரணமுடிவாய்நின்றவமலனேபோற்றிபோற்றி. (௬)

என்றுயர்முனிவரோத்தவின்னருள்பூத்துத்தேன்சோர்
மன்றலந்துளவோனேந்தும்புவியைமுன்போலவைத்துப்
பன்றியினுருவநீத்தான்பங்கயனெரிவாய்ப்பெய்த [ன்
குன்றெலாம்படைத்துமீட்டும்படைப்பவைகுணித்தானென்று

சுவேதவராககற்பமுறைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆக. திருவிருத்தம்—கசுச.

ஏழாவது

## பலவகைத்தோற்றமுரைத்தவத்தியாயம்.

---

ஆங்கவையென்கொலென்னவளிமதுக்கலுழியாறு
தூங்குநாற்கோட்டுவெள்ளைச்சூழிமால்யானைப்பாகன்
றீங்கனிபிழிந்தாலன்னதிவ்வியாழ்முனிவன்கேட்ப
வாங்குவில்விழுங்குதிண்டோண்மணிநிறவண்ணன்சொல்வான்

முன்னையபடைப்பின்வேதன்படைத்திடமுயன்றுநுகித்
துன்னிமுன்புத்தியாதிதமோமயசிருட்டிதோன்றிற்
றன்னதின்வகையோரைந்தாந்தமபோகமாமோகஞ்சேர்
மன்னுதாமிச்சிரமந்ததாமிச்சிரமெனவிருப்பார். (உ)

மற்றவைதமஞ்சூழ்போதவாயிலிகும்பத்திட்ட
நற்பொருள்போலத்தோன்றுதொழிந்தனமுன்னர்நாட்டும்
வெற்பெலாஞ்சிறந்தவாற்றல்முக்கியமென்றுவேத
மற்பினிற்புகன்றதென்னவறைந்தனரயிவின்மிக்கோர். (ங)

ஈங்கிதுபடைப்பிற்கேதுவன்றெனக்குறுக்காய்நோக்க
வீங்குபல்விலங்குதோன்றவெறுத்துமேலாகநோக்க
வோங்கியவிண்ணோர்யாருமுதித்தனரோதுவன்றென்
றுங்கவன்கீழாய்நோக்கமானுடருதித்தாரன்றே. (ச)

சத்துவகுணத்தராகித்தனப்பிலானந்தமேவிச்
சித்தமாசெறிந்துமெய்யிற்றிகழொளியுடையதேவர்
மொய்த்ததாமதத்தினேனையிராசதகுணத்தின்மூழ்கி
மெய்த்தகுமொழியினோடுமேவுவாமனுடராமே. (ரு)

பின்னுமோர்சிருட்டிக்காகப்பிழிநுகர்ந்தறுகால்பாடும்
பொன்னவிர்கமலத்தோட்டுப்புங்கவனெண்ணுமேல்வை
கன்னவில்திரடோடசெங்கட்கழிபுலால்கமழும்வெண்பற்
றுன்னியகுறுத்தாட்பூதம்பேயொடுந்தோன்றிற்றன்றே. (சா)

வேறு.

ஆதிசிருட்டிமகானெனனவறைவரிரண்டாஞ்சிருட்டிமிகப்
போதுந்தன்மாத்திரையாகும்பூதசிருட்டியதிற்றோன்று
மோதியிடுமூன்றாஞ்சிருட்டிவைகாரிமற்றதனுதிக்கு
மேதமறுமிந்தியசிருட்டியிவற்றின்றோற்றம்பிராகிருதம். (எ)

நான்காந்தோற்றந்தாபரமாம்நாலாவதுமுக்கியமென்ப
வான்சாதிகளேமுதலவிலங்குஞ்சாந்தோற்றமெனவறைவர்
வான்சேர்தேவர்சிருட்டியினையாறுஞ்சிருட்டியெனவகுப்ப
ரூன்சேர்மனுடர்சிருட்டியினையேழாஞ்சிருட்டியெனவுரைப்பார்

எட்டாஞ்சிருட்டிபிறையெயிற்றுபூதசிருட்டியெனவறைவர், முட்டாட்செழுந்தண்பாசடையமுருகுவிரிக்கும்பசுந்தோட்டு, மட்டார்கமலப்பொகுட்டுறைவோன் மைந்தர்சிருட்டியைம்புலனு, மொட்டார்கடந்தோரொன்பானுஞ் சிருட்டியென்பரஃதுணைப்பாம். (௯)

சனகரருள்கூர்சனந்தரர்நற்சனற்குமாரர்சனுதரர்சீர்
புனையுமிருதுமுதலாயமுனிவர்தோன்றப்பூமேலோன்
றனைவிலவரைப்படைத்திரெனவுரைப்பவுள்ளத்துகடீர்ந்த
முனிவர்விச்சைபுரியேமென்றீசன்பாதமுன்னினரால். (௧௦)

மைந்தரறிவின்வீக்கத்தாலீசன்பாதமனத்திருத்திச்
சிந்தைதெளிவுற்றேருதலுந்தெய்வக்கமலப்பொகுட்டுறைவோ
னந்தின்மாயைதனின்மயங்கவலகிப்புவனமுண்டுமிழும்
பைந்தாமரைக்கட்டிருநெடுமால்பரிவின்மாயைதீர்த்தனனால். ( )

மாயையகலநான்முகத்தோன்வரம்பில்காலந்தவம்புரிந்து
மேயசிருட்டியுணர்ந்திலனால்வெகுளிதோன்றிக்கண்கலுழ
வாயமலரோன்முரிபுருவநாப்பண்ணுலகமனைத்தினையுந்
தாயினீன்றமதிக்கண்ணிச்சடையோனினிதினுதித்தனனால். ( )

தோற்றுங்கடவுடிணைமலரோன்சூழ்வந்திறைஞ்சுமெழுநோக்குங், கூற்றினுயிருண்டுயர்முத்திகொழிக்கும்பொன்னங்குறைகழற்றுள், போற்றுங்குனிக்குஞ்செம்மாக்கும்பொருவின்மறைகள்பாடிநற, லூற்றுநறியமலர்தூவுமுள்ளத்திருத்துமுவக்குமால்.

இனையபுரியுமலரோனையெல்லாவுயிர்க்குமுயிரான, முனைவனோக்கியெல்லாநீகேட்டியருள்வனெனமொழியக், கனைவண்டிமிருந்தாமரைமேற்கடவுள்படைத்தியெனவிரப்பத், தனைநேராகிப்பிறப்பிறப்பொன்றில்லாக்கணங்கடனிபடைத்தான். (௧௪)

மறந்தும்பிறவாக்கணங்கள்பலபடைப்பதொழிந்துமழுவல்லோ, னிறந்தும்பிறந்துஞ்சகட்டுருளிற் றிரியுங்கணங்களியற்றுகென, வறைந்தவவையாமடைக்கலம்நீபடைக்கவருள்பூத்தனமென்ன, வுறங்காவென்றிமுத்தலைவேலொருவன்கரந்துபோயினனால். (௧௫)

பேராயபின்னர்மலர்ப்பொகுட்டுப்புத்தேள்புனல்தீயகல்வான
மேயவுலகம்பெறவுந்திவிரிநீருவரிகலைகாட்டை
யாயுமுகுர்த்தம்பகல்கங்குல்பக்கந்திங்களயனமுத
லேயவெவைக்கும்பிரமாணதெய்வமினிதினியற்றினன். (௧௬)

ஒழுகுகொடிமூக்கினிற்றக்கன்கண்ணில்மரீசியுயர்சென்னி
வழுவில்சிறப்பினங்கிராவுளத்திற்பிருகுமறித்தேயும்

விழியிற்புகழத்திரிசிறந்தவிவசாயத்திலுயர்தருமன்
பழிதீர்ந்துயர்ந்தசங்கற்பந்தன்னிற்பரவுசங்கற்பன். (கள)

மருவுமுதானன்றனிற்சிறந்தமறைதேர்தெய்வப்புலத்தியனல்
லுருவமுகத்திலருட்புலகனபானந்தன்னிலுயர்கிருதுப்
பெருகுசமானன்றனில்வசிட்டன்பிறந்துமுனிவருருவாகித்
தருமவொழுக்கமவற்றினையுந்தவருதுலகினிறுவினர். (கஅ)

தேவரசுரர்தென்புலத்தோர்மனுடரிவரைச்சிருட்டிப்பான்
பூவிலயனேருருவெடுப்பப்பொருந்தவுருவந்தமோகுணமாய்
மேவுமதனுற்சகளத்திலசுரர்தோன்றவிடுத்தவுட
லோவில்கங்குலாயதனிலுயிர்களனைத்துமுறங்குமால். (கசு)

மலரோன்பின்னுஞ்சாத்துவிதவுருவந்தாங்கவான்முகத்தி
னுலவத்தேவருதித்தனரவ்வுடலம்விடுப்பவதுபகலா
யலகிற்றருமமெவற்றினுக்குமிடனுயதுசத்துவகுணத்தா
னிலகுமுருவாயுலகனைத்துமீன்றேன்யானென்றெண்ணினான்.()

என்னுமேல்வையுயர்பிதுர்க்கடோன்ற வெடுத்தவுடல்விடுத்தா
னண்ணுமுடலமுயற்சந்தியென்பநவின்றவிராசதத்தி
னண்ணலுருவமெடுப்பமக்களுதித்தாராண்டவ்வுடல்விடுப்பத்
தண்ணங்கதிர்வெண்ணிலவாயதுவேபுலரிச்சந்தியுமே. (உக)

பின்னர்த்தமமுமிராசதமும்பிரியாவுருவமெடுத்திடலு
மன்னுமரக்கர்கந்திருவரியக்கரரவம்வளர்பூதந்
துன்னியுதித்தவுயர்பறவைமறிமார்பகத்திற்றோன்றினவாற் [ல்
கொன்னேகமலவான்முகத்திற்கொதிக்குஞ்சரபந்தோன்றியதா

இருதாளிடத்துங்களிறுபுலியெண்குமறையொட்டகமிவுளி, திருகுபொரிகோட்டிரலேபன்றிசெறியுமுழவுமானினெடு, மருவுவிலங்கின்கனமுதித்தமயிர்க்கால்தோறுங்கனிப்பொறைய, வுருவைப்பைந்தார்க்கொடியனைத்தும்வீற்றுவீற்றுயுதித்தனவே.

அருமாமறைகளொருநான்குமகங்களைந்தும்பாவனைத்துந்
திருமாலுந்தித்தடம்பூத்ததேவன்முகநான்கினுமுதித்த [ன்
வுனைசெய்பூதமனைத்துமிவ்வாறுதித்து முன்னைப்படைப்பதனி
மருவுந்தமதுதொழிலதனிற்பிறழாதினிதில்வைகினவே. (உச)

பூதப்பகுதியிருடிகள்பேர்பொருந்து முடல்சேரனைத்தினுக்கு
மோதுநாமமிதுநவின்றகுணங்களுணரவிவையனைத்தும் [டுத்
வேதாகமங்களிடைவகுத்தான்விரை கொப்புளிக்குநறுந்தோட்
தாதார்கமலப்பொகுட்டுறையுமொருநான்முகத்துத்தனிமுதலே.

பலவகைத்தோற்றமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—உகசு,

எட்டாவது

## தமோகுணசிருட்டியுரைத்தவத்தியாயம்.



என்றுகூறுந்திருநெடுமொழிருதாள்வணங்கியாழ்முனிவன்
குன்றின்சிறகரறவெறிந்தகூர்வாய்வயிரப்படைக்கடவு
டுன்றுஞ்சிருட்டிவிரிவனைத்துமீட்டுமுரைத்தியெனத்தொழலு
மன்றல்கமழும்பசுந்துளவமாயன்மகிழ்ந்துகூறுவான். (க)

வேறு.

வள்ளவாய்க்கமலத்தவிசின்மீதுறைந்துமறைவிளையாடுநா வலவன், றெள்ளிதிற்றெரிந்துபடைத்தபல்லுயிருமல்கிடாதொழிந்திடுஞ்செயலா, னுள்ளமாழாந்துதமோகுணம் புதைப்பவுமையவிந்திருத்தலுமென்னல், மெள்ளராசதஞ்சத்துவகுணமேவத்தமோகுணமகன்றதுவிரைவின். (உ)

விரைவினினகன்றதமோகுணம்வேற்கட் டெரிவையும்புருடனுமாக, வுருவமெய்தியவப்புருடன்வெம்பாவமொண்ணுதல்படுகொலைவடிவ, மிருமறைக்கிழவன்றனுடலிருகூறுகலுமவற்றினோர்கூறு,வருசுவாயம்புமனுவொருகூறுமகிழ்சதரூபையானதுவே. (௩)

குங்குமந்துதைந்துபிறைவட்டங்கிடந்த குவிமுலைக்கொடிசதரூபை, யங்கண்மாஞாலமுழுவதுமளிக்குஞ்சுவாயம்புமனுவினையணைந்து, பங்கமில்பிரியவிரதனையுலகம்பரவுமுத்தான்பாதனைச்சொன், மங்கைநற்பிரசூதிசிறந்தவாகூதியிவர்தமையயிறுவாய்த்தனளால். (ச)

தழலுயிர்த்தொளிறுபருதிவேன்மனுப்பிரசூதியைத்தக்கனுக்களித்தா, ணழகுகண்படுக்குமருப்பிளமுலையாகூதியைருசியினுக்களித்தான், மொழியுமாகூதிருசியினுக்கெச்சன்தக்கணைமுறையினிலீன்று,ளொழிவிறக்கணையவ்வயிற்றிடைவேள்விக்கியாமர்பன்னிருவராண்டுதித்தார். (ரு)

ஆங்கவர்சிறந்தசுவாயம்புமனுவின் காலத்திலமரராயுறைந்தார், வீங்குபல்கேள்வித்தக்கனன்மனையாம்பிரசூதிவேல்கிடந்தொளிர்தடங்கட், கோங்கரும்பிடையச்சுணங்குபூத்தலர்ந்தகுவிமுகிழிளமுலைப்பணைத்தோட், பூங்குழற்செவ்வாயோராறிநான்குபுதல்வியர்ப்பயந்தனளன்றே. (சூ)

அனையரிற்சிரத்தையிலக்குமிதிருதி துட்டிநற்புட்டியம்மேதை, நினைவருங்கிரிகைபுத்திநாண்வபுசுசாந்திவாழ்சித்திநற்கீர்த்தி, யெனவொருபதின்மூன்றரிமதர்மழைக்கணிளமுலைமகளிரையிலங்கு, கனைகழற்றருமற்களித்தனனவருங்கவின்பெறுபுதல்வனையுயிர்த்தார். (எ)

மற்றைபகியாதிபிருகுவையணைந்தாள் சதியினையுருத்திரன் மணந்தா, னுற்றசம்பூதிமரீசியையடைந்தாள் மிருதியங்கிராவு டனுறைந்தாள்,' குற்றமில்பிரீதிபுலத்தியர்ப்புணர்ந்தாள் புலக னற்கமைமணங்கூர்ந்தான், சொற்றசந்ததியைக்கிருதுவேட்ட னனத்திரியன்னசூயையைத்தோய்ந்தான். (அ)

கன்னியங்கற்பினருந்ததிதன்னைக்கடிமணம்புரிந்தனன்வசி ட்டன், வன்னியைசுவாகையணைந்தனள்பிதிர்க்கள்வசுந்தையை யினிதினின்மணந்தார், முன்னர்யாமுரைத்ததருமதேவதத்தின் மனைவியராமொருபதின்மூன், றன்னலார்தம்மின்முகிழ்முலைச் சிரத்தையடக்கருங்காமத்தையுயிர்த்தாள். (கூ)

அருளிலக்குமிவெஞ்செருக்கினையீன்றாள் திருதிநன்னியம த்தையளித்தாள், பொருவறுதுட்டிமகிழ்ச்சியையீந்தாள்புட்டி யூதியகத்தினைப்பெற்றாள், தருபுகழ்மேதைசுபத்தினையளித்தா ள்கிரிகைநற்சமமுநற்றமமு, மரிதினிற்பயந்தாள்புத்திநற்போத மப்பிரமாதமுமளித்தாள். (க0)

நாணலம்வினயம்பயந்தனள்வபுசுநல்விவசாயத்தையுயிர்த் தாள், மாணெழிற்சாந்திகமனமீன்றனணீள்சித்திவானகத்தினை யளித்தாள், காண்வருஞ்சீர்த்தியோசையைப்பயந்தாள்முன்ன வள்பயந்திடுகாமம், பேணருமகிழ்ச்சிகடவுளானந்தமிரண்டை யும்பெற்றதையன்றே. (கக)

கருதரும்பாவங்கொலையினைமணந்துவஞ்சமாங்கன்னியைப் பொய்யா, மருமகவினையாங்களித்ததுபொய்மை வஞ்சனைதன் னெடுமணைந்து,வெருவரநிரயமென்னுமைந்தரையும்வேதனை மாயையென்றேது, மிருமகளிரையுமளித்ததுமாயைபுயந்தழீஇ மிருத்துவீன்றதுவே. (௧௨)

சொல்லியநிரயம்வேதனைதோய்ந்திட்டசுபமுந்துன்பமு ம்பயந்த, தல்லல்செய்மிருத்துநோய்நரைதுன்பம் வெகுளிபட் டிமையிவையளித்த, தொல்லையிற்சுருக்கித்தமோகுணசிருட்டி யுரைத்தனமெனவருள்சுரந்து, மல்லிடுதிணிதோள்வாலிமார்ட ருவவடிக்கணைபணித்தவனுரைத்தான். (௧௩)

தமோகுணசிருட்டியுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௨௩௨.

ஒன்பதாவது

# பிரமவிஷ்ணுக்களுக்குச் சிவன்றோன்றிவரங்கொடுத்த வத்தியாயம்.

காலமுங்காலத்தளவையுங்கடந்துகருத்தளந்தறிவரும்பொருளாய், மூலமாமீசன்மலரயனுதலி னுதித்திடும்புதுமையென்முகுந்தன், கோலமாருந்திமலரயற்பயந்தகொள்கையென்சொல்கெனப்பசும்பொற், சோலைவாயுறையுங்கடவுள்யாழ்முனிவன்கேட்டலுமாயவன்சொல்வான். (க)

உலகமோர்மூன்றுமிடிந்துபாழாகு மூழியினிறுதியினேங்கு, மலைபுரண்டன்னவெறிதிரைபுரண்டுமறிதரும்வாரியினுப்ப, ணலர்கதிர்ப்பருதி யாயிரமெழுந்தோங் கவிர்மணிச்சூட்டராவணையிற், கொலைபழுத்தொழுகுநேமியந்தடக்கைக்கொண்டல்கண்டுயின்றனையன்றே. (உ)

பாசடைத்துளவந்துயல்வருதடந்தோட் பண்ணவனுந்தியந்தடத்தி, னேசனையொருநூறகன்றுநீண்டோங்கியொள்ளிதழாயிரம்விரித்துத், தேசுறுகதிரோராயிரமெறிக்குஞ்சேட்டிளம்பருதியிற்பொலிந்து, மூசுவண்டரற்றமுருகுகொப்புளிக்குமுள்ளரைமுளரிபூத்ததுவே. (ங)

தாமரையுந்தித்தடத்தினிற்பூப்பத்தாமரைக்கண்டுயில்வோனை, நாமகள்கொழுநனண்ணிமண்ணளந்தநளினமென்கரத்தினாற்றடவித், தோமறுயோகத்துருந்துயிலெழுப்பித்துளவினோன்மாயையின்மருளா, வேமமுற்றலைவாய்த்துயின்றநீயாரையெனநகைத்திறையவன்புகல்வான். (ச)

உலகனைத்தினையுமள்ளியுண்டகத்தினொருபுடைகிடத்துநாரணன்யான், கலைவலாயாரைநீயெனவறியான்போலெதிர்வினவலுங்கடவுண், மலரயனுலகமனைத்தையுமீன்றதாதையானெனமறைவடித்தோ, யலகினின்பேர்த்தியறிவனென்னகட்டுபுகுந்துலகனைத்துநோக்குதியால். (ரு)

என்னலும்வயிற்றிற்புகுந்தெழுகடலுமேழுபெருந்தீவுமேழுலகு, மன்னியபுவனமனைத்தையுநோக்கிமனத்திறும்பூதுறுங்காலைத், துன்னியவாயிலொன்பதுமாயோன்சுருக்கலும்வரும்வழியுணரான், பொன்னிதட்கமலநாளமென்றுளையிற்போந்துயர்பொகுட்டில்வந்தனனால். (சா)

போதருநெறிகள்யாவையுஞ்சுருக்கி யென்னைநின்னகட்டினிற்பொதியா, வேதமில்வென்றிகொண்டிடநினைந்தியாதுகொலுலகனைத்தினுக்குந், தாதையானென்னைநிகருநுங்கடவுளெவர்கொல்நீசாற்றுதியெனலும், மாதவன்முறுவல் கோட்டியோர்விளையாட்டயர்ந்தனன்மனக்கொளேலென்று. (எ)

உலகனைத்தினையுமெளிதினினுயிர்த்தாயுன்னையார்ங்கர்வருங்கடவுண், மலர்செழுங்கமலத்துதித்தலாற்கமலனெனும்பெயர்மருவியென்மகவாய், நிலைபெறவேண்டுமெனமலரயனுமகிழ்வுடனுங்கவைநேரா, வலகில்சீர்க்கடவுளுமிருவருமேயன்றிவேறிலையெனவறைந்தான். (௮)

பித்தர்போல்மனத்திம்பிறந்தவைவாளா பிதற்றுவதெவன்கொல்நான்முகத்தோய்,மத்தமுமறுகும்வளர்பிறைக்கொழுந்தும்பவளவார்சடைமிசைவனைந்த, முத்தவெண்முறுவற்கனிபடுதுவர்வாய்முகிழ்முலையொருமருங்கமைத்துத், தத்துவங்கடந்தமுக்கணெம்பெருமான்றனையுணராதுநீயென்றான். (௯)

எனவுளங்கனன்றுநான்முகக்கடவுளிளங்களிவண்டுபாட்டயரும், வனைதுழாயலங்கழ்கடவுளாம்நீயுமலர்ப்பொகுட்டுறைதரும்யானும், நினைவருந்தேவரொவரினுமேலாய் நிற்பவர்நம்மில்யாருயர்ந்தோர், கனைகடல்வயிறுகிழியமத்தெறிந்துகடைந்தமுதெடுத்தகார்முகிலே. (௧௦)

என்றலுமுகுந்தனிளநகைகோட்டி நள்ளிருளொளியுறவிருண்டு, துன்றியமாயைப்படாம்புதைத்திடவுந்துரியமாய்த்துரியமுங்கடந்து, நின்றபேரொளியாந்திங்களங்கண்ணிநிமலனையறிந்திலைபோலு, மன்றயானறிவனென்றுதற்பரனைமனத்திடையிருத்துமேல்வையினில். (௧௧)

சேட்டிளம்பருதிமுதலியகோளுமுடுக்களுந்தொடுத்ததீர்ந்தொடையல், தோட்டுணைமீதுதுயில்வரத்திங்கட்கண்ணிசூழ்செஞ்சடைமௌலி, யோட்டறநிவர்ந்தவண்டபித்திகையினுரிஞ்சவேழ்பாதலமுருவுந், தாட்டுணைபெயர்த்துமறைகளுமறியாத்தனிப்பொருடோன்றியதன்றே. (௧௨)

பொற்றருவிழுதுவிட்டெனக்கிடந்தபுரிசடைவெண்ணிலாவெறிப்ப, நெற்றியங்கண்ணிற்றழற்சுடரொறிப்பநீற்றொளிமெய்முழுதெறிப்ப, வொற்றைவெண்சங்கக்குழையழகெறிப்பவுருகெழுசூலவேல்திரித்து, முற்றுநீர்க்கடலிற்றமியனாய்ப்போதுமுதல்வன்யாரெனவயனுரைத்தான். (௧௩)

உரைத்தலுமுயர்வான்மழகதிரொன்னவொருமணிகிடந்தநீண்மார்ப, னிரைத்தபைத்தலையபாம்பணைதுறந்துநீற்றொளியிளநிலாவெறிக்கும், வரைத்தடந்திணிதோண்மழுவலான்செய்யமலரடிதொழுதெழுந்தேத்தி, விரைச்செழுங்கமலப்பொகுட்டரசிருக்கும்வேதியற்கீங்கிவைபுகல்வான். (௧௪)

உலகமற்றெவையும்படைத்தவையளித்து மொடுக்கியுங்கடையுகந்தோறு, மலகிலாவிளையாட்டயர்பவன்யாவன்யாவனி

ற்பயந்தனனியாவ, னிலைபெறவமைத்தசத்தியானவனேநீறுபூத் தொளிர்தழற்பிழம்பின், மலைவறத்தோன்றுஞ்சங்கரனிவன்ரு ள்வணங்கெனப்பேருணர்வளித்தான். (௧௫)

மருங்கிறவாகமுழுவதுங்கவர்ந்த வருமுலைக்கலைமகள்மணு ள, நெருங்கறிவெய்திநனைவிடப்பாகனுெண்மலர்ச்சேவடிநோ க்கி, விரும்பியுண்ணெகிழவிழிபுனல்வாரமெய்ம்மயிர்சிலிர்ப்ப நாக்குழறத், திருந்துநான்மறைகள்பாடிநின்றுடித்தேமலர்த்தூ ய்வணங்கினனுல். (௧௬)

வணங்கியகடவுட்கமலநான்முகத்தோன்வான்முகநோக்கி வாளெயிற்று, வணங்கரவசைத்தோனெமதுகுற்றேவலடியரிற்சி றந்தனையுளத்தி, லிணங்குநல்வரநீகேட்டியென்றுரைப்பவிரு கையிற்பவளவாய்புதைத்துப்,பணிந்தெனதுள்ளப்பருவரலொ ழியப்பாலனுய்வருதியென்றிரந்தான். (௧௭)

ஆங்கதுநேர்ந்தெவ்வுலகமும்படைக்குந்தொழிலுமற்றவற் கினிதருளித், தேங்கமழ்கன்னிப்பசுந்துழாயலங்கற்றிருமறுமா ர்பனைநோக்கி, வீங்குநின்னுளத்தினன்பினுக்குகந்தேம் வேட் டனகேளெனநினது, பூங்கழலிணையிலன்புநாளுளும்பொலிந்தி டவேண்டுமென்றிரந்தான். (௧௮)

அளப்பருஞ்சகமாங்காரியநீயான்காரணமவிர்மதிநீயான், றுளக் கறுபருதிகங்குல்நீபகல்யான்சொல்பிரகிருதிநீயானே, விளக்கு றுபுருடனறிவுநீயானேயறிபவன்மாயைநீவிளங்க, வுளக்கணிற் றேன்றுமீசன்யானென்னவுணர்ந்தவர்யாவையுமுணர்ந்தார். ()

என்னநன்கியம்பியரவநாண்கொழுவி யிருவிசும்பளந்துயர் குடுமிப், பொன்வரைகுழைத்துப்புரமொருமூன்றும்புகையெழ க்குறுநகைகோட்டு, மின்னவிர்சூலமுரட்படையேந்தும்வேதி யன்விழியிணைமுகிழ்த்துத், தன்னிலையுணருந்தக்கவருள்ளத்தா மரைத்தடந்தொறுஞ்சார்ந்தான். (௨0)

பிரமவிஷ்ணுக்களுக்குச்சிவன்றேன்றிவரங்கொடுத்தவத்தியாய முற்றிற்று.
ஆ திருவிருத்தம்—௨௰௨.

---

பத்தாவது

## அட்டமூர்த்தியியல்புரைத்த வத்தியாயம்.

மரகதவல்லிபடர்மதிக்குடிமிமாணிக்கமலையகன்றிடனுந்,தி ருமறுமார்பவயனிறைத்தனகள் செப்புதியெனவமுதுகுக்கும், புரிநரம்புளருமகதியாழ்முனியும் பொன்னகர்க்கிறைவனுங்கே டபக், கரைபொருகடல்வாய்புழுங்கமத்தெறிந்தகார்நிறவண்ண னீதுரைப்பான். (௧)

வேறு.

இரவியின்றியும்பகற்செயுமெரிமணிகிடந்த
மரகதச்செழுங்குன்றநான்மணிகெழுசென்றூட்
டரவணைப்புறத்ததிதுயில்புரிதலுமுந்தித்
திருமலர்ப்பொருட்டுறைந்தனன்றிசைமுகக்கடவுள். (௨)

ஆயகாலையிற்றுமனாக்காடலர்ந்தெனப்
பாயதெண்டிரைக்கண்வளர்பண்ணவன்செவியிற்
றீயுந்தண்ணெனக்கொதித்திமைத்தீய்த்தொளிசெங்கட்
காயுஞ்சூலவேல்மதுவொடுகயிடவனுதித்தான். (௩)

மண்டுசெங்கனல்வட்டவையயவிப்பினுமவிப்ப
ரண்டம்யாவையுமொருதடக்கையினிலவ்வி
யுண்டுதேக்கெறிந்துலவினுமுலைவுவரிவர்யார்
கொண்டல்வண்ணவென்றனன்மறைமழலைவாய்க்குழவி. (௪)

தண்ணந்தாமரையயன்வெறீஇச்சாற்றுதல்கேளா
வெண்ணையுண்டமால்விட்டுனுசவிட்டுனுவென்ன
நண்ணுபேருடையிருவரைவகுத்துநான்முகத்தோன்
கண்ணணங்குறவருபவர்க்கடிதிறொன்றுரைத்தான். (௫)

உரைத்தவாசகம்பிற்படமுற்படவோடி
வரைத்தடம்புயத்தவுணரைவலியினிற்பற்றிக்
கரைக்குறும்பெறிவெண்டிரைக்கணைகடன்முகட்டுந்
திரக்குவட்டினையிருகையாற்றிருகியெறிந்தார். (௬)

மறங்கொள்தின்றிறல்மதுவொடுகயிடவன்றன்னைக்
கறங்கெனத்திரித்தாருயிர்கவர்ந்ததற்பின்னர்ச்
சிறந்தமைந்தனிற்றுங்குவதிநுதேன்மலர்விட்
டுறங்குகென்னவுமிழிந்தனனினிதுகண்வளர்ந்தான். (௭)

கள்ளயர்வுயிர்க்குஞ்செழுங்கமலமென்பொருட்டு
வள்ளலங்குல்போம்புலரியிற்கணமதாநீங்கிப்
பள்ளநீர்கவர்ந்துண்டதொல்லுலகெலாம்படைப்பா
னுள்ளமுன்புபோற்பவகனைமுதலியோருதித்தார். (௮)

தோற்றுமைந்தரோர்நால்வரும்படைக்கெனத்தூய
நாற்றிதழ்க்கமலத்திறைநுவலவுமதனைப்
போற்றிலேமெனமுன்னையகற்பத்திற்புகன்ற
வாற்றருந்தவமாற்றினரரனடிபணிந்தார். (௯)

தந்தையாய்முகில்வண்ணனைமுன்னமுன்றந்தோன்
மைந்தனுவலென்றுரைத்தவன்வந்திலனென்னுஞ்
சிந்தைமுகவுறுதன்சேவடிசேர்தலுமகிழ்வுற்
றெந்தை[illegible]துதோன்றினனே. (௧௦)

தோன்றியோர்விளையாட்டயர்ந்தெழுதலுந்தூயோற்
கேன்றவாருமற்றுருத்திரன்முதற்பெயரொட்டு
மான்றகானமோரொட்டுமோரொட்டிவையருஞ்
சான்றமைந்தரோரொண்மருஞ்சார்ந்தனரன்றே. (௧௧)

எய்துநாமமென்னெனிற்பவன்சருவனீசானன்
வைதிகந்தருபசுபதிவீமன்மாதேவ
னெய்திளம்பிறையணிந்திடுமுருத்திரனென்ப
மைதிகழ்ந்தொளிர்கண்டனெண்வடிவமும்வகுப்பாம். (௧௨)

பருதிவெண்கதிர்க்கடவுணீர்புவியழல்பணிவா
னுருவநல்வளியருமகம்புரிந்தழலூட்டும்
பொருவினான்மறையந்தணனென்பரப்புனிதர்
மருவிவாழ்வுறுமங்கையொண்மர்பேர்வகுப்பாம். (௧௩)

மிகுசுவாச்சலையுரோணிபாசுவையருள்விகேசி
திகழ்சுவாகையெண்டிசைசிவைதிக்கையாமைந்தர்
மகிழுமந்தனற்புதன்கவிவயங்குறுசெவ்வாய்
குகன்சருக்கநீள்மனோசிவன்கூறுசந்தானன். (௧௪)

முன்னரெய்தியசங்கரன்றனைமுகநோக்கி
மன்னுயிர்த்தொகைபடைக்கெனமலரயனுரைப்பத்
தன்னையொப்புறமுன்புபோற்சங்கரன்சமைப்ப
வின்னவாறமைத்திடலொழிகெனவயனிசைத்தான். (௧௫)

இனையவாறலாற்பிறந்திறந்தொழிபவர்சிருட்டி
நினைகலேமவைநீபடைத்திடுகெனநிகழ்த்தி
முனைவனான்முகன்முதுக்குறைவெய்துணர்வளிப்பப்
பனிமலர்ப்பொகுட்டண்ணல்முக்கண்ணனைப்பழிச்சும். (௧௬)

கொண்டன்மேனியான்முதலியகடவுளோர்க்குப்புற்
றண்டம்யாவையுமிடிந்துபாழாகியவமையத்
திண்டிறற்கவைச்சூலவேல்திரித்துலகின்றாள்
கண்டுவப்பநின்றாடியகடவுளேபோற்றி. (௧௭)

மாலைவெள்ளருவிப்புனற்குறுந்துளிவாரிச்
சோலைநெற்றியிற்றொடுத்தபூந்துகள்துதைந்தடுபோர்க்
கோலுந்தென்றலுந்தேர்கடாய்க்கொடியபூங்கழலிற்
கால்குனித்தவற்செற்றவெங்கண்ணுதல்போற்றி. (௧௮)

பறந்துவிண்ணிடைவிண்ணவர்பருவரலுழப்பக்
கறங்குபோற்றிரிமுப்புரமொருங்குதீய்க்கனல
நிறங்கொள்பொன்னவிர்குடுமியநெடுவரைகுழைத்து
நறுந்துழாய்முகிற்கணைதொடுநம்பனேபோற்றி. (௧௯)

நோற்றபாலனதாருயிர்நோவுறுவண்ணங்
கூற்றினாருயிர்குடித்தபைங்கழலினாய்போற்றி
யாற்றல்வானவர்வெருவரவலைகடலகட்டிற்
றோற்றநஞ்சமுண்டருளியதோன்றலேபோற்றி. (உ0)

அருவமாயுருவாகியவமலனேபோற்றி
துரியமாயதுகடந்தொளிர்சோதியேபோற்றி
கருதுவாருளத்துறைதருங்கடவுளேபோற்றி
குருதிகக்குவெஞ்சூலவேற்குழகனேபோற்றி (உக)

என்றுதாள்பணிந்தெழுந்துநாத்தழும்பநின்றேத்தி
மன்றல்தாழ்மலர்தூய்வலம்வந்தனனிற்பக்
கொன்றைதேன்றுளிபிலிற்றநின்றுடியகுழகன்
றன்றுணைக்கையாலயனுடல்தைவந்துசாற்றும். (உஉ)

அருளின்மைந்தனாய்வருகெனவறைந்தனையதனாற்
புருவநாப்பணிற்றோன்றினனென்னுடைப்புதல்வ
வுருவமாயுலகீன்றவையளித்துமீட்டொடுக்கல்
மருவுமென்விளையாட்டெனவுணர்தியால்மலரோய். (உங)

மைந்தவுன்னையென்வலப்புறத்தீன்றனனறிய
பைந்துழாய்மணிவண்ணனையெனதிடப்பாலிற்
றந்தளித்தனனீவிர்வெங்கரிமுகன்றழல்வேற்
கந்தனேயெனக்கருணையினுச்சிமோந்துரைப்பான். (உச)

கனைகருங்கடல்நஞ்சமுண்டுமெனுயிர்க்காத்த
முனைவனென்னுளத்துதித்தனன்மூவிருமெனக்குத்
தனையரிவ்வுருசதாசிவனேனையவுருவம்
புனைவன்வேண்டுருக்குணங்குறிபுலனெமக்கிலையால். (உரு)

கள்ளயின்றுவண்டுறைதருந்தாமரைக்கண்ணன்
முள்ளரைச்செழுந்தாமரைமுகட்டில்வீற்றிருப்போ
யுள்ளுவந்தெனைநினைப்புழியுறுவலென்றுரையா
வள்ளல்நான்மறையுபநிடதத்திடைமறைந்தான். (உசா)

திங்களின்னமுதுறைப்பமென்கொன்றைதேன்றுளிக்குங்
கங்கையஞ்சடைக்கண்ணுதல்காத்தலுங்கடவுட்
பங்கயத்தவிசுறைதருபண்ணவன்மரீசி
யங்கிராமுதல்முனிவரையளித்தனனென்றேன். (உஎ)

அட்டமூர்த்தியியல்புரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—உஎக.

———— ——

பதினொன்றாவது

# பார்வதிதோற்றமுரைத்தவத்தியாயம்.

போதுறைகடவுண்மீட்டுலகம்பூத்தவை
யோதுகென்றின்னரம்புளரும்யாழ்முனி
நீதறுமகபதிகேட்பத்தேம்படு
தாதவிழ்பசுந்துழாய்முகுந்தன்சாற்றுவான். (௧)

அள்ளிலைக்கமலவீட்டுறையுமந்தணன்
றெள்ளிதினமைப்பவைசிந்தைசெய்கலா
துள்ளமாழாந்துநெட்டுயிர்ப்புவீங்கிமே
லெள்ளருமருந்தவமியற்றுமேல்வையின். [illegible])

பாடருமிடப்புறம்பணித்திட்டாயினி
நாடரும்வலப்புறந்தானுநல்கென
வேடவிழ்கூந்தலாய்நல்கினேமென
வாடியிற்காட்டியவையன்றோன்றினான். (௩)

பெண்ணொருபங்கினிலமைத்துப்பேரெழி
லண்ணலாங்கெய்தலுங்கமலத்தந்தணன்
கண்ணொடுதொடுத்தெனநோக்கிக்காதலிற்
புண்ணியச்சேவடிபோற்றிக்கூறுவான். (௪)

ஐயவிவ்வுலகினுக்காக்கமெய்துறத்
தையலோர்பங்கினிற்சார்ந்துநின்றனை
மையறுமிவ்வுருவகுத்துப்பாலிரண்
டெய்தநீசெய்தியென்றினிதினேத்தினான். (௫)

பெண்ணொருபங்கினைப்பிரித்துப்பேரொழி
லொண்ணுதற்பேதைதன்னுருவமாக்கிமேல்
நண்ணரும்வலப்புறமதனைநாடரு
மண்ணலானுருவமாயமைத்திட்டானரோ. (௬)

மதியுறவகுத்துவானுருவமானுறப்
பதினொருகூற்றினிற்பகுப்பவாங்கவர்
கதிர்மதிமுடித்தகாபாலியாதியாம்
விதிமுறையுருத்திரராகிமேவினார். (௭)

பெண்ணொருபாதியாய்ப்பிரித்தகூற்றினை
யெண்ணறுஞ்சத்தியாலியற்றினான்வர
கண்வழுக்குறுமெழிற்கமலையாதியா
மொண்ணுதன்மகளிரொன்றுணாக்கலாயினார். (௮)

இன்னணமமைத்திடினன்றியாக்கையின்
மன்னுயிர்யாவையுமல்கிடாதெனக்

கன்னெடுஞ்சிலையிருகால்குனித்திடு
முன்னவனயனொடுமொழியுமேல்வையின். (௯)

மின்னுவீழ்வீழ்த்தெனக்கிடந்தமென்சடை
முன்னவன்பணிதலைகொண்டுமுற்றிழை
தன்னொருகூற்றினைவாங்கித்தாழ்சிறை
யன்னமூர்கடவுள்பாலடைதன்மேயினாள். (௧0)

என்னுடனுலகெலாமீன்றதாயிவண்
மன்னியதேவனென்மலர்கடேய்த்தொழு
தன்னைநிதக்கனன்புதல்வியாகென
சொன்னவாறவன்மகளாகித்தோன்றினாள். (௧௧)

தக்கனற்புதல்வியைக்கொன்றைதாழ்சடை
முக்கணார்க்களித்தனன்முரசமார்ப்பெழ
மிக்கதன்றந்தைதீவினையினன்னைபோய்ப்
புக்கனள்மேனைதன்புதல்வியாகவே. (௧௨)

தோலடியெகினமீதிவர்ந்ததோன்றலுங்
காலுமிழ்கொடுஞ்சிறைக்கருடப்பாகனு
மாலமுண்டவனுமேயன்றியார்கொலோ
பாலலோசனிதிறனறியும்பண்பினார்.  (௧௩)

பார்வதிதோற்றமுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—உ௯உ.

பனிரண்டாவது

## திருக்கலியாண வத்தியாயம்.

என்றலுமிவ்வுலகின்றுட்கன்மகளாயுதித்தவியல்புஞ்செம்பொற், குன்றரையன்மகளாகிப்பிறந்ததுவும்விரித்தெமக்குக்கூறுகென்ன, மன்றல்கமழ்தருவினிழலுறைவோனுமகபதியாமுனியுங்கேட்பக், கன்றுகுணிலாய்விளவின்கனியுகுத்தமாமாயன்கழறலுற்றான். (௧)

மேருவரையுயர்குடுமிமுகட்டிருந்துவேதமுனிவிளம்பலுற, தோர்வரியபவக்கடலின்வீழுமுயிர்களையேற்றுந்தெப்பமோவில், சீர்கெழுதற்பரம்புணருஞ்சிற்சத்தியெவ்வுலகும்பொதிந்துநின்ற, பூரணநீடுலகுயிர்பபமலையரையன்மகளாகப்போந்ததன்றே. (௨)

பொருவரியசிவைமாரிய லந்தையாயேகையாய்ப்புராணை
யாதி,யிரிதிருமொழியுமெனமகேசனைவிட்டகலாதவிமலைநோ

ன்று, முருவுறுமிவ்வுலகனைத்தும்படைத்தளித்துமீட்டுமிவை யொடுக்கியீசன், றிருமுன்விளையாட்டயருங்காந்தமணிமுனமி ரும்புதிரியுமாபோல். (௩)

கருவிகாரியமென்பகாலமொருமூன்றினையுங்கடந்துநின்ற, வொருமுதல்வன்றனையனுகா வுலகமனைத்தினுக்குமுபா தான மாகி, மருவுபராசத்திதனதுருவாகியொருநான்குவடிவாஞ்சத் தி, தெரிவுறுபேர்சாந்திவித்தைநிவிர்த்திபிரதிட்டையெனச் செ ப்புவாரால். (௪)

இனையவொருநான்குகலைபுணர்தலாற்சதுர்வியூகனென்னு நாம, நினைவரியமகேசுரற்குநிகழ்த்துவரிக்கலைநான்கிலுருவ நான்காய்த், துணைவிலடைந்தருள்புரியுஞ்சோதியாம்பரன்பரை யைத்தோய்ந்துநாளுந், தனைநிகரிலானந்தந்தனில்மூழ்குமென மறைகள்சாற்றுமன்றே. (௫)

மற்றவட்குவிபூதி புகலடிப்பாட்டின் றொடர்பாகுமகேச னேனும், பற்றறலாலிங்கிவனுமவன்போலவளவிறந்தபான்மை யானீர், முற்றுலகமுறுசெயலினுநாறுவதுமைங்கரனைமுருக வேளைச, சிற்றுதரந்தனியீன்றுயகனளிமைநீங்காதொழியுஞ்செ ல்வியென்பார். (௬)

காலமுயர்மகேசனாரிபிராணனுருத்திரனரன்வெஞ்சனனியெ ன்ப, வாலமயில்ன்றேனெனன்னவருமறையின்பொருடெரிந்தவறி ஞர்சொல்வார், மாலுறுகாலச்செயலின்மன்னுமுலகனைத்துமி கமதிகருங்கால, மேவுறுமொருசெயலுமொருமூன்றுசெயலும ஃதியற்றுமாதோ. (௭)

காரியமாமுலகினுக்குக்காரணமாமிறைவனதுகலையாமாயை யோர்வருமம்மாயையினல்மாயாவியாபுறையுந்திங்கள்சூடு [மை காரியமெவ்வுலகினையு மயக்குறுத்துமாங்கவன்பா னீங்காமா யோர்வரியவெவ்வுலகுந்தானாகியவைதாங்கியொளிருமன்றே.()

சாற்றரியஞானசத்திகிரியாசத்தியிச்சாசத்தியென்னத், தோற்றுமொருமூன்றாகித்தோற்றரியசத்தியைத்தொல்லோன் சத்தி, வீற்றுவீற்றுயளப்பில்பகுதியுறமிங்கியற்றறவிடாதுநிற் கு, மாற்றரியசத்திமான்களுமவன்றனமாயையினல்வகுத்தான ன்றே. (௯)

ஆங்கவனைப்பிரியாதமாயையுமற்றவன்போலவநாதியாகும், நீங்கருமற்றதனுருவேயெவ்வுருவாஞ் சத்திகளுந்தேவர்தேவ, னோங்கியபேரொளியாகும் பரமசிவன்முன்னையதி யொழியா மாயை, பாங்குறுநன்மாயைபுருடன்பகுதியென மூன்றுபகுதி யாமால். (௧௦)

ஒன்ருகிப்பலவாகிவிபுவாகிச்சிவையாகுஞ்சத்தியொன்றே
துன்றியதுநீங்காததுரியாதீதப்பொருளாஞ்சிவமுமொன்றே
மன்றவுயிர்சத்திகளுஞ்சத்திமர்ன்களுமீசன்மருவுமாயை
யன்றளித்தவாஞ்சத்தியனைத்துமுமைசத்திமா னெல்லாமீசன்.

நுகர்பவனெம்மிறையாகுநுகர்பொருணற்கலையந்தக்கலை யோனாளு, மகிலபுவநங்களையுமாக்கியளித்தழிக்கின்றததனுல்மு த்தி, புகவினைவோர்பகிரண்டப்பிறைவடந்தாழ்ந்தழகொழுகி ச்சுணங்குபூத்த, முகிழ்முலைச்செங்கனித்துவர்வாய்முற்றிழை சேவடிக்கமலமுன்னுவாரால். (கஉ)

இத்தகையமடமயிலைமலையரையனிழைத்திடுநற்றவத்தாற் றூய, முத்தவடங்கிடந்திமைப்பவழகுகுடியிருந்தோங்குமுகிழ் மென்கொங்கை, மைத்தவழுங்கருங்கூந்தல்மேனையினிதுயிர்த் துள்ளமகிழ்ச்சியோடுஞ், சித்தகனிசெம்மாப்பக்காதலனைவண ங்கியிவைசெப்பலுற்ருள். (கா.)

மழகதிரினொளிர்மெய்யுமிருஞ்சிலைநாண்மதிக்குழவிவள்ளை வாட்டுங், குழைபுனையுங்கமலநிகர்நான்முகமுமுக்கண்ணுங்குல வும்வேயி, னழகழிக்குமெண்டோளுமவிர்மதிக்கீற்றணிசடையு ந்தாங்கியிங்ங, னிழையுயிர்க்குங்கொடியென்னவெய்துமகடனை நோக்கென்றியம்பலோடும். (கச)

மலையரையன்குழவிமதியமுதுறைக்கு மணிமௌலிமகளை நோக்கி, யிலவிதழினமிழ்தனையமழலைமொழிப்பேதைநீயாரை யென்னக், குலவரையினுயர்குடுமிகுழையவரியரவநாண்கொ ளுவிமுன்ன, மூலவுபுரமெரியூட்டுமொருமுதல்வன்பங்கிலினி துறைகுவேனல். (கரு)

மட்பகைஞர்திகிரியெனவருவினையின்வாய்ப்பட்டுமம்மரொ ய்திக், கொட்புறுவெங்கொடும்பிறவியொழிப்பதெனதருளென துகோலம்யாவுங், கட்புலனிற்கண்டுவப்பப்பேரறிவுதந்தனநீ காண்டியென்ன, விட்புலம்போய்முடியுரிஞ்சகதிர்கோடியெழு ந்தெனவேறுருவங்கொண்டாள். (கசு)

தண்டுழாய்முடியோனுநான்முகனுமிந்திரனுந்தாழ்ந்துபோ ற்ற, வண்டகோடிகளனைத்துமொருகாழ்முத்தெனமுலைமேல ணிந்துவெய்ய,துண்டவார்பிறையென்னவெயிலிலங்கக்கதைநே மிசூலஞ்சங்கங், கொண்டுநீள்தடக்கையினிற்கொடுவரியினுரிய தண்மென்குறங்கிற்சேர்த்தி. (கஎ)

வெண்ணிலவுகதிர்கோடியொளிர்வதெனமணிமவுலிவிளங் கவோங்கு, மண்ணல்மால்வரையரியிற்பெய்தநூபுரமடிமீதாற் றியார்ப்பக்,கண்வழுக்குசுடர்மாலைமெய்முழுதுந்தவழமிகக்கன

ன்றுவெய்தா,யொண்ணுதற்கட்டழலெறிப்பவருங்கலன்யாவை
யுங்கதிர்க்ளொடிப்பநீட்ட. (கஅ)

உலப்பரியவுயிரொவைக்குமுள்ளுமாய்ப்புறமுமாயுலகம்போர்த்து, நலத்தகுசீறடிமுக்கணளினமலர்க்கைசெவிவாயெங்குமாகிச், சொலற்கரியசிவக்கொழுந்தின்கூறாயமுதல்விதனைத்தொழுதுநெஞ்ச, மலக்கணொடுமகிழ்வெய்தவாங்கவளாயிரம்பெயருமறைந்துபோற்றும். (ககூ)

சிவையனந்தைபராசத்திநிட்களைகேவலைமாயாதீதைசாந்தை
கவுரிமகேச்சுரியமிர்தையசலைசுமங்கலைநிவர்த்திகாளிகங்கை.
பவகரைமாதேவிமகாநந்தைநாதாக்கியைபார்வதிமாமாயை
சுவூதைமாறுநீதைபிரதானைபிரகிருதிதுருவையேகை. (உ0)

சுத்தைவியாபினிசாவித்திரிசலசூக்குமைசுக்கிலைபுராணி
நித்தையநுப்பிரவேசிசொயம்பூதிமகாரூபைநிமலைசோதி
சித்திசருவாதாரைபிரசூதிதருமவித்தைசன்மாதீதை
சத்திமைமாணினிதேவிதாமசிமாதவிமேதைசுனிதிநீதி. (உக)

சுருதிசருவாணிசரச்சொதியுருத்திராணிமானசிசுவாகை,
மிருதியோகினிசோபைசுந்தரியம்பிகைலோபைவிசுவரூபை,வர
தையதிசோபனைமாபெலைகாந்தை [illegible]பாவனைவாக்கியைபவானி,
பிரமவிஞ்சைபுருடமோகினிநாதரூபதரைபிராணவிஞ்சை. ()

பகவதிசம்பவைமகிடவாகனியச்சுதைபரமகலையநாதி
மகதிசத்தயோனிபிரதானபுருடேச்சுரிமாவிஞ்சைசாந்தை
குகைசருவசத்திகலையவ்வியத்தலக்கணைநிர்க்குணிபிராமி
சகமாதாவிபாவரிசின்மயையனந்தவிபவைசராதீததுர்க்கை. ()

இவைமுதலாகியநாமமாயிரமுமெடுத்தோதியிருகைகூப்பிப், புவிபுனல்தீவளிவிசும்புவெங்கதிரோன்மதியெச்சம்புரிவோனாகுஞ், சிவனுருவினீங்காதசெல்விமலரடிக்கமலஞ்சிந்தைசேர்த்தித், தவலருஞ்சீர்மலையரையன்மகிழ்பூப்பவீங்கிதனைச்சாற்றலுற்றான். (உச)

வேறு.

குங்குமமெழுகியகொம்மைவெம்முலை
மங்கையிப்பேருருவொழித்துமாணுற
விங்குநன்னலுருவெடுத்தியென்னலு
மங்கலுழ்மேனிதன்னுருவமாகினாள். (உரு)

மைம்மெழுக்கெறிந்தெனவளர்ந்தகூந்தலுங்
கொம்மைவெங்கதிர்முலைக்கோடுதாங்கலா
தம்மவென்றலம்வருமிடையுமாந்தளிர்ச்
செம்மையின்லங்கவர்ந்தொளிருஞ்செங்கையும். (உ௬)

குழைமயிர்ந்தருள்பொழிகுவளையுண்கணுங்
கழையுறழிருதடந்தோளுங்கண்கவ
ரெழில்கனிந்தொழுகியமுகமுமீர்ங்கதிர்
பொழிதருநித்திலம்பொருவுமூரலும். (௨௭)

தவளையங்கிண்கிணித்தாளுமெல்லிதழ்க்
குவளையின்மணங்கமழ்கோலமேனியும்
பவளவார்கடிகைமெல்லிதழும்பன்மணி
திவள்கதிர்மேகலைதிளைக்குமல்குலும். (௨௮)

ஆயநல்லுருவினையன்பினேக்குறு
மீயுயர்பனிவரைவேந்தன்காதலி
னேயவன்பொடுமுழுதுலகுமீன்றருள்
தாயிருசேவடிதாழ்ந்துகூறுவான். (௨௯)

வருபிரதானநற்புருடன்மானுறந்
தெரிவருங்காய்மலர்க்கடவுள்செங்கண்மால்
பொருவருங்காலநல்லுயிர்கள்புங்கவ
ரிவைநீயளித்தனவாகுமெம்பரால். (௩௰)

பேதமாயபேதமாய்ப்பெந்தம்யாவையுந்
தீதறப்பரித்திடுஞ்செல்வி[illegible]னைக்
காதலின்மகேச்சுரன்கலந்திலானெனி
லோதுமிவ்வுலகெலாம்படைக்கவொண்ணுமோ. (௩௧)

வேறு.

உயர்வானவரிலிந்திரனீபோதும்பிரமவாதிகளிற்
செயிர்தீர்கமலப்புத்தேணீமொய்ம்புள்ளவற்றிற்றிகழ்வளிநீ
பயிலும்யோகப்பண்பினரிற்சனற்குமாரனீபரத்தின்
மூயலுமறைதேர்முனிவரிலருள்கூர்வசிட்டமுனிவரனீ. (௩௨)

சாற்றுமறைதேர்முனிவரரில்வியாதனீநற்சாங்கியரிற்
போற்றுங்கபிலமுனிவரனீபுலவுக்கணிச்சியுருத்திரரி
லாற்றல்சான்றசங்கரனீயாதித்தியரிலுபேந்திரனீ
மாற்றற்கரிதாமுயர்சீர்த்திவசுக்கடம்மிற்பாவகனீ. (௩[illegible])

தவலில்மறையிற்சாமநீசந்தச்சினிற்சாவித்திரிநீ
நவிலும்விச்சைதனிற்பிரமவிச்சைநீநற்சத்திகளி
லுவலற்கரியமாயைநீவருணந்தனினான்மறையோனீ
யெவரும்விரும்புமாச்சிரமநான்கினில்வாழ்வுடையோனீ. (௩௪)

ஈசர்தம்மின்மகேச்சுரனீபுருடர்தமிலீர்ந்துளவோனீ
யாசின்றுயர்ந்தகற்பகத்தினருளீசானகற்பநீ
யோகம்யுகத்திலாதியுகநீபேரொளியிற்கதிரோனீ
மாசில்கவியிற்பாரதிநீமாயாவிகளின்மாதவநீ. (௩௫)

கற்புள்ளவரிலருந்ததிநீபறவைகளில்வெங்கலுழனீ
வெற்பிலுயர்ந்தபொலங்கிரிநீவெவ்வாயரவிலனந்தனீ
யற்பினிற்பநட்பனகளனைத்துநீமற்றுதலினுற்
சிற்பமாகிப்பெரிதாகிச்செறிந்தபிரமநீயாமால். (௩௬)

என்றுவிருகைமலர்கூப்பியிதயநெகிழக்கண்பனிப்பத்
தன்னுத்தழும்பநின்றேத்திப்புவநமனைத்துந்தனியீன்ற
நின்னைப்பயந்தமேனைக்குமெனக்குநிகராரொனவியந்து
பொன்னார்கமலச்சேவடிகள்போற்றுந்தந்தைக்கிவைபுகல்வாள்

புரியுங்கருமம்பலன்விழையாதுள்ளம்புனிதமாய்நாளு
மரியமகங்களினிதாற்றியென்னையினிதினடிபோற்றிற்
கருதற்கரிதாமுத்திநினக்களிப்பலென்னக்கருணையொடும்
வரமாண்டளித்துமீட்டுமுளமகிழ்ச்சிகூர்ந்திங்கிவைபுகல்வாள்.

அருமாமறைகண்முழுவதுமென்சத்தியாகுமாங்கவைகள்
திருமாலுந்தித்தடம்பூத்தசெல்வன்முன்னைப்படைப்பதனி[கார்
லொருநான்மறையாம் பெயரோடுநடக்குமன்றால் வழியொழு
மருவார்முத்திவீடதனின்மம்மருறுநூல்வலைப்பட்டே. (௩௯)

வேதவொழுக்கமிகழ்ந்துபுல்லர்விரகின்றம்போற்றனிபுனையுந்
தீதுநூலின்வழிசென்றோர்செல்வர்நரசர்க்கதிகளா
யாதறன்றாற்புன்சமையங்கற்றோர்முகத்தினருமறைக
ளோதியுணர்ந்தமுதுக்குறைவினுரவோர்சிறிதுநோக்காரால். ( )

சாருவாகங்காபாலஞ்சாற்றும்பாஞ்சராத்திரநூல்
மாறுசெய்யும்வாமமுளமயக்கச்செய்தநூலாகுந்
தேயின்னூற்படிநின்றோரிவற்றையுலகிற்செப்புவோர்
பாறுதுடருநரகத்தினளப்பில்காலம்பாடுக்கிடுவார். (௪௧)

வேதநூல்களவற்றின்வழிவிராட்டாஞ்சுவாயம்பூமனுமன்
றேதுநூல்கள்வியாதமுனியுரைத்தநூல்களவற்றின்வழி
தீதிலருமாமறைக்கிழவர்செப்புநூல்களனைத்துமே
நீதிநூல்களிவற்றின்வழிநின்றோர்நெறியினின்றோரே. (௪௨)

அங்கமாறுமறைநான்குமீமாங்கியமென்றருள்கொழித்துத்
தங்குநீதிநூலொன்றுபுராணமொன்றுதவறெறிந்து
பொங்குதருமநூலொன்றுபுகன்றவீரேழ்விஞ்சையினை [ர்
யங்கணுலகீன்றவளளித்தாளிவற்றையுணர்ந்தோரறிவுடையோ

இன்னவிஞ்சைத்துறைபோயவியாதன்முதலாமிருந்தவத்தோ
ரன்னமிவருநான்முகனேடரியாமுத்தியடைவரவர் [யிகழ்ந்து
பன்னுமறையின்பொருடெளிந்தோர்பாழ்கவொருமூன்றினை
துன்னவரிதாய்ச்சுடர்க்கொழுந்தாந்துரியாதீதந்தனிலடைவார்.

அருவாய்ச்சித்தர்மென்னிலைமையுளத்திலிருத்தவரிதென்னி
னுருவாய்நினைதியென்னுருவமுணர்தற்கரிதேலுன்னுளத்தின்
மருவாநின்றவெத்தேவினுருவாயேனுமனத்திருத்திற்
றருவன்முத்தியத்தேவினுருவாய்விபுவாந்தன்மையால். (௪௫)

என்றுதனதுநிலையனைத்துமியம்பித்தக்கன்புனிற்றிளமான்
கன்றுதனதோர்கரத்தேந்துங்கருணைக்கடலையிகழ்ந்தனனால்
மன்றமற்றுன்மகளாகவந்தேனென்னைமதிக்கண்ணிக்
குன்றவில்லிக்களித்தியெனவுலகம்பூத்தகொடியுரைத்தாள். ()

களிக்குங்கயல்போற்குழைதடவுங்கண்ணிபவளக்கனிமலர்ந்து
தெளிக்கும்பழையமறைமழலைச்சில்லென்கிளவிகேட்டுவகை
தளிர்க்கும்பசும்பொற்குடுமிவரைத்தலைவன்புனிற்றுமதியமுதந்
துளிக்குங்கொன்றைவேணியனைத்தொழுதுதவமாற்றிடுமேல்வை.

இமையாச்செங்கணேற்றெகினப்பாகன்கவரிபுடையிரட்ட [டுப்ப
விழுதாற்றிருப்பக்கடல்கடைந்தோனண்ணலேற்றுக்கொடியெ
திமிரம்பருகிவெயிலுமிழுஞ்செங்கேழ்ப்பருதிவிளக்கெடுப்பக்
குமுதமலர்த்துங்குளிர்கதிரோன்கொற்றக்கவிகைமிசைநிழற்ற.

அண்ணலயிராவதப்பாகனடைப்பைதாங்கவெய்தினுயி
ருண்ணுங்கூற்றங்குற்றுடைவாளேந்தவீர்ந்தண்டுளியிறைப்பத்
தண்ணென்சிவறியிரங்குகடற்றலைவன்றுங்கச்சாந்தாற்றி
வண்ணப்புரிகோட்டேற்றிரளைப்பாகன்போந்துமருங்கசைப்ப.

நிலவுக்கதிர்கால்முத்தவடங்கிடக்குந்தடந்தோணிதிக்கிழவன்
மலர்வாய்த்தம்பலுமிழ்பொன்னம்வட்டில்தாங்கிச்செம்மாப்ப
விலகுகதிர்வான்பிறையெயிற்றநிருதிவேந்தனெரிகான்று
புலவுகமழுமுத்தலைவேல்முடிமேற்றுங்கிமுன்போத (௫௦)

சீற்றத்துப்பிற்புரிகோட்டுச்செங்கணேற்றுத்தகளூர்வோன்
கூற்றையுதைத்தசேவடியிற்றொடுபோதுகைக்கொண்டேக
வேற்றையுயிர்த்தவீசானன்பினாகமேந்திச்செலவயரப்
போற்றியமரர்முடியுழுதாள்வியாழம்விசையம்புகழ்ந்தேத்த. ()

அவுணரியக்கர்கந்திருவர்வசுக்கள்முனிவரருந்தவத்தோர்
நவையில்சித்தர்மருத்துவர்கள்வரைகள்கோட்கள்நதிநதங்கள்
நுவலுநாட்களனந்தன்முதலுரகவேந்தர்நோன்றருக்கன்
றுவலைபடுதெண்டிரையாழியாவுந்தொடர்ந்துபின்போத. (௫௨)

சனகன்முதலமுனிவரர்கள்மரீசிமுதல்வருலகுதந்தோர் [ருடர்
புனைதீந்தொடையாழ்க்கின்னரர்வான்பொருப்பிலுறையுங்கிம்பு
கனலுஞ்சுழல்கட்பேய்பூதங்கணைபோற்கழற்காற்குய்யகர்வெவ்
வினைதீர்கருடர்பறவைகள்பல்விலங்குதொழுதுபின்செல்ல. ()

தக்கன்மகத்திற்புகுமமரர்தலைதோளுடலங்கண்விழுங்கிக்
கக்குங்குலிமுத்தலைவேல்வீரன்கடவுட்சிலைமணிமான்
மிக்கசீற்றத்தெழும்வலித்தோட்சண்டன்முதலாம்விளங்குசுடர்
முக்கட்பெருமான்கணமனைத்துமிருபாற்றொடர்ந்துமுன்செல்ல

அண்டமுகடுமோழைபடப்பானுகம்பனதிர்குரல்வான்
கொண்டலுருமினாயிரம்வெண்குடவாய்ச்சங்கமெடுத்தூத
மண்டுதிறல்கூர்வெஞ்சினத்தவாணனோராயிரங்கரத்தால்
விண்டதுலகமெனச்சதியின்மயிர்க்கண்முழவமிகமுழக்க.(௫௫)

வேறு.

ஆள்வழக்கொழியநீண்டவரிமதர்மழைக்கட்செவ்வாய்
நாளிளமதியைநக்கநறுநுதல்நகைவெண்முத்தம்
நீள்வட்டஞ்சுமந்தகொங்கையுருப்பசிமுதலோர்நேர்போய்த்
தாளிணைபெயர்த்துமுன்னஞ்சதிமுறைபிறழாதாட. (௫௬)

கன்னலினமுதுதேனிற்கனியினிற்கனிந்தபாட
லின்னிசைமகதிவீணைநாரதனிசைவழாத
கின்னரமிதுனநாணக்கிளைநரம்புளருநல்யாழ்ப்
பன்னருஞ்சிறப்பின்மிக்கதும்புருமுதலோர்பாட. (௫௭)

மருக்கிளர்துளவத்தண்டார்வானவன்முதலவிண்ணோ
ரருக்கனிலழகுகாட்டுமவிர்மணிமவுலிதோறு
நெருக்கன்மின்போமின்காண்மினிங்குமினின்மினென்னாத்
தருக்குடைநந்திதாக்கும்பிரம்பொலிதரணிபோர்ப்ப. (௫௮)

வெள்ளிவேதண்டத்துச்சியரசுவீற்றிருக்குந்தூய
பிள்ளைவெண்டிங்கட்கண்ணிவார்சடைமுடித்தபெம்மா
னொள்ளழற்செங்கட்பேழ்வாய்நரைவிடைதுனைவினூர்ந்து
தெள்ளருந்தவத்தோர்வைகுமிமயமால்வரையிற்சார்ந்தான். ()

மழவிடையிழிந்துமுக்கட்பண்ணவன்மலரினோனும்
பொழிகதிர்நேமியோனும்பொருப்புறழ்தடக்கைதாங்க
விழைவொடும்போந்துமாமன்வியப்பொடுந்தொழுதுநல்கு
மழலுமிழ்தறுகட்பேழ்வாயரியணையினிதமர்ந்தான். (௬௰)

மருகனைத்தொழுதுவாழ்த்திமலர்த்தடங்கண்ணோவாயாய்ப
பருகுவான்போலநோக்கிப்பண்ணவர்முனிவர்யார்க்கு
முருகியுள்குழையச்செம்மாந்துலப்புறுமுகமன்கூறி
யருவைமீருலகமீன்றவன்னையைக்கொணர்மினென்றான். (௬௧)

என்னலுங்குருதிக்காந்தள்முகிழ்விரலிருகைகூப்பி
யன்னமுமயிர்வாய்ச்செங்கட்பிடியுமுள்ளயர்ந்துசோரப்
பொன்னடிச்சிலம்புபைம்பொற்கிண்கிணிபுலம்பவேகி
மன்னவனுளாத்தமாற்றமேனையவணங்கிச்சொன்னார். (௬௨)

மைந்தவழ்கூந்தலல்லார்கூறலுமகளைப்புல்லி
யையதெழின்மேனியெங்குமரிறபத்திருநீராட்டிக்
கொய்தளிர்த்தாமஞ்சூட்டிக்குங்குமமுலையிற்கோட்டிப்
பெய்தொளிர்பைம்பொற்பூணிற்பேரெழின்மறைத்திட்டாரால்.

எரிமணிமுகடுவேய்ந்திட்டிளங்கதிர்க்கற்றைகாலுங்
குருமணியடைப்பைதாங்கிக்கூற்றொளியிட்டுவைகு
மரிமதர்நெடுங்கட்செவ்வாய்ப்புலோமிசையலங்குகாந்தண்
மருமலர்க்கரத்தாற்றூயவெள்ளடைமடித்துநல்க. (௬௪)

அழகுபூத்தொசிந்தகொம்பினம்பகட்டல்குற்செவ்வாய்க்
குழைபுறங்கண்டவேற்கட்டிருவுநெய்த்திருண்டகூந்தல்
நுழைதுசுப்பலங்குவேய்த்தோள்வாணியுநொய்திநெய்திப்
பொழிகதிர்நிலவுகாலுஞ்சாமரைபுடையின்வீச. (௬௫)

கன்னியங்கற்புவாய்ந்தவருந்ததிவாழ்த்தக்கங்கை
பன்னருமறைகள்பாடியினியபல்லாண்டுகூறப்
பொன்னகர்க்கிறைவற்றந்தவதிதிபூம்பொறிகள்சிந்த
முன்னருந்தவத்திலோபாமுத்திரையாசிகூற. (௬௬)

தாழ்தடக்கையன்னயாக்குநதழுழுமுறுவாராகோதங்கும
வீழ்முலையரம்பைசெம்பொற்சிவிறிநீர்விழைவிற்றூற்றக்
கேழ்கிளர்மயிலஞ்சாயற்றிலோத்தமைகிளைக்குஞ்செய்ய
சூழ்சுடர்ப்பருதிமானுஞ்சுடர்மணிவிசிறியேந்த. (௬௭)

புல்லிதட்குவளையுண்கட்காளிபொற்பிரம்புதாங்கி
மெல்லெனநடத்தியென்றுவியந்தடியீடுபோற்ற
மல்லலம்புனைமயூவும்ம்ன்றசிற்றுநரவல்லி
பல்லியங்கரங்கமன்றல்பயிலுமண்டபத்துட்புக்காள். (௬௮)

வேய்நெடுந்தோளியெய்தவிண்டுவைமுதலதேவர்
தாயினர்மலர்கள்கண்ணீர்துளித்தனருவகைபொங்க
வாயிரநாமம்பாடியாடினரடியின்வீழ்ந்தார்
தாயினைக்காணின்மைந்தர்மகிழ்வதுதக்கதன்றே. (௬௯)

கடிமணக்கருமம்யாவுநான்முகக்கடவுள்காட்ட
விடிமுரசிரங்கியார்ப்பவினவலையலறியோங்க
வெடிவில்சிரிமையவேந்தன்வாகியவுதகத்தோடும்
வடிமலர்க்கன்னிதனையுமகேசனுக்கருளினனே. (௭0)

தூயவிக்கதைகற்றோர்கள்வீட்டின்பந்துய்ப்பரின்று
மாயிரநாமமோதியாரமுற்கருமஞ்செய்வோர்
மாயிருஞாலங்காத்துப்பின்னர்வானறுவினீழல்
பூம்புபர்பசும்பொன்றேட்டுமேவிவீற்றிருப்பரென்றும். (௭௧)

திருக்கலியாணத்தியாயமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—௩௬௩.

பதின்மூன்ருவது

## பிருகுவாதியர்தோற்றமுணாத்த வத்தியாயம்.

———ாOா———

அன்னநற்காதையாவுமுணாத்தனையயவென்னுப்
பொன்னகர்க்கிறையுநல்யாழ்முனிவனும்புகழ்ந்துவேதம்
பன்னியபிருகுவாதிமுனிவரர்படைப்புமுற்று
நன்னயத்தியம்புகென்னநாரணனவிலலுற்ருன். (க)

வேறு.

பிருகுமுனிக்கவ்வளைத்தோட்குழையலைக்கும்பிணைநெடுங்கட்கயாதியென்பா,டிருவயிற்றிலஞ்சுணங்கார்ந்தழகுகுடியிருந்துநனிசெம்மாந்தோங்கும், வருமுலைச்செந்துவர்க்கனிவாய்வாரொலிமென்கருங்கூந்தல்மயிலஞ்சாயல், முருகுயிர்க்குஞ்செழுங்கமலப்பொகுட்டுறையுமுதல்வியினிதுதித்தாளன்றே. (உ)

பின்னருமம்முனியளித்த தாதாவும்விதாதாவும் பிறங்குகோட்டுப், பொன்னெடுமோல்வரையுயிர்த்தவாயதியையநியதியைவெம்பொறிகள்சிந்து, மன்னியசெந்தழல்சான்ருய்மணம்புரிந்துபிராணன்மிருகண்டுவென்னும், பன்னருஞ்சீர்ப்புதல்வர்தமைமகிழ்விஞெடுமுலகேத்தப்பயந்தாரன்றே. (ஙு)

போற்றரியமிருகண்டுப்புரமூன்றுமொருங்கெரித்தபுனிதற்போற்றி, யேற்றெருமைக்கடும்பாகன்றனியாணையரனடியார்க்கெய்தாவண்ண,மாற்றியிடுமார்க்கண்டமுனிவரனைமகிழ்ந்தளித்தான்பிராணனென்போ, னுற்றலருமறைதேரும்வேதசிரசெனுமுனியையளித்தானன்றே. (ச)

தழல்வேள்வியினிதாற்றுமரீசிமுனிசம்பூதியிடத்திற்றூய,நிழன்மேவுபவுரணப்பேர்மைந்தனையுங்கிருட்டிமுதனிகழ்த்துநான்கு, குழைமேவுமதர்நெடுங்கண்மகளிரையுமினிதளித்தான்கோதில்சீர்த்திப், பழமறைதேர்பவுரணனும்விசையனெடுபெர்வதனைப்பயந்தானன்றே. (ரு)

புலத்தியற்குக்கமைவயற்றிற்கருத்தமனுஞ்சயிட்டுணுவும்பொருவிலாத, வுலப்பறுசீர்மிகவோங்குவன்கபீவாசனும்வந்துதித்தார்நாளு, மலக்கணறுமத்திரிநல்லனசூயையவ்வயிற்றினலங்குசோமன், கலக்கமில்தத்தாத்திரயன்துருவாசனெனுமிவரைக்களிப்பிற்றந்தான். (சா)

அங்கிராவெனுமுனிவற்கமுதுயிர்த்துவிடமுமிழுமலங்குவேற்கண், மங்கையாமிருதிகுகுச்சினிவாலிராகையனுமதியென்ருேதுங், கொங்குசேர்நறுங்கூந்தற்குழைதடவந்துயிர்பருகுங்கொடியவேற்கட், டிங்களாமெலவார்வப்பற்றெழுவாண்முகத்நசிறுமியரையீன்ருள். (எ)

மறைபயிலும்புலத்தியநற்பிரீதிநலமகிழ்வெய்திவேதவா குத், திறல்கெழுநற்றெமபோனியெனுமைந்தரிருவரையுஞ்சிற ப்பினல்கி, நறைகமழுங்கருங்கூந்தற்சந்ததியையுயிர்த்தனள்சந் ததியென்பாளு, மறுபதினுயிரம்வாலகில்லியரைகிரதுவினைய ணைந்துபெற்ருள். (அ)

கற்புருவுகொண்டனையவருந்ததிநல்வசிட்ட னருள்கலந் துமேவிச், சொற்றரசன்பயனூர்த்தவாகுசேவனன்புகலுஞ்சுத பாவோடு, மற்புடையசக்கிரனல்லவனென்னுமெழுமகவையயி ல்வேலுண்கட், பொற்புவழிந்தொழுகுமுகப்பூவையையிவ்வுல குய்யப்பொலிவினீன்ருள். (கூ)

வன்னியெனுமழற்கடவுள்சுவாகையெனுமனைவியிடத்தன்பு கூர்ந்து, பன்னுதிறற்பாவகனைப்பவமானன்றனைச்சுசியைப்பரிவி னீன்ரு, னன்னவரிலாணிதனிற்பிறந்தவழல்பவமானனழன்று வீசு, மின்னிடத்திற்பிறந்தவழற்பாவகன்மென்சுசியெனுந்தீவ டவைத்தீயே. (க0)

அன்னவழற்கடவுளரோமூவருமற்ருேரொருவரைம்மூன் ருக,மன்னியநாற்பானைந்துமகவீன்ருர்மற்றவர்மூதாதையோடு, துன்னுமழற்கடவுளாதந்தொகையோதினென் ருெழித்தவைம் பானென்னப், பன்னிடுவரீங்கிவர்கள்சிவநெறியிலினிதொழுகு ம்பண்பினேரோ. (கக)

மறைகிடந்துவிளையாடுநன்ருேவேதியனிடத்தின்மகிழ்வினே டு, முறையின்மகம்புரிந்தோரும்புரியாருமாய்ப்பிதிர்க்கண்மொ ய்ம்பினேடு, மறைதருமக்கினிச்சுவத்தாவெருகிடதனொனும்பெ யரோடமைந்தார்தேவர், செறியுமானுடரிவர்தம்பிதிர்க்களெ ளமற்றிவரைச்செப்புவாரால். (கஉ)

உரைத்திடுமக்கினிச்சுவத்தனொனுந்தேவர்பிதிர்க்களுநீளுல ப்பில்சீர்த்தி, நிரைத்தவெருகிடதனொனுமானுடர்தம்பிதிர்க்களுந ன்னெறிவழாது, முருக்கிதழ்மென்சுவைதுணைமுலைமுகடுபு யந்தழைப்பமுயங்கிச்செய்ய, திருக்கிளர்மேனையைத்தூயவை தரணிதனையிதயஞ்சிறப்பவீன்ருர். (கங)

மேனையெனுமணங்கரசிமலையரையன்புயந்தழுவிவியப்பினே டு, மூனவறுமைநாகம்பறவைப்பேர்வரைகங்கையொளிகுலாய, பானிலவுக்கதிர்பரப்பிநள்ளிருண்மேய்ந்தழகொழுகும்பனிமெ ன்கோட்டுக், கூனல்மதிவடந்தாழ்ந்தகொம்மைமுலையுமையிவ ரைக்குறிப்பினீன்ருள். (கச)

கொம்மைமுலைவேய்நெடுந்தோட் குழையலைக்குமதர்நெடு ங்கட்கொவ்வைச்செவ்வா, யெம்மையாளுடையவடன்கதைமு

ன்னரிசைத்தனமற்றியம்புதக்கன், செம்மைசேர்புதல்வியர்தம் மக்கள்வருதோற்றமனந்தெளியச்சொன்னே, மம்மநீர்கேட்பனகள்யாவையுநன்கியம்புவமென்றறைதலோடும். (௧௫)

வாளமரின்றிறம்புரியுமன்னவர்தந்தோற்றநனிவழங்குகென்ன, பாளைகமழ்நறுங்கூந்தற்புலோமிசைவெம்முலையானைப்பாகன்றாய, கேள்வியினற்றுறைபோயமகதியாழ்முனிவணங்கிக்கேட்டலோடு, மாளரியாயிரணியன்றனூரம்பிளந்தநெடுமாயனறைதலுற்றான். (௧௬)

பிருகுவாதியர்தோற்றமுறைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௩௭௯.

---

பதினான்காவது

## தக்கனைச்சபித்தவத்தியாயம்.

அலங்கிலைவேற்சுவாயம்புமனுவென்போன் சதரூபையாகமேவியிலங்குபுகழ்ப்பிரியவிரதனைப்புகழுத்தானபாதனையாங்கீன்றான் வலங்கெழுதோளுத்தானபாதனியற்றுருவனையுண்மகிழவீன்றான் றுலங்கியசம்புவைமணந்ததானியனைச்சிட்டனையத்துருவனீன்றான்.

எட்டானைத்தம்பத்தோடிகல்புரிதன்சயத்தம்பமினிதிறைட்டுஞ், சிட்டனிலவிதழ்ச்சுமதிமுலைதோய்ந்துரிபுவிருகதேசன்விப்பிரன், மட்டவிழ்தாரிபுஞ்சயன்சொல்விருகலனென்பவர்ப்பயந்தான்ரிபுவும்வாய்ந்த, பெட்பினெடும்பிருகதிதன்முலைதோய்ந்துசக்குசனைப்பெற்றானன்றே. (௨)

தீய்த்துமிழும்வெள்வேற்கைச்சக்குசனு மனமருட்டிச்சிறப்புவாய்ந்த, வேய்த்தடந்தோட்புட்கரணிமுலைதோய்ந்துசாக்குசனைவிருப்பினீன்று, னைத்துபுகழ்ச்சாக்குசனும்நாக்கிடந்துகதிரொறிக்குமைதேய்ந்தல்குல், வாய்த்தபொலங்கொடியனையநாட்டுவலைதனையினிதின்வதுவைசெய்தான். (௩)

ஐதெழிலார்நாட்டுவலையன்பினெடுமெனங்கலந்தாருருவெய்தாம, நெய்திருவேற்சுசிபுருவக்கினியுக்கிரன்முனிசூழ்நிலனேழ்போற்றச், செய்தவங்கூர்சுத்துய்ம்மன்சத்துய்ம்மன்முன்னுலகிற்சிறப்பினேங்கு, மெய்தருஞ்சிரபிமன்நிமகனிவரோர்புதின்மனையுமினிதினீன்றான். (௪)

ஆங்கவரிலுருவென்போனம்பலைக்குங்கருந்தட்டங்கணேக்கினேயி,வீங்குதடமுலைபுணர்ந்திட்டங்கனைநற்சுமனசனைவிளங்குவேற்கை, யோங்குதிறலுக்கிரனைக்கிரீசனைச்சாரனைக்கயனையுவப்பினீன்று, னீங்கிவரிலங்கனென்போன்வென்னெனும்புகழ்வேந்தையினிதினீன்றான். (௫)

வேறு.

அரசுவிழுங்கிவாய்காய்ந்தவயில்வேலுழவன்வென்னென்போன்
களைகொன்றிரங்குகடல்வலையமுழுதுமகவான்கன்றாக
வுரியபொருள்களனைத்தினையும்பாலாய்க்கறந்தின்னுயிர்புரந்த
பிருதுவென்னுமணிமவுலிப்பெரியோன்றன்னைப்பெற்றனனால்.

அன்னோன்வேள்விச்சாலைதனிற்காதைநவில்வானழல்நேமி [ர்
மின்னோன்சூதமுனியாகப்போந்தானென்பர்முதுக்குறைந்தோ
பைந்நாகத்தின்கதிர்பொழியுநெற்றிக்கிடந்தபாரேழுந்
தன்னோராணைதனிசெலுத்தும்பிருதுமாழ்கியிவைசாற்றும். (எ)

மழலைத்தீஞ்சொற்கிண்கிணிக்கால்மைந்தரில்லாவரசாக்ஷி
விழையேனென்றுவலங்குளையச்சிங்காதனம்விட்டிழிந்தேகி [ய்
மழைவீழ்ந்துறங்குநெடுங்குடுமிக்கோவர்த்தனமால்வரையெய்தி
கழையாலானின்கணங்குவித்தகன்னற்பழிச்சித்தவம்புரிந்தான்

இழுக்குத்தேறற்செஞ்சேற்றிற் பெடைவண்டெய்திச்சே
வல்முனம்,வழுக்கிவீழ்ந்துநாணெய்தும்வண்டாமரையாள்புணர்
ர்மார்ப, னொழுக்கந்தன்னினிகரில்லாவரசனுஞற்றுந்தவநோக்
கிப், பழுத்தகனிவிண்டமுதுக்கும்பான்மைபோலவிவையு
ரைப்பான். (கூ)

பாற்றினுடன்வெங்கழுதுதொடர்பருதிவேலோய்பன்னெடுநா
ளாற்றுந்தவங்கண்டுளமகிழ்ந்தேமமுதுங்கனியுந்தனிகுலவி
யூற்றுமழலைமொழிச்சிறுவரிருவர்தந்தேமெனவோதிக் [னல்.
கோற்றேன்குதலைச்செழுங்கமலை கொழுநன்மறைந்துபோயின

மழையினுதவுங்கொடைத்தடக்கைப்பிருதுவென்னும்வா
ழ்வேந்த,னழகுகுழலையுஞ்சுமக்கலாதிருகுமிடையுந்தரந்தாளைக்,
கழைமென்பசுந்தோணலனுகர்ந்துகதிர்செய் வடிவேற்சிகண்டி
யையும், நிழல்செய்கதிர்வாள்விரதத்தான்றனையுநெறியினினீ
ளித்தான். (கக)

ஒன்னார்மகளிர்கலனழிப்பவொளிறும்வடிவாளுறைகழிக்கு
ம், பொன்னார்தடந்தோட்சிகண்டியென்போன்பொருவில்சுசீ
லன்றனைப்பயந்தா, னன்னோனிமையவரையடைந்துகங்கையாற்
றிளகன்கரையின், மின்னுக்கதிரோன்மண்டலத்தின்விருப்பிலீ
சன்றாள்போற்றி. (கஉ)

பாலவெண்ணீரொளிபழுத்தசுவேதாச்வனும்பாசுபதன்
சாலவருமாதவம்புரியுமரசன்முன்னர்த்தானணுகி
மாலோனீசன்றாள்போற்றிவரம்பெற்றனனீண்டாம்பொருத
வேலோயன்னத்துறப்பித்துவிழுமாமறையுமொன்றுணர்த்தான்

அருமாமறையாலுளந்தெருளுற்றன்னோனுங்குத்தவம்புரி
ந்தான், மருடீர்கேள்வியவிர்தரனென்போனுலகமகிழ்தூங்க
ப், பெரியோரோத்தும்பிருசீனப்பெருக்கிச்சென்போன்றனைப்ப
யந்தான், றெருளாலவனுங்கட்லுயிர்த்ததெரிவைமுலையிற்றினை
த்தனனால். (௧௪)

இமையோர்பரவும்பிரச்சேதச்சென்னும்பெயரினொருபதின்மர்
தமையாங்களித்தானம்மைந்தர்பதின்மர்தாமுந்தவலருஞ்சீ
ரமையார்தடந்தோள்மாரிடையையன்பின்வதுவையாற்றிநறுங்
குமுதச்செவ்வாய்ப்புத்தமுதங்கூட்டுண்டமரரொனக்களித்தார்.

களிக்கும்வேந்தரொருபதின்மர் கலந்துகடவுளருங்கற்பி
ற், றுளிக்குந்தேன்ரூர்நறுங்கூந்தற்றுவர்வாய்த்தீஞ்சொன்மாரி
டையாங், களித்தாள்தக்கன்றனைமகவாயெனலுமவனீண்டுதித்
ததெவன், தெளித்தீண்டுரைத்தியெனவோடுந்திருமால்தனையு
ரைசெய்வான். (௧௬)

கடவுட்பொன்னங்குடுமிநெடுங்கயிலைவரையினமரர்தொழ
வுடனக்கண்ணனெடுந்தக்கனுவப்பினெய்திமுக்கணனை
முடியின்வணங்கவவர்க்கியன்றமுகமனோடுமருள்புரிய [ர்
விடைகொண்டேகித்தத்தமதுபதியின்விரைவிற்சென்றடைந்தா

காமனுடலம்வெந்தொழியநுதற்கண்விழித்தகாபாலி
மாமனெனவுமதித்திலனென்றுள்ளமாழ்குமமையத்திற்
றேமென்கூந்தலுலகீன்றசெல்விதாதைமனையெய்த [ன்
தூம்பிறக்கத்தனினோக்கிச்சொல்லாற்சுடுசொல்பலசொன்ன

திங்கட்கண்ணிமுழுமுதலையிகழ்ந்தமாற்றஞ்செவிப்படலு
மங்கைநீங்கியுலகீன்றவன்னையிமவான்மகளாகிக்
கொங்குவிரிக்கும்பசுங்கொன்றைநறவூற்றிருப்பக்குளிர்தூங்குங்
கங்கைவேணியிடமருங்கின்மகிழ்வினோடுங்கலந்தனளால். (௧௯)

உலகமீன்றபொலன்கொடியைத்தக்கன்முனிந்தவுரைகேளா
வலகில்சோதியெம்பெருமான்சீற்றமெய்தியவனிதனி
லிலகுமவுலிமானிடவேந்தாகிப்பிறக்கவெனச்சபித்தான்
புலவுவேற்கண்மாரிடைபாலதனாற்புதல்வனாயினான். (௨௦)

ஈரைந்தரசிற்கொருத்திவயிற்றுதித்ததக்கனிழைத்தவைகள்
பாரின்விளங்கவுரைத்தியெனப்பருவமயிராபதப்பாகன்
றேருமுதுநான்மறைவடித்ததெய்வமுனிவன்கேட்டிடலுங்
காரிற்கரியதிருமேனிக்கருணைக்கடலாண்டுரைசெய்வான். (௨௧)

தக்கனைச்சபித்தவத்தியாயமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் — ௪௦௦

## பதினைந்தாவது
# தக்கன்வேள்வியழித்தவத்தியாயம்.



கனாபெகடலந்தானைக்காவலன்றக்கனென்போ
னுரவுநீருலகமேழுந்தனதடிபபடுத்தியொன்னார்
தருதிறையளப்பவிண்ணோர்தனித்தனியேவல்கேட்ப
வரியணைப்புறத்துவைகியாழியொன்றுருட்டுநாளில். (க)

முன்னையப்பவத்திலீசன்வைதவையுளத்தின்முன்னி
யென்னையாளுடையமுக்கட்கடவுளையின்றியோங்கு
பின்னல்வெண்டிரைத்தாழ்கங்காத்துவாரத்திற்பெட்பினெய்தித்
துன்னரும்வேள்விமற்றென்றாற்றுவான்றுடங்கினானே. (உ)

குறுமுயலரத்தமேய்க்குங்கோசிகந்தாழ்ந்தவல்கு
லிறுமருங்குமையாள்பாகனின்றியாறுற்றும்வேள்விக்
கறிதுயிலமர்ந்தமாயோன்முதலியவமரர்யாரு
முறுகெனமுடங்கல்போக்கயாவருமொல்லையுற்றார். (ங)

தாக்கணங்கமர்ந்தமார்பிற்றண்டுழாய்முகுந்தன்வெள்ளைக்
கோக்களிறூரும்விண்ணோர்கோன்முதலமரர்நாளுந்
தீக்கொளுவருத்தியுண்ணுமுனிவரரியக்கர்சித்த
ரேக்கறவெய்தவீக்குமிளமுலையமரர்மாதர். (ச)

குவளைநாண்மலரைவென்றுகுழைபொருதலைக்குமுண்கட்
டுவரிதழ்க்கமலைவாணிபழமறையினிதுதொக்க
வவையினிற்பால்வெண்ணீறுகண்டிகையணிந்துமிக்க
தவமொருவடிவுற்றன்னததீசிமாமுனிவன்வந்தான். (ரு)

தொள்ளைபூத்தலர்ந்தநெஞ்சிற்றக்கனீகேட்டிதூய
வள்ளிலைக்கமலவீட்டிலந்தணனுதியாகு
மெள்ளருந்தருக்களீறுயிமைந்திடுமுயிர்கட்கெல்லா
முள்ளுறைசோதிதன்னையிகழ்ந்ததென்னுரைத்தியென்று. (கூ)

தவத்துறைபடிந்தநெஞ்சிற்றதீசிமாமுனிவன்சாற்ற
வுவப்புடன்மறைகள்யாவுமுருத்திரபாகந்தன்னை
நிவப்புடனுரைத்ததில்லைநீயவைகேட்டியென்று
வவித்துறைபோயநெஞ்சத்தக்கனுங்கறைந்திட்டானே. (எ)

பழுதுணர்தக்கனுங்குப்பகர்தலுநடுக்கமெய்தி
யிழுதைநீமடமைநெஞ்சத்தியைந்தவாறிசைத்திகொல்லோ
மழுவிடையூர்தியன்றிமகம்புரிந்திடறீதென்னத்
தொழுதகுமறைகள்யாவுஞ்சொல்லியாண்டகன்றமாதோ. (அ)

மன்பெருஞ்சிறப்புவாய்ந்தமலரயன்முதலினோர்தம்
மென்பணிந்தீமத்தாடியெறிவரந்தையமேற்குங்
கொன்படுசூலவேற்கைக்கூத்தனுங்கருத்தன்கொல்லோ
பொன்புனையறுவையார்த்தபூவைமேனியனையல்லால். (௯)

என்னவேதத்கன்கூறவிருந்தவமுனிவர்தாமு
மன்னுயிரனைத்துங்காக்குமணிநிறவண்ணன்யார்க்கு
முன்னையோனென்னநெஞ்சின்முதுக்குறைவனைத்துநீங்கத்
துன்னியமரையையுள்ளமறைப்பமாழாந்துசொன்னார். (௧0)

என்றலுந்ததீசிநெஞ்சமெரியெழக்கனன்றுசீறிக்
குன்றவிற்கடவுடன்னையிகழ்ந்திடுங்குற்றந்தன்னாற்
பொன்றிவெங்நரகந்தன்னிற்புகுந்துநெஞ்சழிதிரென்னாத்
துன்றியமுனிவருள்ளஞ்சோர்வுறமுனிந்துவைதான். (௧௧)

மெல்லியவனுவைச்செம்பொன்மேருவோடிணைத்துநோக்கும்
புல்லறிவாளர்போலப்பூவைபோன்மேனியானை
யெல்லையில்குணக்குன்றாயவீசனுக்கிணையென்றோதுங்
கல்வியின்மடமைநெஞ்சக்கடவுளர்தம்மைச்சீறி. (௧௨)

விழுமியரல்லார்கேண்மைவெந்துயர்ப்படுத்துமென்னா
வழிமதுக்கமழுஞ்செய்யமரைமலர்ப்பொகுட்டில்வாழும்
மழமறைக்கிழவனீங்கப்பணிபிருவிசும்பினீங்கி
யுழையுறைதேவர்யாருந்தனித்தனியுள்ளஞ்சோர்ந்தார். (௧௩)

வருவனவெண்ணிவேதன்போயதுமனக்கொண்டுள்ளம்
வெருவரலின்றித்தக்கன்வேள்வியையியற்றநோக்கி
யருமறைவடித்தசெஞ்சொற்றதீசிமாமுனிவனுங்கட்
கருமிடற்றெந்தைசெம்பொற்கழலிணைநினையுமேல்வை. (௧௪)

முன்னையபவத்திலென்னையிகழநீமுனிந்ததக்கன்
மன்னுமிப்பவத்தினின்னையிகழ்ந்தருமகஞ்செய்கின்றா
னன்னவனூற்றுமெச்சமழித்திடவேண்டுமென்ன
வென்னையாளன்னைகூறவிறைவனுமதனைநேர்ந்தான். (௧௫)

ஆயிரமௌலியண்டமுகட்டினையளப்பச்செய்ய
வாயிரங்கமலப்பொற்றாளகனிலமளந்துசெல்ல
வாயிரந்தடந்தோளெட்டுதிக்கையுமளப்பவெய்ய
வாயிரங்கண்கடீயவழற்சிகைபரப்பிமண்ட. (௧௬)

பொழிகதிர்நேமிச்சங்கங்கப்பணம்புகையுமொள்வா
ளெழுவழல்கவிழ்க்குஞ்சூலந்தோமரமெறியும்வைவேல்
மழுமுதற்படைகள்யாவுங்கரந்தொறும்வயங்கித்தோன்ற
முழுமதிவகிர்ந்தாலன்னமுள்ளெயிற்றொளிவில்வீச. (௧௭)

புவனகோடிகளுந்தீக்கும்புராரிவெஞ்சீற்றத்தீயிற்
கவைபடுசூலவைவேற்காய்சினவீரன்தோன்றித்
துவரிதட்கனிவாய்தீஞ்சொற்றேகையோர்பங்கன்றாளி
லுவகையின்வணங்கிச்சூழ்போந்தினையனவுரைக்கலுற்றான். ()

வேறு.

அண்டகோடிகண்மிதக்குமலையாழியொருகைக்
கொண்டுமற்றதுபொதிந்தகனல்கோட்புரல்செயு
மண்டுகாலதனைமுற்றும்வெளிமுற்றுமடைவே
யுண்டுமீளவுமளித்திடுவனெந்தையுமையாய். (௧௯)

என்றுகூறலுநகைத்துலகம்யாவுமழியேல்
வென்றிவீரவுயர்தக்கனழல்வேள்வினைவிற்
கொன்றுபோதுகவெனாவிடைகொடுப்பவவனு
நன்றவீரமெனநாணொடுநடந்தனனரோ. (௨0)

மாலைவெள்ளருவிதாழிமையவல்லிகடிதிற்
காலனுஞ்சமரிலஞ்சவருகாளியையுயிர்த்
தாலமுண்டெரிகவிழ்த்துமுடைநாறுமழல்வாய்ச்
சூலநல்கவிடைகொண்டுதொழுதேகினளரோ. (௨௧)

எரிகவிழ்க்குமயில்கப்பணமுசுண்டியெறிவேல்
குருதிக்குகதைகொண்டுகணநாதர்துடர
நரைவிடைக்கண்வருகாளியொடுமேறிநகைகால்
பருதிவேலுழவன்விண்ணவர்கள்பாலணுகினான். (௨௨)

சேட்டிளம்பருதிகோடிகதிர்சிந்தியெனலா
மோட்டுமாமணியணிநதிடுமுருந்தன்முதலோர்
கூட்டமெய்துமுயர்சாலையிடைசென்றுகுறுகி
வாட்டிறற்குருசில்தக்கனுளமாழ்கநவில்வான். (௨௩)

எந்தைபூசனையிகழ்ந்தனதுவெள்ளையறிவி
னந்துமாமகநடத்துதிகொலென்னநகையா
வந்தில்மந்திரமறைந்ததிலையென்றுமறையோ
ருய்ந்திடாதவழிதக்கனுரையாடுபொழுதின். (௨௪)

அடைவின்வேதமுதன்மந்திரமனைத்துமுதவுங்
குடிலைதக்கனைவெகுண்டரிமுன்வந்துகுறுகி
விடைவலானொழியநீகடவுளோவிடைவலா
னிடமருங்குறையுமங்கையுனையன்றியெவரோ. (௨௫)

என்றுகூறுதலும்விண்ணவர்கள்யாருமிகழா
நன்றுநன்றெனவிலாவுறநகைப்பமிடல்கூர்
வென்றிவீரனும்விழிக்கடைசிவப்பமுனியா
வன்றுசாலையழலுண்டிடவரிந்தனனரோ. (௨௬)

வேறு.

இரும்புகுதட்டிவிலாழியுமிழிவுளிவிக்குமணியூபங், கருந்தா
தென்னக்காய்ப்பிருந்தகாத்தான்மூறித்தோர்குறும்பூதம், பொ
ருந்துமவிகள்பேய்குழிசிபுடைத்தாங்குடைத்து முத்தழற்கும்,
பருந்திற்படுத்தசயனமிசைபரூஉத்தாளதனூற்புடைத்ததே. ()

உராறுசிற்றத்தெரிகுஞ்சிக்குறுத்தாட்பூதமுமிழ்கனற்கட் [கு
டிருகுசினத்தபேய்க்கணங்கள் செருவேற்றெதிர்ந்துதிசையளக்
மிருதோள்கொட்டிமகமாற்றுமுனிவர்ப்பற்றியெறிதிரைய
விரிநீர்க்கங்கையிடையமழ்த்திவிளையாட்டயர்ந்துதுள்ளுமால்.

கட்வுட்சாலைதனிலமரர்களிப்பக்குளிக்குமாமகளி [ருவி
ருடலுங்கூற்றுங்கண்புதைப்பவொறுக்குங்கணங்கள் வாய்வெ
வடிவேனெடுங்கண்புதைப்பவவை குடங்கைக்கடங்காவாற்றிறு
படர்கூர்ந்துள்ளநடுங்கவயிறதுக்கிமயிலிற்பதைபதைப்பார். [ற்

அஞ்சிலோதிசுவற்பிறழவம்மென்சிலம்புகிடந்தலற
வஞ்சிமருங்குல்போயொளிப்பவளர்மென்முலைமேலுத்தரிகம்
பஞ்சியூட்டுபதம்பணிப்பப்பட்டர்தற்கரிதென்றிடைவீழ்ந்து
நஞ்சமமுதுங்கலந்தன்னநகுவேனெடுங்கண்பனித்தயர்வார். ()

பாழிநெடுந்தோட்காளியெதிர்பட்ரவெருவிக்கடைகாண்பா
னூழியூழியழிந்திடினுமுலவாநெடுங்கட்புலோமிசையு
மாழைநெடுங்கட்டிருமகளும்வயவாள்வயிரப்படையோனை[ட்டார்
யாழித்தடக்கைத்துளவோனையலம்வந் தோடித்தழீஇக்கொண்

தண்ணங்கமலத்திருவுமலர்தடங்கட்செவ்வாய்ப்புலோமிசையு
நண்ணுந்துயரந்தனைநோக்கிநகையாச்சினவியிதழதுக்கிக் [மு
கண்ணின்வடவைக்கனலொழுகக்கனன்றுகடைவாய்ப்புகைதவ
வண்ணலயிராவதப்பாகனமரர்துடரவமரோற்றான். (௫௨)

செருவேட்டுறங்காப்பகடுகைக்குந்தறுகண்மறலிதிக்கட்வுள்
வெருவாத்தானைத்திறல்வருணனுலவைவேந்தனீசான
னிருதியுயர்புட்பகநடுவுநிதிக்கோன்முதலபுத்தேளிர்
குருதிகவிழ்க்குமுத்தலைவேற்கூற்றின்கூற்றத்தெதிர்சென்றார். ()

வேறு.

மண்டுவெஞ்சமருடற்றவெதிர்வந்தனீர்கொலோ
கொண்டலூர்திமுதல்விண்ணவர்களென்றுகுறுகி
யண்டகோளகைவெடிப்பவயலண்டமுழுதும்
விண்டுமோழைபடவீரனகையாடிவெகுளா. (௫௪)

கள்ளுலாநறியகற்பகநகர்க்கிறைவனை
யள்ளிமண்ணிடைகளிற்றொடுமொத்ததொருகை
பிள்ளைவெண்பிறையெயிற்றபிலவாய்மறலியை
யுள்ளமென்புதசைநைந்திடநெறித்ததொருகை. (௫௫)

ஆரழற்கடவுளுவினையகழ்ந்ததொருகை
கார்நிறத்தநிருதிக்கடவுள்கைகள்விழிதோ
ளீருள்மூளைகுடர்சிந்திடவெறிந்ததொருகை
வாருதிக்கிறையைவாரியின்மடுத்ததொருகை. (௨௬)

மண்டமாக்கலையுகைத்தெதிர்வளிக்கிறைவனை
யண்டகோளகைமுகட்டினிலடித்ததொருகை
கண்டெறித்துயிர்சிதைந்திடநிதிக்கடவுளைச்
செண்டடித்தனவெறிந்தெதிர்திரித்ததொருகை. (௩௭)

பாயொளிப்பகன்விழித்துணைபறித்ததொருகை
யாய்கதிர்த்தொகைபரப்பரியமாவினிருதோள்
சேயவெங்குருதிசிந்திடவடித்ததொருகை
காய்கதிர்க்கடவுள்பற்றுகைகடிந்ததொருகை. (௩அ)

மருத்துவத்தலைவர்வாய்குருதிகக்கிமறிய
வருத்துமென்கனியினுருயிர்பிழிந்ததொருகை
செருக்களத்தெழுவசுக்களிருநால்வர்சிதைய
நெருப்பெழும்படியிசைந்துடனெரித்ததொருகை. (௩௯)

இன்னவாறுதிறல்வீரனுயர்கைகளெவையு
மன்னும்வானவரியக்கர்முனிவோர்கள்மறிய
முன்னியோரிமையொடுங்குமுன்முடித்திடுதலுங்
கன்னியந்துளவமாயனதுகண்டுவெகுளா. (௪0)

மறிதிரைக்கடல்களொன்றின்மிசையொன்றுமறியச்
சிறையடித்தொருகணத்தினிடையெண்டிசைசெலு
மெறுழ்வலிக்கலுழன்மேலினிதிவர்ந்துமுனியா
வுறுசமத்திடையெதிர்ந்தமருடற்றினனரோ. (௪௧)

மாயிரும்புவியருந்துமணிவண்ணன்வடிவேற்
சேயின்மிக்கதிறல்வீரனெதிர்சென்றுசினவா
வாயிரங்கதிரொருங்கெழுவதென்னவழல்கால்
பாயொளிப்பருதிவெம்படைபணித்தனனரோ. (௪௨)

ஊழிவெங்கனலுமாலமுமுயிர்ப்பதுட்லும்
பாழிவாய்மறலியைக்கொலைபயிற்றுவதுவெஞ்
சூழ்சுடர்ப்பருதியன்னதொருசூலமதனு
லாழியம்படைசெருக்கறவகற்றினனரோ. (௪௩)

நேமியம்படையகற்றிநிகரற்றவிறலோன்
றுமனைக்கட்வுளோடுலகுதந்தமுகிலைக்
காமர்மென்சிறையினிற்பொருதிறற்கலுழனைத்
தூயவெங்கனைதுரந்துடல்துளைத்தனனரோ. (௪௪)

வரைபெயர்ந்துகலுழன்சிறைவழங்குவளியாற்
சருகினிற்றிரியவோடியெதிர்சென்றுதளராச்
செருவிளைத்தகணநாதரையுடன்றுசினவிக்
குருதிகக்கும்வகைவாய்கோடெதிர்குத்தியிடலும். (சரு)

கலுழன்வெஞ்சமருடற்றவதுகண்டுவெருளா
வலகில்வீரனுயர்புள்ளரசொராயிரம்வகுத்
துலகம்யாவையுமுன்னுண்டவனலூர்தியுடனே
மலைகவென்னவவைசென்றமர்மலைந்தபொழுதின். (சசு)

வேறு.

திருகுசீற்றவெந்துப்பின்வீரன்விடுத்ததிறற்புள்ளேற்
றரசியாவுமணிவண்ணனிவரும்புள்ளேற்றினையடர்ப்ப
வெரிவந்தமரினூற்றுதுமேகவண்ணன்றனைவீழ்த்தி
யிரியல்போகவதுநோக்கியிகழ்ந்துவீரனிவைசெய்வான். (சஎ)

அண்ணலேற்றுப்புள்ளரசுவீழ்ப்பவாவிதீர்ந்தான்போற் [றி
றண்ணந்துளவோன்கிடந்திடலுந் தக்கனெதிர்போய்ச்சிவனன்
நண்ணும்வேள்வியாற்றியதுநன்றுநன்றென்றிகழ்ந்துரையாத்
துண்ணென்றுடலம்வெருக்கொள்ளச்சுரிமென்குஞ்சிபற்றினான்.

சுரிமென்குஞ்சியொருகையாற்பற்றியவன்றன்றலைதுமிப்பான்
பருதிவடிவாளுறைகழிப்பப்பனிமென்கமலப்பொகுட்டுறையு
மருமாமறையோன்வந்தெய்திவீரற்போற்றியளியேற்காய்க்
கருணைகூர்ந்திங்கிவனுவிகடியேலென்னுமேல்வைதனில். (சகூ)

எண்டோண்முக்கணெம்பெருமானிமயமுயர்த்தவல்லியொடு
தொண்டார்குழுவினொடுமெய்தித்தக்கன்சென்னிதுமித்திடேல்
விண்டுமுதலாந்தேவர்களும்விளியாதளித்தியெனவுரைப்பத்
திண்டோள்வீரனுயர்தக்கன்பங்கிவிடுத்துச்செருவொழிந்தான்

வெயிலேற்றெழுந்தமுத்தலைவேல்வீரனமருயிரளிப்பத்[னெழுந்
துயிலேற்றவர்போல்முகில்வண்ணன் முதலாந்தேவர் துனைவி
தயிலேற்றுலத்தொடுஞ்சினவியமுதிற்பழகுமரிநெடுங்கண்
மயிலேற்றிருந்தவிடைப்பாகன்பாதமுறையின்வணங்கினார். ()

குடந்தம்பட்டுச்சூழ்போந்துகுழைந்துவழுத்திநின்பாத,ம
டைந்ததேவரிழைத்தபிழை பொறுத்தியென்னவழகொழுகுங்,
குடைந்தமணிச்செப்பெனவீங்குகதிர் மென்கொம்மைமுலைக்க
ணிவாய், மடந்தைவேண்டமதிக்கன்னிமறையோனிதனைவழங்
குவான். (ருஉ)

அவுணர்செகுத்தசுடர்நேமியண்ணல்முதலோரிழைத்தபி
ழை, துவர்வாய்ப்பேதைநின்னருளாற்பொறுத்தோமென்னத்
தொழுதிறைஞ்ச, முவணப்புள்ளேற்றுயர்பறவையுயிர்த்தோ

ன்முதலதேவர்களு, நலையற்றிடவின்னருள்பூத்துநாதனினிதி
ன்விடையளித்தான். (ருகூ)

எரிகொப்புளிக்குமணிமவுலித்தக்கன்முகம்பார்த்தெம்பெ
ருமா, னரிகொப்புளிக்குமதர்நெடுங்கணணங்கினருளாலெம
துகணத், தொருவனுகிக்கற்பாந்தத்துறைதியென்னவரநல்கி,
மருவும்வீரன்முதற்கணங்களோடும்மறைந்துபோயினனுல்.(ரு )

வள்ளக்கமலவட்டவணைக்கடவுட்க்கன்முகநோக்கி
யெள்ளவிசன்றனைமறந்துநெடுமாலீசனெனுமவர்க
ளுள்ளிலொருவர்திருநெடுமாலுமைபோலீசனுயர்சத்தி
வெள்ளையமிவின்மாயோனையிகழிலீசன்வெகுண்டிடுமால். (ருரு)

தன்னையிகழ்தல்பொறுத்திடினுந்தனதிற்கிழத்திதனையிகழின்
மன்னுஞ்சீற்றமிகுமெவர்க்குமற்றுங்கதுபோல்மாயோனை
யுன்னிசசிறிதேயிகழ்ந்திடினுமொறுக்குமீசனுதலாற்
கன்னித்துளவோனிறைவனெனப்பிரித்தோதிடுதல்கடனன்றே

என்றுகூறிச்செழுங்கமலப்புத்தேளகலவிற்றுளைந்து, செ
ன்றவண்டுபொமையுயிர்த்துச்செழுந்தோட்டகடிளைடைகிடக்
கு, மன்றல்கமழுஞ்செழுங்கொன்றைத்தொடையோன்செய்ய
மலரடியி, னென்றுமுளத்தொடுதக்கன்பன்னுள்வழிபட்டு
றைந்தனனுல். (ருஎ)

கொண்டசீற்றத்தொடுமுனிந்துதநீசிவைதருலமுனிவர்
மண்டுகயினல்குரவின்மறையோராகியுடனித்துப்
புண்டோய்நாகத்தமுந்திமலர்ப்புத்தேளருளாலுளங்கொருண்டு
மண்டுபோலமுனிவராரய்ப்பரமன்பாதம்பழிசனர். (ருஅ)

தக்கன்வேள்வியிவ்வாறுபுகன்றேன்தக்கன்முனமீன்ற
மகள்மரபின்நிரைத்துமெனமகிவிணைமுனிவரர்க்கு
நக்கவயிரப்படைகடவுண்முதலாநாகத்திமையோர்க்கு
மைகாரிரத்தமணிவண்ணன்மகிழ்விறுேடுமிவையுரைப்பாம்

தக்கன்வேள்வியழிந்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கூகூ0.

பதினுருவது

## அந்தகாசூரன்சாரூபமடைந்தவத்தியாயம்.

தாளதாமரையினரசுவீற்றிருக்குமந்தணன்றக்கனைநோக்கி,
மீளவுமுயிர்களளிதடுயென்றுரைப்பவிதித்தவைமல் கிடாவகு
ளு, லாள்வழக்கறநீண்டம்பலைத்தொழுகுமரிமதர்நெடுங்கணுர

னைமென், றேளிணைதழுவிப்பெறுமகவல்லாலமல்கிட்டாதெனவுளந்துணிந்தான். (௧)

மாரனையழகுமறலியைவிரலுங்கவர்ந்திடுமலையுறழ்தடந்தோள், வீரனப்பிரமனரிதினிற்பயந்த வேய்த்தடந்தோளசிக்கினிதன், னேர்குடியிருந்துசுணங்குபூத்தலர்ந்தவிளமுலையின்னலம்பருகிப், போர்கெழுதிறல்வேற்றக்கன்மென்குதலைப்புதல்வராயிரவரைப்பயந்தான். (௨)

ஆயிரமகவுநாரதன்மாயைப்படுகுழிதன்னில்வீழ்ந்தவிய, வேய்மருள்பசுந்தோடசிக்கினியென்னும்வேற்றடங்கண்ணியோடாடி, மாயிருஞாலமுழுவதுநல்கமீட்டுநான்மறைபயில்தக்கன், காயெரிகவிழ்க்கும்பூண்சுமந்தொல்குமறுபதுகன்னியர்ப்பயந்தான். (௩)

ஆங்கவர்தம்மிற்பதின்மரைத்தருமதேவதைக்களித்தனனருளா, னீங்கருமுவப்பிற்காசிபற்கொருபான்மூவரைநெறிவழாதீந்தான், நீங்கதிர்த்திங்கட்கடவுளுக்கிருபானெழுவரைச்சிறப்பொடுமளிததான், கோங்கிளமுலையார்நால்வரையரிட்டநேமிகைகொள்கெனக்கொடுத்தான். (௪)

வருமுலைசுமந்துதேம்புநுண்மருங்குல்மதியுறழ்நித்திலமுறுவ, லிருவரைவெகுபுத்திரற்கினிதளித்தானிருவரைக்கிரீச்சுரற்கீய்ந்தா, னரிமதர்நெடுங்கண்ணிருவரைமகிழ்பூத்தங்கிராவினுக்குவந்தளித்தான், பொருவருமிவர்தம்பெயருமற்றவர்தம்புதல்வர்நாமமுமினிப்புகல்வாம். (௫)

அருந்ததியிலம்பைசியாமிசங்கற்பையருண்மருத்துவதிநல்விசுவை, முருந்திளமுறுவிற்சாத்தியைபானுமுகுர்த்தைநல்வசுவெனத்தருமன், பொருந்தியமடவார்பெயரினிதுரைப்பார்புணர்முலைவிசுவைதன்புதல்வர், திருந்தெழில்விசுவதேவர்சாத்தியைதன்சிறுவர்சாத்தியரெனத்தெரிப்பார். (௬)

அருந்ததிமைந்தரருந்ததர்வசுவின்மைந்தரெண்வசுக்களென்றறைவார், பொருந்தியபானுமைந்தர்பானுக்கள்முகுர்த்தைபுத்திரர்முகுர்த்தங்கள், திருந்தெழிலிலம்பைபுதல்வர்கோடான்மாச்சியாமிதன்மைந்தர்பேர்தெரிக்கின், மருந்தினுமினியநாகவீத்தியரென்றுரைப்பர்நான்மறைமுழுதுணர்ந்தோர். (௭)

குலிகமென்செப்புமுலைமருத்துவதிகுமரர்கோடிகள்பிருத்துவிய, ரிலகுசங்கற்பைமைந்தர்சங்கற்பரென்னநற்றருமதெய்வதத்தி, னலகறுபுதல்வர்பெயரினிதுரைத்தேமாங்கவர்தம்மிலெண்வசுக்கள், மலைவறுநாமம்யாவருமுணரமகிழ்வுடனினிதெடுத்துரைப்பாம். (௮)

குங்குமமெழுகுங்குலவரைத்தடங்தோளாபன்வேற்றுருப னற்சோமன், றிங்களங்கவிகைத்தரனுயரணினலன்வனமெய்த ளிர்பிரத்தியூடன், றுங்கவேற்பிரபாசனெனவெடுத்துரைப்பர் சொல்லுமாங்கவரிலாபன்றன், பங்கமில்புதல்வர்சிராங்தன்வை தாண்டிசீர்மனற்றனியெனப்பகர்வார். (கூ)

துருவன்மெய்ப்புதல்வன்பொருவில்சீர்க்காலன்சோமனற் சேயருள்வர்ச்சன், றரனியல்மைந்தன்றிரவிணனணிலன்றன்ம கன்செவனுலகேத்த,வருள்விக்கிஞாதநேதியனலனன்சேய்தெ ய்வசேனுபதியாகும், வருபிரத்தியூடன்குழவிதேவலனும்பிரபா சன்சேய்விச்சுவகாமன். (க0)

அதிதிவேற்றடங்கட்டிதிதனுச்சிறந்தவலர்முலைக்கத்துரு வரிட்டை, மதர்விழிச்சுரசைசுரபிவார்கூந்தல்வினதைதாம்பி ரைவனப்பொழுகுங், கதிர்முலைக்குரோதவசைமுனியெரைபொ ற்கமலைநேர்தருமையென்றுரைக்கு, மெதிரறுமிவர்களொருபதி ன்மூவர்காசிபன்மனைவியரென்பார். (கக)

அள்ளிருள்பருகுமங்கிசன்தாதாவலர்கதிர்ப்பகனுயர்துவட் டா,வெள்ளொளிவிரிக்குமித்திரன்வருணனரியமான்விவச்சுவா னுலகங், தெள்ளருஞ்சவிதாவிசைகெழுபூடாவனஞ்சுமான்விட் டுணுவென்னத், தெள்ளியீண்டுரைத்தபன்னிருவரையுமதிதித ன்சிறுவரென்றுரைப்பார். (கஉ)

சாக்குசமன்வந்தரத்தினிற்றுட்டிதப்பெயரொடுஞ்சார்ந்த னரிவர்கள், வீக்கியகழற்கால்விறல்கெழுவடிவேல்விளங்குவை வச்சுதமனுவின், காக்குநாளதிதிபுதல்வராதலினிலைதியபபெ யரொடுங்களிப்பிற், போக்கருஞ்செல்வத்தொடுமிருவிசும்பிற் புங்கவரோத்தவாழ்கின்றூர். (கங)

கருங்கடல்போழ்ந்துவல்லவர்குளித்தகதிர்மணிநித்திலந்தா ங்கி, மருங்குறேய்ந்தகல்வான்போக்கறவீங்கும்வருமுலைத்திதி யெனுமடந்தை, யருந்தவம்புரியுங்காசிபனருளாலாடல்வேலி ரணியன்றனையும்,பருந்துவீழ்நெடுவேலிரணியாக்கனையும்விண் ணவர்வெருவுறப்பயந்தாள். (கச)

ஆங்கவர்தம்மின்மறங்கனிந்தொழுகுமாடல்வே லிரணிய னென்போன், வீங்கொளிவிரிக்கும்வெள்ளிநல்லருளால்விரிசி கையைந்தழனுப்பட், டேங்கமழ்கமலப்பொகுட்டில்வீற்றிருக் குந்தேவனைத்தனதுளத்திருந்தி, நீங்குமைம்புலனுமொருவழி படுத்திநினைவருமருந்தவம்புரிந்தான். (கரு)

மழகதிர்ப்பருதிதிங்களஞ்செல்வன்வானவர்யாவரும்விசு டபின், அழிதரவின்றிப்புகைப்படாம்போர்ப்பவுஞற்றருந்தவ

த்தினைநோக்கிப், பழமறைக்கிழவனுவப்பின்வந்தெய்திப்பரிவு டனவுணர்கோனுளத்தின், விழைவனயாவும்வெறுப்பவாங்களி த்துவியப்பொடுங்கரந்துபோயினனால். (௧௮)

ஆயிரந்தோட்டுக்கமலவீட்டுறையுமந்தணனேகியபின்னர்,பா ய்புலிப்போத்தினுருகெழுசீற்றத்திரணியன்பண்ணவரியக்கர்,மா யிருஞாலம்புரிந்திடுமரசர்வழுத்தநீண்மணிமுடிபுனைந்து,காயும் வாளமரிறைஞ்ஞன்னலர்ப்பொருதுகளிப்புடனினிதுவீற்றிருந்தான்

கலைமகள்கொம்மைமுலைபொருதிணிதோட்கடவுடன்படை ப்பினைமாற்றி, மலர்தலையுலகமுழுவதுந்தானேவருந்தறவெளி தினிற்படைக்குஞ், சிலைவிழுந்குயர்தோள்மாயனையகற்றிச்சிற ப்புடனுலகெலாமளிக்கு, மலைமகள்பாகன்சிறிதுகையாறவாரு யிர்துடைப்பினுந்துடைக்கும். (௧௭)

நனந்தலைச்சுடிகைவாளராபோத்தின்சுமைகெட்நளிகடற் போர்வை, புனைந்தபேருலகமொருகையினேந்திப்பொறையில திதுவெனப்புகலுங், கனம்படிந்துண்ணும்பெரும்புறக்கடலை க்குளப்படிநீரெனக்கருது, மினங்கொளேழ்வரையும் பொற்கழ ங்கென்னவிண்ணிடையெறிந்தெதிர்பிடிக்கும். (௧௯)

மங்குல்வான்புதைக்குநள்ளிருள்விழுங்கும் வானவன்புரி தொழின்மாற்றி, யங்கண்மாஞாலத்தொற்றையாழியந்தேராத வனெனவெயில்விரிக்குங், கங்குல்வாய்க்கமலநறுமலர்குவியக்க டிகமழாம்பல்வாய்நெகிழுக், திங்களிற்பசும்பொன்மானமீதிவர் ந்துதெண்ணிலாக்கதிர்விரித்துலவும். (௨0)

உலகமோர்மூன்றுந்தனதடிப்படுத்தி யுயர்விசும்பொருத ணிபுரக்கு, மிலகொளிவயிரவாட்படையுழவன்முதலியவெண் டிசைப்பாலர், மலர்தடஞ்சினையகற்பகத்தருவுந்தேனுவுமணி யுமீணிதியு, மலகிலகொணர்ந்துதொழவிடம்பெறுமலகன்மணி முன்றிலிற்றுயில்வார். (௨௧)

விண்ணகடுருவும்போகுயர்குடுமிமேருமால்வரைமுதற்கி ரியுங், கண்ணகஞாலமுடுத்ததெண்டிரையகருங்கடல்முதலவே ழ்கடலு, மண்ணலஞ்சேடன்முதலியசெஞ்சூட்டரவமுநதிகளு ம்பிறவும், பண்ணவருருவின்விரைவின்வந்தெய்தியவுணர்கோ ன்பணித்தனபுரியும். (௨௨)

இன்னணமுலகமுழுவதும்வெருவாவெரிகதிர்த்திகிரியொ ன்றுருட்டி, மின்னகுபருதிவாட்படையுழவன்வியனுலகளிக்கு நாளதனிற், பொன்னவிர்திதலைபூத்தழகுறங்கும்புணர்முலைப்பு லோமிசைகொழுநன், றன்னுளந்துய்ரவிண்ணவரோடுமலரய ன்சார்வுழியடைந்தான். (௨௩)

அரசவேற்றெகினப்பாகனைப்பழிச்சியட்ற்கரும்புலிப்பகட்டனைய, விரணியனிழைக்குங்கொடுந்தொழிற்காற்றாதெய்தினமளித்தருளெனலும், விளைவளங்கொழிக்குங்கமலமென்பொகுட்டுவேதியனவரொடும்போந்து, திரைபொருகடலினறிதுயில்கூறுஞ்செங்கண்மாலுறையுழிச்சேர்ந்தான். (௨௪)

கதிர்மணிச்சுடிகைகிளைவிளக்கெடுப்பநாகணைமீதுகண்டுயிலுந், ததைமலர்க்கன்னிப்பசுந்துழாய்முகிலைத்தாழ்சிறைவண்டுபாட்டயர, மதுமழைபிலிற்றுமலரயன்முதலோர்வழுத்தலுமலர்விழியலர்ந்து, புதியதெள்ளமுதுஞ்சுவையறப்புளிப்பப்பவளவாய்மலர்ந்திவைபுகல்வான். (௨௫)

எரிவிடங்கடைவாய்மடையுடைத்தொழுகுமெரிமணிச்சூட்டராநெற்றி, மருவுநீர்வலையமுதலியவுலகமனைத்தையும்வகுத்திடுமலரோய், முருகுகொப்புளிக்குங்கற்பகநீழற்புரந்தரன்முதலினோரோடும், விரவினீண்டடைந்ததென்கொலென்றுரைப்பவிளைமலர்ப்பண்ணவனுரைப்பான். (௨௬)

இளவெயில்விரிக்குந்தமனியப் போர்வையெழில்பெறவணிந்தநீல்வரைபோற், றுளையெயிற்றகல்வாய்ப்பாம்பணைப்புறத்தினறிதுயிலமர்ந்திருந்தோன்றால், தளர்வொடுமெலிந்தேமிரணியற்காற்றாதடைந்தனந்தஞ்சநீயல்லாற், களைகண்மற்றெவரோவானவர்க்கென்னக்கண்பனியுகுப்பநின்றுரைப்பான். (௨௭)

வெஞ்சினதறுகட்கடாக்களிறனையவிறல்கெழுமிரணியற்காற்றா, தஞ்சினிர்போலும்வெருவல் நீயொன்னாவாய்பிழித்துவுடுத்தோங்கு, மஞ்சுறழ்மேனித்திருமறுமார்பன்மலர்க்கரங்குவித்துவானவர்க, ளஞ்சிடும்வண்ணமுளத்திடநினையாவொல்லையினீங்கிவைபுரிவான். (௨௮)

படைக்கடல்துடைக்குஞ்சுடர்ப்படைத்திகிரிபான்மதிபொருவுவெண்சங்க, மடற்கருங்கதைவாள்கொடுமரந்தாங்கும்போகுயரஞ்சனக்குன்றுங், கடுப்பவோர்புருடன்றனையினிதமைத்துக்கலுழன்மீதிவர்ந்துவிண்ணவர்க்கு, முடற்றருஞ்செருவிலிரணியனாவியுண்டிவண்வருகெனவுரைத்தான். (௨௯)

குருந்தொசித்தாயர்கோனிளைமேய்த்தகொண்டல்கூறலுங்கரங்குவித்துக், கருந்தலையுருத்தமூளைவெண்சோறுந்தடிபடுகருணையுங்குழைத்து, விருந்தயர்காலம்வந்ததென்றுன்னிவெள்ளெயிற்றலகைபாட்டயரப், பருந்தினந்தொடரப்பகட்டெழின்மார்பனிரணியன்பதிமருங்கிறுத்தான். (௩௰)

திறைகொணர்ந்தொன்னார்புகுவதையன்றித்தெவ்வொடு வெஞ்சினமுருக்க, வுறைகுனர்பெருதடமணிமதில்வாயிலப்புறத்

திணிலும்பர்சூழ்போதப், பறவைவேந்திவர்ந்தோர்முகிலுறழ்
மேனிப்பண்ணவன்புகுந்தனனென்ன, வறைகழலவுணர்க்கிறை
யொடுமொற்றுமவுணன்வாய்புதைத்திவையறைந்தான். (௩௧)

கேட்டலும்வட்டணைந்கழல்விழிபொரிழியக்கிளர்க்கரும்புவ
னமோரேழு, மூட்டரக்குண்டகுலிகமென்செப்பினொள்ளழல்
பரந்தெனச்சிவப்பத், தோட்டிணைபணைத்துத்தமனியத்திழைத்
தவண்டமென்சுவர்த்தலைசொறிய, வாட்டலைபுகையவாளெயிற்
றதுக்கிமைந்தனைநோக்கியீதுரைப்பான். (௩௨)

விரிந்தசெங்கதிரும்போக்கறநிவர்ந்தவெயிற்புறத்திருத்த
விண்ணவனைக், கரும்புகைசசெந்தீச்சுடர்விரிப்பகுவாய்க்கட்
செவிநெற்றியிற்கிடந்த, விரும்புவியதனிலுயர்பனிவிசும்பிற்பா
தலத்தொளிப்பினுமெய்தி, வருந்தநீள்நடந்தோள்பாசத்திற்பி
ணித்துவல்லையிற்கொணர்மினென்றுரைத்தான். (௩௩)

கடியவெங்கூற்றங்கண்புதைத்தேங்கக்காவலன்விடைகொ
டுசிறுவர், குடவளைச்சங்கங்குமுறிநின்றார்ப்பக் கோளரிநூற்றி
னைச்செருத்த, வடுசினத்திமிலேற்றிருபுனைமுரசங்குணில்பொ
ருமார்ப்பொலிகறங்கக், கிடுகொடுசுழலும்வயவர்சூழ்போதக்கி
ளர்சமம்வேட்டெதிரெழுந்தார். (௩௪)

கனைகடாஞ்செருக்கிக்கண்படைபெருதுபடர்முறச்செவி
யெறிகாற்றிற், பனையெனநீண்டதிரட்டக்கையிற்பாவடிநான்கி
னீள்வாலிற்,புனைமணிபொருந்தவெண்பிறைக்கோட்டிற்பொரு
நனைநூழிலாடடயருஞ், சினவுநீள்வரைப்போத்தெண்ணைக்க
ச்சம்புவிமுதுகுளுக்கமுன்செல்ல. (௩௫)

இலகொளிப்பருதிநட்வுபைம்புரவியேழுநீள்வரையினையோர்கா
வலம்வருமுன்னநேமியங்கிரியையாயிரங்கால்வலம்வருவ [ல்
ணிலவுநாற்றன்னகவரிதாழ்ந்துலவுநெற்றியவிசும்பினிற்பறப்ப
வலைகடற்பிறந்தகலினவாம்புரவியாயிரங்கச்சமுன்னடப்ப. ()

கொடுமரம்விசைத்தகணையிலக்குறுமுன்னெல்லையிற்குறு
சமுற்செல்ல, கடுநடைப்புரவியாயிரம்பூண்டகதிருமிழ்கிடுகுசூ
ழ்கிடந்த, விடுசுடர்ப்பருதிதழும்புறநிவர்ந்தகூம்பினம்விண்ணி
டைப்படர, வடுதிறல்வலவர்தூண்டுபொற்றடந்தேராறனைக்க
ச்சமுன்னேக. (௩௭)

ஆயிரங்களத்தினிந்திரன்புரங்கண்டணிவிலாவிறநகைபுரி
ந்தோர், பாய்புலிப்போத்தின்பாழிவாய்கிழித்துப்பற்பறித்தணி
ந்தவெந்திறலோர், மாயிருஞாலம்வலம்வரும்புகழோர்வாளின
ர்வேலினர்வில்லர், காயெரிகுளிரக்கனலுமிழ்கண்ணர்கச்சமெ
ண்ணாயிரந்தொடர. (௩௮)

ஆள்வழக்கறுத்துக்கூற்றினைச்சினவியம்பலைத்தொழுகும்
வாட்டடங்க,ணீவிருங்கூந்தற்கூத்தியரல்குற்றட்டெனவகன்று
நீண்டுயர்ந்த, கோளரிப்போத்தோராயிரம்பிணித்தகுருமணிக்
கொடுஞ்சியந்தடந்தேர், வாளெயிற்றகல்வாய்மறலிகண்புதைப்
பமைந்தர்நால்வருங்கடிதிவர்ந்தார். (௩௯)

மழைமதக்களிறுவழங்கலினிடந்தமண்ணினால்மழகதிர்ம
ருட்டு,மொழுகொளிமணிச்சூட்டுரகர்வீற்றிருக்குமுலகுகோன்
மண்ணுலகாய,தெழுதருஞ்சேனுபராகம்விண்படர்ந்தாங்கிமை
யவர்மேயபொன்னுலக, முழுதுமண்ணுலகமாகவேற்றடக்கை
மொய்ம்பினர்வெகுண்டெழுந்தனரால். (௪௰)

கூந்தன்மான்றடந்தேர்கடாம்பொழிகளிறுகொய்யுளைப்பு
றவிப்பண்ணுறுத்தி, யாய்ந்தநூல்வழியிற்றானையங்கடலைச்சக்கர
வியூகமாயமைத்து, பாந்தண்மேற்கிடந்தபுவிமுதுகுளுக்கவவு
ணர்கோன்பயந்தவேற்புதல்வர், காந்தெறியுமிழும்படையுடை
யமரர்கடற்படைவெருவுறநடந்தார். (௪௧)

கூற்றெனவுரறியவுணர்கோன்சேனைவருதலுங்குருதிநீர்
வெள்ள,மூற்றிருந்தொழுகுநேமியந்தடக்கைவிண்ணவனும்பர்
சேனையைப்போர், மாற்றருமகரயூகமாய்வகுத்துவாய்மடித்தெ
யிறுதின்றமரி, னோற்றனனவுணர்வயிறெரிதவழவீருளுமிதயமு
ங்கருக. (௪௨)

நறவுகொப்புளிகரும்பசுந்துழாய்முகுந்தன்றானவர்சேனை
யினடவு, முறுவலிக்கலுழனிமைசுடுங்கடைக்கண்ணுமிழ்புகை
படவையுஞ்செந்தீ,யெறிபடையவுணர்தானையங்கடலையொருங்
குவாய்மடுத்துநின்றெரிப்பச், சிறையுடைத்தெரியும்வல்விசை
வளியிற்களிற்றினந்திசைதிசைகவிழ. (௪௩)

கூர்நுதிவயிரத்தொட்டியின்வாய்ந்ததுண்டவெம்படையி
னுறகுத்தி, மாரிவீழ்கடத்ததறுகண்மால்யானைமத்தகம்போழ்
ந்துயிர்குடித்துத், தார்வயப்புரவியொன்றனைக்கச்சம்வள்ளுகி
ர்த்தாளினலள்ளி, யீருளுங்குடருமென்புநெக்கொழுகவொல்
லையினிருவிசும்பகலும். (௪௪)

மாலையங்குட்ருமம்பிணங்குவெள்ளிலைவேலவுணர்தங்கட்ப
டைமடியக், காலவெஞ்சிலையின்குடுமிநாண்கொளுவிக்கல்செய்
திண்டோளுறவாங்கி, யாலமும்வடவையழலும்வாயுமிழுங்கொ
டுங்கணையளப்பிலசொரிந்தான், ஞாலமோரேழுமளந்தவன்விடு
த்தநாகிளம்பருதிவாளுழவன். (௪௫)

இரணியன்சேனைத்தலைவர்கடபைந்துளவோனொறும்வலிநேர
கினாவெருளா, வரணியினெழுந்தீய்ப்பொறியென்னக்கட்க

டையழற்பொறிசிதற, முரணுடைக்களிறுகலினமான்றடந்தேர்
கூந்தன்மாமொய்ம்புறச்செலுத்திக், குருதிதோய்வெய்யபகழி
யோரொருவர்கோடியின்மேற்பொழிந்தார்த்தார். (சசு)

நிழலொடுகெறுவியெண்டிசைக்களிற்றினீண் மதச்சுவடு
தோய்ந்தோடி,யிழுமெனப்பாயுங்கவிழ்தலையருவிவரையினைவே
ழமென்றேற்று, முழைபுகுசீயமிரிதரப்பாய்ந்துமுழங்குவெங்க
டாமலைதூண்டி, யழலுமிழ்திகிரிகலுழன்மேலத்தம்படுகதிரென
வெறிந்தார்த்தார். (சஎ)

கண்ணழற்சீற்றத்தவுணரோர்மூவருலகினதுயிர்கவர்ந்து
ண்ண, விண்ணிடைப்பறந்துதிரியுமுப்புரத்தின்விரை செலற்க
லினமான்றடந்தே ரெண்ணிலதூண்டிநூற்றுவர்கொல்லிவேழு
மாங்கப்பணமுசுண்டி, யண்ணலம்புள்ளேற்றரசின்மேற்றூவிய
கல்வரைத்தோள்புடைத்தழன்றார். (சஅ)

தாழ்கடற்கிடங்குங்கிடர்படத்தாக்கித்தரைபிதிர்த்தெரிக
விழ்குளம்பிற்,காழ்படுகலினமென்றுமிழ்விலாழிக்கடுவிசைக்கூ
ந்தன்மானடவிப், பாழியந்தடந்தோள்வெஞ்சினவவுணர்கலுழ
ன்மேலமர்க்கெதிர்படர்ந்த, சூழ்கதிர்மணிசசெஞ்சூட்டராவெ
ன்னத்தீமுகப்பகழிதூயினரால. (சகூ)

கடங்கவுளயிராவணத்திறற்கோடுங்கவந்தமாட்டயர்தருக
ளத்திற், பிடுங்கிநின்றுடுந்திறலினன்பகைவற்பெறுமையாற்றின
வுறுதடந்தோண், மடங்கலேறனையசீற்றவெந்துப்பின்வடவை
கொப்புளிக்கும்வெங்கண்ணர், கொடுஞ்சிலைபொருநருருமிடி
த்தென்னக்குரவையிட்டடுகணைபொழிந்தார். (ருO)

வாளமரழுவத்தவுணர்கோன்சேனைமனத்திறம்பூதுறவுடற்
றுந், தோள்வலிநோக்கிப்பசுந்துழாயலங்கறுயல்வருமுழவுறழ்
தோளா,னீளிருந்தடக்கைவரிவிறன்புடைப்பவெழுந்தநீடொ
லியினினண்ட,கோளகைவெடித்ததிடியுறுமாவிற்றுனவராருயி
ர்குறைந்தார். (ருக)

புற்றுறையரவினுவமுற்றுறைந்துவெஞ்சமம்பெறுதுட்ல்
புழுங்குங்,கொற்றவெம்பகழிவிடுத்தலுந்தமரக்கொய்யுளைக்கலி
னவாம்புரவி, விற்றிறலவுணர்புள்ளியல்மான்றேர்வெள்ளமோ
ராயிரங்களத்தி, னற்றநுண்பொடியிற்சிதர்ந்தனவலகையாவலை
ங்கொட்டியாட்டயர. (ருஉ)

தம்முடைக்கடலந்தானைவென்கொடுத்தல்காண்டலுந்தழ
ல்விழியிறைப்பத், தெம்முனைகடந்துபொருநரைப்பெறுதுதின
வுகண்படுக்குநீள்புயத்த,ரம்மவோநுமதுவலியழகுடைத்தென்
றண்டமும்வெடிபடநகைத்து, வம்மெனவிறைகூய்ப்பசுந்துழா
யாறகிலைமைந்தர்நால்வருஞ்சமர்மலைந்தார். (ருங)

வேறு.

குருதிவாயலகைவெய்யசூர்மகடுணங்கையிட்டெதிர்குனி
ப்பநீள், விரிதலைப்புவனமுழுதுமஞ்சுவரவிண்ணுளோர்விழிபு
தைப்பவெம், பருதியாயிரமெழுந்ததென்னவொளிபடரநான்
முகன்வடிக்கணை, பிரகலாதன்வரிவிற்குனித்தவுணர்பெட்புறு
ம்படிவிடுத்தனன். (௫௪)

கனைகருங்கடல்குடிப்பகண்டருயிர்கவர்வதேழ்கிரியின்மு
துகுற, முனைபடும்பொழுதினுருவியோடுவதுமுடைகமழ்ந்துதி
ரமுமிழ்வதோர், புனைதுழாய்முகிலளித்தவெங்கணையெடுத்து
வாள்விழிபுகைந்திட, வனுகிலாதனுயர்கொற்றவெஞ்சிலைகுனி
த்தழன்றெதிர்விடுத்தனன். (௫௫)

மங்குறுங்குடுமிவரைநிகர்த்ததொருமணிகடேர்கடவியெ
திர்செலாச, சிங்கவேறெனவுருத்துவாளெயிறுதின்றுதீயுகவிழி
த்துமீ, எங்கண்மாநிலநடுங்கவெஞ்சிலைகுழைத்துநின்றசனியே
றெனச், சங்கிலாதனடன்முருகன்வெங்கணைவிடுத்துநின்றெதி
ர்தழங்கினான். (௫௬)

அலாயிதங்கொடுமுன்மேருமால்வரையையைந்துவிற்கிடை
யிழுத்திடுங், கிலாதன்வானவருமஞ்சுறுமலமாகிட்டினார்கொ
லெனமுனிவொடும, யிலாவிறும்படிநகைத்துவெற்பனையவிற்
குனித்துநிணமுழ்கிவெம், புலால்கமழ்ந்தெரியுமங்கிவெண்கணை
விடுத்துநின்றெதிர்புழுங்கினான். (௫௭)

அவுணர்கோனுதவுநல்வர்நால்வருமழன்றுவிட்டகணை
யாவையு, முவணவூர்தியையவந்துசெய்தேகமிகவுள்ளமாழ்கியு
யர்வெய்தலும், புவனகோடிகளுமுந்திதந்தமுகில்தந்தைபூவை
நிறவண்ணலுங், கவனவெம்பரிகொடேர்களுமொருங்குமொருகையி
னள்ளியெறிவீசினான். (௫௮)

ஓர்குடங்கையினிலிரணியன்புதல்வர்நால்வர்தம்மையுமொ
ருங்கெடுத், தார்வமோடெறிதல்கண்டுவானவர்களலர்சொரிந்
துடிபராவினார், போர்புரிந்திடுதலஞ்சிநீளிடைபுறங்கொடுத்திரி
யுமவுணர்போ, யாருமஞ்சுவரவமருடற்றுமகநாசனுக்கிவைய
றைந்தனர். (௫௯)

சொற்றநீமொழிகள்செவிமுதற்றடவுமுன்னர்வாயிதழ்து
டித்திட, நெற்றிமீதுநவெழுந்திழிந்துமிகநெரிகொடும்புருவநட
மிடக, கொற்றவாளிநெடுமேகம்வெவ்வழல்கொளுந்திநின்
றெரியநகைசெயாப், பற்றலார்மகுவிமிடறுசேவடிகள்பார்குழி
ப்பவெதிர்போயினான். (௬0)

எங்குளான்கொலவனெங்குளான்கொலெனவசனியேறெனவு
ரப்பிநீள், துங்கமால்வரைகள்கால்விசைக்குளெறிதுறைபோட

யஞெடர்ந்திட், மங்குரும்குடுமிவரைநடந்ததெனவந்துவெங்க ழுமனேடுமெச், சிங்கவேறனையகுருசில்யோசனையின்விழவுதை த்துநனிசீறினன். (கூக)

கருடன்வீழவும்விழாமலூர்திகள்பயிற்றுகல்வி தருமாட்சி யாற், புருடனக்கழுழனுடனெழுந்துபுவியுண்டமாலுழையினெ ய்துரு, விரணியன்றனதுசெய்திகூறுதலுமிறைவனெல்லையி னெழுந்துபோய், முரலின்வெய்யநரசிங்கமாகிவெவிமுக்குடை ந்திடமுழங்கினன். (கூஉ)

அண்டகோளகையின்மவுலிசென்றறையவாடகக்கிரிகர்த் ததோ, ளெண்டிசாமுகமுசப்பவெண்ணிலவிலங்குவாளெயிறு பொழிதர, மண்டுவெஞ்சிகைவிரித்தழன்றுதெறுவடவைகட்க டைவழங்கிட, விண்டுபார்முதுகுளுக்கமானிடமடங்கல்வெங்க ளமடைந்ததே. (கூஙு)

அடர்ந்தமானிடமடங்கறன்னையெதிரற்றவெற்றிபுனையவுண ர்கோன், ருெடர்ந்துபற்றியிவண்வருகவென்றுதிறலிரணியாக்க ஞெடுசேர்த்தலும், படங்கொள்வாளரவின்முடியின்வைகுமுயர் பார்நெளிததிடநடந்துபோய், மடங்கலேறுடல்புதைப்பவெய் யதிறல்வாளிபற்பலவழங்கினன் (கூச)

அங்கியின்பகழிவருணன்வாளியொளிரலர்கதிர்ப்பருதிவெ ஞ்சரந், திங்கள்சூடிகணைமுதலவாகவெதிர்சிந்துகின்றகணையா வையு, மங்குருழ்வரையின்மிதெறிந்தபசுமட்கலத்தின்முனைமடி தலும், வெங்கண்வாளவுணனெஞ்சம்விஞ்சுறவெரினகொடுத் திரியல்போயினன். (கூரு)

இரணியாக்கனமரிற்ருெலைந்துதனியிரிதல்கண்டுதிறலவுண ர்கோன், பிரகலாதனைவிளித்துவெஞ்சமருடற்றுகென்னவுயர் பெட்பொடும், வரைகொண்மார்பிடையணைத்துரைத்தலும்வண ங்கியங்கையினில்வாய்புதைத், தரசவென்னுரைமறுத்திடேலெ னவிரைந்துநன்கிலுரையாடினன். (கூசா)

தாமரைத்தவிசினரசிருக்குமுயர்சதுமுகக்கடவுணேமியா, னீமமுற்றுபொடியாடியென்னுமொருமூவிருந்தவ மிழைத்து ளோர், காமுறற்குரியதாமனத்தினிடைகாணுதற்கரியபிரமமு ங், தீமுகத்தவரியேறுவெய்யசமர்செய்திடேலெனவிலக்கினன்.

விலக்கின்றுமைசெய்பிரகலாதனைவெகுண்டுதீயெழவிழி த்துமே, ல்லக்கனுற்றிடர்படர்க்கவுஞ்சிறுவனருளினேடலை விளம்பலுங், குலத்திறுக்கிசைகலாதவெய்யமொழிகூறனிசெ னமுனிந்துபோய்க், கலக்கநீரமராமுதிரங்கவெழுகாருநாணுற முழங்கினன். (கூஅ)

காணிலாவொருவர்கண்ணுமென்றவிறைகருதிலெங்குமுள னாகிலித், தூணினோடுமுளனேசொலென்றுசுடுசொல்லினுட் வணின்மோதுமு, வாணிலேறரியெழுந்துதூணினிடையவுண ன்வெஞ்சினமடக்கவோர், தானுவாமெனமுனின்றுவெஞ்சமர் துடங்கினன்றருமவேலையின். (௬௯)

நிரையுளைப்பொருசினத்தமானிடமடங்கலாளியைநெருக் கிநிள், வரைபிதிர்ந்துவிழவானமீதுறையுமுடுக்கள்சிந்தமறிதி ரையுலாங், குரைகடற்புனலுடைந்தெழுந்துகரைகொன்றுசெ ல்லவிசைபோயபோ, ரிரணியப்பெயரினவுணன்வெற்பின்விழு மிடிநிகர்ப்பவெதிர்குத்தினன். (௭௦)

அத்தவெற்புறழ்பணைப்புயத்திடையழன்று வெய்யதிறல வுணர்கோன், குத்தவாலமிசைமுறுக்கிமண்பகவடித்துவாளரி கொதித்தெழா, மைத்தகார்தவழுமேருவோடிகலுமருமம்விண் டுதிரம்வழியவோர், கைத்தலத்தினையெடுத்துரப்பியெரிகனல்பு கைக்தெழவடித்ததே. (௭௧)

பற்கறித்திதழதுக்கிவெவ்வுரைபகர்ந்தழன்றுவிறலவுணர் கோன், வெற்பிரண்டனையதோள்புடைத்தெழவெகுண்டுமெய் யினெடுமெய்யுறப், பொற்குவட்டுவரைவெள்ளியங்கிரிபொருந் திவெஞ்சமம்விளைத்தென, மற்பிடித்தனன்மடங்கலோடெதிர் வரைப்புயங்களினெருக்கியே. (௭௨)

தோளொடுந்தனதுதோணெருக்கியடர் சுடுசினத்திறலி னவுணனைத், தாளொடுந்தனதுதாள்பிணித்துவரைதரைவிழுந் ததெனவீழ்த்திமே, லாள்குறங்கிடைகிடத்திவன்பிடரிறுக்கிவெ புறமுநெஞ்சகம், வாளுகிர்த்தலைமடுத்தகழ்ந்துகுடர்மாலையி டடல்பிசைந்ததே. (௭௩)

விண்ணுளோர்மலர்பொழிந்துநெஞ்சகம்வியந்துநின்றடிப ணிந்திட, வண்ணலேறனையவவுணர்கோனுயிரருந்தியாளரியினு ருவொழித், தெண்ணரும்புவனம்யாவுநான்முகனொடினிதளி க்குமலருந்தியந், தண்ணறுந்துளவமாயன்வெண்டிரைதயங்கு நாகணையின்மேவினன். (௭௪)

வேறு.

வாளமருழவந்தன்னிரணியன்மறிந்தபின்னர்
நீண்டுருந்தடக்கைப்பேழ்வாய்நிகரறுமிரணியாக்கற்
காளரியேறுபோறுமடல்கெழுபிரகலாதன்
கோளொடுகன்றுடேர்ந்துருமணிமவுலிவைத்தான். (௭௫)

குட்டங்கையினெடியவாட்கட் புலோமிசைகோனன்றெண்ணீர்க்
குடங்கைந்நீர்தறைவழர்வோன்முதலியதலைவர்யாரு
மடைந்துழற்றிறல்கேட்டமைறந்தலைமயங்கிமாழ்க
விடமகொழுசீரைத்துப்பின்விரோசனன்றுங்காத்தான். (௭௬)

இன்னணமொழுகுநாளிலவுணர்கோன்மகப்பேறின்றிப்
பொன்னவிர்கடுக்கைவேய்ந்தபுராரியைக்கங்குற்போது
மன்னுநன்பகலுமன்பின்வரன்முறைவழாதுபோற்றி
யன்னவனருளால்வெய்யவந்தகாசுரனையீன்றான். (எஎ)

இலகுபொற்கண்ணன்றேவரியக்கர்விஞ்சையர்மற்றுள்ள
வலகில்மன்பதைகள்யாருமலக்கணுற்றுவிசோர
மலர்தலையுலகம்யாவுங்கவர்ந்துவண்டிரைகுலாய
வொலிகடலகட்டினுள்புக்கொளித்தனனொளித்தலோடும். ()

அலர்தலையுலகம்பூத்தவந்தணன்முதலதேவர்
கொலைபழுத்தொழுகுநேமிபண்ணவர்க்குறுகியேத்திப்
பொலநிறக்கண்ணன்செய்திபுகலவுஞ்செங்கண்மாய
னிலகொளியெயிற்றவெள்ளையெறுழ்வலியேனமானான். (எகூ)

துறுமயிர்க்குறுத்தாட்செங்கட்டேயவெண்பன்றிமுன்னீர்
மறிகடன்முழுங்கப்புக்குவன்றிறலவுணன்மார்பம்
பிறைமருப்பதனாலூன்றிப்பிளந்திருகூறுசெய்து
நிறையிரும்புவியைமுன்போனிலைபெறநிறுவிற்றன்றே. (அ0)

வண்டுவீழ்ந்தரற்றவாட்டாப்புதுமலர்மாரிசிந்தி
யண்டரார்ப்பெடுத்துவாழ்த்தவரும்பிளமுறுவற்செய்ய
தொண்டைவாய்க்கமலைக்கேள்வன்றுறுமயிர்ப்பன்றியாகக்
கொண்டபேருருவநீங்கிக்குரைகடற்பள்ளிசேர்ந்தான். (அக)

முரண்மிகுமிரணியாக்கன்சமர்த்தலைமுடிந்தபின்னர்க்
கரைபொருகடலந்தானைகைதொழப்பிரகலாத
னிரைமணிமவுலிசூடிநேரலர்வணங்கியேத்த
வரியணைப்புரத்துவைகியவுணர்கோனாயினானே. (அஉ)

மணிநிறவண்ணன்செய்யமலரடிக்கன்புபூண்டு
துணிகதிர்க்குளிர்வெண்டிங்கட்சுடர்மணிக்கவிகைநீழற்
பணிமுடிக்கிடந்தவோரேழுலகமும்பரிக்குநாளிற்
றணிவருங்கேள்வியானோர்மறையவன்வந்துசார்ந்தான். (அங)

வந்தனன்மறையோன்றன்னைமதிக்கலனாகிமிக்க
வெந்திறற்பிரகலாதனிகழ்தலும்வெகுட்சியெய்திப்
பைந்துழாய்ப்படலைமாலைப்பண்ணவர்ப்பழிச்சும்வாற்று
மிந்திரத்திருவிற்செம்மாந்திருந்தனனிவனென்றெண்ணி. (அச)

மழகதிர்ப்பருதியன்னகவுத்துவங்கிடந்தமார்பி
னழலவிர்நேமிப்புத்தேட்கன்பிலனாகவென்ன
முழைபுகுசீயமன்னமொய்ம்புடைப்பிரகலாதன்
பிழைபடவைதுவேதமுனிவரன்பெயர்ந்துபோனான். (அரு)

மறைவிளையாடுஞ்சென்னுமுனிவரன்வைதவாற்றுற்
சிறுகருந்துளவோற்கன்புசெய்கலனுகிமேனு
ளூறுசினத்தவுணர்கொன்றபழம்பகையுள்ளத்தோர்ந்து
கறுவொடும்பிரகலாதன்கதழ்சினந்தலைக்கொண்டானே. (௮௬)

வேற்கடற்றனையோடும்வெகுண்டனனெழுந்துபொங்கிப்
பாற்கடற்புறத்தினெய்திப்பைந்துழாய்க்கரியமாலை
யேற்றமர்புரிந்தானேர்யாண்டிமையவர்பருவந்தன்னிற்
கூற்றுயிர்விழுங்கும்வைவேற்கொலைத்தொழிற்பிரகலாதன். ()

வாளமரழுவத்தாற்றுதுடைந்தனனுகிமாயோன்
றாளிணைக்கன்புபூண்டுதணப்பருந்திருவினெய்தி
நீளிருமாயைசேருமெனவவைநீத்துவெய்ய
கோளுடைப்புலன்கள்செற்றுக்குறிக்கருந்தவத்தனானான். (௮௮)

மறத்துறைநீத்துவெய்யமைந்துடைப்பிரகலாத
னறத்துறைபோயபின்னரடுதிறலவுணர்யாரும்
பெறற்கருஞ்செல்வமெய்தவந்தகாசுரற்குப்பேராச்
சிறப்பொடுமிருள்கூட்டுண்ணுங்கதிர்மணிமவுலிசேர்த்தார். ()

பழிபடுமவுணனாக்குநாளினேர்பன்னிராண்டு
மழைவளங்குன்றவேதமுனிவரருள்ளமாழாந்
தழிபசிவருத்தநீடியகலிகைகொழுநன்வைகுந்
தழைபுனைகுறுங்காற்சாலைவிழைவொடுஞ்சென்றுசார்ந்தார். ()

சந்தனப்பொதும்பர்சூழுந்தாருகாவனத்தினின்றும்
வந்தமாமுனிவர்யார்க்குங்கவுதமன்மனைவியோடு
மந்தமில்பூசையாற்றியழிபசியகன்றுநாளுஞ்
சிந்தைமகிழ்நலனுண்சிறப்பொடுநல்கினுனல். (௯௧)

அகிறவழ்ந்துறங்குங்கூந்தலைகவிகைக்கணவனில்லி
னகைபடுமமுதமென்னுகாடொருமடிசின்மாந்தித்
தகவொடுமுனிவர்யாருஞ்சார்ந்திடுநாளிற்றூய
முகில்வளாருசுரந்துமின்னிமொய்ம்மழைபொழிந்ததன்றே. ()

பன்னிருபருவத்துள்ளபசிப்பிணிவெருவியோட
மின்னிவான்பொழிந்தெஞ்ஞான்றுமிகுவளஞ்சுரக்கலோடு
மன்னியமுனிவர்கத்தமனைமருங்கெய்தவெண்ணிப்
பொன்னிறக்கபிலைமாயைப்புணர்ப்பினுலமைத்துவிட்டார். ()

ஊதினுமபறக்குமென்னவுயர்நரம்பெழுந்துதோன்றக்
கோதறுந்தேனைநோக்கிக்கோதமன்பொலிவினேடுந்
தீதறுதளிர்த்துமென்னசென்றுமெய்தொட்டுமாழ்கி
வேதனைபுகுந்துபாரினைவிழுந்துயிர்மறிந்ததன்றே. (௯௪)

ஆறுயிரிறத்தலோடுங்கௌதமனாழுங்கிமாழ்க
நான்மறைமுனிவர்யாருமாவுயிர்க்கடிந்தோரில்லிற்
றுணினிதருந்திற்றீதுதலைப்படுமென்னவோதித்
தேனமர்பொதும்பர்சூழுந்தாருகாவனத்திற்சேர்ந்தார். (௯௫)

கோதமன்றானக்கன்றாற்குறித்தினிதுணர்ந்துநோக்கி
மாதவரிழைத்ததீதென்றறிந்துநான்மறைவல்லோர்கள்
வேதநூலொழுக்கமாறிவிடையவனன்பிற்றீர்ந்து
தீதுறுநரகின்வீழவென்றுவெஞ்சினத்தின்வைதான். (௯௬)

வைதவெஞ்சாபந்தன்னால்மறைபயில்முனிவர்யாரு
மைதுணர்விழந்துவேதமுதலியவனைத்துநீங்கிச்
செய்தவவொழுக்கமாறித்தீவினைச்சிமிழ்ப்புண்டியாரு
மெய்துதற்கரிதாம்வெய்யவிடர்க்கடலதனில்வீழ்ந்தார். (௯௭)

தீவினையுழக்கும்வேதமுனிவரர்சிறுகட்பேழ்வாய்ப்
பாவடிப்பருமயானையுரித்தபன்னவனுமந்தண்
பூவைமேனியனும்வைகுமலையினிற்புகுந்துபோற்றி
யோவருதுடற்றுசாபமொழியுமாறுரைக்கவென்றார். (௯௮)

வேறு.

நெற்றித்தழற்கட்பெரியோனுநேமியோனுமிங்கிவர்க
ளுற்றதீமைநிலையத்திற்பன்னாளுழப்பினல்லாது
முற்றுறுதென்றுளத்தெண்ணித்தீமைபயக்குமுன்னூல்கள்
சொற்றாரவரைமதிமருட்டமுனிவரவற்றிற்றுவக்குண்டார். ()

அன்னநூலின்வழிநூல்கள்முனிவரோதியனொய்தி
யின்னற்கடலுள்வீழ்ந்திடலுமெம்மானதனுக்குளமிரங்கிப்
பன்னுமறையோர்துயர்தீர்ப்பான்பலியேற்றுண்டல்தலைக்கீடாய்
மன்னுமுயர்தாருகவனத்தினன்னோர்சாலைமருங்கடைந்தான். ()

வெயில்வீற்றிருக்குங்கடவுண்மணிவிளங்குமார்பன்முதலமர
ரயில்வீற்றிருக்குமதர்நெடுங்கணம்மெல்லோதிச்சிலைப்புருவ
மயில்வீற்றிருக்குமஞ்சாயன்மகளிராகிவளைவுயிர்த்த
குயில்வீற்றிருக்குமந்தீஞ்சொற்கோதையேவற்றலைநின்றார். ()

ஆலமுயிர்க்குமுத்தலைவேலடுபோர்நந்தியமரரொடுங்
காலக்கனலைக்கடைகக்குங்கணங்கள்யாவுஞ்சூழ்போதப்
பால்வெண்ணீற்றினொளிபழுத்தபடிவத்தண்ணல் பங்குறையும்
ஞாலம்பூத்தசிற்றுதரத்தணங்கினேவல்நயந்திருந்தார். (௧௦௨)

அனையகாலைவிசும்பளக்குமம்பொற்குடுமிமந்தரத்திற், கனைதெண்டிரைநீர்க்கடல்கிளர்ந்தாலென்னக்கலினமாப்பூண்ட, புனைபொற்கொடிஞ்சிமணிநெடுந்தேர்முதனாற்படைகள் புடைசூழச், சினவுநவொள்வேற்றடலரியிற்சென்றானந்தகாசுரனே. ()

அரில்பூத்தலர்ந்தவுள்ளத்தினவுணன்மடமைமீதூர [ன்
வரிபூத்தலர்ந்தமதர்நெடுங்கணணங்கைக்கவர்வான் வந்தனனெ
றெரிபூத்தலங்குமுத்தலைவேலேந்திநந்திமுதலானோர்
செருவேற்றெழுந்தார்வாட்டலைகள்புகையச்சாரிதிரிந்தனரால்.

கொல்லேற்றுரிவைபுரம்போர்த்தகிடுகுகுறங்கின்மிசைதாக்கி, யெல்லேற்றொளிகான்றலங்குதிறல்வடிவாள்விதிராவிதழ்மடியா, மல்லேற்றுயர்ந்ததிணிதடந்தோட்கணங்கள்வெருண்டுவாளைக்கி, யல்லேற்றுடையவிருள்பழுத்தநிறத்தோர்நெஞ்சமழன்றெழுந்தார். (௧௦௫)

எழுந்தார்வரிவினாண்கொளுவியெய்தார்வைதாரெரியுமழற், கொழுந்தாலிமைதீய்ந்திடவிழித்தார்குனித்தார்கொம்மைகொட்டினார், பிழிந்தார்கணங்களுடற்குருதிபில்கியோடவவைநோக்கி, பழிந்தார்நெஞ்சம்விண்ணோர்களவுணருரரியார்த்தெழுந்தார்

கூற்றும்வெருவிக்கண்புதைப்பகுனிக்கும்வரிவிற்றிறல்மணிமா, ணேற்றையுயர்த்தவிறலந்திகண்டாகன்னனிவர்முதலோர், சீற்றங்கதுவவாளெயிறுதின்றுங்கவுணர்படைவெள்ளம், நூற்றின்மேலினொருநொடியிற்கொன்றார்நூழிலாட்டயர்ந்தார். ()

சூர்த்தநோக்கின்வாளவுணர்தொலைதல்காணாவவுணர்கோ
னார்த்தானண்டமுகடுடியவமரர்வயிற்றினெரிதவழப் [ன்
பார்த்தானரவின்முடிக்கிடந்தவவனிநெளியப்பதம்பெயர்த்தா
வேர்த்தான்கணங்கடமையள்ளியண்டச்சுவரின்விட்டெறிந்தான்

கணங்களுடைந்துபுறங்கொடுப்பக்காயாமேனித்திருநெடுமா
லணங்குநோய்செய்வரிநெடுங்கட்சத்தியொருநூறமைத்துவிட
நிணங்கொள்வடிவேலந்தகப்பேரவுணன்றன்னைநிகர்வோரைத்
துணங்கையயர்ந்துபேய்க்கணங்கடுள்ளமலைதிரளவிடுத்தான்.

விடுத்தவோராயிரமவுணர்விளியநந்திமுதற்கணங்க, ளடுத்தவிண்டுசத்திகள்வந்தடர்த்துவாகைபுனைந்திடலும், கடுத்தாழ்மிடற்றெங்கண்ணுதலோன்கணங்கட்காற்றா துடைந்துபுறங், கொடுத்தானுலகமொருமூன்றுங்கொலைசூழந்தகாசுரனே. ()

அன்னகாலைமுனிவரர்களமருமுயர்தாருகவனத்திற்
பன்னிராண்டுநல்லருளிற்பலியேற்றுலவிவார்சடையிற்
பின்னற்றிரைவான்புனற்கங்கைமுடித்தபெம்மான்பிறைதவழும்
பொன்னங்குடுமிமந்தரமால்வரையின்விழைவிற்போந்தனனால்.

அருவிமதவெங்கவுடகலுழிவேழமுகன்வானகடணவுங்
குருகுபெயர்குன்றறவெறிந்தகுமாரனடுபோர்விறல்நந்தி
செருவெங்கோலத்தலங்கிலைவேறிரிக்குங்காலவயிரவன்வெம்
பருதிவடிவெய்கணங்களொடும்பரமன்பாதம்பணிந்தனரால். ()

கொங்குகமழுமலர்ப்பொகுட்டிலுறையுங் கோதில்மறைக்கிழவ
னங்கண்விசும்புபொதுநீக்கியளிப்போன்வெய்யதழற்கடவுள்
வெங்கட்கூற்றஞ்சுறவுயர்த்தவெள்வேல்வருணன்முதற்றேவர்
திங்கட்குழவிவனைந்தசடைத்தேவின்கமலத்தாள்பணிந்தார். ()

பணிந்தகுமரர்தமையெடுத்தாங்குசசிமோந்துபரிவினொடும்
வணங்குமமரருளங்களிப்பமகிழ்வினோக்கிமறைக்கிழவ
னணங்குமூரக்கங்கணத்தையேந்தவளைக்கிறைவழுத்தக்
கணங்கொள்மணிகூரிருடுருவிக்கதிர்செய்கோயிலுள்புகுந்தான்

களைகொன்றிரங்குங்கருங்கடலினஞ்சுமமிழ்தூங்கடையுயிர்க்கும்
பொருவேனெடுங்கணரமகளிர்பொன்னங்கவரிபுடையிரட்ட
நிரைவாலுளையபைங்கண்ணபுலவுகமழும்நீளெயிற்ற
வரிமாச்சுமந்தமலரணையினண்ணல்செம்மாந்திருந்தனனால். ()

இமையாக்கருங்கண்முலைதாங்கியிடைபோயுள்வாங்க
வமையார்தடந்தோளவளைபுலம்பவம்பொற்சிலம்புகிடந்தலற
வுமையாளோடும்பெண்ணுருவம்வாய்ந்ததிருமாலுவந்தெய்தித்
தமரக்கடலின்விடமயின்றதலைவனடியிற்றாழ்ந்தனனால். (௧௧௬)

வேறு.

நாணொடுமெருக்கங்கோட்டிநகைமுகம்விருந்துநல்கி
மாணிழையுருவினின்றமாயனையுமையினோடுங்
காணவரத்தனதுசெம்பொற்கவானிடையிருத்திநீங்கா
வேணவாவோடும்புல்லிமேதகவிருந்தானன்றே. (௧௧௭)

திருமறுமார்பனோடுமுமையொடுஞ்சிறந்துமேதாணு
மரியணைப்புறத்துவைகுமண்ணலைவணங்கியேத்தி
யெரியுமிழ்தறுகணந்தகாசுரனிழைத்தவெல்லாங்
குருதிதோய்வயிரவொள்வாளிந்திரன்கூறினானே. (௧௧௮)

மாயனுண்டளித்தநாலுசத்தியும்வணங்கியேத்தித்
தூயநீயாணைமற்றுனிடமருங்கதனில்தோன்று
மாயிழையவள்கொலுன்றன்வலப்புறத்தழகுபூத்த
சேயிழையார்கொலென்னத்திங்களஞ்சடையோன்கூறும். ()

தத்துவங்கடந்துநின்றதனிப்பொருளாகிமேலாய்
சித்தினிலறிவதாகித்தெரிவரும்பிரமமாகி
பத்திமையோடுந்தம்மைத்தாழ்நருளேபார்க்குந்தூய
முத்தர்நல்விதயநீங்காமுழுப்பொருள்யாமேயாமால். (௧௨௦)

உலகெலாமீன்றுங்காவல்புரிந்துமிட்டொடுக்குகின்ற
வலகிலாவிச்சைக்கென்றுங்காரணமாகியொன்று
மிலகுபேரொளியாயென்றனிடமருங்கொளிக்குஞ்செல்வி
நிலவுநான்மறையுமேற்றுங்கரில்சிற்சத்தியாமால். (௧௨௧)

லப்புறமதனில்மேயவண்டுகேண்படுக்குங்கூந்
லப்பருங்காலாதீதவுருவமாயொளியாயொன்றாய்க்
கலப்பிலவ்வியத்தந்தோன்றுங்காரணமாகியானும்
கலத்தகுகுணக்குன்றகுநாரணனுகுமென்றே. (கஉ.உ)

பூந்துழாய்ப்படலைமாலைப்பூவைவண்ணனையுஞ்செய்ய
மாந்தளிர்கவறுமேனிமலைமகடனையும்வேறு
யோர்ந்துரைப்போரொன்னன்பிற்றீர்ந்தொருவராக
வாய்ந்துணர்கிற்போரொன்றனன்பரிற்சிறந்தாரன்றே. (கஉ.ங)

அலத்தகம்விளர்ப்பச்செந்தசீறடியம்மெல்லோதிச்
சிலைக்கரும்புருவவாட்கணுமையைவண்டேறல்கக்கு
மலர்த்துழாயலங்கற்பூவைவண்ணனையிகழ்ந்துளோர்க
ளுலப்பிலுளரிவாய்த்தீயநரகிடையுழப்பரன்றே. (கஉ.ச)

என்றுவெண்டிங்கள்வேணியிறையவனிசைத்தலோடுங்
குன்றெறிவயிரவொள்வாள்குருசிலைமுதலதேவர்
மன்றனுண்மலர்கவேிவலஞ்செய்துவணங்கியேத்தி
யொன்றுபோருணர்விலுடுமீங்கிவையுரைக்கலுற்றார். (கஉ.ரு)

முருங்கெரிபுரத்தினிட்டமுதல்வனின்மேலுந்தெண்ணீர்க்
கருங்கடல்புகையவிற்கால்குனித்திடடகடவுண்மேலு
மருந்தினுமினியதீஞ்சொன்மலைமகண்மேலுமன்பு
பொருந்திடவேண்டுமென்னப்பொலிவொடுகல்கினுனே. ()

வேறு.

மூத்தம்பருமித்திடைதேய்த்துமுகிழ்த்துவிங்கி
யத்தம்பொருவுமணிமென்முலையம்மெலோதி
மைத்தங்குவேற்கட்டிருநுயகனுதிவானோர்
தத்தம்பதிக்குவிடைகொண்டெழுமேலவைதன்னில். (கஉ.எ)

நிழல்கொண்டுதெவ்வருயிர்மேயுநிணங்கள்கொட்ட
வழல்வெஞ்சினத்தகளிறுயிரவெள்ளமேக
மழவெங்கதிரினிழறும்முகொடிஞ்சிமான்றேர்
குழுமிப்புவியோரிடமின்றெனக்குன்றினேக. (கஉ.அ)

திரைமுற்றமுந்நீரிடைத்தெள்ளமுத்தோடும்வந்த
பரிமித்தகூந்தற்பரியாயிரவள்ளமேக
வுருமுக்குரலர்வடிவாளருலங்கொடோளர்
வெருவற்றமள்ளர்பதினுயிரவெள்ளமேக. (கஉ.கூ)

உடல்வெஞ்சினத்தவயவெம்புலிப்போத்திஞேடா
வடிவெந்திறல்வாளவுணர்க்கிறையாயவெய்யோன்
கடன்மொண்டெழுந்தமுகில்போற்கடற்றனையார்ப்ப
மிடல்கொண்டுபோதந்துயர்மந்தரவெற்படைந்தான். (கங.0)

வேறு.

ஆலவிடநிகர்வெஞ்சினத்திறலந்தகாசுரனடுசமங்
கோலிவருவதையொற்றர்கூறவெகுண்டுகுன்றவிலந்தணன்
காலபயிரவனந்தியாதிகணங்கள்சூழ்வரவண்டுமாய்
மாலினேடுமிகலவுணர்வெருவரமலைதியென்றுவழங்கினன். ()

என்றுகூறலுமுத்தலைப்படையெம்பிரானடிகைதொழா
வென்றிமாலவிடைமீதிவர்ந்துவெகுண்டுவிண்ணவர்கைதொழக்
கன்றுநெஞ்சினர்காலவேலினர்கனல்கவிழ்த்தெரிகண்ணினர்
வன்றிறற்கணநாதர்சூழ்வுரவயிரவன்கடிதேகினன். (கரு-உ)

இலகுமுத்தலைவேல்திரித்திமிலேறுயர்த்தருணந்தியுங் [லு
கொலைபழுத்தழனேமிகொண்டுயர்கலுழன்மேல்வருகொண்ட
மலையினைச்சிறைவீழவெட்டியவச்சிரப்படையண்ணலு
மலைகடற்படையவுணர்நெஞ்சகமலமரத்தனியேகினர். (கரு-ரு)

வெண்ணிணத்தொளிபூசியாருயிர்மென்றுமென்றுவிழுங்குபோ
ரண்ணலங்கதைசுற்றியந்தகனந்தகாசுரனெதிர்செலக்
கண்ணழற்பொறிசிந்தவெந்திறலளகையாளிகடற்படை
யெண்ணிடைப்புவிசிறிதும்வெறிடமின்றெனத்தனிசென்றதே.

இரலையூர்தியுமேழகத்திவர்வெய்யசெந்தழலிறைவனுங்
குருதியாடிணைப்புலால்கமழ்கொற்றவாளுடைநிருதியுந்
திரைகொழித்தெரிவிரிகடற்கிறையாயதிண்டிறல்வருணனு
முருவமால்விடையூர்தியுந்திறலவுணரோடமருடற்றினா. ()

வின்முகத்தெறிபகழிதோமரம்வேலெழுப்படைகப்பணங்
கொன்னுனைத்திரிசூலவேல்கதைகுலிசம்வாள்மழுநேமிகொண்
டின்னலிற்றிமையோர்நடுக்குறவந்தகாசுரனெதிர்தலும் [தான்
பொன்னகர்க்கிறைபுருவவில்லொடுவிற்குனித்தடுபோர்செய

கார்வரைப்படர்சிறையரிந்திருகைபடிந்ததிறத்திறற்
கூர்நுனிக்குலிசாயுதப்படைகொண்டுதிண்டிறலமரர்கோன்
வார்மதப்புனலருவிதாழதருசூழிமால்வரைகோடிவெம் [னன்
போர்முகத்திடைகணங்கள்வெவ்வழல்பொழிய நூழிலபடுத்தி

கனைகுரற்பொருபகடுகைத்திருக்கண்ணழற் பொறிகதுவவெஞ்
சினமிகுத்துயரண்டகோளகையிடியநின்றுசிரித்துலா
யனல்கவிழ்த்தெரிகதைகொடந்தகாசுரன்மெய்யினிற்
புனைமணிக்கவசந்தெறிப்பவடித்துநின்றுபுழுங்கினன். (கரு-அ)

அளகைகாவலனிரலையூர்தியழற்றுமங்கியரக்கர்கோ
னளிபுனற்கிறையீசனல்லுருநண்ணுவோர்பதினொருவருங்
களியுடற்றிறலவுணனென்னுமோர்கனமுகட்டினைதுங்குவான்
துளிமுகிற்குலமேழுநின்றுசொரிந்தெனக்கணைதூவினர். ()

தூவிநின்றிருதோள்புடைத்தெதிர்துள்ளிவெய்தி னெதிர்ந்திடு
தேவிர்காளினியென்முன்வந்துயிரெங்ஙனுய்குவீர்தீர்கலா
வாவியோடுநும்முடல்பிழிந்துகுடித்தலாதயல்விடுவனோ[தான்
போவதெவ்வழிநின்மினென்றறைகூய் வெகுண்டடுபோர்செய்

அந்தகாசுரனெதிர்புகுந்துயிராவணத்தின்மருப்பொசித்
துத்திரன்றடமார்பகந்தனிலென்பொடித்திடமோதுரு
வெந்திறற்பகடேர்தியெவ்வழல்விழிபிதுங்கவடித்துவெஞ்
செந்தழற்கிறைகவுணெரித்துசிதர்ந்துவீழ்தரவெற்றினான். ()

நிருதிவாய்வழிகுருதிகக்கநெரித்துவாளமர்புரிதரும்
வருணனன்மார்பிலுதைத்தழன்றளகேசனோடமலைந்துபோ
ரிரலையூர்திவணங்கவஞ்சலையேகுகென்றருளீசனல் [ன்.
லுருவுளோர்பதினொருவருஞ் செருவொழியவாகைபுனைந்தன

விண்ணுளோர்படைவெருவியோடுதல்கண்டுநெஞ்சம்வெ
குண்டுபோ, ரண்ணலங்கதைநேமிவாள்சிலைசங்கமங்கையமைத்
திடுந், தண்ணறுந்துளவப்பசுந்தொடைதாழ்தருந்திருமார்பனு
ஏ.பண்ணமைந்துயர்கலுழன்வன்பிடர்பருதினானுறவேறினான்

ஊழிவாயதிருருமெனத்திறலுரகரஞ்சிவெருக்கொளப்
பாழியங்கிரிபுவிபிடிந்தெழுபாதலத்தினெளிப்பமென்
மோழைபட்டுயரண்டகோளகைமுற்றும்விண்டுசிதர்ந்திட
வாழிமாமுகிலவுணர்சேந்தகமஞ்சவால்வளையூதினான். (கசச)

கொண்டல்மேனிமுகுந்தன்வெருசமர்கோபி வந்தமைக
ண்ணுருத், திண்டிறற்பரிகோடிபூட்டியதேரின்மீதிவர்ந்து
போ, பெண்டிசைக்கரிசெவிடுபடுபார்மாசல்வளைக்குலமிடியுரி,
ரண்டமுற்றுமுடைந்துபாழ்படவவுணர் கோன்வளையூதினான்,

வேறு.

புழைபடுநடக்கைவேழம்பொங்குளைப்புரவிநூறு
மிழைபகவெறிபுமொன்வாளொருவலிவயவர்தம்மை
விழைவொடுமமரர்மாதர்விருந்தெதிர்கொளவில்வாய்க்
கொழுநுசிப்பகழிமாரிகொண்டல்பெய்திட்டவன்றே. (கா கூ)

மலைதுணிந்தென்னவெம்போர்வாரணங்கவிழ்ந்தமுன்னி
ரலைமறிந்தென்னப்பொங்குமலங்குளைப்புரவிவீழ்ந்த
தலைகுவிந்திரவிமான்றோர்தடுத்தனகலுழப்பாகன்
சிலைகுனிந்தளவின்வெம்பேய்நிணச்சுவைதெவிட்டிற்றன்றே. ()

ஆரொடுங்குழிசிச்சில்லியற்றனகூம்புவீழ்ந்த
பார்துகளானசெம்பொற்கிடுகொடும்பரிகள்வீழ்ந்த
யூர்தருபாகர்சென்னியுருண்டனகொடிகளற்ற
சோரணிசிதர்ந்துவிர்ந்தரி முரசகணைகள்பாய. (கசஅ)

ஊனுடுபழகிநெய்த்தோரொழுகுவெண்பிறைக்கோடற்ற
கான்மதக்கலுழிதூங்குங்கவுளொடுந்தலைகளற்ற
பானிறக்கவரிதூங்கும்படர்முறச்செவிகளற்ற
நீனிறக்குன்றமென்னக்கிடந்தனநெடுங்கைவேழம். (கசகூ)

கணிகையர்மனத்திற்செல்லுங்கடுவிசைக்கால்களற்ற
துணிகதிர்ப்பருமமற்றசுடர்மணிக்கவினமற்ற
வணிமணித்தாரினோடுமலங்குழையொருத்தமற்ற
மணிநிறமாமைபூத்தவாம்பரியனைத்துமாதோ. (கரு0)

சேட்டிளம்பருதிமார்பந்திறந்தனமலைகளேய்க்குந்
தோட்டிணைதுணிந்தசெம்பொற்சுடர்மணிக்கவசம்வீழ்ந்த
தாட்டிணையற்றவெய்யதானவரெவர்க்கும்வீழும்
பாட்டளித்துளவோன்வில்வாய்ப்படைநெடும்பகழிபாய. ()

ஆங்கதுகாண்டலோடுமாரழல்கதுவநோக்கி
வீங்கியவெகுளிதூண்டவெந்திறலவுணர்கோமான்
வாங்கருங்கொடியவின்னுண்டெறித்தலும்வானோர்மாழ்கி
யேங்கினர்புவிகளேழுமிடைந்தனவுடைந்ததண்டம். (க[illegible]உ)

திருகுவெஞ்சினத்தினோடுஞ்செங்கண்மால்முன்னரொய்தி
யிரணியனிரணியாக்கனிகலவிந்தாவிசோர
முரணொடுங்கொன்றவுன்னைமுடித்தரும்பழிகொள்ளேனே
லரனுடைவரிவிலென்றுமமரிடையெடுக்கலேனால். (கருங)

என்றுரையாடிவேதன்மனத்தினுமிழைத்ததீசன்
குன்றவில்லனையதாற்றுமிரணியன்குழைத்துநாணி
னென்றிடவேற்றுமுறுதென்றுழிந்திடும்வலத்ததாய
வென்றியஞ்சிலைநாணேற்றிவெடிபடமுழங்கியார்த்தான். (கருச)

குடுமியம்பறவைக்குன்றமுருவிடக்குமரன்முன்ன
மடுதிறல்வடிவேறன்னுலெறிந்திடுமாற்றல்கேளாய்
படர்தருமேருவெற்பையுருவிடப்பணித்தவாளி
கடையுகமுடிவினூழிக்கனலெனக்கனன்றுவிட்டான். (கரு[illegible])

மரகதக்குன்றமன்னமணிநிறவண்ணன்மேனி
விரைவுறவெடுத்தவாளிமெய்தனிற்பவளமேனிப்
புரமெரிசெய்தமுக்கட்புனிதனிற்றோன்றநோக்கிக்
கரையழிகடலந்தானையவுணர்கோன்களித்தல்செய்தான். ()

ஆங்கவன்களிப்பநோனுதஞ்சனவண்ணன்சீறிப்
பாங்கமைபரியுந்தேரும்பதாதியுநூழிலாட்டித்
தீங்குருவெடுத்தாலன்னவந்தகாசுரன்றிண்டோளி
லோங்குபொற்கவசம்வீழவொருகணைவிடுத்துநக்கான். (கருஎ)

கார்முகம்வளைக்கிசெம்பொற்கலன்செய்தோள் கழியவாங்கிப்
பார்முழுதளந்தமாயன்விடுத்தவெம்பகழியாவுங்
கூர்நுதிமழுங்கிவீழக்கொழுங்கதிர்ப்பருதியேய்க்கும்
போர்கெழுதிகிரிமண்ணும்வானமும்புகையவிட்டான். (கருஅ)

விட்டவெந்திகிரிக்கூற்றமின்னொடுமுருமுக்கான்று
பட்டனைவுணனென்னத்தானவர்பகைத்துமாழ்க
வெட்டுடனிரண்டுதிக்கும்வென்றவளைகலத்தெய்திக்
கட்டழலிறைக்கும்வல்வாய்மடிந்தொளிகரந்ததன்றே. (கருகூ)

அவ்வளவிலவயிரவொள்வாளவுணர்கோன்வெகுளிபொங்க
வொள்ளொளிதவழ்ந்துநெய்த்தோரொழுகிவெம்புலவுநாறும்
புள்ளவாம்பகழியொன்றுவிடுத்தலும்பூவைமேனி
வள்ளல்பைந்துளவத்தண்டார்மருமம்போழ்ந்தேகிற்றன்றே. ()

நீனிறக்குன்றில்வீழுங்குலிகநீரருவியென்ன
மானிறந்துறந்துநெய்த்தோர்சொரிதலுமயக்கமெய்தப்
பானிறவெருத்தச்செங்கட்பறவைவேந்தரியினோடுந்
தீநிறப்படைகொள்காலவயிரவன்மருங்குசேர்ந்தான். (கசுக)

திருமறுமார்பன்வெய்யகணைபடுமயக்கந்தீர்ந்து
குருதிகொப்புளிக்குவேலந்தகாசுரனைக்கோற
லரிதரிதெம்மனோர்கட்கையநீபாணியாது
விரைவினிற்சேறியென்றேழுலகெலாம்விழுங்குமன்னோன். ()

வேறு.

என்னாலும்விழிசெந்தீயெரிதரவிடமுழ்கா
மின்னகுமழுவெம்போர்விறலுடையடனந்தி
பன்னகமுடிசாயப்படிநெளிதரமண்டிக
கன்னவில்திரடிண்டோட்கணமயல்வரவந்தான். (கசுங)

வந்தடுதழல்காலுமலையுறழ்கதையொன்றிற்
கந்தடுவயவெம்போரக்கயர்த்துரகத்தோ
டந்தமில்கன்மேல்விக்கமைதருமறமள்ளர்
செந்தலைசயுகமோதித்திசைசெவிடுறநக்கான். (கசுச)

கரியொடுகரியெற்றிக்கால்விசையொடுதாவும்
பரியொடுபரியெற்றிப்பார்கிழிதரவோடித்
திரிதருசுடராழித்தேரொடுதேரொற்றிப்
பொருசமரிடையொன்னார்புறமிடவெதிர்சென்றான். (கசுரு)

சென்றெதிர்கொடியோனைப்புவியொடுதிசையாவும்
வென்றவனுயர்திண்டோள்விசயமுமடுபோரு
நன்றுகொனன்றென்னுநகையொடுமுனையாடி
மின்றிகழ்கணையந்தார்மார்பினிலுறவிட்டான். (கசுசா)

காய்கணைபடவெம்பிக்கதமெரிவிழிசிந்தப்
பாய்பரியொடுதேரும்பாகனுமுடன்வீழ
வாய்பிழியலர்கொன்றைத்தார்புனையடனந்தி
தீயுமிழ்கதையொன்றால்மோதினனெரிசிந்த. (கசுஎ)

தகூ...படையுயர்நேமித்தொழிலொழிதரலோடு
மொன்னலருயிர்மேயாதுறைபுககனிவெள்கு
மின்னடுசுடர்வேலான்மேதினிமிசைகுப்புற்
றன்னவன்மணிமார்பத்தெற்றினனதிர்வுற்றான். (கசுஅ)

வேறு.

நந்திதன்னயர்வுநோக்கிநாகிளம்பருதிகோடி
யந்தரத்தெழுந்ததென்னவவிர்மணிக்கதிர்கள்வீசச்
சந்திரமவுலியண்டகோளகைசென்றுதாக்கக்
கந்தடுதிரடோட்காலவயிரவன்கடிதின்வந்தான். (கசுகூ)

ஆலமும்வடவைத்தீயுங்கொப்புளித்தவுணர்நெய்த்தோர்
வேலையிற்குளித்துதெவ்வர்வெண்ணிணச்சேறுபூசிக
காலன்வெம்பசியுறுதுகளித்துயிர்விருந்துநல்குஞ்
சூலவேறிருவித்தந்தகாசுரற்றொடர்ந்துசென்றான். (கஎ0)

கந்தடுபுழைக்கைநால்வாய்க்கடாக்களிற்றெருத்தல்போலு
மந்தகாசுரன்றன்மார்பத்தழிபெருங்குருதிகால
வித்திரன்முதலதேவரிறைஞ்சினர்தொழுதுவாழ்த்தக்
கொந்தழற்சூலவேலாற்குத்திமீதேந்தினானே. (கஎக)

பொருப்புறழ்சூலவேலின்வைநுதிபுதையக்குத்தி
யருக்கன்மண்டலமட்டேந்தியந்தகாசுரன்றன்மேனி
கருக்கலும்பாவநீங்கிக்கண்ணுதற்கடவுடன்னை
யிருக்கினைமுதலவாயமறைகளாலேத்தலுற்றான். (கஎ௨)

விருப்பொடுவெறுப்புநீங்கிவெறுவெளியாகித்தோன்றுந்
திருக்கிளர்பவளக்குன்றேதிருமறுமார்பன்காணு
மருக்கிளர்கமலப்பொற்றாள்மாணிக்கமலையேபோற்றி
பொருப்புவிற்குழையவாங்கும்புனிதனேபோற்றிபோற்றி. ()

பானலங்கண்ணிபங்காபல்லுயிர்த்தொகைகள்யாவு
மீனமொன்றின்றியீனுந்தந்தையேயென்பதெல்லாம்
வானவரொருவர்க்கேயோமறத்தொழில்பூண்டபுன்மைத்
தானவர்க்கில்லைகொல்லோதாணுவேபோற்றிபோற்றி. (கஎச)

எனுமறைத்துதிகள்கேளாவெம்பிரான்மகிழ்ச்சிகூர்ந்து
முனைபடுசூலவைவேல்முகட்டினின்றிறக்கியேத்து
மனையவன்மேனிதைவந்தருட்கடைக்கண்ணினோக்கித்
தனதுபேருருவம்யார்க்குந்தலைமையும்வழங்கினானே. (கஎரு)

நெற்றியங்கண்ணுந்தூயநீற்றொளிபழுத்தமெய்யு
மொற்றைவெண்குழையுநீலகண்டமுமொளிர்வெண்டிங்கட்
கற்றையஞ்சடையுந்தாங்கிக்கடவுளிறைஞ்சியேத்தப்
பற்றலர்புரந்தீயூட்டும்பண்ணவன்வடிவமானான். (௧௭௬)

தன்னுடையுருவம்யார்க்குந்தலைமையுமவுணனெய்த
வின்னருள்புரிந்துநல்குமெந்தைதன்கருணைநோக்கிக்
கன்னியந்துளவோனாதிக்கடவுளர்மகிழ்ச்சிபொங்கப்
பன்மலர்தூவியெண்டோட்பரமனைவணங்கிநின்றார். (௧௭௭)

வணங்கியதேவரோடுவகிர்மதிக்கண்ணிசூடி
யணங்கரவசைத்தமுக்கணவுணர்கோனுமொற்றைக்
கணங்கடம்மோடுங்காலவயிரவன்கடிதிற்போந்து
சுணங்கணிமுலையாள்பங்கன்சேவடிதொழுதுநின்றான். (௧௭௮)

அந்தகாசுரன்வெற்பீன்றவுமையொடுமரனைப்போற்றி
யெந்தையான்செய்ததீமையாவையும்பொறுத்தியென்ன
மைந்துடைவடிவேற்காலவயிரவனளித்தவண்ண
நந்தியின்கணங்கட்கெல்லாம்நாதனாயிருத்தியென்றான். (௧௭௯)

மணிநிறவண்ணன்செங்கேழ்மலரயன்மகவானாதி
பணிதருந்தேவர்யாருந்தத்தமபதியினேகத்
துணிகதிர்த்திங்கட்கண்ணியமுதமூற்றிருக்குந்தூய
வணிகிளர்சடிலத்தெந்தைவிடையினிதளித்திட்டானே. (௧௮0)

தண்டுழாய்முகுந்தன்வெய்யசத்திகணூற்றினோடுந்
திண்டிறல்வடிவேற்காலவயிரவர்சிறந்தநாகர்
மண்டுபாதலத்தினெய்துமென்றலும்வணங்கியேத்திக்
கொண்டபேருவகையோடுமவ்வுழிக்குறுகினானே. (௧௮௧)

பாதலத்தெய்துங்காலவயிரவன்பருதியெய்க்குந்
தீதறுமணிச்செஞ்சூட்டுச்சேவல்வாலுலையச்செங்கட்
கோதில்வாளரியேறொன்றாய்க்கூடியவுருவைநோக்கி
மேதகவியந்துவிண்டுசத்திகள்விளம்புமன்றே. (௧௮௨)

ஓருருவாயதன்மையென்கொல்மற்றுணர்க்கவென்னச்
சேரிராசதத்தால்வேதனாகுவஞ்சிறந்தசாத்தாற்
கார்நிறவண்ணனாவேங்கருதருந்தாமதத்தால்
மாரனைவிழியாற்செற்றவார்சடைப்புனிதனாவேம். (௧௮௩)

ஆதலினிலங்குசோதிமூவருமொருவராகத்
தீதறவுணர்ந்தோர்வெய்யநரகிடைச்சென்றுசேரார்
மாதவக்கிழமைபூண்டுவருத்துமைம்புலன்கள்செற்ற
மூதறிவுடையோர்சேருமுத்திவீடடைவர்மாதோ. (௧௮௪)

நீவிருங்கொலைகளாதிதீவினையெவ்வையுநீத்து
மூவருமொருவராகிமுழுப்பொருளாகிநிற்குங்
காவியங்கண்ணிபங்கன்கழலிணைக்கன்புபூண்டு
மேவரிதாயமுத்திவீட்டின்பமடைதிரன்றே. (௧௮௫)

என்னலும்விண்டுசத்திநூறுமங்கினிதினேத்திப
பொன்னவிர்கடுக்கைசூடும்புரிசடைப்புனிதறபோற்றிப
பன்னருமறைகள்பாடிப்பாழொருமூன்றுநீத்துத
துன்னரும்பிரமந்தன்னிற்றோய்ந்தவென்றுரைத்தானன்றே. ()

அந்தகாசூரன்சாரூபமடைந்தவத்தியாயமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—௬௪௬.

பதினேழாவது

## மாவலிமூவடிமண்ணளித்தவத்தியாயம்.

அந்தகாசுரன்கடவுளாயபி
னெந்தையகுலத்திறைவர்யாரென
முந்தைவாசவன்முனிவன்கேட்டலும்
பைந்துழாய்முடிப்பரமனோதுவான். (௧)

பீனமற்புயப்பிரகலாதனு
மானவெற்றிவேல்மன்னவன்றரும்
வேனல்வேணிகாவில்விரோசனன்
றானவர்க்கெலாந்தலைவனாயினான். (௨)

எறுழ்வலிப்பகட்டிந்திரன்றனைத்
திறைகவர்ந்துவெஞ்செறுநர்கைதொழ
முறையின்மிக்கபேருலகமூன்றுநல
லறனிழுக்குறாதரசுசெய்யுநாள். (௩)

மராமரங்களேழுருவவாங்குவிற்
பராவருமபுகழ்ப்பரமனேவலிற்
றராதலந்தொழுஞ்சனற்குமாரன்வில்
விரோசனன்றனதருகுமேவினான். (௪)

வந்தமாதவற்றொழுதுவான்சிறப்
பந்தமில்லனவருளிநலகுரு
வெந்தைவந்தவாறென்கொலென்னலு
முந்தைமாதவன்மொழிதன்மேயினான். (௫)

அரியவெந்திறலவுணர்தம்மிலித்
தருமசிந்தையானாயதன்மையாற்
கருணையாளினைக்காணவந்தனன்
மருவலார்தொழுமான்வேலினாய். (௬)

தருமம்யாவினுந்தலைமையாகிய
வரியஞானமின்றருளுவாயெனக்
கருவினெய்துறுமுத்திகைதருந்
தெருள்செய்நுண்பொருடெளியவோதினன். (எ)

சனற்குமாரனன்மொழியிற்றனெனு
மனத்தையாதியாமலமிறந்துயி
ரனைத்துமாகிவேறற்றுநின்றிடு
முனிக்குழாந்தொழுமுத்தனுயினன். (அ)

மாவலிப்பெயர்மைந்தன்மாநிலங்
காவல்செய்கென்க்கதிர்செய்மாமுடி
யோவில்பின்பொடுஞ்சூட்டியுண்மையான்
றுவில்மாதவத்தலைமையெய்தினன். (கூ)

தவறில்கேள்வியாஃறுமமார்பினன்
கவனவெம்பரிக்காலைமாவலி
யவுணர்தங்குலந்தழையவாழிசூழ்
புவனம்யாவையும்புரவுபூண்டனன். (க0)

அன்னகாலையிலவுணர்சூழ்வரப்
பொன்னகர்க்கிறைபோரினேற்றலுங்
கன்னவின்றதோளவுணர்காவலன்
வென்னிடத்திறல்வில்வணக்கினன். (கக)

இந்திராணிதன்னிழைகொள்வெம்முலை
மந்தராசலம்பொருதமார்பின
னெந்துவென்கொடுத்தோடிநோன்மைசா
லுந்திபூத்துளானுலகமெய்தினன். (க2)

எய்திமாவலியிடரிழைத்திடுஞ்
செய்தியாவையுஞ்செப்புமேல்வையிற்
பையராவணைப்பரமனைப்பணிந்
தையநுண்ணிடையதிதிகூறுவாள். (கங)

வெந்திறற்படைத்தகுவர்வேரொடுஞ்
சிந்திமாயவெஞ்செருவிழைத்திடப்
பைந்துழாய்நறும்படலைமார்பவென்
மைந்தனைகநீவருகென்றேதினள். (கச)

மைந்தனைக்யாம்வருதுமன்னைநீ
சிந்தைசெய்திடேல்செல்கென்றேதிமற்
றிந்திரன்றனைவெருவல்நீயென
வந்தில்நல்விடையருளினனரோ. (கரு)

வேறு.

சால்புறுதன்னகர்சார்ந்தபின்றவங்
கோலியகாசிபனருளின்கொள்கையால்
மாலினைத்தரித்தலின்மடந்தையவ்வயி
றுலிலையென்பதற்கையமில்லையே. (௧௬)

அரிமதர்நெடுங்கணாளதிதியன்பொடுங்
கரியமைம்முகில்செழுங்கமலம்பூத்தன
திருமறுமார்பனைச்சிறந்தநாளினன்
மருவலர்வெறுக்கொளவயிறுவாய்த்தனள். (௧௭)

ஆடினருவகையாலமரரச்சமுற்
றோடினரவுணர்களும்பர்நாயகன்
பாடினனருமறைகணவர்பாயலி
னூடியமகளிருமுவந்துபுல்லினார். (௧௮)

விண்ணவர்சாரணரியக்கர்விஞ்சைய
ரண்ணலங்கமலவீட்டுறையுமந்தண
னண்ணியகாசிபன்மனையிறைதனை
யெண்ணருந்துதிகளாலேத்தினாரோ. (௧௯)

நறவுகொப்புளித்தலர்நளினகாதலன்
பிறையெனவளர்ந்திடுநாளிற்பெட்பொடு
மறைபயில்காசிபனென்னுமாதவன்
முறையினின்முப்புரிநூலுஞ்சாத்தினான். (௨௰)

கரியபூந்திங்களிற்கதிரொறித்தொளிர்
திருமருமார்பினன்றிருந்துகேள்வியோர்
பரவுறமேம்படும்பரத்துவாசன்பா
லருமறைமுதலியவனைத்துமோதினான். (௨௧)

புள்ளிடைத்தட்பமுன்பொருந்தியேற்பினு
முள்ளவைமறுத்திடாதுதவுகின்றதோர்
வள்ளன்மைபூண்டருமகங்களாற்றினான்
றெள்ளிதின்மாவலியென்னுஞ்செல்வனே. (௨௨)

பாவவேரறுத்திடும்பரத்துவாசன
தேவலினுலகெலாமீன்றவெம்பிரான்
மூவடிமண்விழைந்திரப்பமொய்கழன்
மாவலிமகம்புரிசாலைமன்னினான். (௨௩)

தாமரைக்கண்ணினன்சடிலன்றண்டினன்
வாமனவுருவினன்வந்துதோன்றிய
பூமகள்கொழுநனைப்புகழ்ந்துதானவர்
கோமகன்வந்ததென்கூறுவாயென்றான். (௨௪)

என்னலுமகிழ்சிறந்தெனதுதாளினுன்
மன்னவமூவடிமண்வழங்கெனுப்
பொன்னவிர்கரகநீரோடும்பொற்புறழ்
கன்னவிறேளினுன்களிப்பினல்கினுன். (உரு

நண்ணுபொற்றுகளெனநாகர்நாட்டொடு
மண்ணகம்பொதிந்ததோர்பதமற்றோர்பதம்
விண்ணகங்கடந்துபோய்விரிஞ்சனுடீஇ
யொண்ணிறவண்டமுமுடையநீண்டதே. (உசு

செங்கண்மால்மலர்ப்புதஞ்சென்றமோழையிற்
றுங்கவண்டத்தினைச்சூழ்ந்தநீள்கடற்
பொங்கவீழ்ந்தொழுகியபுனலையன்றுகொல்
கங்கையென்றின்னமுங்கழறுகின்றதே. (உஎ

இறையவனற்புதவியற்கைநண்ணுறு
மறைபயின்மாவலிவணங்கியேத்தலும்
விறல்கெழுவானவர்துதிப்பமீட்டுமக்
குறளுருவாயினன்கொண்டல்மேனியான். (உஅ

மாவலிவாண்முகநோக்கிமாயவ
னேவறுநான்முகன்பகலொடுங்குநாட்
சேவடிதருவலவ்வளவுஞ்சீர்கெழு
தாவில்பாதலத்தினிற்சார்கென்றோதினுன். (உகூ

திருத்தயலுலகமோர்மூன்றுஞ்செவ்வனே
யருத்தியினிந்திரற்கன்பினேடளித்
திருக்கினுன்மறையவரேத்திவாழ்த்துற
மருக்கமழ்துளவினுன்மறைந்துபோயினுன். (௩0

கோவெடுத்தருந்தியகுருதிவேலுடை
மாவலிபாதலத்தெய்திவார்சடைத்
தேவினதடிமலர்சிந்தைசெய்திருந்
தோவறுந்தவத்தினுக்கொருவனுயினுன். (௩க

மாவலிமூவடிமண்ணளித்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கூஎஎ.

பதினெட்டாவது

## வாணுசூரன்சாரூபமடைந்தவத்தியாயம்.

என்னுமொழியவிவன்மகனும்வாணன்கதையுங்காசிபன்றன்
மன்னுமற்றைமனைவியர்தம்மைந்தர்திறனும்புகலென்னப்
பொன்னுடளிக்கும்புத்தேளும்பொருவின்மகதியாழ்முனியுஞ்
சென்னிதாழ்த்துவினவுதலுந்திருமாலருளினுசெய்வான்.

கொலைசூழ்வடிவேல்மாவலிதன்குமரரொருநூற்றுவர்தம்மிற்
றலைமைபூண்டமுதன்மைந்தன்றறுகண்வாணனெனுந்தக்கோ
னுலகமுழுதுந்தனித்திகிரியுருட்டிச்செங்கோலினிதோச்சி
மலையின்சிறகர்விழவெறிந்தவலியோனரசுமாற்றினான். (௨)

பொன்னந்தவிசினரசிருக்கையிழந்துகயிலைப்பொருப்பெய்திப்
பின்னற்றிரைதாழ்கங்கைமுடிப்பெம்மான்பாதம்பணிந்தேத்தி
மின்னுங்கதிர்வேற்றிறல்வாணன்விண்ணாடனைத்துமெரியூட்டி[ன்
யென்னதாணைவிலக்கினனென்றியம்பவிறையோனிவைசெய்வா

கொங்குகமழநறவுயிர்க்குங்குழங்கன்மாலைநறுங்கூந்தன்
மங்கைபாகனொருகணையால்வாணனகரந்தீமடுப்பப்
பொங்குமுவகையலதுள்ளம்புலம்புறாதுதினம்பழிச்சித் [தான்
தங்கண்மரபினவுணர்தொழுமிலிங்கந்தலைமேற் கொண்டெழுந்

அவுணர்பெருமானுளம்பிணித்தவன்பின்வீக்கந்தனைநோக்கி
யுவகைகூர்ந்துமற்றவன்றன்னுடலந்தடவந்தருள்பூத்து
நவையில்கணங்களனைத்தினுக்குநாதனாகவரமீய்ந்தான்
றவளநீற்றினொளிபழுத்தவெண்டோண்முக்கட்டனிமுதலே. ()

தேன்றோய்த்தெடுத்தகனிப்பவளமனையசெவ்வாய்த்திதிபயந்த, வூன்றோய்த்தெடுத்தவேலவுணர்காதையுரைத்தோமிதுமிற்கச், சான்றோர்புகழுங்காசிபன்றன்மனையாட்டியரிற்றனுவென்னும், வான்றோய்மருங்கின்முதன்மாதர்மைந்தர்தம்மைவகுத்துரைப்பாம். (௬)

ஆரஞ்சுமந்தமுலைமன்றற்றனுவின்மைந்தரயில்வேற்கைத்
தாரன்கபிலன்சொற்பானுத்தழல்வெஞ்சுடர்வேல்விடபருவாய்
போரின்வெருவாச்சம்பரன் வெம்புலிப்போத்தன்னசங்கரனெ
றேருந்திறலோரோராறுவருளர்மற்றவர்சீருரைப்பரிதே. [ன்

அரசுவிழுங்கிவாய்காய்ந்தவயில்வேனெடுங்கண்பணைத்தோட்.
சுரசைபுதல்வர்பகுறலையசற்பர்பலர்வீழ்சுரும்பூதர்
விரைசெய்மலர்ப்பைந்தருநீழல்விண்ணோர்மகிழமேதக்க
திருவீற்றிருக்குமாநகரிற்சிறப்பினோடுந்திரிந்திடுவார். (௮)

அழகஞ்சுமக்கலாற்றுமலலறுமருங்குலரிட்டையெனுங், குழைகொன்றொளிரும்பசுநெடுந்தோட் கதிர்வேற்கண்ணியருள் மைந்தர், மழவெங்கதிருஞ்செவிமழுங்கவயங்குமொளிகொப்புளித்தலரு, மிழைசேர்தடந்தோட்கந்திருவரீரைஞ்ஞூற்றின்மேலுளரால். (௯)

கடைந்தமணிச்செப்பெனப்பணைத்த கதிர்மென்முலைக்கத்துருவென்னு, மடந்தையனந்தன்முதனாகம்வயிறுவாய்த்தாளாங்கவைகள், துடர்ந்துபுகல்காப்பியக்கவிகளின்னுமுரைப்பத்

தொலையாத, மடங்காச்செல்வங்கடந்தோங்கியுயர்பாதலத்தின்
வைகியவே. (க0)

தாமச்செப்பினடிபரந்ததரளமுலைத்தாம்பிரையென்பாள்
காமர்க்கிளியைமென்பருந்தைக்கங்குற்றிரியும்பசாசினத்தை
தூமத்தழற்கட்சிறைக்கழுகைத்தோகைமயிலையோதிமத்தை
யேமம்பயக்குங்காசிபன்றனருளாலினிதினீன்றனளால். (கக)

பங்கப்பழனத்திடைப்பிறவாப்பதுமமலரி னெழில்கவர்ந்
து, கொங்குகமழுமதிமுகத்துச்சுரபியென்னுங் குவிமுலையா,
ளங்கணுலகமினிதேத்துமாணினொடுமழல்பொருவுஞ், செங்க
ட்கயவாய்மோட்டெருமையனைத்துஞ்சிறப்பினீன்றனளால். ()

வெல்வேற்றடங்கண்ணிராவதியென்றுரைக்கும்வேய்த்தோ
ட்கொடியன்னாள், புல்லுமரலும்பூங்கொடியுமானும்பொலிவி
னினிதுயிர்த்தாள், முல்லைக்கற்பினெதிரில்லாக்கிரீடையென்னு
மொய்குழலாள், மல்லிற்பொலிதோளியக்கர்தமையினிதின்வயி
றுவாய்த்தனளால். (கங)

கனியுமமுதுஞ்செழுந்தேனுங்கலந்தாலன்னவந்தீஞ்சொ
ன், முனியென்றுரைப்பாள்கோங்கரும்பின் முகிழ்த்துத்தரளவ
டந்தாங்கிப், பனிதோய்விசும்புகுடிவாங்கப்பணைத்துவீங்குகொ
ம்மைமுலை, யனமென்னடையவரம்பையரையமுதமுயிர்த்தா
லெனவுயிர்த்தாள். (கச)

குனிவார்புருவக்குரோதவசைகொடியவரக்கர்தமைப்பயந்தாள்
வினதையருணனொடுங்கலுழற்பயந்தாளோங்குவிறன்முக்கட்
கனியைப்போற்றியவருணனாற்கதிரோற்கருணன்சாரதியாய்த்
தனிசென்றனன்வெங்கலுழனுமாலூர்தியாகிச்சார்ந்தனனால். ()

பொருவற்றொளிருங்காசிபன்றன்புதல்வர்செய்தியிவைதிங்கட்
கிருபத்தேழுமனைவியருமோரோர்மகவையீன்றனரா
லருவப்பொருளைத்தனியுணருமரிட்டநேமிபதினறுவ
குருவிற்கநங்கனிகளொன்னுமைந்தர்தம்மையினிதுயிர்த்தான். ()

மின்போற்புதல்வர்நால்வர்தமைவிளங்கும்வெகுபுத்திரனீன்றா
ன்பார்மைந்தர்நால்வர்தமையருள்சேரங்கிராவீன்றா [வையுந்
னின்பம்பயக்குங்கிரீச்சுவப்பேர் முனிவன்றெய்வப்படையெ
தன்பேருலகமுழுதேத்தத்தவஞ்செய்தினிதினீன்றனனால். ()

மீட்டுமுயர்காசிபமுனிவன்றவங்களாற்றிவின்மழவினொடுந்
தாட்டாமரைத்தார்வர்ச்சனையுஞ்சிதன்றனையுந்தானுயிர்த்தான்
கோட்டமில்லாவர்சசமுனிகுலவுஞ்சீர்த்தியிப்பியனை
நாடடங்களிப்பயித்துருவன்றன்னையினிதினல்கினன். (கஅ)

பொருவில்சீர்த்திபிப்பியனும்புகலற்கரியரிப்பியரா
முருவமைந்தர்தமைப்பயந்தானுலவாக்கேள்விநயித்துருவன்
மருவுஞ்சவனர்மகட்புணர்ந்துமறைதேர்குண்டபாயியரை
யரிதிற்பயந்தான்றேவலனைக்கருத்தையீன்றுளனவறைந்தான்

வாணசூரன்சாரூபமடைந்தவத்தியாயமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௬௯௬.

---

பத்தொன்பதாவது

## புலத்தியன்மரபுரைத்தவத்தியாயம்.

கருணைப்பெருங்கடலாங்காசிபன்மாமைந்தர்கறைதீரமரபனைத்துங்கட்டுரைத்தாய்மற்றை, யருள்சேர்புலத்தியன்றன்மைந்தர்மரபோதென்றந்திந்தொடைமகதியாழ்முனியுஞ்செய்ய, மருவூற்றிருந்தொழுகுபைந்தருவினிழல்வாணோர்பணிந்தேத்தும் வாசவனுங்கேட்பத், திருவீற்றிருந்தரசுசெய்யுமணிமார்பிற்செங்கணெடுமாயன்செப்பிடுவனன்றே. (௧)

திசைதிரிந்ததொல்பெருஞ்சீர்த்திரணவிந்துப்பயந்தசேயிழையையருந்தவத்துப்புலத்தியன்றீவேட்டு, வசையறுசீர்விச்சிரவாவென்னுமறைமுனியைமகிழ்வினளித்தனளவனும்வாண்மிளிருந்தடங்க,ணிசைபெறுபுட்போத்கடையைக்காலையைக்கேகசியையெழிற்றேவவன்னினியையினியமணஞ்செய்தா, னசையுறுமற்றவர்தம்மிலமுதனையதீஞ்சொலத்தேவவன்னினியாங்களகேசற்பயந்தாள். (௨)

கிடைபொருவும்பவளவிதழ்க்கேகசியென்றுரைப்பாள்கிளர் திசைகளெட்டினையும்வென்றவிராவணனை, யடல்புனையுந்திற்ற கும்பகருணனை வீடணனையம்பலைக்கும்வரி நெடுங்கட்சூர்ப்பனகைதனையு, முடல்சினத்தவிண்ணவர்கள்வெருவவினிதீன்றுரைத்திடுபுட்போத்கடைவெங்கரனைமகோதரனை, மிடல்கெழுமாரீசனைப்பிரகத்தன்றன்னைவிளம்பியகும்பனசியைவிழைவினுயிர்த்தனளால். (௩)

தேனுருஞ்சுருளோதிக்காலையெனுமடந்தைத்திரிசிராத்தூடணன்வித்தியுச்சிவுகன்றன்னை,யானதபேரன்பினீன்றனள்மெய்த்தவத்தினருமறைதேர்புலகமுனிவிலங்கினம்பேய்பூதங், காணருஞ்செம்மணிச்சூட்டரவினங்களீன்றுன்கருதரும் வைவச்சுதமன்மந்திரத்திற்கிருதி, யூன்வாடநோற்றதலாண்மைந்தனையீன்றிலன்மற்றுவப்போடுமரீசியுயர்காசிபனையுயிர்த்தான். (௪)

பிருகுமுனிபார்க்கவனையீன்றனனத்திரிப்பேர்ப்பெரியோனுமுயர்ப்ரதிப்பிரபர்மூவராயாங், கருளினளித்தனன்றக்கனரு

ளியவச்சுவனாயகம்பிடம்பார்த்தேகுகெனநாரதனேவுதலால், விரிபுவனமனைத்தினும்போய்வீய்ந்தனனாதலினால் விளரியாழ்முனிவரனைவிளம்பருஞ்சீர்த்தக்கன், பொருவருநன்மகவில்லாதிருத்தியெனச்சாபம்புகன்றனன்மற்றங்கவனும்புதல்வரிலாதொழிந்தான். (௫)

வான்றவத்தால்வசிட்டமுனிக்கருந்ததிசத்தியனை வயிறுவாய்த்தவஞ்சத்திபராசரனையீன்று, னன்றமறைப்பராசனும்வியாதனையீன்றனன்மற்றங்கவனுஞ்சுகன்றன்னையளித்தனனாலவனுந், தோன்றுபுகழ்க்கிட்டிணன்பூதிசிரவாச்சம்புத்தோமில்கவுரவன்பிரபுவெனுமைந்தர்தமையுஞ், சான்றவருங்கற்புடையகீர்த்திமதியென்னுந்தரளநகைமயிலினையுமளித்தன னென்றுரைத்தான். (௬)

புலத்தியன்மரபுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௭0௨.

இருபதாவது

## சூரியன்மரபுரைத்தவத்தியாயம்.

முனிவரர்தம்மரபனைத்தும்வழாதுகேட்டேமூசியளிபாடுந்தாடமுகைவாய்விண்டு, பனிமலர்த்தாமரைமலர்க்கரங்கணீட்டுமபண்ணவன்றன்மரபனைத்தும்பகர்தியென்னக், கனிபடுந்தீந்தொடைமகதியாழ்முனியுமகல்வான்கற்பக நாட்டரசனுமக்கடவுளருங்கேட்ப, புனைதுளவந்துயல்வருதோட்கமலச்செங்கட்பூவைமேனியனாதனைப்புகழுமாதோ. (௧)

வேறு.

அருமறைநான்குமங்கமோராறுமறத்தொடுமினிதிருந்தாலும், பொருவருஞ்செந்நெறிக்காசிபனென்னும்புரையறுமுனிவரன்மைந்தன், விரிதிரையுடுத்தவுலகமோரேழும்விழுங்கிருட்பிழம்பசித்தொளிருமெரிசுடர்க்கற்றையேழ்பரித்தடந்தேர்நடவிடுமிரவியஞ்செல்வன். (௨)

அரம்பொருதுருந்தபொற்பிதிரன்னவவிர்சுணங்கணிந்தெழில்வாய்ந்து, கரும்புகைசெய்தபசிளங்குரும்பைக்கதிர்முலைதநுகுசங்கங்கை, முருந்தெழில்கவற்றுநகைவிருந்தருந்திமொய்க்கதிர்பாருந்திநன்களித்த, திருந்துசீர்மைந்தன்றெவ்வடுசுடர்வேற்றிறல்கொள்வைவச்சுதனென்பார். (௩)

எழுதுவாட்டடங்கணின்னிளமுறுவலபிராக்கினியிருட்குழம்பெறியு, மழகதிர்ப்பருதிவேந்தனைப்புணர்ந்தாங்களித்திடுமக்கள்வாளெயிற்று, முழுவலித்திண்டோள்யமனியுமவெள்வேலேந்திளவந்தனுமுதிராக், கழையுறழ்பசுந்தோள்யமுனையென்றுரைக்குநகதிர்முலைக்கன்னியுமன்றே. (௪)

கவின்குழைத்தெழுதுமோவமுமருளுங்கரும்புசாத்தியபசு
ங்கழைத்தோட், குவிந்துபொற்சுணங்காரிளமுலைப்பிரபைகுழு
ந்துளிப்பனிகெடவிமைக்குஞ், சிவந்தவெங்கதிர்காலனையவெம்
பருதிச்செல்வனதிருநலமுள்ளத், துவந்தனளாகியளித்தருள்
மைந்தனெளிறுவேலுடைப்பிரபாதன். (௫).

சிறுபுறந்தாழ்ந்தகருநெறிக்கூந்தற்றீங்கரும்பனுக்கியவின்
சொற், பிறைநுதற்சாயையன்னவர்தமக்குப்பெற்றருண்மக்கள்
சாவனியா, மறைகழல்மனுவெமைந்தனுமிணையிலழகுகண்படுக்
கும்வேய்த்தடந்தோள்,நறுமலர்க்கூந்தற்றபந்தியுநளினத்திருநி
கர்நலங்கிளருசையும். (௬)

கடல்திரைத்துடித்தநெடுநிலமுழுதுங்களைகளைத்தனத
டிப்படுத்து, மடுதிறல்வைவச்சுதன்றருமைந்தராடல்வேலிக்கு
வாகுவுமந், தொடிபுனைதடங்கைதலையணையாகச்சுரும்புலாவிரி
ந்ததாரரச, ரிடுதிறைகொணர்ந்துதுயில்மணிமுன்றிலினனென
வுரைக்கும்வேந்தனுமே. (௭)

நெய்மிதிகவளந்தெவிட்டிநின்றடர்க்குநிழல்சுழிதறுகண்மா
ல்யானை, பெய்முகிலென்னக்கொடைக்கடனிறுக்குமிக்குவாகு
ப்பெயர்ப்பெரியோ,னையசெங்கமலமலரிறைக்கங்குன்முகத்தினி
லரனடியேத்தி, வெய்யவன்குலத்துவிளக்கெனப்பெற்றவிடலை
வேல்விகுக்கியென்றுரைப்பார். (௮)

கொழுநிணத்தடிதின்றுதிரம்வாய்மடுக்குங்கோதைவேல்வி
குக்கியென்றுரைக்கு, மழையுறழ்தடக்கைமன்னவன்றிங்கள்வ
ரத்தின்மதுமலர்தூவிக், கரிமதஞ்செருக்கிக்கண்படைபெரு
தகளிற்றுரிபோர்த்தவன்பாதம, விழைவொடும்போற்றியளித்
தசெய்க்குத்தனென்றிடும்விறலுடைவேந்தன். (௯)

பளிங்குபோழ்ந்தறுத்தபத்திமண்டபத்திற்பருஉச்சுடர்ம
ணிக்கடைப்புறத்தி, னளந்தறிவரியவிடுதிறைபோடுமாசுகண்டி
யின்மணிமுன்றிற், றுளங்கலில்சீர்த்தியாடல்வேற்குத்தன்மைந்
தன்விற்சுயோதனனென்னும், விளிம்புமுத்தெறிந்துகதிர்சொரி
ந்தொழுகுமணிமுடிவேந்தர்கள்வேந்தன். (௧௦)

சிலைபயின்றகன்றதிருவளர்தடந்தோட்சுயோதனனளித்த
ருள்சிறுவன், கலிபுறந்துரந்துமாநிலமுழுதுங்களைகளைக்கா
க்குமப்பிருக,வுலகமீக்கூறும்பெரும்புகழனன்றேனுயிர்நிகர்சிறு
வன்விச்சுவக, னலகறுவன்மையாங்கவன்சிறுவனடையலர்பா
ழமத்திரகன். (௧௧)

தண்ணறுங்கடுக்கைத்தாமவருதடந்தோட்டானுவைமலர
விருற்பழிச்சி, மண்ணகம்புரந்துமாலைவெண்கவிகையாத்திரகன்ற

ருமைந்த, னென்னலாமவுலிவாளமரழுவத்திட்டிவெண்கரு
ங்கேய்ந்த,வண்ணல்மால்யானைத்திறல்கெழுதடந்தோளடலுவ
ஞச்சுவனென்பார். (க௨)

திசைமுகங்கவிக்குமாலைதாழுவவுத்திங் களங்கவிகைநன்
னீழல், வசையறுமுலகமுழுவதும்புரக்குமாங்கவனளித்தருண்
மைந்த, னசையுணர்க்கடையாநன்பெருவாயினலங்கொளச்சு
வத்தியென்றுரைப்போ, னிசையுறுமன்னனளித்தசேய்தன
னைப்பிருகதச்சுவனெனவுரைப்பார். (க௩)

இருநிலமளக்குமொருதனிச்செங்கோலெறும்வலிமுழவு
றழ்தடந்தோட், பிருகதச்சுவன்பெட்புடைமைந்தனியற்றிரிடா
ச்சுவனவன்சேய், வளாநிரைத்தனையகொடிநெடுமாடக்கடையி
னில்வான்றிறையோடு,மரசுகண்டுயிலுமணிநெடுமுன்றிலப்பிர
மேயனென்றுரைப்பார். (க௪)

தமனியத்தாமந்தாழ்ந்துமின்கொழிக்குந்தடமுலையரிமத
ர்மழைக்கண், ணமையுறுதோளாரநங்கனென்றுரைக்குமழகு
டையப்பிரமேய, னிமிழ்கடலஞாலமேத்திடும்புதல்வனியலரிய
ச்சுவனவன்சேய், கமழலந்துறைசூழ்கங்கைநாடளிக்குங்கலன்
செய்கோட்டக்கி[illegible]திருப்பன். (க௫)

புடைவளர்த்துயர்ந்துவான்றொடுகுடுமிப்போகுயர்மணிம
திற்புரிசைக, குடபுலத்தெழுந்தயதிதவழ்ந்தேறுங்கோனகர்பெ
றுவதற்கிரங்கார், கடைதருமரசரிடப்பெறுதுணங்குமுன்றிலா
ன்மடங்கலேமன்ன, மிடல்கெழுதிரும்பனளித்தருண்மைந்தன்
சம்பவாசுவனெனும்வீரன். (க௬)

குயில்குனிந்திருந்துமாந்தளிர்கோதுங்குழைமுகம்பொதி
மலர்சோலை, வெயினுழைந்தறியாதெயிற்புறஞ்சூழும்வியனக
ரயோத்திநாடளிக்குஞ், செயிரறுசம்பவாச்சுவனென்போன்றி
ங்களங்கண்ணியோன்பாத, மயர்வறவேத்தியளித்தசேயருண
ச்சுவனெனும்வாகைவேற்குருசில். (க௭)

வளர்முலைச்சாந்தமழிந்திடப்புரளுமணிநெடுங்குழையிள
ம்பிடியா, ருளமகிழ்துங்கவாவுமான்றேரிற்சேட்டிளம்பருதி
யினுலவுந், தழையவிழலங்கலுயபல்வருதடந்தோடிறலருணச்சு
வன்றனையன், களிமதநெருக்குங்குருதிதோய்கோட்டுக்களிற்
றுவனச்சுவனுமால். (க௮)

வேர்கிளைத்தெழிக்கும்விரிநிலாத்தவழுமிப்பிவாய்வெடித்
தவெண்முத்த, வார்வடந்திளைக்குமலையுறழ்திணிதோள்மற்றவ
னளித்தருண்மைந்தன், பார்முழுதளித்துப்பொன்னுலகெய்தி
ப்பாய்திரைபுரட்டுவானதிநீ, ரூர்வயப்புரவிக்களிக்குமாந்தாதா
வென்றிடுமொளிறுவேற்குருசில். (க௯)

மணிகிடந்திமைக்குநுண்டுகிற்தோகைமாழைமென்னுக் கியர்விரும்பும், பிணிமுறுக்கவிழுமலங்கல்மாந்தாதாவினிதினி ற்பெற்றருண்மைந்த, ரணிகிளர்பொன்னங்குன்றுறழ்வான்றோ ளம்பரீடன்புருகுச்ச, னிணைபிறரில்லாவேனில்வேள்பொருவு மிலங்கிலைவேல்முசுகுந்தன். (௨௦)

ஆங்கவர்தம்மிலாடகத்தட்ந்தோளம்பரீடன்றருமைந்தன், றூங்குறீக்குடக்காய்மடற்குலைத்தெங்கின் சொரிமதுப்பாளைபூ விரிக்குந், தேங்கமழ்பொழில்சூழுத்தரகுருவிலரசனைத்திறை யிடக்கவர்ந்த, வோங்குநீருவனச்சுவனவன்மைந்தனுலம்பொ ருமுயர்ந்ததோளிரதன். (௨௧)

கைம்முகந்தெடுத்தநெய்மிதிகவளங்களித்தெறிமும்மதக்க ளிற்றின்,வெம்மைவெங்கோடுதாக்கலுமிழிந்துவீழ்தருமரத்தநீ ரொன்னக், கொம்மைவெம்முலைகள்சாடலுமிழிந்தகுங்குமச்சே தகமார்பின், செம்மைசேரிரதனளித்திடும்புதல்வன்றெவ்வடு வேற்கையானரிதன். (௨௨)

வேய்த்தலைதொடுத்ததேனிறாலுடைந்துவீழ்தருபசுநறுவ ளர்த்த, காய்த்துணர்ப்பசியகமுகிக்கொடிவிசும்பிற்கற்பகக்கோட் டினிற்படருஞ், சேய்த்துமீதுயர்ந்தவளமலைநாடன்றிறற்புருகு ச்சனன்மைந்தன், பேய்க்கணஞ்சூழுநெட்டிலைச்சுடர்வேற்றிரி சதேச்சென்றிடும்பெரியோன். (௨௩)

கற்சிறையழித்துக்கரையலைத்தொழுகுஞ்சரையுவுங்கங்கை யுமுடைய,மற்படுதிணிதோட்டிரிசதேசசென்னுமன்னவனினி தருள்புதல்வன், வெற்பகங்கிழியவேற்படைபணித்தவென்றிகூ ர்முருகுறழ்தோற்றத், தெற்படுசுடர்வேலெறுழ்வலித்தடக்கை யேந்தல்சம்பூதியென்றுரைப்போன். (௨௪)

பஞ்சிசூழ்கிடந்தபையரவல்குற்பாவையர்விரும்புசம்பூதி, நஞ்சணிமிடற்றுசசாமிதன்வரத்தாலளித்தருணமவேற்குருசி, லஞ்சிறையறுகாலேழிசைப்பாடலளிவிருந்தூட்டமிக்குடைந் த, மஞ்சரிதவழும்பகட்டெழின்மார்பன்வாகைவேலுழவன்மா ல்விருத்தன். (௨௫)

அருவரைச்சாந்துமாரமுமகிலுமருவிகொண்டிறங்குநீள் பொருப்பன், முருகுறழ்தோற்றத்தெழில்கொண்மால்விருத்த னளித்தருண்மூரிவேல்மைந்தன், குரவையிட்டார்கரும்பெருங் குரற்பேழ்வாய்க்கூன்பிடர்சங்கமுத்துயிர்க்கு,மருதநீள்வேலிய யோத்திநாடளித்துவாழ்பவன்ரண்ணியனென்போன். (௨௬)

மாற்றருஞ்சிறப்பிறுங்கவன்புதல்வன்கொள்ளைநீர்க்குளத் தினில்வயலி, னீற்றுளைந்கலறுகரிமுகப்பேழ்வாயினவளைதவழ்

ந்துமேய்ந்துறங்கும், போற்றரும்வளங்கூர்மருதவைப்புடையாப் கழ்விடதச்சுவனவன்சேய், கூற்றுமெய்பதைப்பக்கோதைவே லுளக்கும்விறலரியசகுவனுமால். (உஎ)

கரும்பறுக்தடைந்தகனைகுரற்சகடுநெற்கதிர்ப்பண்டியுநெ ருங்கி, விரிந்திடம்பெறுதவியனகர்புரக்கும்விறலரியச்சுவன்சி றுவன், பருந்துவிழ்ஞாட்பிற்கூற்றெதிர்ப்படினும்பாயொளிப்ப ருதிவேல்தரியா, விரிந்திடவுடற்றுமசுமனுவென்னுமிசைதிசை யளந்திடும்வேந்தன். (உஅ)

அரக்கிதழ்முளரிப்பொருட்டினிற்செங்காலரசிளவன்னம் வீற்றிருக்குந், திருக்கிளர்மல்லல்வளங்கெழுநாட்டுவசுமனுவளி த்திடுஞ்சிறுவன், முருககிதழ்சசெவ்வாய்முகிழ்முலைமகளிர்மு கத்திணையுவவுவெண்மதியெண், டிசைத்துவண்டறையவாம்பல் வாய்விள்ளுமயோத்தியாளியற்றிரிதனுவாம். (உகூ)

வேறு.

அலங்கிலைவேல்வசுமனுப்புரவிவேள்வியாற்றுழியின்முனி வரரையன்பிணுக்கிப், புலன்களடக்கியதவத்தில்வேள்விதம்மி ற்பொருவில்சந்நியாசத்திற்பொலிந்ததென்னை, துலங்கவுரை த்திடுதிரெனப்பலன்வெஃகாது நோற்றிடுதலருமறையின்றுணி வாமென்ன, வலங்கெழுதோன்மைந்தனுக்குமவுலிசூட்டியுறு தவத்தின்றலைநின்முனுரவுந்தோளான். (௩0)

ஆங்கவனற்றவநோக்கிமலரோனெய்தியாயுளொருநூறளி த்தானமலனன்றே, ஞெங்குநவந்தணைநோககிவியந்துபின்னு மாயுளொருநூறளித்தானெளிசெய்பூணன், பூங்கமலமுகையவி ழ்க்குங்கடவுட்போற்றிப்பொருவறுகாயத்திரியைப்புகன்றுவெ ய்ய, தீங்கதிர்மண்டலத்திருக்குமெண்டோண்முக்கட்டேவின்ம லரடிகீழ்ற்சேர்ந்தானன்றே. (௩க)

அய்யசெங்கமலத்தணங்குறைர்குழலுக்கூட்டியகாழகிற்புகை யுங், குய்வளக்கருணையட்டமென்புகையுங்குரோசமோசைாந்தி னிற்கமழுந், செய்யபொன்மாடமூடுத்தமாநகரந்தினந்தொறு மிரவலர்ககளிக்கும், வையகம்புகழுந்திரிதனுவாவின்மைந்தன் வேற்சூரியவன்னான். (௩௨)

ஆயிரம்பருவாய்முழைந்நகொப்புளிக்குமழல்விடச்சுடி கைவாளரவின், மேயபாரணைந்துமொருகுடைநிழற்றுமிடல்கெ ழுசூரியவன்னான். சேயுயர்பறவைக்குன்றறவெறிந்துதாருகன் கிளையொடுஞ்செகுத்த, பாய்கதிர்நெடுவேல்முருகுறழ்சிற்றப்ப ணைப்புயச்சத்தியாதனனே. (௩௩)

ஆடகமுளரிப்பொருட்டில்வீற்றிருக்குமாமென்முலைத்தி ருமடந்தை, ...டியமந்தாகமெல்லிற்றிருப்பப்பார்பொதுவறத்

கனிபுரக்கு, மோடைமால்யானைச்சத்தியாசூனன்றனுயிர்நிகரொழிலுடைமைந்த, னேடவிழ்நறுந்தார்மன்னவர்போற்றும்டலரிச்சந்திரனென்பான். (௩௪)

பொய்ம்மையும்வெய்யதீமையுமொழித்துப்புலம்புகொண்டினையவெவ்வுலகு, மெய்ம்மையுமறனுநிறுத்திடுஞ்செங்கோல்விறலரிச்சந்திரன்மைந்தன், கைம்மையராகியொன்னலர்மகளிர்கலுழ்ந்தநீர்ப்பெருக்கினெல்வளர்ந்து, செம்முகத்தோங்கச்சினவுவாள்விதிர்க்குமுரோகிதாசுவனெனத்தெரிப்பார். (௩௫)

கருங்கொடிக்கவலைக்கிழங்ககழ்பரப்பிற்கானவர்களிறுகோட்படுக்கும், விரிந்தபல்வளங்கூர்கானகநாடனுரோகிதாச்சுவனருள்விடலை, திருந்தலர்மடவார்பவளவாய்ச்செம்மைசேல்விழிக்கீய்ந்துகட்கருமை, பொருந்துநுண்டுகிலுக்களித்திடச்சிரிக்கும்புலவுவேலுரோகிதனென்பார். (௩௬)

உடைபடுகபோலமதசலக்கலுழியுவட்டெடுத்தொழுகுமால்யானை, பிடியெனமதந்திர்ந்தோடவாள்விதிர்க்குமுரோகிதன்பெற்றவேல்மைந்தன், றடவரைக்குடுமியிறுவரைத்தூங்குந்தண்ணருப்பஃறலையிருவின், விடுகதிர்த்திங்கட்கோடுகீண்டுழக்கும்வியன்மலைநாடன்வேற்றுந்தன். (௩௭)

திரைபொருபரவையனைத்தும்வெண்ணிறத்திற்சிறந்ததீம்பாற்கடலதனைப், பொருவுறவிளர்ப்பப்புகழ்நிலாவிரிக்கும்புண்செய்வேற்றுந்துவின்மைந்த, னருவரைத்தரளமருவிகொண்டிறங்குமசைநடைத்தென்றலம்பொருப்பும், விரிகதிர்ப்பொன்னங்குடுமிமால்வரையுமுடையனும்விற்றிறல்விசயன். (௩௮)

மருவலர்மனைவாழ்மங்கையர்கழுத்தின் மங்கலநாணினைத்தாயர், வெருவொடுநோக்கிநாளையுங்காணவிதிக்கெனத்தெய்வதம்பரவ, வெரியுமிழ்கதிர்வாள்கைத்தலத்தெடுக்குமெறுழ்வலிவிசயன்மைந்தன், கருதலர்வயிற்றிற்றீப்படவிழிக்குங்கல்செய்தோட்டிறல்கொள்காருகனே. (௩௯)

பொருசமத்தெதிர்ந்தோருயிர்குடித்தல்லால்மீள்கலாக்காருகன்புதல்வன், விருகன்மற்றவன்சேய்கழனியிற்செந்நெல்வியப்பொடும்வாழ்கெனவித்துங், கருநெடுந்தடங்கட்செய்யவாய்வெண்பற்கடைசியர்குரவையார்ப்பொழியா, மருதநீர்வேலிவளங்கெழுநாட்டுமன்னவன்வாகுவென்றுரைப்போன். (௪0)

கொழுமுகந்தாக்கவயிறுநெக்குடைந்துகுழைகருஞ்சேற்றகமுழக்கிக், கழனியிற்குடவாய்ச்சங்கமுத்துயிர்க்குங்கங்கைநீர்நாடன்வில்வாகு, விழைவுறுமைந்தனுடவமோறும்பெண்மையாயையாவமேக்குயர்வுற், றழகுவிற்றிருந்துநாடொறுஞ்சிறக்குமம்பொன்வெற்பனையதோட்சகரன். (௪௧)

வீங்குபொற்றடந்தோட்சகரனுக்கெழில்கூர்பிரபையீன்றி டுவிறற்புதல்வர், தேங்குநீர்ப்பௌவமகழ்ந்திடுந்திறலாரறுப தினுயிரர்சிறந்த, வாங்கவன்றனக்குவேல்புரைதடங்கணம்பகட் டிளமுலைத்துவர்வாய்ப், பூங்குழற்பானுவதியருள்சிறுவன்புகழ் சமஞ்சதனெனப்புகல்வார். (௬௨)

அடங்கலர்நகரந்தீய்க்குணுவருத்துமடலயிற்சமஞ்சதன்பு தல்வன், குடம்படுசெருத்தல்பால்சுரந்தொழுகக்குண்டுநீருழக் கிடுமெருமை, தடந்தொறுங்கழுநீர்மென்முகைமேய்ந்துதாம மைக்கொட்டைவாய்குதட்டும், படர்ந்தநீர்நாட்டுமன்னவர்வண ங்கும்பருதிவேலஞ்சுமானுமால். (௬௩)

அஞ்சுமான்புதல்வனேக்கினுங்குழையுமணிச்சமென்போ தின்வில்லெறிந்த, பஞ்சினில்மிதிப்பின்முன்னையிற்சிவக்கும்பா டகச்சீறடிமகளிர், நெஞ்சுகூட்டுண்ணுந்திலீபன்மற்றவன்சேய்க ங்கைநீணிலத்தினிற்கொணர்ந்த, வெஞ்சலில்சீர்த்திப்பகீரத னென்னவுலகெலாமேத்திடுங்குருசில். (௬௪)

வண்சிறைச்சுரும்பர்பேட்டளியோடுமருவியகாமவெம்மய க்கிற், கண்படைபொருந்துமாலைதாழ்புயத்துப்பகீரதன்காதன ன்மைந்தன், விண்டொடர்ந்தோங்குமாலைவெள்ளருவிக்குன்றி னில்வருடைபாய்ந்துழக்குந், தண்புனலுடுத்தகானகநாடன்ருரும வேற்குலுதனென்றுரைப்போன். (௬௫)

ஆங்கவன்புதல்வனுதுலர்க்கூட்டவட்டவெண்சோற்றுமா மலையைத், தீங்கறுவெள்ளிக்குன்றெனவியக்கர்தெருமரும்வள ங்கொணுட்டுறையு, மோங்குசீருலகையளக்குநாபாகன்வன்மக னுடையங்களிற்று, வாங்குவிற்சிந்துதீபன்மற்றவன்சேயடல யுதாயுவாமன்னன். (௬௬)

வரிவளையுறங்குநெடுமணற்குன்றத்தஞ்சிறைச்சேவலோ டுடிக், குருகினங்கமலக்காட்டிடையொளிக்குங்குளிர்புனற்பழ னநாடுடைய, வருவரைத்தடந்தோட்டிறலயுதாயுச்சிறப்புடன ளித்திடும்புதல்வ, னிருதுவனனப்பேர்ப்புரவலனவன்சேய்சுதா சனென்றெடுத்தியம்புவரால். (௬௭)

அன்னவனளித்தவிறல்கெழுபுதல்வனுடசப்பசியபொற்பி தினின், மின்னவிர்திதலையணிந்துகண்ணுருத்தவெம்முலைமதய ந்திகணவன், கன்னவில்திரடோண்மித்திரசகன்மற்றவன்மகன் கனைகதிரொறிகரும், பன்மணிச்சூட்டுவாளராநெற்றிப்பார்முழு தேந்துமச்சுமகன். (௬௮)

மற்றவன்புதல்வனுலகெலாம்வென்றநகுலன்மற்றவன்மக னெதிர்ந்த, கொற்றவர்மவுலிபூழிபடதொழியக்குளாகழற்ருளி

னும்பிடறும், வெற்றிவேற்றடக்கைத்தயரதனவன்சேய்வரிதிரை
க்கடல்முகட்டெழுந்த, வொற்றையாழியந்தேர்ப்பண்ணவனெ
ன்னவேவோசைபோமதிரதனுமால். (௪௯)

அதிரதன்புதல்வன்பருமணியிமைக்குமாடகக்கொடிமதிற்
குடுமி, மதியகடுரிஞ்சும்வளநகரரசர்மணிமுடிதேய்த்தபொற்க
ழற்கால், நறைமலர்ப்பைந்தார்புனையும்விச்சுவகனுங்கவனளித்
திடுந்தனைய, னெதிரொறிகட்டுவாங்கனென்றுரைக்குமெறுழ்வ
லித்தோளுடையுரவோன். (௫0)

கரும்பெனத்திரண்டுகவின்வளர்மென்றோட்கன்னியர்கண்
ணொடுநெருங்கிச், சுரும்புவிழ்மலர்த்தாராங்கவன்புதல்வன்றீர்
க்கவாகுபெயர்த்தோன்றல்,பொருந்தலர்க்கடந்தவாங்கவன்பு
தல்வன்புரந்தரன்வெஞ்சமத்தருசி, யிரிந்துவென்கொடுப்பவா
ளமர்கடந்தயிரகுவென்றுரைத்திடுமேந்தல். (௫௧)

வேறு.

அனையகதிர்வேலுறுவன்றன்றனைமன்னரர்மணிமுடியுரி
ஞ்சியலங்குசோதிப், புனைகழற்கான்றழும்பிருந்தவயனென்றே
தும்போர்வேற்கை முனைவன்முகட்புகழ்ப்போற்றி, வினையற
நோற்றினிதருளுமைந்தனைமயவென்வேலாற்றிசைபத்துமவெ
ன்றசீர்த்தி, கனைகடலுமெரியுமாயும்வெண்மைநிற்றுங்கதிர்
மௌலிதயரதனென்றுரைப்பர்மாதோ. (௫௨)

ஆங்கவனும்புதல்வரின்றிமகங்காற்றவரியலம்புபகந்து
ளமேவாவிராமனுதித், திங்கவைந்துதித்திலங்கைமடியமாட்டிச்
சீதையைமீட்டமரர்தொழுந்தேவைதன்னிற், பூங்கடுக்கைவே
ணியற்குக்கோயிலகோவிட்பூசனைசெய் தயோதிநகர்புரந்துபி
ன்னும், மோங்குமொருகுடைநிழலினாருலூற்றோடொருபதினா
யிரம்பருவமுறைக்குகாத்தான். (௫௩)

சூரியன்மரபுரைத்தவத்தியாயமுற்றிற்று.
ஆக திருவிருத்தம்—௭௫௫.

இருபத்தொன்றாவது

## இராமனவதரித்தவத்தியாயம்.

என்றுமொழும்வெண்மதிக்கண்ணியிறைவன்பாதமினிதேத்து
மிராமனியற்சரிதையாவு,மன்றவிரித்துரைத்தியெனமகதிவீணை
வான்முனிபுமயர்குடுமிவானந்தேய்க்குங், குன்றினிருஞ்சிறக
ரிந்தவயிரவொள்வாட் குருசிலுங்கேட்டலுமகிழ்ந்துகுழைவி
னோடுங், கன்றுகுணிலாவிளவின்கனிகள்வீழ்த்துங்காயாம்பூவ
ண்ணனினைகழறுமன்றே. (௧)

விராய்மலர்ப்பூங்குழலிபங்கன்மகிழ்விறைங்கும்வெள்ளிம
லைக்கீழ்கிடந்துவிளரியாடு, மிராவணனுக்காற்றலமென்றிமை

யோர்சித்தரியக்கர்முனிவரர்களெறிதிரைநீராடைத், தராதல
மேழும்புரக்குமரசரோடுஞ்சதுமுகத்தோன் பாற்கடலிற்சார்ந்
துபோற்றக், கராமறியக்கதிர்நேமிபணித்துவேழங்காத்தருளு
ந்திருநெடுமால்கழறலுற்றான். (௨)

வேறு.

வாலிதிற்கேட்டியொன்றென்வடிவமோர்நான்குகூறாய்ச்
சால்வுறுமுலகங்காக்குந்தயரதன்புதல்வராகி
ஞாலமீதுதிப்பநீவிர்நனிமலர்க்கானின்வெற்பிற்
பால்படுகுரங்கோடெண்காய்வருகெனப்பணித்தல்செய்தான்.

பண்ணவரொவருமவ்வாறுதித்தனர்பருதியோட்டிக்
கண்வழுக்குறுசெஞ்சோதிக்கதிர்மணிமுகடுவேய்ந்த
வண்ணலங்குடுமிமாடமுடித்துயரயோத்திவேந்தன்
புண்ணியப்புதல்வரின்றிப்புலம்பொடுமிருந்தானன்றே. (௪)

வெளிதெறிந்தகன்றகேள்விசுமந்திரன்வேந்தைநோக்கி
யொளிறுவேலுரோமபாதன்காத்திடுமுலகம்யாவுந்
துளிமுகில்விளப்பஞானத்துறைபடிகலைக்கோட்டண்ண
லளியுடனெய்தின்வானம்பொழியுமென்றமைச்சர்சொன்னார்.()

அறைதலுமுருவவாட்கணன்னலார்வேந்தனேவ
மறைபயில்முனிபாற்போகிமார்பினிற்கோடுபூத்த
செறிதவமுனிவனொன்னமுனிவனைமயக்கஞ்செய்தாங்
கிறைநகர்தன்னிலுய்ப்பவிரும்புயல்பொழிந்ததன்றே. (௬)

வேந்தர்கோன்மகிழ்ந்துதூயமெய்ந்தவமுனிவன்வேட்பச்
சாந்தையென்றுலகமேத்துந்தன்னுடைப்புதல்விதன்னை
யீய்ந்தனன்முனியுமாங்கணிருந்தனனவனீண்டெய்தி
னாந்தகவுழவனீயுநன்மகப்பெறுதியென்றான். (௭)

எனவுரைத்திடலும்வேந்தனிமைப்பினிலுரோமபாதன்
றனிநகர்க்கெய்தியாங்குத்தவம்புரிகலைக்கோட்டண்ணல்
முனிவனைக்கொணரவன்னோன்பரிமகமுற்றிப்பின்னும்
வினையில்புத்திரகாமேட்டிமேதகவாற்றினானே. (௮)

ஆற்றியதழலிற்றோன்றுமவியினையணங்கனார்க்கு
வீற்றுவீற்றாகநல்கக்கவுசலைவிறல்கொள்வாலி
கூற்றையீன்றனள்கைகேசிகுணப்பெருங்கடலையீன்றாள்
மாற்றிலாவிருவர்தம்மைசுமித்திரைவயிறுவாய்த்தாள். (௯)

இராமன்வேற்பரதன்றூயவிலக்குவனியக்கர்வேந்தர்
பராவுசத்துருக்கனென்னப்பழிப்பறுநாமஞ்சாத்தித்
தராதலமுழுதும்போற்றச்சவுளமேமுதலவாக
விராவுநற்கருமம்யாவும்விழுமிதின்வசிட்டன்செய்தான். (௧௦)

நறைகமழலங்கன்மாலைநம்பியைமுதலமைந்தர்
பிறையெனவளருநாளிற்கவுசிகன்பெட்பினோடு
மறைகழலவணிவேந்தர்நெருங்குபேரவையினெய்தி
யிறையவன்போதந்தேத்தியிருக்கெனவிருந்துசொல்வான். ()

அரக்கர்தீவினையால்வேள்வியாற்றலனிடையூறின்றிப்
புரப்பதற்குன்பாலுற்றேன்புதல்வனையளித்தியென்ன
விரத்தலுமுள்ளமாழ்கித்தயரதனிராமனென்னும்
வரைத்தடந்தோளினானைமுனிபின்போய்வருதியென்றான். (௧௨)

என்னவெஞ்சிலையிராமனிலக்குவனோடும்யார்க்கும்
பன்னருங்கலைகொள்கேள்விப்பழமறைக்கிழவன்பின்போய்க்
கொன்னுனையெயிற்றுப்பேழ்வாய்க்கோளரிவழங்குங்கானின்
மன்னனுமிரண்டுவிஞ்சைமறையொடுமருளினானே. (௧௩)

நெடிபடுகானினேகுநெறியினோர்சாலைநோக்கி
விடலையீதென்கொலென்னக்கவுசிகன்விமலன்முன்னை
மொடிவறுதவஞ்செய்காலையுடற்றியவில்வேளங்க
மடலையினெரித்தநாள்தொட்டநங்களாச்சிரமமென்பார். (௧௪)

என்றவணீங்கமேல்வையோரிருநகரநோக்கிக்
குன்றெனத்திரண்டதோளானிவையெவைகூறுகென்ன
மின்றிகழ்வயிரவாளான்விருத்திராசுரன்றனாவி
பொன்றுதல்செய்தபாவம்போக்கியதலங்களென்றான். (௧௫)

சூர்வளியொழியுங்கானிற்றனைவினினேகுமேல்வை
யாரியன்றேன்றுங்கானம்யாதுநீயறைதியென்னப்
போர்கெழுசுகேசுவேதன்பொன்னடிக்கமலம்போற்றி
வாரிறவீங்குகொங்கைமங்கையையினிதினீன்றான். (௧௬)

ஓடரித்தடங்கட்செவ்வாயொண்ணுதற்பணைகொள்மென்றோட்
டாடகைதன்னைசுந்தற்களிப்பவத்தையானல்லா
ளாடல்மாரீசனோடுஞ்சுவாகுவையருளினீன்றா
ளேடவிழ்நறுந்தார்சுந்தனின்னுயிர்தொலைந்தானன்றே. (௧௭)

தாடகைமைந்தரோடுந்தமிழ்முனிதன்னைப்பற்றப்
பீடுறுதவத்தோன்சீறிப்பிறையெயிற்றரக்கியாகிக்
கோடிவேழத்தினுற்றபலத்தொடுங்கூடுகென்ன
நீடருஞ்சாபம்பெற்றநிசாசரிவனமீதாமால். (௧௮)

ஆங்கவடன்னைபையுவணங்கெனவுளத்திலெண்ணா
றீங்குறும்விரோசனன்றன்சிறுவியைமகவான்கொன்றான்
பாங்குடைவெள்ளிதாயைப்பசுந்துழாய்முகுந்தன்கொன்றா
னீங்கிவைகருதிநீயுமிவளுயிர்செகுத்தியென்றான். (௧௯)

அத்தலைச்செறுனராவியயின்றுவெம்புலவுநாறு
முத்தலையெஃகமேந்திமுகிலெனவுரறியார்த்துப்
பைத்தலைச்சுடிகைநெற்றிப்பார்முதுகுளுக்கவந்தா
டத்துவெங்குருதிப்பேழ்வாய்த்தாடகையென்பாண்மன்னோ.()

ஈங்கிவடன்னைக்கோறியெனமுனியியம்பவையான்
வாங்குவிற்பகழியொன்றாற்றாடகையாவிமாய்த்து
நீங்கலுமோரஞ்ஞூறுவெங்கணைநெறியினல்கி
யாங்கவையுபசந்தானம்புரியருமறையுமீய்ந்தான். (உக)

அவ்வழியகன்றுசெல்லுமருநெறியதனின்மற்றோர்
திவ்வியாசிரமநோக்கியாதிதுசெப்புகென்னப்
பவ்வநீருலகந்தன்னோர்பதத்தினிற்பொதிந்தோன்வைகு
மிவ்விடந்தன்னைச்சித்தாசிரமமென்றிசைப்பரென்றான். (உஉ)

ஆங்குநின்றேகியையனருமகச்சாலையெய்தித்
தீங்கறுமுனிவவேள்விசெய்கெனவியம்பலோடும்
வீங்கிவைகேள்விபோயகவுசிகன்வேள்வியாற்ற
வோங்குமாரீசனேடுஞ்சுவாகுவந்தமரிலுற்றான். (உங)

ஏற்றவர்தம்மில்வெம்போர்சுவாகுவையொரிவாயம்பிற்
கூற்றிறைக்குணவுநல்கிகொடியமாரீசன்றன்னைக்
காற்றின்வெம்பகழியொன்றாற்கடலிடைகவிழ்த்தியாரும்
போற்றருமவேள்விமுற்றப்புரந்தனன்புனைவேலான். (உச)

கோவெடுத்தருந்தும்வைவேற்குமாருக்காசிகூறிப்
பாவடிப்பருமயானைப்பிடிமிசைப்பனைக்கைநீட்டி
மேவருகானம்பாவுங்கடந்துவிவ்விரரோடெங்
காவுசூழ்சோனையாற்றங்கரைமிசையினிதுசென்றான். (உரு)

இவ்விடம்யாவர்தேயமென்றிடவிராமன்கேட்ப
வவ்வியாமவித்தசிந்தையருந்தவன்தெளிந்துசொல்வான் [தன்
றெவ்வருஞ்சுவைக்கும்வைவேற்குசனெனும் திறல்கொள்வேந்
மவ்வலைநகூடதற்செவ்வாய்விதேகாகோன்மகளாவேட்டான். ()

ஆங்கவனுன்குமைந்தர்ப்பெற்றனளவரின்மூத்தோன்
வீங்குதோட்குசனபப்போர்விறல்கெழுவேந்தர்வேந்த
னோங்கெழின்மாடமுற்றுமகோதயமென்னவோதுந்
தீங்கறுநகரங்கோலித்திருவின்வீற்றிருந்தானன்றே. (உஎ)

கதிர்வடிவேற்குசாம்பன்கவுசாம்பிநகரஞ்செய்து
விதிமுறையரசுசெய்தான்தூர்த்தசனுமவேந்தன்
மதியிறோர்வியக்குந்தன்மாரணியமாநகரஞ்செய்தான்
சிதைவறுவசுமாடஞ்சூழ்சொடிசுகிரிவிரசுஞ்செய்தான். (உஅ)

இத்தலம்வசுவின்றேயமஞ்சுவெற்பிடையிற்றோன்று
மத்தலமகததேயமன்னநீண்மலையினின்று
முத்தமுந்துகிரும்வாரியகின்முருடுருட்டிபோடுக்
தத்துநீர்த்தரங்கஞ்சிந்துமாநதிதானென்றுண்டாம். (உகூ)

அன்னமாநதியின்றீர்த்தத்தாடல்வேற்குசனுபற்குக்
கன்னலங்குதலைசெவ்வாய்ககிருதாசியுட்களிப்பினீன்ற
கொன்னுனைவேற்கண்ணூரோர்நூற்றுவர்கொடியினுலகி
வன்னமேகலைகளார்ப்பவண்டுளாமலர்கொய்தாராம். (௩0)

காற்றிறையவரைநோக்கிக்காமனேயுழந்துமாழ்கி
யூற்றுறுமின்பமயாமோர்கூட்டத்தினுறுதியொன்ப
போற்றலுமறுத்தவேற்கட்பூங்கிளியனையதீஞ்சொ
னூற்றுவருடலம்புக்குநுடங்குகூனுக்கினுனே. (௩க)

மங்கையரிதனைத்தந்தைக்கோதலுமனத்தினெண்ணி
பங்கயமடந்தையன்னசோமதைபரிவினேடுந்
துங்கநற்சூலிக்கீன்றபிரமதத்தனுக்குத்தூய
சங்கமுமுழங்கியார்ப்பத்தருமணம்புரிவித்தானும். (௩உ)

பாம்புபைத்தன்னவல்குற்பாவையருடற்கூன்போக்க
காம்பிலிதேயந்தன்னிற்களிப்பொடுபிரமதத்த
னேம்பலினிருந்துவாழுந்தானிவைநிற்கக்குசனும்பின்பு
வாம்பரித்தடந்தேர்மன்னன்மகவினித்தாற்றினுனே. (௩௩)

அருமகமாற்றுமேல்வையாடல்வேற்குசனுங்கொப்பி
பொருவறுமைந்தவொப்பிலபுதல்வனைப்பெறுதிபொன்ன
வரமளித்துடலினேடும்வானநாடுநனிலுற்றான்
கருணைகூர்குசனுபன்சீர்க்காதியையினிதினீன்றான். (௩௪)

ஆங்கவன்கவுசிகப்பேரணங்கொடுமென்னையீன்று
டிங்கில்மற்றவளேதாய்செயிராறுகவுசிகப்பே
வீங்குநீராறுயீண்டுமேவினளென்னவோதி
நீங்கலுங்கங்கையென்னுநெடுநதிதோன்றிற்றன்றே. (௩௫)

வள்ளலன்னதியைநோக்கிவரன்முறைகூறுகென்னத்
தெள்ளிதின்மறைகடேர்ந்தகவுசிகன்செப்பலுற்றுன்
கள்ளவிழ்மலர்மென்கூந்தலுமையினைக்கங்கையோடு
மெள்ளருமிமயவேந்தனினிதினிற்பயந்தானன்றே. (௩௬)

உமையினையயன்மால்காணுதெங்கொளியாகிநின்ற
விமயவிற்குழையவாங்குமீசனுக்கீய்ந்தானிந்த
தமரவெண்டிரைநீர்க்கங்கைபாதலந்தரணியின்னரி
னமரலராலுலகினுள்ளோரமர்திரிபதகையென்பார். (௩எ)

திங்களங்கண்ணிப்புத்தேள்சிறப்பொடுமுலகமீன்ற
மங்கையோடொருநூறுண்டுமருவலுமமரர்யாரு
மிங்கிவையொழிதியென்னவிரப்பவீரியத்தையைய
னங்கியங்கடவுடன்னைத்தரித்தியென்றருளின்விட்டான். (௩௮)

செந்தழற்கடவுண்மெய்யுந்தீய்த்தலிற்றரிக்கலாது
மைந்துடைப்புவியினுய்ப்பமற்றதுபொறுக்கலாற்றா
துந்துநீர்க்கங்கையாற்றினுய்த்தலுங்கங்கையாற்றா
தந்தமில்சரவணத்தினமைவுறவிடுத்ததன்றே. (௩௯)

உலகெலாங்கமலத்தோனோடீன்றசிற்றுதரவல்லி
குலமனையவர்பால்மைந்தர்ப்பெறுகலீரொன்றுகூறி
நலனுறுகடவுளோரைவைதகன்ஞாலந்தன்னைப்
பலர்விழைகணிகைபோலவாழ்கெனப்பகர்ந்துபோனாள். (௪0)

சரவணமதனில்வெய்தாந்தழலுமிழ்வடிவேலேந்து
முருகவேளினிதுதோன்றிமொய்யமர்கடந்தவெற்றி
யெரியுமிழ்தறுகட்பேழ்வாயவுணரையிகலினூறித்
தருநிழலமரர்வைகத்தானையங்காவல்பூண்டான். (௪௧)

ஈங்கிதுகிடக்கக்கங்கைவரன்முறையினிதுகேட்டி
வாங்குவிற்சகரனில்வாழ்மனைவியரிருவர்தம்மிற்
றீங்கெறிபிருகுவென்னுஞ்செய்தவனருளாற்பொன்னங்
கோங்கிளமுலையாள்மற்றோர்குமரனையினிதினீன்றாள். (௪௨)

வேறு.

அறுபதினாயிரமாடல்மைந்தரை
மறுவறமற்றவள்வயிறுவாய்த்தன
ளிறையசமஞ்சதனென்னுமைந்தனைச்
சிறுவரையொறுத்தலாற்கானஞ்சேர்த்தினன். (௪௩)

ஆங்குசமஞ்சதனஞ்சுமானெனுந்
தீங்கறுபுதல்வனைச்சிறப்பினீன்றனன்
வீங்குதோட்சகரன்வாம்புரவிவேள்விகள்
பாங்கினிலொன்றொழிநூறுபண்ணினன். (௪௪)

மீட்டுமவ்வேள்வியின்விடுத்தவாம்பரி
பூட்டுவிலிந்திரன்புணர்ப்பின்வெளவுறு
வாட்டமில்கபிலமாமுனிவன்வான்றவ
மீட்டுறுசாலையினொளித்திட்டேகினன். (௪௫)

தள்ளரும்பெரும்புகழ்ச்சகரர்வாம்பரி
யெள்ளரும்பெரும்புவியெங்குங்காண்கிலார்
பள்ளநீர்வேலையைத்தொட்டுப்பாதலத்
துள்ளுறைகபிலன்மாட்டுறைதல்கண்ணுற்றார். (௪௬)

தெள்ளிதிற்காண்டலுஞ்சினவுமன்னனைத்
தள்ளருமுனிமொழிசாம்பராக்கலும்
வள்ளறன்மைந்தரைவரவுகாண்கலா
துள்ளநொந்தஞ்சுமான்செல்கென்றோதினன். (௪௭)

அஞ்சுமான்பாதலத்தணைந்துமாதவன்
செஞ்சரண்பணிந்தவனருளிற்செல்பரி
பெஞ்சலில்சகரனுக்கீய்ந்துதந்தைய
ருஞ்சிடவருந்தவமுனாற்றினரோ. (௪௮)

வேறு.

அருந்தவம்பன்னாளாற்றியஞ்சுமானென்னும்வேந்தன்
றிருந்தலர்புகழும்வேற்கைத்திலீபனையினிதினீன்று
விருந்தினனாகிவிண்ணோரெதிர்கொளவிசும்பிற்போனான்
மருந்தினுமினியகேள்வித்திலீபனும்வானஞ்சேர்ந்தான். (௪௯)

அன்னவனளித்தவெற்றிப்பகீரதனல்பினோடு
முன்னரும்பருவமுப்பானாயிரந்தவஞ்செய்காலைப்
பன்னருமறையோன்றோன்றிப்பகீரதவிழைந்ததென்ன
வுன்னருங்கங்கையிந்தவுலகினினுறுதல்வேண்டும். (௫௰)

மைந்தனும்வேண்டுமென்னவளித்துவானதியீண்டெய்தி
னெந்தையையன்றிமற்றுத்தரிக்குநரில்லையென்னா
நந்தலில்பிரமனேகநாமவேற்குரிசிறாய
சந்திரமௌலியெய்தவளப்பினாட்டவஞ்செய்தானே. (௫௧)

நீற்றொளிபழுத்தநெற்றிநிமலன்வந்தெய்தக்கங்கை
யாற்றினையளித்தியென்னவருந்தவம்பெரிதுமாற்றப்
போற்றருங்கங்கைய்[illegible]புரிசடைக்காட்டுளெய்தித்
தோற்றமின்றாகமன்னனீசனைத்தொழுதுசொல்வான். (௫௨)

கங்கையையளித்தியென்னக்கடவுடன்சடையின்மீது
தங்குமோர்திவலைநல்கத்தளியுமிழ்தரளஞ்சிந்தி
யெங்குநீர்பெருகியோடச்சன்னுவின்சாலையெய்த
வங்கவன்குடங்கைதன்னாலள்ளினனருந்தினானால். (௫௩)

அருந்தலுமரசன்வேண்டவரும்பெறற்கங்கைதன்னைப்
பெருந்தவன்செவியின்மீட்டும்விடுத்தலும்பெட்பினோடுந்
திருந்தலர்க்கடந்தவைவேற்பகீரதன்றிண்டேர்ச்சில்லி
பொருந்துறும்வழியினேகிப்பாதலம்புக்கதன்றே. (௫௪)

பாதலத்தெய்திவேந்தரடலையிற்படர்தலோடுந்
தீதுறுசகரர்யாருந்துறக்கத்தினினிதுசேர்ந்தார்
மாதவக்கிழமைபூண்டமன்னனுமயோத்தியுற்றா
னீதிதன்காதையென்னக்கவுசிகனியம்பினானே. (௫௫)

வேறு.

மன்றுயர்கங்கைகவரன்முறையுரைத்தாங்கேகுழிவிசாலைமா னகரங், துன்றவின்னகரம்யாதெனவிராமன்சொற்றலுங்கவுசிக னுரைப்பான், வென்றிவேலவுணர்தம்மொடுந்தேவர்கொடிய வெஞ்சமந்தனிபுரிந்து, பொன்றலும்பொன்றுமருந்துவேட்ட மரர்புணரியைப்பலபகல்கடைந்தார். (ருசா)

மாயிருஞாலந்தாழியாய்மத்துமந்தரமாமதிதறியாய்க், காயு ம்வெவ்விடத்துவாசுகிநாணுக்கடற்புனல்வெண்டயிராக, வாயி ரம்பருவங்கடைதலுமாலம்புறப்படமால்முதலியவமரர், பாய்வி டையுயர்த்தபனிமதிக்கண்ணிப்பண்ணவன்பதம்பழிச்சினரால்.

வெயிலுடன்முளைத்துக்கிளைத்தசெம்மேனிவிமலனுங்கை தைமால்முதலாகு, செயிரறுதேவர்பருவரறுடைத்துத்திசைழ்வி டமருந்தினாகல, மயிலியல்பாகனருளினைவியந்துமான்முத லாகியதேவர், பயில்தருகடலைமீளவும்வியந்துபற்பலநாட்கடை ந்தனரால். (ருஅ)

மந்தரந்தாழமாயவனமையுருக்கொடுவலியினற்றுங்கி, யு ந்துநீர்க்கடலைக்கடைதலுமோர்கைகமண்டலமோர்கைதண்டே ந்தி, நந்தமில்தன்மந்திரிமுதற்பிறந்தார்நாடகக்கூத்தியராகு, மந்தமிலரம்பைமகளிர்தெள்ளமுதோடறுபதுகோடிவந்துதித் தார். (ருசா)

நிலவுகொப்புளிக்கும்வெண்ணகைத்துவர்வாய்நிகரொறிய ரம்பையர்தமக்குச, சிலதியரனந்தமகிளிர்வந்துதித்தார்திகழ்வ ளிமனத்தினுங்கடிய, கலிவாம்புரவிபிறந்ததுபின்னர்க்கருங்க டல்முழுதுஞ்சிவப்பப், புலரியிலெழுந்தசேட்டிளங்கதிர்க்க வுத்துவம்பிறந்ததுபொலிவின். (௬0)

வியன்சினைத்தருக்களைந்துமாங்குதித்தவிண்ணவர் முதலி னோர்யாரும், பயன்படுதேனுப்பிறந்ததுமற்றோர்பான்மதிக்கு டையவனுதித்த, தியங்குநாற்கோட்டுவளநிகரயிராவணப்பக டெழுந்ததுபின்னர்த், தயங்கொளிமுகத்துக்காக்கைமீதுயர்த் தெளவையாங்குதித்தனளன்றே. (சூக)

பூங்கதிர்பரப்பியுலகெலாம்விளக்கும்புண்ணியத்திங்களா ங்குதித்த, தேங்குபைங்கணைக்காற்சேயிதழ்க்கமலத்தொழு கொளிபரப்புபொற்பொகுட்டு, வாங்குநுண்ணுசுப்பிற்றிதலைபூ த்தலர்ந்தவனமுலைச்சேயரிநெடுங்கட், டீங்குயிற்குதலைப்பொ ன்னுறழ்மேனித்திருமகளுதித்தனளன்றே. (சூஉ)

வாருணிதேவம்பிறந்ததுபின்னர்மற்றதுநுகாதலாற்றேவர் சீர்கெழுசுரராயினரஃதுண்ணுரசுரராயினர்சிறந்தோங்கு

மாரமுதுதித்ததலங்கொளிமணியுந்திருவையு மாயனுக்களித்தா
ரோர்செழுமமுதமெமதுமதென்னவுணருமமருமேற்றார். ()

ஏற்றவர்தம்மைமாயவன்விலக்கிமோகினியுருவொடு மெய்
தித், தோற்றியவமுதமுதலியவெல்லையுஞ்சுரர்தமக்களித்தனு
மாற்ற, மூற்றிருந்தொழுகும்வச்சிரப்படையாலடல்கெழுமவு
ணரைமொய்த்தாங், காற்றலின்மகவான்பொன்னுலகனைத்துந்
தனதடிப்படுத்தினனளித்தான். (௬௪)

என்னுடைப்புதல்வர்வேரொடுமடிய விகலுடைச்சூட்சி
யினொறுத்த, வின்னுயிரனையாதிதிமைந்தனாயீண்டொழுப்ப
வோர்சிறுவனையருள்கென், றன்னமெனனடையதிதியிரந்துரை
ப்பக்காசிபமுனிபிரம்பருவ, மன்னிநீபுனிதயாய்த்தவமியற்றின்ம
கப்பெறுவாயெனவறைந்தான். (௬௫)

ஆயிரம்பருவநோற்பவளொருநாளலைகுழல்விரித்துறங்கு
தலும், பாயொளிவயிரப்படையினையேந்திபைந்தொடிவயி
ற்றினுட்புகுந்து, சேயையேழ்கூறாயறுத்தலுமணங்குசிதைக்கி
டலெனவிரந்திடலு,மாயிருவிசும்பினேழ்மருத்துவராய்த்திரிவு
றவரமளித்தகன்றான். (௬௬)

அரும்பிளங்கொங்கைத்திதிமுனம்விரதமாற்றுழி யிவ்விட
மாகும், பொருந்தலர்க்கடந்தவிசருவாகுப்பேர்புரவலனலம்
புசையென்னுங், கரும்பினைக்கலந்தாங்களித்திடும்விசாலன்கட
டியநகரமீதவன்றன், பொருந்தியமருமான்சுமதியிந்நகரம்புரவு
பூண்டிருந்தனனென்றான். (௬௭)

கோசிகனிவ்வாறுரைக்குமெல்லையினிற்சோதறுசுமதிவ
ந்தெய்தி, யாசைகடோறுந்தன்புகழ்நிறுவுமையனையளவளாய்
ந்தழீஇக்கொண், டேசறுந்தனதுநகர்வையிற்கொணரவியற்றிய
விருந்தெதிர்விரும்பி, மாசறுமுனியுந்தம்பியுந்துடரமிதிலையூர்
மருங்கணைந்தனனால். (௬௮)

கூன்புறக்கனிதாழ்கவிழ்குலைதூக்குங்குறுங்கமுத்நரம்பை
யிற்றுவி,வான்படர்ந்தோங்குபகமுகிளம்பாளைகிழிதரவாளைபா
ய்ந்துழக்குங், கான்படர்மிதிலைவளநகர்மருங்கோர்கண்கவர்சா
லையைநோக்கி, யூன்கெடநோற்றமுனிவவிவ்விடமேதுரைத்தி
யென்றிடமுனியுரைப்பான். (௬௯)

ஏர்கனிந்தொழுகுமிளமுலைத்துவர்வாயகலிகைநகைவிரிந்த
ருந்த, வாரொலிகழற்காலிந்திரனெய்திமருவுதல்கோதமனோக்
கிச், சீர்கெழுபலம்வீழ்ந்திடுகெனச்சபித்துசசேயிழைதன்னையு
ணின்றி, யார்தருமடலைப்பாயலாய்ப்பன்னாளருபியாயுறைகென
ச்சபித்தான். (௭0)

கோங்கிளமுலையாள்முனிவவிச்சாபமொழியுநாட்கூறெனவிராமன், பூங்கழற்றுகளுன்மெய்யினிற்கதுவிற்போகுமென்றுரைத்தனனகலத், தீங்கறும்வலாரிக்கமரர்தென்புலத்தோர்கூறதாய்த்திகழ்தரவீசம், வாங்கினரமைப்பக்கற்பகநீழல்வானவர்போற்றவீற்றிருந்தான். (எக)

வேறு.

தீதறுமுனிவனிவ்வாறுரைத்தலுஞ்செம்மல்கேட்டுப்
போதருநெறியினையன்பொன்னடிதுகள்சென்றெய்தக்
கோதமன்பன்னிசாபநீங்கிவெங்குருதிவேற்கண்
மாதுருவாகியாசிவழங்கித்தன்மகிழ்நர்ச்சேர்ந்தாள். (எஉ)

வள்ளலுமிளையகோவும்வான்றவமுனிவன்பின்போ
யள்ளிலைப்பலவினெற்றியளிந்துவீழ்சுளையினூறுங்
கள்ளயின்றிளஞ்சூன்மந்திகடுவனோடினிதினோடும்
வெள்ளநீர்ப்படப்பைசூழுமிதுலைமாநகரம்புக்கார். (எங)

சேட்டிளம்பருதிப்புத்தேள்செலவயர்கட்வுள்மான்றே
ரோட்டறநிவர்ந்தசெம்பொற்சாலையுளுலங்கொடிண்டோள்
வாட்டிறலிளையரோடுமறைமுனியெய்தனோக்கித்
தாட்டுணைபணிந்துவெள்வேற்சனகனல்லிருக்கையீய்ந்தான். ()

அருகுறைகுமரர்தம்மையாய்ப்பிழித்தாமமார்பன்
பருகுவான்போலநோக்கிப்பழமறைக்கிழவபோந்த
திருவினர்யாவரொன்னத்தயரதன்சிறுவரீசன்
பொருசிலைமதுகைகாண்பாணிவ்வழிப்போந்தரென்றான். (எரு)

விற்றொழிற்கொருவனுயவிராமனைவிழைவினோக்கி
மற்றடந்தோளாய்கேட்டிகவுசிகன்வரலாறென்னப்
பொற்றளிர்பொருவுமேனியகலிகைபொற்பினீன்ற
நற்றவக்கிழமைபூண்டசதானந்தனவிலலுற்றான். (எசு)

கற்றிரள்பிறழுந்திண்டோட்காதிசேயுலகம்யாவு [ல்
மொற்றைவெண்குடையுள்வைத்துத்திகிரியொன்றுருட்டுநாளி
வெற்றிவேற்புளினரோடும்வேட்டமேற்கொண்டுகான்போய்
நற்றவவசிட்டன்வைகுஞ்சாலையினண்ணினானே. (எ௭)

அருந்ததிகணவன்வேந்தோடளவளாய்முகமன்கூறி
விருந்தினிதளித்தியென்னத்தேனுவைவிழியினோக்க
மருந்தினுமினியவாயவான்சிறப்பியற்றமன்னன்
றிருந்துநற்றவத்தோயிந்ததேனுவையளித்தியென்றான். (எஅ)

என்றலுமறுப்பமன்னன்றேனுவையெதிர்ந்துபற்றத்
துன்றியமயிர்க்கால்தோறும்யவனரைத்தோற்றிவெய்ய
வென்றிவேற்றானைமாட்டவெஞ்சமத்தரசன்மைந்தர்
சென்றிடவுங்கார்த்தாள்முனிவரன்செகுத்தானன்றே. (எசு)

கூற்றமும்வெருவவேந்தன்கொடுஞ்சிலைகுழையவாங்கி
யேற்றருமுனிவர்க்காற்றாதிடைந்தனனாகிமைந்தர்
நூற்றுவர்தம்மினுய்ந்தமைந்தனைநோக்கிவையம்
போற்றுகென்றிமையத்தெய்திபுலனவித்திருந்துநோற்றான். ()

இமையவிற்குரிசிலெய்திவிழைந்ததம்மைபுணர்ந்தேனென்று
வமைவருங்கடவுள்வாளியளித்தலுமரசன்போந்து
கமையுடைவசிட்டன்மெய்யில்விடுத்தவெங்கணைகளயாவுந்
திமிரமெய்கதிரிற்றண்டந்தீயெழவிழுங்கிற்றன்றே. (அக)

ஆங்கதுகண்டவேந்தனரசர்வெந்திறலைவெள்ளி
யோங்கழலூட்டியுண்ணுமுனிவரையுவந்துபோகித்
தீங்கறுமுனிவர்வைகுந்தென்புலமதனிலெய்திப்
பாங்குறத்தழலினாப்பணாயிரம்பருவநோற்றான். (அஉ)

நோற்றலுங்கமலப்புத்தேள்நொய்தின்வந்தெய்தமன்னன்
போற்றலுமுவந்திராசமுனிவனென்றுரைத்துப்போகச்
சாற்றினனுகர்ந்துசெய்யகண்முகிழ்த்தழலினாப்ப
ணாற்றரும்விரதம்பின்னுமாயிரம்பருவஞ்செய்தான். (அங)

விழவுகண்டுயிலாவீதியயோத்திநாடாளும்வேந்தன்
மழைநிகர்தடக்கைவண்மைவளர்திரிசங்குவென்போன்
றொழுதகுவசிட்டற்போற்றியுடலொடுந்துறக்கமெய்தப்
பழமறைதெரிந்தோரொச்சம்பண்ணுவித்திடுகவென்றான். (அச)

என்னலுமுனிவனெல்லாதென்றலும்புதல்வர்ப்போற்றி
மன்னவன்புரிதிவென்னமறுத்தலும்பிறாபாலெய்தி
நன்மகம்புரிவனென்னநான்மறைவசிட்டன்சீறி
நின்னிலைதிரிந்துமற்றோர்நீசனாயுறைதியென்றான். (அரு)

கலைகணுபுலகம்யாவுங்காத்திடுந்தலைமைநீங்கி
யுளமெலிவெய்திக்காதிமைந்தனுக்குற்றகூறத்
தளரனீதுறக்கத்துய்ப்பனென்றருந்தவத்தோர்கூவ
வளர்தவவசிட்டன்மைந்தர்மறுத்தலும்வைதுகொன்றான். ()

சுழலிடைநறுநெய்பெய்துதனிமகம்புரியத்தேவர்
விழைவொடுமவிசைக்கொள்ளார் விடுத்தலும்வெகுடசிகூர்ந்து
தொழுதகுசுருவைபேற்றிவேந்தனைத்துறக்கத்துய்ப்ப
விழிதொழிற்கீழ்ண்டெய்தலெனவும்பரிழித்திட்டாரால். (அஎ)

சென்னிகீழாகவீழ்ந்திரிசங்குவென்னும்வேந்தை
நின்னிலென்றமைத்துவானினிறுவிவாசவன்றன்னோடு
மின்னுமோருலகஞ்செய்வனெனவுடுகணங்கள்விண்ணோர்
பன்னருஞ்சராசரங்கள்சிற்சிலபடைத்தானன்றே. (அஅ)

ராடைத்தலும்விண்ணோரஞ்சிக்கோசிகன்பால்வந்தெய்தி
யாடற்கரும்வலத்தோய்நீயீண்டமைத்தவையமையுமுன்னந்
தடுப்பறப்படைத்தயாவுந்தாத்திரிசங்குவோடு
முடித்தெரியுலகின்பாங்கர்வதிகவென்றுரைத்துப்போனார். ( )

கடவுளர்போயபின்னர்க்கவுசிகன்றனைவினோக்கிக்
குடதிசையதனைநண்ணிக்கொடுந்தவமியற்றுமேல்வைப்
படிபுகழம்பரீடன்பசுவினைமகவான்வெளவ [ன்.
வடிவிலாருசிகன்சேயை வாய்ப்பொருள்கொடுத்துக்கொண்டா

பொற்றடந்தேரினேற்றிப்புருடமேதத்துக்காக
மற்றடந்தோளான்கொண்டமறைமுனிபுதல்வனோடுங்
கற்றடிப்படுத்தவிஞ்ஞைக்கவுசிகன்சாலைநண்ணப்
பற்றறுமுனியைநோக்கிப்பாலகனழுதிட்டானே. (௬௧)

அழுதகங்குழையும்பாலற்கஞ்சலென்றினிதுகூறிப்
பழுதறுமுனிவனின்றமைந்தரைப்பார்த்துநீவிர்
விழைவொடும்பசுவாயிந்தவிடலையைக்காமினென்னத்
தொழுதனர்மறுப்பவேடராகெனத்துணைவில்லைதான், (௬௨)

அந்தணன்புதல்வனுய்யவாங்கவன்செவியினூடு
மந்திரமிரண்டுகூறிமறைமுனிவிடுப்பவேந்த
னெந்திரத்தேரினேற்றிச்சாலையினெய்திடூபக்
கந்தினிலார்ப்பனமைந்தன்கடவுண்மந்திரத்தைப்போற்றான் ( )

அத்தலையமரரெய்தியவியினையடைந்தேமிந்த
வித்தகசிறுவன்றன்னைவிடுக்கெனவிடுத்துவேந்தன்
பாதகமைவேள்விமுற்றிப்பதியினிலடைந்தான்பின்னும்
பொய்த்தலைப்புகாதநெஞ்சப்புண்ணியன்றவத்தினின்றான். ( )

சாதிசேயாற்றுகின்றதவத்தினைக்கமலப்புத்தேள்
மேதகவியந்துபோந்துமெய்த்தவவிருடியென்ன
வேதினனகலப்பின்னுமொழிவரும்புலன்கள்செற்றுத்
தீதெறிந்தழலினுப்பான்செய்தவமியற்றினானே. (௬௫)

வேறு.

வெண்ணிலாக்கதிர்கள்விழுதுவிட்டொழுகுமபிறைவடஞ்சுமந்தறவீங்கி, வண்ணமென்சுணங்குபூத்தெழுந்தோங்கும்வனமுலைப்பொறையினிலைந்தோ, நுண்ணிடைமுரியுமுரியுமென்றேங்கிநூபுரமரற்றவெங்கூற்றம், பெண்ணுருக்கொண்டுவருதல்போற்பெட்பின்மேனகையவ்வழிபோந்தாள். (௬௬)

விளிம்புபூத்தெறிந்தமேகலையொளிப்பமின்னெனமென்மெலவொதுங்கித், துளங்கிடையொசியமேனகைவாழுங்கோசிகனரு

சென்றதுமெடுத்துநாணிற்செறித்ததுந்திரண்டசெம்பொற்
குன்றவில்லனையவல்விற்குழைத்ததுமிறுத்தவாறு
மொன்றிடாவிமையாநாட்டத்தமரருமுணரகில்லா
ரென்றிடிலிமைத்துநோக்குமனிதரோவினிதுகாண்பார். (க0டு)

முருகுறழ்தோற்றத்தையன்மூரிவில்லிறுத்தலோடு
முருகுபேருவகைவெள்ளமுவட்டெடுத்தொழுகவேந்தன்
கருணைகூர்முனியைநோக்கிகடிமணமுடித்தற்கின்னே
தருகெனவியம்பக்கேட்டுத்தயரதற்குணர்த்துகென்றான். (க0சு)

கோசிகன்விடுத்தவோலைகாண்டலுங்குமரரோடுந்
தூசுலாம்பருவமல்குறழ்வெண்டைவாய்மகளிரோடு
மூசுவண்டாற்றுந்தண்டார்த்தயரதன்முனிவர்சூழக்
காசுகணபடுக்குமாடக்கடிநகர்மிதிலைபுக்கான். (க0எ)

கூடவளையலறியேங்கக்குணில்பொருமுரசுமார்ப்ப
வீடதிசைக்கடலந்தானையொளிறுவேற்சனகன்போந்து
நடமுலைப்பவளச்செவ்வாய்ச்சீதையைத்தழல்சான்றாக
மடலவிழ்துளவினாற்குநீரொடும்வழங்கினானே. (க0அ)

உருவவோடரிக்கட்செவ்வாயூர்மிளையென்னுமாதை
யருவளையனையதிண்டோளிலக்குவற்களித்துநாளு
மருவலர்க்கடந்தவைவேற்குசத்துவசன்றன்மக்க
ளிருவரைப்பரதனுக்குஞ்சத்துருக்கனுக்குமீய்ந்தான். (க0கூ)

மணவினைமுடிந்தபின்னர்மன்னர்கோன்மைந்தர்சூழப்
பணிவரும்பவளத்தாற்றுச்சென்னலம்படப்பைவேலி
யணிகெழுமிதிலைநீங்கியகநகர்க்கேகுமேல்வைத்
துணிகதிர்ப்பரசுராமனிராமனைநோக்கிச்சொல்வான். (கக0)

பாறறினன்சுழலுஞ்சூலப்படையினோனளித்தவில்லை
யாற்றல்கோலிறுத்ததென்னவணிமணிமுறுவல்கோட்டி
யேற்றுதியிந்தவில்லென்றளித்தலுமிமைப்பினேற்றிக்
கூற்றுறழ்பகழிக்கென்கொலிலக்குநீகூறுகென்றான். (ககக)

ஈட்டியதவங்கள்யாவுமெய்துகொன்றிடுதியென்னப்
பூட்டியபகழியொன்றாற்பொன்னகர்ப்புகவுமாற்றி
வாட்டிறலினையரோடுமன்னெடுஞ்சிலையிராமன்
சேட்டிளம்பருதிதாழுமணிமதிலயோத்திசேர்ந்தான். (கக௨)

இராமனவதரித்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—அகூஎ.

இருபத்திரண்டாவது

# இராமன்வனம்புகுந்தவத்தியாயம்.

நாகிளங்கமுகின்மிடறுகொப்புளிக்குநறவுப்பாய் வயல்விளிம்புடுத்த, கேகயத்தரசர்க்காணியவிருப்பிற்பரதனுமிளவலுங்கிளர்ந்த, வோகையினடைந்தகாலையினென்றுருதிரமுண்டேன்சுவைத்தொளிரும், வாகைவேலரசன்சுமந்திரன்முதலாமந்திரத்தலைவரோடுரைப்பான். (க)

கற்பகக்கானத்தரசுவீற்றிருக்குங்கடவுளுமேக்கறவெய்தப், பற்பலகாலமுலகெலாமளி... தனினியொளிர்பருமணிம[...]யற்பினினிராமற்கனிபெறச்சூட்டியகனிலமவனடிபடுத்தி, யெற்பெழுந்துடலமுணங்கமாதவத்தினிருப்பதென்கருத் தெனவிசைத்தான். (உ)

காந்தெரிகவிழ்க்குங்கடகநீண்முன்கைகாவலன்மொழியெதிர்விரும்பி, யாய்ந்தநூற்கேள்விவசிட்டனேமுதலோரிராமனுக்காங்கதுவிளம்பி, யேங்கெழினகரம்புனேகெனமுரசமியம்பொலிகேட்டலுங்கூனி, பாந்தள்வாய்ப்படுத்தபறவையிற்பதைத்துககேகயன்பாவைபாலடைந்தாள். (ங)

மாற்றவண்மைந்தன்மணிமுடிபுனைந்து மாநிலம்புரக்கநின்மைந்தனேற்றுழைவருந்தியிழிவுறுதிராமற்கெரிமணிமவுலிசூட்டுதல்,பாற்றினஞ்சுழலும்பருதிவேலரசற்குரைத்துநீவிலககெனப்பணிப்ப, வேற்றடங்கண்ணிமன்னவனுழைப்போய்முனிவொடுமென்மெலவுரைப்பாள். (ச)

முன்னநீதருவலென்றநல்வரங்களிரண்டுமீண்டுதவெனமொழிய, வென்னுயிர்தருதியென்கினுமளிப்பன்கேட்கெனவிருநிலமுழுதும், பன்னருஞ்சிறப்பிற்பரதனுக்களிப்பதொருவரமீரொழுபருவம், பொன்முடிதுறந்துகானிடையிராமன்போவதோர்வரவெனப்புகன்றாள். (ரு)

முரசொலிகேட்டவசுணமென்புள்ளின்மூச்சவிந்தொருவழிதேறிப், பரதனுக்குலகமளிப்பனென்மைந்தன்படாவனம்புகாதளித்திடுகென்,றரசர்கோனிரப்பமறுத்தலுமெய்ம்மையாவியிற்சிறந்ததென்றளித்துப், பொருசிலையிராமன்றனைத்தருகென்னச்சுமந்திரனெடுந்தனிபுகன்றான். (சா)

மைம்முகில்கமலக்காடுபூத்தனையமணிநிற வண்ணன்முன்னெய்திக், கைம்மலர்குவித்துச்சுமந்திரனழைபபக்கவினமான்றேரினிதிவர்ந்து, தெம்முனைகடந்தசினவுவேற்காளைதயரதன்மருங்குசென்றெய்தி, யெம்மையாளுடையாயழைத்ததேனென்னவிறைவனெஞ்சயர்ந்துசோர்ந்தனனால். (எ)

கல்லும்வல்லிரும்பும்வெண்ணெயென்றுரைப்பக்காழ்படுமனத்தகைகேசி,மலலடுதிணிதோட்பரதனுகுலகம்வழங்கிநீயே

ழிருபருவங், கொல்புலிவழங்குகானிடைத்திரியக்கூறினனுங் கைதயென்றுரைப்ப, வில்விழுங்குயர்தோட்செம்மல்நீபணித்தவி லக்கலமெனாத்தொழுதகன்றான். (அ)

கோசலையுறையுங்கோயிலுளெய்திக்கொற்றவன்பணியுரைத் துள்ள, மாசறத்தேறிச்சுமத்திரையோடுமன்னுமைப்போகெ னக்கூறிப், பூசல்வண்டறைதாரிளையவனோடும்புரிநரம்பிரங்குதீ ங்குதலைத், தேககண்படுக்குஞ்சீதைபின்றொடரத்தயரதன்மரு ங்குசென்றடைந்தான். (௯)

தயரதன்வருந்தநோக்கியுள்ளழிந்துசுமந்திரன்றளர்வொடு மாழ்கி, மயர்வொழிந்தழுந்துகொடியகைகேசிமுகத்தினைநோ க்கியீதறைவான், செயிரறுகடவுள்முனிவரல்லருளாற்றிருவ ளர்கேகயத்தரச, னுயிருடையெறும்பின்பாடையுமுணர்ந்தாங் கொழுகுநாடன்மனையின்மற்றொருநாள். (க0)

மற்றடந்தோளான்மனைவியோடணிதிகழ்வையமலரணைப் புறத்தில், சிற்றெறும்பொழுங்கிற்சேறலுமரசன்சேவடிகடக்கரி தென்ன, வுற்றயல்மேவுமெறும்புமற்றயலோரெறும்புடன்வெ குண்டுரைத்திடுதல், கொற்றவேல்மன்னனுணர்ந்தனனகைப்ப கக்கோற்றொடிநகைத்ததென்னென்றாள். (கக)

ஈங்கிதுநுவலின்முடியுமென்னுயிரியம்பலென்னவுமநு த்துக, கோங்கிளமுலையாள்கூறுகென்றுரைத்துமுனிதலுங்கோ லடுவேலான், றீங்குறுமுள்ளந்தரிவைதோணலத்திற்றீதுவே றின்றெனவிடுத்தா, ளாங்கவள்குலத்திற்றோன்றியவுனக்குமரு ளுறுமோவெனவறைந்தான். (க௨)

மழையுறழ்தடக்கைத்தயரதன்மனைவாழ்மங்கையர்வயிறலை த்தேங்கி, யழுகுரலோதைக்கடையுகமுடிவிறுகலியுடைத்தென வொலிப்பக், கழைசுழிநதுக்கட்கடாக்களிறனையான்காவலன்ப ணிதலைக்கொண்டு, குழைபொருதடங்கட்கொடியொடுமிளைய கோவொடுமவனகர்கடந்தான். (கங)

கொடுஞ்சிமான்றடந்தேர்சுமந்திரன்விடுப்பக் கோனகரழு துபின்றொடரத், தடந்திரைக்கரத்தானவமணிகொழிக்குங்கங்க யங்கரையினிற்சார்ந்து, தொடர்ந்துபின்செலவோரறிவுறவண் ணந்துன்றிருளிடைமறைந்தேகி, மடங்கலேறனையான்முனிவர ருறையுஞ்சாலையின்மகிழ்வுடனடைந்தான். (கச)

அலத்தகமருடிவருந்துயர்காவிணணிகொள்சீறடியணங் கோடு, மிலக்குவனோடுஞ்செல்வழிப்போந்தகுகனொடுந்தோழ மையெய்தி, யொலித்தடந்திரைநீர்க்கங்கையாறகன்றுபரத்துவ ற்கண்டவனொருவிச், சிலைத்தழும்பிருந்தடம்புயத்தண்ணல்சி த்திரக்கூடமெய்தினனால். (கரு)

கோதைவேற்றடக்கைத்தயரதனுக்கு கோசலைகேட்டியா
ன்முன்ன, மேதமில்வேட்டமாடுவானெய்திக்கங்குலினிருடித
ன்மகனைத், தீதியல்விலங்கென்றெய்துவீழ்த்திடலுஞ்சிறுவன
ன்மொழியினைக்கேட்டுக, காதலோடெடுத்துமற்றவன்றந்தை
கைக்கொடுத்துள்ளவாறுரைத்தேன். (க௬)

மத்தரின்மயங்கிக்கண்ணிலாமுனிவ னிறந்திடுமைந்தனைத்
தழுவிப், புத்திரசோகத்திறத்திநீயென்னப்புகையெழவெனைமு
னிந்துரைத்துச், சித்தமாழாந்துபன்னியோடெய்திச்சிறுவன்
வெந்தழல்புகுந்தவிந்தார், வித்தகமுனிவன்சாபமீதென்னவினை
ம்பினையாருமேல்லையியனில். (கஎ)

சித்திரக்கூடத்திராமனொப்பியதுசெப்பிய சுமந்திரன்மொ
ழியா,மத்திறமரசன்மார்பகம்பிளப்பவிறத்தலுங்கலைகலங்கட மூ
ங்கி, முத்தவெண்கவிகைப்பரதனுமொன்றுமுடைகமழ்குருதி
வேற்றடக்கைச்,சத்துருக்கனனுங்கேகயமகன்றுதண்புனலயோ
த்தியிலடைந்தார். (க௮)

மற்றடந்திணிதோண்மைந்தர்கைகேசி மலரடியணங்கினர்
திற்ப, வுற்றவையனைத்துமாங்கவருரைப்பவுருமுவீழ்வென
ங்கிப், பெற்றவெங்கூற்றைமுனிந்துபோயரசனடியின்வீழ்ந்த
ழுதுபேதுறலுங், கற்றவர்தெருட்டத்தாதையைவேள்வித்தழ
லினிற்கடன்கழித்தனரால். (க௯)

கனகனுயுந்தையளித்தவிவ்வுலகங்காக்கெனவசிட்டனேமு
தலோர், தெளிவுறவுரைப்பமறுத்தனனுகிச்சித்திரக்கூடம்வந்
தெய்தித், தவியவிழ்கமலக்கண்ணனைவணங்கித்தந்தைவிண்ண
டைந்தமைசாற்ற,வுளமெலிவெய்திக்கலுழ்ந்துதன்றுதைக்குறு
கடன்யாவையுங்கழித்தான். (௨0)

புரவுபூண்டுலகமளிப்பதுன்கடனிற்போற்றலென்கடனெ
னத்தொழுது,பரதன்வீழ்ந்திரப்பத்தழீஇக்கொடென்வாய்மை
பழுதுறுதீரெழுபருவ, மரசனுயுலகமளித்திநீயென்னபணிந்த
வன்பாதுகையிரண்டு, மெரிமணியிமைக்குமவுலியிற்புனைந்து
நந்தியம்பதியிடையிருந்தான். (௨க)

வேறு.

சித்திரக்கூடம்நீங்கித்திசைமுகனனையகேண்மை
யத்திரியுறைபுஞ்சாலையடைந்தனன்சூயையன்பிற்
கொத்தலர்மாலைசாந்தஞ்சானகிக்களிப்பக்கொண்டு
தத்துநீரருவிச்சாரற்றண்டகாரணியஞ்சார்ந்தார். (௨௨)

கழைபொருதுகுத்தமுத்திற்கவையடிபெயர்ப்பமாழ்கி
யுழையினமொதுங்குகானினுறுதலுமுருமுச்சீற்றத்
தழலுமிழ்குருதிப்பேழ்வாய்விராதனுயிழையைவெளவ
நிழலுமிழ்வாளின்வீட்டிநிலத்திடைப்புதைத்திட்டாரால். ()

அங்கவனெழுந்துமுன்னுனறும்புருவரம்பைதன்றற்
பொங்குசிர்க்குமரனிட்டசாபம்போக்கினையென்றேத்தித்
தங்குதம்பதியினேகச்சரபங்கன்றனக்குமீளாத்
துங்கநன்முத்திநல்கித்தொன்னெறிசெல்லுமேல்வை (உ௪)

பசுவின்றோல்மெய்யிற்போர்த்துப்பாய்புலிதிரியுமாபோல்
வசையறுமுனிவர்வேடந்தாங்கியும்வனத்திலுள்ள
நிசிசரர்க்கோறலென்கொனீதியோவென்றுசீதை
வசிமுதற்படைகடாங்கில்வன்கண்மையடுக்குமன்றே. (உ௫)

என்னவோர்காதையுண்டுகேட்டியெம்பெருமவென்னுத்
தன்னிருகைகள்கூப்பிச்சானகியுரைக்கலுற்றாள்
முன்னமோர்முனிவன்செய்ததவத்தினையழிக்கமுன்னிப் [றன்
பொன்னகர்க்கிறைவனோர்வாள்முனிகையிற் கொடுத்துப்போ

மற்றதுகாத்தல்வேண்டிவயிரவாள்கையிற்கொண்டு
சுற்றவன்கொடிகள்வன்புன்மரங்குறைப்படுத்துப்பின்ன
ருற்றபல்விலங்கியாவுமொறுத்துவாள்பிடித்தவாற்றாற்
பற்றுதீநரகிலெய்திப்பருவரலுழந்தானன்றே. (உ௭)

ஆகலால்வரிவில்லேந்தியரக்கரைமுனிந்துகோறல்
தீதெனவுரைப்பவையன்சீதைசொல்மகிழ்ந்துகேட்டு
மாதவர்தமக்குமுன்னம்வஞ்சினமுரைத்தவாற்றாற்
பாதகர்க்கொல்லினன்மைபயந்திடும்பழியுறாதால். (உ௮)

அன்றியுமரசரோதிதரிப்பதேயறமதாகு
மன்றலங்குழலாயென்னவரிசிலையிராமன்கூறித்
துன்றருந்தவத்தின்மிக்கசுதீக்கணன்வழிமுன்காட்டத்
தென்றமிழ்முனிவன்சாலையணித்தெனச்செல்லுமேல்வை. ()

செந்நெறியதனின்மற்றோர்தாமரைமடுவிற்றெய்வ
நன்முழவியம்பக்கேட்டுநண்ணுமோர்முனிவனோடு
மன்னுமீதென்கொலென்னமறைபயில்மாண்டுகண்ண
னென்னுநன்முனிவனீருளிருந்தவம்புரியுமேல்வை. (௩0)

வத்தருமுனிவன்செய்யுமிருந்தவமொழிப்பத்தெய்வக்
கூத்தியரைவர்தம்மைவயிரவாட்குருசிலேவ
வேய்த்தடந்தோளாரெய்தமுனியுளம்விழைந்துவாவி
நீத்தமோர்சாலையாகத்தவத்தினுனிருவியன்னோன். (௩க)

தீங்கரும்பனுக்குஞ்செஞ்சொற்றெரிவையர்நலனுண்டாட
வாங்கவர்சதியினோடும்மலையியம்முழக்கமென்ன
வாங்குவிற்றடந்தோளண்ணல்மற்றவைவிரும்பிக்கேட்டு
நீங்குழியிளவலோடுமிராகவனிகழ்தலுற்றான். (௩உ)

வில்வலன்றுணைவனாகவெய்யவாதாபிதன்னை
யொல்லையிற்றகரதாக்கியொறுத்தலூன்புழுக்கலாங்குப்
புல்லியமறையோர்க்கூட்டிப்போதுகென்றியம்பவெய்யோன்
வல்லையின்முனிவர்வீயவயிறுபோழ்ந்தேகுவானால். (௩௩)

செந்தமிழ்மணக்குஞ்செவ்வாய்க்குறுமுனிதமைக்குதத்தியோன்
வெந்திறற்றம்பிதன்னையின்னணம்விருந்துசெய்ப
வந்தமில்வலியோன்றன்னையகட்டிலுளறுத்தவெற்றி
மைந்துடைமுனிவன்சாலையிதெனவழங்கலுற்றான். (௩௪)

தமிழ்முனிசாலையெய்தியிறைஞ்சலுந்தவத்தின்மிக்கோ
னுமிழ்கதிர்வாளும்வில்லுந்தூணியுமுதவக்கொண்டாங்
கமையுறழ்தோளியோடுமையனுமிளையகோவுங்
கமழலந்துறைசூழ்பஞ்சவடியினிற்கடிதுசென்றார். (௩௫)

அவ்வழிபெருவைமன்னன்சடாயுவந்தனுகமோடிருந்
செவ்விசேரிராமனோக்கியாரைநீசெப்புகென்னா
வெவ்வெவர்த்திசையும்வென்றதயரதன்றோழன்யானென்
கவ்வையின்மரபின்செய்திகேளெனக்கழறலுற்றான் (௩௬)

ஆசறுதக்கனின்றவறுபதுமகளிர்தம்மி
லேசறுமெண்மர்தம்மைக்காசிபற்கீய்ந்தானந்தப்
பாசிழைமகளிர்தம்மிலதிதிமுப்பான்முக்கோடி
தேசுறுமமரர்பெற்றாடிதியிதியனாயீன்றாள். (௩௭)

தனுவயக்கிரீவற்றந்தாள்காளிகாளிகன்றனோடும்
புனிதமாநாகர்ற்றந்தாள்தாம்பிரையென்னும்பூவை
செனிகிரவுஞ்சிபாசிதிருதராட்டிதியினோடுங்
கனிமொழிச்சுகியென்றோதுங்கன்னியர்தம்மைப்பெற்றாள். ()

பாசிபாசத்தையீன்றாள்செனிபருந்துவணமீன்றாள்
தேசுடைக்கிரவுஞ்சியென்பாள்கூகையைச்சிறப்பினீன்றா
ளாசறவுயர்ந்தசீர்த்தித்திருதராட்டிநல்லன்ன
மேசறுநேமிப்புள்ளுக்கானமிவற்றையீன்றாள். (௩௯)

வேறு.

சுகியெனவுரைப்பாணகையினைத்தந்தாள்நகைதொழும்வி
னதையைத்தந்தாள், துகளறுகுறோதவசையரிமிருகிசுவேந்த
மாதங்கிசார்த்தூலி,திகழ்தருசுரசைசுத்துருச்சுரபிபத்திரமதை
யுடன்சிறப்பின், வகைபடுமிருதமந்தையையீன்றாள்மிருகிநீள்மி
ருகமீன்றனளே. (௪0)

உரைத்திடுமிருகமந்தைவெங்கரடிசவரிமான்கவரி மானுயி
ர்த்தாள், நிரைத்தசீர்ப்பத்திரமதையிராவதையையீன்றனளிரா
வதைநிகரில், வரைகளிணையயிராவதத்தினையீன்றாளரிக்குரங்க

ளித்தனள்மானம், பரிசுகசார்க்கூமெமங்கிபோட்டழல்வாய்ப்பா
ய்புலிதன்னையீன்றனளே. (௪௧)

சொற்றமாதங்கிமாதங்கமுயிர்த்தாள் சுவேதைதிக்கயத்
தினைப்பெற்றுள், மற்றையசுரபிரோகணியோடுந்திருவியையமகி
ழ்ந்தினிதளித்தா, ளுற்றகந்திருவிகுகிளையையுயிர்த்தாளுரோ
கணிபசுவினைபெற்றுள், பற்றுறுசுரசைநாகங்களீன்றுள்கத்து
ருப்பன்னகமுயிர்த்தாள். (௪௨)

மனுவெனவுரைப்பாண்முகத்தினின்மார்பிற்றுடையினில்
வழங்குறுகாலிற், புனிதமாமறையோர்வேந்தர்நல்வணிகர்பின்
னவர்தமைப்பொறையுயிர்த்தா, ளனலையென்றுரைப்பாள்தரு
க்களைப்பயந்தாள்வினதையென்பவளருணனையுந், துணைவினிற்ப
றக்கும்புள்ளரசினையுந்துகளறவினிதினீன்றனளால். (௪௩)

அருணனென்றுரைப்போனருள்செய்சம்பாதி தன்னுடன்
சடாயுவென்றுரைக்கு, மொருவைபின்வேந்தனென்னையுமீன்
றுனெனமகிழ்ந்தினிதெடுத்துரைத்து, வரிசிலையுழவநிற்புறங்கா
த்திங்கிருக்குவனென்றியல்வனத்தின், விரிசிறைப்பறவைபோக
னுமிராமன்விழைவொடுமாங்கமர்ந்தனனால். (௪௪)

வேறு.

சென்றவணிருக்குமேல்வைசிலைத்தழும்பிருந்ததிண்டோட்
குன்றினைநோக்கியாசைகூர்ந்துகூரப்பனைகையென்னும்
வன்றிறலரக்கிபோந்துமானிடவுருவமெய்தி
யின்றெனைமருவியாவிதருகெனவிரந்துசொன்னாள். (௪௫)

அய்யனுமசதியாடசினமொழியறையுமேல்வைப்
பையரவல்குற்செவ்வாய்ச்சீதைபாங்கெய்தனோக்கிக்
கையிறுவரைகளிவெளவலியயவன்கண்டுகாதும்
வையவண்மூக்குங்கொய்தான்கரனடிவீழ்ந்துசொன்னாள். (௪௬)

அவ்வுரைகேட்டலோடுமழலெழவுருத்துப்பொங்கிச்
செவ்வடுகரனும்விற்றாடணனும்வேற்றிரிசிரனும்
வெவ்வழற்சூலமேந்திவிரிகடற்றனையோடு
மெய்வெலாத்திசையுஞ்சூழ்போந்திராமனையமரினேற்றார். ()

ஏற்றவருடலம்புன்றேர்ப்பிறசசியென்பிருண்மூளை
வீற்றுறவிற்றகவிழவெஞ்சிலைக்கலவிகாட்ட
வூற்றிருநகொழுகுங்கண்ணுளிலங்கையினெல்லையெய்தி
யாற்றலங்குருதியொள்வாளிராவணற்கறியச்சொன்னாள். (௪௮)

கேட்டலும்வெகுளியோடுகாமமுங்கிளர்ந்துபொங்க
வாட்டிறலரக்கர்கோமான்மாமலைச்செருக்கையெய்தி
யூடரக்குண்டசெவ்வாயொண்டொடிச்சீதைகாணத்
தீட்டரும்படிவமானாய்ச்செல்கெனமறுத்துச்சொலவான். (௪௯)

மாயுருவாகமுன்னர்வாளெயிற்றரக்கர்மற்றுங்
கிருவரோடிராமன்முன்னமெய்தலுமவன்கையம்பாற்
பொருவருமென்னோடெய்துமிருவரும்பொன்றல்செய்தார்
வெருவியான்மாயைதன்னாலிலங்கையின்மேவினேனால். (௫௰)

கத்துருமகவானானைக்கருப்பெனவினதையென்னு
மைத்தடங்கண்ணாள்வெள்ளையென்றலுமைந்தர்செய்யும்
வித்தகச்சூட்சிதன்னால்வினதையைத்தாசியாக்க
வத்தலைக்கலுழனன்னையருஞ்சிறைநீக்கவெண்ணி. (௫௧)

மேவிடுநெறியிலீராறியோசனையகன்றமேனிப்
பாவடிக்களிறுமன்னப்பரப்புறுமாமையொன்றுஞ்
சேவடியுகிரினள்ளிப்பழுமரஞ்சேர்தலோடு
மாவெனயாருமார்ப்பவதன்பணையொடிந்ததன்றே. (௫௨

நூறியோசனையினுற்றபணையினைநொய்திற்கவ்விச்
சேறலுமதனிற்சேரும்வாலகில்லியராந்தீதி
லாறறிமுனிவர்தம்மைமென்மெலவகற்றிவிண்போ
யூறமிர்தெடுத்துத்தாயர்க்குதவிவன்சிறையுந்தீர்த்தான். (௫௩)

ஆங்கவன்வழிந்தவாலிற்சித்தலையாற்றுகின்ற
தீங்கறுதவத்திற்றீரோனென்றலுமரக்கன்சீறி
வீங்குதோட்கரனைக்கொன்றதகம்பனைவிளம்புமன்று
மீங்குவந்துரைத்தேனென்றுமறந்திலைபோலுமென்றான். (

எங்கைதன்செவியுமூக்குமிகலின்றியறுத்தவெய்யோன்
மங்கையைவவ்வமானாய்ச்சென்றவண்மயக்கிடாயேற்
றுங்கநீண்மவுலிகொய்வனென்றலுந்துணுக்கமெய்தி
யங்கவன்முன்னமம்பொன்மானுருவமைந்துசென்றான். (௫௫)

பொற்பிதிரோய்க்கும்புள்ளிப்பொறியிளமானைவெளவி
யற்பினிற்றருதியென்னவிராமனுக்கமிர்தச்செவ்வாய்க்
கற்பினுக்காசிகூறத்தொடர்தலுங்கடிதினோடி
விற்பழுத்துமிழும்வெய்யகணையொன்றால்வீழ்த்தினானே. (௫௬)

வீழ்தருபொழுதிற்சீதாயிலக்குவவென்னவீழு
மாழ்துயர்மொழியைக்கேட்டவணியிழையிளையகோவை
வாழியெங்கோமான்செய்திகண்டிவண்வருதியென்னத்
தாழிருந்தடக்கையையன்றளர்வொடுங்கடிதுபோனான். (௫௭)

இருவருமகன்றவற்றநோக்கியிலங்கைவேந்த
னருமறைபறையுமுக்கோற்பகவனாயருங்கினெய்தத்
திருவனாளையன்வேள்வித்தீயினிலொளிப்பச்செந்தீ
ழுருவருமாயாசீதைவகுத்துமுன்விடுத்ததன்றே. (௫௮)

சீதையென்றிலங்கைவேந்தன்சில்லியந்தடந்தேரேற்றிப்
போதலுஞ்சடாயுவெம்போர்புரியவொள்வாளில்வீழ்த்தி
மூதெயிலண்டகோளமுகடுயரிலங்கையெய்தி
மாதினையசோகநீழலரக்கியர்மருங்குவைத்தான். (ருசு)

ஈங்கிவைநிற்கவெய்துமிலக்குவனிராமன்செய்ய
பூங்கழல்வணங்கியாங்கணுற்றவைபுகலலோடும்
வாங்கியசிலையோன்சாலைமருவினனணங்கைக்காணா
தேங்கிவெய்துயிர்த்துமாழ்கியெங்கணுந்துருவிப்போனான். ()

அறைகழல்வீரரெய்துநெறியினிலமரர்கோமான்
சிறையரிவரையின்வீழ்ந்தசடாயுவைத்திகைத்துநோக்கிப்
பெறலருங்கற்பிற்சீதைக்குற்றவைபேசுமெல்லை
மறிதலுமவற்குச்செந்தீக்கடன்கழித்தகன்றான்மன்னோ. (சுக)

நொச்சிமென்போதுவிள்ளுமிருளுநுண்புனற்குச்செல்லு
மச்சணங்கையில்வில்லேந்துமிலக்குவன்யோர்முகிப்பேர்
நச்செயிற்றரக்கிமூக்குநாக்கொடுங்கொய்தபின்னர்
கச்சமால்களிறுபோல்வார்கவந்தன்வாழ்நகரம்புக்கார். (சு௨)

மையல்மால்யானையாதிவிலங்கெலாம்வயிற்றினூடு
கையரிக்கொண்டுபெய்யுங்கவந்தனைச்செகுப்பனென்று
மொய்கழலியக்கனாகிமுறையினிற்பணிந்துபோற்றி
ஐயன்மீர்சவரிதன்பாலடைகெனவடைந்தாரன்றே. (சுந)

அருந்தவத்துணங்குமேனிச்சவரியுமடகுமூலம்
விருந்தளித்தண்ணல்கேட்டிவிரிதலைமதங்கவெற்பிற்
பொருந்தினன்சுக்கிரீவனவனொடுநண்புபூண்டு
திருந்தலர்ச்செருத்தியென்னவுரைத்துநன்முத்திசேர்ந்தாள். ()

வேறு.

மையகார்நிறவண்ணனுமிளவலுமணிதா
ழையதண்புனற்பம்பைமாநதிமருங்கனுமன்
பொய்யில்வாய்மைகேட்டளவளாயவனொடும்போந்து
செய்யதாமரைநாயகன்மதலைபாற்சேர்ந்தார். (சுரு)

தணிப்பருந்திறற்சுங்கிரீபனைத்தழல்சான்றாப்
பிணித்தவன்பினிற்பெட்பொடுந்தோழமைகொள்ள
வணங்குவெஞ்சிலைகொடுங்கணைவாலிமார்புருவப்
பணித்தியென்றலும்பங்கயக்கண்ணனேர்ந்தனனால். (சுசு)

வாலிதிண்டிறலுரைக்குவன்மகிழ்ந்துகேட்கென்னச்
சீலமெய்தியசுக்கிரீவன்றெளிந்துரைப்பா
னாலமன்னமாயாவியென்றுரைத்திடுமவுணன்
காலனன்னவோர்வாலியைக்கடுஞ்சமர்க்கழைத்தான். (சுஎ)

ஆங்கவன்றனைத்துடர்ந்துபோய்பாதலத்தணைந்து
வீங்குதோளுடையவுணனதாருயிர்வீட்டி
யீங்குறுமையினிறந்தனனெனமனத்தெண்ணி
நீங்குபாதலமடைத்தியானெடுநகர்புகுந்தேன். (௬௮)

வாலியாருயிர்மறிந்தனனென்றெனக்கமைச்சர்
கோலநீண்முடிசூட்டலுங்கொடுந்தொழில்வாலி
காலினாற்பிலமடைத்திடுங்கல்லினையுடைத்தென்
பாலடைந்தியானிரப்பவும்பருவரல்விளைத்தான். (௬௯)

மந்திரத்தினைக்கடவினைமற்றொழிற்கழைத்துத்
துந்துமிப்பெயரரக்கனதாருயிர்தொலையா
வுந்திமேலெடுத்தெறிதலுமதங்கருற்றுறையு
மிந்தமாதவச்சாலையினெய்திவீழ்த்ததுவே. (௭0)

மதங்கமாமுனியாங்கதுநோக்கியவ்வாலி
கதங்கொடுங்குறிற்கதிர்முடித்தலையொருநூறு
விதம்படத்தனிதெறிக்கெனவெகுண்டுரைத்ததனா
லதிர்ந்துவாலியிங்கணைவுறானெனவிவணமர்ந்தேன். (௭௧)

துந்துமிப்பெயரரக்கனதென்பிதுதுணைவி
னந்தரத்தெடுத்தெறிகெனவிரவிசேயறைய
மந்தரக்கிரீயனையதைமணிவிரற்றலையா
லுந்தவையிரண்டியோசனையொல்லையேகியதே. (௭௨)

காழ்கொண்டோங்கியொண்டிசையினுங்கவடுவிட்டுயர்ந்த
வேழமார்மரமுருவிடவெய்கெனவிராமன்
றாழ்தடக்கையினாற்றலந்தடஞ்சிலைகுனித்துப்
பாழிமாமரமுருவிடவோர்கணைபணித்தான். (௭௩)

வில்விழுங்குதோளையனதாற்றலைவியந்து
கொல்சினத்தவாலியைக்கதிர்சேயறைகூவ
மல்லினாலவனிவன்வலிதொலைத்தலுமாழாந்
தொல்லைமீண்டகுதுரைத்தலுமிராகவனுரைப்பான். (௭௪)

வேறுகண்டிலநுங்களையென்றுவில்வீர
னூறுதேமலர்ப்பிணையலொன்றணிந்தமருடற்றச்
சேறியென்றலும்வாலியைச்சென்றுபோர்க்கழைப்ப
வேறிரண்டெதிர்ந்தமர்புரிந்தாலெனவேற்றூர். (௭௫)

ஏற்றவெஞ்சமர்புரிதலுமிராமன்வில்வணக்கிப்
பாற்றினஞ்சூழன்றென்னலர்நிணப்புலால்பருகி
யூற்றிருந்துநெய்த்தோருமிழ்பகழியொன்றுகைப்புக்
கூற்றுமஞ்சுறும்வாலிதன்னுயிர்குடித்ததுவே. (௭௬)

பருதிவாலவன் மைந்தனவ்வுலகடிப்பபடுத்துப்
புரவுபூண்டிடப்பொழிகதிர்மணிமுடிபுனைந்து
கருவிவாய்ப்பொழிகாலமாங்கொழிந்திடுகாறு
மருவிதூங்குயர்பிரச்சிரவண்மலையமர்ந்தார். (எஎ)

சிறந்தமல்லலந்திருவினுமிரவிசேய்நம்மை
மறந்தனன்கொலென்றிளவலைவிடுத்தலும்வணங்கி
யறங்கிடந்தொளிர்நெஞ்சினன்கிட்கிந்தையடைந்தாங்
குறைந்தவெய்யவன்மைந்தனுக்கியாவையுமுரைத்தான். (எஅ)

இரவிகாதலனிளவலோடிராமன்மாட்டெய்தி
விரைவின்வானரத்தலைவரைக்குணக்கினுமேற்கும்
பரவுமுத்தரதிசையினும்பனிமொழியணங்கைத்
துருவியொல்லையின்மீள்கெனத்துணைவினின்விடுத்தான். (எகூ)

அங்கதன்றிறற்சாம்பவன்நீலனென்றறையுந்
துங்கவெம்படைத்தலைவர்சூழ்வரச்சுடராழி
மங்குலார்குழன்மடவரற்களிக்கெனவழங்கிச்
சிங்கவேறெனவனுமனைத்தென்றிசைவிடுத்தான். (அ0)

நெடிபடுங்கொடுங்கானமும்வரைகளுநீந்திப்
புடைகொள்வான்பிலமருங்கினிலெய்தலும்போதந்
திடாவிளைத்திடுமவுணனையிராவணனென்ன
வடல்விளைத்தவனுருயிரங்கதன்செகுத்தான். (அக)

அங்கதன்முதலாகியவானரத்தலைவர்
சிங்கவேறனைப்பிலத்துவாரத்திடைச்சென்று
கங்குல்மேயந்தொளிர்கதிர்மணிக்குப்பைகால்விரிக்குந்
துங்கமாநகரிடத்திலோர்தோகையைக்கண்டார். (அஉ)

கண்டவானரருளமிறும்பூதுறக்கருதி
வண்டுபாட்டயர்விரைநிருங்கூந்தனீயானா
யண்டரூர்நிகர்நகரம்யார்நகரருமபவளம்
விண்டுகூறெனமின்கொடிமென்மெலமிழற்றும். (அங)

மயனெனுந்திறலவுணர்கோன்வரத்தினுல்முன்னம்
வெயில்செய்பொன்னினிற்செய்திடும்விழுநகரீது
பயிலுமன்னவன்விசும்பிடைப்பனிமதிமுகத்துக்
குயிலைவேள்வியிக்கோனகரதனில்வீற்றிருந்தார். (அச)

அசசணங்குவேல்மயனுடையாருயிர்மடிய
வசிரப்படையெறிந்துவானவர்க்கிறையகலக்
கெசசையங்குழற்றிருநிகரோமைக்கந்நகரம்
பசைமாலுந்திபூத்தவன்பரிவுடனளித்தான். (அரு)

தாமச்செப்பெனப்பணைத்துயர்தரளமென்கொங்கை
யேமையென்பவளிங்கதொன்வயினளித்துக்
காமர்வானுலகடைந்தனளென்றலுங்கவிக
மேவோதியானுசென்னெறிகாட்டெனத்தொழுதே. (அசு)

அஞ்சனப்புயனுதர்நீர்பிலமகல்பேபச
செஞ்சவேவிழிபுதைக்கெனச்செங்கையாற்புதைப்பா
விஞ்சைபோன்றவளுணாத்தலும்வெம்பிலமகன்று
மஞ்சுகண்படுமயேந்திரவரையின்வந்தடைந்தார். (அஎ)

ஆங்கணெய்தியவங்கதன்முதலியவீரர்
கோங்கமென்முலைக்கொம்பினைக்கண்டிலமன்றி
யீங்குபோரிடைச்சடாயுவைப்போலவீய்ந்திலமெய்
றேங்குமாற்றங்கேட்டிருந்தசம்பாதியீதுரைப்பான். (அஅ)

எம்பிவீய்ந்தமைகூறுமின்னென்னலுங்கவிக
ணம்பிராகவனன்மனைக்கிழத்தியையரக்கன்
வெம்புகாட்டிடைவவ்வலுஞ்சடாயுமுன்விலக்கத்
தும்பைமோலியான்சுடர்மணிவாளினுற்றுணித்தான். (அகூ)

மாழைநோக்கியைக்கொண்டவனேகலும்வருந்திப்
பாழியம்புயத்திராகவன்பருதிசேயோடுந்
தோழமைக்கொடுவாலியைத்தொலைத்தரசளிப்ப
வேழைபோமிடநாடுமென்றெங்களைவிடுத்தான். (கூ0)

என்னவோதலுமெருவைவேந்துளங்கசிந்துருகி
முன்னம்பானுமென்றம்பியுமொய்கதிருலகின்
மன்னுவான்பறந்திடுதலும்வருந்துமென்றம்பி
தன்னையென்னுடைச்சிறையினுற்றயாவொடுங்காத்தேன். (கூக)

வெய்யவன்கொடுங்கதிரினுல்மென்சிறைகருகி
மையலோடுமிம்மயேந்திரவரையினில்வீழ்ந்து
பையுளுற்றனனெம்பியெவ்வுழிப்படர்ந்தனனோ
வையன்மீரஃதறிந்திலனிவ்வுழியமர்ந்தேன். (கூஉ)

யான்பயந்தருள்சுபாரிசனுனெனக்களிப்பான்
வான்படர்ந்துயர்மயேந்திரவரையின்மேவுதலு
மூன்படர்ந்தவேலிராவணனோரணங்கோடு
கான்படர்ந்தனனேகலுங்கன்றுபோர்ப்பிடித்தான். (கூங)

பொருந்தவெளவலுமிராவணன்புரந்தருள்கென்ன
வருந்திக்கூறலும்விடுத்திவண்வந்தவைபுகல
திருந்துமாதவர்சீதையுய்ந்தனளெனச்செப்பல்
புரிந்துகேட்டனன்பார்வைக்குந்தோன்றிலனென்றான். (கூச)

முன்னிசாசரர் முனிவரனிராகவன்றூதர்
மன்னினின் சிறைமாண்புடன்முளைத்திடுமென்னப்
பன்னினனெனப்பகர்தலும்பண்டுபோற்சிறகர்
துன்னிநன்கினின்முளைத்திடராமனைத்துதித்தான். கூ௫)

சீதையாண்டுறையிலங்கையுட்சேர்ந்தனளென்ன
வோதிவீய்ந்தவச்சடாயுவுக்கிருகைநீருகுத்துக்
காதல்கூர்தரும்வானரர்க்கின்னுரைகழறி
யேதமற்றிடுமெருவைவேந்தேகினனன்றே. (கூ௬)

துன்றுவார்சிறையெருவைவேந்தேகலுந்துவன்றி
நின்றுவீரருணினைந்தபேருவகையராகி
வென்றுமாருதிதிரைக்கடல்கடக்கெனவிளம்பக்
குன்றின்மீதிவர்கோட்புலிப்போத்தெனவிவர்ந்தான். (கூ௭)

வேறு.

அங்கண்வானுலகணவுமாயேந்திரவரையினின்றனுமன்
றிங்கணீண்முடியுரிஞ்சச்செல்வுழிமகபதியொறுப்ப
மங்குல்சேர்வழிநீரினுண்மறைந்தமைஞ்ஞாகமென்னுழையிற்
றங்கியேகெனவதனைத்தடக்கையிற்றடவந்துபோனன். (கூ௮)

திரைசெய்தெண்கடன்முகட்டிற்கலுழனிற்செல்லுமாருதியைச்
சுரசையென்பவடுப்பத்தன்னுடைப்பேருடல்சுருக்கி
விரைவின்வாய்வழிப்போகிமெய்ந்நிழல்வவ்வுபேரரக்கி
குருதிவாயிடைப்புகுந்துகுடற்பறித்திலங்கையிற்குதித்தான்.()

கன்னிமூதெயிலுடுத்தகடிநகரிலங்கைகாத்தோம்பு
மின்னுநக்கவாளெயிற்றவணங்கின்வெங்கொடிற்றினிற்றாக்கி
யன்னமாநகர்முழுதுமங்கையிற்கனியெனநோக்கி
வன்னமேகலையணங்கைக்காண்கிலனுய்வருந்துற்றான். (க௦௦)

திங்களின்வடிம்பிடறுசினைமலரசோகநன்னிழலின்
மங்குலூடொளியெறிக்குமாசுபூத்தமென்கொடிபோல
வெங்கண்வாளெயிற்றகல்வாயரக்கியர்மருங்குவீற்றிருக்கு
நங்கைவாண்முகநோக்கிநன்னுதற்சீதையென்றுணர்ந்தான். ()

அன்னகாலையினெய்தியரக்கர்கோனிரப்பவுமறுத்த
கன்னிமாதவக்கொழுந்தின்கற்புடைமாட்சிமைநோக்கித்
துன்னுகங்குலின்யாருந்துயில்வுழியாழிகைக்கொடுத்துப்
பொன்னின்வார்சிலைக்குருசில்புகன்றவையாவையும்புகன்றான்.

ஆங்குநின்றெழுந்தனுமனடைகப்பசுந்தளிரீன்ற [ப
தேங்கொணுண்மலர்ப்பொதுளுஞ்சோலைகள்யாவையுஞ்சிதைப்
வீங்குதோளினர்வில்லர்கிங்கரர்வெஞ்சமருட்டற
வோங்கலன்னதோள்வலியாலன்னவராருயிரொறுத்தான். ()

கயிலைமால்வரையெடுத்தவன்பணித்தலுங்கடற்படைத்தலைவ
ரயிலெயிற்றவாளரக்கரைவருமமைச்சர்தம்மைந்தர்
வெயிலெறிக்கும்வாளுழவரொழுவரும்வெஞ்சமருடற்ற
வுயிர்குடித்தவர்புண்ணிநீரொழுகிடவுடல்பிழிந்தெறிந்தான். ()

மீட்டும்வாளெயிற்றரக்கன்விடுத்தருள்சம்புமாலியைத்தன்
றோட்டுணைப்பெருவலியாற் றொலைத்தலுமிலங்கையர்பெருமா
பூடடுவெஞ்சிலைக்குமரனைநக்கனைப்போர்க்கெதிர்விடுப்பச் [ன்
சேட்டிளங்களிறனையானழலெழநிலத்தொடுந்தேய்த்தான். ()

வயிரவாட்படையுழவன்மறங்கெடவரிசிலைகுனிக்கப்
புயனிறத்தவெந்தழற்கணிராவணியமர்க்கெதிர்புகுந்து
வெயிலெறித்தழல்கவிழ்க்கும்விரிஞ்சன்வெம்படையினில்வீக்கி
யயிலெயிற்றவாளரக்கன்முன்னரவ்வனுமனையுய்த்தான். (க0சு)

ஆரைநீயெனமுனிவுறவரக்கரைக்கிளையொடுமறுப்பான்
வீரவெஞ்சினமுரைத்தவில்லிதன்றூதன்யானின்னே
சோர்விலக்கற்புடையணங்கைவிடாயெனிலுன்னுடறுணியா
வீருளுன்சுவைபேய்க்குவழங்குமவ்விராகவன்பகழி. (க0எ)

என்றுமாருதியுரைப்பவிராவணனெளிதினிற்குரங்கைக்
கொன்றுநீக்குமினென்னலும்வீடணன்றூதரைக்கோறல்
வென்றியன்றெனவிலக்கவாலினில்வெண்டுகில்சுற்றி
மன்றவெங்கனல்கொளுத்திவல்லையில்விடுக்கெனவுரைத்தான்.

அன்னவாறுவெவ்வரக்கர்வாலிடையாரழல்கொளுத்தக்
கன்னிமுதெயிலுடுத்தகடிநகரிலங்கைதீயூட்டி
யன்னமேகலையணங்கைப்பணிந்துசூளாமணிவாங்கிப் [ன்
பின்னர்வெண்டிரைக்கடறாய்மகேந்திரத்தடைந்தனன்பெரியோ

வாலிமைந்தனைத்தொழுதுமாதினைக்கண்டமைவிளம்பிப்
பீலிமாமயில்கவுமதுவனமழித்தனன்பெயர்ந்து
நீலமால்வரையனையநெடியவன்சேவடிவணங்கிச்
சாலிமீன்பெருங்கற்பிற்றையலைக்கண்டமைபகர்ந்தான். (கக0)

பகர்ந்தமாருதிபின்னும்பரிவொடும்வேறிருந்தேந்தி
முகிழ்ந்துவீங்கிளமுலையாள்வழங்கியமொய்ச்சுடர்மணியைப்
புகழ்ந்துநல்கலும்வாங்கிப்பொருப்புறழ்தடம்புயம்பணைப்ப.
மகிழ்ந்துகண்மணிகுளிர்ப்பநோக்கினன்வரிசிலையிராமன். ()

ஒற்றையாழியந்தடந்தேரூர்பவன்மைந்தன்முன்னடப்பக்
கொற்றவெஞ்சிலைக்குருசில்குறுகலாருயிர்குடிக்கும்
வெற்றிவாளுடையிளவல்பின்வரவிரைவினிற்போதந்
தெற்றுதண்டிரைசுருட்டுமிரங்குநீக்கடற்கரையிறுத்தான். ()

இராமன்வனம்புகுந்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கஎக.

## இருபத்துமூன்றாவது

# இராவணவதையத்தியாயம்.

அள்ளற்கருஞ்சேற்றிடைப்பெடையோடலவனடுஞ்சிறுகுழியைக,கள்வாயுயிர்க்குநறும்புன்னைத்தாதுதூர்க்குங்கடற்கரைவாய், வள்ளல்கடலந்தானையொடுமிறுத்தல்கேட்டுவல்லரக்கன்,றெள்ளுமறைநூற்றுறைபோயதோர்சிந்துணைவரொடுந்தேர்ந்தான். (௧)

அன்னகாலைவீடணன்போரரக்கர்கோமான் முகநோக்கிக்
கன்னிக்கற்பினுருவமைந்தகமலத்தடங்கட்சானகியை
யின்னேவிடுதல்நெறியெனலுமிலங்கைவேந்தன்முனிந்துரைப்ப
மின்னுநகுவேல்வீடணன்போய்இராமனுழையின்மேவினான் (௨)

கல்லுங்கருங்கட்பெண்ணாகநடந்தகமலக்கழற்காலோன்
மல்லார்தடந்தோள்வீடணனைமதிநூற்றுறைபோமாருதிதன்
சொல்லாற்றேறியிலங்கைநகர்க்கிறைநீயென்னச்சுடர்பரப்பி
எல்லோன்போலவிருடுருவுமெரிமாமவுலிசூட்டினான். (௩)

உரவுத்திரைநீர்க்கடலடைப்பான்வருணர்ப்பழிச்சியுயர்கரையின்,விரியுந்தருப்பசயனத்தின்மேவியோரேழ்நாளுறைப,வருணன்போதந்திலனாகவொருண்டவெரிவெஞ்சிலையிலெடுடும், புருவசிலைகால்குனித்திடலும்புகைந்ததவோரேழ்புணரியுமே. (௪)

கரைகொன்றிரங்குகடல்புகையவருணன்வெருவிக்காகுத்தன், விரைமென்கமலத்தாள்பணிந்துவேலையடைப்பானுரைத்தேகச், செருவேக்கறவுற்றுயர்திணிதோடசெம்மனளனாலணைகட்டிப், பருதிமான்றேரெதிர்தடக்குஞ்சுவேதவரையின்பாலிறுத்தான். (௫)

இறுத்ததானையிடைப்புகுந்தசுகசாரணரையெதிர்பற்றிச், செறித்தகழற்கால்வீடணன்போய்ச் செங்கடகரியோன்முன்னுய்ப்ப,வொறுத்தகறீதுவிடுத்திடெனவிடுப்பவொற்றர்பணிந்தேகிக, கறுத்தநெஞ்சினிலங்கையர்கோனறியவனைத்துங்கட்டுரைத்தார். (௬)

கரியதிரைவாருதிசிவப்பக்கடைக்கண்சிவந்தோன்றனைக்காண்பான், றிருகுசினத்தவாளரக்கன்செம்பொன்மணிக்கோபுரமிவர,வரைகொன்றுயர்ந்தமணித்தடந்தோளரக்கற்காண்பான்மணிவண்ணனிரவிதடந்தோசசெலவாற்றுஞ்சுவேதவரையின்மீதிவர்ந்தான். (௭)

வெள்ளிப்பொருப்பையெடுத்தபுயனிவனுமென்னாவீடணன்போர், வள்ளற்குரைத்தல்கேட்டிடலுமணிக்கோபுரத்தின்மி

முல்லைப்போதுமுறுவலிப்பமுகிழ் மென்காந்தள்கைகுலைப்ப, மல்லலோங்குகனமுகட்டினிமையாக்கருங்கண்மயிலாலக், கொல்லுங்கூற்றிற்பிரிந்தவர்மேல்வாடைநடப்பக்கடல்குடித்துக், கல்லென்றிடித்துத்துளிபிலிற்றிப்புகுந்ததண்காரகாலம்.

தண்ணென்முத்தவடநீக்கித்தழல் வெண்பொறியுண்பேரொலியின், வண்ணச்செங்கேழ்மயிர்ப்போர்வைபோர்த்துநானம்வடிகொண்ட, சுண்ணமாடிசசண்பகமென்றுணர்ப்பூந்தாமங்கமழுமுடித்,தண்ணல்வளியுமிடைபோழாமுயக்கிலணங்கோடின்புற்ருன். (உக)

பருத்தாட்செந்நற்கொழுங்கதிர்கள் பவளக்கோர்வைத்துணர்தூக்கக், குருத்துவிரிக்குங்கோளையவரம்பைசுமந்தகூன்புறக்காய், விரித்தமென்ரேற்சிறைப்பறவையணில்வாய்க்கொண்டுமேவுதுணைக், கருத்தவழல்வாய்வாடையொடுங்கூதிர்காலமணைந்ததால். (உஉ)

மயிர்வாய்க்கூந்தற்பிடியூர்ந்து வள்ளைபுரட்டுமதர்நெடுங்கண், வெயில்கொப்புளிக்குமருமணிப்பூண்மகளிர்போந்துவிளைசெறிவிற், பயிலுமன்னத்தொடுமொதுங்கிப்பைந்தாட்செந்நெற்கதிர்சூடிக், கயவாய்வாளைப்பகடுழக்கும்புதுநீராடிக்களிப்புற்ருன். (உங)

கவைத்தாளலவன்றிளைத்தகுழிக்கழைகண்வெடித்தபருமுத்தங், குவித்துத்தூர்க்குஞ்செழும்பழனவிளையாடடயர்ந்துகுவளைக்கண், செவித்தாரகற்றுஞ்சீதையொடுந்திண்டோட்செம்மல்செம்மாப்புற், றுவப்பினேடுமுறைநாளினுற்றதுடற்றும்பனிக்காலம். (உச)

பனிதச்சுண்ணமுகிரளைந்துப்பருககாழாரநறுந்துகளின்
வளவித்திதலைமுலையணிந்துவடிக்கண்கரியமையெழுதி [திற்
நளிகொன்ரேங்குகுருஉப்புகைதாழ் நகைவெண்முத்தமஞ்சத்
றுளவநெடுமால்சீதைமுலைக்குவட்டி னுள்ளந்துவக்குண்டான்.

வேறு.

பூந்துகள்கமழவட்டிப்பொற்புவீற்றிருந்தமாரிற்
சாந்தகங்கிழியச்சாடித்தடமுலையுழக்கநங்கை
யேந்தலோடிருக்குநாளின்வலம்புரிசூற்கொண்டென்ன
மாந்தளிருறழுமேனிவாலுதல்கருப்பமுற்ருள். (உரு)

அய்யசெங்கமலமன்னமுகம்விளர்ப்பெய்தவும்பொற்
றெய்யில்மென்முலைகள்வீங்கத்துடியிடைகண்ணிறேருன்ற
மையவாங்கரியகூந்தல்கரியமாசலாகையுண்டு
மெய்மெலிந்துயங்காளும்விழுத்தகுவயர்நோயுற்ருள். (உள)

திருந்தெழிற்குழையுந்தோடுமொளிகெழுதிருவில்வீசக்
கருங்கண்வெம்முலைகடாங்கிருசுப்பிறுமென்றுகாமர்
மருந்துநாய்நாவினன்னமலரடிச்சிலம்புபம்ப
முருந்திளமுறுவற்சீதைபிராகவன்முன்னருற்றாள். (௨௮)

வந்தடிவணங்கிநின்றவணிருங்கூந்தற்செவ்வாய்ப்
பைந்தொடிதன்னைப்புல்லிப்பவளவாய்க்கனியைமோந்தாங்
கந்தமிலுவகையோடுகுறங்கின்வைத்தமுதச்செவ்வாய்ச்
செந்திருவயர்நோய்தன்னால்விளைந்ததென்செப்புகென்றான். ()

என்றலுநாணினோடுமெழில்புனையெருத்தங்கோட்டி
நன்றறிமுனிவர்தங்கள்பன்னியர்மருங்குநண்ணிப்
பொன்றருநிதியநல்கிப்போந்திடவேண்டுமென்னக்
குன்றனோனேர்ந்துபுல்லவெண்ணெயிற்குழைந்திட்டாளே. ()

அத்தவெற்படைந்தவெய்யோனுதயவெற்படையுங்காறுங்
கத்திகைக்கருமென்கூந்தற்காம்புறழ்பசியமென்றோள்
முத்தகமுரிஞ்சும்பொம்மன்முகிழ்முலைப்பவளச்செவ்வாய்
மைத்தவழ்கரியவுண்கண்மங்கையோடாடினானால். (௩௧)

வேறு.

புலரியிலேமானங்கையோடெழுந்துபூம்புனலாடிவெண்கதி
ர்கா,விலகொளிர்திங்கட்கண்ணியோரைப்போற்றியெண்ணலாதி
றையொடுமனாங்கும், விலகிவில்லுமிழும்வேந்தவையதனின்
மடங்கலந்தவிசின்மேவுதலு, முலகெலாமுழன்றுதிரியுமாகதரு
மொற்றருமவ்வழியுடைந்தார். (௩௨)

எங்கணுந்திரியுமாகதர்தம்மிற்பத்திரன்றனையிறைநோக்கி,
யங்கண்மாஞாலத்தென்செயல்யாருமுரைக்கு மாறறைகுதியெ
னலும், பொங்கியதருமவொழிக்கினனெறியிற்பொற்பினில்வி
றலினில்நினைக்குந், துங்கநீமிலகிலேனையிலையென்னச்சொல்லு
வாரொனத்தொழுதுரைத்தே. (௩௩)

பின்னுமொன்றுரைப்பருலகினிலரக்கன் வவ்வியபெய்வ
ளைதன்னை, மன்னினனென்னவென்றலுமொற்றர்வாண்முகமெ
ந்தைநோக்குதலு, மன்னதுசரதமெனவவருரைப்பவேந்தவை
யகன்றுவளகத்திற், றன்னுடைத்துணைவரோடுமாங்கெய்தியில
க்குவனோடிதுசாற்றும். (௩௪)

தொககபேருலகம்பழித்தவையொழியாத்தோமுறுமாந்த
ரையாரு, மக்களிற்பதடியென்பர்கள்சீதைமாண்புடைப்பத்தி
னியேனும், பொக்கமதறையோர்செல்வமேபோலமுனிவரர்சா
லையிற்போக்கித், தக்கபேருணர்வோய்மீள்கெனவிளவல்தாம
ரைக்கண்பனிபுகுத்தான். (௩௫)

வெற்புறழ்தடந்தோ ளிளையவன்பொலந்தேர் சுமந்திரன் கொணர்கெனவிடுப்பப், பொற்புறுமணித்தேராங்கவன்கொண ரப்பூங்குழலுறையுளினெய்திக், கற்பினுக்கரசைத்தொழுதுமா முனிவர்சாலைகண்ணுற்றிவண்மீள, வற்புடனெழுகென்றுரைத் தலுமகிழ்வுற்றாய்கொடித்தேர்மிசையிவர்ந்தாள். (௩௬)

கோமதியென்னுநதிக்கரையெய்திக் கூரிருட்கங்குலாங்க மர்ந்து, காமருகதிரோன்றோன்றியபின்னர்க்கங்கையங்கரையி னிற்புகுந்து, நாமவேற்றடக்கைச்சுமந்திரன்றன்னையவ்வுழிநிறு வினனம்பி, யேமுறுமம்பிதன்னிலாயிழையோடெறிதிரைக்கங் கையாறகன்றான். (௩௭)

கங்கைமாநதியைக்கடந்துவான்மீகி கருதருஞ்சாலையினணி த்தாய்ச், சிங்கவேறனையவிலக்குவனெய்திசீதையைவணங்கியீ துரைப்பான், மங்கைகேளரக்கன்வெளவியநின்னைமனையகமீட் டுவைத்திடலா, லங்கண்மாஞாலம் பழித்ததென்றுணர்ந்தாங் காரியன்றுறந்தனனென்றான். (௩௮)

எனறலுங்கற்பிற்கரசிவெய்துயிர்த்தாங்கிருகணீர்முலைமுக ட்டொழுகப், பொன்றினள்போலவிருநிலத்தயர்ந்துபுலம்பொ டுமொருவழியெழுந்து, நன்றுநங்கேள்வனருளெனவெண்ணி நாப்புலர்ந்துள்ளழிந்தாயன், கொன்றநீண்மரம்போலெழினல ம்வாடிக்குற்றுயிரொடும்பதைபதைத்தாள். (௩௯)

அழுதுவெய்துயிர்க்குநிலத்திடைப்புரளுமஞ்சனவண்ண வோவென்று, தொழுமுயரூழின்வலியினைவீய்க்குந்துணையெவ ரொன்றுகைந்நெரித்து, விழுமிளையவன்றன்வாண்முகநோக்கிவி டுத்தமைசரதமோவென்னு,மழலையங்குதலைச்சீதையைநோக்கி யிலக்குவன்மற்றிவைபுகல்வான். (௪0)

மாழைமென்னோக்கிதுயருறுநினதுகற்புடைமாட்சியையி ந்த, வாழிசூழுலகின்யாவருமுணரவாரியன்றுறந்தனனன்றி, யூ ழினையாரேயுப்புறங்காண்பாரென்று கண்ணூற்றிருந்தொழுகச், சூழிமால்யானை யிளையவன்போகிச் சுமந்திரனிருந்துழிப்டைந் தான். (௪௧)

வலைப்படுமடமான்பிணையெனவயருமயிலைவான்மீகிகண்டி ரங்கி, யலக்கணுற்றழுங்கலன்னைநீவிதியையாருளருலகினில் வென்றார், கலக்கணீருகுத்துமாகுமாறென்கொல்கலங்கலையெ ன்றுளந்தேற்றி, நலத்தகுசாலைத்தவம்புரிமடவார்கையடையா கலல்கினனால். (௪௨)

அண்ணலையெண்ணிநோற்றுயர்சீதையருந்தவர்மகளிரோ டிருப்ப, வண்ணவெஞ்சிலைக்கையிளையவன்றடந்தேர்ச்சுமந்தி

ரன்வாண்முகநோக்கி, யெண்ணம்வேறின்றி வினைத்தவிச்செய லாலிறந்துபாடுறுவன்யானென்னக், கண்ணிறைந்தொழுகுபுன் வினைத்தனதுகையினாற்றுடைத்திவைபுகல்வான். (சங)

அருந்ததிகணவன்றவப்பெருஞ்சாலைதனிற்றுருவாசன்வ ந்தடையப், பருந்துவீழ்நெடுவேற்றயரதன்சென்றென்பாலர்த ம்மாயுளுந்திறனும், திருந்தநீயுரைத்தியென்றலுமுனிவன்றேவு ரோடேற்றமருடைந்து, பெருந்தவப்பிருகுமனைவிகையடையா ப்பிறையெயிற்றவுணர்சென்றடைந்தார். (சச)

உடல்சினத்திகிரிப்படையினாற்பிருகுமனைவியையொறு த்தலுமுனிவ, னடுசினங்கதுவிநீயுநின்மனையையளப்பினாட்பிரி ந்துமானுடனாய்ப், படுதுயருழத்தியென்றலுமுகுந்தன்பையுரு ற்றவிர்மதிக்கண்ணி, விடையுயர்கடவுள்சேவடிவழுத்தமெல்லி யல்பாகன்வந்தடைந்தான். (சரு)

பன்றியாய்முன்னமளப்பினாடேடிக்காண்கலாப்பங்கயமல ர்த்தா, ளின்றியான்காணப்பெற்றனனென்னுவிருகணீர்வாரவே த்துதலு, முன்றனைபிருகுவுரைத்தவெஞ்சாபமொழிவதற்கி ராமனாயரக்கர், பொன்றிடத்தோன்றிச்சீதையைப்பிரிந்துப்பாற் கடற்பொருந்துதியென்றான். (சசு)

ஆங்கவனீன்றமைந்தரின்மூத்தோனாலைகடல்விளிமடுத்தோ ங்கு,தீங்கறவுலகம்பதினோராயிரமாண்டொருகுடைநீழலிற்செ லுத்தி, நீங்குதன்னுருவிற்பொருந்துவனென்னநிகழ்த்துதல்கே ட்டனனதனாற், கோங்கிளமுலையைத்தணந்தனனென்னக்கோம திநதிமருங்கடைந்தான். (சஎ)

தத்துநீர்த்தரங்கக்கோமதிகடந்துபுலரியினயோத்தியிற்சா ர்ந்து, முத்தவெண்கவிகையிராமனைத்தொழுதுபுரிந்தவையா வையுமொழிந்து, வித்தகமூன்றுநாளவையுறுது வெறுநிலத்த யர்வொடுமிருப்பி, னெத்தலத்துள்ளவுயிர்களுமுய்யாதிறந்து பாடுறுமெனவுரைத்தான். (சஅ)

எழுவுறழ்தடந்தோளிலக்குவனுரைத்தமொழியினையிகந் திகலிராமன், மழையுறழ்தடக்கைநிருதனாடோறுமறையவர்க் காயிரம்பெற்றம், விழைவுடனளிக்கவொருவனுக்களித்தபசுவி னையுணர்கலான்வேறோர், பழமறைமுனிக்குநல்கமுன்பெற்றோ ன்பசுவினைத்துருவினனறிந்தான். (சகூ)

கன்கலநகரின்மறையவன்மனையிற்கண்டுதன்பசுவெனத்தொ டர, முனிவரர்தம்மினெனதெனதென்றுமூரிவேல்மன்னவன் கோயிற்,புனைமணிவாயிலெய்தியோர்பகற்போதிருப்பவும்புகல் பவர்ப்பெறாமல், வனைகழல்வேந்தையோந்தியாகென்னவைது தம்பதியினிற்போனார். (ருo)

மன்னனுமீர்வாள்புரைமுதுகோந்தி வடிவினிற்பலபகல்கி
டந்து, பொன்னவிராழிக்கண்ணனல்லருளாற்புண்ணியத்துறக்
கவீடடைந்தான், றுன்னுமோர்பகலின்வேந்தவையுறுதோனெ
ய்தியதுயரிதுதோன்றுற, வின்னுமோர்காதைகேட்டியிவ்வுலகா
ள்நிமியெனவுரைக்குமோர்வேந்தன். (௫௧)

சீர்கெழுவசிட்டமுனிவனைப்போற்றித் தீர்க்கசத்திரமெனு
மெச்ச, மோர்பெறவெனக்குப்புரிதியென்றுரைப்பமுனிவரனிந்
திரற்கெச்சம், வேரியந்தொடையோயியற்றிமீண்டெய்திப்புரிவ
னென்றேகலும்வேந்த, ஞரியர்புகழுங்கௌதமன்றன்றலைருமக
மினிதினிற்புரிந்தான். (௫௨)

அவ்வுழியரசன்கடையிலில்வசிட்டனமர்தலுமெய்தியேத்
துருமற், றெவ்வடுவேலான்கண்படைபுரியச்சினவினான்மறைபு
ணர்முனிவ, னெவ்வெலாத்திசையும்வென்றவேலிறைவனிறந்
திடவைதலுமிறைவன், செவ்விநிற்றுயில்வோற்சபித்தலான்மு
னியுமிறக்கெனச்சீறினன்சபித்தான். (௫௩)

ஒருவருக்கொருவர்சாபமாநெருப்பி னுருவிருலந்தனரொ
ழியப், பொருவரும்வசிட்டனுடற்பொறைநீங்கிப்புனிதமென்க
மலவீட்டுறைய, மருமறைகிழவனருகுவந்திடலுமித்திரர்வரு
ணனுக்கன்பு, தருமகவாகியேயோனியினன்றிப்பிறக்கெனச்சாற்றி
னன்விடுத்தான். (௫௪)

உருவவொண்கதிர்கால்மித்திரர்ப்புணரவுருப்பசியெய்திடு
மேல்வை, வருணனுங்கெய்திவனமுலைப்போகந்தருகெனமறுத்
தனளாகத், திருவமேகலைநிற்குறித்துவிரியந்தைச்செழுங்குட
த்துய்ப்பனென்றிடலு, மருமலிகுழலாள்கொந்தனுளேகவருண
னகடத்திறுள்விடுத்தான். (௫௫)

விடுத்தபொற்குடத்தினகத்தியன்றோன்றமித்திராவருணி
யென்றுலகை, மெடுத்திடுபெயரின்வசிட்டனுங்குதித்தானிலவித
முருப்பசியென்னு, மடக்கொடிதன்னைமித்திரர்நோக்கிமானிட
வேந்தனைப்புணர்கென், றடுத்திவைபுகன்றுனிமியினையமரர்கண்
ணிமைதொறுமமர்கென்றார். (௫௬)

நிமியுடற்பேணியருமகமுடித்துங்கரறுமுனிவரர்யாரு, மி
மையுமவ்வுடலையரணியின்மதிப்ப நிமியெனுமரசனுங்குதித்தா
ன், தமையுடைஞானச்சனகனென்பதுவும்விதேகனென்பதுவும்
வார்கழற்கா, லுமிழ்கதிர்வேலானுமமென்றையனுரைத்தலுமி
ளையவனுரைப்பான். (௫௭)

பொருவருங்குருவோடெதிர்முனியாதுபொறுத்திலன்வே
ந்தனென்றுரைப்ப, வருவரைத்தோளாயருளிறுற்பொறுத்தவ

ரசனற்காதைகேளென்னத், திருவமரியகதிதெய்வயானைபைச்சீ
ர்சிறந்தசன்மிட்டையைச்சேர, மருவுசன்மிட்டைபுருருவைப்
பயந்தாள்மற்றவளெதுவினையின்றுள். (ருஅ)

தேங்குழற்றெய்வயானையைவெறுத்துச்சிறந்தசன்மிட்டை
யைப்பொருந்தும், வீங்குதோள்வேந்தைச்சுக்கிரன்கிழவனுகெ
னச்சபித்தலும்வேந்தன், பாங்குறைமைந்தர்தம்மொடுமொனது
கிழவுருப்பரிக்கெனயாரும், வாங்கலர்மறுப்பப்பூருமற்றதனைவ
வ்வவாண்டாயிரமகிழ்ந்தான். (ருகூ)

ஆயிரம்பருவமகளிரோடின்புற்றமர்ந்தபின்கிழவுருவதனை [து
யேயநன்மைந்தனளித்திடவாங்கி யிளமையைமைந்தனுக்களித்
மாயிருஞாலம்புரக்கெனமவுலிபூருவைச்சூட்டிமற்றெதுவைத்
தூயநன்மவுலிக்குரியைநீயல்லையென்றுயர்துறக்கமேயினனால்.()

என்றிடராமன்வேத்தவையெய்திமகிழ்வொடுமிருந்திடுமே
ல்வைப்,பொன்றருந்தவந்துப்பார்க்கவச்சவனர்முதலியமுனிவ
ரர்புகுத,வென்றிவேற்குரிசில்பூசனையாற்றிப்போந்ததென்விள
ம்புதிரென்ன, நன்றறிமுனிவரிராகவற்காசிநவின்றிவைபுகறன்
மேயினரால். (கூக)

கூற்றுறழ்மொய்ம்பிற்கோபனன்மைந்தன்மதுவெனுங்கொ
ல்சினத்தவுண, னீற்றொளிபழுத்தபவளவார்வேணிநிருமலக்க
டவுளைநாளும், போற்றலுமொன்னார்கடற்படைவிழுங்குஞ்சூல
மொன்றளித்திறைபோக, மாற்றெறிகும்பினசிமுலைபுணர்ந்துவ
யங்கெழு மிலவணற்பயந்தான். (கூஉ)

பயந்திடுமிலவணச்சுரன்கொள்ளப்பாய்கதிர்ச்சூலமும்வ
ழங்கி, வயங்கெழுகதிர்வேல்மதுவெனுமவுணன்வருணலோகத்
தினிலடைந்தான், கயம்படுகோதாவரிக்கரையுடுத்ததேயமாண்
டருந்தவர்கவல்வுற், றயங்கிடவருத்திப்பறவையின்விலங்கினள
ப்பிலவோர்பகலுண்பான். (கூங)

ஆங்கவனிழைக்குந்தீவினைக்காற்றுதடல்கெழுமிராவ்ணற்
செருத்த, வாங்குவிற்கல்விகேட்டிவணடைந்தேமற்றவற்செகு
த்தருளென்னத், தீங்கறுமுனிவருரைத்தலுமிராமன்றிறல்கெ
ழுசத்துருக்கினனை, யோங்கெழிற்செம்பொன்மணிமுடிகவித்
துத்தழீயினனுச்சிமோந்துரைப்பான். (கூச)

அவுணர்கோனீசனளித்தவெஞ்சூல மெடுக்குமுன்னறிவு
ருதடைந்தாங், குவரியின்மதுகையிடவரைமாயோனுெறுத்தவி
க்கணையினுற்கொல்கென், றிவர்வொடுநல்கிவிடையளித்திட்லு
ந்துணைவர்தஞ்சேவடியேத்திக், குவலையமுனுக்கத்தானைமுன்
செல்லக்கோட்புலிப்போத்தெனநடந்தான். (கூரு)

திறல்கெழுதானைக்கடலுடனேகித்திங்களொன்றதரிடைக் கழிப்பி, மறைமுழுதுணர்ந்ததவத்துவான்மீகிமாதவச்சாலையி னெய்திக், குறைவறுபூசைமுனிவரனுற்றக்கொண்டுளமகிழ்ந்த தற்கயலே, யுறையுமிச்சாலையாதெனவினவவருந்தவனுவகை யோடுரைப்பான். (௬௬)

மறங்கெழுதாசன்றவத்தினு லின்றமிழ்நிசகனெனுமன் னன், சிறந்திடுவேட்டமாடலுமங்கோ ரரக்கனுமாக்கியுஞ்சே ர்ந்து, பிறங்கெயிற்றகல்வாய்க்கொல்சினப்புலியும்பெட்டையு மாய்ப்புணர்ந்திடலு, நிறங்கிளர்கணையாற்பெட்டையைக்கொ ல்லவரக்கன்வெம்புலியுருநீத்தான். (௬௭)

புலியுருநீத்தவெஞ்சினவரக்கன்புரவலனினக்குமோர்தீமை, நலிதரவிளைப்பனென்றவனேக நாமவேலிறைநகரடைந்து, ம லைவறமகமொன்றியற்றிடுபோழ்தின்மறையவில் வசிட்டவல்லு ருவி, னிலகெயிற்றரக்கன்போந்துவெந்தசைபோனிணமுநல்கெ னவிறைநொந்தான். (௬௮)

அன்னவல்லரக்கன்மடைத்தொழிலாளனுருவினிலடைந் துமானுடர்தந், துன்னுசெந்தசையையினிதிலட்டுத்தூயவெ ண்சோற்றொடுங்கூட்டி, மன்னவன்கையின்வழங்கமற்றவனும்வ சிட்டனுக்குணர்கலாதளிப்ப, வன்னருநரனுணவித்தலால்மன் னவரக்கனுபுறைகெனச்சபித்தான். (௬௯)

மன்னனும்வெகுண்டுமுனிவனைச்சபிப்ப வார்புனல்கொள் மதயந்தி, தன்னருளோடும்விலக்கவப்புனலந் தாள்மிசைப்பெ ய்தலும்வேந்தன், பன்னுகன்மாடப்பாதனாமமருவுறப்பன்னி ருபருவ, மின்னவாறிருந்துபின்னர்நின்னுருவமெய்தெனமுனி வரனிசைத்தான். (௭0)

ஆங்குவேல்மன்னன்பன்னிருபருவமடுசினந்தரக்கனுமமர் ந்து, நீங்கில்கோகன்னத்திறைவனதருளாற்றீத்தொழிற்புரியுமவ் வுருவ, நீங்கியிங்கிருந்துநிகரறுவேள்வி யியற்றியசாலையீதெ ன்று, ளேங்குமக்கங்குல்புலருமுன்சீதை மைந்தரோரிருவரை யுயிர்த்தாள். (௭௧)

குசத்தினுல்முனிவன்றடவலுமுன்னோன்குசனெனும்பே ரொடுமமர்ந்தா, னிசைத்தநல்லிலவங்கொடுதடவுதலாலிலவ னுயினனவற்கிளையோன், வசைப்படாவிழுசசீரிளவலம்மைந்த ர்பிறத்தல்கேட்டுவகையின்வருந்திப், பசுத்தவேழ்புரவித்தேரி னோனுதிப்பமுனிவரர்தம்மொடும்படர்ந்தான். (௭௨)

பின்னுமேழ்வைகல்மேற்றிசைநோக்கிப்பெயர்வுழிப்பார்க் கவசசவனன், றன்முகநோக்கியிலவணனுற்றல்சாற்றுதியென்ன

லுமுனிவன், மன்னருங்குலத்திலுதித்திடும்புவனச்சுவனருள்மைந்தன்மாந்தாதாப், பொன்னுலகெய்தினின்னரசுரிமைபாதித்தந்தருளெனப்புகன்றான். (௭௩)

மண்ணுலகதனிலிலவணச்சுரன்றன் வலிதொலைத்திடாது நீகொல்லோ, விண்ணுலகாள்வையென்றுவிண்ணவர்கோன்விளம்பலும்வெகுண்டிலவணன்பால், நண்ணிவெஞ்சமரேற்றிடுதலுமீசனல்கியசூலவேல்பணிப்ப, வெண்ணருஞ்சேனையோடுமாந்தாதாவெறிந்திடமுருக்கிமீண்டதுவே. (௭௪)

என்றலுஞ்சேனைமுழுவதுமாங்கணிறுவிவில்லிலக்குவற்கிளையோன், வென்றிவேலவணன்வேட்டமேற்படர்ந்துமீள்தலுமுயர்பொலங்குடுமிக், குன்றுகண்டிறந்தாலன்னவான்புரிசைக்கோபுரவாசலிற்குறுகி, நின்றெதிரேற்றவெஞ்சினந்தவுணன்றனொடுநெடுஞ்சமம்புரிந்தான். (௭௫)

விண்ணகடுரிஞ்சிப்போகுயர்கோட்டுந் தருவினைவேரொடும்பிடுங்கி, யண்ணல்மேலடிப்பச்சிதைந்துமெய்தளராவிராகவனிளைத்தவெங்கணையால், நண்ணலனவனுமாருயிர்வவ்வி நிற்றலுநாண்மலர்ப்பொகுட்டுப், பங்கயன்முதலோர்புகழ்ந்தனர்சூலம்பசுபதியிடத்தின்மேவியதால். (௭௬)

வளங்கெழுசூரசேனமென்னநாட்டினுக்கொருபெயர்வகுத்து, விளங்கெயிலுடுத்தபதியினைமதுரையென்னவோர்விழுப்பெயர்புனையா, யளந்தறிவரியபுகழ்கிடந்துறங்கு மங்கர்தன்னிலிராறு, துளங்கலில்பருவமிருந்தடிப்படுத்தி யிராகவற்றொழுதெழுந்தனனால். (௭௭)

எழுந்துதன்சேனைக்கடல்புடைநடப்ப விலக்குவற்கிளையபோரேறு, தொழுந்தவநெறியினுயர்ந்தவான்மீகிசாலையிற்றுனைவினிலடைந்து, தழங்கொலியாழினிராகவன்சரிதைமைந்தர்பாட்டயர்தல்கேட்டுருகி, முழங்குவார்முரசங்கண்டுயின்றறியாமுதுநகரயோத்தியினடைந்தான். (௭௮)

சொரிதிரையளந்துவெயிற்கதிருருத்தகொடிக்கைமென்றலையணையாக,வரசுகண்டுயிலமுரசுகண்டுயிலாவருங்கடிவாயிலேழ்கடந்து, வரிசிலையழவன்மலர்ப்பதம்போற்றிப்பரதனைபணிந்திலக்குவன்றன், னிணைமலர்ப்பாதந்தொழுதிலவணனைவென்றமைவிரிந்தெடுத்துரைத்தான். (௭௯)

ஆங்கதுகேளாவிராகவன்மகிழ்வுற் றளப்பரும்வான்சிறப்பியற்றித், தீங்கறுபுதல்வவேழ்பகலிருந்தத்திருவநீண்காவையின்வைகி, யோங்கெயிலுடுத்தமதுரையிற்செல்கென்றுரைத்தலுமேழ்பகலுறைந்து, வாங்குவிற்றடந்தோளிளையவன்வளங்கூர்மதுரைமாநகரடைந்தனனால். (௮௰)

கடையளந்தறியாவிடுதிரைசொரிந்துகாவலர்கையணைத்து ஞ்சுங், கொடிபுனைவாயில்மருங்கினேர்மறையோன்புகுந்துமெய்குழைந்துநைந்தழுது, வடிவுடையென்றன்காதலனுயுண் மடிந்திடுங்காலையினன்றி, யிடையினிலிறந்தானிராகவன்செங்கோலிழுக்கினலடைந்ததென்றினைந்தான். (அக)

வேதியன்மொழிகேட்டிராகவன்வசிட்டன்காசிபன்வீணைமாமுனிவன், கோதமன்காத்தியாயன்மார்க்கண்டன்மவுற்கலன்கோதில்சாபாலி, நீதெறிவாமதேவனென்றிசைக்குந்திருந்தருமுனிவரைநோக்கி,யாதினுற்புகுந்ததிதுவெனக்கேட்பவீணைமாமுனிவரனிசைப்பான். (அஉ)

வேறு.

மருவுங்கொடியகலியுகத்தினன்றிவாளாவின்னவர்கட்
குரியதவமிவ்வுகந்தன்னிலுளதாற்றல்நீடண்வெறிமிகுந்திட்
டரியதவமோர்பின்னவனீண்டாற்றுகின்றுனதனிலுற
றெரியுமறையோனிளஞ்சிறுவனிறந்தானென்னச்செப்பினுன்.

வள்ளல்கடவுட்புட்பகத்தைநினைப்பவாதுமதிவிர்ந்து
தெள்ளுநிரைநிருலகனைத்துந்தேடித்தெளவம்பொருப்பொய்தி
கள்ளாரகமலவாவியகன்கரையிற்றலைகீழா
யுள்ளாருகித்தவஞ்செய்வோர்கண்டீயாருரையென்றன். ()

உடலினொடுந்துறக்கந்தினுறுவான்றவம்புரிகின்றே
னடையுமென்பேருயர்சம்புப்பின்னேனயாவென்றறைந்திடலு
மடறுநிக்கிவடிவாளாலன்னோன்சென்னிதறந்திடலும [ந்
விடையந்துள்ளம்போகாதமறையோன்சிறுமகனுய்ந்தான். ()

பின்னேரிராமன்றனைவரங்கேட்கென்னவியந்தமைந்துறுயிர், நண்ணவரநீரளித்திடுமினென்னநாரதவடிவாளர, லன்னவபின்னேன்றலையொருந்தகாலதநுய்ந்தானருஞ்சிறுவன், றென்னிர்நடந்துகுறுமுனிசெய்தவங்காண்பதற்குச்சென்றிடால்.

என்றுதேவரிராமனுடனியம்பிமதிதாழ்பொதியநெடுகிரி, குன்றமெய்திக்குறுமுனிகருவாரிரிந்தகலக்கோவிழுங்கும், வெல்றிவேற்கையிராகவன்புட்பகத்தினிழிந்துவேதியன்முன், சொல்றுபோற்றக்குறுமுனியுந்தெங்கேற்கக்கலனொன்றளித்தனனால.

உலகம்விளக்குங்கதிரோனிலொடிப்பப்பக்கதினிலட்டுமிழ்பாகமலையப்பொருப்பவனித்தவன்பார்வழங்குசெவ்வயுறைந்திடு, மலைநீர்பவ்வக்கடலேழுமழன்றுவெய்யப்படைகண்டவ, மலைநாலவனைத்தோய்கேட்டியெனத்திருமாமுனிவன்செப்புவான். (அஅ)

இலகுதருமந்திரம்பாதவிரண்டாமுகத்தினிலோர்பா
ளலகுபொருந்தும்யோசனைத்தூரமரியகாட்டிற்செழுங்கால
மலருந்தடத்துள்வேற்றுடலொன்றிருப்பமதுநேநோக்குதனு
நிலவுக்கதிர்கால்மானமொன்றுசெப்பாயசத்திரதேனறியதால

கொல்லுங்கூற்றமிருந்தாலுங்குவளைப்பொருவுமதர்நெடுங்கண், வல்லிபோல்வார்வளைக்கரத்தின்மணிக்காற்கவரிபொதியவிழ்ப்ப, வொல்லையிழிந்தோர்கடவுள்புகுந்துணங்குகுணபந்தனையருந்திச், செல்லனோக்கவிழிதொழினீ செய்வதெவன்கொல்புகலென்றேன். (௯0)

குடக்காய்தூங்குமுடத்தெங்கம்பழமூழ்த்தீந்தேன்கொப்புளிக்கு, மடற்பூங்கமுகின்மிசைவீழவாளைகுதிக்கும்விதற்பநாட், டடற்கோளரியைநிகர்சீற்றச்சுவேதனருள்கூர்சுவேதனையுந், தடக்கார்முகத்துக்கொருவனெனுஞ்சுரதன்றனையுந்தந்தனனால்.()

தந்தையிறப்பச்சுவேதனெனுந்தாமவடிவேற்சிறுவனுக்காங்
கந்தார்மவுலிபுனைந்திடலுமறிவின்மிக்கத்தாலிளைய
பைந்தார்ச்சுரதன்றனக்குமுடிகவித்துப்பட்டர்கானிடையெய்தி
மைந்தார்சுவேதனீராஞ்ஞூறுண்டுதவத்தின்மருவினான். (௯௨)

அடையுந்தவத்தினுடல்நீங்கிக்கமலப்புத்தேளுலகடைந்து
மிடையும்பசியாலுழந்தரசன்மலரோனோடுமிதென்கொலென
வுடலம்வீக்கித்தவம்புரிந்தவாற்றாலுற்றதுன்னுடலைத்
தொடரிற்பிணித்தனுமலியெனத்துய்த்தியென்னவுரைத்தனனால்

உடலம்வீக்கித்தவம்புரிந்தபாவமென்றொழியுமெனக்
கடவுட்கமலப்பொகுட்டுறைவோனோடுகேட்பக்கலனல்கி
விடயந்துள்ளம்போக்காதவெளிறில்கேள்வியகத்தியனை [ல்.
யுடையிற்றீருமெனவுரைத்தானன்னோன்யானென்றறைந்தனனா

என்றுகூறிச்சுடர்மணிப்பூணெனக்குநல்குமேல்வையினிற்
றுன்றுபாவமகன்றருந்துகுணபந்தோன்றுநகன்றொளிப்ப
மன்றல்கமழுஞ்சற்பகப்பூமாலைமார்பனெனையேத்திப்
பொன்றாழ்விமானந்தனிலேறிப்புத்தேள்விசும்பிற் போயினான்.

அன்னோனளித்தவருவிலைப்பொற்கலனீதையவெனலோடும்,பன்னுமொருநூறியோசனையும்படர்கானுயதுரத்தியென,நன்னக்கேள்வியருமறையோ னவில்வான்மனுவினுயர்மைந்தன்,. மன்னுவிக்குவாகுவென்போன்மைந்தரொருநூற்றுவர்ப்பயந்தான்

மைந்தர்தொண்ணூற்றென்பதின்மர்க்கிளையோனுலகைவருத்துதலாற், றந்தைதண்டனெனுநாமஞ்சாத்தியுயர்சைவலத்துக்கும், விந்தவரைக்குநடுவினுற்றதேயம்வழங்கவடல்வேந்த, னந்துமதுமானென்னுமொருநகரம்புனைந்தாங்கிருந்தனனால்(௯௭)

வெளிறில்கேள்விச்சுக்கிரனையாசானாக்கிவியப்பினொடு
மொளிறும்வடிவேற்றண்டனந்தவுலகங்காத்துவருநாளில்
வளையார்மென்றோளரசையெனும்வெள்ளிமகளைவலிதாகக்
களிசேர்தண்டன்கலந்திடலுங்கன்னிதாதையொடுமுரைத்தாள்

வேறு.

மண்டுநீர்வளங்கூர்தேயமறைமுனிசாபந்தன்னாற்
றண்டகாரணியமாகிக்கிடந்ததுசனங்களெல்லாம்
விண்டவனுறைதறன்னால்வியன்சனத்தானமாகி
யண்டரூர்போன்றதையவவ்விடமென்றுசொன்னான். (கூகூ)

விள்ளுநருயிர்கூற்றுண்ணவிருந்திடுவெள்வேல்தாங்கும்
வள்ளறென்பொதியவெற்பின்மாதவனருளினோடுங்
கள்ளயின்றினவண்டோடுமென்மலர்களுலியோங்கு
மள்ளலங்கழனிசூழுமயோத்திமாநகரஞ்சேர்ந்தான். (க00)

முடியொடுமுடிகடாக்கவுதிர்ந்தபொற்றுகளின்மூழ்கிப்
படிநிலமுழுதுந்தேவருலகினிற்பசும்பொன்னாக
வடிதொழவேந்தரீண்டுமவையினிலண்ணலெய்தி
வடிவுடையிளைஞர்செய்யவாண்முகநோக்கிச்சொல்வான்.(க0க)

ஆய்மறைகூறுகின்றவரும்பெறலிராசசூய
மேய்வுறப்புரிதல்வேண்டுமென்றலுமிளையோன்சொல்வான்
றூயெனநின்னையெய்திச்சரண்புகுமரசர்கையின்
மேயநன்பொருளைவவ்விமகஞ்செய்தல்விழுமிதன்றால். (க0உ)

அயமகமாற்றலெந்தைக்கடுத்ததம்மகத்தால்முன்னர்
துயருறுகொடியபாவந்தொலைந்தநற்காதைகேட்டி
பயனுடையுடலமுன்னூறியோசனைபறந்துநீண்டு
வியனுடையுலகைவென்றான்விருத்திரனென்னும்வெய்யோன்.

சுடர்பொறிசிதறுவெங்கண்விருத்திரன்றுரப்பவோடி
யுடல்சினவயிரவாளானேமியோற்குரைப்பவன்று
னடல்கெழுபோரிலுன்றன்வச்சிரத்தமர்வனென்ன
மிடலொடுமகவான்மீண்டும்விருத்திரனோடுமேற்றான். (க0ச)

நாளைகடோறும்வெய்யதழலுமிழ்வயிரவாளா
லார்கலிநடுவுணிற்கும்விருத்திரனகலத்தோச்சப்
பாரில்வீழ்ந்தவுணன்வீயப்பற்றியபிரமகத்தி
சீர்கெழுமயமேதத்தாற்றீர்த்தனன்விண்ணோர்வேந்தன். (க0ரு)

என்றலுமிராமன்சொல்வானிளனென்னும்வேந்தர்வேந்தன்
மன்றலங்கானின்வேட்டமாடுவான்மருவிமல்லற்
குன்றவிற்குழகன்பெண்ணாய்க்கோதையோடாடுகின்ற
துன்றருஞ்சரவணத்திற்சேனைபின்றொடரச்சென்றான். (க0கூ)

சரவணத்தெய்துகின்றவிளனுயர்தானையோடு
மரவுபைத்தன்னபைம்பொனம்பகட்டல்குலேந்தி
வரையெனவளர்ந்துவீங்குவருமுலைமங்கையாகி
முருகவிழ்கூந்தற்செவ்வாய்க்கவுரியைமுறையிற்றாழ்ந்தான் ()

ஓர்மதியமுதச்செவ்வாயொள்ளிழைமடந்தையாகி
யோர்மதிபுருடனாகியுறைகெனவரமீந்தேக
வாரொலிகழற்கால்வேந்தன்மகளுருவாகிச்சேனை
யேர்கெழுமகளிராகிச்சூழ்வரவேகினானே. (க0அ)

செலவயர்கானின்மற்றோர்திருவநீள்வாவிதன்னி
னிலகொளித்திங்களின்றபுதனிருந்தவத்தினீங்கி
யலர்முலையஞ்சிலோதியிளையினையாங்குநோக்கிக்
குலவியயாழோர்கூட்டப்புணர்ப்பினிற்கூடினானே. (க0கூ)

மற்றவளோடும்வந்தமகளிரையாழோர்க்கீய்ந்து
கொற்றவேற்புதனென்றோதுங்குரிசிலவ்விளையினோடு
முற்றிழையாருந்திங்கள்முயங்கிவெந்தாருந்திங்கள்
மற்றவனோடுநின்றுமாதவமியற்றினானே. (கக0)

இன்னணந்திங்களீரைந்திறந்தவுமிளையென்றோதுங்
கன்னிவேற்புரூரவாவைபுதனுக்குக்களிப்பினல்கித்
துன்னியமற்றைத்திங்களாணுருவாகித்தோன்ற
மன்னவரிருவர்முன்னுமருத்துவமுனிவன்வந்தான். (ககக)

மருத்துவெண்டிங்கள்சூடும்வானவன்மகிழ்ச்சியெய்தத்
திருத்தகுபுரவிவேள்விநீதறவியற்றுங்காலை
யுருத்திரனெய்தியென்றுமாணுருவுறுதியென்ன
வருத்திகூரிளனுமுன்போலாண்டகையாயினானே. (கக௨)

ஆணுருவதனிற்பெற்றவடற்சயவிந்துதன்னை
வேணவாவோடும்வெய்யோன்குலத்துறும்வேந்தனுக்கி
யாணர்மாதுருவநாளினீன்றிடும்புரூரவாவை
நீண்மதிக்குலத்துவேந்தாய்நெடுமுடிசூட்டினானே. (கக௩)

இளனெனும்வேந்தர்வேந்தனிருங்கடலுலகுக்கெல்லாங்
களைகணாயுலகங்காத்துக்கதியினிலடைந்தவாற்றால்
வளமிகுமிவுளிமேதம்புரிகுவன்வல்லையென்ன
வுளமகிழ்ந்திளவற்கோதிவெதிரிகாச்சிரமத்துற்றான். (கக௪)

கோமதிக்கரையினெய்திக்கூந்தன்மாவிளையோன்போக்க
நாமவேற்பருதிமைந்தன்வீடணன்முதலோர்நண்ணப்
பூமகளனையபொற்பிற்சீதையாய்ப்பொன்னிற்செய்து
தூமலர்த்துளவமாயன்பரிமகந்துடங்கினானே. (கக௫)

பருவமொன்றிவுளிமேதமிராகவன்பண்ணுமேல்வைப்
பொருவில்வான்மீகியெய்திச்சானகிபுதல்வர்தம்மை
யிருடிகள்வேந்தரெய்துந்தலந்தொறுமிசைத்தகாதை
தெரிவுறப்பாடிநீவிர்நெரிதருமேல்வைதன்னில். (கக௬)

மரகதவண்ணன்கேட்டுவம்மின்களென்னிலெய்தி
யிருபதுசருக்கமாகத்தினந்தொறுமியம்பியண்ண
றருபொருள்கவரல்நும்மைபாலெனில்தகைவான்மீகி
பொருவின்மாணாக்கரென்னப்புகலுமின்னென்னப்போனார். (ககஎ)

மைந்தர்தீப்பாடற்றலைமறையவர்துறைப்பவைய
தந்திடுகென்னப்போந்துதந்திரியுளர்ந்துபாடு
மெந்திரமிடறீதென்னவுணர்கிலாதிராமன்காதை
நந்தலில்குமரர்பாடயாவருநயத்தல்செய்தார். (ககஅ)

கைகளுமுகமுங்காலுங்கண்களுங்கமலம்போலு
மையவான்முகிலிற்றோன்றுமைந்தரையினிதுநோக்கி
யையன்மூன்றுருவாயிங்ஙனடைந்தனன்கொல்லோவென்னு
மொய்யெனவரசர்யாருமுளத்தினிலிரும்பூதுற்றார். (ககக)

இன்னணமைந்தர்பாடுந்தன்னுடைச்சரிதம்யாவு
மன்னவனிராமன்கேட்டுமைந்தரொன்றுளத்தினெண்ணிப்
பொன்னொருகோடிநல்கப்புனத்திடைத்தவஞ்செய்கின்றோர்
நன்னிதிகொள்ளிற்பாவநண்ணுமென்றுரைத்துப்போனார். ()

சீதையைநாளையீண்டுக்கொணர்ந்துதீயூட்டியுண்ணு
மாதவர்வேந்தர்வெய்யவானவரரக்கர்காண
வேதமொன்றின்றிச்சூளிற்கொள்வன்யானென்னவேந்தன்
றூதரால்வான்மீகிக்குச்சொல்லவாங்கவனுநொந்தான். (கஉக)

ஓதியவழிநாடன்னிலரக்கரொள்ளிலைவேல்வேந்தர்
தீதெறிமுனிவர்வெய்யவானரர்செறிந்துவைகு
மேதகுமவையின்ஞாலம்வியக்கும்வான்மீகிவேற்கட்
சீதையோடெய்தனோக்கியாவருஞ்சிந்தைநொந்து. (கஉஉ)

பற்பலபாடைமாக்கள்யாவரும்பரிவுகூற
வற்பொடுங்கலுழுமேல்வையருளின்வான்மீகிநாளு
மெற்பெழநோற்றயாவுமீங்கிவள்பிழைத்தாளென்னிற்
பொற்பறச்சிதைந்தியானுநரகிடைப்புகுவனென்றான். (கஉங)

கலைபயில்முனிவசீதைகற்பினுக்குயர்ந்தாளாகு
முலகெலாந்தெளியவேண்டியுரைத்தனனெனினும்வென்றிச்
சிலைவலான்பாதம்போற்றிச்சேயரிநெடுங்கட்சீதை
மலர்தலைஞாலநோக்கியீங்கிவைவழங்கலுற்றாள். (கஉச)

முல்லைசால்கடவுட்கற்பின்வழிநின்றுமுழவமெய்க்குங்
கல்செய்தோளிராமன்செய்யகழலிணைதிறம்பேனாயின்
மல்லலம்பூமிதேவிவழியெனக்களித்தியென்னச்
சொல்லலும்பூமிவிள்ளமணியணைதோன்றிற்றன்றே. (கஉரு)

தோற்றியவலங்குசெம்பொற்சுடர்மணித்தவிசின்மீது
கோற்றொடிச்சீதைதன்னைப்பூமகள்குடங்கைதாங்கி
யேற்றனள்கொண்டுபோகயாவருமிரங்கிமாழ்கப்
பாற்றினஞ்சுழலும்வேற்கையிராகவன்பரிவிற்சீறி. (கஉசு)

மண்ணுலகனைத்துமின்னேவடிக்கணையதனிற்போழ்ந்து
பண்ணமைகுதலைத்தீஞ்சொற்பாவையைக்கவர்வனென்று
வண்ணறன்னுளத்தினெண்ணுமமைதியினயன்வந்தெய்திக்
கண்ணகன்ஞாலந்தன்னைக்கடிந்திடேலென்னச்சொல்வான். ()

தேங்கமழுஞ்சிலோதிச்சீதைவைகுந்தஞ்சேர்ந்தாள்
வாங்குவிற்றோளாய்நீயும்வைகுந்தமடைந்தாலன்றி
யாங்கவட்புல்லலொல்லாதறையும்வான்மீகியென்னப்
பூங்கழற்றேவரோடுமலரயன்போயினானே. (கஉஅ)

ஏந்தலுமுள்ளமாழ்கிமைந்தரையிருகைபற்றி
யாய்ந்தநூலிளைஞரோடுமமர்ந்தனவழிநாடன்னிற்
கூந்தன்மாவேள்விமுற்றிக்குலமறையவற்கும்வைவேல்
வேந்தர்கடமக்குநன்கின்விடைநல்கியயோத்திசேர்ந்தான். ()

அளவறுமகங்களாற்றியாருயிர்த்தொகைகட்கெல்லாங்
களைகணாயிராமன்செங்கோல்நடத்திடுங்காலந்தன்னிற்
றளர்வுறுமுப்பாற்றூயகவுசலைமுதலதாய
ருளமகிழ்ந்தாவிநீங்கித்தயரதனுழையிற்சேர்ந்தார். (கங0)

தாயரையீமத்தேற்றித்தழல்படுகருமமாற்றி
யேயநற்சபிண்டியாதியரவையுமுடித்தபின்னர்ப்
பாய்வயப்புரவிகோடிபழமறைக்காக்கன்கையின்
மாயிருஞாலம்போற்றுங்கேகயன்வரவிட்டானே. (கஙக)

வந்தமர்முனிவன்றன்னையெதிர்கொண்டுவழுத்தியையன்
முந்தநீபுகுந்ததென்கொலறைகெனமுனிவன்சொல்வா
னந்தலிலிசையில்யாடப்பேழ்க்கினர்நல்குமைந்தன்
சிந்துவின்மூன்றுகோடிசேனையோடிருக்கின்றானல். (கஙஉ)

அன்னவன்றன்னைவென்றேயாங்கவனளுந்தேய
முன்னடிப்படுத்தியென்றனுறுதுயர்துடைத்தியென்னப்
பன்னருஞ்சிறப்பின்மிக்ககேகயன்பகர்ந்தானென்ன
மன்னவன்பரதன்மைந்தற்கணிமுடிவனைந்துசொல்வான். ()

பரதநீயாங்கணெய்திச்சிந்துதீரத்தின்பாங்க
ருறைபெறுமியாழோர்தம்மைவென்றுயர்மைந்தர்தம்மை
யரசராயாங்கணுய்த்துவருகெனவையற்போற்றி
விறைசென்மான்றேரினேறிவில்லுடைப்பரதன்போனான். (

பாகடுபெருமயானைப்பரதன்றன்மைந்தரோடுங்
கேகயந்தன்னிலெய்திக்கிளர்முடிவேந்தர்ப்போற்றி
யாகவந்தன்னிலேற்றவின்னரராகமுற்றுங்
காகமுங்கழுகுமுண்ணக்காலவெங்கணையாற்கொன்றான். (கஙரு)

தாரைவேற்றக்கன்றன்னைத்தக்ககமென்னுநாட்டிற்
சீர்கெழுமவ்விருட்டிச்சிறந்தபுட்கலனென்போனைப்
பூரியர்பொருந்தல்செல்லாப்புட்கலாவர்த்தந்தன்னி
லேர்கெழுமுடிவைத்தையாண்டிருந்தடிப்படுத்திறைனல் (கஙசு)

மைந்தரையாங்கண்வைத்துவார்கழற்பரதனென்று
மிந்திரதிருவன்போந்தாங்கிராமனைவணங்கியேதந்
தந்திரர்ச்செருத்தபாவுஞ்சாற்றலுமகிழ்ச்சிகூர்ந்து
கந்தடுக்களிநல்யானைக்காகுத்தனுரைக்கலுற்றான். (கஙஎ)

இலக்குவன்மைந்தர்க்காயதேயமியம்புகென்ன
நலத்தவங்கதற்குங்காரபதமெனுந்தேயநன்றாந்
தலத்தினிவிணைமற்றில்லாத்தகைபெறுமல்லல்தேயந்
சிலைத்தொழிற்சந்திரகேதுவமர்ந்திடச்சிறந்ததாமால். (கஙஅ)

என்றியற்பரதன்கூறராகவன்மகிழ்ச்சிகூர்ந்து
மன்றநல்லோரைதன்னில்வால்வளைமுரசமார்ப்ப
வென்றிவில்லிளையகோமான்மைந்தர்க்குவிழைவிறேடும்
பொன்றிகழ்மௌலிசூட்டியவ்வழிப்போகவென்றே. (கஙகூ)

வேறு.

அங்கதனேடுமிலக்குவனகாரபதத்தடைந்தங்கதியென்னும், துங்கமாநகரொன்றமைத்துமைந்தனையத்தொன்னகரத்திடையிருத்தித், தங்கியோர்பருவமுலைநாடிபடுத்திக்காணையங்கடலொடும்போந்து, சிங்கவேற்றனையவிரிசிலையிராமன் சேவடி தொழுதுவீற்றிருந்தான். (கச0)

சந்திரகேதுதன்னொடும்பரதன்மல்லல்தேயத்திடைச்சார்ந்து, சந்திரகாந்தியெனுநகரமைத்துத்தாமவேல்மைந்தனையிருத்தி, மைந்துடனோர்யாண்டங்ககரமர்ந்து வாம்பரிக்கடலொடும்போந்தங், கிந்திரதிருவாமயோத்தியினெய்தி யிராமனதடி தொழுதிருந்தான். (கசக)

திருமகள்முலைகண்டிழைத்திடுதழும்பிற்சிலைத்தழும்பிருந்ததோளிராமன், புரவிமாமகமோர்பத்தினிதாற்றிப் பூசுரர்க்கிருநிதிவழங்கி, புரவுநீர்வேலியுலகெலாம்பதினோராயிரம்பருவமோர்குடைக்கீழ்த், தருமமுந்தவமு மெய்மையுமென்மேற்றழைப்புறப்புரந்தனனன்றே. (கசஉ)

இன்னணம்பதினோராயிரம்பருவமிராகவனரசளித்திடலும், மன்னியகாலன்மாதவருருவாய்மணிமதில்வாயிலினெய்தி, பொன்னெடுவேற்கையிராகவற்கெனது வரவுரைக்கெனவிலக்குவன் போ, யன்னவாறுரைப்பக்கொணர்தியென்றிடலுமுனிவுனையவ் வுழியுய்த்தான். (கசங)

முனிவரன்மகிழப்பூசனையாற்றியிராகவன்முகமனன்குரைத்து, வினையறுதவத்தோய்போந்தமையென்கொல்விளம்பெனவிளம்புமேல்வையினி, லெனையராயினுமீண்டடைந்திடிற்கொல்கென்றிசைத்தலுமாங்கதுநேர்ந்து, வனைகழலோம்பியெவருமீங்குறும்ல்வாயினிலிருக்கெனவிருந்தான். (கசச)

அலகில்பல்லுயிருமொறுத்திடவுன்னியழித்திடுகாலன்யான்கடலி, னிலகெயிற்றரவிற்றுயிலுமேல்வையினிலவுணரோரிருவர்வந்துதிப்ப, மலைசமத்தவரைக்கொன்றவருடலால் மேதினிவகுத்தயன்றனைநீ, யுலகெலாமீளவுந்தியங்கமலப்பொகுட்டினிலுதித்திடப்பணித்தாய். (கசரு)

அன்றுநீபடைத்தவுலகினைவருத்துமரக்கரைவேரொடுங்களைய, மன்றலம்பசுந்தார்த்தயரதன்மகவாய்வந்துவல்லரக்கரைத்தொலைத்தாய், சென்றனபதினோராயிரம்பருவஞ்சிறந்தவைகுந்தமாநகரி, லொன்றிடவேண்டில்வருதிமற்றிவணினுறைதியேலுறையெனவுரைத்தான். (கசசு)

உரைத்தலுமிராமன்றனதுபேருலகி லுறுவதற்குள்ளநொந்துவப்புற், றரத்தமென்சாந்தினகங்குளிர்ந்திருக்குமேல்வையினணிநகர்க்கடையிற், றிருத்தகுதவத்தினுயர்துருவாசன்சிலைத்தொழிலிலக்குவன்முன்னம், வருத்துவெம்பசியோடெய்துமென்வரவுமன்னவர்க்குரைக்கெனவருத்தான். (கசஎ)

அமைதியன்றென்ன விலக்குவன்கூற வழலெழவெகுண்டுமாமுனிவன், கமழலம்பொழில்சூழின்னகரோடுமிராமனைக்கனற்றுவனெனலு, மிமிழ்கடன்ஞாலத்தொடுமிராகவனையெரிப்பதில்யானிறப்பதுவே, தமரினைப்புரப்போர்கடனெனமுனியைத்தாமரைக்கண்ணன்முன்னுய்த்தான். (கசஅ)

உய்த்தலுங்காலன்மறைந்திடவைய னுபகிடதப்பொருடேர்ந்து, தத்துவமுணர்ந்தோய்வந்தவாறென்கொல்சாற்றெனவாயிரம்பருவ், மெய்த்தவவிரதம்பூண்டுணவொழிந்தேனடிசினீவழங்கெனவிளம்பப், பைத்தலையரவினறிதுயில்கூறும்பண்ணவனின்னமுதளித்தான். (கசகூ)

இன்னமுதருந்திமுனிவரனேக விராகவன்மனங்குழைந்திரங்கித், துன்னுபேரவையுட்கலுழ்ந்தனனிருப்பச்சுடர்முடியில

க்குவனெய்தி, யுன்னுடைவாய்மைவழுவுறுவென்னை[illegible]றுக் கெனவுரைத்திடவசிட்டன், மன்னவதுறத்தலொறுத்ததாமெ ன்னவழங்கலுமூர்ச்சனையடைந்தான். (கரு0)

கரையழிவெள்ளந்தன்னிடைப்பிறழ்ந்து கண்மணிநீங்கிட விழித்துப், பொருவருமாவி துறந்துவேற்றுடல முய்யுமோ போதியென்றுரைப்பச், சரையுமாநதியினகன்கரையெய்தித்தரு ப்பையினிருந்துமுச்சவித்தாங், குரையுணர்விறந்தயோகினிலெ ய்திப்பிரமரந்தரத்துயிருய்த்தான். (கருக)

விண்ணவரியக்கரிந்திரன்முதலோர்விரைவின்வந்தெய்திவ ண்டுளவத், தண்ணறன்றன்குகூற்றினோர்கூறு வந்ததென்றடி மலரிறைஞ்சிக், கண்ணகன்விமானத்துடலொடுமேற்றிக் காமர் வைகுந்தமுய்த்திடலும், வண்ணவிற்குரிசில்மாலொடும்பாலிற் பாலகந்தெனமருவினனால். (கருஉ)

விலக்கருநிலவுக்கதிரினைச்சிறந்தவெண்மதிபிரியினும்பாவு ந், துலக்குறும்வெய்யோன்கதிரதணந்திடினுஞ்சுடுகழல்வெம் மைதீர்ந்திடினு, மிலக்குவர்ப்பிரிந்தோர்கணப்பொழுதேனுமு ய்ந்திடேனுய்ந்திடேனென்ன, வலக்கணுற்றையன் பரதனைம வுலிகவித்துலகளித்தியென்றுரைத்தான். (கருரு)

ஐயநிற்பிரிந்துமுய்குவன்கொல்லோவடியனேனிம்மொழி யறையேல், வையகம்புரப்பமைந்தரைமவுலிவனைகெனப்பரதனு ங்குரைத்துச், செய்யதாமரைக்கடசத்துருக்கினர்க்குங் குகனு க்குஞ்சிறந்தவீடணற்கும், பொய்யெறிவாய்மையிரவிகாதலர்க் கும்பொறித்திடுமுடங்சல்போக்கினனால். (கருச)

முடங்கலிற்றீட்டும்பாசுரமுணர்ந்துமுழுவலிதுயின்றதோ ளிளையோன், மடங்கலேறனையசுவாகுவைவளங்கூர் மதுரையி ன்மணிமுடிசூட்டி, யடங்கலர்க்கடந்தசத்துருக்காதி வித்தியா தேயமாள்கென்ன, மிடைந்தொளிபரப்புமணிமுடிசூட்டிவிரை வின்வந்திராமனைக்கண்டான். (கருரு)

செங்கதிர்ச்செல்வனினிதினின்றளித்ததேம்படுதுணர்ப்பு யக்குரிசி, லங்கதன்றனக்குமணிமுடிசூட்டியணிமதிலயோத்தி யினடைந்தான், கொங்கவிழ்நறுந்தார்க் குகனும்வீடணனுங் கொற்றவர்யாவரும்போந்து, பங்கயத்திருவின்படர்முலையுழக் கும்பகட்டெழில்மார்பனைத்தொழுதார். (கருசு)

கண்சிறைப்படுத்துக்கவின்குடியிருக்குமுத்தரகோசலந்தன் னில், விண்டொடுபுரிசைக்குசாவதிநகரிற்குசனைநீண்மணிமுடி யிலைச்சி, யெண்படுத்தென்னங்கோசலநாட்டிற்சரவதியென்னு நன்னகரின், மண்டமர்கடந்தவிலவனைச்செங்கேழ்மணிமுடியி னிதினிற்புனைந்தார். (கருஎ)

## வேறு.

விறல்கெழுமரக்கர்கோனையானுமனையெண்கின்வேந்தை
யறைகழல்மயிந்தனோடுதுமிந்தனையையனோக்கி
யுறைதிர்நும்பதியினென்னமுகமனோடுரைத்துப்போக்கி
மறைபுகல்வேள்வித்தீயைமனத்திடையினிதுசேர்த்தி. (கருஅ)

கார்புறங்கொடுக்குங்கூந்தற்கரும்புறழ்குதலைத்தீஞ்சொ
லார்மிளைமுதலாயுள்ளகொழுந்தியரயோத்தியுள்ள
வேர்கெழுமடவார்நாட்டுமடந்தையர்யாருஞ்சூழ
மாரியினெழுந்தமஞ்ஞைக்குழாமெனமருங்குசென்றார் (கருகூ)

சுரந்தொளியொழுகும்பைம்பூண்சுடருமிழ்மைந்தரோடு
மரந்தினப்பிறந்தசெம்பொனரும்பிளமுலையார்மாலாய்ப்
பரிந்துகோனூன்றிச்செல்லும்பண்புடைக்கிழவராதி
விரிந்தவந்நாட்டினுள்ளோர்வியனகர்தன்னில்வாழ்வோர். ()

நால்வகைத்தோற்றத்துள்ளசராசரநண்புபூண்டோர்
பால்படுமரக்கர்மற்றைவானரர்பரிந்துசூழச்
சாலுமைம்படையுமைந்தருருவினிற்செல்லத்தாவின்
மேலுநற்றருமந்தீர்த்தியிருநிதிமுன்னரேக. (ககூக)

திருமகள்பூமிவெற்றிச்சயமகள்தொடர்ந்துசெல்ல
வருவிலையொண்பட்டார்ந்தாங்கங்கையிற்குசப்புல்லேந்திப்
பாதனுமிளையகோவும்பருதிசேயோடுஞ்செல்ல
முருகவிழ்துளவந்தண்டாரிராமன்முன்னடந்துசென்றான். ()

தாப்புலியனையவெற்றித்நம்பியர்சனங்கள்யாரு
நீப்பறச்சூழ்ந்துசெல்லநெடுந்திரைக்கடலினுப்பட்
பாப்பணைத்துயில்வோன்றூயபாய்திரைச்சரையுண்மேய
கோப்பிரதானமென்னுந்துறையினிற்குறுகினானே. (ககூங)

அண்ணல்பின்றொடர்ந்துசெல்லுஞ்சராசரமனைத்துமேற்கக்
கண்வழுக்குறுசெஞ்சோதிக்கதிர்மணிவிமானங்கோடி
யெண்ணிலகொணர்ந்துவிண்ணாட்டிந்திரன்முதலோர்சூழத்
தண்ணறுங்கமலவிட்டிற்சதுமுகனுங்கணுற்றான். (ககூ௪)

சரையுமாநதியினையன்றம்பியரோடுமெய்தி
யரியவாசமனஞ்செய்யாவுற்றவவ்வுடலினோடும்
விரைகமழ்துளவத்தண்டார்விண்ணவனுடலினோடு
கரையெறிநீரினீர்போய்க்கலந்தெனக்கலந்திட்டானே. (ககூரு)

முருகவிழ்நறுவீனீழலிந்திரன்முதலவிண்ணோர்
மருமலர்தூவியார்ப்பவாசமென்கமலப்புத்தே
ளருமறைபாடியாடமுனிவராசிகூறத்
திருமறுமார்பன்போற்றுமலரயனோடுசெப்பும். (ககூசு)

அற்பொடுமென்றேடுற்றசராசரமனைத்தும்வைகப்
பொற்புடையுலகமொன்றுங்களிக்கெனப்பூவின்மேலோன்
கற்பகநாட்டின்வைகிக்கடவுளர்ப்பணிந்துபோற்றப்
பற்பலவூழிகாலமமர்கெனப்பணித்திட்டானல். (௧௬௭)

ஆன்றபேரறிவின்மிக்கவிரவிசேய்முதலோர்யாருந்
தோன்றியதேவர்தத்தமுடல்தொறுமினிதுதொக்கார்
தேன்றருபொழிலயோத்திமைந்தருந்தெரிவைமாரும்
வான்றிகழ்விமானமூர்ந்துதருதிழல்வைகினாரே. (௧௬அ)

சீர்கெழுமயோத்திநாட்டிற்செறிமலப்புழுவையாதி
பேர்பெறுமானும்புல்லுங்கற்களும்பேசாநின்ற
வேர்பெறுசராசரங்கள்யாவையுமானமூர்ந்து
வார்கழற்றேவராகித்தருநிழல்வதிந்ததன்றே. (௧௬௯)

திருமகளாயசீதைசிறந்தபாதலத்தினின்று
மருமலிதுளவோன்மார்பில்வதிந்திருந்தரசுசெய்யப்
புரிகுழற்பூமியோடுங்கலுழனிலிவர்ந்துபோகி
யருமறைமுழக்கந்துஞ்சாவைகுந்தமமர்ந்துவாழ்ந்தாள். (௧எ0)

வண்டொடுஞிமிறுந்தேனுந்தும்பியும்வழிந்தநீந்தே
னுண்டுதேக்கெறிந்துபாடவொண்பொதியவிழ்க்குஞ்செய்ய
முண்டகப்பொருட்டின்மேயமுனிவன்வான்மீகியோடு
மண்டநீண்முகட்டின்மேயவண்ணல்மாநகருஞ்சேர்ந்தான். ()

விரியல்வெண்டோட்டுக்கைதைவிளைகமழ்ச்சுண்ணஞ்சிந்திப்
பொருகடற்புலவுபோக்கும்புண்ணியச்சேதுதன்னி
லரனுடையிலிங்கபூசையாற்றிவீட்டின்பம்பெற்றோன்
றிருவமர்காதைகேட்டோர்சிவனடிநீழல்சேர்வார். (௧எஉ)

வேறு.

வள்ளவாய்க்கமலவாவியங்கரையின் வாளைபாய்ந்துழக்கிய வயலிற், புள்ளிவெண்முகட்டுக்கவட்டடியலவன் புடைபடக்கி ளைத்தசேற்றளையில்,வெள்ளிவாய்ப்பாளைவிரிந்துமுத்துகுக்கும் வியன்புனலயோத்திநாடளிக்கு, மள்ளிலெநெடுவேலிராகவன் மைந்தராடல்வேற்குசனெடுமிலவன். (௧எ௩)

பின்செலுமேகமன்றெனவாரிப் பெரும்புனல்குடித்துயர் கொண்டல், மன்படுவரையிற்றவழ்தலுமற்றோர் களிறெனவய் க்கரிபாய, மின்பொதிவயிறுகிழித்துமுன்னுண்டவெள்ளநீரரு வியிற்பொழியும், பொன்பொதியிமையப் பொருப்புடைக்குச ன்றன்புதல்வன்வேலதிதியென்றுரைப்பார். (௧எச)

வேறு.

மழைசூன்முதிராவகடுளைந்துவாய்விட்டலறப்பிடியென்ன
முழையூடுறங்கும்வாலுளைகள்சிலைக்குமூரிமலைநாடன்

றழையுஞ்சீர்த்தியதிதிபருண்ணமைந்தனென்னூர்தசைவீக்கிப் [ன்
பொழியுங்குருதிவாய்மடுக்கும்போர்வேல்கிடதன்புலிபோல்வா

வேறு.

பாட்டுவண்டரற்றுந்தோட்டிளங்கமலப் பருமுகைவெடித்
தபூந்தடமும், பேட்டுவண்டணைத்துச்சுரும்புகண்டுயிலும்பெய்
மலர்ச்சோலையுமுடுத்துச்,சேட்டிளம்பருதிதழும்புறநிவர்ந்தவி
ஞ்சிசூழ்திருநகரளிக்கும்,வாட்டிறனிடதனளித்திடுமைந்தனள
னெனும்வாகைவேலுழவன். (கஎசு)

ஆலைவாய்த்துழனி முகிலென்வொலிக்கு மகன்வயற்றலை
தொறும்வளர்ந்த, பால்வயிற்றிளங்காய்ப்பசுங்கதிர்ச்செந்நெல்
பாளைவாய்க்கமுகினைமறைத்து, மேலுயர்வளங்கூர்மருதநாடளி
க்குநளனெனும்வேந்தர்கோன்மைந்தன், ஞாலமோரேழுமொ
ருகுடைநிழற்றுநபனெனுநாமவேற்காளை. (கஎஎ)

பழம்படிசடைத்தாற்றிளம்பசுங்கமுகிற்பரியநல்வாளைபாய்ந்
துளக்குந், தழைந்தவான்புகழ்சேர்மருதநாடளிக்குந்தாரைவே
ல்நபனருண்மைந்தன், றெழிந்துமட்டொழுகுமாலைதாழ்தடந்
தோட்டோன்றல்புண்டரிகன்மற்றவன்சேய்,செழும்புகட்சுதை
யாலுலகெலாந்தீற்றுங்கேமதன்னுவாவெனுஞ்செல்வன். ()

நெட்டிலைக்கரும்புஞ்சாலியுந்துவைத்து நெறிமருப்பெரு
மைமேய்ந்துறங்கும், மட்டுவார்கழனிவிளிம்புடுத்தோங்குவள
ங்கெழுமருதநீர்நாடன், கட்டழகுடையவிவன்மகன்றேவாநீ
கன்மற்றவன்மகன்களத்தி, லொட்டலர்நெய்த்தோர்மடுவெனநி
றைக்குமொளிறுவேற்பீனகுவாமால். (கஎகூ)

குண்டலந்திளைக்குங்குழைமுகமுளரிக்கொடிச்சியர்கிளிக
டிந்தோச்சும், பண்டருகிளவிகேட்டுவானவர்கள்கின்னரர்பாட்
டினைவெறுக்குந், தண்டலில்வளங்கூர்செழுமலைநாடன் பீனகு
வளித்தருட்னையன், மண்டலவேந்தர்மணிமுடியுரிஞ்சிவழன்
றதாட்சகச்சுவாவென்பார். (கஅ0)

வலைத்தலைகிழித்துப்பருவராற்கன்று வாளையம்பகட்டொ
டுதாவக், குலைத்தலைப்பாளைக்கொழுமடற்கமுகின்குறுங்கழுத்
துடைந்துதேனொழுகி, யலைத்தெறிதாங்கவருவியிற்பாயுமகன்
வ்யலயோத்திநாடளிக்குஞ்,சிலைத்தடந்திணிதோளாங்கவன்மை
ந்தன்றிறலுடைக்குத்திரவலோகன். (கஅக)

கூத்தியர்கதுப்பினறுமணம்விரிக்குங்கொழுமலர்ப்பட்பை
சூழ்கிடந்த, வேத்தருமல்லற்றிருநகரரசரிறைஞ்சிடுங்குத்திரவ
லோகன், வாய்த்தருண்மைந்தன்றூரபீடப்பேர்மன்னவனுங்கவ
ன்புதல்வன், றேத்துமாதெவ்வர்வழுத்திடுங்கழற்காற்சந்திரசிர
சுவென்றுரைப்போன். (கஅஉ)

வாயுமிழ்சிலம்பிநூல்வலந்தென்னக்கூன்முதுகிருல்வலைவிரித்துப், பாய்திரைக்கடலிற்பரதவர்கவரப்பருமணியிப்பிவந்தடையு, மாயிருஞ்செல்வம்வழங்குநீர்ச்சேர்ப்பன்சந்திரசிரசுவின்மைந்த, னையுநூற்கேள்வித்திறல்கெழுபானுச்சித்திரனெனவறைகுவராய். (௧௮௩)

திரிமருப்பிரலையேறழத்தாக்கித் தின்றிடுஞ்சிறுபுலிவெருவக், கரிமருப்பினையும்பறித்துவெம்மடங்கலுண்டிடுங்கானகநாட, னுருகெழுசிற்றம்பானுசித்திரனென் றுரைத்திடுமன்னவன்மைந்தன், பருதிவேற்றடக்கைச்சுதாயுவென்றேத்தும்பார்புகழ் மன்னனென்றுரைத்தான். (௧௮௪)

இன்னநற்காதைபடித்துளோர்கேட்டோ ரெழுதினோரினிதெனவியந்தோர், பன்னெடுங்காலமிந்திரதிருவிற் பார்பொதுவறத்தனிபுரந்து, பொன்னகரெய்தியரம்பையர்தெய்வப்புணர்முலைதிளைத்திடவாழ்ந்து, பின்னல்வெண்டிரைதாழ்கங்கையஞ்சடையோனடிநிழல்பெட்பின்வீற்றிருப்பார். (௧௮௫)

இராமன்வைகுந்தமடைந்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௧௪௦௬.

---

இருபத்தெட்டாவது

## சந்திரவங்கிஷமுரைத்த வத்தியாயம்.

---

பருதிநன்மரபினெம்பிரானடியார் யாரையுமினிதினிற்பகர்ந்தாய், விரிகதிர்த்திங்கண்மரபினிற்றோன்றிவெள்விடைப்பாகனைப்பழிச்சுங், குருதிவேலரசர்யாரையுமுரைத்தி யென்னலுங்கூன்முதுகாமை, யுருவுகொள்கடவுளிந்திரன்மகதி யாழ்முனியுவந்திடவுரைப்பான். (௧)

பானிலாச்சொரியுங்கலைமதிக்கடவுள் பரிவொடுமுயிர்த்திடுஞ்சிறுவன், வேனில்வேளனையபுதனவன்மைந்த னைக்குநர்விழிகவர்வனப்பிற், றேன்மழைபொழிந்தாலன்னதீங்குதலையுருப்பசிநசையுறுதிண்டோள், மானவேற்றடக்கைப்புரூரவாவென்னுமதியுறழ்தனிக்குடைவள்ளல். (௨)

சிந்துரம்பூத்தசிறுபிறைநெற்றிச்செவ்வரிக்கருங்கயல்மழைக்கட், பந்தணிகாந்தண்முகிழ்விரற்செவ்வாயுருப்பசிபடர்முலைதழுவி, யந்தமில்சீர்த்திப்புரூரவாவென்போனளித்தருள்வேற்படைமைந்தன், கந்தடுசீற்றக்கடாக்களிறனையவாயுவென்றுரைத்திடுங்காலை. (௩)

## வேறு.

ஆயுவென் றுலகத்துயவறைகழல்வேந்தன்
வேய்மருட்டுதோட்பிரபையென்றுரைத்திடுமேலோன்
சாயன்மங்கைவெம்முலைமணந்தீன்றருடனையன்
மாயிரும்புவிவழுத்துசீர்மானவேல்நகுடன். (ச)

நரலைமாக்கடனுணிலம்புகழ்ந்திடுநகுடன்
றரைநிகழ்த்திடுங்கடாமலையுரிபுனைதடந்தோட்
பர[illegible]சேவடித்தாமரைபணிந்தருண்மைந்த
னிருநிலம்புகழியாதியென்றுரைத்திடுமேந்தல். (ரு)

அள்ளிலைக்கதிர்வேற்படையாதியென்றறைவோன்
வெள்ளிகல்கியதெய்வயானையைமணம்விரும்பி
யெள்ளருந்திறல்விடபருவாவினிதீன்ற
வள்ளிநுண்ணிடைச்சன்மிட்டைமுகிழ்முலைமணந்தான். (சு)

எவ்வெலாத்திசையும்புகழ்ந்தேத்துசீரொதுவுங்
கவ்வைநீர்ப்புவிகாத்தருள்வேற்றுருவசுவுங்
கொவ்வையங்கனிமருட்டுவாய்க்குதலையந்தீஞ்சொற்
றெய்வயானையென்றுரைப்பவளீன்றருள்சிறுவர். (எ)

அச்சணங்குவேற்றுருருவுந்திறல்கொள்வேல்மனுவுங்
கச்சைமால்களிறனையவெம்பூருவுங்கவினிச்
செச்சைகொட்டியவிளமுலைத்தீங்கனித்துவர்வாய்
நச்சுவேல்விழிச்சன்மிட்டைநல்கிடுமைந்தர். (அ)

தெய்வயானையைத்தீர்ந்துசன்மிட்டையென்றுரைக்குங்
கொவ்வைவாய்ச்சியைநசையுறுமியாதியைக்கொதித்து
வெவ்வழற்பொறிவிழியுகவெள்ளியென்றுரைப்போ
னெவ்வமுற்றுவன்கிழவுருவெய்திடச்சபித்தான். (கூ)

உருவமைந்தவொண்கிழவுருவாங்கிநும்மிளமை
தருதிரொன்றனுநால்வருந்தனித்தனிமறுப்ப
வெறிபொலங்கழற்பூருவாங்கிசைந்தனனளிப்ப
மருமலர்க்கணைவேனில்வேளெனவடிவமைந்தான். (க0)

பருவமாயிரமகளிர்தம்மின்னலம்பருகி
யுருவுபூண்டிடுமிளமைதன்மைந்தனுக்குதவி
மருவிமூப்பினைவாங்கியம்மைந்தனெவ்வுலகும்
புரவுபூண்டிடப்பொழிகதிர்மணிமுடிபுனைந்தான். (கக)

தென்னந்திக்கினிற்றென்னனுகெனத்துருவசுவா
மன்னர்மன்னனைமணிமுடிபுனைந்துதென்கிழக்கிற்
பொன்னவாங்கழலெதுவினைப்புரத்தியென்றளித்துப்
பன்னுமேற்றிசையளிக்கெனத்துருகுவைப்பணித்தான். (கஉ)

கடகளிற்றினைநிகர்தருமனுவெனுங்காளை
வடபுலத்தினைக்காக்கெனமணிமுடிகவித்துக்
கொடியிடைத்துவர்வாய்ச்சியரோடுகொன்குறுகி
யுடலம்வாடநோற்றியாதியாங்குயர்கதியடைந்தான். (௧௩)

தனைபுகழ்ந்தசீரொதுவிணிதளித்தருடனையர்
வனைகொண்மார்புடைச்சகத்திரசித்துவண்குரோட்ட
ணிருபர்போற்றிடுநீலசீதப்பெயர்க்குரிசி
லிரகுவென்னுமோர்நால்வரொன்றினிதியம்புவரால். (௧௪)

மோட்டராமுடிக்கிடந்தபார்பரித்துமூவுலகுந்
தீட்டுவண்புகழ்ச்சகத்திரசித்தெனுந்திறலோன்
சேட்டிளம்பிறைக்கண்ணியோற்றொழுதருள்சிறுவன்
வாட்டிறற்சதசித்தெனுமன்னவர்திலதன். (௧௫)

வேறு.

நெடுவெண்கவிகைநிலாக்கொழிப்பநிணங்கால்வடிவேற்சதசித்த, னடுவெம்புலிப்போத்தனையதிறற்சிறுவனடற்கேகயனவன்சே, யுடலஞ்செருவென்றுரைத்திடினு மொன்றுருதிரம்பருகியல்லாற், றடறுபுகுதாதொளிர்வடிவாட டருமனென்னச் சாற்றுவரால். (௧௬)

அன்னோன்மைந்தன்றீம்பாலு மமிழ்தும்புளிப்பத் தித்திக்குங், கன்னற்குதலைமடமாதர்காமனென்னமயல்கூரு, மன்னன்றருமநேத்திரனு மவன்சேய்விளங்குமணிப்புயத்தாற், பொன்னங்கிரியின்வனப்பழித்தபோர்வேற்கீர்த்தியெனும்வேந்தன். ()

அரசுகுவிந்துதிறையளக்குமோதையம் பொற்குணில்பொருமும், முரசுமுழங்குமோதையினையவிக்குமம்பொன்முற்றத்து,விரைசெல்மான்றேர்க்கீர்த்தியெனும்வெள்வேற்காளையருண்மைந்தன், புரசையானைவேல்வேந்தர்போற்றும்புகழ்ச்சஞ்ஞக்கினனே. (௧௮)

அன்னோன்முன்னைப்பவத்தினிலோர் புறவமாங்கோர்பாசுபதன், பொன்னங்கமலப்பதத்துகடன்மெய்யிற்பொருந்தப்பட்டதனால், மன்னனாகியெவ்வுலகுமதிவெண்குடைக்கீழ்த்தனிபுரந்தாங், கொன்னார்வணங்குமயிட்டுமானென்னும்புதல்வன்றனையுயிர்த்தான். (௧௯)

வேறு.

கத்திகைக்கருமென்கூந்தற்கன்னியர்விரும்புதிண்டோட்
பத்திரசிரேணியென்போன்மயிட்டுமானின்பயந்தமைந்தன்
முத்தவெண்கவிகைமன்னர்முடிமணிகிழிக்கும்பொற்றாட்
டுத்தமனென்னும்வெவ்வேற்றோன்றன்மற்றவன்றன்மைந்தன். ();

அன்னவன்மைந்தன்றிங்கட்கூன்புறத்தணவவோங்குந்
தென்வரைச்சாந்துமாதர்திரண்முலைச்சுவடுநீங்காக்
கன்னவின்றுயர்ந்ததிண்டோட்டனகன்மற்றவன்றன்காளை
யென்னிலத்தரசும்போற்றுங்கிருதவீரியனென்பார்ால் (உக)

வேறு.

ஏத்தும்வார்குழலாங்கவன்மகனிராவணனை
யார்த்துவன்சிறைப்புகுத்தியெவ்வுலகமுமடர்த்த
கார்த்தவீரியனுருமக்காவலன்றனக்குக்
கோர்த்துவண்புகழ்க்குமாரரோர்நூற்றுவருளரால். (உஉ)

வீரன்மைந்தரோர்நூற்றுவர்தம்மில்வேற்சூரன்
சூரசேனன்போர்விட்டுணிகிட்டிணன்றாங்கு
மாரமாலிகைச்சயத்துவசன்றனோடைவர்
பாரனைத்தையுந்தமதினிதோளினிற்பரித்தோர். (உங)

வெற்றிவேற்சயத்துவசன்மாலன்பினன்விறல்கூர்
மற்றைநால்வருமதிவகிர்கண்ணியோன்மலர்த்தாட்
பொற்றதாமரைப்போதினில்வழிபடும்புனித
ருற்றவன்பினோடவாசயத்துவசனுக்குரைப்பார். (உச)

திங்கடங்குலத்துதித்தவர்யாவருஞ்சிறந்த
கங்கைசூடிதன்னென்பினர்நீயதுகருதாய்
மங்குல்போன்மெனுநிறனுடைமாலடிபழிச்சி
லங்கண்மாநிலமுழுவதுநிகழுமென்றறைந்தார். (உரு)

அறைந்தவையன்மீர்வம்மின்கள்முனிவர்பாலணுகிச்
சிறந்ததேதெனத்தேர்குதுமெனச்சயத்துவசன்
றுறந்தவேழ்பெருமுனிவரைத்தொழுதிடலுங்
கறங்குபோற்சுழலைம்புலன்கடிந்தவருரைப்பார். (உசு)

யாவரொப்பெருந்தேவரைப்பழிச்சினரோனும்
பாவடிக்களிறுரித்தவர்ப்பழிச்சியதாமால்
மூவராகிமுத்தொழில்களுமுறைமுறைபயிற்றுந்
தேவதேவனெப்பொருளினுஞ்சிறந்துநிற்பதனால். (உஎ)

அரசர்விண்டுவின்கூற்றினிலவதரித்ததனல்
விரைசெய்தண்டுழாய்முகுந்தனைவிண்ணவர்கோவைப்
பரவவேண்டுநான்மறையவர்பசுபதிகூற்றின்
வருதலாலரன்சேவடிவழுத்துதல்வழக்காம். (உஅ)

தேவர்மாயனையசுரருமக்கருஞ்சிறந்த
தாவருந்திறல்வயிரவக்கடவுளைத்தகைசா
லோவில்கல்விசையாழிநோரியக்கரொண்மதியை
வீய்வில்விஞ்சையர்வாணியைப்பழிச்சுதல்வேண்டும். (உகூ)

ஒடிவில்சாக்கியரிரவியைக்கின்னாருமையைக்
கடவுண்மாதவர்மகேசனைக்கமலவீட்டயனை
யடல்மனுக்கள்பார்ப்பதியைமாயவனையில்லறத்தோர்
தொடர்பினேத்துமெத்தேவையாயினுந்தொழல்வேண்டும். ()

பிரமசாரியரயனைவைகானசம்பிடித்தோர்
பருதிவேந்தனைப்பற்றறத்துறந்திடுமெதிக
ளருள்புரிந்திடுமகேசனைப்பூதங்களரனைக்
கருதருங்கணமைங்கரனைத்தொழல்கடனும். (௫௧)

பலபிதற்றியென்பங்கயக்கடவுளைமுதலாக்
குலவுநீள்சினைத்தருக்களையிறுதியாய்க்குறித்த
வலகில்பல்லுயிரொவைக்கும்வெண்ணீறணிந்தாடுங்
கலவமாமயில்பங்கனேயாதியாகடவுள். (௫௨)

என்றுநான்முகனெமதுளத்திருளெறிந்திசைத்தான்
மன்றலந்துழாய்முகுந்தனையிவன்வழுத்திடினுங்
கொன்றைசூடியைப்பழிச்சியாதாமெனக்கூற
நன்றெனத்தெளிந்தரசர்தம்பதியினண்ணினரால். (௫௩)

அரசாவருமகனிலமளிந்திடுநாளில்
வெருவருந்திறல்விதேகனென்றுளைபெறுமவுணன்
கரைகொல்மாக்கடற்படையொடுமிகவுளங்கனன்று
பொருகளத்திடைமன்னரோடெதிர்ந்தமர்புரிந்தான். (௫௪)

சூரனென்பவனுருத்திரன்வெங்கணைதொடுப்ப
வாருணப்படைசூரசேனன்றனிவழங்க
வீரவிட்டுணிவிரிஞ்சன்வெம்படையினைவிடுப்ப
போர்செய்கிடடினன்வாயுவின்கொடுங்கணைபொழிந்தான். ()

விட்டவிட்டவெங்கணையெலாம்விலக்கிவாளவுணன்
வட்டவெஞ்சிலைகுழைத்தனும்வருசயத்துவசன்
கட்டமுற்புகைகான்றெறிகணைகதிராழி
தொட்டுமற்றவன்மணிமுடிக்கருந்தலைதுணித்தான். (௫௬)

வெய்யதானவப்பசுப்படுத்தடுகளவேள்வி
செய்துமுற்றியசயத்துவசனுக்கருள்சிறந்து
மையில்கோசிகன்மாலுளமகிழவோர்வேள்வி
யெய்தியாற்றினனுங்கவனெழுமையுந்துடைத்தான். (௫௭)

மற்றமன்னவர்நால்வற்குமகத்தியன்வசிட்ட
னற்றவம்புரியத்திரிகவுதமனண்ணிக்
கற்றைவார்சடைக்கண்ணுதலுவப்பநல்வேள்வி
முற்றுவித்தனரவர்களுமுத்திவீடடைந்தார். (௫௮)

உரைத்தமைந்தரிற்கிட்டிணனுயிர்த்தருண்மதுவாம்
வரைத்தடம்புயன்வசணனையாதியாச்சேடன்
பரித்தபாரினைத்தமதுதோள்வலியினாற்பரிக்கு
மரத்தவேலுடைமைந்தர்நூற்றுவர்தமையளித்தான். (௩௯)

மால்விருப்புறுசயத்துவசன்றருமைந்தன்
காலசங்கனீரைம்பதுகாதலர்ப்பயந்தான்
சாலுமைந்தரின்வீதிகோத்திரனெனுந்தக்கோன்
பாலலோசனனருளினாலனந்தனைப்பயந்தான். (௪0)

அனந்தனென்றுலகேத்தியவரசிளங்குமர
னனந்தலைப்புவிமுழுவதுநளிர்கதிர்பரப்பி
தினஞ்செய்வோனெனத்திகிரியொன்றுருட்டிவான்மகளிர்
மனங்கவர்ந்திடுதுர்ச்சயன்றனைமகிழ்ந்தளித்தான். (௪௧)

கருப்புவெஞ்சிலையகற்றியகாமனென்றெவரும்
விருப்பமெய்துறுதுர்ச்சயன்விழிகவர்வனப்பி
னருப்பூவெம்முலையம்பலைத்தொழுகும்வாட்டடங்கட்
டிருக்கண்டன்னவோர்சேயிழைமுகிழ்முலைமணந்தான். (௪௨)

கற்பின்வீக்கமுங்கதிர்முலைவீக்கமுங்கவின்செய்
பொற்பின்வீக்கமும்பூத்தமென்பொலங்கொடிதடந்தோ
ளற்பின்வீக்கமுற்றணைந்திடுநாளின்மற்றொருநாள்
வெற்பின்வீங்கியதிரள்புயன்யமுனைமேவினனால். (௪௩)

அன்னமாநதிக்கரையினிலமிழ்துருவெடுத்தும்
பொன்னவாஞ்சுணங்கரும்பியபுணர்முலைதாங்கிக்
கன்னல்மென்மொழியுருப்பசிபேரோடுங்கவினி
மின்னிளங்கொடிமென்மெலவொதுங்குதல்கண்டான். (௪௪)

கண்டகண்வழிவுணர்வுபோய்க்கதிர்முலைகலப்பக்
கொண்டவன்பினிலறிவழிந்தரசிளங்குமரன்
கெண்டையந்தடங்கட்கடையின்னருள்கிடைத்துத்
தொண்டனென்மொழிகேட்டி யென்றிரந்திவைசொல்வான். ()

பொன்செய்கம்மியர்கைசெயாப்பூண்சுமந்தோங்கி
மின்செய்நுண்ணிடைவருத்தியவெம்முலைத்திருவே
கொன்செய்வேல்விழிகோடியுன்கோடியன்வளிய
னென்செய்கேனெனத்தொழுதலுமிளநகைமுகிழ்த்தாள். (௪௬)

திதலைகொப்புளித்தோங்கியவனமுலைத்தீஞ்சொன்
மதர்வைநோக்கிதனின்னகைவாயில்பெற்றரசன்
புதுநறுத்துளிபருகிவீழ்பொன்னிறச்சுரும்பர்
ததைபுமென்மலர்மாதவிப்பந்தரிற்சார்ந்தான். (௪௭)

வண்ணமேகலைவீக்கறவளர்ந்ததேர்த்தட்டுந்
தண்ணந்தாமரைகவற்றிவேல்தாங்கியமதிபு
மண்ணலஞ்சிலைவேணிகரரசிளங்குமரன்
கண்ணிமைப்பறநோக்கலிற்கடவுளர்போன்றான். (௪௮)

அரைக்கலாதபூந்தேய்வைகோட்டிளமுலையகன்ற
வரைத்தடம்புயத்துள்புகுந்தொளித்திடமருவி
யிரைத்துவண்டுறுப்பூங்குழலணங்கொடுமிறைவ
னுரைக்கநெஞ்சிடையுன்னவொண்ணாநலமுற்றான். (௪௯)

பிதிர்சுணங்கணிவனமுலைவிசும்பிடைப்பிரியன்
விதலையெய்துவனென்றலும்விண்ணவர்நலனு
மதிர்திரைக்கடலமிர்தநீயணைதொறும்பயக்கும்
புதுநலத்தினுமினியகொல்போக்கலனென்றான். (௫0)

அழகுகண்படுமவிர்மதிவாண்முகத்தணங்கின்
றழுமுற்றெய்திடாக்குவிமுலைத்தடத்திடைமூழ்கி
யுழுவலன்பொடுபலபகலுவந்துவேலரசன்
முழவுகண்டுயிலாததன்முதுநகரடைந்தான். (௫௧)

அடைந்தமன்னவன்வேனில்வேளங்கையால்வருந்திக்
கடைந்தசெப்பெனக்கதிர்முலைப்பணைமருள்கழைத்தோட்
குடங்கையுள்ளமைந்தடங்கலாக்குவளையந்தடங்கண்
மடந்தைவைகியவுளகத்தடைந்தனன்மாதோ. (௫௨)

கற்பருங்கலம்புகுதருகணவனைவணங்கி
யெற்பிரிந்துநீயெவ்வுழிப்படர்ந்தனையெனலும்
வெற்பின்வீங்கியதடம்புயன்வெள்கினனாகி
நிற்பமூரல்பூத்தணங்களனுணர்ந்திவைநிகழ்த்தும். (௫௩)

ஊடுகின்றிலன்வெருவனீயுருப்பசிமுலைமேற்
கூடிதீவினைதவிர்ந்திடக்கண்ணுவர்க்குறுகி
நீடுவேள்விகளியற்றெனநெஞ்சழிந்துருகி
வாடிமன்னவன்கண்ணுவன்மருங்குபோயடைந்தான். (௫௪)

அரங்கக்கூத்தியரணிமுலைமுன்றிலிற்றிளைப்ப
விரிந்ததீவினைதுடைக்குநல்விதியுரையென்னத்
திரிந்துமாதவம்புரிந்திவண்சேர்கெனவரச
னிரங்குபூங்குயிலொலியருவிமையவெற்படைந்தான். (௫௫)

அய்யசெங்கதிராதவனெனக்கதிரெறித்து
மையெறிந்தொளிர்பன்மணிகுயிற்றியமாலை
கையினேந்தியோர்கின்னரன்புகுதலுங்கனன்று
நெய்கொள்வேலுடைத்துர்ச்சயனமர்க்கெதிர்நேர்ந்தான். (௫௬)

காமனன்னதோர்துர்ச்சயன்கனன்றுவாளுருவித்
தாமவேலுடைக்கின்னரற்றுணித்தவன்கொணர்ந்த
தாமங்கைக்கொடுதளிரியற்பவளவாய்த்தீஞ்சொல்
வாமமேகலையுருப்பசிபால்மனம்வலித்தான். (௫௭)

கமழலந்துறைசூழ்தருங்கங்கையங்கரையின்
யமுனைமாநதிதீரத்தினேமகூடத்தி
னமரர்நாட்டினிற்றேடியுமமுதுகொப்புளிக்குங்
குமுதவாய்ச்சியைக்காண்கலனாகியுட்கொதித்தான். (௫௮)

வேனில்வேணிகர்துர்ச்சயன்விரைவினிலெய்தித்
தேனளாயசொற்றிலோத்தமைவெள்குறப்பசிய
கானலந்துழாய்முகுந்தனூருவில்வருங்கரும்பை
மானதப்பெருவாவியிற்கண்டுளமகிழ்ந்தான். (௫௯)

மலரின்மேலுறைகடவுளும்வானவர்க்கிறையும்
புலமைமேம்படுகின்னரர்ப்புகழ்ந்துமுன்னளித்த
விலைவரம்பறியாதபொன்மாலையைவியவா
வுலகமேத்தெழிலுருப்பசிமுலைமுகட்டணிந்தான். (௬0)

திங்கள்வெண்மதித்தலத்தினிற்செங்கதிர்கொழுதிக்
கொங்குயிர்ப்பமென்குயில்குடைந்தாடுதண்டலையின்
மங்குல்கண்படுமால்வரைச்சாரலின்மன்ன
னங்கையம்பக்கிளமுலைநன்னலநுகர்ந்தான். (௬௧)

வாருடுத்தமென்முலைத்தடம்புயத்திடைமருவி
ஞாரந்தட்பினுமாயிரக்காதம்விட்டகன்று
சோருநெஞ்சினர்போலவுள்ளாருயிர்துடியா
வீரவெண்மதிக்கஞ்சிவிள்ளாதினிதிருந்தான். (௬௨)

மணக்கும்பல்பகலோர்நொடிவனமுலைமருமந்
தணக்குமோர்கணமூழிநாளாமெனத்தயங்கித்
துணர்த்தகோதையுந்தோன்றலுமொழுகுநாட்டேவர்
புணர்ப்பினாற்செழும்பூங்கொடியீங்கிவைபுகல்வாள். (௬௩)

கைதவந்தெறுகண்ணுவனென்னைநீகலந்து
பைதலுற்றவெவ்வினையறப்பகர்ந்தவையனைத்துஞ்
செய்திடாமையாலென்னொடுநின்குலந்தீய
வைதுகொன்றிடுமென்னவுமனமருண்டிருந்தான். (௬௪)

வள்ளல்பெட்பறவேற்றுருக்கொண்டிடுமடந்தை
யுள்ளநோக்கிவெங்கூத்தியருளத்திடைக்குணிக்குங்
கள்ளம்வேதனுங்கணிப்பரிதேனவஞ்சநீங்கி
வெள்ளிவீழெனவருவிதூங்கிமையவெற்பணைந்தான். (௬௫)

வளியருந்தியோர்பன்னிருபருவமாதவஞ்செய்
தளிகொணெஞ்சுடைக்கண்ணுவன்மருங்குவந்தடைந்து
துளிகொள்கண்ணினன்றீவினைதுடைக்கெனவுரைப்ப
நளிகொள்கண்ணியாய்நடுங்கலென்றீங்கிவைநவில்வான். (௬௬)

மாசுபூத்தொளிர்திவிமீனுமடைக்குமாமருங்கு
காசியல்லதையில்லெனக்கண்ணுவனுரைப்பத்
தேசிகன்றிருத்தாளிணைபணிந்துநிதெறிந்த
வாசில்கேள்வியானனந்தகானனத்தடைந்தான். (௬௭)

காசிமாநகர்க்கேகவோர்கழல்பெயர்த்திடுமுன்
பேசுபாவமாயிரமடிப்பின்னிடவேகி
வீசுதெண்டிரைக்கங்கைநீர்படிந்துவெண்ணீறு
பூசுமேனியான்பூங்கழல்போற்றிசெய்திருந்தான். (௬௮)

முத்திகண்படுகாசியின்முழவுறழ்தோளான்
பைத்தபாம்பணிவிமலனைப்பல்பகலிறைஞ்சித்
தத்துவந்தெரிகண்ணுவன்றவவனமெய்திக்
கைத்தலங்குவித்தாங்கவன்கழலிணைதொழுதான். (௬௯)

தொழுதமன்னனைத்தடவந்ததுகளறுமுனிவன்
பழுதில்நின்பதிக்கேகெனப்பதிமருங்கெய்தி
யழகுகண்படுமம்பகட்டிளமுலைத்துவர்வா
யுழுவலன்புடைமனைவியோடுவந்தினிதிருந்தான். (௭௰)

கருணையங்கடலாகியகண்ணுவமுனிவ
னிருநிலம்புகழ்துர்ச்சயன்மருங்குசென்றெய்தி
யரியமாமகமாற்றுவித்தகன்றனனவன்சேய்
விரைகொள்தார்முடிமேவலர்வணங்குசுப்பிரீதன். (௭௧)

வேறு.

முன்னர்யாமெடுத்துக்கூறுமுழுவலிதுயின்றதிண்டோண்
மன்னவன்குரோட்டுவெனும்வரிசிலையுழவன்மைந்தன்
பன்னகமுடியின்வைகும்பார்பொதுநீக்கியாள்வோன்
றுன்னலர்வணங்கியேத்துந்துவசனியாகுமென்றே. (௭௨)

நச்சிலைக்குடுமிவெள்வேற்றுவசனிநாமமைந்தன்
கச்சயங்களிநல்யானைக்கழிப்புலால்சுவைத்துவேந்தர்
பச்சிரத்தங்களுண்டுபசிப்பிணியகற்றுமொள்வாட்
செச்சையங்கண்ணிசூடுந்திண்புயமூர்த்தியென்பார் (௭௩)

கலைச்செருவிளைக்குமல்குற்கன்னியர்கதிர்த்தபொம்மன்
முலைச்செருவிளைக்குமார்பின்மூரிவேள்மூர்த்திமைந்தன்
மலைச்செருவிளைக்கும்யானைவிசங்குவாமவன்றன்மைந்தன்
சிலைசசெருவிளைக்குந்திண்டோட்சித்திரத்தேரனுமால். (௭௪)

திருவிருந்தகன்றதிண்டோட்சித்திரத்தேரன்மைந்த
னிருநிலமளக்குஞ்செங்கோலியற்சசிவிந்துவாகு
மரவுபைத்தேந்துஞாலமளித்தருளவன்றன்மைந்தன்
பிருதிவியச்சுவென்னவுயர்நிலம்பேசுமன்றே. (எரு)

ஆங்கவனருளுமைந்தனுடல்வேற்பிருதுகன்ம
னீங்கிவன்புதல்வன்வெள்விபார்க்கவனிவன்றன்மைந்தன்
வாங்குவில்விழுங்குதிண்டோண்மன்னவர்மவுலிதேய்த்துப்
பூங்கழல்சிவந்தவெற்றிப்புரவலன்பிருதுவென்போன். (எசு)

குடாதுநீள்குணாதுதூயகொழுநிதிக்குப்பைதுஞ்சும்
வடாதுநற்றமிழ்நூற்கேள்விவாய்த்திடுந்தெனாதுமுற்றும்
விடாதுகாணுடைமைபூண்டவிறல்கெழுபிருதுமைந்தன்
கடாமலையனையசீற்றப்பிருதுசத்தமனாங்காளை. (எஎ)

நெடுமதிநெற்றிதோய்ந்துநீள்கதிர்ச்செலவுமாற்றுக்
கொடுமுரட்புரிசைசாய்த்துக்கூர்நுனைமழுங்குகோட்ட
வடுதிறற்களிறுபோலுமாங்கவனருளுமைந்தன்
மிடலுடையுசனாமன்னோன்விறல்மகன்சிதெடுவென்போன். ()

மற்றவன்மைந்தன்வெள்வேற்கவசன்மற்றவன்றன்மைந்தன்
கொற்றவர்மவுலிதேய்த்துக்குரைகழல்விளங்குநோன்றாள்
வெற்றிவேற்றடக்கைச்சாரவிருத்தனாங்கவன்றன்மைந்த
னொற்றைவெண்கவிகைச்செங்கோலுறுவியனென்பர்மாதோ.()

கைந்நிறையெஃகமேந்திக்களிறுவீழ்ஞாட்பினேற்ற
பொன்னகர்க்கிறைவைவென்றுவிசும்பினிற்புரவுபூண்ட
மன்னவன்வயிரத்திண்டோளுறுவியன்மைந்தன்வாழ்த்தி
யென்னிலத்தரசும்போற்றும்விதர்ப்பனென்றியம்புமேந்தல். ()

முலைபொரக்குழைந்தபைந்தார்முழுவலிதுயின்றதிண்டோள்
மிலகிவில்லுமிழும்பைம்பூண்விதர்ப்பர்கோனளித்தமைந்தர்
கலையுணர்கிருதனொள்வாட்கேசிகன்களைகணாக
வுலகடிப்படுத்திவென்றவொளிறுவேலுரோமபாதன். (அக)

அறந்தலைமணக்குஞ்செங்கோலரசரிலுரோமபாதன்
பிறங்குசீர்மைந்தன்வெள்வேற்பெப்புருவவன்றன்மைந்தன்
கறங்குநீர்வேலைஞாலங்களைகணாவினிதுகாக்கு
மறந்துயில்வயிரத்திண்டோள் மன்னவன்விருத்தியென்போன்.

கலையறவீங்கியோங்குங்கைவளரல்குலல்லார்
முலைமுகங்குளிரத்தூங்குமுத்தம்வெண்ணிலவுகாலு
மிலைபொருதிணிதோட்சந்தன்விருதிசேயவன்றன்மைந்த
னிலைமுகப்பூண்செய்மார்பன்விச்சுவசமனென்பாரால். (அ௩)

மடல்வயிறுடைத்துத்தீந்தேன்வழிதருமாலைமார்பன்
மிடல்கெழுவயிரத்திண்டோள்விச்சுவசமன்றன்மைந்த
னுடலும்வெஞ்சமத்திறனென்னுளன்சுவைத்திரமார்ந்து
மடல்கெழுவயிரவொள்வாட்சுமந்துவென்றறைவரன்றே (௮௪)

விழுதுவிட்டொழுகுமுத்தவெண்ணிலாமாலைதாழு
மெழுவுறழ்குவவுத்திண்டோட் சுமந்துவிளறிலகொண்மைந்
கழுதுகைகொட்டிபாலவொன்னலர்க்கடிந்தவாய்வாள் [தன்
முழுதுலகொருகோலோச்சுநளனெனுமூரிவேலான். (௮௫)

அல்லவைகடிந்துநாளுமறந்தலைவளர்க்குஞ்செங்கோற்
கல்லுறழ்திணிதோள்வெற்றிக்கேசிகன்கருணைமைந்தன்
கொல்புலியனையசோதியாங்கவன்குமரன்றூய
தொல்புகழ்படைத்தசோதிட்டிமனெனச்சொல்லுவாரால். ()

கடனிலம்புரக்கும்வெய்யகடாக்களிற்றுழவனாய
வடல்கெழுமன்னோன்மைந்தன் வபுட்டிமானவன்றன்மைந்தன்
குடிபுறங்கூவவொன்னார்கொடிமதிற்குடுமிகொண்ட
மிடல்கெழுவயிரத்திண்டோள்விறற்படைப்பிரமமேதி. (௮௭)

அருட்கடன்பூண்டசெங்கணுடல்வேலன்னோன்மைந்தன்
றிருக்கிளரம்பொன்மோலிசசீதரனவன்றன்மைந்தன்
முருக்கிதழ்முத்தமூரல்முகிழ்முலையின்சொனல்லார்
விருப்புறுகாமனன்னவிகாதனென்றுரைப்பரன்றே. (௮௮)

இடங்கர்வெங்கராமோடேடியெறிதிரைகிழியமோதுங்
கிடங்கர்சூழொன்னாரிஞ்சிக்குடுமிகொள்கிருதுமைந்தன்
மடங்கலேறனையசீற்றக்குணியவன்மைந்தன்வெய்ய
விடங்கவிழ்த்தொளிரும்வைவேல்விருட்டிணியென்பர்மாதோ.

மூழிவாய்த்தாமஞ்சூடிமார்பகமுழுதுங்கொண்ட
வீழ்முலைத்துணைகடாக்கிவிழுத்தழும்பிருந்துவீங்கும்
பாழியந்தடந்தோள்வேற்கைவிருட்டிணிபயந்தமைந்த
னேழையர்கிழியிற்றீட்டுமெழினிருவிருத்தியாமால். (௯0)

கருமருப்பீன்றகைதைக்கானகநாடன்மன்னர்
வெருவரவரிவில்வாங்கும்விறனிருவிருத்திமைந்தன்
குருதிகொப்புளிக்கும்வேற்கைத்தெசாருகனவன்றன்மைந்த
னிரவலர்மகிழயாவுமீய்ந்திடுந்திறலாரோகன். (௯௧)

மொய்சமத்தெதிர்ந்தோர்மேனிமுதுமரப்பொந்திற்றோன்றப்
பெய்கணைமாரிசிந்தும்பெருந்திறலவன்றன்மைந்தன்
வெய்யசீமூதனன்னோன்விறலுடைச்சிறுவனேந்து
மையல்மால்யானையன்னவயங்கெழுவிருதியாமால். (௯௨)

வெண்டலைப்புலவுவாட்கைவிகுதிதன்மைந்தனொன்னார்
புண்டலைதோய்ந்துகாதம்புலால்மணங்கமழும்வைவேல்
மண்டலவேந்தர்வேந்தன்பலாச்சுவனவன்றன்மைந்த
னெண்டிசைபுரக்குஞ்செங்கோனவாச்சுவனென்பர்மாதோ. ()

யாழிசைமிடற்றசெங்கணிருங்குயிலகவுஞ்சோலை
சூழ்தருமருதநாடனவாச்சுவனளித்ததோன்றல்
தாழியங்குவளைக்கண்ணார்நகையுறுதாமஞ்சூழ்ந்த
பாழியந்தடந்தோள்வெற்றித்தயரதன்பகடுபோல்வான். (௯௪)

வாலரிகழுவுஞ்செந்நீர்ப்பாய்ந்துவண்கமலத்தோடு
சாலியும்வளருமல்லறகைபெறுமருதநாடன்
மால்வயக்களிறுபோலுந்தயரதனளித்தமைந்தன்
காலவேற்சகுனியன்னோன்மகனுயர்காந்தியென்போன். (௯௫)

சோறுவாய்திறந்தசெம்பொற்றொகுமடற்கைதைசாயா
வேறுநீர்முத்தஞ்சிந்துமிருங்கடற்சேர்ப்பனாய
வீறுசேர்காந்திமைந்தன்றேவரனவன்செய்விண்ணோ
ராறிமறையோர்போற்றவறம்புரிதேவபக்கன். (௯௬)

இலைத்தொழிற்றொய்யிறீட்டியெழில்குடியிருந்துவீங்கு
மலைக்கவின்கொண்டகொங்கைமங்கையர்க்கநங்கனன்ன
சிலைத்தொழிற்றேவபக்கன்சிறுவன்வேல்மதுவாமன்னோன்
குலக்குறுமைந்தன்வெற்றிக்குரவசனென்பர்மாதோ. (௯௭)

மணிக்குடம்பதித்ததன்னவருமுலைமகளிர்வேட்பத்
துணைப்புயமழகுகாட்டுங்குரவசனளித்ததோன்றல்
கணிப்பருமனுவென்றோதுங்காளைமற்றவன்றன்மைந்தன்
புணர்த்தபூந்தாமமார்பன்புருகுச்சனென்பர்மாதோ. (௯௮)

தூக்குபொன்மணிநாவென்றுந்துயில்விழித்தசைதல்செய்யா
மேக்குயர்ந்தோங்குவாயில்விறற்புருகுச்சன்மைந்த
னாக்கடைபுரட்டிச்சிந்துநச்செயிற்றரவம்போலுங்
கோக்களிறனையவெற்றிக்குறுகலர்ச்செற்றவஞ்சன். (௯௯)

அஞ்சுவின்மைந்தன்போரிலடையலருதிரமாந்தி
நஞ்சுகொப்புளிக்கும்வைவேற்சாத்துதனவன்றன்மைந்தர்
வெஞ்சமத்திடியேறன்னவேல்விருட்டிணியுமிக்க
மஞ்சுறழ்தடக்கைவெய்யமறங்கொளந்தகனுமென்பார். (௧௦௦)

வேறு.

முத்துவிரித்தமுலைமுற்றத் துயர்பூங்கரும்புதுனித்தெழுதிப், பைத்தவரவவல்குலராவழங்குமதுரைப்பதிவேந்த, னத்தம்பொருதோள்விருட்டுணிதன் மைந்தரடல்வேல்மித்திரனென், றொத்ததிறல்கூர்சனியென்போன் வனமித்திரனென்றுரைப்பால். (௧௦௧)

வேறு.

பாற்கடல்சிவப்பவெழுந்தசெம்மணித்தோண் மித்திரன்பயந்திடுமைந்த, னூற்கடல்கடந்தநங்கினைவன்றனுவலருந்திறலுடைமைந்தர், வேற்கடற்றனைச்சத்திராசித்தும் வெம்பரித்தேரமர்க்களத்தி, னேற்குனராவிகூற்றினுக்களிக்குமியற்பிரசேனனுமென்பார். (கO௨)

கூற்றிருந்தாலுங்கூர்நுதிச்சுடர்வேற்சனியெனுங்கொற்றவன்புதல்வன், மாற்றலர்மவுலிதேய்த்தொளிபிறங்கும் வார்கழற்குரிசில்சத்தியகன், போற்றுநன்மைந்தனென்னலருதிரபபுலான்முடையோசனைகமழும், பாற்றினஞ்சுழல்வேற்சாத்தகியவன்சேய்பழுதிலாச்சஞ்சயனென்பார். (கOஙு)

ஆங்கவன்புதல்வன்குணியவனீமைந்த னடையலர்புணர்ந்திடுமகளிர், கோங்கிளமுலையிற்றொய்யிலுங்கலனுங் குங்குமச்சேதகக்குழம்பு, நீங்கிடினல்லானெய்ம்முகந்தோயாதழலுமிழ்நெட்டிலைச்சுடர்வே, லோங்குசீர்பரப்பியுலகெலாம்விளக்குமுகந்தரனெனவுரைக்குவரால். (கOச)

வேறு.

குங்குமச்சேறுதோய்ந்தகுறிஞ்சிப்பூங்கோதைபோலு
மங்கலுழ்ந்திதலைபூத்தவரும்பிளமுலையினல்லார்
பைங்கணைக்காமனென்னப்பகரனமித்திரப்பேர்ச்
சிங்கவேறனையான்மைந்தன்றிகழ்பிருச்சினியென்பாரால் (கOரு)

வேறு.

கொழுங்குடாநெவிட்டிகிணைப்புலால்குதட்டுங்குருதிவேற்பிருச்சினிமைந்தர், பழங்கனூற்றெரன்னார்வெறுக்கொள்ளாநடவும்பாய்பரிச்சுவர்க்கனுங்களத்தி, னெழுந்துவெங்குறுத்தாட்பூதமும்பேயுமீருள்வாய்ப்பெய்துநின்றாடக், கழந்துநாண்கொளுவிவரிசிலைகுழைக்குங்கல்செய்தோட்சித்திரகனுமே. (கOகூ)

ஆங்கவர்தம்மிற்சுவர்க்கனன்மைந்த னறநெறியொழுகுமக்குரூரன், றீங்கறுமவன்சேய்தேவவானருமவன்மகன்விச்சுவசேனன், வாங்குவிற்றிணிதோளாங்கவன்மைந்தன்வாகைவேற்பிருதுவுமொன்று, ரோங்கெயிலிடிக்கும்வேழவித்தகனென் றுரைத்திடும்விப்பிருதுவுமே. (கOஎ)

உலகமோரேழுந்தனதடிப்படுத்துமந்தகனுயிர்த்திடுமைந்தர், நிலவுவெண்கவிகைக்குகுரனுங்களத்தினோலரீருள்வாய்க்குதட்டிப், புலவுகாறழல்வாயள்ளிலைவேலாற்புரந்தரன்பகையறத்துறந்த, வலகறுசீர்த்திவளர்பயமானனென்றிடுமரசனுமாதோ.

களிறழுத்தாக்குங்கடுங்குரற்சீயமனையவெங்குகுரனன்மைந்தன், வெளிறெறிகேள்விவிருட்டிணியென்போனுங்கவன்விறல்கெழுமைந்த, னொளிறுவேற்றடக்கைத்திறல்புனைகபோதரோம

னுமவன்மகன்சர்ந்தன், வளறுதோய்திண்டோள்விலோமகனவ
ன்சேய்கபனெனவறைகுவரன்றே. (க0௯)

பையராச்சுடிகைநெற்றியிற்கிடந்தபாரினில்மன்னவரிட்ட,
கையுறையெழுதக்கைவலித்தேடுகளோங்கிடுங்குப்பைகள்குவிந்
து, வெய்யவன்றடந்தேரோட்டறவிவர்ந்தவாயிலானவன்விறல்
மைந்தன், வையமோரேழுமொருகுடைநிழற்றுமன்னவனனு
வெனவுரைப்பார். (கக0)

உருமெனவிடிக்கும்பெருங்குரல்வேழத்தினமருப்புழுதிடு
ந்தழும்பு, மரிவையர்முலைக்கோடழுந்திடுந்தழும்புமாரமுமணி
ந்திடுமார்பன், பொருவருதடந்தோளனுவினன்மைந்தன்புலால்
கமழ்ந்தரத்தநீரொழுகி, யெரியுமிழ்ந்திலங்கு மலங்கிலைநெடு
வேலபானகத்துந்துமியென்பான். (ககக)

இலைத்தொழில்மதாணியிமைக்குநீண்மார்ப னனகத்துந்
துமிமகவன், மலைத்தடந்திணிதோட்டிறல்கொளாருகனு மான
வெற்றடக்கையிந்திரனு, மலைத்தெறிதரங்கக்கருங்கடலெனநீ
ண்டரிபரந்தொழுகும்வாட்டடங்கட், சிலைக்கரும்புருவத்திரிம
தியென்னுந்திங்கணிக்குதலையாந்திருவும். (ககஉ)

மித்திரனென்போன்பொருவில்கந்திருவமெல்லியற்றழுவி
யோரைந்து, புத்திரர்ப்பயந்தான்றிரிமதியென்னும்பூங்கொடித
ன்னையோரிபககன், கைத்தலத்தடங்காவிளமுலைதழுவிக்கதிர்
கொள்வாட்சுசேனன்வேல்வீர, னைந்தசுக்கிரீவன்போசனுவா
கனென்னுமோரைவரையுயிர்த்தான். (ககங)

வலம்புரியீன்றவெண்ணிலாத்தரள வாணகைமடந்தையர்
காலிற், சிலம்பொலியென்னப்பெடையனமாற்றித்திரிதருநீம்
புனனாட, லலங்கலந்திணிதோளாருகன்மைந்தராடல்வேல்வல
ங்கொடேவகனு, முலம்பொருதிணிதோளுக்கிரசேன னெனவு
லகேத்துமன்னவனும். (ககச)

புரசைமாக்களிறுமளப்பருந்திபுமிடுதிறைகொணர்ந்துபொ
ன்முற்றத், தரசிருந்துயிர்க்குந்தேவகன்மக்க ளாடல்வேற்றேவ
வான்முதலா, முருகெழுசீற்றத்தரசரோர்நால்வரோடரிபரந்த
மைத்தடங்கண், வருமுலைத்துவர்வாய்த்தேவகிமுதலாமங்கை
யர்மற்றுமோரெழுவர். (ககரு)

ஓடைமால்யானையனையவெந்திறல்கூருக்கிரசேனனன்மைந்
ர, ராடகப்பசும்பொற்கிரிநிகர்தடந்தோளடுதிறற்கஞ்சனைமுத
லாய்ச், சேடமைபருதிபொருவுநீண்மார்பிற்சீற்றமுந்தாமும்
வேறல்லாப், பீடுகெண்டியிலும்பெருவளைத்தடந்தோட்பெட்பு
றுமைந்தரோரெழுவர். (ககசு)

முன்னெடுத்துரைத்தவந்தகன்மைந்தன்முருகவிழ்மலர்த்ணையைந்துங், கன்னலஞ்சிலையுமொளித்திவண்போந்தகாமலைகர்பயமானன், றன்னருட்புதல்வன்றனைத்துகளடங்கத்தாளைழ்ம்மதமழைபொழியும், பொன்னணியோடைப்பொருகளிற்றுவன்விரேதனெனப்புகலுவரால். (ககஎ)

விரிந்திடுவேந்தர்தீயதாய்வேந்தர்விறல்கெழுபசுவதாச்சுருவை, சொரிந்திடுநறுநெய்யரத்தநீரருவிதூங்கிநீப்பின்றிநின்றொழுகப், பருந்துவீழ்ந்துலவுமள்ளிலைவேலாற்பண்ணவர்புகழ்ந்துநின்றேத்த, வருங்களவேள்வியாயிரம்புரியும்விரேதன்மகனடற்சூரன். (ககஅ)

கயமலர்துவைத்துக்கதைவிழ்பணிலங் கான்றிடுநித்திலத்தப்பைப், புயலொடுகுடுமிவரையெனக்கிடக்கும்பொருதிரைத்தெண்கடற்சேர்ப்ப, னுயவுவெம்பேயும்பூதமுங்களிப்பவொளிறுவாளுறையுரீஇவிதிர்க்கும், வயமுடைச்சூரனளித்திடுமைந்தன்வண்புகழ்ச்சமியெனவுரைப்பார். (ககசு)

ஈன்றடைக்கிடக்கும்பேட்டிளவெகினமிரைதருசேவல்பார்த்துணங்கும், வான்றொடுபோரின்மதிமுதுகுரிஞ்சும்வளங்கெழுமருதநீர்நாட, ளுன்றபேருணர்விற்சமிமகன்பிரதிக்கேத்திரனுங்கவன்புதல்வன், மூன்றுபேருலகுந்தனதடிப்படுத்தமூரிவேந்போசனென்றுரைப்பார். (கஉ0)

ஆம்பலந்தீஞ்சொலரிவையர்முகத்தையாய்கதிர்மதியமென்றெண்ணித், தூம்புடைநெடுந்தாட்குவலைவாய்திறந்துசுறவுவாய்நறவுகொப்புளிக்குந், தீம்புனனாட்டுப்போசனன்மைந்தன்றீஞ்சுவையமிழ்திளஞ்சாயற், பாம்படுமல்குன்மடந்தையர்விரும்பும்பணைப்புயக்கிருதியென்றுரைப்பார். (கஉக)

விரைகமழ்தடஞ்சூழ்புளினமண்டபத்தில்விரிசிறைபுடைத்துநின்றுதறி, நரைமுதிர்கிழட்டுமுதைமுதிர்தடந்தாணுரைவெண்குருகொடுதிளைக்கு, மருதநீள்வேலிச்செழும்புனலூரன்கிருதினன்மைந்தன்வெங்களத்திற், றமுதுகுளுக்கப்பிணக்குவைகுவிக்குங்கிருதவன்மாவெனுந்தக்கோன். (கஉஉ)

சேற்றிதழ்க்கமலவயலினிற்கன்றைநினைந்துசெங்கடக்ருமேதி, பாற்கடல்வயிறுசூற்கொளுஞ்செருத்தற்பருமுலைகண்டிறந்தொழுகு, மாற்றெறிதீம்பால்குளம்பலபெருக்கமல்குநீர்வளங்கெழுநாடு, போற்றிடுங்கிருதவன்மனன்மைந்தன்றெய்வகனெனப்புகலுவரால். (கஉங)

வெற்புறழ்தோற்றத்திளங்களிற்றீட்டம்வேற்றிளம்பணைக்கையாலோங்கும், கற்பகச்சோலைபசுந்தழைமுறித்துக்கருங்கவு

ட்சாரல்வண்டோட்டும், பொற்புடையிமையப்பொருப்புடை
வெற்றித்தேவகனினிதருள்புதல்வன், மற்படுதிண்டோட்சூர
னென்றுரைக்கும்வயங்கெழுவாகைவேலுழவன். (கஉச)

நவையறுசெங்கோல்திசைதிசைபோக்கி நானிலமுழுவது
ம்விளர்ப்பத், தவலருஞ்சீர்த்திவெண்சுதைதீற்றுந்தாமவேற்சூ
ரனன்மைந்த, னுவவுவெண்டிங்கட்கவிகைபாரேழுநிழற்றிடவா
ழியொன்றுருட்டிக்,கவனவாம்பரித்தேர்பார்த்தனுக்கூருங்கண்
ணனைத்தரும்வசுதேவன். (கஉரு)

வேறு.

இனையமாக்கதைபடிக்குநர்கேட்குநரொவரும்
பனிமதிக்குடைநிழற்றிடப்பார்பொதுநீக்கித்
தனிபுரந்தெழிற்றளர்நடைப்புதல்வர்தீங்குதலைக்
கனிநுகர்ந்துயர்கடவுளர்போலவாழ்ந்திருப்பார். (கஉசு)

சந்திரவங்கிஷமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கரு௲உ.

---

இருபத்தொன்பதாவது

## கண்ணனவதரித்தவத்தியாயம்.

சிலைமுத்தங்கொண்டதிண்டோட்டேவகனினிதினீன்ற
கலைமுத்தங்கொள்ளுமல்குற்கன்னியரொழுவர்தம்மை
மலைமுத்தங்கொண்டமார்பின்வாள்வசுதேவன்வேட்டாங்
கலைமுத்தநிலவுகாலுமணிநகர்வலஞ்செய்போழ்தின். (க)

தேவகியெட்டாமைந்தன்றேர்விடுங்கஞ்சவுன்ற
னுவிகொண்டிடுவனென்னுமந்தரவாணிகேட்டு
மாவடுப்புரையநோக்கிற்றங்கைதன்னுவிவவ்வக்
கோவடுங்குருதியொள்வாளுறையுரீஇக்கொதித்துச்சென்றான்.

மங்கையர்தம்மைக்கோறல்வான்பழியாகுமுன்றன்
றங்கையென்பதனுற்சீற்றந்தவிர்ந்திவள்வயிற்றிற்றோன்றும்
பங்கமில்புதல்வர்தம்மைக்கொல்கெனப்பணிந்துபோற்றிக்
கொங்கவிழுருவத்தண்டார்க்கோமகன்கூறினானே. (௩)

அன்னதற்கிசைந்துகஞ்சனுய்பிழியுறைக்குங்கூந்தன்
மின்னகுமருங்குற்செவ்வாயணங்கொடும்வேலைஞால
மன்னவர்வணங்குநோன்றாட்புகழ்வசுதேவன்றன்னை
யின்னலுற்றழுங்கிமாழ்கவிருஞ்சிறைப்படுத்தினனல். (ச)

ஈங்கிவைநிகழுங்காலத்திருநிலமடந்தையேகித்
தேங்குமழ்கமலப்புத்தேள்சேவடிவணங்கியேத்தி
வாங்குவிற்காலநேமிமுதலினோர்மண்ணிற்றீமை
தாங்கருங்கஞ்சனுதிமன்னராய்த்தலைமைபூண்டார். (ரு)

ஆதலிற்பரித்தலொல்லாதையவென்றுரைத்துநிற்ப
மேதகுமமரர்சித்தர்விஞ்சையரியக்கர்சூழப்
பூதலமடந்தையோடும்பாற்கடற்புறத்தின்மேவிச்
சீதரற்போற்றிவேதனீங்கிவைதெளியச்சொன்னான். (௬)

முருகவிழ்கமலப்புத்தேள் முதலியவமரர்யாரு
மிருநிலத்தரசராகியெய்துகயாமுந்தூய
பொருவருங்கடவுட்கற்பிற்றேவகிவயிற்றிற்பொற்பா
ரொருகுழையொருவன்செங்கட்கண்ணனாயுதித்துமன்றே. (௭)

என்றுரைபகர்ந்துவெண்மைகருமைசேர்மயிரிரண்டு
நன்றெனவழங்கிப்போற்றுநான்முகன்முதலினோர்கட்
கொன்றுபேரன்பினோடும்விடைநல்கியுலகம்பூத்த
மன்றலந்துளவப்புத்தேள்மாயையைநோக்கிச்சொல்வான். (௮)

ஓவில்சீரிரணியன்றன்மைந்தரோரறுவர்தம்மை
மேவுபாதலத்தினின்றுகொணர்ந்துநின்விரகான்மிக்க
நாவில்சீர்வசுதேவர்க்குத்தலைமைசேர்மனைவியாய
தேவகிபுதல்வராகமுறைமுறைசேர்த்திப்பின்னர். (௯)

உதித்தவேழாங்கருப்பந்தேவகியுயிர்க்குமுன்ன
மதிக்குநின்மாயைதன்னால்வயிற்றினின்றெடுத்துப்போகித்
துதிப்பருங்கருப்பமிக்கவுரோகணிவயிற்றிற்றாய்தாய்ப்
புதுக்கடிகமழுஞ்செவ்வாய்ப்புதல்வனாயமைத்தியன்றே. (௧௦)

தேவகியெட்டாமைந்தனாதிநன்சிறப்புவாய்ந்த
வாவணித்திங்கண்மேயவள்ளிருட்பக்கந்தன்னின்
மேவுமட்டமியில்யானும்வருவனீவிரும்பசோதை
யோவில்சீர்ப்புதல்வியாகிநவமியிலுதித்தியன்றே. (௧௧)

மன்னுசீர்வசுதேவன்றன்றுள்செறிவல்லிநீங்கத்
துன்னிருட்பிழம்பினூடுயமுனையைத்துணைவினீங்கி
யென்னையாய்ப்பாடிதன்னில்வளர்த்தியாங்கசோதையீன்ற
வுன்னைவல்லிரவிற்கொண்டுதேவகிகரத்தினுய்ப்பான். (௧௨)

கஞ்சனின்கமலப்பொற்றாள்கைப்படுத்தரையின்மோதச்
செஞ்சவேயெடுக்கும்போழ்திற்றிருமணியாரந்தாழ்ந்த
மஞ்சுதாழ்குன்றமன்னமார்பிறவுதைத்துவிண்போய்
வெஞ்சினவயிரவொள்வாள்வேந்தன்மாட்டிருத்தியென்றான் ()

ஈங்கிவையனைத்துந்தெய்வமகதியாழ்முனிவனெய்தி
வாங்குவில்விழுங்குதிண்டோட்கஞ்சனுக்குரைப்பமாழ்கித்
தாங்கரும்வல்லிதன்னிற்றிறல்வசுதேவன்றன்னைத்
தீங்கரும்பனுக்குஞ்செவ்வாய்த்தேவகியோடுஞ்சேர்த்தான். ௧௩

வல்லியிற்சிமிழ்ப்புண்டுள்ளமரசொடுமயங்குநாளின்
முல்லையங்கற்பின்மிக்கமொய்குழல்வயிறுவாய்த்தல்
புல்லியகாவலாளர்புகறலுங்கஞ்சன்போந்து
கொல்லியவெழுந்தகூற்றின்மகவினைக்குறைத்திட்டானே (கரு)

இன்னணம்பின்னுமைந்தரறுவரையெறிவேற்கஞ்சன்
கன்மிசைப்புரளவெற்றியாருயிர்கடிந்தபின்னர்
பன்மணிச்சுடிகைநெற்றிச்சேடனைப்பவளச்செவ்வாய்க்
கன்னியங்கற்பின்மிக்கதேவகிகருக்கொண்டாளே. (கசு)

சூன்முதிர்ந்துயிர்க்குமுன்னந்தொல்லுலகிறும்பூதெய்தப்
பூனிறக்குழவிதன்னைமாயைதன்புணர்ப்பிற்பற்றி
யானிரைபுரக்குமாயர்பாடியிலொளித்துவைகு
மான்மருணோக்குரோணிவயிற்றிடைவைத்ததன்றே. (கஎ)

கங்குல்கண்படுக்குங்கூந்தற்கதிர்முலைப்பணைகொண்மென்றோ
ளங்கலுழ்மேனிச்செவ்வாயுரோகணியடையாளொன்னும்
பொங்கிருட்பிழம்புமேய்ந்துபுகழ்நிலாவிரிக்குந்தூய
திங்களன்செல்வனன்னசிறுவனையினிதினீன்றாள். (கஅ)

காம்பிசைகுழிக்குஞ்செவ்வாய்க்கருமுகில்வண்ணன்றன்னை
யேம்பலோடறம்வழாமலிருநிலமுழுதுமுய்யப்
பாம்பிணைப்படத்தைமானும்பங்கயப்பருமவல்குற்
றேம்படுகுமுதச்செவ்வாய்த்தேவகிகருவுட்கொண்டாள். (க௯)

இந்துவென்றுரைக்கும்புத்தேள்தன்குலத்தினிதிற்றோன்று
மைந்தனைக்காக்கக்கங்குல்மனைவியைவிடுத்தல்போலுஞ்
செந்துவர்மருட்டுஞ்செவ்வாய்த்தேவகிசிறப்புவாய்ந்த
வந்தளிர்வயிற்றிற்பூத்தவணிமயிரொழுக்கந்தானே. (உ0)

வருமுலைவயர்நோயெய்திமண்ணினைநுகர்தல்தேன்சேர்
முருகவிழ்துளவத்தண்டார்முகுந்தனைமல்லலோங்கு
திருமகள்சேருமுன்னஞ்சேர்ந்திடவேண்டுமென்ன
விருநிலமங்கைமுன்போயெய்துதல்போன்றதன்றே. (உக)

விண்ணிடையிரண்டுவெற்புநின்றிடாவென்னமேலோ
ரெண்ணியவனுமானத்தாலெய்துநுண்மருங்குல்மங்கை
யண்ணலங்கருப்பந்தாங்கும்வாற்றினவ்வளவையன்றிக்
கண்ணளவானுமியார்க்குங்காணவாத்தோன்றிற்றன்றே. (உஉ)

உலகனைத்தினையுமுண்டோன்றமதிடத்தூறுதீம்பால்
மலைவுறநுகர்ந்துநாளும்வளர்வனென்றுவந்துகொல்லோ
விலவிதழ்க்கோதையெல்லாவுறுப்பினு மெழில்கொண்டோங்கி
யலர்சுணங்கணிந்துவீங்கியணிமுலைபருத்ததன்றே. (உங)

அருப்பமென்றெவருங்கூறுமருங்குறும்வறுமையையன்
கருக்குழியுற்றஞான்றேதீர்த்தகாரணத்தால்யார்க்கு
முருப்பநோய்செய்யும்வெய்யவறுமைவிட்டோடநாளுந்
திருக்கிளர்பதஞ்சேர்ந்தோர்க்குத்தீர்ப்பதற்கையமின்றே. ()

வாட்டடங்கண்ணிமார்பின்வந்தடிக்கொண்டஞான்றே
கோட்டமுற்றெல்கித்தேய்ந்தகொடியிடைப்பகைநாணுரு
மீட்டியகருவால்வீங்குமிகழ்ச்சிநோனுமையன்றே
மோட்டிளங்குரும்பைபோலுமுலைமுகங்கறுத்ததன்றே. (௨௫)

ஆவணித்திங்கடன்னிலமரபக்கத்தினன்கு
மேவுரோகணியிற்றாய்தாய்விளங்குமட்டமியினுநாளுந்
தாவில்சீர்புதன்வாரத்திற்றகைபெறுங்கங்குற்பானு
டேவகியுலகமீன்றசெல்வனையினிதினீன்றாள். (௨௬)

சங்கொடுநேமியொள்வாள்தழலுமிழ்கதைவில்லேந்திப்
பங்கயக்காடுபூத்தபருவமைம்முகிலின்றோன்று
மங்கலுழ்மேனிச்செவ்வாய்ச்சிறுவனையமையநோக்கிப்
பொங்குபேரன்பிற்றாதைபொலிவொடும்வணங்கினானே. (௨௭)

வணங்கியதந்தைதன்னைமாயையாலறிவுநீக்கி
யணங்கரவணையிற்றுஞ்சுமஞ்சனக்கொண்டலன்னா
னிணங்கமழ்கதைவாள்சங்கநேமியம்படைவில்லாய
கணங்கொள்வெம்படைகள்யாவுங்கரந்திவைபுகலுமன்றே. ()

அரிமதர்நெடுங்கட்செவ்வாயசோதைமாமாயைதன்னைப்
பரிவொடுமீன்றாளென்னையாயர்பாடியிற்கொண்டேகி
மருவுறுநந்தகோபன்மனையினுய்த்தசோதையீன்ற
புரிகுழலணங்கையீங்குக்கொணர்கெனப்புகன்றானன்றே. ()

என்றலும்வல்லிநீங்கித்தேவகியிரங்கிமாழ்க
மன்றலந்துளவினானைத்திறல்வசுதேவன்கொள்ளா
வொன்றுதாட்கதவம்வாளாதிறப்பவாங்கொல்லையேகிக்
கன்றியநெஞ்சினோடும்யமுனையங்கரையினுற்றான். (௩௦)

தமரவெண்டிரைக்கைதன்னாற்சங்கொடுமுத்தஞ்சிந்தும்
யமுனையெவ்வுலகுமீன்றகுழவியையினிதினோக்கிக்
குமரிவண்டரற்றுமுட்டாட்கொழுமலர்க்கரங்கள்கூப்பி
யமைவருமுவகையோடுமருநெறிவிடுத்ததன்றே. (௩௧)

ஆயிரஞ்சுடர்க்கும்விள்ளாவள்ளிருட்பிழம்புதன்னிற்
பாய்திரையமுனைநல்குநெறியினிற்பரிவோடேகிச்
சேய்நலங்கடந்தவெற்றிமன்னவன்சிறுவனோடு
மாயிருஞாலம்போற்றுநந்தகோன்மனையினுற்றான். (௩௨)

பொறையுயிர்த்திட்டமாயைப்புணர்ப்பினலசோதையோடு
முறைதருமகளிர்யாருமுறங்குழியுலகம்பூத்த
விறைவனையசேர்தைதன்பாற்கிடத்தியவ்வசோதையீன்ற [
கறைகொள்வேற்கண்ணிதன்னைக்கைக்கொடுவிரைவிற்போந்த

போந்துயர்குடுமிமாடப்பொன்னகர்மதுரையெய்திக்
காந்தெரிமணியிற்செய்தகடிமனையதனிற்புக்காங்
கேந்திளங்குழவிதன்னைத்தேவகிகரத்தினீய்ந்தான்
சாந்தணிகுழலாள்வாங்கித்தடமுலையூட்டினளே. (௩௪

வல்லியுமுன்போற்பொற்றாள்பிணித்ததுவாயில்யாவு
மொல்லையினடைத்துத்தாள்கள்செறித்தனவொழுகியோடுங்
கல்லெனீர்வேலிசூழ்ந்தகாசினியனைத்துங்கேட்ப
வல்லலுற்றழுங்குவாரின்மாயையுமழுதன்றே. (௩௫

அழுகுரலோதைகேட்டவாயிலோரடியிற்றாழ்ந்து
கழைசூழிகளிநல்யானைக்கஞ்சனுக்குரைப்பபோந்து
குழவியைத்தங்கைநெஞ்சங்குழைந்திடவலிதிற்பற்றி
நிழலுமிழ்பளிக்குப்பாறைநிலத்தினிலடிக்குமேல்வை. (௩௬

கஞ்சன்வெங்கரத்தினீங்கியாங்கவன்கல்செய்தோளி
னஞ்செஞ்சிறடியாநெஞ்சமலமரவுதைத்துப்போகிச்
செஞ்சுடர்நெற்றிக்கண்ணுந்திரண்டவெண்டோளுமாகி
மஞ்சுறழ்கரியமேனிமாயையிதுரைக்குமன்றே. (௩௭

உன்னுயிர்க்கிறுதிகாண்பானுதித்திடும்புனிற்றுச்சிய
மன்னவுன்னகரின்பாங்கர்வதிந்தெதென்றினிதினேகிக
கன்னவில்திரடோட்காளிகதிர்மணிமுகடுவேய்ந்த
பொன்னகர்மாடமெய்திப்பொலிவின்வீற்றிருந்தாளன்றே. (

செய்த்தலைவாளைதாவுஞ்செழும்புனல்மதுரைகாக்கும்
பைத்தபாம்பனையசிற்றுக்கஞ்சனும்பரிவின்வைகு
மைத்துனன்றன்னைத்தங்கைதன்னொடும்வல்லிநீக்கி
வித்தகவமைச்சரோடும்வேறிருந்தெண்ணினனல்.

மாலைவாயமுதத்தேறல்மார்பகநனைப்பச்செல்லும்
பாலனின்னுவியுண்பனென்றுரைபகர்ந்தவாற்றால்
வேலைசூழ்ஞாலத்துள்ளசிறுவரைவிரைவிற்கோறல்
சால்புறுமென்னத்தேர்ச்சித்துணைவர்கள்சாற்றினரால். (௪0

ஈதுருவெடுத்தாலன்னகஞ்சன்வெஞ்சினத்தினேடும்
பூதனையாதியாயபேய்களைப்பொருந்தநோக்கி
யோதியவுலகிலுள்ளசிறுவர்களுயிரையேகிக்
காதலினெறுத்திரென்னக்கடிதினிற்போயவன்றே. (௪௧

ஈங்கிவைநிற்பவாயர்பாடியினசோதையென்பாள்
தீங்கனிக்குதலைச்செவ்வாய்ச்சிறுவனையுயிர்த்தாளென்ன
மாங்குயில்மருட்டுந்தீஞ்சொலாச்சியர்மகிழ்வினோடுங்
கோங்கிளமுலைகள்வீங்கக்குரவையாட்டயர்ந்தாரன்றே. (௪௨)

அள்ளிலைவயிரப்பைம்பூணந்தகோனகிலமீன்ற
பிள்ளையையுச்சிமோந்துபிறந்துழியியற்றுகின்ற
தள்ளருங்கருமமாற்றித்தன்கிளைத்தலைவரோடும்
வெள்ளணியணிந்துகோடிவிழுநிதிமறையோர்க்கீய்ந்தான். ௪௩

நஞ்சுகொப்புளிக்கும்பேழ்வாய்க்கறையணநாகாரன்ன
கஞ்சனுக்குவப்பினல்குங்கரங்கொடுசேறுமென்று
வெஞ்சலில்கிளையினோடுமிலகுசீர்நந்தனென்போன்
செஞ்சவேமுல்லையாயர்தீங்குழலிசைப்பப்போனான். (௪௪)

வேறு.

வெண்ணெய்பெய்தகுழிசிவெண்டிங்களிற்
றண்ணென்வெண்டயிர்பெய்திடுசாடிகள்
பண்ணிகாரம்பெய்பண்டிகள்தம்மொடு
மெண்ணில்மாடமதுரையினெய்தினான். (௪௫)

எய்திமன்னற்கிறையளிந்தேகலும்
வெய்தினெய்திவிறல்வசுதேவனீள்
கைதவந்தெறுநந்தனைக்கையினாற்
பைதலோடுந்தழீஇயிவைபன்னுவான். (௪௬)

காதற்றோழவெங்கண்ணிடனோடிற்றும்
தீதுபூத்தநிமித்தமுஞ்சேர்ந்தென
வேதமெய்திடும்பாணித்திடாதுநீ
போதியென்றுபுகறலும்போயினான். (௪௭)

நந்தகோனுயர்பாடியினண்ணுமுன்
சிந்துதெண்டிரைவைப்பினெண்டிக்கினின்
மைந்தராருயிர்வவ்வியபூதனை
கொந்துதாழ்பொழிற்கோகுலத்தெய்தினாள். (௪௮)

வன்னவெம்முலைபால்வழிந்தோடுதல்
தன்னகையிற்கயக்கித்தளரிடை
மின்னினெல்கவிழியுயிர்கூட்டுண
வன்னமென்னநடந்தவணெய்தினாள். (௪௯)

தெள்ளுநான்மறைதேடுஞ்சிறுவனை
யள்ளியேந்திமடியில்வைத்தன்புபோற்
கள்ளவஞ்சகிகாதலிற்காதுரீஇ
வள்ளலுண்ணவருமுலையூட்டினாள். (௫0)

சுணங்குபூத்துயர்தோமறுவெம்முலை
மணங்கொடாமனைக்கையினவருடிமே
லணங்குபார்த்துநகைமுகிழ்த்தாவியோ
டுணங்குபேய்முலையூறலுண்டானரோ. (ருக

ஊறுபாலொடுயிரருந்தாமுனம்
வேறுதன்னுருமேவியப்பூதனை
யாறுகூப்பிடுதூரத்தகனமா
நீறுசெய்துநிலத்துறவீழ்ந்தனள். (ருஉ)

கையினால்வயிறெற்றிக்கரநெறித்
தையசெந்தளிர்மேனியசோதைபோய்
வையமுண்டமகவெடுத்தாங்குறை
தையலாரொடுந்தான்மகிழ்ந்தாளரோ. (ருங)

நந்தகோனவணெய்திநறுந்துழாய்
மைந்தன்செய்திமகிழ்வுறக்கேட்டலுஞ்
சிந்தைமாழகிதெளிந்துகிளையொடு
மந்தமறறவுவகையனாயினான். (ருச)

மாங்கொறைசசரிற்பூதனைமானுடல்
சிரந்துணிதகழலிமதகிற்சேர்ததலு
மரிந்தமறகுமுலையளித்திட்டதால்
நரந்தநாறினநாவிருகாதமே. (ருரு)

ஐயிரண்டுநிறைதலுமாயர்தந்
தையலாரொடுஞசநதிமிதிப்பியா
மையிலகேள்விமறையவாசுகார்பத
நெயயிற்பாலினிரமபவருநதினா. (ருசா)

பண்ணிகாரநசொணாந்திடுபண்டிவந்
தண்ணல்மேவியதொடடிலணைதலுந்
தண்ணநாமனாததாளிலுதைத்திடா
விண்ணிலோடிவெறுந்துகளானதே. (ருஎ

மேய்சாடிறமென்பதநீட்டலு
மாயமங்கையரன்போடயினிநீர்
சேயனானிருசேவடிசுற்றுமுக
காயுமவெவவியகண்ணெசசினிக்கினார். (ருஅ

வேறு.

வண்டுந்தேனுமிஞிறுஞ்சுரும்பும்வழங்குந்துளவத்
தண்டாரிளவறன்னைத்தாங்கித்திரிணாவரக்கன்
கொண்டுசூறைவளியிற்கோட்பினேகுமேல்வை
விண்டுநிலங்கீழ்போகவீழ்த்தியவனைகொன்றான். (ருகூ

கொன்றவசுரன்மெய்யிற்குழவிதவழக்கண்டோர்
மன்றலோதிசரியவளையுஞ்சிலம்புமிரங்கச்
சென்றமைந்தன்றன்னைச்செங்கைத்தளிரினேந்தி
யன்றிற்பெடைபோலரற்றுமசோதைகையினளித்தார். (௯0)

ஆயர்குலக்குவிளக்காமசோதையழுதல்காணத்
தூயமுறுவல்கொட்டுந்தோன்றற்செங்கேழ்ப்பவள
வாயினுலகமனைத்துங்கண்டேதொழுதுவழுத்தக்
காயாமேனிச்சிறுவன்மாயையதனாற்கரந்தான். (௯௧)

கையுமுகமுங்கண்ணுங்காலுமுந்தித்தடமுஞ்
செய்யகமலம்பொருவுங்கரியசெம்மறன்னை
யையமருங்குற்செவ்வாயசோதைகுறங்கினேற்றி
வையமுழுதுமுண்டமலர்வாயுச்சிமோந்தாள். (௯௨)

செந்தேன்றுளித்தாலன்னவாம்பல்செவ்வாயூற
லந்தாரகலத்தொழுகவாயர்மனையிற்றவழ்ந்து
நந்தன்விரல்கள்பற்றிக்குறுத்தாள்பெயர்த்துநடந்து
மைந்தனுயர்பாடிமகிழ்வித்துலவுநாளின். (௯௩)

மாசில்வசுதேவன்றனருளாற்காக்கமறையோ
னாசிலாயர்பாடிவணுகிவெள்ளைமேனி
யேசில்புதல்வர்க்காங்கேயிராமனெனப்பேரிட்டுக்
காசில்கரியோன்றனக்குங்கண்ணனெனப்பேரீய்ந்தான். (௯௪)

மண்ணையளந்துமுண்டுமனையாளாகப்புணர்ந்துந்
தெண்ணீர்பவ்வத்தெடுத்துஞ்சிறிதுநசைதீர்ந்திலன்போ
லண்ணல்தவழும்போதிற்கையால்மண்ணையள்ளி
யுண்ணக்கண்டவன்னையோடிவந்தாங்கடித்தாள். (௯௫)

கவ்வைநெடுநீர்வாவிக்கடவுட்கமலமுகத்தின்
செவ்விவழிதல்போலக்கண்ணீரொழுகச்சிறுவன்
பவ்வத்திரையின்பிறவாப்பவளமலர்வாயன்னை
யெவ்வெத்திசையுமுலகுமிறைவன்வாயுட்கண்டாள். (௯௬)

கண்டாள்காயாமேனிக்கண்ணன்களிவண்டுளருந்
தண்டாமரையாள்புணருந்தலைவனுமென்றெண்ணிக்
கொண்டேபழிச்சும்போழ்[illegible]கொடியவிருளும்விளர்ப்ப
மண்டுமாயையதனால்முன்போலறிவைமறைத்தான். (௯௭)

தெண்ணீர்க்கயத்துட்பூத்தசெவ்விக்கமலமன்ன
கண்ணீர்கையாற்றுடைத்துக்கதிர்மென்முலைப்பாலூட்டி
யண்ணலழுகையாற்றியம்பொற்குழிசிதன்னிற்
றண்ணந்தயிர்மத்தெறியமடவாரோடுஞ்சார்ந்தாள். (௯௮)

சிறைவண்டரற்றுங்கூந்தற்றேமென்மலரோடவிழ
நறைபெய்குடத்திற்றதும்புநகைவெண்முத்தமூலையின்
பொறையாற்றூத்மருங்குல்தயிர்கொல்பூசலொழியென்
றறைபோன்வளையும்பூணுமலறத்தயிர்மத்தெறிந்தாள். (கூகூ)

மயிர்வார்முன்கைவளையும்வண்டும்பூணுமொலிப்பத்
தயிர்கண்ணுடைக்குமன்னேதடமென்முலைப்பாலருந்தி
யுயிர்போல்மைந்தன்குணிப்பவுவக்குமேல்வைதன்னிற்
செயிர்தீர்மனையிற்காயுந்தீம்பால்பொங்கிற்றன்றே. (எ0)

பொங்குந்தீம்பாலாற்றப்பூவைவண்ணனுண்ணுங்
கொங்கைவவிதிற்பறித்துக்குழங்கன்மாலைவீழ
மங்கையோடுமேல்வைமத்தாற்குழிசியுடையா
யங்கைதளிராலையன்வெண்ணெயெடுத்தேயயின்றான். (எக)

வேறு.

தாளாற்றயிர்க்குழிசியனைத்தினையுந்தகர்த்துருட்டிக்
கோளார்ந்தமதிமுகத்துக்குறுநடையகுற்றுயன்
மீளாநற்றாய்போதின்வெகுளுமெனவுளம்வெருவி
வாளார்ந்தகருநெடுங்கண்மற்றொருத்திமனைபுகுந்தான். (எஉ)

எந்தைபுகுந்தொளித்தமனையுறிவெண்ணெயெட்டாமற்
குந்தியுரன்மீதேறிக்கல்விறைக்குழிசியுடைத்
தந்தளிர்க்கையாலேந்தியினிதருந்தியாங்கெய்து
மைந்தருக்குமிகவளித்துப்பூசைக்கும்வழங்கினான். (எங)

வடித்தசெழுமறைதேடிக்காணாதமணிவண்ண
னடிச்சுவடுதனிச்சென்றாங்கையனைக்கண்டங்கனிவாய்
மடித்துறுக்கியெத்தேவுமறியாதமழைமுகிலைப்
பிடித்தன்னைநெடுந்தாம்பினுரலோடும்பிணித்தனளால். (எச)

உரலினொடுந்தனிபோகிமணிவண்ணனேரிரண்டு
மருதினிடைத்தவழ்போழ்தின்மலைமுறிந்தாலெனமுறிந்து
நரைகுழியவீழ்ந்தவைகள்வீணைமுனிசாபம்போ
யரியநளகூபரனுமணிக்கிரீவனுமானார். (எரு)

நிதிக்கிழவனுயிர்ச்சிறுவர்நேமியோற்றொழுதுதம்
பதிக்கணடைந்தினிதிருந்தார்நந்தகோன்பழமறைதேர்
முதுக்குறவினோர்போற்றுமுதலையாற்பிணிப்பவிழ்த்துக்
கொதித்துளமாழ்குறவெடுத்துத்தன்மனையிற்கொடுபோனான் ()

மருவுநகர்தனிற்றீமைபற்பலவந்துற்றதனல்
பொருவிலுரோகணியோடுமசோதையொடும்புதல்வனொடும்
விரிதருநற்கிளையோடுங்கருந்துளவின்வினைநாறுந்
திருவிருந்தாவனந்தன்னினந்தகோன்சென்றிருந்தான். (எஎ)

குடம்பொருவுசெருத்தலான்குழக்கன்றுதனிமேய்த்து
மடங்கலேற்றிளம்போத்தின்மணிவண்ணனிராமனுடன்
றடங்களினுமரிபரந்ததளவநறுங்கானகத்தி
னிடங்களினுங்கண்களிப்பவினிதின்வழங்குறுநாளின். (எஅ)

வேறு

குறுந்தாம்பணைத்தகுழக்கன்றினுருவாயசுரன்கொடுங்கானிற்
செறிந்தாண்டுறலுமணிவண்ணன்செங்கட்கமலமலர்பரப்பி
யறிந்தோரிமைப்பினிளங்கன்றுகுணிலாய்விளவின்கனியதனி
லெறிந்தான்விளவின்கனியோடும்வீழ்ந்தானுவியிழந்தானே. ()

நாளீன்றணியபசியகுழக்கன்றுமேய்த்துநள்ளிருளிற்
றௌரான்றான்றிக்காழ்பூத்ததடிமேலுறங்குமாயரொடும்
வேளுக்கழகுமுருகனுக்குவிறலுங்கொடுத்தசிற்றாயன் [ன்.
வாளார்கண்ணார்முகம்போலுங் கமலத்தடத்துள்வந்தடைந்தா

விளைகொப்புளிக்குமலர்த்தடத்தோரசுரன்வெவ்வாய்ப்புள்ளா
மருதமொடியத்தனிதவழ்ந்தமாயன்றன்னைவிழுங்குதலு [கி
மெரியின்மிடறுசுடவுமிழ்ந்துகுத்தவிவரவெம்பெருமான்[தான்
குருகின்பகுவாய்செய்யமலர்க் கரத்தாற்கிழித்தாங்குயிர்குடித்

மற்றோரசுரன்மலைப்பாம்பிற்கிடப்பவவன்றனகல்வாயை
வெற்பின்முழைமென்றான்கன் றோடகல்வாய்ப்புகுந்துவிளைவி
னெடுங், கற்பாடழித்ததிரள்புயத்துக்கண்ணன்வாளால்வாய்கி
யா, முற்பாற்சாபத்தொடுமாவிமுடியமுன்னையுருவுற்றான். [ழி

அருந்தும்பசும்புல்லுணத்தெவிட்டியசைவிட்டுறங்குங்கன்
றோச்சிப், பொருந்தும்பொதுவர்சிறுவரொடும்பூவைநிறத்தசிற்
றாயன், செருந்தில்கமழுங்கானுந்தித்தீரமெய்தித்துகிலிடத்தின்
மருந்திற்பொதிந்தவாற்றுணமகிழ்விநோடிருந்தயின்றான். ()

அன்னபோழ்திற்புறகுதட்டியருந்துங்குழக்கன்றனைத்தினையும்
பொன்னங்கமலத்தரசிருக்கும்புத்தேள்கவர்ந்துகொடுபோகப்
பன்னுமறைதேடருங்கடவுள்கன்றுதேடிப்படர்போழ்தின்
மன்னுஞ்சிறுவரனைவரையும்பின்னுமாயைதனிற்கவர்ந்தான். ()

துள்ளுமிமிலேற்றிளங்கன்றினினமுந்தொறுவாமைந்தரையும்
வள்ளல்காணுதுளத்தெண்ணிமலரோன்செய்தியெனத்தேறி
யெள்ளற்கரியமாயையினாற்கன்றினினத்தோடிளைஞர்தமைக்
கள்ளம்பூத்தமாமாயன்முன்போல்வகுத்துக்களித்தனனால். ()

வேறு.

ஐயனிளங்கன்றினொடுமானினைகளோடுஞ்
செய்யகதிரத்தவளைசென்றணையுமுன்ன
மையின்மனையெய்தமகிழ்தூங்கிவருகன்றிற்
கெய்திமுலைப்பாலளித்தவான்களிளங்கன்றின். (அக)

ஓர்பருவமின்னண்மிறப்பவுயர்வேதன்
கார்முகினிறத்தனேயகண்ணனேவழுத்திச்
சீர்பெறுநன்மைந்தரொடுவவ்வுசிறுகன்றுஞ்
சோர்வறவளித்துமிளிர்தொல்லுலகடைந்தான். (அஎ)

ஒருகுழையொருத்தனும்வளைக்குநிகரொக்கு
மருதமரமூன்றவழுமாயனுமுலைப்பால்
பருகலொழிகன்றினிரைபண்பினுடன்மேயா
தரில்பெருகுகானினிடையானிரைக்கண்மேய்த்தார். (அஅ)

கழுதையுருவாகியசுரன்கடிதினெய்த
விழைவெயிலெறிப்பவெதிர்சென்றிகலிராமன்
பழுவொடியவெற்றியோர்பனம்பழமெறிந்தான்
விழுதலுநிலத்திடைபுரண்டுயிர்விளிந்தான். (அகூ)

யமுனைநதியின்கரையினெய்தியிடுமாயா
குமரரொடுமானிரைகள்கோதில்புனலென்ன
வமரும்விடநீரினையருந்தியுயிர்மாயக்
கமழ்துளவமாலைபுனைகண்ணனதுகண்டான். (கூ0)

கண்ணனமுதம்பொழிகடைக்கணருளுக்கா
லுண்ணுமறலுற்றவிடம்யாவையுமொழிப்பத்
துண்ணெனவெழுந்திடையருந்தொறுவுநிற்ப
விண்ணவர்களண்ணலைவியந்தனர்துதித்தார். (கூக)

விடமொழுகுமென்படுகளூடுதனிமேவிக்
கடுவுடையெயிற்றினொடுகாளியன்விரித்த
படமுழுதுமெல்லடிபதித்துமுகில்வண்ண
னடநவிலமெய்ந்நனிநடுங்கியயர்வுற்றான். (கூஉ)

காளிகன்விழைந்துபுணர்கன்னியரவங்கள்
மீளிமையுடைக்குரிசின்மென்கமலமானுந்
தாளிணைவழுத்தவருடங்கியுயிருய்வா
னீள்கடலினேகெனவிடுத்துநிரைகாத்தான். (கூங)

அன்னவைகளொற்றறிலறிந்துபுகழ்நந்தன்
றன்னமர்விருப்பினொடுமைந்தனுழைசார்வான்
மன்னலுறுகங்குல்புலர்வைகறையின்வெய்தாய்த்
துன்னரியகானினழல்சீற்றியதையன்றே. (கூச)

தந்தையைவளைந்துடல்தருக்கறவுருக்கும்
வெந்தழலைமுன்னநுகர்வெண்ணெயெனவாரி
யந்தளிர்மலர்க்கையினினள்ளினனயின்றான்
கந்திடுகடாமலையழைக்கவருகண்ணன். (கூரு)

ஆயர்குலமைந்தரினடைந்தபிரலம்பன்
மாயையையறிந்துவரிபந்துபுடைகோல்கொண்
டேயவிளையாடலுமிராமனனிவெல்லத்
தீயனவனைத்தனிசுமந்துயிர்சிதைந்தான். (௯௬)

நெடிபடுவனத்தினிடைநின்றுவிளையாடு
மிடையர்குலமைந்தனையிருந்தழல்வளைப்பக்
கடிதினவர்கண்மலர்புதைப்பவருகண்ணன்
விடறுகருமீசனெனவெவ்வழனுகர்ந்தான். (௯௭)

குட்டிகர்செருத்தன்மடிகொள்கவடடங்கா
நடைதளருமானிரைபுரந்துமறைநாதன்
படர்தருநெடுஞ்சினையபாண்டிரமெனும்பேர்
வடதருவினீழலிடைவந்தினிதிருந்தான். (௯௮)

கண்ணனிறமென்னவொளிர்கார்முகில்விளர்ப்பத்
தண்மதியிராமனுடல்போலொளிதயங்கா
வெண்ணிலவுகாலவெயிலாதவன்விரிப்ப
நண்ணியதுகூதிர்பிரிவோருயிர்நடப்ப. (௯௯)

முகிழ்ந்தகமலச்செழுமுலைக்கவட்சைத்தே
மிருந்தவலையுத்தரிகம்வீசிநதியாவு
மகிழ்ந்துகணவர்ப்புணரவேகுமடவாரிற்
புகுந்தனகடற்றலையிலன்னமுழைபோத. (௧00)

மங்குறுபெசாவியிடுவேலியின்வளைத்த
பைங்கழைகணுத்தொறும்வெடித்தபருமுத்தந்
தங்குகவணுய்த்தெறிகலென்றுவயல்சாருஞ்
செங்கண்வளைவாயகிளிசேணிடைபறப்ப. (௧0௧)

ஓர்புடைகடற்புனலருந்தியுறைசிந்தா
வார்வமொடிடித்துரறிமின்னியதிர்மேகம்
வாரிமுழுதுண்டமுனிபொய்திவுளமாழ்கி
வேர்வினொடுவான்முகம்விளர்த்தெனவிளர்த்த. (௧0௨)

வேனிலினகன்றவனமேவவெதிர்வைத்த
வினமறுபார்வையினெழுந்தொளிர்திங்கள்
வானதிமணற்குவையின்மைம்முகில்விளர்த்த
கானுறைகருங்குயிலின்வாய்கடிகடைத்த. (௧0௩)

நீர்குறையநீர்குறையநின்றுவெளிதோன்றும்
வார்தருமணற்குவைபுதுக்கடிமணந்தோ
ரார்வமொடுமுத்தரிகமென்மெலவகற்றச்
சோர்குழலின்மாதர்முலைதோன்றுவனபோலும். (௧0௪)

தீம்புனல்வயற்றலைவிளைந்தவளைசெந்நெ
லேம்பலொடுவண்டிவிடர்போலவிசைபாடா
வாம்பலிதழுண்ணுமதுகண்டறிவுநாணித்
தாம்புரிவினோடுதலைசாய்த்ததனைமானும். (௧௦௫)

செந்நெல்வயல்காவல்புரிதீங்குதலைநல்லார்
மென்மெலமிழற்றுமொழிகண்டுகிளிவீழா
டிரின்னநடைகண்டறியுமாரமுலைவேழ
மென்னவெருவுற்றுமதவெங்கரிகளெய்தா. (௧௦௬)

ஆதவன்வெயிற்கதிர்கள்புல்லவளியோடுந்
தாதவிழிதழ்ந்தளையவிழ்ந்துநகையாதே
கூதிரிடைதாமரைகுவிந்தமழைநாளிற்
போதரலொழிந்தவையினூடியதுபோலும். (௧௦௭)

இத்தகையவாயபருவத்தெழிறயங்கு
மைத்தகருமேகநிறமொத்தமணிவண்ணன்
மொய்த்தசினைவானவெளிமூடுவடநீழற்
கைத்தலமெடுத்தகுழலோடுகடிதுற்றான். (௧௦௮)

ஒருபதமிதித்தொருபதத்தையுடன்மாறிப்
பெருவிரன்மணித்தலைபிறங்கநனியூன்றி
முருகுவிரிதாமரைமுகஞ்சிறிதுகோட்டிக்
கருகுதுளைவேயிசைகனிந்திடவிசைத்தான். (௧௦௯)

பாம்பணைதுறந்திடையர்பாடிவளரைய
னம்பல்பொழிதீங்குழலிசைக்குருகியன்பா
லேம்பலொடுமானுழையோடுமிகவின்றித்
தாம்பரிவுகூரவயறங்கியதையன்றே. (௧௧௦)

பாறைபடுவெண்டயிருடைத்தபருமத்தின்
மாறுபடவீக்குறுமணிக்கயிறெறிந்தே
கூறைபொடுமேகலைகுலைந்துமடநல்லார்
காறுடரவையனவில்கானவலைபுக்கார். (௧௧௧)

பாங்கொளிவிரித்திலகுபச்சைமணிவண்ண
னோங்குலவைமென்றழைகுழைப்பநனியூதுந்
தூங்கிசையெழுந்துளைகடொட்டவிரல்பட்ட
வேய்ங்குழலுமென்றழைவிரித்ததுகடுக்கும். (௧௧௨)

வெண்ணெய்கமழ்செய்யபவளக்கனிவிளைக்கும்
பண்ணமுதமஞ்செவியின்வாயிடைபரப்ப
வுண்ணமுதுநஞ்செனவொழித்தமரர்மாதர்
மண்ணுலகினுயர்குலமங்கையரின்வந்தார். (௧௧௩)

புலவியினிலாசைவிளைவித்துநனிபுல்லுங்
கலவியினிலாவிங்கர்காதலனைநீங்கி
யிலவெழிதுவர்ப்பவளவாயிடையர்மாத
ருலைமெழுகினைந்துகுழலோசைவழியுற்றார். (௧௩௪)

பட்டமாமுங்குழைதழைத்தபகலோனும்
விட்டகதிர்தண்கதிரிறைத்ததுயர்மேகந்
தொட்டகடன்முத்தினிறுந்துளிதுளித்த
கட்டழகுடைக்குரிசில்கானவிசைதன்னால். (௧௩௫)

காந்தளிதழுழ்த்ததெனக்கையின்வளைவீழ்ப்ப
பாந்தளுரிவிட்டதெனவேயழகுபாய
வேந்தெழிலவல்குலணிமேகலையிறப்பச
சாந்தமுலைமங்கையர்தரிப்பிலரடைந்தார். (௧௩௬)

வேய்ங்குழலிசைப்பதுவிடுத்துமணிவண்ணன்
றாங்குயர்செருத்தநிறைகாணிடைதுரந்தா
ஞங்கவன்மணப்பவிடைமங்கையர்களம்பைப்
பூங்கழலருச்சனைபுரிந்துநனிநோற்றார். (௧௩௭)

வேறு.

ஐங்கணைக்குரிசில்கேள்வற்றணந்தவரகலத்தெய்தப்
பொங்குமென்கணைகள்சிந்தும்பூந்துகளெழுந்ததென்ன
செங்கதிர்வெம்மைநீங்கித்திங்களிற்றிரிந்துதோன்றப்
பங்கயமுகங்கள்வாடவெழுந்ததுபனியின்பம்மல். (௧௩௮)

பொழிதருபனிக்குநாணிப்புகையொழிந்தோடவெய்தி [ய
னழல்கனல்பொடிப்படாம்போர்த்தஞ்சனக்கொழுந்துபோக்கி
தழல்படவெரியுந்தீயும்வெம்மையிற்றணந்துவல்லோ
ரொழுதியதீயின்வைத்தகளிதோறெரியுமன்றே. (௧௩௯)

பனிக்கிடைந்தஞ்சொனல்லார்பாண்டிலந்தகளிதன்னின்
மனைத்தலைதோறும்வைத்துவளர்த்ததீபசனெற்றிக்
கனற்கணால்மதனைச்செற்றானென்பதுகருதிமாரன்
றனக்குமன்னுதற்கண்ணீய்வான்றனித்தனியமைத்தல்போலும்.

மெய்ம்மயிர்பொடிப்பச்செய்யும்வாற்றினால்விறைவிரேறி
மையசீற்காரம்பல்காற்றேற்றுவித்திடலாலந்தச்
செய்யவாயழகின்றன்மைதிரித்திடுஞ்செயலால்மாதர்க்
கெய்தியபனியுங்கூடுங்கொழுநர்போன்றிருந்ததன்றே. (௧௪௧)

ஈட்டியபனிவெங்கூற்றமெழுதியதழலிற்றோன்ற
மூட்டியதழலுநீக்கார்தாமரைமுகங்கள்கோ-
வாட்டியவாட்டந்தீரவெய்யவன்மாற்றான்மாதர்
மோட்டிளங்கொங்கையின்றேலுலகெலாமுடிக்குமென்றே. ()

இலங்குவெந்தழலின்மாதரோங்கெழிற்குட்டங்கைகாட்டி
லலங்கலங்குன்றமன்னவருப்புவெம்முலையால்மைந்த
ருலங்கெழுபுயத்திற்சேர்த்திப்பனிக்குறும்பொழிப்பெம்மீவிர்
கலங்கலீரொன்றுகாந்தட்கரமலர்குவித்தல்போலும். (கஉ௩)

பற்றலர்புரந்தீயுண்ணநகைத்திடும்பவளக்குன்றி
னெற்றியங்கண்ணும்வெய்யவலக்கணுமழற்சிநீங்கா
துற்றிடுமென்றால்மற்றைமதிக்கண்டீயொழியுங்கொல்லோ
பொற்றதாம்மைகள்வேவப்பனிக்கதிர்பொழிந்திடாதோ. (கஉ௪)

வானதியதனிற்பூத்துவயங்குபொற்கமலம்போன்றும்
வேனில்வேள்கணையான்மாதர்நோக்கிவெய்துயிர்ப்புவீங்கத்
தானெளிமழுங்கித்தோன்றுந்தயங்குபொன்னுடிபோன்றும்
பானுமண்டலத்தின்செவ்விபனியினால்மழுங்கிற்றன்றே. (கஉ௫)

வாமமேகலையினாடுவளர்த்தகாழகிலினீட்டந்
தாமவான்முகத்திற்றேய்த்துறுதைந்துவண்டரற்றிழூதுந்
தாமரைகருகச்செய்யுந்தண்பனிக்கூற்றமாதர்
காமருமுகமுஞ்செய்யகமலமென்றணைதல்போலும். (கஉ௬)

கையினினுதலிற்கண்ணின்மெய்யினிற்கனலிசிந்து
மையனும்பனியின்றீயதன்மையையாற்றுதன்றே
வையமோரேழுமீன்றமங்கைவெம்முலைகணீங்கி
னுய்வரிதென்னப்புல்லியோருடலாயினானே. (கஉஎ)

பரித்தபார்மகளைப்புல்லாதளிகெழுபதுமமேய
திருக்கிளர்முலையின்மாயோன்புல்லினனென்னச்சீறி
யுருக்கிளரிமையவேந்தவ்வொண்டொடிகமலவீட்டைக்
கருக்கினன்போலும்வெய்யபனியெனுங்கனல்கள்வீசி. (கஉஅ)

இருள்வயிறூர்ந்தபுத்தேட்கினமெனக்கமலப்போதைக்
கருகவெம்பனியாற்றீய்த்தகலைமதிதன்னைமீட்டு
மருவுமப்பனியேசெவ்விமறைத்ததால்மனத்தினேனு
மொருவருக்கின்னாசெய்யிற்றனக்கவையுறுவதன்றே. (கஉ௯)

இன்னவெந்துயரஞ்செய்யுமிரும்பனிப்பருவங்காறுங்
கன்னல்வென்றணையதீஞ்சொலாச்சியர்கழைகொளெண்டோ
ளன்னைசேவடிகள்போற்றியாற்றியவிரதமுற்றிப்
பின்னல்வெண்டிரைகள்சிந்திப்பெருகுநீர்யமுனையுற்றார். (க௩0)

விரைகமழ்கமலப்போதின்வேல்கிடந்தனையகண்ணா
ரரவமேகலையுந்தூசுமகன்கரைமருங்குசேர்த்தி
முருகவிழ்மலரின்மேயபறவைகளிரியமொய்த்துப்
பெருகுநீர்யமுனையாற்றிற்பெட்பொடுமினிதுபுக்கார். (க௩க)

கறையொழிதிங்களன்னகதிர்முகவாயர்மாதர்
சுறவவார்குழையுந்தோடுஞ்சுடருமிழ்ந்திருளையோட்ட
வெறிகமழ்சுண்ணத்தோடுமென்றுவர்கிமிர்ந்துமென்பூஞ்
சிறையளியோச்சித்தண்ணந்தீம்புனலாடினாரே. (௧௩௨)

ஓவியத்துறைகைவல்லோரொழுகொணாவுருவம்வாய்ந்த
தூவிமாமஞ்ஞையன்னார்தண்புனறோயுமெல்லைப்
பூவைபோல்வனப்புவாய்ந்தபூந்துழாயலங்கற்றோளான்
கோவியர்தூசுவாரிக்குருந்தின்மீதிவர்ந்தானன்றே. (௧௩௩)

உள்ளமுந்துகிலும்வேள்வியுயர்குருந்திவர்ந்துதோன்றுங்
கள்ளவெஞ்சேலைநல்கென்றீர்த்தலுங்காயாமேனி
வள்ளனீள்கரையிலேறிவணங்கினோர்க்களிப்பனென்னு
தெள்விளிக்குழலின்வைத்ததீங்கனிப்பவளம்விண்டான் (௧௩௪)

ஒருகையாலல்குல்பொத்தியொளிமுகஞ்சிறிதுகோட்டிக்
கரையினிலிவர்ந்துமற்றக்கரமலர்குவிக்கின்றாருங்
குருமணியல்குன்மற்றோர்குடங்கையினடங்காதென்ன
வெருவொடுநாணிமீட்டும்விரிபுனற்படிகின்றாரும். (௧௩௫)

தாமரையிலைகடம்மாற்றாமரைத்தலங்கள்மூடிக்
காமனையனையசெவ்விக்கண்ணனைத்தொழுகின்றாருந்
தூமமென்கூந்தனீலவாடையின்மருங்குசுற்றிப்
பூமகள்கொழுநன்செய்யபூங்கழல்பணிகின்றாரும். (௧௩௬)

ஐதெழில்பரந்தவல்குலாள்வழ்க்கறுக்கும்வேற்கண்
மைதவழ்கூந்தனல்லார்மாதரைமயக்கியாசை
செய்திடுந்தூர்த்தசேலையருள்கெனச்செங்கைகூப்பி
வைத்துநின்றிரப்பமாயன்வண்டுகில்வழங்கினானே. (௧௩௭)

ஆவியந்துகில்கள்சுற்றியஞ்சனங்கண்ணிற்றீட்டிப்
பூவிரிகூந்தல்வாசப்புகையினிற்புலர்த்திவீக்கிக்
கோவைதாழ்முலையிற்செய்யகுங்குமத்தேய்வைகோட்டிக்
காவியங்கண்ணினார்கள்காமப்போர்க்கோலங்கொண்டார். ()

தாற்றிளங்கதலிக்கானிற்சந்தனச்சோலைதன்னிற்
கோற்றொடிசிலம்போடார்ப்பக்குவிமுலைதிளைப்பவல்கு
லூற்றிருந்தமிர்தங்காலமுகங்கள்வேர்வுரைப்பமாயன்
வீற்றுவீற்றுருவாய்மாதவொவரொடுமேவினானே. (௧௩௯)

இன்னணமாயர்மாதரிளமுலைப்போகமாந்திக்
கன்னல்வென்றனையசொல்லார்கலன்கள்கைசெய்துநீங்கித்
தன்னமர்தோழரோடுநெடியொலிதழங்குகாட்டிற்
றுன்னரும்விறல்கொள்மாயன்றொறுவினங்காக்குமெல்லை. ()

அழிகொடும்பசியால்நொந்தேமையவூணளித்தியென்னக்
குழையனைசுற்றுமாயர்தனித்தனிகேட்பக்கொண்டல்
விழைவொடுமகஞ்செய்கின்றார்வேதியராங்கணெய்தி
தழலுறுமவியைநீவிர்தருகெனக்கேண்மினென்றான். (கசக)

என்றலுமறையோர்சாலையெய்திவெண்சோறுகேட்ப
மன்றவம்மறையோர்சிறமற்றவர்மாதர்ஞானக்
குன்றினுக்கவிகடாமேகொணர்ந்தனரளிப்பவைய
னொன்றியதோழரோடுமுவந்தினிதருந்தினானே. (கசஉ)

அருமகப்புருடனந்தவவியினையயின்றவாற்றா
லுருகெழுதீயிலூட்டும்பேற்றினுமொன்றுநூறாய்
மருவிநற்பலன்வந்தெய்தமாதர்தங்கேள்வரோடுந்
தெரிவருமுத்திவீட்டிற்சிறப்பின்வீற்றிருந்தாரன்றே. (கசங)

அரக்கினையூட்டிச்செய்யவமுதினைத்தீற்றியன்ன
முருக்கிதழிந்திராணிமுலைமுகந்திளைப்பவீங்குந்
திருத்துயில்மார்பன்பூசைசெய்திடநந்தகோபன்
விருப்பொடும்பண்ணிகாரம்வேண்டுபவியற்றினானே. (கசச)

ஐயநீயாரைப்பூசையாற்றுவான்றுணிந்ததென்னச்
செய்யதாமரைக்கண்மாயன்செப்பலுநந்தகோபன்
மையவாங்குவளையுண்கட்புலோமிசைமணாளன்றன்னை
வெய்யதீவினைகணீங்கப்போற்றுவன்விழைவினென்றான். கசரு

வேறு.

கோவர்த்தனகிரியைத்தழைவளருங்குளிர்கானை
மேவிச்செயிரறுபூசனைபுரிவீருயர்விண்ணிற்
றேவுக்கருளொடுபூசனைசெய்யாதொழிவீரொன்
றாவிக்கூறுமுயிராகியவையனுரைசெய்தான். (கசசு)

ஐயனுரைசெய்யாமுனமாயர்க்கொருதிலக
னெய்யின்கடல்கருணைக்குவைநெகிழாவடிதயிர்பால்
வெய்தாகியவடிசிற்குவைவெளிமூடநிறைத்துச்
செய்தான்மணிவண்ணன்றனிமகிழத்திகழ்பூசை. (கசஎ)

கண்ணன்றிகழ்கோவர்த்தனகிரியின்கவினெய்தித்
தண்ணந்தயிரடிசிற்குவைமுழுதுந்தனிவாரி
யுண்ணுந்திறனுணராவிழிசிவவாவுடன்வெகுளா
விண்ணந்தனியாள்வானுயர்முகிலேழும்விடுத்தான். (கசஅ)

காரேழுமெழுந்தோரெழுகடல்வற்றமுகந்தாங்
கோர்தாரைநல்லயிராவணமுயர்நீள்கரமொப்ப
வாராவுமிழ்தலுமானிரைதுயராதணிதுளவோன்
பேராவுயர்கோவர்த்தனங்கொடையாமெனப்பிடித்தான். ()

ஓரேழ்தினமிவ்வாறதிர்மழைபெய்தலுமிளிருங்
கார்மேனியன்வரையைக்குடைகவியாநிரைகாப்பப்
பார்மேல்மகவான்வந்துயர்பணிவான்புனலாட்டிச்
சீரார்பெயர்கோவிந்தனெனச்செப்பியகன்றான். (௧௫௦)

இவ்வாறெழுகுறுநாளினிலீராறுறுதிதியின்
வவ்வாவுயர்நந்தற்கொடுவருணனுழைச்செல்லும்
வெவ்வாளசுரோசன்கையின்விடுவித்துயர்மறையு
மொவ்வாதருள்கொடைநந்தனையுயர்கோகுலமுய்த்தான் (௧௫௧)

நந்தன்முதலியவண்டர்நயப்புற்றுளமகிழ
மந்தாரவனஞ்சூழ்தருவைகுண்டமனைத்துங்
கந்தார்களிறுரைசெய்திடுகண்ணன்றனிகாட்டி
வெந்தீவினைசெயுமாயையின்மீட்டுந்தனிமறைத்தான். (௧௫௨)

தேமாநனைகொழுதுத்திரிசெங்கட்குயில்களியாக்
காமாவெனவொழியாமலரற்றுங்கடிகாணிற்
பூமாதவிசினின்மேவியபொன்னங்கொடிகொழுநன்
பாமாண்படுமிசைவேய்ங்குழல்பயில்வானினிதுற்றான். (௧௫௩)

கஞ்சங்கழைசெங்காலிகருங்காலிதழைக்குஞ்
செஞ்சந்தனமெனுமைந்தினினிதென்றுரைசெய்பு
மஞ்சாரடவியினாற்றிசைவளிதைவரலின்றி
விஞ்சுஞ்சமதலமுற்றுயர்வேயின்முதறுணியா. (௧௫௪)

ஓராண்டிடையிட்டேவளைவூனம்புரைதிருக
லாராய்ந்திருபதுமேல்விரனீளத்துறுமளவாய்ச்
சேரும்விரலொருநாலரைதிகழ்சுற்றுளவாக
வீருங்குழல்கஞ்சத்தினினிடவாய்வெளியடையா. (௧௫௫)

இருமேல்விரலிடவாயினில்விட்டோர்துளையிட்டேழ்
விரல்விட்டெழுதுளையிட்டவைமேல்முத்திரையிரு
வுரைபெற்றிடுதுளையெட்டினுமொன்பான்விரனீக்கிப்
புரையற்றிடவிருமேல்விரல்வளைவாய்முனம்போக்கி. (௧௫௬)

அருமாமறைவிளையாட்டயர்திருநாவுடையைய
னொருநாண்முழுதுள்ளத்திடையுன்னித்தனிசெய்யாத்
தருவேய்ங்குழறனைநீளுறுத்தடவுங்கையினேந்தி
கருமாமுகிலுலகம்பொதிகனிவாயிதழ்வைத்தான். (௧௫௭)

இடக்கைப்பெருவிரலுஞ்சிறுவிரலுமெழில்வலப்பாற்
றடக்கைப்பெருவிரலும்மிவைதவிரச்செறிவிரலா
லடைத்துத்திறந்தியலேழிசையமிர்தந்துளைதோறு [தான்
மடைத்துப்பெருக்கெடுத் தோடவொலிவேய்ங்குழலிசைத்

வேறு.

திருவேயன்னார்வேயிசைதத்தஞ்செவியோரா
முருகார்சந்தச்சேறணிபொம்மன்முலைதாங்கி
யருகாரிற்குநுண்ணிடையங்தோவிறுமென்று
விருதாள்பற்றிநூபுரமார்ப்பவெதிர்புக்கார். (கருசு)

நாணுந்தூசுமாமையுமெய்தாநலனும்பொற்
பூணும்நெஞ்சும்பொற்புடையாவுங்குழலூதும்
யானார்ப்பைந்தாரண்ணலையுள்ளத்திடைமெச்சிக்
காணுந்தெய்வக்கையுறைநல்கிக்கவலுற்றார். (கசுO)

வேயாலாவின்பின்றுடர்செங்கண்விடைமீட்கும்
காயாமேனிக்கண்ணனுமம்மென்முலைதாங்கித்
தேயாநிற்குஞ்சிற்றிடையார்தஞ்செயனோக்கி
மாயாவேடத்தெண்ணரிதாகும்வடிவுற்றான். (கசுக)

மாதவியந்தண்சோலையில்மன்றற்புளினத்திற்
றாதவிழ்முல்லைப்பந்தரின்வெற்பிற்றணியெய்தி
வேதமுமின்னங்கண்டறியாதோன்வெளிநின்றே
போதரியுண்கட்கோவியரோடும்புணர்குற்றான். (கசுஉ)

இன்னணமின்சொற்கோவியரோடுமினிதாடிப்
பொன்னவிராழிக்கன்னவிறிண்டோட்புயல்வண்ண
னன்னநிகர்க்குமிராதையெனும்பெண்ணமுதோடு
மன்னியிமைப்பிற்பூமலிகாவின்மறைவுற்றான். (கசுந)

ஐயனொளிப்பக்காணலராய்நின்றலர்கொங்கைத்
தொய்யிலழிப்பக்கண்ணினைமாரித்துளிதூங்க
மையன்மனத்தோடின்னமுதன்னார்வனமெங்கு
மெய்தினர்காணார்மாழ்கியுயிர்த்தங்கிவைசெய்வார். (கசுச)

பூதனையென்றோர்பேதையைவைத்துப்புயல்மேனி
மாதவனுகச்சென்றுமுலைக்கண்வாய்வைப்ப
ரூதியகொன்றைத்தண்குழல்வாய்வைத்தூழல்கிற்பா
ரோதமில்கோலநகொண்டுகுருந்திணிவர்கிற்பார். (கசுரு)

ஐயனிழைத்தவையாவையுமிம்முறையந்நல்லார்
செய்துவிருப்பொடுசென்னெறிதேடிச்செல்போதின்
வையமளந்துயர்கந்தையினூடியமலர்வைப்புந்
தையலிராதையடிச்சுவடுந்தங்கண்ணுற்றார். (கசுசு)

அங்கவர்செய்யவடிச்சுவடொற்றினர்செல்போழ்தின்
மங்கைபதக்குறிகண்டிலர்மாயன்மலர்ப்பாதச்
சங்கொடுசக்கரரேகையழுந்தறனைக்காணு
விங்கவடன்னையெடுத்தனனென்னவெண்ணுற்றார். (கசுஎ)

தேடிவிருப்பொடுமங்கையரந்நெறிசெல்போழ்தி
னேடவிழ்நாண்மலர்கைவளையுக்கவிடங்காணூ
ஆடல்திருத்தியிதம்பலசொல்லியுவப்போடுங்
கூடினனிவ்வழியென்றுநினைந்துகுழைந்தாரால். (௧௬௮)

ஆயிடைசென்றவர்நின்றதலத்தினணித்தாக
மாயன்விடுத்தயலேகவிராதைவருந்தோடுஞ்
சேயரிமைக்கணிறைத்திடநின்றதிறங்காணூ
வேயினரங்கவணின்றுழிமங்கையரெல்லோரும் (௧௬௯)

வேறு.

எய்துமங்கையரிராதையைநோக்கி
வையமுற்றுமுன்னளந்தமலர்த்தா
ளையனெங்குளனறைந்திடுகென்ன
நையநெஞ்சமொடுநாணியுரைப்பாள். (௧௭0)

முன்னர்நுங்களைமுயங்கிவிடுத்து
பின்னமொன்றொடுயர்பெட்புளர்போல
மன்னியுள்ளுறுபிணைவவ்வியகள்வ
னென்னையுந்தனிதுறந்தனனென்றாள். (௧௭௧)

என்றுகூறுதலுமங்கையர்யாருங்
கன்றுகாமவனனின்றுகனற்ற
வென்றிவேள்கணைவருத்தமெலிந்து
பொன்றிநாரினுயிர்போகியயர்ந்தார். (௧௭௨)

மாரிகற்குமதுமாலைமிலைச்சுங்
கார்கொளோதியினர்கையறவெய்திச்
சோர்தல்கண்டுதுயர்கொண்டவர்கண்முன்
வேரியந்துளவமால்வெளிநின்றான். (௧௭௩)

பருதிகண்டுமலர்பங்கயமொத்து
முரவுநீர்சுவறவுண்டெழுதண்கார்
வரவெதிர்ந்தகளிமாமயில்போன்றுங்
கரியமால்வரவுகண்டுகளித்தார். (௧௭௪)

வேறு.

வெண்ணிலாக்கதிர்கள்பாயவிரிமணற்குன்றுதோறுந்
தண்மலர்ப்பந்தல்தோறுஞ்சண்பகக்காடுதோறும்
பெண்ணையங்குரும்பையன்னபேரிளமுலையிற்புல்லி
கண்ணனன்மடவாரோடுந்தனித்தனிகலந்திட்டானே. (௧௭௫)

சிலருறும்புலவிநீங்கப்பணிந்திடுஞ்சிலரையன்பிற்
கலவியின்மகிழ்ச்சிசெய்யுஞ்சிலர்குழல்கைசெய்தேந்து
முலையினிற்றொய்யில்தீட்டுஞ்சிலரொடுமுகமன்கூறி
யொலிபடுநரம்புவீக்கித்திவ்வியாழுளருமன்றே. (௧௭௬)

உரவுநீர்த்தடத்தினுடுஞ்சிலரொடுஞ்சிலரோடொன்றிக்
குரவைகோத்தினிதினுடுஞ்சிலரொடுங்குளிர்பூங்காவின்
விரிமணல்வண்டற்பாவைக்கணிந்திடவினைமென்போது
தெரிதருஞ்சிலரோடொன்றிச்சிலம்பெதிர்கூவுமன்றே. (களஎ)

இன்னணங்கங்குன்மேவுமெரிகதிர்ப்பருதிமான்றேர்
துன்னிடுங்காறுமாடித்தொறுவர்தம்மகளிரோடுங்
கன்னவில்முழவுத்திண்டோட்கருமுகில்வண்ணத்தண்ணல்
பன்னருஞ்சிறப்பினுயர்பாடியினெய்தினுனே. (களஅ)

எய்தியவ்வாயர்பாடியினிதமர்ந்துறையுநாளிற்
றெய்வநீர்ப்பெருக்கருதசரச்சொதிதீரந்தன்னின்
மையணிமிடற்றுப்புததேள்விழாவணிவணங்கியேத்தக்
கொய்துழாய்முகுந்தனுயர்குழாத்தொடுமெய்தினுனே. (களகூ)

இளம்பிறைக்கண்ணியண்ணலுவந்திடவெழிலிவண்ணன்
வளம்படுகருணையார்ந்தவான்சுதைக்குன்றமென்ன
விளங்குவெண்சோறுபெய்யாவானெய்பால்வெறுப்பவேந்தி
யளந்தறிவரியசீர்த்தியந்தணர்க்கூட்டினுனே. (கஅ0)

நீறுபூத்தலர்ந்தமேனிநெற்றியங்கண்ணினெந்தை
சாறயர்மறுகினெய்தித்தாமதைத்தடங்கண்மாய
னேறிவர்ந்தையனெய்தத்தொழுதடியிறைஞ்சியேற்றி
வீறுயர்தம்முன்னேடும்வீட்டகமதனிற்புக்கான். (கஅக)

கங்குலினந்தகோபன்கண்டுயில்புரியுமேல்வை
வெங்கண்வாளரவம்பற்றிவிழுங்கலுங்கண்ணன்காணுப்
பைங்கழற்றுளிற்றுக்கப்பைத்தபாம்புருவநீங்கி
மங்குல்வாயியக்கன்முன்னைவடிவுபெற்றியம்புமன்றே. (கஅஉ)

ஓரொழுமுனிவர்முன்னமுறைத்தவெஞ்சாபந்தன்றற்
கூரெயிற்றரவமாகிக்கிடந்தனன்குரிசிலுன்றன்
வார்கழல்தீண்டப்பெற்றவன்மையால்முன்னமேய
வேர்கெழுமுருவம்பெற்றேனெனத்தொழுதேகினுனே. (கஅங)

சாறொழிவழிநாளையன்றமரொடுந்தம்முனேடும்
வீறுயர்பாடியெய்திப்புலரியினிளைகண்மேய்ப்பா
ளுறுபூந்துணரின்வீழ்ந்துநாகிளவண்டுபாடத்
தேறல்கொப்புளிக்குங்காணிற்சென்றினிதிருந்தானன்றே. ()

பொருதிரையமுனையாற்றங்கரையினிற்பூவைவண்ணன்
சரிகமபதனியென்னுந்தானத்திற்றெடுதொட்டு
விரல்வழியமுதஞ்சிந்தவேய்ங்குழல்மணிவாய்வைத்துக்
குரல்முதலாயவேழுபண்களுங்குறித்திட்டானே. (கஅரு)

கொன்றையங்குழலினேதைகேட்டலுங்கொம்பரன்னார்
மன்றலங்கூந்தல்சோரவால்வளைவாய்விட்டார்ப்பப்
பொன்றிகழ்முலையினோர்காழ்மணிவடம்புதைப்பவோடிச்
சென்றிளமயிற்குழாம்போற்செல்வனைவளைந்துகொண்டார். ()

ஆயிடைச்சங்கசூடனென்னுமோரவுணனெய்தித்
தீயனபுரிதனேக்கித்தாமரைச்செங்கண்மாயன்
வாய்வழிகுருதிகக்கக்குத்திமாய்த்தவன்கைவைகுங்
காயெரிமணியைவெளவிமுன்னவன்கையினீந்தான். (கஅஎ)

வங்கியவிஞ்சைவல்லோர்மணிக்கரம்விதிர்த்துநோக்கப்
பங்கயகண்ணன்மீட்டுங்குழலிசைப்பயிலுமேல்வைப்
பொங்குதேனசையின்மொய்க்கும்பொறிவரிவண்டுபோல
வங்கரவல்குனல்லாரனைவருஞ்சென்றுமொய்த்தார். (கஅஅ)

வண்டொலிசுருதியாகமணிமிடற்றிரங்குமோதைப்
பண்டருகானமாகப்பைந்தொடிசிலம்போடார்த்தல்
கொண்டதோர்முழவமாகக்குவிமுலைத்தாளந்தாக்கி
யண்டர்தமகளிர்காமநாடகமாடினாரோ. (கஅகூ)

ஓவியரொழுதவொண்ணாப்பேரொழிலுருவம்வாய்ந்த
கோவியரோடுமின்புறறின்னணங்கூடுமேல்வைச
சேவினதுருவாயெய்துமவுணனைச்செங்கண்மாயன்
மேவுகோடிறுத்துவீழ்த்திவேற்றுடலாக்கினானே. (கக0)

கோவுருவெய்திவந்தவவுணனைச்செற்றகொற்றம்
யாவையுங்கஞ்சற்கோதியாழ்முனிக்கண்ணனென்போன்
றேவகிமைந்தன்மற்றோர்குழையினனுரோணிசெம்மல்
காவலநீமுன்செற்றகன்னிமற்றசோதையீன்றாள். (கககூ)

மைந்தரோரிருவர்தம்மைவாள்வசுதேவனஞ்சி
நந்தகோன்மனையினுய்த்தானெனமுனிநவிறல்கேட்டுச்
சிந்தையின்வெகுளிபொங்கமைத்துனன்றன்னைச்சீறி
வெந்திறற்கஞ்சனோள்வாட்டறுரீஇவிரைந்துசென்றான் (கககஉ)

வளிதட்டவரினுங்கிதமிழற்றிடுமகதியாழோ
னளியொடுமிவனைக்கோறறகாதெனவிலக்கியந்தண்
டுளிமுகில்வண்ணனோடுந்தம்முனைதொலைக்குஞ்சூட்சி
ய்ளிகடலவனிவேந்தேநாடுதிவிரைவினென்றான். (கககூ)

வெளிற்றறிவுடையதேர்ச்சித்துணைவரோடாய்ந்துவெய்ய
வுளைப்பரியுருவிற்கேசிகோகுலத்தொல்லையெய்திக்
துளிப்புயலனையமேனிக்கண்ணனைத்தொலைத்தியென்ன
வளைத்தலையாவிற்சிறிகஞ்சனுண்டறைதல்செய்தான். (கககச)

கபிலவாம்பரியாய்வெய்யகதழ்சினத்தவுணனேங்கு
மலைநெடுங்தென்னவேகிமாயன்முன்னதிர்ந்துசெல்ல
வலகைமென்முலைப்பாலுண்டோனுங்கவன்வாயிற்செங்கை
குலவுறநீட்டியன்னோனுருயிர்குறைத்திட்டானே. (கசுரு)

கள்ளுநராகச்சில்லோர்சிலர்குழக்கன்றதாக
வெள்ளிடையெய்தியையன்மிகவிளையாடுங்காலை
யள்ளிலைவயிரப்பைம்பூண்மயன்மகன்வியோமனுயர்
பிள்ளைகளுருவாய்வஞ்சப்புணர்ப்பினிற்பிடிக்கவந்தான். கசுசு

எய்தியவவுணனீங்குநின்றசிற்றுயர்தம்மைக்
கைதவத்தெடுத்துப்போகிக்கன்முழையதனிற்சேர்த்தி
மைதவழ்பாறைதன்னலடைத்தலுமாயனன்னோன்
பைதலுற்றிடவாய்மூக்குப்புதைத்துயிர்படுத்திட்டானே. கசுஎ

அடைத்திடும்பாறைதன்னையணிவிரற்றலையிற்றாக்கி
யுடைத்துநீண்முழையில்வைகுந்தோழரையொல்லைமீட்டு
வடித்தநான்மறையுங்காணுமரகதக்கொண்டல்வண்ணன்
படிக்கொருதிலகமானபாடியிலெய்தினனே. (கசுஅ)

அஞ்சனக்கொண்டன்முன்னர்நாரதனணுகிவெய்ய
கஞ்சனைமூன்றுநாளிற்கடிந்துநீளுலகம்யாவு
முஞ்சிடவளிற்றியென்னவுரைத்துயராசிகூறி
விஞ்சையருலகந்தன்னில்விரைவொடும்போயினனே. (கசுகூ)

கேசியைவியோமன்றன்னைத்தொலைத்தமைகேட்டுக்கஞ்சன்
மாசுறுமனத்தனாகிமரகதவண்ணன்றன்னைத்
தேசுறுமிராமனோடுஞ்செகுத்திடுஞ்சூழ்ச்சியாவு
மேசுறுமதியிற்பல்காறனியிருந்தெண்ணினனே. (உOO)

சாணூரன்முட்டிவெய்யசலன்கவுசலனைப்போரி
லாணுடுசிற்றத்துப்பிற்குவலயாபீடமாயச்
சேணுடர்போற்றும்யானைசெலுத்துபத்திரனைக்கூவிக்
கோணுகமனையகஞ்சன்றனியிருந்திதனைக்கூறும். (உOக)

முருகுவாய்மடுத்துண்டாடிமூசிவண்டரற்றுந்தீந்தேன்
விரைகமழ்துளவத்தண்டார்க்கண்ணனைவெள்ளைமேனி
யொருகுழையொருவன்றன்னைமல்லினலோடைநெற்றிப்
பொருமதக்கரடநால்வாய்ப்பொருப்பினலொறுத்திரென்றான்.

அலைகடலவனிகாக்கும்யாதவர்மற்போர்காண்பான்
மலையுறழ்குடுமிமாடந்தனித்தனிவகுத்துவாய்ந்த
சிலைமகம்புரிவித்தெய்தும்வீரரைச்சிறப்புச்செய்யாக்
கலையிலக்குரூரன்றனக்கிவைகழறலுற்றான்: (உOஙு)

கொல்சினத்தறுகண்வேகக்குஞ்சரமிடற்றும்போர்க்கு
மல்லடுபோர்க்குந்திங்கட்கூன்முதுகுரிஞ்சவான்றோய்
கல்செய்தோளிராமன்றானுங்கண்ணனும்வலியரென்று
ரொல்லையினந்தகோனோடவரையீண்டுய்க்கவென்றான். (உ0ச)

கொய்யுளைப்புரவிநான்குபண்ணியகொடிஞ்சிமான்றே
ரெய்யெனுமளவிலேறிநந்தகோன்பாடியெய்திப்
பெய்முகில்கமலக்காடுபூத்தெனப்பிறங்குமேனி
யையனைவெள்ளைமேனியமலனையினிதுகண்டான். (உ0ரு)

பருகுவான்போலநோக்கிப்பங்கயமருட்டுஞ்செய்ய
விருபதங்கண்ணிலொற்றியிறைஞ்சலுமிராமனோடு
முருகவிழ்துளபமாயோனளவளாய்முகமன்கூறி
யுருகுபேரன்பிற்புல்லிப்போந்தமையுரைத்தல்செய்தான். (உ0சு)

அற்றைநாட்கழிந்தபின்றையஞ்சனக்கொண்டலன்று
னொற்றைவெண்குழையோனோடுநந்தகோனோடுமோங்கு
வெற்றிவேலக்குரூரன்விரைசெலற்புரவிபூண்ட
பொற்றடந்தேரினேறிப்போகியதுடங்கினனே. (உ0எ)

அழுதலம்வந்துமாழ்குமாச்சியர்தன்னையையன்
குழைவுறக்கஞ்சனுவிக்குடித்திவண்வருவனென்று
வழுவலன்போடும்விள்ளாதொருவருக்கொருவனாகித்
தழுவினனிறுத்திவல்லேயமுனையங்கரையிற்சார்ந்தான். (உ0அ)

சார்தலுமக்குரூரன்றண்புனல்படியுமேல்வை
தேரினிற்புனலிற்கண்ணின்மனத்தினிற்றிசைகளெட்டி
னுரியன்றன்னைக்கண்ணுற்றற்புதநீரனாகி
யீர்மலர்தூவியையனிணையடியேத்தினனே. (உ0கூ)

பின்னுமத்தடந்தேரேறிநால்வரும்பெட்பினோடுங்
கன்னியம்புரிசைமுற்றிக்கவின்வளர்மதுரையென்னும்
பொன்னகர்க்கணித்தாய்மற்றோர்பூம்பொழின்மேவக்கண்ணன்
மன்னியவக்குரூரன்றன்னொடுமகிழ்ந்துசொல்வான். (உக0)

மன்னுமையாங்களைவருதும்வேத்தவையினீபோய்த்
துன்னியவனைத்துஞ்சொல்கென்றுரைத்தலுமக்குரூரன்
கன்னவில்திரடோட்கஞ்சன்கடிநகர்விரைவினேகி
யின்னவையனைத்துங்கூறித்தன்னகர்க்கேகினனே. (உகக)

கூன்பிறைமுதுகுதேய்க்குங்குடுமியம்புரிசைசுற்றி
வான்றொடர்மாடமோங்குமதுரைமாநகரங்காண்பா
னூன்சுவைத்தொளிருநேமியொருவனும்வெள்ளைமேனித்
தேன்படுதாரினனுந்தொழுவரும்விரைந்துசென்றார். (உகஉ)

பாசிலைப்பதுமக்காடுபூத்தனபடிவத்தண்ணல்
தேசுகண்படுக்குஞ்செல்வத்திருநகர்நோக்கும்மேல்வைக்
காசுலாங்குவவுத்திண்டோட்கதிர்முடிக்கஞ்சன்சுற்றுந்
தூசுதூய்தாக்குவோன்வந்தெதிர்தலுமிதனைச்சொன்னான். ()

விழுமியதுகிலொன்றீதியென்றலும்வேந்தராடை
தழையரைச்சுற்றுமாயர்புனைந்திடத்தகைந்துகேட்டல்
பிழையெனவண்ணான்கூறவவ்வன்றலைபிடுங்கியோரோ
ரிழையொருகோடிபெற்றதுகிலெலாமிடையற்கீய்ந்தான். ()

விலைவரம்பரியலாகாவெண்டுகில்மருங்கில்வீக்கிக்
கலைவலாரேகுமேல்வைக்கஞ்சனுக்கணிவோன்போந்து
நலனுறுகலன்கள்யாவுநன்கினிலணியச்செம்மாந்
துலைவிறன்னுருவமன்னோனுற்றிடவுதவினானே. (உகரு)

புதுக்கடிபொருந்தும்வண்டினணறப்புதியதேறன்
மதுத்துளியருத்திப்புல்லுஞ்சுரும்புவீழ்மாலைகட்டு
முதுக்குறையுடையோன்போந்துமுருகவிழ்மாலைநல்க
விதிக்குமோர்விதியாமையன்வீட்டின்பமருளினானே. (உகசு)

ஐயிருகாதநாறியலைகடலதனிற்சிந்தின்
வெய்யவெம்புலவுமாற்றிவெறிகமழ்நறியசாந்தங்
கையகத்தேந்திக்கூனிகண்ணனுக்களித்தலோடுஞ்
செய்யசாந்தணிந்துமாயோன்மற்றிவைசெய்தானன்றே. (உகஎ)

பூங்கழல்விரல்கள்யாவும்புறவடியதனிற்சேர்த்தி
யாங்கவளணரிதன்னையண்ணல்செங்கையினேந்தி
வாங்கலுங்கூன்கண்மூன்றுநிமிர்ந்துவான்மகளிரோனுந்
தாங்கரும்படிவந்தாங்கித்தாக்கணங்கென்னநின்றாள். (உகஅ)

எழிலும்வெம்முலையுந்தாங்காதிடுகிடையணங்குநாணி
மழையெழில்கவிற்றுநம்பிவருகவென்மனையினென்னக்
கழைசுளிக்களிநல்யானைக்கஞ்சனைக்கொன்றுநாளை
விழைவினுன்மனையினெய்திமேவுவனென்றுபோனான். (உககூ)

வினமகமியற்றுஞ்சாலைவிரைவினிலெய்தியாங்கண்
மன்னியசிலையைப்பற்றிவலிதினின்முறிப்பக்காக்குங்
கன்னவில்தோளார்வெம்போரேற்றலுங்கமலக்கண்ண
னன்னவராவிகூற்றுக்களித்தவணகன்றுபோனான். (உஉ0)

எயிற்புறந்தன்னினந்தணிறுத்தபூங்காவிலையன்
வெயிற்கதிருமிழும்பைம்பூணிராமனோடெய்தவேந்தன்
செயிர்ப்பொர்டுமினையவெல்லாஞ்செவித்தலைபுதையக்கேளா
வுயிர்த்திருள்கழியுங்காறுந்துயிலின்றிவெருட்சியுற்றான். (உஉக)

அந்தவெற்படைந்தவெய்யோனுதயவெற்பணுகலோடு
முத்தவெண்குடையினீழல்முகிழ்முலைமகளிர்செய்ய
கைத்தலத்தேந்துபைம்பொற்கவரிகாலசைப்பக்கஞ்சன்
வித்தகர்வயவர்சூழவேத்தவையெய்தினனே. (உஉஉ)

மதுகையோடொன்னார்தம்மைவாளமரழுவந்தன்னின்
முதுகுகண்டன்றிமீளாமுழுவலிதுயின்றதிண்டோ
ளொதுகுலமன்னர்யாருமற்றெழில்காண்பானெய்திக்
கதிர்மணித்தவிசுதோறுங்கவின்பெறவிருந்தாரன்றே. (உஉங)

உலம்பொருதுயர்ந்ததிண்டோண்முட்டிகனுயர்சாணூரன்
சலன்றிறற்கூடன்சாற்றுங்கவுசலன்முதலாமல்ல
ரிலங்குமெய்முழுதுஞ்செம்மண்டுகளிறைத்தினிதினுடிப்
பொலங்கிரிகாலினோடும்புகுந்தெனவவையிற்புக்கார். (உஉச)

நந்தகோன்றன்னையீண்டுத்தருகெனநவிலத்தூதர்
சிந்தையின்விரைவினேகிநல்லுடைச்சிறுவரோடும்
வந்திடுகென்னப்போந்துகஞ்சனைவணங்கிநிற்ப
விந்திரதிருவன்கண்ணுலிருக்கெனவிருந்தானன்றே. (உஉரு)

உவரிநீர்வண்ணன்வெள்ளையோர்குழையொருவனோடு
மவையினிலெய்தவேந்தன்கடைத்தலையணுகுமெல்லை
யிவர்வுறுபத்திரன்றன்பெருவிரலினையிற்றூண்டிக்
குவலையாபீடமென்னுங்குஞ்சரமேவினனே. (உஉசா)

கோலிவெங்களிறுருத்தக்கோட்டிடையொளித்துநான்கு
காலிடைக்கரந்துவவ்வுங்கரத்திடைமறிந்துமுன்போ
மோலொடும்வெருவியோடமத்தகமுடையக்குத்தி
வாலினைப்பற்றிநூறுவிற்கடைவலித்திட்டானே. (உஉஎ)

வானுகிர்த்தலையான்முன்னமிரணியன்மருமம்போழ்ந்த
கோளரியென்னச்சீறிக்குஞ்சரம்வெருவத்தாக்கி
நீளிருந்தடக்கைபற்றிநிலத்திடைவீழ்த்தியம்பொற்
றாளினான்மிதித்தோர்கோட்டைத்தடக்கையாற்பிடுங்கினனே.()

பறித்தவெங்கோடுதன்னாற்பத்திரன்சென்னிமூளை
தெறித்திடவடித்துநெய்த்தோர்மெய்ம்முழுதொழுகிச்சேப்ப
முறித்தவெங்கோடுதன்னைமுழுவலித்தோளின்வைத்து
நறைத்துழாயலங்கன்மார்பன்வேத்தவைநண்ணினனே (உஉகூ)

மற்றைவெங்கோடுதொட்டுமல்லலம்புயத்திற்சேர்த்தி
யொற்றையங்குழையோன்வானிலோங்குயர்வெள்ளிவெற்பைச்
சுற்றியமுகிலினீனுண்டுகிலொளிசிறப்பநோக்கும்
பற்றலர்வயிற்றின்வெந்தீபடர்தரவவையிற்புக்கான். (உஙo)

அற்றமில்வலியின்மிக்கமுட்டிகனட்டிசாணூர
னொற்றையங்குழைமீனோனைக்கண்ணனையுருத்துநும்மை
மற்றொழில்வல்லரென்பர்வல்லிரேல்வருதிரென்னப் [ணர்.
பொற்றடந்திணிதோள்கொட்டிக் கனன்றுவாய்புகையச்சொன்

என்றவர்கூறமைந்தரிருவரும்வெகுண்டுசீறிக்
குன்றொடுகுன்றந்தாக்கிக்கொடுஞ்சமம்புரிவதேபோல்
வன்றிறல்மையவர்கூற்றமற்றொழிற்கல்விகாட்டி
வென்றிவேலரசர்செங்கைவிதிர்ப்பவெம்பூசல்செய்தார். ()

பொருந்துசாணூரனென்னும்பொருப்பினைத்துவாரிக்
குருந்தின்மேலிவர்ந்தகொண்டலாருயிர்குடித்தானாகத்
திருந்தலர்க்குருமேறன்னமுட்டிகன்றன்னைச்சீறி
யருந்திறலோடும்வெம்போரலாயுதன்கொன்றுவீழ்த்தான். ()

கல்லெனத்திரண்டதிண்டோட்கவுசிகன்றன்னைமற்றைக்
கொல்லியவந்தகூற்றமன்னவெங்கூடன்றன்னை
மல்லினுற்கண்ணன்கொல்லமல்லமர்க்கிணையின்றென்னச்
சொல்லியசலனைவெள்ளைமேனியன்றொலைத்திட்டானே(உ௲௪)

ஆங்கவையினிதுநோக்குமுக்கிரசேனனாதி
வாங்குவில்விழுங்குதிண்டோண்மன்னவரொவரும்பைம்பொற்
பூங்கழற்குமரர்தம்மைப்புகழ்தலுங்கஞ்சனென்னுந்
தீங்குறுமனத்தன்வெம்பிக்கண்ணிணைசேப்பச்சொல்வான். ()

நந்தனைவல்லிபெய்தச்சிறுவர்மேனண்புகூர்ந்த
தந்தையைச்சிறையினுய்த்ததேவகிதலைவனாவி
யுய்ந்திடாதொறுக்கமற்றையரசர்வாழ்வொழிக்கவிந்த
மைந்துடைச்சிறுவர்தம்மைவாளின்வாயிடுகவென்றான்(உ௲௬)

என்றவனுரைத்தலோடுமெரியெழவிழித்துநோக்கி
மன்றலந்துளவத்தண்டார்துயல்வரும்வயிரத்தோளான்
பொன்றவழ்குடுமிநெற்றிப்போதுதாழ்மஞ்சமீதிற்
குன்றின்மேலிவருஞ்சிங்கக்குருளையிற்குப்புற்றானே. (உ௲௭)

கோட்புலியுரிவைபோர்த்தகேட்கமேந்திக்கோட்பின்
வாட்படைதடறுநீக்கிவாய்மடித்தெயிறுதின்று
சேட்டிளம்பருதிநேமிச்சிறுவபோர்க்கஞ்சலென்னத்
தாட்டுணைபெயர்த்துவிண்ணிற்சாரிகைதிரியலுற்றான். (உ௲௮)

உறைகழித்தெரியும்வெவ்வாள்விலக்கிவன்கிடுகினுள்புக்
கெறும்வலிக்கலுழன்புற்றினிடைச்சிறையொடுக்கியெய்திக்
கறையணற்பாந்தடன்னைக்கௌவியதென்னப்பற்றி
யுறைகழலவனிவேந்தைநிலத்தில்வீழ்த்தாவியுண்டான்(உ௲௯)

விண்ணுறையமரரோடும்வேதமுமின்னுங்காணக்
கண்ணனைக்கண்ணிற்கண்டுங்கையினாற்றீண்டப்பெற்று
றுண்ணிறைவொடுங்கவாவியுலத்தலாற்கஞ்சனென்போ
னண்ணறனுருவமாகியமருலசெய்தினனே. (உ௪0)

நம்பமால்யானையன்னவொன்னலர்ச்செருத்தகஞ்சன்
றம்பியரொண்மர்சீறித்தாளைவாள்விதிர்த்துச்செல்ல
நம்பியைவிலக்கிவெள்ளைமேனியோனகைத்துச்சீறி
வெம்புவெங்கோட்டாலன்னோராருயிர்விட்டினனே. (உ௪௧)

பூமழைபொழிந்தார்வானோர்புரந்தரன்கமலப்புத்தேள்
தாமரைக்கண்ணன்செய்யதாள்பணிந்தேத்தலுற்றார்
காமர்வண்டறையுந்தண்டார்க்கஞ்சனுக்கண்ணமெய்தி
யீமகற்கருமம்யாவுநன்கினிவியற்றினனே. (உ௪உ)

தந்தையைத்தாயினோடுந்தளைபடுசிறையினீக்கிப்
பைந்துழாய்மார்பன்வெள்ளைமேனியோன்பணிந்துபோற்ற
மைந்தனைத்தழுவியுச்சிமோந்துகண்மழைநீராட்டி
யந்தமிலுவகையோடுமகங்களிப்புற்றானன்றே. (உ௪௩)

அலங்கல்வேற்கஞ்சன்றன்னையினிதினிலளித்தவெற்றி
யுலம்பொருதுயர்ந்ததிண்டோளுக்கிரசேனன்றன்னைப்
புலம்புறுகாவனீக்கியாதவர்பணிந்துபோற்ற
வலங்கெழுதிகிரிமாயோன்மணிமுடிசூட்டினனே. (உ௪௪)

எதுகுலக்கிறைவனாகவுக்கிரசேனனென்னு
மதுகைவேலரசற்கம்பொன்மணிமுடிபுனைந்தபின்னர்ச்
சிதைவறுகளிகொள்கேள்விந்திறல்வசுதேவன்றன்னை
விதிமுறையமைச்சனாகவிழுமிதினிருத்தினனே. (உ௪௫)

கண்ணனவதரித்தவத்தியாயமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—௧௭௭௭.

முப்பதாவது

## கண்ணன்மணம்புணர்ந்தவத்தியாயம்.

இன்னணம்புரிந்தபின்னரொய்தியங்கிராமனுங்
கன்னல்வில்லொளித்துநின்றகாமனன்னகாளையும்
பொன்னுமுத்துமணியுமோர்பொருப்பினல்கிமகிழ்வுற
மன்னுநந்தகோனையன்பின்வந்துபுல்லி[illegible]ோர். (௧)

[illegible]ரற்குமளகைமேவுமிறைவனுக்[illegible]ய்தொனு
வந்தமற்றநன்சிறப்புவப்பினோடுமருள்[illegible]சயா
நந்தகோனையாயர்பாடிநண்ணுகென்னவிடையளித்
துந்துதெண்டிரைப்புறத்துறங்குமண்ணனுறையுநாள்.

ஐயனுக்கும்வெள்ளைமேனியண்ணலுக்குமரசர்கோன்
மெய்யுணர்ந்தகாகநாமமுனிவனால்விருப்பொடு
மையிலொன்பதிறைதிரித்தமும்மைநால்வனோந்துபின்
செய்யநின்றகருமனைத்துசெய்துமுற்றினரோ. (௩)

மாசிலாதவெள்ளைமேனிவள்ளலோடுகண்ணனுங்
காசிமாநகர்க்கணிற்கலந்துசாந்திபனியெனு
மாசிலாதமுனிவனோடுமாறுபத்துநான்கெனு
மேசில்விஞ்சையாறுபத்துநான்குநாளிலெய்தினர். (௪)

மதலைமைந்தரளவில்செம்பொன்மாமுனிக்களித்தனு
முதலைவெளவவாரியின்கண்முன்னிறந்துபோனவென்
புதல்வனுய்ந்துவரவளிப்பினதுகொல்கோடிபொன்னென
விதலையுற்றுரைப்பமைந்தர்விரைவின்வாரியெய்தினர். (௫)

இடங்கர்வெளவுகுருவின்மைந்தனெய்தநீயளிக்கென
மடங்கலன்னகண்ணனெய்திவருணனோடுஞ்சுதலுந்
தொடர்ந்துபஞ்சசன்னியன்கொணர்ந்தனன்றுலைக்கென
வடைந்துவாரியெய்தும்வெய்யவவுணனெஞ்சுகிண்டனன். (௬)

அங்கவன்றனுடல்பிளந்தணைந்துநெஞ்சின்வைகிய
சங்கெடுத்துமறலியூர்தனிற்புகுந்துதாமரைச்
செங்கண்மாயனூதவஞ்சிமறலிகொண்டசிறுவனை
மங்குல்போலுநீலமேனிவள்ளல்கையினல்கினன். (௭)

மைந்தனைக்கொணர்ந்துவள்ளல்குருவினுக்குநல்குறு
வந்தமற்றநிதியினோடருஞ்சிறப்பளித்தபின்
கொந்துமொய்த்ததண்டலைக்குழாமுடுத்தமதுரையி
னந்தகோபனுயிரையொத்தநாதனன்பினெய்தினன். (அ)

வேறு.

அந்நகர்தன்னிலடைந்திடுமண்ணல்
தன்னமர்தாயொடுதந்தையையேத்தி
மன்னியவுத்தமன்வாண்முகநோக்கி
நன்னயமோடிவையன்பினவின்றான். (௯)

அன்னையசோதையைநந்தனையன்பின்
மன்னியகோவியமங்கையர்தம்மை
பின்னலுறாவகைதேற்றியிமைப்பிற்
றுன்னிதிரென்றுரைசொல்லிவிடுத்தான். (௧0)

நந்தனிருக்கையினுத்தவனண்ணிச்
சிந்தையுறேனுயர்தேவகிமைந்தன்
வந்திடுமென்னவகுத்துரைகூற
வந்தமில்பேரொழிலாச்சியர்சொல்வார். (௧௧)

மாடமுடுத்தொளிர்மாமதுரைக்கண்
ணோடரிமைக்கணுருப்பசியன்னா
ராடல்நயந்தவனுச்சியர்கொங்கை
தேடுவனோவெனநின்றுதிகைத்தார். (க

இத்தகையானவிகூறியிரங்கு
மைத்தவழோதியர்மம்மரொழித்திட்
டுத்தவன்வாழ்மதுரைப்பதியுற்றே
வித்தகனோடயல்மேவியுறைந்தான். (க

உலகமளந்தவனுத்தவனோடு
விலவிதழ்வெம்முலையேந்தெழிலுண்கட்
கலையிறவோங்கியகைவளரல்கு
லலனுறுகூனிதனில்லினடைந்தான். (க

அகன்மனையெய்தியவ்வையனணங்கின்
முகிழிளவெம்மு...ர்பிடைமூழ்கத்
துகிர்படுமெல்...ய்த்தகில்வாசப்
புகைதவழ்மெல்லணைமீதுபுணர்ந்தான். (க

வேறு.

என்னைநாளுமின்னணை, மன்னிவாழ்வுசெய்கென
வன்னநேர்ந்திட்டையனு, நன்னர்மாடநண்ணினான். (க

ஓர்குழைபொருந்தனுங், கார்நிறத்தகண்ணனு
மார்வவக்குரூரனோ, டூரமுற்றியம்புவார். (க

தருமனோடுதம்பியர்க், குரிமையெய்தவோதெனாத்
திருதராட்டிரன்னுழைப, பொருவிலாதுபோக்கினார். (க

பொருவிலத்தினாபுரம், விரைவின்மேவிவென்றிசால்
திருதராட்டிரன்றனக், குரைசெயாவுமோதினான். (க

அறத்தின்மைந்தனாதியோர், திறத்தினன்புசெய்கென
வுறுத்திநாற்றுவர்க்குளக், குறிப்பினோடுகூறினான். (உ

அண்ணலக்குரூரன்மீண், டுண்ணிறைந்தவவ்வகையா
லெண்ணிமுற்றுமிவையெலாங், கண்ணனோடுகழறினான். (உ

வேறு.

இன்னவாறெழுகுநாளிடைக்கஞ்சனதில்லின்வாழ்
மின்னினாரிருவர்தந்தைதனிலவையின்மேவுறா
வன்னைசேவடியின்வீழ்ந்துயர்கஞ்சனையாழியான்
மன்னுமாருயிர்குறைத்தவையாவும்வழங்கினார். (உஉ

அழுதுநின்றிவையுரைத்தவணங்கனையார்தமைந்

றெழுதுளைத்தலும்வெகுண்டிருகண்ணழறாண்டிட
வெழுகதம்படையெனப்புனைதேர்மிசையேறினன். (௨௩)

வென்றிகூர்தருசராசந்தனுமடல்வேலினு
னொன்றுசேனையிருபானொடுமூன்றக்குரோணிபு
மன்றன்மாடமதுராபுரியிஞ்சிவளைத்தலுங்
கன்றுநெஞ்சமொடியாதவர்சிந்தைகலங்கினர். (௨௪)

கலங்கனீவிரெனவண்டுளவோனெதிர்கைகவித்
தலங்கல்வேலுடையலாயுதனோடெழுகாலையிற்
பொலங்கொள்வானினிடைநின்றிருதேரெதிர்போதலு
மிலங்குதமைம்படையோடெய்தியதேர்மிசையேறினன். (௨௫)

ஏறினர்களிருபானொடுமூன்றக்குரோணியு
நூறினர்குருதியாறெழயாவுநுணுக்கினர்
சீறினரெதிர்சராசந்தன்றனெளினைசிக்கயார்
தாறினருடன்விடுத்தகன்மாநகரெய்தினர் (௨௬)

இன்னவாறுபதினேழ்முறையாடமரோற்றலு
மன்னுபோர்வயவர்தேர்ப்பரியானைமறித்திடத்
துன்னுவெங்குருதிவெண்ணிணமூளைசொரிந்திடக்
கன்னியந்துளவமாலிருகட்கடைசேந்தவே. (௨௭)

வேறு.

வென்வேற்காளைசராசந்தன்வினைவினோடிக்கிரிவிரசந்
தன்னிற்புகுதமிகத்துரந்துதண்டாமரையாள்புணர்மார்பன்
கன்னிக்கமுகுசூன்மிடற்றிற்கயவாய்வாளைக்கன்றுகளுஞ்
செந்நெற்கழனிசூழ்கிடந்தமதுராநகரிற்சென்றடைந்தான். ()

கூந்தற்கமுகினிடைசாய்ந்த கொம்மைக்குடக்காய் முடத்தெங்கிற், பாய்ந்துகடுவன்மந்தியொடுதுயில்கூர்மதுராப்பதியதனி, லேந்தலின்புற்றிருக்குநாளிசைதேர்மகதியாழ்முனிவன், போந்துகாலவயவனெனும் புலிப்போத்தனையா னொடும்புகல்வான். (௨௯)

தேன்றோய்பவளச்செங்கனிவாய்த்தொறுவர்மகளிர்நலந்திளைத்த, வூன்றோய்திகிரிப்படைக்கண்ணனுடற்றும்வெம்போர்ச்சராசந்தன், மான்றேர்ப்படையாலழிந்தனனீ மலையினாற்றனெனமகிழ்ந்து, மூன்றுகோடிபடையொடும்போய்மதுராநகரமுற்றினன். (௩௦)

கன்னிப்புரிசைமதுராநகர்வளைந்தகாலவயவனொடுங், துன்னிச்சமரோற்றிடவெய்தித் துலங்குவடிவேற்சராசந்த, னின்னேயெய்தியெதுகுலத்துக்கிறைவர்தம்மைக்கைப்படுத்து, கொன்னேயீசற்குறுபலியாய்க் கொடுப்பனெனமாலிவைசெய்தான்.

முகிலிற்கரியமணிவண்ணன்புயனுல்முழங்குகடலகட்டி
னகலமீராறியோசனைத்தாய்நிகழ்த்துநீளமத்துணைத்தாய்ப்
பகலோன்காப்பவெயிலெழுக்கும்பைம்பொன்மாடமறுகுடுத்த
நகரமொன்றுதுவளாயெனும்பெயரான்கின்மைப்பித்தான். (

சிந்தாமணியுமிருநிதியுஞ்சிறந்தசுதன்மைமண்டபமுங்
கொந்தார்சினையவைமுருவுந்துவளைநகரிற்குடியிருப்பத்
தந்தான்குலிசன்மாமுயினுல்மாயன்மதுரைதனிலமரு
மந்தாரரசருணராறுவளையதனிலமர்வித்தான். (௩௩

இமையாக்கருங்சண்மயிலாலவண்டுஞ்சுரும்புமிசைபாடக்
குமரியன்னமூளைவிழ்ந்தகொழுந்தாமரையின்ரசிருக்குந்
தமரத்திரைக்குட்டகமுமித்தமதுரைகாக்கத்தாமரைக்க
ணமலன்வெளிராமேனியனைவைத்தாங்கமரோற்றெழுந்தனுல்

காலவயவனுடற்றுசுமர்க்காற்றுன்போலக்கருந்துளவ
மாலோன்மரன்றோடிந்தோடிமலையின்முழையிற்கண்டுயிலு
ஞாலம்புகழுமுசுகுந்தன்பின்போயொளிப்பநனிதுடர்ந்து
சாலுமுழையினிடைபுகுந்துதுயிலுமரசன்றனையுதைத்தான். (

ஆலக்கருஞ்சேறமுதினுகரண்ணல்விழிப்பவுடலழிந்த
கோலச்சுறவக்கொடியுயர்த்தகுரிசில்போலவவுணருயிர்
வேலிற்படுத்தமுசுகுந்தன்விழித்துச்சிறிதுநோக்குதலுங்
காலவயவனுடல்முழுதுங்கனன்றுசாம்பராயினுல். (௩சு

பூந்தாதருந்திப்பெடையினுெடும்பொறிவண்டுறங்கும்புனைமல
மருந்தாதாவின்மகனெனன்பேர்வாவுமான்றோர்முசுகுந்த [த்தா
னேந்தாலுந்தனருள்பெறுவானெண்ணியோகத்துறங்கினேன்
சார்ந்தாயென்றன்புன்கணைதிர்தளராமுத்திதருகென்றுன். (

தெவ்வூன்சுவைத்துநிணம்பருகிக்குருதிதேக்கித்தசைகுதட்டி
வெவ்வாய்சிவந்தவடிவேலோய்மறுமையதனில்வேறெருவ
ரொவ்வர்மறையோர்குலத்தினில்வந்துதித்துவேதமொருநா
மெவ்வானவருந்தொழுதேத்துமீசன்பாதம்பெறுதியால். [

என்றுவயவான்முசுகுந்தற்கினியவரமொன்றீய்ந்தருளி
குன்றமெடுத்துமழைதடுத்தநிரைகாத்தருளுங்கோவிந்தன் [
பொன்றூழ்புரிசைவிளிம்புடுத்த மதுரைநகரிற்புகுந்துமுன்
றன்றுள்வணங்கியவனேடுந்துவளைநகரஞ்சார்போழ்தின்(௩

உருமுக்கதிர்வேற்சராசந்தனுலப்பில்கடலந்தானையொடுஞ்
செருவெற்றரிணிடைவளைப்பச்செங்கட்கரியோனிராமனெடு
வெரிவரிகோரிற்பிரவருணகிரியினெளிப்பவெகுண்டேகி
யரில்சூழ்வெற்புச்சூழ்போதவழலுந்தெறுதீயூட்டினன். (ச

வழங்கற்கரியயோசனையோர்பதின்றைன்றுயர்ந்தவரைநின்றுங்
குழங்கன்மாலைசுவற்புரளப்புவிப்போத்தென்னக்குப்புற்றுத்
தழங்குமுரசங்கண்டுயிலாத்தகைவிற்றிருக்குந்துவாரகையிற்
செழுந்தாமரைக்கட்டிருநெடுமாறம்முனோடுஞ்சென்றடைந்தான்

செந்தாமரைக்கட்டிருநெடுமாறம்முனோடுஞ்செழுந்தழலின்
வெந்தானென்னச்சராசந்தன்மேதியுழக்கிப்பூந்தடத்திற்
பைந்தாட்குவளைமலர்மேய்ந்துப்பலவின்னிழற்கண்டுயிலுங்
கொந்தார்பொழில்சூழ்கிரிவிரசமென்னுநகரிற்குறுகினான். ()

கரைகொன்றிரங்குநதிமருங்கிற்கமுத்துமிளைந்தசூற்கமுகம்
விரைகொப்புளிக்குநறும்பாளைவிரிக்குமுயர்ந்தனத்தமெல
வுரைசெய்நாடுதனிபுரக்குமொளிர்வேற்செங்கோபிரோவதனை
மரசன்மகளைவிதிமுறையால்வெள்ளைமேனியனுங்களித்தான். ()

வயலிலலவன்கிளைத்தகுழிதேமாந்துணரின்வாய்மடுத்துக், குயி
லுஞ்சுரும்புங் குடைந்துதிர்க்குங் குளிர்பூந்தாதுகிடர்படுத்து
ஞ், செயிர்தீர்விதர்ப்பநாடளிக்குந்தீதில்கீர்த்திவிட்டுமக, னயி
ல்சேர்நெடுங்கட்டன்மகளைக் கண்ணற்களிப்பானமைவுற்றான்.()

தந்தையொடுமுருக்குமணிதட்டிறுகழ்ந்தவயில்வேற்கட்
செந்தாட்பசியகிள்ளைமொழியுருக்குமணியைச்சிசுபால
னந்தாரகலம்புணர்ந்திடயாமளிப்பதல்லாலாயனுக்கின் [டாள்.
றெந்தாய்கொடுத்தறகாதென்ன மறுத்தலிளம்பூங் கொடிகேட்

தமையனுரைத்தவாறனைத்துஞ் சாற்றித்தண்பூங்காவகத்தி, னி
மயமீன்றபூங்கொடிதன் னிருதாள்வழுத்தறலைக்கிடா, யமைவ
லாங்குற்றெனைக்கவரானென்னிலழல்வாய்ப்புகுவனெனக்,கமழ்
பூங்குழலோர்மறையோனைக்கண்ணற்றூதியெனவிடுத்தாள்

சுடுபொற்றகடுதூக்கியெனத்துணர்த்தகைதைக்காடுடுத்த,
கடல்சூழ்துவாரபுரியெய்திக்கண்ணற்குரைப்பமகிழ்சிறந்து, மி
டல்சேர்வென்றிப்பனைக்கொடியோனோடும்விரைமான்றேர்கட
விக், கொடிவான்றொடுகுண்டினபுரத்துக்குளிர்பூஞ்சோலைமரு
ங்கணைந்தான். (௪௭)

தரியாரோற்றுஞ்சராசந்தன்றகைதேர்தந்தவக்கிரன்றீப், பொருந்
வேல்வென்றிச்சாலுவனேமுதலவரசர்பொங்குளைய, விரைசெ
ல்மான்றேர்ச்சிசுபாலன்றனக்குவிழைவின்மணமுடிப்பான், பரி
வினொடுங்குண்டினபுரத்திற்சேனையோடும்படர்ந்திருந்தார். ()

அன்னகாலைத்தூதுசென்றமறையோனுலகமுழுதளந்தோன்
மன்னுமதுகோனகர்சூழந்தண்சோலைமருங்கிறுத்தா
னென்னமகிழ்ந்துகூறுதலுமிலவத்துவர்வாயுருக்குமணி
மின்றுநாவேற்றந்தையொடுமன்னையோடும்விளம்பியாள். ()

எண்டோண்முக்கட்கவுரிபதமிறைஞ்சநமதுநகருடுத்த,வி ண்டோய்பொழிலின்மேவுதற்கு விடைநீரளித்திரொனலோடுந், தண்டார்வேந்தன்மனைவியொடுந்தழீஇக்கொண்டருள்க்கருந்த டங்கண், வண்டார்கோதையாய்வெள்ளம்பரவச்சோலைமருங்க ணைந்தாள். . (௫0)

கண்டோருள்ளங்கொடுமெணங்கொண் டெழுந்துவீங்குங்க திர்முலைப்பூந், தண்டாமரையாள்கண்ணனிருதடந்தோள்புணர வளித்தியெனப், பண்டோய்குதலைமொழியதனைப்பழிச்சிக்கவுரி ப்பதம்போற்றி,வண்டார்சோலைமாதவிப்பூம்பந்தர்மருங்குதனி னின்றாள். (௫க)

தண்ணங்கமலத்திருக்குவளை மலர்ந்துகுமுத மலர்தாங்கி, விண்ணங்குடிவாங்கிடவீங்கும் விரைமென்கோங்கமலர்முகிழ்த் து, வண்ணமலர்ப்பூம்பசுங்கொம்பர் வண்டார்சோலைமருங்கணை தல், கண்ணனுள்ளமுவகையொடு மிறும்பூதெய்தக்கண்ணுற்று ன். (௫உ)

பொன்னங்குடுமிநெடுவரையோ பொறிவண்டிமிராத்தாம ரையோ, பின்னற்றிரைதாழ்பாற்கடலோ வங்கண்விசும்போபே ருலகோ,மின்னுக்கதிர்மாமணிச்சுடிகைநாகருறையும்வியன்பதி யோ, தன்னந்தனியீங்கெனையாள நின்றாருறையுந்தனியிடமே.

பொன்செய்புலவர்கைசெய்துபுனிற்றுக்கதிரின்வெயிலோ ட்டி, மின்செய்பசும்பொற்கலன்சுமந்து நாணுநுதலின்வெயர்வு றைப்பக், கொன்செய்வேற்கண்ணிமைப்பநிழற் றேன்றவீங்கு க்குறுகியதாற்,றென்செய்வரிவண்டுழல்கோதைபூமாதென்னத் தெளிவுற்றான். (௫ச)

வண்டுஞ்சுரும்புநறுந்தேனும்ஞிமிரும்வழங்குகருங்கூந்தற் பண்டோய்குதலைச்செங்கனிவாய்ப்பரவைதடங்கணருணைக்கந் தண்டாதோங்குங்காமனைத்தீர்க்குமருந்தாய்த்தளராமால் கொண்டேனுவிவேனில்வேள் கொள்ளாதெளிதினிறுத்தியதே.

ஆற்றலுடைவெங்கொடுங்கூற்று மலைவாய்விட்டுமுங்கொலை கற்ப, மாற்றும்புகல்வபோலிமையாவுயிர்மேனடக்குவரிநெடுங் கட், கோற்றேன்குதலைப்பேதையொடுந்தமியேனுள்ளக்குறைய னைத்துஞ், சாற்றிப்பொன்னஞ்சுணங்கணிந்ததடமாமுலைமேற் றழுவுதுமே. (௫௬)

கிள்ளையேந்திக்கிளைநரம்பினடைந்துசிவந்தகாந்தளங்கைத் தெள்ளாரமுதேமலர்த்திருவேதேனேகனிந்தசெழுங்கனியே கள்ளக்கருங்கட்குடங்கையாற்றமியேனுயிரைக்கள்ளுநர்போ லள்ளியள்ளியருந்துதீங்காகாதுன்பேரறிவினுக்கே. (௫எ)

முலையிற்றிரண்டவரிபரந்துமுகிழ்மென்காந்தட்கரத்தடித்து
மிலகுமணிப்பொற்கழங்கெறிந்துமெரிநீர்த்தண்ணங்கயங்குடை
திலகநுதலார்குழுவினொடுமாடாதம்பொற்றிருவனையாய் [ந்தும்
கலைவல்லுநர்திட்டோவியம்போனின்றவாறென்கழறுகவே. ()

வளியூடியங்காதறநெருங்கிவருவெம்முலையிற்செம்மாப்பு
மளியமருங்கின்வறுமையுநீரந்தோகண்டீரிலைபோலுந்
தளவமூரற்கருங்குழன்மேற்றணவாதிருந்தீர்மணிவண்டீர்
களிகொணறவம்வாய்மடுத்தமயக்கங்கொல்லோகழறுகவே. ()

பண்ணார்குதலையந்தீஞ்சொற்படைவேலுண்கட்படர்முலை
யாய், தண்ணார்பசியபொலம்பொருட்டுத்தடந்தாமரைநின்முக
ம்போல்வான், கண்ணீர்வாரவொருதாளினின்றுகதிரோன்றனை
நோக்கித், தெண்ணீர்க்கயத்துணூடோறுமுயலாநிற்குஞ்செய்த
வமே. (கூ0)

விழைந்தோர்கொம்மைமுலையல்லால் வேற்றோர்மருந்தினமை
கழிந்தகாமப்பிணியகலக்கனிவாய்த்தம்பன்மருந்தருந்திப் [யாத
பிழிந்ததேறலனையமொழிப்பேதைதடந்தோணலனுகர்வா
னெழுந்தவுள்ளமிவ்விடமேசேர்தற்கியைந்தவிடமென்றான். ()

துளிகொணறவங்கொப்புளித்துப் பொன்னைந்தாதுதுதைந்தாடு
மளியினொடுமலர்முகத்தவலகில்சினையமாதவியே
களிகொணந்தண்சோலையினீபுகலென்றடைந்தேன்மிகநடுங்கு
மெளியனுவிதுயராமற்காற்றனினக்கேயியல்பென்றான். (கூஉ)

உருவமருங்கிலுள்வாங்கத்தேய்த்துக்கரிகளெட்டினொடுஞ்,
செருவேற்றெழுந்த திரண்முலையை மறையாதணங்கென்றைய
முறு, மருள்போயொளிப்பவிமைத்தனங்கன் வாளியாயின்வரு
ந்தாம, லருணோக்களித்தமதர்நெடுங்கண்புதைத்தலென்மேலன்
பேயோ. (கூங)

கன்னிப்பெடைவண்டினஞ்சூழ்ந்து களிக்குஞ்சுரும்பர்தா
தாடும், புன்னைப்பொதும்பர்நெடிதுயர்த்துப்புலம்புற்றிருக்கும
டநெஞ்சே, மின்னுக்கொடியினொசிமருங்குல்வெள்வேனெடுங்
கண்வேய்த்தடந்தோ, ளன்னப்பெடையின்செங்கனிவா யமுத
மென்னாடருமென்றான். (கூச)

கனைவெண்டிரைக்கைபலநீட்டியுலகமனைத்துங்கவர்ந்தோடித்
துனைவிற்பெயருங்கடலினையோர்துகளான்மறிப்பப்புந்தியிடை
நினைதல்போலுமீங்கிவர்தங்காமக்கடலைநிறையினொடும்
புனைபுநாணல்யான்றடுப்பநினைதலென்னப்புலம்புற்றாள். (கூரு)

கொண்டவிரகத்தடங்கடற்கோர்புணையாய்க்குழையுமுளந்தேற
வீண்டமலரினறவிறைக்கவீழ்ந்துமெழுந்துஞ்சூழ்போந்தும்

வண்டுண்கோதைமதிமுகத்தின்மலர்ந்தகுமுதநாணுரு
முண்டநிலவுக்கதிர்தெவிட்டியுமிழ்ந்தாலென்னநகைபுரிந்தாள்.

வருந்துந்துன்பவிருளகற்றிவயங்குமமரர்கடைந்துமுன
மருந்துமமிழ்திற்கையறவுற்றழியுமாவிதளிர்ப்பிக்குஞ்
செருந்திகமழும்பூங்கோதைத்தெய்வக்கமலமுகத்தரும்பி [யே.
முருந்தும்வெள்ளைநிலாக்கொழுந்துமுத்தும்பொருவுமுகிழ்நகை

ஊன்றோய்த்தெடுத்துநிணம்பருகியொளிறுவடிவேற்றடங்
கண்ணாள், தேன்றோய்த்தெடுத்தசெங்கனிவாய்த்தேறலெளிதிற்
பெற்றமையால், மான்றேரிரவிகெடவிமைக்குஞ்சிந்தாமணியும்
வளர்நிதியுங், கான்றோய்தருவுமிந்நிலத்தின் முயன்றாற்கடிதிற்
பெறலாமே. (௬௯)

பெற்றமுயர்க்குழூற்றலைவேற் பெம்மான்சடைக்காட் டிடைப்ப
யின்று, நெற்றித்தனிக்கட்டழலருகுநின்றுதவநீபுரிந்தாலுங், க
ழைறைக்கதிர்கான்றொளிர்புனிற்றுத்திங்காள்கமலமலர்முகத்துக்,
கொற்றவடிவேற்றடங்கண்ணாளுதல்போன்றிருத்தல்கூடாதே.

ஐதேய்ந்தல்குற்கலைதிருத்தியம்மென்முலைதாழ்வடஞ்சேர்
த்தி, மைதாழ்கூந்தல்கமழமுடித்தயில்வேலுண்கண்மையெழு
தி, வெய்தாமுன்போர்க்கைசெய்தேனையும்முள்ளமெலிவுறேல்,
பைதாழல்குல்வேய்மென்றோட பவளத்துவர்வாய்ப் பசுங்கொ
டியே. (௭0)

களவுங்கொலையும்பயின்றவிழிகனியிலமிழ்திற்கோற்றேனி
லளவுந்தீஞ்சொற்படர்முலையாளழகுபூத்தமுகம்போலக்
குளனினதியிற்றடஞ்சுனையிற்கண்டதுண்டோகுளிர்வண்டர்
தளவம்பொதிந்தகுமுதமொடுங்கழுநீரலர்ந்ததாமரையே. (௭௧)

பரிவுற்றுணைப்பநுதல்பசலைபூத்ததென்கொல்பணிமொழியாய்
பிரியேனின்னைப்பிரியிலுயிருய்யேனென்னுப்பெய்வளையைப்
புரவித்தடந்தேர்மிசையேற்றிக்கண்ணன்போரேற்றிடுமரசர் [ன்
வெருவவரிவெஞ்சிலைகுழைத்துத் தம்முனோடும்விரைந்தகன்

குறுகார்சேனைமுற்றுகருடமியெயிற்குண்டினபுரத்து
மறுகினெதிர்ந்தசராசந்தன்முதலவரசர்வலிதொலைத்துக்
கறைவெண்மதியமுழுதுரிஞ்சும்புரிசைவாயில்கழிந்திடலு [ன்.
மறைபொற்கழற்காலுருக்குமனோக்குரோணியொடும்வளைந்தா

செருவேற்றெழுந்தபடையனைத்துந் திருகுசினத்த வலாயுதன்
யுருமென்றன்னபகழிகளாறாழிலாட்டவுலைந்த [போ
கரியோன்பற்றியுருக்குமனைக்கல்செய்தடந்தோளிணைவீக்கி
மருவூற்றிருக்குமலர்ப்பைந்தார்ப்பங்கிவாளாலரிந்தெறிந்தான்.

வெள்ளைமேனியலாயுதனும்விரைத்தேன்றுவலையளிபுனிற்றுப்
பிள்ளைக்கருத்திப்பின்னுகரும்பினையன்மாலைக்கருங்குழலுந்
தொள்ளையறிவினுருக்குமன்றன்னுவிதுலையேலெனவுரைப்ப
வள்ளல்விடுத்துத்தம்முனொடுந் துவரைநகரின்வந்தடைந்தான்.

மாசுபூத்தவன்னெஞ்சின்மறங்கூர்வெற்றியுருக்குமனுந்
தேசுபூத்ததிருநெடுமாறன்னையமரிற்செகுத்தல்லா
லாசின்மதிற்குண்டினபுரத்தினடையேனென்னநாணினொடும்
போசகடமென்றொருநகரம் புனைந்தாங்கதனில்வீற்றிருந்தான்.

தண்ணந்துளவோனிகரில்லாத்தருமன்முதலவைவர்க்கும்
வண்ணவரிவினூற்றுவரைமுதலாமறங்கொள்கவுரவர்க்கு [து
மெண்ணில்கிளைஞர்யாவர்க்கு முடங்கல்போக்க விரைந்தெழுந்
விண்ணுடனையதுவரைநகர்தன்னில்விரைவினெய்தினர். (எஎ)

நந்தகோபன்வசுதேவ னலங்கூரசோதைதேவகிதஞ், சிந்தைம
கிழவியங்கறங்கவல்லோர்தெரித்தநன்னாளிற்,சந்தமணிந்தபொ
ம்மன்முலை யுருக்குமணியைத்தழல்சான்றாய்ப், பைந்தார்துள
வோன்மணம்புரிந்துபசியவேய்த்தோணலநுகர்ந்தான். (எஅ)

வேறு.

உருவத்தடமுலையொண்டாமரையினள்
பருவக்கருமுகில்பணையென்றிரள்புய
மருவிப்பொருசிலைமதனைப்பரிவொடு
கருவுற்றிடவெழில்கனிவுற்றனளே. (எகூ)

வான்றோய்நிலவுமிழ்மழவெண்பிறையெனச்
சான்றோர்மகிழ்வுறுதனிநாளதனிடை
தேன்றோய்கனிநிகர்செவ்வாய்மடமயி
லீன்றாள்சிறுவனையின்புற்றிடவே. (அ0)

சம்பரனென்றுயர்தானவனோடு
நம்பிபிறந்தமைநாரதனோத
வெம்புறுமாயையின்வெண்டிரைசிந்து
மம்பரமூடுறவள்ளியெறிந்தான். (அக)

அள்ளியெறிந்திடவார்கலிவீழும்
பிள்ளையைவாயிடையெய்தகன்மீனை
வள்ளுறுதூண்டிலினோர்வலைவாண
னொள்ளிதின்வவ்வியுவந்திதுசெய்தான். (அஉ)

பவ்வநெடுந்திரையூடுபடுத்து
வவ்வியமீனினையவ்வலைவாண
னெவ்வமில்சம்பரனுக்கினிதீயக்
கொவ்வையிதழ்க்கொடியங்கைகொடுத்தான். (அங

மாயாதிப்பெயர்மங்கையம்மீன
மாய்கதிர்வாளினறுப்பவுகட்டின்
மேயவிளம்பிறைபோலவிளங்குஞ்
சேயையெடுத்தனள்சிந்தைகளித்தாள். (அ௪)

அச்செனநங்கையகங்குழைவெய்தி
யுச்சியின்மோந்தமுதூறலருத்திப்
பச்சிளமேனியபாலகனைக்கண்
ணெச்சிலகற்றியெடுத்துவளர்த்தாள். (அ௫)

விழைவொடுகண்கவர்மெய்யெழினம்பி
மழகதிரொன்னவளர்ந்திருகோலத்
தெழுதருநான்மறையாழ்முனியெய்திக
குழைபொருகண்ணியொடின்னவைகூறும். (அ௬)

திங்களணிந்திடுதேவன்விழிக்கே
யங்கமிழந்திடுகாமனினன்ப
னிங்கிவனாகுமெனத்தனியோதிப்
பொங்கியநற்றவமாமுனிபோனன். (அ௭)

போயிறுநுண்ணிடைமங்கைபுகுந்தே
சேயுறழ்மைந்தனைநின்றுதெருட்டி
வேயுறுதோணலமேவுதியென்னத்
தாயெனவின்னுரைசாற்றிமறுத்தான். (அ௮)

மறுத்தலும்வெண்பிறைமாலயின்முன்னை
மொறுத்தவைகேட்டுளயாவையுமோதிச்
செறித்தவில்வேளெனநெஞ்சுதெருட்டி
நறைக்குழலங்கவனன்னலமுண்டாள். (அ௯)

நம்பிகருப்புவில்நல்லிசைபாடுந்
தும்பிகொணாணின்வளைத்தெதிர்தோன்றி
யம்பெனமென்மலரைந்தும்விடுத்துச்
சம்பரனைவிதடிந்தனனன்றே. (௯0)

இரதியொடும்பிரத்துய்ம்மினனென்போன்
றிரிதருதென்றலந்தேர்மிசையேறிப்
பொருதிறமேற்றுயில்புண்ணியமூர்த்தி
மருவுதுவாரகைமன்னினனன்றே. (௯௧)

வேறு.

வண்டுவளைமாநகரிலிரதியொடும்வந்தடைந்த மைந்தன்றன்னைக், கண்டுருகியுருக்குமணிகதிர்முலைப்பால்வழிந்தொழுகக் கண்ணீர்வார, வண்டர்பிரான்முகநோக்கியார்கொலிவனெனப் போல்வானறைதியென்னப், பண்டரும்யாழ்முனியெய்திமுன் னிகழ்ந்தவாறனைத்தும்பகர்ந்திட்டானே. (௯௨)

மறைமுனிவனுரைகேட்டவுருக்குமணிமைந்தனைமார்போடும்புல்லிக்,கறைகெழுவேற்கண்ணனெடுங்கதிர்முடிமோந்திரதியைக்கண்களிப்பநோக்கி,புறையுநகர்க்கிளையோடுமாசனங்கள்புகழ்ந்தேற்றவுலப்பிலாத, வெறிதிரைநீர்க்கடல்போலவெழுந்துவகைபெருக்கெடுப்பவிருக்குநாளின். (௬௩)

தாரைவடிவேற்றடக்கைச்சத்திராசித்தனெனுந் தரணிவேந்தன், காரிருண்மேய்ந்தொளிவிரிக்குங்கதிரோனைப்பணிந்தேற்றியெட்டுப்பாரந், சீர்கெழுசெம்பொன்னீனுஞ்சிமந்தகமாமணிபெற்றுத்துவரைநண்ணிப், பார்மகள்கேள்வனுக்களிப்பமீண்டுமவன்றனக்கிறைவன்பாலித்தானே. (௬௪)

சேட்டிளஞ்செங்கதிரொன்ன விருள்பருகித்திசைவிளக்கிச்சிறக்குந்தெய்வ,மோட்டுயர்மாமணியதனைச்சத்திராசித்தனெனுமூரிவேலோன், றேட்டிளைபோல்வருதம்பி பிரசேனன்கழுத்தினிடைதுலங்கவிக்கி, வேட்டநினைந்தாங்கவனுங்கானிடையோர்கோளரிமேல்விரைந்துசென்றான். (௬௫)

கொய்யுளைவாம்புரவியொடும்பிரசேனன்பச்சிரத்தங்குடித்துவிழ்ந்தி, வெய்யபகுவாய்மடங்கல்சிமந்தகமாமணிகவர்ந்துவிரவினேக, மொய்கெழுதோட்டிறற்சாம்பன் முடங்குளைவாளரியாவிமுடியச்சீறிக், கையிணையாலுடல்பிளந்துகதிர்மணிகொண்டுறுபிலத்திற்கடிதுசென்றே. (௬௬)

வேல்கிடந்துகுழைபுரட்டும்வெண்மதிபோன்றொளிர்முகத்துவிரைமென்கூந்தற், பால்கடந்துதேனினொடுந்தோழமைக்கொண்டிருந்தமொழிப்பசியவேய்த்தோட், கோலமுலைச்சாம்பவதியினிதமருந்தோட்டிறனிற்குலவுஞ்செங்கேழ், காலுமெழில்மணியதனைக்கதிரோனென்றையமுறக்கட்டினானே. (௬௭)

ஈங்கிதனையுணராமற்சத்திராசித்துமுதலெவருமாயோன், றீங்குறவெம்பிரசேனனுயிர்செகுத்துச்சிமந்தகத்தைக்கவர்ந்தானென்னுந், தாங்கரும்வெம்மொழிகேட்டுச்சத்திராசித்துமுதற்கிளைஞரோடும், பூங்கமலமலர்க்கண்ணன்பிரசேனன்போனவழிதுருவிப்போனான். (௬௮)

ஆங்கவன்றன்வாம்புரவிநடைநோக்கிச்செலவயருமதரின்பாங்கர், வீங்கியதோளரசனொடும்விரைசெல்வாம்பரியாவிவிளியநாடிப்,போங்கடுங்கண்வாளரியின்றடந்தோன்றவவைநோக்கிப்போருமெல்லைத், தாங்கரும்வெஞ்சினமடங்கறனைநாடிச்செலுங்கரடித்தடமுங்கண்டார். (௬௯)

கண்டமுதற்றடமொற்றியருநெறியின்விரைந்துசெலவயருங்காலை, விண்டபிலத்தூடுதடம்போகுதலும்விரைகொழித்துக

றவந்தூற்றுந், தண்டுளவோன்மறைத்தடக்கைச்சத்திராசித்து முதற்கிளைஞர்தம்மை, மண்டுமிருள்செறிபிலத்தின்வாயிலின் வைத்ததனூடுவல்லைசென்றான். (௧௦௦)

நண்ணரியபிலம்புகுந்திட்டாறிருநாள்காறுமண்ணனன்று றுக, வெண்ணரியதமர்யாருந்துவரைநகர்வந்தெய்தியெண்டோ ண்முக்கட், டண்ணிலவுக்கண்ணிபுனைகொற்றவைபொற்றாமரை த்தாள்தாழ்ந்துபோற்றிக், கண்ணனுறுபகைமுடித்துக்கடிதெய் தத்தமதுளத்திற்கருதிநோற்றார். (௧௦௧)

ஈங்கிவர்களிவ்வாறுநோற்புழிமால்பாதலத்தி னெல்லையெ ய்திக்,தூங்கியபொற்றேட்டிறனிற்றாக்குகதிர்மணிநோக்கித்து னைவிற்கையால், வாங்குதலும்வெகுண்டெய்திச்சாம்பவானெதி ரேற்றுமலையனைய, னுங்கவனோடோரிருபத்தெட்டுநாளமராற் றிவாகைகொண்டான். (௧௦௨)

வாகைபுனைந்திடுகண்ணன் முகநோக்கித்தாமரைக்கண் மா யோனென்ன,வோகையொடுமுளத்தெண்ணிவலஞ்செய்துபணி ந்தேத்தியுலவாவன்பிற், பாகனையமொழிச்சாம்பவதியென்னும் தன்மகளைப்பரிவுகூர்ந்து, நாகமிசைநடம்புரியு மண்ணலுக்கும ணியோடுநல்கினனே. (௧௦௩)

நல்கியபெண்மணியோடுநாகினவெங்கதிரொன்னக் கதிர்கணீ ட்டி, மல்கியபேரிருடுருவுமணியோடுமெய்தியவான்பிலத்துநீங் கி[illegible]யொல்குமிடைச்செந்துவர்வாயுருக்குமணியொடுங்கிளைஞரு வந்துபோற்ற, வல்கருஞ்சீர்த்துவாரகையினுய்பழிதூற்றிடுந்து ளவோனணைந்தானன்றே. (௧௦௪)

ஓசையுயர்திசையளக்குஞ்சத்திராசித்தனெனுமுரவுத்திண் டோ, டேசுறுமன்னவன்[illegible]த்திற்சிமந்தகமாமணிதன்னைத்திரு மானல்க, காசறுவேத்தவைதன்னுட்கவிழ்தலையிட்டரசனுள ங்கலுழ்ந்துநாணிப்,பேசரியபிழையுரைத்தேங்கண்ணனையாமெ னமிகவும்பேதுற்றானே. (௧௦௫)

பெரியோர்க்குப்பிழைசெய்தோர்பிழையுடன்பட்டுயிருய்த ல்பெரிதுமோரின், மருவிசுமலர்க்கூந்தல்மகட்கொடுத்தாலாகு மெனமனத்தினோர்ந்து, தரியாருன்பருகுவைவேற்சத்திராசித் தனெனுந்தரணிவேந்தன், கரியோன்றன்கரம்பற்றிவேறிருந்தன் பொழுகவிவைகழறலுற்றான். (௧௦௬)

வேறு.

முத்தகமுரிஞ்சுங்கொம்மைமுகிழ்முலைப்பவளச்செவ்வாய்க்
கத்திகைகருமென்கூந்தற்கணைபுறங்கொடுக்கும்வேற்கட்
சத்தியபாமைதன்னைத்தருவனீகோடியென்ன
வித்தகனுரைப்புக்கண்ணன்மறுத்தனன்விழைவினோர்ந்தான். ()

குனில்பொருமுரசம்விம்மக்குடவளையலறியார்ப்பக்
கனிதர்தேர்ந்துநாத்தநாளிற்கண்ணனுக்கழல்சான்றாகத்
தணிவருமழகுவாய்ந்தசத்தியபாமைதன்னை
மணியெழுவனையதோளானீரொடும்வழங்கினானே. (க0அ)

கடல்வயிறுளைந்துபெற்றகவுத்துவமணியிற்சேர்ந்த
படர்கதிர்க்கற்றைகாலுஞ்சிமந்தகமணியைப்பண்பா
லுடல்சினத்திகிரிமாயோற்குதவலுமண்ணல்மீட்டுந்
தடமுழித்தொளிரும்வைவேற்சத்திராசித்துக்கீய்ந்தான். ()

செய்த்திருள்கனிந்தகூந்தனேர்வழக்கறுக்குஞ்செவ்வாய்ச்
சத்தியபான்மையம்மென்றடமுலைஞெமுங்கப்புல்லி
நத்தமும்பகலும்விள்ளாநறைகமழ்துளவத்தண்டார்
வித்தகனுறையுநாளிற்புகுந்தமைவிளம்பலுற்றாம். (கக0)

வலம்புரித்தாமம்வேய்ந்தசுயோதனன்வஞ்சமெண்ணி
யலங்கல்வேலவர்மாழ்கவரக்கறையெரித்தல்கேளா
வலம்பொருதடந்தோட்கண்ணன்றம்முனோடுயர்தேரேறிச்
சலஞ்சலமலறியார்ப்பத்தருமன்மாட்டெய்தினானே. (ககக)

தருமன்மாட்டிராமனோடுந்தாமனாபொருவுமுண்கட்
டிருமறுமார்பனெய்திச்சிறப்புடன்வைகுநாளிற்
கிருதவன்மாவினோடுங்கிளர்ந்தசீரக்குரூரன்
வருசதத்தன்னுவாவைத்தழீஇனன்வழங்கலுற்றான். (கக[illegible])

பைத்தபாம்புறழுமல்குற்சத்தியபாமையென்னுங்
கொத்தலர்வேய்ந்தபைம்பொற்கோதையைநினக்குக்கூறி
மைத்தவழ்கரியமேனிமாயனுக்களித்தவெய்ய
சத்திராசித்தைக்கொன்றுதகுமணி[illegible]ர்கவென்றான். (கக௩)

என்றலுங்கங்குற்பானுடகர்ந்தவனிருக்கைதன்னிற்
சென்றுவேற்சத்திராசித்துறங்குழிச்சினவுவைவாள்
பொன்றவழ்தடறுநீக்கிப்புனைமுடிதடிந்துகோடி
மின்றவழ்மணியைவவ்விமீண்டுதன்னிருக்கைசேர்ந்தான். (கக௪)

கந்தடுபுழைக்கைநால்வாய்க்கடாக்களிறனையசீற்றத்
தந்தையைக்கொன்றமாற்றஞ்சத்தியபாமைகேளா
வெந்திரத்தயிலத்தோணியிட்டமுதிரங்கிமாழ்கி
யந்தில்வண்டுளவன்மேவுமத்தினபுரத்திற்சார்ந்தாள். (கக௫)

அத்தினபுரத்தினெய்தியாம்பலங்குழல்வாய்வைத்த
மைத்தவழ்கரியமேனிமரகதவண்ணன்பொற்றாள்
கைத்தலத்திறைஞ்சியேற்றிக்கண்ணிணைமாரிகால
முத்தகமுரிஞ்சும்பொம்மன்முகிழ்முலைபொழியலுற்றாள். ()

எந்தையைக்கக்குற்பாஞளியற்சதத்தனுவாவெய்தி
மைந்துடைவாளிற்செம்பொன்மணிமுடிதடிந்தானென்னப்
பைந்துழாய்முகுந்தன்சீறிம்பனைக்கொடித்தோன்றலோடும்
வெந்திறன்மான்றேரோறிவிரைந்துவண்டுவரைபுக்கான். (கக௭)

மழைநிறவண்ணன்சீறிவந்தனனென்னவஞ்சி
யழலவிர்மணியையக்குரூரன்பாலளித்துத்துன்பந்
தழைசதத்தனுவாவெய்தித்தாவுவெம்புரவிமேற்கொண்
டுழையர்தேர்வுறுதுநூற்றெட்டியோசனைவிரைவிற்போனன். ()

மிதிலைமாநகரின்பாங்கரெய்தலும்புரவிவீழ
வதிர்பொலங்கழற்கால்சேப்பவாங்கவனோடனேக்கி
மதுவிரிதுளவத்தாரோன்வலங்கெழுநேமிதூண்டிச்
சததனுவாவின்பைம்பொன்மணிமுடிதடிந்திட்டானே. (கக௯)

காய்ந்தெரிகவிழ்க்குஞ்செய்யகதிர்மணியவன்பாலின்மை
யாய்ந்துவண்டுளவோன்மீண்டுதம்முனுக்கறியக்கூறி
வீய்ந்ததன்மாமன்றன்னைவிதிமுறையீமத்தேற்றித்
தேய்ந்தநுண்ணுசுப்பினுளைத்தேற்றிவெந்துயரந்தீர்த்தான். ()

எரிமணிகவர்ந்துகண்ணன்கரந்தனனென்னவெண்ணி
யொருகுழையொருவனம்பொனுயர்மதில்மிதிலையெய்தி
யரவவெங்கொடியினோனையாற்றலங்கதையின்விஞ்சை
பருவமோர்மூன்றின்வல்லோர்வியப்புறப்பயிற்றுவித்தான். ()

கரியபைம்புயல்போன்மேனிக்கண்ணனுக்கஞ்சிவெய்திற்
கிருதவன்மாவுமக்குரூரனுங்கேடில்சீர்த்தித்
திருவருள்காசியெய்தவொன்னலர்கொடித்தேர்த்தானை
மருவருந்துவரைமூதூர்மழைவறந்திட்டதன்றே. (கஉ௨)

மழைவளஞ்சுரத்தலின்றியிருத்தலுமதிநூற்றேர்ச்சி
யிழவரைக்கண்ணன்கேட்பவின்னணங்கேடில்காசிப்
பொழிபுயல்வறத்தறன்னலங்கர்புரப்போன்கேள்வி
தழைதருசுவர்க்கர்கூவித்தன்மகடன்னையீந்தான். (கஉ௩)

காந்திணிமுறுவன்மாந்திக்கலைபயில்சுவர்க்கனென்னும்
வேந்தர்கோன்மேயவாற்றால்விண்மழைபொழிந்ததன்றோ
னேந்தெழிற்புதல்வனருமிசைபெறுமக்குரூரன்
போந்திடிற்பெய்யுமென்னவொற்றரிற்புகுவித்தானே. (கஉ௪)

மைத்தகார்பொருவுமேனிவள்ளலுக்கக்குரூரன்
கைத்தலத்தமைத்தசோதிக்கதிர்மணிவழங்கனேக்கி
யித்தகைமணியைநீயேகோடியீதீன்றசெம்பொன்
ந்தியபாமைக்கீதியென்றனன்காமவேலான். (கஉ௫)

காலையிற்குணபாலேகிற்கமலம்வாயவிழ்ந்துதோன்றுங்
கோலநன்மணியின்செய்திவண்டுழல்குழங்கன்மாலைப்
பால்புனைமேனியண்ணலையுறும்பரிவுதீர
வேலையிற்போக்கிவல்லையழைத்துடனுறைந்தானன்றே.(க௨௬)

பார்புகழ்தருமனுதியையவரும்பவளச்செவ்வா
யேர்கிடந்துறங்கிவீங்குமிளமுலைப்பனைகொள்மென்றோ
டார்வயிருர்ந்தகூந்தற்றுரோபதைதன்னையன்பா
லோரொருபருவம்புல்லியன்புடனுறையுநாளின். (க௨௭)

நிரைகவர்ந்தெயினரோகநெடுஞ்சிலையெடுக்கப்பார்த்த
னரசனதுறையுளெய்தவம்பலைத்தொழுகும்வேற்கட்
டுருபதன்மகளைநோக்கியாழ்முனிசொற்றதுன்னிக்
கைறயெறிகடவுட்டீர்த்தமாடுவான்கடிதிற்போனான். (க௨௮)

கங்கைநீராடுமேல்வையுலூபியைக்கண்ணிநோக்கி
யங்கலும்மேனிச்செவ்வாயணிமுலைப்போகமாந்திச்
சிங்கவேறனையவெற்றிமைந்தனைச்சிறப்பினீன்று
தங்குபாதலத்தினின்றுந்தமிழ்தெரிமதுரைசார்ந்தான். (க௨௯)

சித்திராங்கனையைக்காணுச்சித்திரப்பட்டிற்கோட்டி
மத்தரில்விசயனெஞ்சமருளலும்வழுதிகேட்டு
முத்தவெண்முறுவற்கொம்பைமுழங்கெரிசான்றதாக
வித்தகச்சிலைவல்லாற்குவியப்பொடுமளித்தானன்றே. (க௩0)

துப்புறழ்தொண்டைச்செவ்வாய்த்துளிமுகிலனையகூந்தற்
செப்பிணைத்தன்னகொங்கைதிருநலமினிதுமாந்தி
வெப்பிரவாகுதன்னையீன்றவில்விசயன்வல்லே
மைப்புயறவழுமாடத்துவரையின்மன்னினனே. (க௩௧)

அருமறையுரைத்தமுக்கோற்பகவனையடைந்தநோக்கி
யொருகுழையொருவன்வேற்கட் சுபத்திரையென்னுமொப்பில்
திருவினையன்னோர்க்கேவல்செய்தியென்றுரைத்தகாலைக்
கருமுகிறம்முனோடும்விழவுகண்ணுறுவான்போனான். (க௩௨)

மற்றடந்தோளான்செங்கையிரண்டினுல்வடிம்புதாக்கும்
விற்றழும்பதனைநோக்கியாணைநீவிளம்புகென்னப்
பொற்றதாமரையின்மேவுபொங்கிளமுலையாய்வெய்தாய்க்
குற்றமில்குமரியாடக்குறுகியவிசயனென்றான். (க௩௩)

நாணுடுமெருத்தங்கோட்டிநகைமுகவிருந்துநல்கிப்
பாணிகர்குதலைச்செவ்வாய்ப்படர்முலைநிற்றநோக்கிப்
பூணுலாஞ்செம்பொற்றோளான்பொற்றொடிதளிர்க்கைபற்றச்
சேணுறையமரரோடுங்கண்ணனவ்வழியிற்சேர்ந்தான். (க௩௪)

ஆறறிபுலவர்நன்கின்வளர்த்திடுமெழில்சான்றாக
நாறிருங்கூந்தறன்னைவிசயனுக்கினிதுநல்கி
யூறுதேன்பிலிற்றுநொச்சிப்பூவுதிரிருளினெல்லை
சாறயர்நகரினீசற்றொழுதுதம்முன்னோற்சார்ந்தான். (௧௩௫)

கொடிநெடுந்தடந்தேரேறிக்கோற்றொடிபுரவிபூண்டடங்
கடிமதிற்றுவரைகாக்குமரசரைக்கடிந்துபோகி
யடுதிறல்விசயனென்னுமாளரியேறுபோல்வா
னிடிமுரசறைந்துவிமமவிந்திரப்பிரத்தம்புக்கான். (௧௩௬)

புலரியிலிராமன்கேட்டுப்போர்க்கெழல்விலக்கியைய
னலனுறுகிளைஞரோடுமிந்திரப்பிரத்தநண்ணி
யுலகெலாம்வென்றசீர்த்தியுலங்கொடோள்விசயன்வேட்பக்
கலவமாமயிலன்னாளைக்கடிமணம்புரிவித்தானே. (௧௩௭)

ஆயிரங்கோடிமான்றேரஞ்சரைக்கச்சம்யானை
பாய்வயப்புரவிவெள்ளம்பாவையயொண்ணூறாத்தெண்மர்
காய்கதிர்விரிக்கும்பைம்பூண்கணக்கறுசெம்பொனல்கி
மியுயர்மாடமோங்குந்துவரையின்மேவினானே. (௧௩௮)

எரிமணிமாடஞ்சூழ்ந்தவிந்திரப்பிரத்தந்தன்னிற்
றருமனைக்காணச்செங்கேழ்த்தாமரைக்கண்ணனெய்தி
விரிபுகழுலகம்போர்க்கும்வில்லுடைவிசயனோடு
மரில்படுகானின்வேட்டையாடுவானமைந்துசென்றான். (௧௩௯)

வருந்துருண்முதிர்ந்துமாழ்கிந்தளர்வொடும்வயிர்நோயெய்தி
விரிந்தபூந்தகட்டின்மேவும்பெடையினைவிளரிபாடுஞ்
சுரும்புமென்மலர்த்தாதூட்டித்துயில்வரசிறையாலரியும்
பொருந்துபூந்தளிர்களீன்றபொங்கரினசோகநீழல். (௧௪0)

சேட்டிளம்பருதியீன்றகாளிந்தியாறுசெந்தேன்
பாட்டளிநுகர்ந்துதுஞ்சும்பைந்துழாய்முகுந்தன்மார்பின்
மோட்டிளமுலைகள்சாடமுயங்குதல்விரும்பித்தேன்றோ
நூட்டரக்குண்டசெவ்வாயொண்டொடியாயிற்றன்றே. (௧௪௧)

அம்மலர்நெடுங்கட்பேதையலர்சுணங்கணிந்துவீங்குங்
கொம்மைவெம்முலையந்தீஞ்சொற்றோழியைக்குறிப்பினோக்கி
மைம்முகில்வண்ணன்சீர்த்திவருந்தறவினிதுபாடப்
பெய்மதுத்துளிக்கும்பண்டோய்பேரியாழ்தருதியென்றான். ()

வேறு.

கொன்றையோடுகருங்காலிகொட்டுக்காக்கும்பத்தற்கு
மன்றமுருக்குமுயர்தணக்கும்வளைவில்குமிழுமாமென்பா
ரொன்றியிடப்பேரியாழ்க்குரைத்த கோட்டினளவைபதினொரு
பொன்றாப்பத்தால்வேறுசாண்புட்டிலளவுறசசாலோ. [சாண்

மருவுந்திரள்போதிகையெருத்தந்தனேநீண்முகத்தின்வடிவதனே
யுரைநூல்வல்லோரிசைத்தபடிகொளலாமென்னவுரைசெய்வர்
பொருவிலிசைத்தந்திரியதற்குப் புகன்றவளவை பதின்முச்சா
விரலியிருபத்தொருநரம்புவீக்கலாகுமெனவுரைப்பார். [ண்

அணில்வாற்குரலசெந்தினையினுவியலன்னபன்னரம்பைப்,
பிணியாவுயர்கோட்டிடைவிக்குந் திவவின்கடையிற்பெட்பினெ
டு, மணிசெய்கவரிமுண்டகத்தைவயங்கச்சேர்த்தல்யாழ்மரபு,
துணிவினுணர்ந்தோர்பேரியாழி னுறுப்பென்றெடுத்துச்சொல்
லுவரால். (கசரு)

வழுவிலேந்தாங்கோல்முதலாவெழுவாயளவுந்தொடல்வார்த
லெழுவாய்முதலாவீறளவுமெறிதல்வடித்தலிசையனைத்துந்
தழுவுநரம்புமுழுதினையுந்தடவித்தள்ளலுந்தல்பைந்தே
னெழுகல்போலுநரம்பிரண்டைமாறிமாறித்தொடலுறழ்தல். ()

நரம்பையடித்தொட்டேற்றளவுநன்கின்வருடலுருட்டல்மிகத்
திருந்துநரம்பையுறத்தொட்டுத்திரிகிவிடுத்தறெருட்டலர
மரும்பொற்சுட்டுவிரல்சேடன்றன்னுலள்ளலள்ளலென்பர்
பரிந்தேமுற்றும்விளிமுறையாற் பற்றியெழுப்பல்பட்டடையே.

நண்ணுமிவைகள்புரிந்திடுதெழிற்கையென்னநவில்வரா
லெண்ணுந்தானமினிதினுறவியைந்தநரம்பைநனிதிருத்தல்
பண்ணினரம்பையொத்நபடியிருத்தல்பரிவட்டணைநரம்பி
னுண்ணின்றெலிக்குமோசைசெவியுறவாராய்தலாராய்தல். ()

தட்டுமுறையினரம்புகளேயினிதிற்றடவல்தைவரலா [டோர்
மிடையாதிசைகள் பெறவியக்கி யிசைகளெழுப்பல் விளையாட்
தடவிநரம்பையிடையிடைவிட்டெய்தலெறிதலறிந்தியற்ற
லுடையயக்கயூழ்செலவறிந்தாங்கினிதினெற்றல்சிலவாமால். ()

எற்றுநரம்புதமையெல்லாமிசைவந்தெழநீண்மெல்விரலாற்
குற்றமின்றிநனிவிளங்கவியற்றல்குறும்போக்கெனவிசைநூல்
முற்றுந்தெளிந்தயாழ்முனிவன்முறையிற்கோர்த்தவிசைமரபு
கற்றுவல்லமுதுக்குறைவின்மேலோர்யாருங்கட்டுரைத்தார். ()

தாரத்துழையுமுழையதனிற்குரலுங்குரலிற்றயங்கிளியு
மோருமிளியிற்றுத்தமுமத்துத்தந்தன்னில்விளரியுமொண்
சீரார்விளரிதனில்மிகவுஞ்சிறந்துதோன்றுங்கைக்கிளையு
நேரோயுதிக்குங்கைக்கிளையினிகரில்தாரம்பிறந்திடுமால். (கருக)

அறைந்தகுரலுந்தாரமுங்கைக்கிளையுமாணுமிளிதுத்தஞ்
சிறந்தவிளரிபெண்ணுகுமலியாமுழைதேர்குரல்துத்த
நிறைந்தவிளிமாத்திரைநான்காய்நிகழ்த்துமூன்றுமாத்திரைசீ
ருறைந்தவிளரிகைக்கிளைமாத்திரையோரிரண்டாமுழைதாரம்.(

தலையிலுழைநீண்மார்பிலிளிவிளரிநெற்றிதனின்மிடற்றி
லலைவில்குரனாக்கினிற்றுத்தமண்ணந்தன்னிற்கைக்கிளைமற்
றலைவில்தாரங்கொடிமூக்கிலுதிக்குநெடிலாமுயிரேழுங்
கலைமுற்றுணர்ந்தோர்நிரைநிரையிற்றோன்றுமென்னக்கழறினர்

குரலின்கிழவனயன்றுத்தக்கிழவன்குழவிமதிச்சடையோன்
பரிவுகூர்கைக்கிளைக்கிழவன்பாரத்துவாசனுழைக்கிழவ
னரியவியத்தாங்கியணிளியின்கிழவனங்காரகன்விளரிக்
குரியகிழவன்பார்க்கவனொண்டாரக்கிழவன்சுகனுமால். (கருச)

சங்குகுயில்கார்மயில்யானைபுரவியன்னங்காடைதரும்
பொங்குகுரலேகுரல்துத்தம்புகல்கைக்கிளைநீளுழையிளிசொற்
பங்கமெறிந்தவிளரியொடுதாரத்திசையாமெனப்பகர்ந்தா
ரங்கணுலகின்யாழ்மரபின்விஞ்சைவல்லவறிவினரே. (கருரு)

பரவுஞ்செம்பாலையிற்பிறக்கும்பண்ணோரொட்டும்படுபாலை
மருவிப்பிறக்கும்பண்ணிருபத்திரண்டும்வளர்செவ்வழிப்பாலை
விரவிப்பிறக்கும்பண்ணொருபானிரண்டு மருமபாலையில்விளங்க
வரிதிற்பிறந்தபண்ணாறுதலையிட்டமைந்தவிருபானும். (கருசா)

வளருங்கொடிப்பாலையிற்பிறந்துவயங்கும்பண்ணோர்பன்னிரண்
விளரிப்பாலைப்பிறக்கும்பண்ணைஞ்சுமேற்செம்பாலைதனிற் [டும்
றளராதுதிக்கும்பண்ணொருபத்தெட்டுமாகத்தனிப்பேர்யா
ழுளரும்விஞ்சைநூல்வல்லோர்நூற்றுமூன்றென்றுரைப்பாரால்

வேறு.

பாலையாழ்குறிஞ்சியாழ்நன்மருதயாழ்பழிப்பில்பண்ணி
லேலுஞ்செவ்வழியாழ்த்தாரப்பண்ணுடனியைந்துகூட்டிச்
சால்புறுமகம்புறத்தோடருகொடுபெருகுஞ்சார
நூலுணர்ந்துறழினூற்றுமூன்றதாநுவலும்பண்ணே. (கருஅ)

புரிநரம்பதனிலேழாநரம்பினைப்புகலுநான்காய்
மருவியநரம்புநட்பாம்வகுத்தவைந்தாநரம்பு
தெரிதரிற்கிளைதானாகுந்திகழ்ந்திடுமாறுமூன்று
முரியநற்பகையாமென்பர்யாழ்மரபுணர்ந்துளோரே. (கருகூ)

இன்னணம்யாழ்வல்லோர்களியம்பியமுறைவழாமற்
கன்னலிற்கனிந்தீஞ்சொற்றோழியர்களுரைத்துக்காமர்
பொன்னவாய்க்கிடந்துவீங்கும்புணர்முலைக்காளியென்னும்
வன்னமேகலையாள்பேர்யாழ்வாசித்தறுடங்கினளே. (கசூ0)

முளிசினைத்தருக்கள்யாவுமுன்னையிற்பசுமையெய்தித்
தளிர்குழைத்தரும்புதோன்றப்பாடியதையறன்னைக்
களியொடுங்கண்ணனோக்கியாசைநோய்கவற்றமாழாந்
தளிபெறுவாயில்காணான்பார்த்தனதருகுசார்ந்தான். (கசூக)

எண்ணம்வேறுகிநெஞ்சங்கலுழ்ந்துளமிடைந்தவாற்றாற்
கண்ணன்முன்போலத்தூக்குமுறிதடவந்துகையால்
வெண்ணெயைவாரியுண்ணவீக்கினாருண்டோவென்ன
வண்ணலையசதியாட்டிப்பார்த்தனுண்டறைந்தானன்றே (கசுஉ)

தண்ணறுங்கமலவீட்டிற்றாக்கணங்களையகோதை
வண்ணப்பூஞ்சோலைசூழுமாதவிப்பந்தர்தன்னிற்
பெண்ணலங்கனியநின்றுபேரியாழுளர்ந்துபாடும்
பண்வலைவீசியென்றனுருயிர்படுத்தாளென்றான். (கசுங)

உலகெலாம்பவளவாயினுண்டுமிழ்ந்தளந்துகாத்து
மலகிலாமாயைசெய்புமையநீயறிவிலாரி
னிலவுகொப்புளிக்குமுத்தநிரைத்தமென்பவளச்செவ்வா
யிலவிதழ்கண்ணிற்பட்டதேழமைப்பாலதென்றான். (கசுச)

காவியுங்கயலும்வேலுங்கருவிளமலரும்வென்று
மாவடுமருட்டுநோக்கின்வருமுலைப்பவளச்செவ்வா
யோவியமெழுதவொண்ணுவொண்டொடிவனப்புமுற்று
மேவரக்காணின்மீதுவிளம்பலைநீயுமென்றான். (கசுரு)

நீளிருந்தூணிற்றோன்றியிரணியனெஞ்சஞ்செய்ய
வாளுகிரதனிற்போழ்ந்தமானிடமடங்கல்பைம்பொற்
றாளதாமரையுண்ணூலிற்சிமிழ்ப்புண்டதன்மைத்தன்றோ
காளமாமுகிலோர்பேதைக்கண்வலைப்பட்டதென்றான். (கசுசு)

அறற்கருங்கூந்தற்கண்வாள்போழ்ந்தநோவறியாதென்னைத்
திறப்படத்தேற்றுமாறுசெருவினில்வலைந்தவொள்வா
ணிறத்திடைக்கதிர்வேல்பாய்ந்தநீளிரும்புண்ணிற்சேர்த்தி
யிறைக்கொளிதிருத்தம்வென்றிவீரர்தஞ்செயலாமென்றான். ()

காழ்படுபராரைச்சாந்தின்கலவைபஞ்சேறுகோட்டிக்
கேழ்கிளர்நிலவுத்திங்கண்மணிவடங்கிடந்தகொங்கை
மாழைமென்னோக்கிக்கண்ணின்வள்ளல்கோட்பட்டவாற்றா
லூழ்வினைதன்னையாரேயுப்புறங்காணவல்லார். (கசுஅ)

நிறையறிவூக்கங்கல்விநெறியுறுவாய்மைதூய
பொறையொருவடிவுகொண்டபுனிதயான்புகல்வதெல்லாஞ்
சிறைகொள்வான்புலவின்மீதுநீட்டியவெழுத்துப்போலு
மறைகடற்கரைகொன்றேகின்யாவரேயமைக்கவல்லார். (கசுகூ)

மதுக்குடம்விரிந்ததன்னவண்டுவீழ்கமலப்போதோ
புதுப்புனல்படியுந்தெய்வப்புணரியோவிடம்பொற்பார்ந்த
கதிர்க்குலமுமிழுஞ்செய்யகவுத்துவமார்பவுன்றன்
முதுக்குறையொழிக்குந்தீஞ்சொன்முற்றிழையியலதென்றான்.

றூழுநெறிக்குவளையுண்கண்முத்தமென்முறுவல்வெற்பி
னெழில்குவித்தனையகொங்கையிலவிதழ்க்காந்தளங்கை
யழகுவீற்றிருந்தவேய்த்தோளணங்கிடங்கமஞ்சூன்மேய
மழைமுழுதுறிஞ்சுங்காவின்மாதவிப்பந்தரொன்றான். (௧௭௧)

துளிப்புயலுறங்குகாவின்மாதவிப்பந்தர்சோதிப்
பளிக்கறைமருங்கினெய்திப்பணைமுலைப்பவளச்செவ்வாய்க்
களிக்கயத்தடங்கணாளைக்கண்டியான்மீளுங்காறு
மளிக்கொருபுணரியன்னவையநீவருந்தேலென்றான். (௧௭௨)

அண்டகோடிகளும்பூத்தவண்ணல்பேரறிவுமுற்று
மொண்டுகொண்டருந்தும்வேற்கண்பரப்பியெத்திசையுநோக்கி
தண்டலைமருங்குபுக்குத்தனிவிளையாடுங்கொல்லோ [த்
வண்டுளர்கோதையென்னவெண்ணினன்மருங்குசென்றான். ( )

குங்குமமெழுகியோங்குகுலிகமென்செப்பேகொங்கை
செங்கயலிணையேவாட்கண்டிருமறுமார்பன்சொன்ன
வங்கலுழ்மேனிச்செய்யவாரணங்கிவளேயின்ன
கொங்கவிழ்சோலைதானேகுறித்திடுமிடமதாமால். (௧௭௪)

ஈர்க்கிடைபுகாதுவீங்குமிளமுலைநெருக்கிற்பட்டுப்
போக்கறக்கிடந்தநெஞ்சமொருவழிமீட்டுப்போதந்
தேக்கறவனைத்துமென்பாலியம்பியவேந்தன்றன்னை
வாக்கினாலிகழ்ந்தவென்போலியாருளர்வன்கணாரோ. (௧௭௫)

குயில்குடைந்தாடுமந்தண்கொழுமலர்ச்சோலைவைகும்
புயல்புறங்கொடுக்குங்கூந்தற்புரிநரம்பிரங்குதீஞ்சொன்
மயிலனாள்கண்ணிற்பட்டுமாங்குவந்தெய்திவாய்ந்த
செயலொடுமுரைத்தாளைத்திண்ணியனாகுமென்றே. (௧௭௬)

அஞ்சனமெழுதிவேல்போன்றம்பலைத்தகன்றவாட்க
ணஞ்சுதன்றலைக்கொண்டுள்ளநடுங்கியநம்பியாவி
துஞ்சுதலொழித்துமீட்குஞ்சுணங்குபூத்தலர்ந்தகொங்கை
வஞ்சிநுண்மருங்கிற்செவ்வாயமுதெனமனக்கொண்டானே. ( )

சங்கொடுகுலிசமீனஞ்சக்கரம்பொறித்தசெய்யப்
பங்கயமலர்த்தாடோய்ந்தவழியினைப்பரிவினோக்கி
யிங்குயிர்தொடரப்போக்கிநின்னிறையெளிதிற்கொண்ட
பொங்கிளமுலையினாளைப்புனத்திடைக்கண்ணுற்றேனால் (௧௭௮)

என்னலும்புயங்கள்வீங்கியின்னிளமுறுவனல்கி
முன்னெனையளித்தபைம்பொன்முகிழ்முலைக்கனிவாய்வல்லி
மன்னுமக்காவிலின்னும்வரந்தரவிருந்ததென்னாப்
பொன்னிணர்ப்பொதும்பர்நாடிப்போயினன்புலவுவேலான். ( )

மழகதிர்ப்பருதிநோக்கிவாண்முகமலர்ந்துதோன்றும்
பொழிமதுக்கமலம்போன்றும்புயல்வரவெதிர்ந்துநோக்குந்
தழைசிறைமஞ்ஞைபோன்றுந்தளருமென்வரவுநோக்கி
நிழலுமிழ்மதிதாழ்சோலைநின்றதென்றுவிதானே. (க௮0)

குமிழ்மிசைமறிந்துமீண்டுகுழைபொருதலைக்குங்கண்ணு
ளமிழ்துறழ்பவளவாயினருத்தியிற்குறித்ததூய
கமழ்திரையமுதமாந்தப்பெற்றதாற்புலவுகாலு
மிமிழ்திரையமுதமுண்டபுலவரோவென்னநேர்வார் (க௮க)

அங்கலுழ்மேனிச்செவ்வாயாய்பிழியமுதந்தூற்றும்
பங்கயப்பருமவல்குற்பைந்தொடிப்பிழிப்பிற்செவ்வி
தங்குநின்னுதற்காற்றுதுதரிப்பறவுடைந்தேயன்றே
திங்களுஞ்செல்வநாளுந்தேய்ந்துடல்விளர்ப்பதென்னு. (க௮உ)

சிந்துரத்திலகநெற்றிச்சேயிழைசெல்விபோற்றி
மந்தரப்பொருப்பைமானுமணித்தடந்தேரினேற்றி
வெந்திறல்விசயன்மான்றேர்செலுத்தவிண்ணிழந்ததன்ன
விந்திரப்பிரத்தந்தன்னிலெளிதின்வந்தெய்தினானே. (க௮௩)

பரவைசூழ்ஞாலமேழுந்தனிதடிப்படுத்திவாழுந்
தருமனைமுதலவீரர்தாழ்ந்தெதிர்கொண்டுபோற்றி
விரிகதிர்கவிழ்க்கும்பைம்பூண்வெண்டுகில்மாலைசாத்தி
மருமலர்த்துளவினானைக்கடிமணக்கோலஞ்செய்தார். (க௮௪)

கத்திகைக்கருமென்கூந்தற்றுரோபதையுலூபிகாமர்
சித்திராங்கனையினோடுஞ்சுபத்திரைதிருவைமானு
முத்துறழ்முறுவற்செவ்வாய்முகிழ்முலைக்காளிதன்னை
வித்தகப்பூண்கள்யாவும்விழுமிதிர்ப்புனைந்தாரன்றே. (க௮௫)

வலம்புரிச்சங்கமார்ப்பவார்முரசுயர்த்ததோன்ற
லலங்கலங்குன்றமன்னக்கண்ணனுக்கழல்சான்றுகக்
கலஞ்சுமந்தெழுந்துவீங்குங்கதிர்முலைக்காளிதன்னை
நலம்படுமோரைதன்னினன்மணமுடிப்பித்தானே. (க௮௬)

காண்டவதகனஞ்செய்வான்கருதியபார்த்தனுக்குப்
பூண்டபேரன்பினோடுந்துணைசெய்துபொருவிறிண்டேர்
மாண்டகுவரிவிற்றூணியழற்கிறைவழங்கநல்கிச்
சேண்டொடுகொடியுநாளுமயனல்கச்சிறப்புச்செய்தான். ()

மைத்துனத்தோழ்மெய்திவான்சிறப்பியற்றநாளும்
பைத்தபாம்பணையவல்குற்படர்முலைக்காளியின்பந்
துய்த்திருதிங்களாங்குவைகிமென்றுளவமாயன்
செய்த்தலைவாளைதாவுஞ்செழும்புனற்றுவரைசேர்ந்தான். ()

வேறு.

அன்னமேவியகழனிசூழவந்திவேந்தனளித்தருண்
மின்னுநக்கவொள்வாளுடைவிந்தனுமனுவிந்தனு
மின்னுயிர்த்துணையாயபேரொழில்கோணமித்திரவிந்தையைப்
பன்னகக்கொடிமன்னர்கோன்பாலளித்திடவெண்ணினன். ()

தண்ணந்தாமரைத்தவிசின்வாழ்தாக்கணங்கெனவழகுறும்
வண்ணமேகலைபவளவாய்மடந்தைமித்திரவிந்தைதான்
கண்ணன்மேலுறுநசையுளங்கவற்றவிள்ளரிதாயமா
லுண்ணிறைந்திடவேனிலானுட்டற்றுவாளியொடேநழுகுநாள்.

விடங்கவிழ்த்தொளிமானவேல்விந்தனுமனுவிந்தனு
மடந்தைமித்திரவிந்தையைவதுவையாற்றிடுசேயமர்த்
தடங்கமன்னவர்வருகெனுவங்கையாழிபொறுத்திடு [ர்.
முடங்கல்போக்கினரொல்லையின்மன்னர்மொய்த்தவணெய்தினு

பொதுவொழித்துயருலகெலாம்புரக்கும்வேற்றுரியோதன
னெதிர்கொடுஞ்சிலைக்கன்னனோடங்கர்வங்கர்கலிங்கர்மற்
றெதுகுலத்தொருதீபமாங்கண்ணனெண்ணறுமன்னவர்
வ்துவையாற்றிடுசயமரமண்டபத்திடையெய்தினார். (௧௯௨)

இறுமருங்கொழியப்பணைத்தினும்வீங்குதும்பாமெனக்
கொறுகொறுத்தெழுந்தோங்கியகொம்மைவெம்முலைக்கோதை
மறுவில்பேரொழில்யாவையுமணியின்முற்றிமறைப்பபோற்[தன்
செறிகலன்பலகைசெயாவதுவைமண்டபஞ்சேர்த்தினார். ()

முருகுயிர்த்தழிநறவுகாண்மொய்த்துழாய்முடியண்ணலைப்
பருகுவன்னதன்னேக்கிஞற்பாசிழைக்கொடிநோக்கலு
மரசவெள்ளமுளம்பதைத்தஞ்சவஞ்சனவண்ணனார்
விரைசென்மான்றடந்தேரின்மேன்மின்னையேற்றினனேகினன்.

ஏகலேகலெனத்தொடர்ந்தமரினேற்றெதிர்கண்ணனு
நாகவெங்கொடியோனுமேனண்ணும்வெய்யத்ரோணனு
மாகவெங்கணுமம்புபாய்ந்தஞ்சவல்வில்வணக்குரு
வாகைகொண்டுயர்புரிசைசூழ்துவரைமாநகர்மருவினன். ()

எதுகுலத்துறுமன்னர்தாம்யாருமுள்ளமுவப்புறப்
பதலைசங்கமுழங்கவப்பாவைமித்திரவிந்தையை
வெதிரிசைத்தருள்செங்கண்மால்வெய்யசெந்தழல்சான்றதாய்
வதுவையாற்றிவிருப்பினுல்வனமுலைத்துணைபுல்லினன்.(௧௯௯)

வேறு.

குரவமீன்றபூம்பாவையைக்குறத்தியரோர்ந்திக்
கருணைகூர்ந்துதாலாட்டுறுங்கவுசலதேயம்
புரவுபூண்டுயர்நக்கினசித்தெழில்பூத்த
வரவமேகலைச்சத்தியதனைமகிழ்ந்தளித்தான். (௧௯௭)

கன்னலின்சுவைபுளித்திடக்கனிந்திடுந்தீஞ்சொற்
பொன்னம்பூஞ்சுணங்கரும்பியப்புணர்முலைக்கொடியைக்
கொன்னுனைப்பெருங்கோட்டியிலேற்றையேழ்தழுவு
மன்னவர்க்கியான்கொடுக்குவலெனமனம்வலித்தான். (௧௯௮)

கொங்குகொப்புளித்தலர்ந்தபூங்கொம்பரிற்றேன்று
மங்கையாக்கமுமணத்தினதியற்கையுமதித்துச்
செங்கண்மால்விடைதழீஇயினர்கொள்கெனச்சிறந்த
வங்கண்மாநிலத்தரசருக்குணர்த்தினனளித்தான். (௧௯௯)

அழுகுகண்பனித்தவிர்சுணங்கலர்ந்தெழின்மார்ப
முழுவதுங்கவர்ந்தோங்கிவெண்முத்தணிதாங்கித்
தழுவுதற்கட்ங்காதுயர்தடமுலைபுணர்வான்
விழைவின்மன்னவர்யாவரும்விரைவின்வந்திறுத்தார். (௨௦௦)

ஞாலமேழ்புகழ்நக்கினசித்துநன்னகரிற்
காலனாருயிர்பலிபுணக்கடுங்கணைதுரக்குந்
தாலமாத்திரமுயர்சிலைவிசயனுந்தாங்க
வேலைவாய்த்துயில்கண்ணனும்விரைவின்வந்திறுத்தார். (௨௦௧)

காழகிற்புகைமுகிலெனக்களிமயிற்கதுவு
மேழ்நிலச்சுடர்மாளிகைக்கவுசலத்திறைவன்
சூழிருங்குழற்சத்தியதனைக்குணர்கென்ன
மாழைநோக்கியர்வதுவைமண்டபத்தினிற்கொணர்ந்தார். ()

வேட்டம்போகியகளிறனார்விளங்கிழைதரள
மோட்டுவெம்முலைக்கோட்டினுக்காற்றலர்முனிந்து
பூட்டுவிட்டெதிரொழவிடைதழுவமுன்புகுந்து
கோட்டின்மாய்ந்தனர்சிலர்சிலர்வெரீஇப்புறங்கொடுத்தார். ()

ரண்ட
வங்கண்மாநிலத்தரசெலாநெஞ்சழிந்திடலும்
பங்கபச்செழுங்காடுபூத்தலர்ந்துயர்பருவ
மங்குன்மேனியன்மற்றுமோர்விடையெனநடந்தான். (௨௦௪)

எழுந்துதன்னுருவேழுருவாகியேழ்விடையு
மழுந்துறத்தழீஇவீழ்த்தலுமலர்கதிர்த்திங்கட்
கொழுந்துபோனுதற்சத்தியைக்கொணர்ந்தபொன்மாலை
தொழுந்திறற்றிருமாலுக்குச்சூட்டினளன்றே. (௨௦௫)

அன்னகாண்டலுமலங்கிலைவேற்சராசந்தன்
கன்னன்வெந்திறற்சுயோதனன்சகுனிகார்முகத்துக்
கென்னையொப்புவர்யாரொனும்விறற்சிசுபாலன்
மின்னுநக்கவேற்சல்லியன்முதலினோர்வெகுண்டார். (௨௦௬)

ஏற்றமன்னனையெறுழ்வலிப்பொருவிறேன்விசயன்
கூற்றுமஞ்சுறக்காண்டிபநெடுஞ்சிலைகுழைத்துப்
பாற்றினஞ்சுழல்பகழிகடேர்ந்தகன்மார்ப
மூற்றிருந்துவெங்குருதியாறொழுகிடப்பிளந்தான். (உ0எ)

பைத்தபாம்பணைத்துயிறருபங்கயக்கண்ணன்
கைத்தலத்துறுகார்முகக்கணைகளுக்காற்று
தெத்தலத்துறுமன்னருந்தனித்தனித்திறைஞ்சித்
தத்தமாநகர்பகல்படுகங்குலிற்சார்ந்தார். (உ0அ)

நாமவேலுடைநக்கினசித்தெனுமுரவோன்
காமர்வண்டுழல்கருந்துழாய்முகிற்கழல்சான்றாய்த்
தாமரைத்தவிசுறைதருசத்தியதனையை
யேமவார்முரசியம்பிடநீரொடுமீய்ந்தான். (உ0கூ)

அரங்கக்கூற்றியராயிரமாயிரம்புரவி
பொருங்கடாக்களிறாயிரமாயிரம்பொலிதேர்
நரந்தநாவியோராயிரமளப்பநன்னிதியம்
பரிந்துநல்கினன்பங்கயச்செங்கணான்றனக்கே. (உக0)

தாரைவேல்விழிச்சத்தியைதட்முலைபுல்லி
யார்வமீக்கொளவேழ்பகலமர்ந்தவளோடும்
வீரவெஞ்சிலையருச்சுனன்றன்னொடும்விரைவிற்
கார்நிறத்தினோன்கடிமதிட்டுவரையினடைந்தான். (உகக)

வேறு.

குழவிமதிக்கூன்முதுகுரிஞ்சுங் குடுமிமாடமுடித்தோங்கி, யெழில்கண்படுக்குங்கேகயநாட்டிறைவற்கமுதாஞ்சுதகீர்த்தி,விழைவினீன்றவேய்த்தடந்தோண் மின்னுக்கொடிபத்திரையென்பாள், கழையாலாவின்கணங்குவித்தகண்ணன்றடந்தோள்விருப்புற்றாள்.. (உகஉ)

அன்னகாலைவேய்த்தடந்தோளம்மென்முலைபத்திரையென்பா
டன்னதுயரின்மிகச்சிறந்ததமயன்சந்தாத்தனென்றும்
பொன்னங்குடுமிவெயிலுடுத்தவரைநகரிற்றனிபோந்து
மன்னுமன்பினொடுஞ்சிறந்தமாமனுழையிற்புகுந்துரைப்பான் ( )

வடிவேற்றடக்கைவசுதேவன்பாதம்வணங்கியுன்றங்கை, கொடி
விலன்பிற்சுதகீர்த்தியுவப்பவீன்றபத்திரையாங், கொடிமென்ம
ருங்குப்படர்முலையைகண்ணற்களிப்பான்குறுகினனென், றடல்
கூர்சந்தாத்தனுரைப்பமகிழ்வினொடுமவைநேர்ந்தான். உகச

வண்ணத்தடந்தோள்வசுதேவன்மகிழ்வினொடுந்தானுயிர்த்த
கண்ணற்கிவைகளனைத்தினையுங்கழறிக்கடலந்தானையொடு
மண்ணுங்கதிர்வேன்மருகனொடுமைந்தரொடுநளிதிரையா [ன்.
தெண்ணீர்வளங்கூர்கேகயநாடதனில்விரைவிற்சென்றடைந்தா

அடைந்தவசுதேவனைமுதலா மரசரெவர்க்குஞ்சிறப்பளித்
துக், கடைந்தமணிச்செப்பெனவீங்கிக்கதிர்த்தமுலைபத்திரை
யென்னுங், குடங்கைக்கடங்காமதர்நெடுங்கட்கொம்பர்தன்னைய
மல்சான்றாய், மடங்கலனையகண்ணனுக்குநீரோடினிதின்வழங்
கினான். (உகசு)

தாமமணிச்செப்பெனப்புடைத்துத் தழுமுற்றெய்தாத்தர
ளமுலை, நாமவடிவேற்கண்ணியொடுங்கிளைஞரோடுநனிக்கடலி
ன், காமரகழிசூழ்கிடந்தகன்னிப்புரிசைத்துவாரைதனி, லேமமு
ரசமெழுந்தார்ப்பக்கண்ணன்போதந்தினிதிருந்தான். (உகஎ)

கரும்புமேய்ந்தமோட்டெருமைக் கறிக்கும்பசும்புலுணாத்
தெவிட்டி, விரிந்தபலவின்வீழ்ந்தசுளைகுதட்டியவிழ்ந்தவிரைக்
கழுநீ, ரருந்தித்துயிலுமத்திரநாடாளுங்கதிர்வேல்விருசேனன்,
புரிந்ததவத்தாலிலக்கணையாம் பொன்னங்கொடியையினிதுயிர்
த்தான். (உகஅ)

உலகமனைத்தும்வேனில்வேளொருகோலோச்சியடிபடுத்த
வலகில்சமயக்குறும்பகற்றியானைநிறுத்திமதர்வேற்க
ணிலவத்துவர்வாயிலக்கணையென்றியம்புங்கோதைகாரெதிர்ந்த
கலவமஞ்ஞையெனநாளுங்களிப்போடினிதின்வளருநாள். ()

செந்தேன்பருகித்தேக்கெறிந்து தெவிட்டிச்சுரும்பர்கிடந்துறங்
பைந்தார்கோதையிலக்கணைதன்பருவமுதிர்ச்சிநோக்கியவ[கும்
டந்தைமதிநூற்றுறைபோயதவறிறேர்ச்சித்துணைவரொடு
நந்தாதெண்ணிமணம்புரிவானன்கினுள்ளத்திடைவலித்தான்()

விண்ணினியங்குமோர்கயலைவிரைசேர்கிரிமேனின்று
தெண்ணீர்நிழலிற்றனிநோக்கிச்சிலைகால்வளைத்துவிடுகணையா
னண்ணவெய்துவீழ்த்தோர்க்குநங்கையுரியளெனநகரின்
மன்னுமுரசமறைவித்துமன்னர்க்கோலைபோக்கினான். (உஉக)

ஓலைப்பொருடஞ்செவியுறலுமொலிக்குங்கடலினுவகையெழ
மாலைக்குன்றமெனத்தடந்தோள்பணைத்துவீங்கமான்றேரில்
வேலைப்புவியிலினிதமரும்வேந்தர்யாரும்விரைந்தெழுந்து
காலைக்கதிர்வேன்மத்திரன்றன்கடிமாநகரம்வந்தடைந்தார். ()

வந்தவரசரெல்லோர்க்கும் வழுவாதியைந்தவாண்முறையி,
னந்தமறுவான்சிறப்பியற்றியிருந்தபின்னரணிசுமந்த, நந்தாவி
ளக்கையிருநிலத்தினடக்குமின்னுச்சுடர்க்கொடியைச், செந்தா
ர்க்கிளியைமன்னருறை செம்பொன்மாடந்தனிற்கொணர்ந்தார்.

வேந்தர்யாருங்கேண்மின்கள்விண்ணிற்சுழலுமிலக்குமிவை
தேர்ந்தற்கரியவில்லுமிவைதம்புமிவைதேயெய்தோர்க்குச்

சாந்தங்கோட்டிச்செம்மாந்துதரளஞ்சுமந்துதனிவனப்பு
வாய்ந்தமுலையாளுரியளெனத்தாதையுள்ளமகிழ்ந்துரைத்தான்

தண்ணங்கமலமுகங்குவியவழுகுவிரிக்குந்தயங்கொளிய
வண்ணமுகத்தினிடைகிடந்துவள்ளைபுரட்டுமிருகயற்கும்
விண்ணிற்குலவுமொருகயற்குமாற்றாகிவிறல்வேந்த [ர்.
ரண்ணல்வரிவிலெடுத்[illegible]ணேற்றலரிதென்றகன்றுயிர்த்தா

தரியார்வயிற்றினெரிதவழவடிவாள்விதிர்க்குஞ்சராசந்தன்
வரிவிலெடுத்துநாணேற்றிவாங்கலாற்றாதுளமெலிந்தான்
பொருவேற்றடக்கைச்சிசுபாலன்புரிநாணொருநால்விரல்வாங்கி
மருவுந்தடக்கைமலர்போலமனமுங்கன்றிவருந்துற்றான். உ உசு

சாந்தமூழ்கியுலம்பொருததடந்தோட்டந்தவக்கிரனும்
வேந்தன்வரிவிற்புரிநாணிலொருசாண்வாங்கிவெய்துயிர்த்தா
னேந்தற்கரியவரிசிலையைக்கன்னனெளிதினெடுத்தேந்திப்
பூந்தார்புரளுந்தோள்கழியவாங்கியுள்ளம்புலர்ந்துயிர்த்தான் (),

கொல்லுங்கூற்றுங்கண்புதைப்பக்கொடித்தேர்கடவுந்திறல்வீம
வில்லின்வரிநாண்டோள்கழியவாங்கியுளத்தின்வீக்கமற்றான்[ன்
கல்லென்வேலையுலகளிக்குந்துரியோதனன்வெங்கார்முகத்தை
மல்லார்திரடோளுறவாங்கிமகுடந்தெறிப்பவீழ்ந்தொழிந்தான்

மண்ணின்விசும்பிற்பாதலத்தில்வரிவிற்கொருவனெனநின்ற
வண்ணல்விசயன்சிலைக்குடிமிகுழையவாங்கியம்புதொடுத்
தெண்ணற்கரிதாய்க்கறங்கிலக்கநீருள்நோக்கித்திகிரியிவர்ந்[தால்.
துண்ணின்றியங்குங்கயல்பொதுங்க வெய்தானூழின் வீழ்ந்தில

குருகின்பகுவாய்க்கிழித்தெதிர்ந்தகொல்லேறடர்த்தகோபா லன், வரிவெஞ்சிலைகால்குனித்ததும்பொற்றடந்தோள்கழியவா ங்கியதும், விரைசெறிகிகிரியிவர்ந்ததுநீர்நிழலின்வெங்கோல்செ லுத்தியதுந், தெரியக்காணார்கயன்மறிந்துநிலத்தின்வீழ்ந்தசெ யல்கண்டார். (உகூ0)

விண்ணோரந்தண்மலர்மாரிபொழிந்தாரரசர்வெய்கிறை
ரண்ணூந்தெழுந்துசெம்மாந்தவம்பொற் சுணங்கார்முலைசுமந்து
வண்ணமருங்குலிறுமென்னச்சிலம்புபுலம்பவந்தெய்திக்
கண்ணன்மார்பிலவள்மாலைபுனைந்தாள்கமலமனைதுறந்தாள். ()

சுரிசங்கலறமுழவதிரவளவார்முரசந்துவைப்பவுயர், கரை கொன்றிரங்குகருங்கடலின்மாதர்குரவையொலிகலிப்ப, விரை கொப்புளிக்கும்பசுந்துளவோன்விளரித்தீஞ்சொலிலக்கணையை ப், பரிவின்வேட்டுவளர்பச்சைப் பசுங்காம்புறழ்தோணலநுகர் ந்தான். (உகூஉ.

தீம்பால்புளிப்பத்தித்திக்குஞ் சில்லென்கிளவிக்கிள்ளையொடுங்
காம்பாலினியவிசைமுரலுங்காயாமேனிக்கோபாலன்
பூம்பார்கொடியோன்வீமன்முதலரசர்யார்க்கும்பணியருளி
யேம்பால்புரியும்விசயனொடுந்துவரைநகரமெய்தினன் (உகரு)

சுரும்புமூசாமலர்க்கோதைசுடர்வேலுண்கணுருப்பசியும்
விரும்புந்தடந்தோள்விசயனுக்குச்சிறப்பினோடும் விடைநல்கிக்
கரும்புமமுதுங்கோற்றேனுங்கலந்தகனிவாயந்தீஞ்சொன்
முருந்தின்மூரன்மகளிரொடுங்கண்ணன்முயங்கியுறையுநாள். ()

வேறு.

புயல்போன்மதமாரிபொழிந்துலவு
மயிராவணமேலமரர்க்கிறைவன்
வெயிறும்மியவெங்கதிர்கெற்றியுறு
மெயில்சூழ்துவரைப்பதியெய்தினனால். (உகரு(

எய்தாமுனியைந்தசிறப்பினிதிற்
செய்தாய்பிழிநூற்றுசெழுந்துளவக்
கொய்தாரினன்வந்தவைகூறுகென
வையார்வயிரப்படைமால்பகர்வான். (உகசு)

திருமார்பவெனன்னைதிருக்குழையிற்
குருமாமணிசேர்த்தியகுண்டலமும்
விரிமாமணிமாடமும்வெண்குடையு
நரகாசுரன்வெளவிநடந்தனனால். (உகஎ)

மன்னுமுனிரும்பறவைக்கரசை
முன்னுமுகில்வண்ணனினைந்திடலு
மின்னார்சிறைவிட்டுவிளங்குசெழும்
பொன்மால்வரைபோன்மெனவந்தனனே. (உகஅ)

வந்தெய்துவணந்திறைவன்பிடரிற்
சந்தங்கமழ்சத்தியபாமையொடுங்
கந்தார்கரிகொன்றகருந்துளவத்
தந்தார்புனைபண்ணவிவர்ந்தனனால். (உகசு)

கள்ளூறுகருந்துளவோனுவணப்
புள்ளூர்தியெருத்தின்மிசைப்பொலியா
வெள்ளானையிவர்ந்துயர்விண்ணவர்கோ
னள்ளார்புரமாயிலினண்ணினனே. (உச0)

நரகாசுரனன்னுறுபிலத்திடைபோய்
வரைசூழரண்வான்கதைகொண்டுபுடைத்
தெரிசூழரணைமிபினொற்றிவிடா
முரபாசமறுத்துமுனிந்தனனால் (உசக)

எரிநீரரணொற்றிடுகோலரணீர்
தெறுவெம்படைசூழரணஞ்சிதைய
விறலோன்வடிவெங்கணை தூவவெயிற்
பொறிசிந்தவொலித்ததுபோர்வளையே. (௨௬௨)

வரைகொன்றுயர்வச்சிரவாள்வலனேந்
துரவோன்மகிழ்வுற்றிடவும்பர்பிரான்
முரனுவிமுடித்தவன்மைந்தர்நெடுஞ்
சிரம்வீழவடிக்கணைசிந்தினனால் (௨௬௩)

உருமுக்குரலோடைமுகத்தழல்கட்
பொருவேழமிவர்ந்துபொருப்புறழும்
வரிவெஞ்சிலைவாளிகடூய்வெகுளா
நரகாசுரன்வந்தெதிர்நண்ணினனால். (௨௬௪)

நண்ணுநரகாசுரனீண்முடியும்
பண்ணுங்கரியேந்துபனைக்கரமும்
வண்ணத்திரள்வாலதியுந்துணியக்
கண்ணன்றிகிரிப்படைகட்டதுவே. (௨௬௫)

வேறு.

சேணுறையமரர்மலர்மழைபொழிந்து திருமறுமார்பனை யேத்த, நீணிலமடந்தையதிதிபாற்கவர்ந்தநிழலுமிழ்மகரகுண்டலமும், வாணிலவெறிக்குமுத்தவெண்குடையுமளித்தடிவணங்கினளேகப், பூணணிமார்பன்புரிசைசூழ்பார்க்குச்சோதிடவளநகர்புகுந்தான். (௨௬௬)

காய்சினத்தவுணனிருஞ்சிறைப்படுத்தகாவலர்தமைவிடுத்தவர்த,மாயிருஞாலமுழுவதும்வழங்கிமற்றவன்சிறையினில்வைத்த, சேயரித்தடங்கட்சுணங்குபூத்தலர்ந்தவருமுலைச்செங்கனித்துவர்வா, யாயிழைமகளிரொருபதினாயிரருநல்லணிபெறுகலையும். (௨௬௭)

நிலந்தினக்கிடந்தநீணிதிக்குவையு நிழல்சுளிகடாத்தநாற்கோட்டு, வலம்படுவேழத்தொகுதியுங்கடவுட்கலினவாம்புரவியின்றிரளும், பொலன்கொடிதொடுத்தகொடிஞ்சிமான்றேரும் பொன்செய்நன்புலவர்கைசெய்யாக், கலன்களும்பிறவுமதிவடிம்பிடறுங்கடிமதிட்டுவரையின்விடுத்தான். (௨௬௮)

துணிகதிர்ப்புரவித்தழும்புறவிவந்த தூச்சுடர்விரித்திருள்விழுங்கு, மணிநெடுவரையைமண்டபத்தோடும்வள்ளுகிர்ககலூழன்மேலேற்றித்,தணிவருங்கற்பினருந்ததியனையசத்தியபாமையோடேகி, யணிகெழுவிசும்பினதிதியைவணங்கியாய்கதிர்குண்டலமளித்தான். (௨௬௯)

கொடுத்தடிவணங்குமைந்தனைத்தழுவிக்குட்ங்கையினெடிய் வாட்டடங்கட், சுடர்த்தொடிக்கனிவாய்ச்சத்தியபாமையுளமகி ழ்தூங்கவெகுஞான்று, மடுத்தகன்றிடாதவிளமையுந்தெய்வவா சமுமளித்தனனுவப்பின், விடுப்பவைந்தருவுங்கவர்ந்துபைந்து ளவோன்வேலைசூழ்துவரையினடைந்தான். (உருo)

பொன்னெயிலுடுத்தபிலத்திடைநின்றுங்கொணர்ந்திடும்பு ணர்முலைத்தடந்தோட், கன்னியர்பதினாறுயிரர்தமையுங்கடிம ணமுடித்திடக்கண்ணன், றன்னுருபதினாறுயிரமுருவாய்ப்பிரித் தவர்தங்களைமணஞ்செய், தன்னலார்தம்மைக்கங்குலும்பகலும் பிரிந்திடாதருநலநுகர்ந்தான். (உருக)

ஆலமுமமுதும்வென்றுவெங்கூற்றையமர்க்குநீவல்லையேல் வருகென், றோலைவிட்டுலவிமதர்க்கும்வேற்றடங்கணொண்டொ டிவண்டுபாட்டயரு, மாலைதாழ்கூந்தற்செய்யவாயுருக்குமணி யொடுமணிநிறவண்ணன், கோலநீண்முடியுங்குலமுமற்றில்லா வென்னைநீவிழைந்ததென்குறித்தே. (உருஉ)

என்றலுமுள்ளநடுங்கிவாய்புலரவெழில்செய்வாண்முகஞ் சவிமழுங்கப், பொன்றினள்போலக்கையறவுற்றுப்பொலங்கொ டிவீழ்தலுமையன், றன்றிருங்கூந்தலொருகையான்முடித்தங் கொருகையான்மழைக்கணீர்துடையா, மன்றவோர்கையாலணை த்தொருகையால்வருந்தறவாசநீர்தெளித்தான். (உருந)

ஐயரிபரந்துகுழைகிழித்தோடி யகங்கனூர்க்குழையிடுங்க ண்ணி, கையறவொழியவுளஞ்சிறிதுணர்ந்துகண்ணன்வாண்மு கத்தினைநோக்கி, மெய்யினுண்மெய்யாய்வெளியினுள்வெளியா ய்வேதமுமறிந்திடாநினக்கு, மையன்மானுடர்போல்வடிவமுங் குலமும்வண்மையுமுளகொலோவுரையாய். (உருச)

என்றவளோத்தவசோதைபொற்குறங்கி னெழுதருமறையி னுவிலையி, னன்றுணரன்பருளத்தினினமருநாரணனினிதுளம கிழ்ந்து, மன்றலங்கமலமலர்மனைதுறந்து மன்னவர்மனையினில் வளரும், பொன்றவழ்முலையாணன்னலம்பருகிப்பொலிவுடனு றைதருநாளின். (உருரு)

கண்ணன்மணம்புணர்ந்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—உ0கஉ.

முப்பத்தொன்றாவது

## கண்ணன் சிவதீக்ஷைபெற்றுநோற்று, சாம்பனைப்பெற்ற வத்தியாயம்.

ஒள்ளிழையுருக்குமணியென்னுமடந்தையுயர்பிரத்துய்மன ன்முதலா, மள்ளிலைவடிவேல்விறல்கெழுமைந்தர்பதின்மனைய ழகுறவுயிர்த்தாள், கள்ளவிழ்மலரின்வண்டுவீழ்ந்தரற்றுங் கரு ங்குழற்சத்தியபாமைத்,தெள்ளுநூற்கேள்விப்பானுவைமுதலா ஞ்சிறுவரோர்பதின்மனையுயிர்த்தாள். (க)

தாளதாமரையினெழினலங்கவற்றுந்தளிரியற்சீறடிக்காளி, வாளமர்நீந்துஞ்சுதனையேமுதலா மைந்தரோர்பதின்மனையீன் று, ணீளிருங்கூந்தன்மித்திரவிந்தைநிகரறுமிருகனைமுதலா, மீ ளிமைமைந்தர் பதின்மனையுலகம் வியப்புறவிழைவொடுமளித் தாள். (உ)

வேனில்வேள்குனிக்கக்குனித்திடும்புருவச்சத்தியைவிறல் கெழுசுடர்வேற், பானுவைமுதலாயுளைத்திடுமைந்தர் பதின்ம னையினிதினிற்றந்தா, டேனமர்கூந்தற்பத்திரையென்பாள்சங்க ரசித்தனைமுதலாங், கூனல்விற்றடக்கைமலையுறழ்தடந்தோட்கு மரரோர்பதின்மனைப்பெற்றாள். (ஙு)

பானலங்கடந்தபனிமொழித்துவர்வாய்ப்படர்முலையிலக்க ணையென்பா, டேனவிழ்தெரியற்பிரகோடனையாதிசிறுவரோர் பதின்மனையீன்று,ளேனையபதினாறுயிரத்தொருநூற்றேந்திழை மடந்தையரிசுலு, மானவேற்புதல்வர்பதின்மரோரொருவர்மகி ழ்வொடும்வயிறுவாய்த்தனரால். (ச)

விரைக்குழற்சாம்பவதிதளர்நடைய மைந்தரில்லாதுவெய் துயிர்த்துக், கரைக்குறும்பெறியுங்கனைகடன்முகட்டின் கண்டு யின்முகுந்தனைவணங்கித், திருத்துயின்மார்ப மகவுயிர்த்திருக் குந்தெரிவையர்மலடியென்றேசத், தரைக்கொருபொறையாயு யிர்சுமந்திருத்தறகாதெனக்கலுழ்ந்துரைததனளால். (ரு)

தன்னுயிர்புரந்தோர்தையலிற்றேன்றித் தளர்ந்துநின்றழு தல்போற்கலுழு, மின்னிடைச்சாம்பவதியினைத்தேற்றி மெலிந் திடேலளிப்பனென்றருளிக், கன்னவிறிரடோட்கண்ணனோர்ப கலிற்சென்றுபமன்னியுநாளு, மன்னியசாலைமருங்கணைந்தவன் றன்மலரடிவணங்கியீதுரைப்பான். (சு)

புண்டரமணிந்துதவளவெண்பூதி புனிதமாமெய்யினிற்பூ சிக்,கண்டிகைபுனைந்துகடவுளிற்றேன்றுமுனிவகார்மிடற்றுமு க்கண்ண, வண்டர்நாயகனைக்கண்ணுறநோக்கிபெரும்பெறன்மை ந்தனைப்பெறுதற், கெண்டருந்தவமே தியற்றிடிற்கூடு மெளிய னேற்கியம்புதியென்றான். (எ)

அரில்வழக்கொழியநோற்றுவெண்டிங்கள் வனைந்திடுமந்த ணனருளாற், பிருகுமாமுனிவன்வெள்ளியென்றுரைக்கும் பெருந்தவமுனிவனைப்பெற்றான், றிருமறுமார்பினக்கெவையரிய வாயினுஞ்செஞ்சடைக்கடவுண், மருவருங்கொடியதவமிழைத்தல்லானல்வரம்வழங்கலனென்னா. (அ)

வேறு.

மறிபுனன்மீனிஞெக்கியாமைபோன்மனத்தினுன்னிப்
பறவையிற்பரிசஞ்செய்துபழிப்பறுமொழிகள்கூறி
நறையவிழ்துளவினேனைநண்ணியபாசநீக்கி
யிறைவனஞ்செழுத்தினுண்மைகண்ணனுக்கியம்பினனே. (கூ)

புண்டரமூன்றுநெற்றிப்பொலிந்திடவினிதுசாத்திக்
கண்டிகைமாலேசேர்த்திக்கதிர்நிலவுறழும்பூதி
வண்டுளவோன்றன்மேனிவயங்குறச்சாத்தியீசன்
றெண்டரிற்பொலிந்துதோன்றத்தூயவனுக்கினனே. (க0)

தண்ணறுந்துளவோன்சாற்றுமுனிவரனருளால்யார்க்கு
நண்ணரும்விரதம்பூண்டுநாணிலந்தன்னிலுள்ள
புண்ணியலிங்கம்யாவும்வலஞ்செய்துபோற்றிப்பின்னர்க்
கண்ணுதறன்னைக்காண்பான்கருதருந்தவத்தினின்றான். (கக)

வார்சடைகட்டித்தூயமருங்கினிற்சீரைசுற்றிக்
கார்நிறத்தண்ணல்செய்யுந்தவத்தினைக்கருதிநோக்கி
யேர்குடியிருந்துவிக்குமிளமூலக்கவுரியோடும்
போர்விடையிவர்ந்துமுக்கட்புனிதன்முன்றோன்றினனே. (கஉ)

இந்திரன்முதலதேவர்நான்முகனெறிவேற்கந்தன்
கந்தடுபுழைக்கைவேழமுகத்துடைக்கடவுண்மற்றை
நந்தியைமுதலவாயகணங்கள்சூழ்போதநண்ணுஞ்
சந்திரமோலிதன்னைத்தாமரைக்கண்ணன்கண்டான். (கா)

காண்டலும்பருதியேய்க்குங்கவுத்துவங்கிடந்தமார்பன்
சேண்டவழ்திங்கட்கண்ணிச்செல்வனைவணங்கிமுன்னர
மாண்டகுபன்றியாகிமாநிலமளப்பில்காலங் [ன்.
கீண்டுகண்ணுருதபொற்றாள் கிடைத்தலுந்தலைமேற்கொண்டா

தொழுமகிழ்தூங்கிநின்றுதுள்ளுமெய்சிலிர்ப்பநோக்கி
யழும்வலஞ்செய்யுந்தூயவருமறைபாடித்தாளில்
விழுமிருகமலப்பொற்றாள்விழிமலர்குளிரவொற்றி
யெழுமளியோடுமீட்டுமிறைஞ்சுமீர்ந்துளவினனே. (கரு)

அடுத்தடுத்தன்பினேடும்வணங்குமாய்துளவினேனை
யெடுத்திருகையானீவிவிழைந்ததென்னியம்புகென்னுக்
கடுத்திகழ்மிடற்றோன்கூறக்கண்ணனள்வாய்புதைத்துநின்மேல்
விட்டகருமன்புமற்றோர்சிறுவனும்வேண்டுமென்றான். (கசு)

கண்ணன்சிவதீக்ஷைபெற்றுநோற்று,சாம்பனைப்பெற்றவ. உருக

மழகதிர்ப்பருதியேய்க்குங்கவுத்துவங்கிடந்தமார்ப
விழைவினிகேட்டவெல்லாம் விருப்பொடுமளித்தோமென்னக்
குழவிவெண்டிங்கட்கண்ணிமிலைச்சியகூத்தன்கூறக்
கழையிசைவடித்தகண்ணன்கவுரிதாண்மலரிற்றாழ்ந்தான். (கஎ)

வணங்கியகண்ணன்றன்னையெழுகெனவாழ்த்திவண்ணச்
சுணங்கணிதுணைமென்கொங்கைதொலைவிலாவரங்களல்க
வுணங்கரவசைத்தவண்ணலாய்பிழிதுளவோனோடுங்
கணங்கடாள்போற்றிச்செல்லக் கயிலைமால்வரையிற்சென்றான்.

கயிலையின்மர்ந்தபின்னர்க்கண்ணுதலருளாற்கண்ணன்
மயிலியல்விஞ்சைமாதர்கின்னரமாதர்நாளு
மியல்பெறுசித்தமாதரியக்கியருரகமாத
ரயில்விழியரம்பைமாதரமாந்திவிஞ்சூழல்சேர்ந்தான். (கக)

முருகவிழ்கமலக்காடுபூத்துமொய்துளவந்தாங்கும்
பருவமைம்முகிலிற்றோன்றும்பண்ணவன்றன்பாலெய்துங்
கரியபைங்கூந்தலார்க்குத்தனித்தனிக்கண்ணனாகி
யொருபகல்போலப்பன்னாளுவப்பொடுமருவுநாளில். (உ0)

கண்ணனைக்கலுழன்றேடிக்காண்கலான்றுவரையெய்த
வண்ணலம்புரிசைதன்னையவுணர்சூழ்ந்திருப்பநோக்கி
வண்ணவார்சிறையிற்றாளினுங்கவராவிமாட்டிப்
புண்ணியநகரங்காத்துப்பொலிவொடுமிருந்தானன்றே. (உக)

புயறவழ்புரிசைசூழ்ந்ததுவரையிற்பொலிவினோடு
மியலிசைதெரியும்வீணைநாரதனெய்தத்தாழ்ந்து
வயமிகுங்கலுழன்கண்ணனெங்கனம்வதிந்தானென்னக்
கயிலையில்வதிந்தானென்னயாழ்முனிகழறிப்போனான். (உஉ)

இருஞ்சிறைக்கலுழனந்தண்கயிலையினிமைப்பினெய்தி
யரும்பிளமுறுவற்செவ்வாய்ச்சத்தியபாமையாதி
மருந்துறழ்குதலைத்தீஞ்சொன்மனைவியர்வருத்தம்யாவுங்
கருந்துழாய்புனையுந்திண்டோட் கண்ணனுக்குரைத்தானன்றே.

ஆங்கவைகேட்டலோடுமரும்பிளமுறுவற்செவ்வாய்க்
கோங்கிளமுலையாள்பங்கன்குரைகழல்வணங்கியேத்தி
யீங்குபேரன்பினோடும்விடைநல்கக்கருடன்மேற்கொண்
டோங்கிரும்புரிசைசூழ்ந்ததுவரைமாநகரையுற்றான். (உச)

ஏம்பலுற்றண்ணலோடுஞ்சிலபகலினிதுண்டாடிப்
பாம்பணையமைத்தமுக்கட்பரமனல்லருளாற்செங்கே
ழாம்பலங்கனிவாய்ச்சாம்பவதியெனுமணங்கோர்சாயல்
சாம்பனைமுதலாமைந்தர்பதின்மரைத்தகவினீன்றாள். (உ௫)

பந்தணிகாந்தட்செங்கைமனைவியர்பரிவினின்ற
மைந்தர்திங்குதலையென்னும்வழக்கறுதேறன்மாந்தி
யிந்திரதிருவினின்புற்றிருக்குநாளறிவைமூடும்
வெந்துயர்மாயைசெற்றமார்க்கண்டன்விழைவினுற்றான். (உகூ)

கண்ணன்சிவதீக்ஷைபெற்றுநோற்று, சாம்பனைப்பெற்றவத்தியாயமுற்றிற்று.

திருவிருத்தம்—உ0௫அ.

---

முப்பத்திரண்டாவது

## கண்ணன்சிவபூசைபண்ணினவத்தியாயம்.

வந்தமார்க்கண்டனென்னுமுனிவரன்மகிழ்வுகூர
வந்தமில்சிறப்புச்செய்யாவந்தணர்க்கமுதமூட்டிச்
சந்தநீர்மூழ்கிநீறுகண்டிகைமாலைசாத்திச்
செந்திருமார்பனன்புவளர்சிவபூசைசெய்தான். (க)

றிங்கறக்கண்ணன்செய்யுஞ்சிவலிங்கபூசைநோக்கிப்
பாங்கிவிரிவினிதுவைகும்பழிப்பின்மார்க்கண்டனென்போ
னீங்கரும்பிரமநீயேநின்னினுமுயர்ந்தோர்யாவ
ரீங்குநீபூசைசெய்வதியாவனையியம்புகென்றான். (உ)

என்றலுமறியார்போலமுனிவரனிசைத்தானென்னு
குன்றினன்மாரிகாத்தகோவிந்தன்முறுவல்கோட்டி
மன்றலங்கமலத்தோனையென்னைமுன்மகிழ்வினின்ற
பொன்றிடாப்பொருளொன்றுண்டாங்கதனிலைப்புகலக்கேட்டி.

ஆதியுநடுவுமற்றையந்தமுமின்றியொன்றாய்ச்
சோதியாம்பிரமந்தானேதூமதிக்கண்ணியெந்தை
வேதமுமவனையின்னும்விளங்குறவறியாதென்றாற்
பேதைமைமனுடரோயோவவனிலைபேசவல்லார். (ங)

இலிங்கமேயவ்வியத்தமிலிங்கியச்சிவனேயாருந்
துலங்குமவ்விலிங்கமயானவ்விலிங்கிநீள்சுடர்வெண்டிங்க
ளலங்கலந்தாரோனென்னவறிகுனரறிஞரொன்னுப்
புலங்கள்போம்வழியிலோசம்போக்கிடாமுனிவர்சொல்வார். ()

அண்டகோடிகளொன்றொன்றேடைந்துதுண்டுகளிற்சிந்தத்
தெண்டிரைக்கரத்தாலேற்றுங்கடலின்வெஞ்சேடன்மீதின்
முண்டகமலர்த்தாள்செங்கைமுடியோராயிரமதாகக்
கண்டுயில்புரிதல்போல்யான்யோகினிற்களிக்குநாளின். (சா)

புள்ளுவிழ்ந்தரற்றவந்தண்பொதியவிழ்ந்தமிர்தங்காலும்
வெள்ளிமண்டபத்தின்மேயவிளங்கிழைகொழுநனெய்திப்
பள்ளநீர்நாப்பண்வெய்யபாம்பணைமீதிற்றுஞ்சும்
வள்ளனீயாரையென்னமனச்செருக்கோடுஞ்சொன்னான். (எ)

உலகெலாமயின்றுமீன்றுமோரடிப்படுத்துங்காத்து
மலகிலாமாயைசெய்யுமண்ணல்யானென்றேனாக
மலரயன்முறுவல்கோட்டிவகுத்துலகளித்துப்பின்னர்
நிலையறத்துடைக்கின்றோனும்யானெனநிகழ்த்தினானால். (௮)

என்றுசெங்கமலத்தோனுமியானுமேற்றிகலுமெல்லை
புன்றொழில்புரியுமெங்கள்புன்மைதீர்த்தடிமைகொள்வான்
மின்றவழ்சுடர்கள்வீசிவிரிதழற்பிழம்புபோல
நின்றதோரிலிங்கமாதியந்தநெஞ்சுணராவண்ணம். (௯)

மண்டுதீப்பிழம்பினின்றுவயங்குமிவ்விலிங்கந்தன்னை
யொண்சுடர்முடியுந்தாளுமுலப்பிலாவலியாற்றேடிக்
கண்டவர்பெரியோரென்னக்கழறலுங்கமலப்புத்தேள்
வண்சிறையெகினமாகிவானிடைத்துருவிப்போனான். (௧௦)

குறுங்கழுத்தகல்வாய்ச்செங்கட்கூன்பிறைக்கோட்டுவெய்ய
மறங்கிளர்பன்றியாகிமண்முழுதகழ்ந்துதாயிற்
சிறந்தவன்கமலபாதமளப்பினாட்டேடிக்காணா
திறங்கியவுள்ளத்தோடுமீட்டும்வந்திறைஞ்சினேனால். (௧௧)

முடிவிலாப்பொருளின்றாயமுடியினைக்காண்பானேகு
மடலவிழ்கமலப்புத்தேள்வானகமுழுதுந்தானே
தடையறவளப்பில்காலந்தேடிமெய்தளர்ந்துங்காணா
தொடிவறுமன்பினீளாவுவப்பொடுந்துதிக்கலுற்றான். (௧௨)

தண்ணறுங்கமலமென்பூந்தவிசினிலினிதுவைகு
மண்ணலுமியானுமேத்தியருமறைமுடிவின்வைகுங்
கண்ணுதற்சாமிபாதந்தேனித்துக்களித்தலோடு
மெண்ணறுமுவகைபொங்கவீங்கிவைபுரியலுற்றான். (௧௩)

முச்சுடர்க்கண்கள்பூத்தமுகமொருகோடிமென்பூஞ்
செச்சைதாழ்புயமோர்கோடிசேவடிகோடியாக
கச்சையானையின்றோல்போர்த்துக்கனலுமுத்தலையவாகு
மச்சணங்கயில்வேறுங்கியாயிடைத்தோன்றினானே. (௧௪)

தோன்றியசுடரைத்தோற்றுஞ்சராசரத்தொகுதியாவு
மீன்றிடுதந்தைதன்னையிறைஞ்சலுமுயிர்கட்கெல்லாஞ்
சான்றெனநின்றவீசன்றடக்கையாலெடுத்துப்புல்லி
யான்றபேரன்பினோடுமீங்கிவையறையலுற்றான். (௧௫)

என்னுடையிடத்தோடன்னில்வலப்புறத்தினிதுதோன்றி
மன்னுமென்மைந்தர்நீவிர்வருந்தலீர்வருகவென்னா
வன்னையும்பிதாவுமாயவந்தணனுச்சிமோந்து
முன்னியதளிபயன்கேட்டியெனமுகமலர்ந்துசொன்னான். (௧௬)

குன்றவிற்குழகன்வார்த்தைகேட்டலுங்குடந்தம்பட்டுப்
பொன்றவழ்கமலபாதமெமதுபுன்றலைமேற்சேர்த்தி
நின்றுநின்றிரங்கினின்மேனிக்குதற்கரியபேரன்
பின்றெமக்களித்தல்வேண்டுமென்றலுமிறைவன்கூறும். (௧௭)

மைந்தர்நீர்வினவுந்துகேட்டவரமினிதளித்தல்செய்தேஞ்
செந்திருமார்பவேதனின்னுடைச்சிறுவனாக
வந்தவதரிக்குமென்னமணிமிடற்றெந்தைகூறி
யந்தமுமுதலுமில்லாவிலிங்கத்துண்மறைந்தானன்றே. (௧௮)

அன்றுதொட்டின்றுகாறும்யானுநான்முகனுமன்பாற்
பொன்றிடாவிலிங்கந்தன்னைப்பூசனையாற்றுகிற்பே
மன்றவெம்பிறவிநோய்க்குமருந்துவவ்விலிங்கந்தானே
நன்றறிமுனிவவென்னாநான்முகன்றந்தைசொன்னான். (௧௯)

தண்ணறுந்துளவத்தண்டார்துயல்வரத்தயங்குதிண்டோட்
கண்ணனைப்புகழ்ந்துபோற்றிக்கருதருமறைகடேரும்
வண்ணன்மாதவத்தின்மிக்கமார்ககண்டனருளினோடு
முண்மகிழ்ந்தீசன்பாதமுளத்திடைநினைத்துப்போனான். (௨௦)

கண்ணன்சிவபூசைபண்ணினவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௨௦௭அ.

---

முப்பத்துமூன்றாவது

## கண்ணன்பூமிபாரந்தீர்த்தவத்தியாயம்.

போசகடத்துறைபோர்வேலுருக்குமன்
மாசறநல்கியசாருமதிதனக்
காசில்சயமாமென்னவறைதலு
மாசைபெறுமன்னர்யாரும்வந்துற்றார். (௧)

கேடில்விழுச்சீர்க்கிருதவன்மாவொடு
பீடுகெழுதோட்பிரத்துய்ம்மனென்னுங்
கூடார்க்கடந்தகுருசிலுருக்குமன்
மாடமுடுத்தவளநகர்புக்கான். (௨)

மன்னருறையுஞ்சயமாமடத்துத்
தன்னிகரில்லாச்சாருமதியெனும்
பொன்னங்கொடியவன்பொற்றோள்விழைதலுந்
தன்னமர்தேரினிற்றையறனையுய்த்தான். (௩)

சாருமதியைத்தடத்தேரினிலேற்றிப்
போர்விழுச்சீர்ப்பிரத்துய்ம்மனனென்னும்
வீரன்றுவரையின்மேவிவிரைமலர்க்
காதோதிதன்னைக்கடிமணஞ்செய்தான். (௪)

மணவினைமுற்றிமகிழ்ந்துறைநாளிற்
றணிவருங்கற்புடைச்சாருமதியா
மணியிழைவெள்வேலனுருத்தனென்னு
மிணையறுதிண்டோட்புதல்வனையீன்றாள். (௫)

அலங்கல்வடிவேலனிருத்தனென்று
முலங்கெழுதோளாற்குருக்குமன்மைந்த
னலம்பெறவீன்றருணங்கையைவேட்பத்
தலம்புகழ்கண்ணன்றமரொடுஞ்சென்றான். (௬)

உருக்குமன்மைந்தனொருமகடன்னை
யரத்தவடிவேலனுருத்தனென்போன்
விருப்பொடுவேட்டபின்வெள்ளைநிறத்துப்
பொருப்பேறிசூதுப்போர்முயன்றிட்டான். (௭)

ஓர்குழைவள்ளலுருக்குமன்றன்னொடு
மார்வமிகுந்திடச்சூதாட்டயர்வுழிப்
பார்புகழும்பலபத்திரன்றோற்றலுஞ்
சீர்சாலுருக்குமனெள்ளிச்சிரித்தான். (௮)

சிரித்தவுருக்குமன்சென்னிசிதற
விரித்தபலகையின்வெண்ணிறத்தண்ண
லுரப்பியடித்தவனாருயிருண்ணாப்
பரித்தகலிங்கர்கோன்பல்லுகுத்திட்டான். (௯)

அருமணமுற்றுமனுருத்தனோடும்
விரிதுளவப்புயல்விண்ணுடனவும்
புரிசையுடுத்ததுவாரபுரியின்
மருவவியப்பின்மகிழ்கூர்ந்திருந்தான். (௧௦)

வேறு.

இன்னணங்கண்ணனுங்கிளைஞருமினிதினிற்
பொன்னகர்த்துவரையிற்பொற்புடனுறையுநாண்
மன்னுதோளாயிரங்கொண்டவாணசுரன்
முன்னருங்கயிலையிற்றனிவின்வந்தெய்தினன். (௧௧)

திங்களங்கண்ணிதாழ்செஞ்சடைப்பண்ணவன்
பங்கயச்செய்யதாள்பரவிவாணசுர
னங்கண்மாஞாலமும்விண்ணுமுற்றமர்பெறு
திங்குவந்தெய்தினனெந்தையோடமர்செய்வான். (௧௨)

என்றுவாணசுரன்கூறலுமெறுழ்வலிக்
குன்றவில்லந்தணன்குறுநகைக்கோட்டியுன்
வென்றிசேராயிரந்தோள்களும்வெட்டிட
மன்றவோர்மானிடன்வருவனீமலைதியால். (௧௩)

என்னலுஞ்செருநமக்கெய்துமென்றுளமகிழ்ந்
தன்னவனென்னுழையடர்வதென்றுளென
வுன்னுடைத்துவசம்வீழ்போதெனவுரைசெயத்
தன்னுடைநகர்வயின்வந்துசார்ந்தனனரோ. (கச

வள்ளல்வாணாசுரன்பெற்றிடுமாண்புடை
யொள்ளிழையுசையெனுமோங்கெழிற்பணைமுலைக்
கள்ளவிழ்கூந்தலாள்கண்டுயில்கனவினி
லள்ளிலைவேலனுருத்தனைக்கண்ணுற (கரு

வேறு.

கண்டவிளங்காளைகதிர்முகந்தடந்தோளின்கவினுமந்தோ,வெ
ண்டதெனதுயிராயென்செய்கேனமரங்காளுய்யேனென்று, வெ
ண்டுகிடந்துறங்கிமதுவருந்திதேக்கெறியுமலர்ப்பூங்கோதை,கொ
ண்டபெருந்துயரங்கூறுநெடிதுயிர்த்துகுழைந்துநைந்தாள்.(

கொழுதியிளவண்டுகூட்டுண்ணுஞ்சில்லோதிக்கொம்பர்க
ணைப், பழுதின்மதிமுகத்துத்தோழியர்பொற்றூரிகையாற்படத்
தின்மீது, முழுதுலகின்மன்னரையுமுன்னெழுதியனுருத்தன்மு
ழவுத்திண்டோ, ளெழிலெழுதிக்காட்டுதலுங் காமவிடந்தலை
கொண்டாங்கினைந்துவீழ்ந்தாள். (கஎ

செந்தார்க்கிளிக்குதலைதலைக்கொண்டகாமநோய்திறல்வே
ற்காளை, யந்தாரமணிமார்பம்புல்லினாலல்லதையீங்ககலாதெல்
லா, நொந்தாங்கருகிருந்ததோழியர்கடுவெனைநகர்நொய்தினெய்
திக், கந்தார்களிறனையகாளைதனைமாயையினாற்கவர்ந்துவந்தார்.(

வந்தாங்கருகுய்த்தவயவாளனுருத்தன் வனப்புவீங்குஞ்
சந்தார்தடந்தோளிற்றழுமுற்றுவாராதமுலைகடாக்க, நந்தாவி
ளக்கனையவுசைமென்றோணலம்பருகிநண்ணுங்காலைச், செந்தா
மரைமலரப்பகற்செய்வோன்குணதிசையிற்சேர்ந்தானன்றே. (

வேறு.

உலம்பொருதுயர்ந்ததிண்டோள்வாணனங்கதனையோரா
வலங்கெழுமைந்தனோடும்வாளமரழுவத்தேற்றுப்
பொலங்கொடிப்புலம்பினையப் பொருப்புறழ்தடந்தோள்வீக்கி
யலங்கலங்குன்றன்னானையருஞ்சிறைப்படுத்தினானே. (உ0

ஈங்கிவையனைத்துந்தேராயாழ்முனிதுவரையெய்தி
வாங்குவில்விழுங்குதிண்டோண்மணிநிறவண்ணற்கோதப்
பாங்கினிற்கடலந்தானைப்பத்தரைக்கச்சத்தோடும்
பூங்கழற்குரிசில்வாணன்பொன்னகர்வளைந்துகொண்டான். (

வெண்மதிநெற்றிதோய்ந்துவிழுத்தழும்பிருப்பநீண்ட
கண்ணகன்புரிசைமூதூர்கண்ணன்முற்றுதலும்வாணன்
வண்ணவிற்கூபகண்ணன்முதலியமறவர்சூழ
வண்ணலங்கொடிஞ்சிமான்றேர்கடாவிவாளமரினேற்றான். (

ஏற்றெதிர்கூபகண்ணன்முதலினோரிறப்பவெய்ய
கூற்றெனத்தெழித்துவெள்ளைமேனியோன்கொன்றுவீழ்த்தா
னாற்றலுந்தேரும்வெற்றித்துவசமுமறுத்துக்கண்ணன்
மாற்றமர்தொடங்கும்வாணன்மார்பிலோர்பகழிதொட்டான். ()

மைந்துடைமுழவுத்திண்டோள்வாணனையீன்றநற்றா
யந்துகிலின்றிவெய்யவமரிடைப்புகுதனோக்கிப்
பைந்துழாய்முகுந்தன்செங்கைப்படையொழிந்திருப்பவாண
னெந்திரமான்றேர்மற்றொன்றிவர்ந்துவெம்போரினேற்றான். ()

கொடுஞ்சிறைக்கலுழன்மேலுங்குவலயம்பொதிந்தபொற்றொன்
மடங்கலேறனையகண்ணன்மருமத்தும்வாணன்வெய்தாய்
விடங்கலுழ்பகழிதூண்டவெகுண்டுசெங்கமலக்கண்ண
னடங்கலராவியுண்ணுமாழிகைக்கொண்டுசென்றான். (உரு)

காயெரிகவிழ்க்கும்வெம்போர்க்கணிச்சியெம்பெருமானெய்தி
மாயிருஞாலமுண்டோய்செருக்கினன்மலையுமவாண
னாயிரம்புயத்தினான்குபுயமொழித்தறுத்தியென்னப்
பாயொளிப்பருதிதூண்டிப்பகர்ந்தவாறரிந்திட்டானே. (உசா)

அரிந்தபைந்துளவினோனையாடமர்விலக்கியாங்குப்
பரிந்திருகன்றுக்குள்ளமிரங்கியபசுவேபோலத்
திருந்துவெண்ணிலவுகாலுந்திங்களங்கண்ணிப்புத்தேள்
பொருந்துபேரன்பர்தம்மைப்போரொழித்துறவுசெய்தான். ()

சிறந்ததொண்டரைமற்றெண்ணிற் சிறுவிரன்முடக்கவொட்டா
நறுந்துழாய்முகுந்தன்வெய்யநாமவேல்வாணனோடு
நிறைந்தபேரன்பினைத்தநீற்றொளிபூத்தமேனி
மறங்கிளர்கணிச்சிப்புத்தேள்வரமளித்தகன்றானன்றே. (உஅ)

ஆடகச்செம்பொன்மேனியனுருத்தற்கன்பினோடு
மோடரிநெடுங்கட்செவ்வாயுஷையினையளித்துவாணன
கோடிமேற்கோடிசெம்பொன்கொடுத்தடிபோற்றக்கண்ண
னீடுயர்மாடமோங்குநிகரொழிதுவரைசேர்ந்தான். (உகூ)

குண்டுநீர்க்கிணற்றின்மற்றோர்குஞ்சரக்குழக்கன்றென்ன
மண்டுநீருலகங்காப்போனோந்தியாய்க்கிடப்பமாயோன்
றிண்டிறற்கையாற்பற்றவவ்வுருத்திரிந்துவானி
னண்டர்கோனுருவின்மற்றோர்விமானத்தினமர்ந்தானன்றே. ()

யாரைநீயென்னலோடுநிருபன்யானளப்பில்பெற்றஆ
சீர்கெழுமறையோர்க்கீந்தேனவற்றிலோர்சேதாமீட்டென்
னூர்வயிற்புகுந்தவண்ணமுணர்கலாததனைப்பின்னு
மாரவமோடறஞ்செய்வான்போலந்தணர்க்களித்திட்டேனால். ()

ஆய்வெம்பாவந்தன்னாலோங்கியாயமர்ந்தேனுன்றன்
சேயதாமரைக்கைதீண்டப்பெற்றதால்வினைகடீர்ந்து
மீயுயர்விசும்பின்வைகும்விண்ணவனானேனென்ன
மாயனைவணங்கியேத்திவானுநாடதனிற்புக்கான். (௩௨)

ஓர்குழையொருவனுயர்பாடியினெல்லையெய்தி
வாருணித்தேறன்மாந்திக்கோவியர்மகளிரோடு
மார்வமோடாடவாவென்றழைத்தலுமணுகாதாக
வேர்கெழுகலப்பைதன்னால்யமுனையையிழுத்தானன்றே. (௩௩)

வெருவொடுயமுனையென்னைவலித்திடேல்விடுத்தியென்னப்
பரிவொடும்வெள்ளைமேனிப்பண்ணவன்பாதம்போற்ற
வொருகுழையொருவன்வாங்காதொழிதலுமுவப்பினோடுங்
கரையெறிதொழுனையன்னோன்கருதுழியொழுகிற்றன்றே (௩௪)

பானிறவண்ணனுயர்பாவையரோடுநண்ணித்
தூநதியமுனைத்தெண்ணீர்தோய்தலுந்தொழுனையாங்கு
நீனிறத்துகிலிரண்டுநிலவுபொன்மாலையொன்றும்
வேனில்வேளனையவெள்ளைமேனியோர்க்களித்ததன்றே. (௩௫)

பாவடிப்பருமயானைப்பவுண்டரன்வாசுதேவன்
றூவருந்தடக்கையோடுசமைத்திருகரங்கள்சேர்த்திக்
கோவடுநேமிசங்கங்குருதிவாள்கதைவில்லேந்தி
யேவருமருளமார்பின்மறுவுமொன்றிலங்கத்திட்டி. (௩௬)

எந்திரவுவணமூர்ந்துகொடியுமற்றதனையேந்திக்
கந்தடுகளிறுபோலுங்காசிவேந்தோடுநட்டுப்
பைந்துழாய்முகுந்தன்யானேதானெனிற்படைஞரோடும்
வந்தமருடற்றுகென்னவல்லையிற்றூதுவிட்டான். (௩௭)

தூதுவனுரைத்தமாற்றங்கேட்டலுந்துளவத்தண்டார்
மாதவன்முறுவல்கோட்டிவண்சிறைக்கலுழனூர்ந்து
போதரவமரிற்புக்கபவுண்டரவாசுதேவன்
மேதகுமவுலிநேமிப்படையினால்வீழ்த்தினானே. (௩௮)

பண்ணமைகளிநல்யானைப்பவுண்டரவாசுதேவ
னண்ணலந்திகிரிதன்னாலற்றுவீழ்ந்திறந்தவாற்றாற்
கண்ணனதுருவமெய்திக்கனைகடற்சுவேதத்தீவின்
விண்ணவர்தொழுதுபோற்றவீற்றிருந்தின்பந்துய்த்தான் (௩௯)

கூற்றெனவுருமேறென்னக்குலவரைபெயர்க்குமூழிக்
காற்றெனவமரினேற்றக்காசிநாடாளும்வேந்தைப்
பாற்றினஞ்சுழலுநேமிப்படையினாற்றடிந்துகண்ணன்
மாற்றலரடுபோர்முற்றுத்துவாரைமாநகரிற்புக்கான். (௪௦)

விண்டலர்துளவோன்செற்றவாரணவாசிவேந்தன்
றிண்டிறற்புதல்வன்கண்ணனாருயிர்செகுப்பானெண்ணித்
துண்டவெண்டிங்கட்கண்ணிசூடியபரனையேத்தி
மண்டுசெந்தழலின்வெய்தாய்மாரணமியற்றினனே. (சுக)

அழலுமிழ்தறுகட்பேழ்வாய்ப்பூதமொன்றதனிற்றோன்ற
மழவிடையுயர்த்தோன்றேன்றிமற்றுநம்மடியார்மேலிச்
சுழல்விழிப்பூதந்தூண்டிற்றூண்டினோராவிதுய்க்கு
நிழலுமிழ்வேலோயென்னநிகழ்த்தினன்மறைந்துபோனான். ()

நண்ணியகுறுந்தாட்பூதந்தன்னையந்நாமவேலான்
கண்ணனைக்கோறியென்னவிடுதலுங்கடிதினேகித்
தண்ணளிபெருகிவேற்கட்சத்தியபாமையோடு
மண்ணல்சூதாடுமேல்வையடைந்துமுன்னின்றதன்றே. (சங)

மண்டுவெந்தழலிற்றோன்றும்வாளெயிற்றழல்வாய்ப்பூதங்
கண்டுநெஞ்சழியநேமிவிடுதலுங்காசியெய்தித்
திண்டிறல்வேந்தவீசன்சேவடிக்கன்புசெய்யுந் [றே
தொண்டன்மேல் விடுத்ததென்னென் றவனுயிர்தொலைத்ததன்

கூன்பிறையெயிற்றுப்பேழ்வாய்ச்சுழல்விழிக்குறுந்தாட்பூதம்
வான்படர்ந்தேகிவிட்டமன்னனைக்கோறலோடு
மூன்சுவைத்தொளிறுநேமியமர்பெறுதொல்லைமீண்டு
கான்படுதுளவோன்செங்கைக்கமலத்திலுறைந்ததன்றே. (சரு)

ஒருகுழையொருவனுயர்பாடியிலுறையுநாளின்
மருவிவெந்துவிதனென்னும்வானரவீரன்வெய்ய
செருமலைந்தேற்பவன்றன்சிரத்தினையலத்திற்சிந்திக்
கருமுகில்வண்ணற்காண்பான்றுவரையிற்கடிதினுற்றான். (சசு)

வழங்குவிற்றடக்கைமன்னர்மணிமுடியுரிஞ்சித்தேய்ந்து
பழந்தழும்பிருந்தபொற்றாட்சுயோதனன்பரிவினீன்ற
செழுங்கனிதுவர்ப்பநாணுந்தித்திக்குமமிர்தத்தீஞ்சொற்
கொழுங்கயற்கண்ணிகன்னிமாடத்திற்குலவுநாளின். (சஎ)

காம்படுதோளிசெவ்விகேட்டலுங்கலங்கிமாழ்கிச்
சாம்பனல்லிருளிற்கன்னிமாடத்திறனிச்சென்றெய்தி
யேம்பலின்யாழோர்கூட்டத்தினரழைப்போகமாந்திப்
பாம்படுமல்குலோடுங்காந்தனன்படருமேல்வை. (சஅ)

அன்னதுகேட்டுவெம்பிச்சுயோதனன்சகுனியாடற்
கன்னன்விற்றுரோணன்வெம்போர்க்காங்கயன்முதலவீரர்
பொன்னணிதடந்தேர்தூண்டிப்புலிவளைந்தென்னச்சூழ்ந்து
மன்னெடுங்குமாரன்றன்மேல்வடிக்கணைமாரிபெய்தார். (சகூ)

பெய்தவெம்பகழியாவும்பிறைமுகக்கணையான்மாற்றி
வெய்தின்மற்றவர்கடிண்டேர்வெஞ்சிலைதுணித்துவீழக்
கொய்தகண்மார்புந்தோளுங்கொழுங்கணைத்தூணியென்ன
வெய்துவிற்சாம்பன்றிண்டோளெறுழ்வலிகாட்டினானே. (ரு0)

ஆடமர்க்கொருவனென்னவகனிலத்தோசைபோய
வீடுமன்சாம்பனங்கைவில்லினையறுத்துவீழ்த்தான்
கூடலர்ச்செகுக்குங்கன்னன்கொடுஞ்சியந்தேரைமாய்த்தான்
பீடுறுசகுனிசெங்கைப்பாசத்தாற்பிணித்திட்டானே. (ருக)

புலியையாப்புறுத்ததென்னப்போர்கெழுசாம்பன்றன்னை
வலியினிற்பற்றிமன்னர்வன்சிறைப்படுத்தமாற்றங்
கலையுணர்கண்ணன்கேட்டுவெகுளலுங்கடிதினேகி
மலைதிறனொழிதியான்போய்மீட்குவன்வல்லையென்று. (ருஉ)

பானிறப்பாடிவந்தண்ணல்கதுமெனப்படர்ந்துபோகி
வேனிறந்தானைமன்னனத்தினபுரியின்மேவி
மானவெற்சாம்பன்றன்னைவல்லையில்விடுக்கிலீரோ
ஊனமுற்றுமக்குண்டென்றுக்கிரசேனன்சொன்னான். (ருங)

என்னவோர்தூதுபோக்கவரவுபார்த்திட்டவெற்றி
மன்னவர்க்கவன்சென்றோதமறுத்தமைகேட்டலோடுங்
கன்னியம்புரிசைசூழ்தார்கங்கையிற்கவிழ்ப்பனென்னக்
கொன்னுனைக்கலப்பையாலோர்குழையிலன்வாங்கினானே. ()

அத்தினபுரியையாவலந்திறல்வாங்கவேகி
முத்தவெண்கவிகைச்செங்கோற்சுயோதனன்முதலவேந்தர்
தத்துறவெய்திவவ்வுஞ்சாம்பனைத்தையலோடும்
வித்தகன்முன்னருய்த்துவிரைமலர்த்தாளின்வீழ்ந்தார். (ருரு)

ஒருகுழையொருவனுள்ளமுவந்திடச்சாம்பனென்னு
முருகவிழ்தாரினாற்குமுழங்கழல்சான்றதாகத்
திருவமேகலையைநல்கியளப்பருஞ்சிறப்புச்செய்யப்
பரிவுறுமைந்தனோடுந்துவரையம்பதிபுக்கானே. (ருசு)

வேறு.

எண்ணிரண்டாயிரமகளிரின்புற
நண்ணுதல்யாங்கெனநாதயாழ்முனி
கண்ணுறநோக்கவோரொருவர்க்காழ்கடல்
வண்ணனோருருவமாய்வதிதல்கண்டுறா. (ருஎ)

மனத்திறும்பூதுறமகதியாழ்முனி
புனத்துழாய்மார்பனைப்புகழ்ந்துபோற்றுறுங்
கனைத்துவண்டிமிர்தருகற்பகாடவி
வினைத்துணைநறுமலர்நாடியெய்தினன். (ருஅ)

திருந்தலர்தொழுஞ்சராசந்தன்றீதுற
வருஞ்சிறைப்படுத்தியவரசர்யாவரும்
வருந்தறவெங்களைவல்லினீக்கிநீ
புரந்தருள்வாயெனத்தூதுபோக்கினார். (௫௯)

தூதுவர்மன்னவர்சொன்னயாவையு
மாதவன்சேவடிவணங்கிக்கூறலு
நாதயாழ்முனிவரன்றருமனன்மகந்
தீதறப்புரிவதுசெப்பினானரோ. (௬0)

தருமனதோலைபைந்தண்டுழாய்புனை
கருமுகிலனையமெய்க்கண்ணன்காண்கயா
னருமகம்புரிகுவனதற்குவல்விரைந்
துரிமையாங்கிளையொடுங்குறுதல்வேண்டுமால். (௬௧)

என்றிவைபொறித்திடுமுடங்கலேடவிழ்
மன்றலந்துளவினேற்களித்துவல்லையி
னொன்றியதூதுவர்வணங்கவொண்மணிக்
குன்றனானுவகையிற்குளித்திட்டானரோ. (௬௨)

ஆறியனமைச்சரோடலங்கற்குன்றனான்
வேறிருந்தோலையின்பொருள்விரித்துணர்ந்
தூறுசெய்வேற்படைமிடையவொககலோ
டேறனானிந்திரப்பிரத்தமெய்தினான். (௬௩)

தருமன்வெந்திறலுடைத்தம்பிமாரொடுங்
கருமுகிறனையெதிர்கொண்டுகண்ணனுக்
கரியநற்பூசனையாற்றியன்பொடு
முரிமையினளவளாயுவந்துபுல்லினான். (௬௪)

வேறு.

ஆற்றருமிராசசூயமாற்றுவான்மைந்தனென்னாப்
போற்றிவேற்றருமன்கூறப்புயனிறவண்ணன்சொல்வான்
கோற்றொடிப்புரிசைசூழுங்கொடிக்கிரிவிரசங்காக்கு
மாற்றலர்ச்செகுத்தல்லாமன்மகவினைமுடியாதென்றான். (௬௫)

ஈங்கிவைமுடியும்வண்ணமென்கொலென்றிசைத்தலோடும்
வாங்குவில்விசயன்வீமன்றன்னொடுமென்னைவல்லே
யாங்குநீவிடுத்தியென்னிலரும்பகைமுடிப்பேமென்னாப்
பூங்கழலரசனீவிர்போமினென்றுரைப்பப்போனார். (௬௬)

கட்கரியனையவெற்றிமூவருங்கடிதினேகிக்
கொடிமதிட்புரிசைதாவிக்கோநகரதனிலெய்தி
முடிகெழுவேந்தன்முன்போய்மொய்யமரிரந்துநிற்ப
வுடையலர்பரவுகோன்றாட்சராசந்தனயிந்துசொல்வான். (௬௭)

அந்தணரல்லீர்நீவிரருச்சுனன்சிறியன்மற்றை
நந்தகோன்சிறுவன்பல்காற்றோற்றவனாமவெள்வேற்
கந்தடுக்களிநல்யானைபோன்றிடுங்கழற்கால்வீமன்
வந்தெதிர்ப்படுகவென்னாவாய்மடித்துரப்பிச்சொன்னான். (கூஅ)

இருவருங்களத்தினெய்தியெறும்ழ்வலித்தடக்கைவேழம்
பொருவதுபோலச்சீறிப்புயவலிநோன்மைகாட்டி
மருவுமூவைந்துவைகல்கங்குலும்பகலுமாறு
வுருமிடித்தென்னக்குத்தியுடன்றுவெம்பூசல்செய்தார். (கூகூ)

கண்ணினால்வீமன்காணக்கற்பிரள்சுண்ணஞ்செய்யு
மண்ணெனுமுழவுத்திண்டோண்மணிநிறவண்ணன்மற்றோர்
நண்ணியபசும்புனேரோகிழித்தலுங்குறிப்பினாடிப்
பண்ணமைதிணிதோள்வேந்தைவலியினாற்பாரின்வீழ்த்தான். ()

தாப்புலியனையவெற்றிச்சராசந்தன்குறங்கைத்தாளா
னீப்பறமிதித்துமற்றைத்தாணெடுங்கையாற்பற்றிக்
கோப்பெருஞ்சிங்கமன்னானுடலிருகூறதாகப்
பாப்பனைக்குரிசிலேத்தக்கிழித்துயிர்படுத்திட்டானே. (எக)

மற்றவன்புதல்வன்றன்னைமணிமுடிசூட்டியன்னோன்
செற்றுவெஞ்சிறையிலிட்டமன்னரைச்சிறையினீக்கிக்
கொற்றவரோடும்வேந்தன்பயந்தவேற்குமரரோடும்
பொற்றடந்தேரினேறியிந்திரப்பிரத்தம்புக்கான். (எஉ)

நறைகமழ்த்துளவோன்வீமனருச்சுனனுமவேற்கை
யறைகழலவனிவேந்தனவையினிலமர்ந்தபின்னர்த்
திறையொடுபுகுந்தவேந்தர்க்களப்பருஞ்சிறப்புச்செய்து
மறைபுகலிராசசூயமகிழ்வுடனியற்றினானே. (எங)

வீடுமன்றுரோணன்கன்னன்சுயோதனன்விதர்ப்பர்கோமா
னாடவர்பணியுநோன்றாளடற்சிசுபாலன்வெம்போர்ப்
பீடுசான்முழவுத்திண்டோள்வழுதியர்பெருமானாதி
நீடிரும்புவியில்வேந்தர்யாவருநிறைந்தாரன்றே. (எச)

எற்படுபெருதிவைவேற்றருமன்வீடுமனையேத்தி
முற்படப்பூசையார்க்குப்புரிவதுமொழிகென்றோதக்
கற்படநிவந்ததிண்டோள்கண்ணனுக்காற்றுகென்ன
மற்படநிமிர்ந்ததோளான்வரன்முறையாற்றினானே. (எரு)

ஆற்றியபூசைநோக்கியடற்சிசுபாலன்சீறி
யேற்றினமேய்க்கும்புன்மையிடையனீயிவர்கள்செய்த
மாற்றரும்பூசைதன்னைமருவுதனென்னென்றுவெய்தா
நூற்றின்மேற்பட்டதீஞ்சொனாந்திளங்கொதித்துவைதான். ()

மூன்றுகைமூன்றுசெங்கண்முடியொருமூன்றினோடுந்
தோன்றயானெடுப்பவின்னோன்மனிதர்போற்றிரிந்துதோன்ற
வீன்றவள்பத்துவெஞ்சொற்பொறுக்கெனவிசைத்தவாற்றாற்
சான்றுநீர்நூறுவெஞ்சொற்றகவொர்டும் பொறுத்தேனென்றான்.

தாருகனடவுத்திண்டேர்தாமரைக்கண்ணனேறிப்
போர்புரிகளத்தின்வெய்திற்புக்கறைகூவலோடுங்
கார்முகங்குழையவாங்கிக்கட்கடைவடவைதூங்கச்
சேரலர்க்கிடியேறன்னசேதிபனமரினேற்றான். (எஅ)

சீற்றமுந்தானும்வேறுதெரிப்பருந்தகையனாகி
யேற்றுரிமுரசமார்ப்பவெரிமணித்தேரினேறிக்
காற்றெனவசனியென்னக்கனைகடலென்னவார்த்துக்
கூற்றிருகடைவாய்நக்கக்கொடுங்கணைதூவினானே. (எகூ)

ஆங்கவன்கட்லந்தானையனைத்தையுநூழிலாட்டித்
தூங்கிருட்பிழம்புநக்கித்துறுகதிர்விரிக்கும்வெய்ய
வீங்கொளிநேமிதூண்டிசேதிபன்வில்லினோடு
மோங்கிருஞ்சென்னிதன்னையொல்லையினறுத்தானன்றே. (அ0)

முற்பவமதனில்வெய்யவிரணியன்முறையிற்றோன்றும்
பிற்பவத்துலங்கொடிண்டோளிராவணனாயபேற்றா
லற்புடனிறந்தவிந்தச்சேதிபனாவிசோதி
வெற்பெனவெழுந்துகண்ணன்மலரடிமேவிற்றன்றே. (அக)

விரைமலர்தூவிவிண்ணோரார்ப்பவேயிசைக்கும்பச்சை
முருகலர்துளவத்தண்டார்துயல்வருமுழவுத்தோளான்
றருமனல்வேள்விமுற்றத்தகவுடனினிதினாற்றிப்
புரிசைசூழ்துவரைமூதூர்பொருந்திவீற்றிருந்தானன்றே. (அஉ)

பெய்மலர்ப்பகழியங்கைப்பிரத்தியும்மனன்வந்தெய்தி
யையகேள்சவுடத்தோடுஞ்சாலுவனணைந்துவெம்போர்
செய்துநஞ்சேனையாவுஞ்செருக்களத்துழக்கிப்போனான்
வெய்தினிலென்னக்கண்ணன்வெகுண்டுதேர்குணர்தியென்றான்.

தாருகன்கொணர்ந்தமான்றேரிவர்ந்தடலாழிதாங்கி
யார்கலிநடுவணெய்தியடற்கருஞ்சேனையோடும்
பாரினின்றெழுந்துவிண்ணிற்பறந்திடுஞ்சவுடமீது
சேருஞ்சாலுவனைவெய்திற்றிருமறுமார்பன்கண்டான். (அச)

காண்டலுமவுணன்சிறிக்கப்பணமுசுண்டிசூலம்
பாண்டவர்சகாயன்வெய்யப்பணைப்புயத்தெறிந்துநக்கான்
மாண்டகுவரிவில்வாங்கியவுணர்கோன்வரிவில்வீழத்
தூண்டிவெந்தூணாக்கன்னப்படையினாற்றலைத்திட்டானே. ()

வேறு.

மல்லினான்மல்லனாமாய்ந்தகண்ணனை
வில்லினால்வெலற்கரிதென்றுமீயுயர்
கல்லினாலமைத்தனகலவைத்தோளினா
னல்லல்கூர்மாயையொன்றமைத்தன்மெயினான். (௮௬)

ஆனகதுந்துமியென்னுமாற்றல்சால்
மானவேலரசனைமாயையாலமைத்
தானுகர்நேமியோனுள்ளமாழ்குறத்
தானவன்வாளினாற்றடிந்திட்டானரோ. (௮௭)

மாயனுமயங்கிவெம்மாயையென்றுணர்ந்
தேயசாலுவனொடுசவுடமிற்றுவெந்
தீயெழவடவையுந்தீயத்தீத்தெழு
மாய்கதிர்ச்சக்கரமழன்றுதூண்டினான். (௮௮)

தூண்டியசக்கரந்தொலைவில்சாலுவன்
மாண்டகுசென்னியுமியங்குமானமு
மீண்டியகிளையுடனிமைப்பிற்சிந்துறு
மீண்டதுகண்ணனும்வெகுளிநீங்கினான். (௮௯)

மாதவன்சாலுவற்செகுத்துமாண்பொடும்
போதருநெறியினிற்பூசல்வண்டறை
தாதலர்பசுந்தொடைத்தந்தவக்கிரன்
காதிவெஞ்சிலையுமிழ்கணைகடுவினான். (௯௰)

தந்தவக்கிரனுடறனையின்வீழ்தரக்
கந்தடுகடாக்களிறனையகார்முகின்
மந்தரக்கிரிநிகற்கதையின்மாட்டின
னெந்திரக்கலினமான்றேரினேறினான். (௯௧)

வம்பவிழலங்கலந்தந்தவக்கிரன்
றம்பிமேல்விடூரதன்சமரினேற்றலுங்
கம்பவெங்கரிநிகர்கண்ணன்கார்முகத்
தம்பினாலவன்றலையறுத்துவீழ்த்தினான். (௯௨)

அங்கலுழ்மேனியர்முகத்தையாய்கதிர்த்
திங்களென்றும்பல்வாய்திறக்கும்வாவியும்
பொங்கருமுடுத்துயர்துவரைபுக்கனன்
சங்கொடுசக்கரந்தரித்தகொண்டலே. (௯௩)

வேறு.

நூண்டவெஞ்சமரின்முன்னம்புகுக்தெனையழைத்தவெற்றி
மாண்டகுவரிவிலாண்மையருச்சுனன்றனக்குமான்றேர்
தூண்டுவனென்னக்கண்ணன்போதலுமிராமன்றாய்தா
மீண்டு[illegible]னியைந்துபோனான். (௯௪)

போதருநெறியிற்சூதமுனிவரன்புராணம்யாவு
மாதவர்க்கோதுமேல்லையிராமனைவணங்காதுகத்
தீதுறுவெகுளித்தீயாலவனுயிர்சிதைப்பவெய்தி
யேதஞ்செய்பிர்மகத்தியிராமனைத்தொடர்ந்ததன்றே. (௯௫)

பற்றியபாவநீங்கமாதவர்ப்பணியாலையன்
மற்றவன்புதல்வன்றன்னைச்சூதனுய்வைத்துப்போற்றி
யெற்றுதெண்டிரைநீர்க்கங்கையாதியாய்க்கன்னியீறு
யுற்றநற்றீர்த்தம்யாவுமொல்லையினாடிமேல்வை. (௯௬)

கொல்சினக்கூற்றமென்னவந்தணராவிகொல்லு
மில்வலன்புதல்வனாயவலனமர்க்கெதிர்ந்துசீற
மல்லடுதிண்டோள்வெள்ளைமேனியோன்வலியிற்பற்றி
யொல்லையினலத்தாலன்னோனுருயிரொழித்திட்டானே. (௯௭)

வீடுமன்முதலாயுள்ளவேந்தரையைவர்தம்மா
லாடமர்க்களத்தின்வீட்டியடற்குமீரொன்பானுளிற்
பீடுசால்வீமனோடும்பெய்கழன்மன்னர்மன்ன
னீடமர்புரியுமேல்லையலாயுதனிமைப்பின்வந்தான். (௯௮)

அரவுயர்க்கொடியோன்சென்னிதகர்ந்திடவாட்ல்வீம
னுருமெனக்காலாற்சீறியுதைந்தலுமிராமனோனு
தெரியெழவிழிப்பக்கண்ணனிரந்துயர்வெகுளிமாற்றப்
புரிசைசூழ்துவரைதன்னினுங்கவன்போயினனே. (௯௯)

பாரதமுடித்துக்கண்ணன்புவியுறுபாரந்தீர்த்து
வார்முரசுயர்த்தவெற்றித்தருமனைமவுலிசூட்டி
நேரலர்பணிந்துபோற்றவொருகுடைநீழறன்னி
லார்கலியுலகம்யாவுமவனடிப்படுத்தினனே. (௧00)

கச்சைமாலியானைபோலுந்தருமற்குக்களிப்பினோடு
மெச்சுவமேதமோர்பத்தினிதினிலாற்றுவித்துச்
செச்சையந்துளவத்தண்டார்திளைத்திடுமுழவுத்திண்டோட்
பச்சைமால்துவரையெய்திப்பரிவின்வீற்றிருந்தானன்றே. (௧0௧)

விசயன்மான்றட்டேருர்ந்தகண்ணனைவிழைவிற்காண்பான்
குசலமாமுனிவனெய்தித்தருப்பணமுதவக்கொண்ட
னசையினோர்பிடிவாய்க்கொண்டுபின்னருநயத்தனோக்கி
வசையறுகமலவீட்டின்மடமயில்விலக்கினளே. (௧0௨)

அளவள்ளாய்முகமன்கூறியந்தணன்றன்னையைய
னுளமகிழ்ந்தன்பினோடும்விடைநல்கவொல்லையேகித்
தளர்வரும்வினையாலொன்றுந்தந்திலன்றளர்ந்தோர்யார்க்குங்
களைகணுங்கண்ணனென்றுகலுழ்ந்துதன்மனையிற்சென்றான். (

மதியகடுரிஞ்சவோங்குமாடத்தின்மகளிர்சூழத்
ததைமலர்ச்செல்விபோலத்தன்மனையாட்டிவைகும்
புதுமையுமளகைமூதூர்புரந்தருளியக்கர்வேந்த
னிதியறைதிறந்தாலென்னநீணகர்வளனுங்கண்டான். (௧0௪)

காண்டலும்வியந்துநோக்கிக்கண்ணனைப்போற்றியன்பு
பூண்டிடுமனைவியோடுங்கிளையொடும்புதல்வரோடுஞ்
சேண்டகுசிறப்பின்மிக்கவிந்திரதிருவணுகி
மாண்டகுமறையோனுள்ளமகிழ்ந்துவீற்றிருந்தானன்றே.௧0௫

பருதியஞ்செல்வன்றன்னைப்பார்தன்வாய்ப்படுத்துங்காலத்
திருநிலத்தரசர்யாருஞ்சமந்தகமடுவினெய்தி
மருவிநீராடுமேல்வைவாள்வசுதேவனென்போ
னரியநல்வேள்வியொன்றாங்கினிதினிலாற்றினானே. (௧0௬)

முருகுறழ்தோற்றத்தைவர்முதுமனைக்கிழமைபூண்ட
தருமனன்புதல்வராதிமங்கையர்துளவத்தண்டார்க்
கருமுகில்வண்ணனில்வாழ்கரும்புறழ்குதலைச்செவ்வா
யரிவையர்தன்னைக்காண்பான்சாலையினடைந்தாரன்றே. (௧0௭)

கலவமாமஞ்ஞையன்னார்தழீஇக்கொளவெய்துங்காலை
மலையொடுமலைகள்சேரும்வாறுபோல்வளர்ந்துவீங்கு
முலையொடுமுலைகடம்மின்மோதலுமுயன்றுபுல்ல
விலகுபொற்றொடிக்கைநீளமின்மையாலிறைஞ்சிநின்றார்.(௧0௮)

தளிரிடைமெலியவீங்குந்தடமுலைக்கோதைமாத
ரளவளாய்முகமன்கூறிச்சிலபகலமர்ந்தபின்னர்
வெளிறெறிகேள்விமிக்கதருமனைமுதலாய்மேவு
நளிர்கடலவனிவேந்தர்தத்தமநகரிற்போனார். (௧0௯)

கண்ணனுமூன்றுதிங்கண்மதுரையிற்களிப்பின்வைகி
நண்ணுசீர்நந்தகோனைப்பாடியினண்ணுகென்ன
வெண்ணருஞ்சிறப்பினோடும்விடைநல்கித்துவரையென்னும்
புண்ணியநகரினெய்திப்பொலிவின்வீற்றிருந்தானன்றே. (௧௧0)

இடங்கர்வாய்ப்பட்டவுன்றன்குருமகனினிதினெய்தத்
தடங்கடலதனிற்புக்குத்தந்தனையதுபோற்றாவு
மடங்கலேறனையகஞ்சன்மாட்டியமைந்தர்தம்மை
யடங்கலர்ச்செகுத்தவேலோயளித்திடவேண்டுமென்றாள்.௧௧௧

தேவகியுரைத்தமாற்றங்கேட்டலும்பிலத்திற்சேர்ந்து
மாவலிமுன்னரெய்திமரீசிதன்மைந்தர்வேந்த
னோவறுசாபந்தன்னாலிரணியர்க்குதித்தாரன்னோர்

ஆங்கவர்நின்பான்மேவுமறுவருமளித்தியென்னப்
பூங்கழற்குமரர்தம்மைமாவலிபுகழ்ந்துநல்கித்
தேங்கொள்பைந்துளவோன்பாதம் வணங்கலுஞ்செங்கண்மாய
னோங்கெழிற்புதல்வர்தம்மைத்தேவகிமுன்னருய்த்தான். (கக௩)

மைந்தரைக்காண்டலோடுமவண்முலைசுரந்துதீம்பால்
சிந்திடவுச்சிமோந்துதேவகிமகிழ்ச்சிகூற
வெந்திறற்புதல்வர்கண்ணன்மென்கரத்தமைந்தபேற்று
லந்தமில்சாபநீங்கியமரராய்விசும்பிற்போனார். (கக௪)

சுருதிநூன்மறையோனாயசுவேதனுமமரிற்றுன்னார்
வெருவவாள்விதிர்க்கும்வெற்றிவிறல்வெகுலாச்சுவப்பே
ரரசனுமினிதுவைகுமிதுலையினையர்பாடி
மருதிறத்தவழ்ந்தகண்ணன்மாதவரோடும்புக்கான். (ககரு)

இருவருமொருங்குபுக்குவிருந்துரைத்திருப்பவையன்
மருவுதன்னுருவம்போலமறையவருருவையெல்லா
முருவிரண்டாக்கிச்சென்றோர்காலையினிருவரில்விற்
பொருவரும்விருந்துண்டன்னோர்க்குயர்கதியளித்துப்போனான்.

கண்ணன்பூமிபாரந்தீர்த்தவத்தியாய முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—உககூச.

---

முப்பத்துநான்காவது

## கண்ணன்வைகுந்தமடைந்தவத்தியாயம்.

சுருதியோர்நான்குவேதமுனிவருருவிற்றோன்றிக்
கருமுகிலனையமேனிக்கண்ணனைவணங்கியேத்தி
முருகவிழ்துளவோன்வேதன்முக்கணெம்பெருமானென்னா
மருவியமூவர்தம்மிலளியுளனெவர்கொன்மாதோ. (க)

என்னலுங்கண்ணனென்னைநான்முகன்றன்னையீன்ற
முன்னவன்கருணைக்கெல்லாமுதலவனாகுமன்றோன்
றன்னுடைக்கருணைதன்னைசாற்றுவன்கேட்டியென்னாக்
கன்னியந்துளவத்தாரோன் கருத்திடைவணங்கிச்சொல்வான்.

வெந்திறற்சகுனிமைந்தன்விருகன்வெவ்விடத்தையொப்பா
னந்தமுமுதலுமில்லாவண்ணலைப்பணிந்துபோற்ற
வெந்தைமுன்னின்றுவேண்டுநல்வரங்கேட்டியென்ன
முந்தியார்சிரத்தைத்தொட்டேனவருயிர்முடிதல்வேண்டும். ()

என்றலுமளித்தேமென்னநின்சிரத்தென்கைவைத்தாற்
பொன்றினையென்னிலீதுசரதமென்றுரைத்துப்பொங்கிக்
குன்றவில்லவன்முன்செல்லக்கூற்றின்வெங்கூற்றமோடப்
பின்றுடரவுணனுள்ளமயக்கியான்பேதித்தேனால். (௩)

மத்தமுமறுகுஞ்சூடிப்பேயுடன்மயானத்தாடும்
பித்தனதுரையைக்கேட்டுப்பின்றொடர்ந்திடுவதென்னே
முத்தலைச்சூலமேந்துமவுணனின்முடிமேற்செங்கை
வைத்திடுகென்னவைத்தான்மணிமுடிசிதர்ந்துவீழ்ந்தான். (௫)

ஆங்கவன்மாயயான்போயவிர்மதிமுடித்தவண்ணல்
வீங்கியகருணைநோக்கிமெய்ம்மயிர்சிலிர்ப்பக்கண்ணீர்
தூங்கிடவலஞ்செய்தன்பிற்றூறுமலர்தூவியன்னோன்
பூங்கழல்பணிந்துபோற்றவிடைநல்கிக்கயிலைபுக்கான். (௬)

ஆதலாற்பணிந்துபோற்றுமடியவர்க்கெளியனாகு
மாதுமைபங்கனல்லான்மற்றுமோர்தெய்வமுண்டோ
வேதமற்றவன்பொற்றாளேயிறைஞ்சுமினென்றுசெப்பத்
தீதறுமறைகள்யாவுந்தெளிவொடுபோயவன்றே. (௭)

பொன்றிணிதுவரைமூதூர்ப்பொருந்துமோர்மறைவலாள
னொன்றொழிபத்துமைந்தர்பிறந்துழியொல்லைவீயக்
கன்றியவுளத்தினோடுங்களியினவண்டுபாடு
மன்றலந்துளவமாயன்மணிநகர்வீதிபுக்கான். (௮)

யானுமென்மனையும்பாவமிழைத்திலேநறுந்தேனூற்றுங்
கானமர்துளவோன்செங்கோன்முறைமையிற்காத்திடாம
லீனமதிழைத்தறன்றலையெய்தியதென்னமாழ்கிக்
கோனகர்வாயிறன்னிற்குறுகினன்முறையிட்டானே. (௯)

கண்ணனைமுதலாயுள்ளயாதவர்காக்கொணாதென்
றெண்ணிவீற்றிருப்பத்தெண்ணீரெழுகடன்ஞாலம்போற்று
மண்ணலந்தனிவில்லாண்மையருச்சுனன்மறையோன்முன்னர்
நண்ணிவெஞ்சிலையைநோக்கிநகைத்திவையுரைக்கலுற்றான். ()

மாயிருஞாலமேற்றுமுனிவநின்மனைவியுற்ற
தூயநற்கருப்பந்தன்னையுயிர்ப்புழிமுன்னர்த்துஞ்சுஞ்
சேயனநினையல்வெய்தாச்சினவுவெம்பாசம்வீக்கி
யாயிரங்கூற்றம்போதந்தழிப்பினுமழிக்கொணாதால். (௧௧)

என்றுவில்விசயன்கூறவிரங்கியமறையோன்றேறி
மன்றநன்மனையினெய்திமகிழ்வுடனிருக்குநாளிற்
றுன்றிருங்கூந்தறாயகருமுதிர்ந்தகடுநொந்தா
ளின்றுயிர்த்திடுவளென்னவருச்சுனர்க்கியம்பினானே. (௧௨)

மறையவனுரைத்தமாற்றங்கேட்டலும்வரிவில்லேந்தி
நறவுகொப்புளிக்கும்பைந்தார்நாயிருங்கூந்தற்பேதை
பொற்றையுயிர்த்தருஞ்சாலைகளையிறைப்பொதிந்துகாவா
[illegible] (௧௩)

காற்றும்வெம்பொறிகள்சிந்துங்கனலியுந்தறுகட்பேழ்வாய்க்
கூற்றுமூன்றுறுதலஞ்சக்கொடுமரங்குழையவாங்கி
யேற்றியவிசயன்காத்துநிற்பவுமீன்றமைந்தன்
றோற்றமுமற்றதூழின்சூழ்ச்சியார்காக்கவல்லார். (௧௪)

ஈன்றசேயாவியன்றியுடலமுங்காணாதேங்கி
யான்றநூற்கேள்விப்போயவந்தணனழுதுவிம்மி
மூன்றுலகத்திலுள்ளுமூரிவிற்கொருவனென்னுந்
தோன்றனீகாத்தவண்ணநன்றெனவழன்றுசொன்னான். (௧௫)

அவ்வுரைகேட்டலோடுமருச்சுனனழன்றுசீறிப்
பவ்வவாருதியோரேழும்பாதலமேழுமெய்தாச்
செவ்வனேதிசைகளெட்டுந்திசைமுகனுலகமாதி
யெவ்வெலாவுலகந்தேடிக்காண்கிலாநினைந்துசொல்வான். (௧௬)

வஞ்சினமிழுக்கித்தாவிவாழ்கலேனெரியின்வீழ்ந்து
துஞ்சுவனென்னப்பார்த்தன்றுணிதலுங்கண்ணனெய்தி
நெஞ்சழிந்திரங்கிநையேனிகொழிமுனிவனீன்ற
மஞ்சனைத்தருவல்சேறுமைத்துனத்தோழவென்றான். (௧௭)

இருவரும்விரைவினெய்தியிரவிதேர்த்திகிரிசெல்லும்
பொருவருநேமிவெற்பைக்கழிந்துபோயிருளின்பொம்மல்
மருவியவுலகினெய்தநெறிமயங்குற்றவாற்றால்
விரிகதிர்க்கவிழ்குமாழிநினைத்தனன்மேகவண்ணன். (௧௮)

பாய்கதிரிரவிகோடியெழுவபோற்பருதியெய்தி
மேயநள்ளிருளின்குப்பைவிழுங்கிமுன்செல்லவேகி
யாயிரஞ்சுடிகைநெற்றியரவணைப்புறத்திற்றுஞ்சு
மாயிருஞாலமுண்டமரகதக்குன்றங்கண்டார். (௧௯)

காண்டலுமகிழ்ச்சியெய்திக்கருந்துழாய்புனைந்தகண்ணன்
பாண்டவனோடுமெய்திப்பதமலர்பணிந்துபோற்றச்
சேண்டிகழிரவியேய்க்குந்திருமணிகிடந்தமார்ப
னண்டகையினிதினோக்கிவந்தவாறறைதியென்றான். (௨௦)

மறைவிளையாடுஞ்செந்நாவந்தணன்மகிழ்வினீன்ற
சிறுவரைத்தேடிவந்தேந்திருமறுமார்பவென்ன
வறைதலுஞ்சிறந்தமைந்தரையிருவரையுநல்கி
நறைகமழ்துளவத்தண்டார்நாரணன்புகலலுற்றான். (௨௧)

தகவுடனும்மையீண்டுக்காண்பதுதலைக்கீடாகப்
புகலொழிமறையோனீன்றபுதல்வரைக்கொணர்ந்தேனீவிர்
நிகரறுபுவியின்பாரநீக்கினீர்சிறிதுநீக்கி
யுகமுடிவதனிலீண்டுப்புகுதருகவொல்லையென்றான். (௨௨)

மணியெழுவனையதிண்டோளிருவரும்வணங்கியேத்திப்
பணியணைப்புறத்திற்றுஞ்சும்பரமனல்விடைகொண்டேகி
யணிகெழுதுவரையெய்தியரும்பெறற்குமரர்தம்மைப்
பிணியுறுமறையோர்க்கீய்ந்துபெட்பின்வீற்றிருந்தாரன்றே. ()

பண்ணமைகுதலைத்தீஞ்சொற்பவளவாய்ப்பாவையல்கு
லெண்ணறுமகளிர்கொம்மையிளமுலைப்போகமார்ந்தி
மண்மகள்பாரநீக்கிவண்டுழாயலங்கற்பிண்டோட்
கண்ணனெவ்வுலகுமேத்தக்களிப்புடனிருக்குநாளில். (உச)

பிருகுவைமுதலாயுள்ளபெருந்தவமுனிவர்யாருங்
குருகின்வாய்கிழித்தவெற்றிக்கொண்டன்முன்னெய்திவெய்தா
கருகுவெந்தீமைசெய்யுங்கலியுகம்வருதலெண்ணி [க்
வெருவொடுமுள்ளமாழ்கிவெய்துயிர்த்துரைக்கலுற்றார். (உரு)

அறந்தலைமயங்கவெய்துங்கலியுகமணைந்ததைய
மறந்துமிவ்வுகத்தில்யாங்கண்மருவுவதொல்லாதாவி
யிறந்திடவேண்டுமென்னவியம்பலுமீன்றதாயிற்
சிறந்திடுகண்ணனுள்ளந்தெருட்டிமற்றிதனைச்சொல்வான். உசா

சீர்கெழும்யுகங்கடம்மிற்பல்பகறவஞ்செய்தாலுஞ்
சார்வருமுத்தியெய்தார்கலியுகமதனிற்றாழ்ந்தோ
ரோர்கணந்தவஞ்செய்தாலுமுத்தியிலுறுவரொன்றாற்
பாரினில்யுகங்கள்யாதேகலிக்கிணையகர்வதம்மா. (உஎ)

திங்களங்கண்ணிப்புத்தேள்சேவடிக்கமலமுண்டு
கொங்கவிழ்மலருமுண்டுகுளிர்தருபுனலுமுண்டு
தங்குமஞ்செழுத்துமுண்டுதவளவெண்ணீறுமுண்டு
வெங்கலிக்குடைவதென்னீர்வெளிற்றறிவுடையர்போல. (உஅ)

ஆணவமலத்தையாதிமலங்களென்செய்யுமன்றேற்
காணவாவீண்டுபுக்ககலியுகம்புரிவதென்னோ
மாணமர்கமலத்தேவையென்னைமுன்வயிறுவாய்த்துத்
தானுவாயுலகமீன்றோன்றாளிலன்புளதேன்மன்னோ. (உகூ)

என்னையுங்கமலவீட்டிலிறையையுமடிமைகொண்ட
முன்னவன்றன்னையேற்றியுய்ம்மின்கண்முனிவிரென்ன
வன்னநான்மறையோர்யாருமகந்தெளிந்தாசிகூறிக்
கன்னியந்துளவோன்செய்யகழலிணைவணங்கிப்போனார். (௩0)

தகைபெறுதுருவாசன்றன்சாபமேதலைக்கீடாக
வகைபடுகிளைகடம்மைவாளமராழுவத்திட்டுப்
புகரறுகண்ணனென்னும்புண்ணியமூர்த்திசோதி
நகைநிலாத்தவழுந்தூயவைகுந்தநண்ணினானே. (௩க)

வேறு.

ஆயிரஞ்சுடிகைமணிவிளக்கெடுக்குமரவவெம்பாயலினமர்ந்து, சேயிதழ்க்கமலப்பொருட்டுவீற்றிருக்குந்திருமகடன்றெடுஞ்சிறந்த, மாயிருஞாலமடந்தையுந்தழுவவானவர் பணிந்து போற்றிசைப்ப, பாய்திரைசுருட்டுப்பாற்கடலதனிற்பங்கயக்கண்ணன்வீற்றிருந்தான். (கூஉ)

கண்ணனன்மரபிலுதித்தவச்சிரனைக்கழிபெருங்கேள்வியின்றுறைபோ, மண்ணலந்தருமணிந்திரப்பிரத்தத்தணிகெழுமணிமுடிசூட்டி, யெண்ணருந்திறல்கூரடற்பரிச்சித்தையத்தினபுரத்திறையாக்கி, யுண்மகிழ்தீரங்கத்தம்பியரோடுந்துரோபதையோடும்வீடுற்றான். (கூகூ)

வச்சிரன்பிரதிவாகுவைப்பயந்தானவன்மகன்சுவாகுமற்றவன்சே, யச்சணங்கயில்வேலுக்கிரசேனனவன்றனக்கருட்சதசேன, னிச்சைகூர்புதல்வனிளமதிமுடித்தவேந்தைதன்றெண்டரிற்சிறந்த,செச்சையங்கண்ணித்திங்கணன்மரபின்மன்னரைத்தெரிந்துரைத்தனமால். (கூச)

இன்னநற்காதைபுகன்றவர்கேட்டோர்படிக்குநரொழுதிவைத்தோர்கள், கன்னலங்குதலைத்தளர்நடைப்புதல்வர்ப்பயந்துதங்கிளையொடுங்களித்துப், பொன்னகர்புரக்கும்புரந்தரனென்னப் புவியினினளப்பிலுள்வாழ்ந்து, பன்னகமணிந்தமுக்கணெம்பெருமான்பதநிழலுறைகுவரொன்றான். (கூரு)

கண்ணன்வைகுந்தமடைந்தவத்தியாயமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—உஉஉகூ.

---

முப்பத்தைந்தாவது

## யுகதன்மமுரைத்தவத்தியாயம்.

தகைபெறுமுகங்கணைன்கிடைந்திடுந்தருமம்யாவும்
வகைபடவுரைத்தியென்னமகதியாழ்முனிவனோதும்
புகரறுவிசும்புகாக்கும்புரந்தரன்கேட்பமுன்ன
மகனிலமுண்டவாமையுருவுறுமண்ணல்சொல்வான். (க)

விற்றொழில்விசயன்கேட்பவியாதமாமுனிவன்முன்னஞ்
சொற்றவாறுரைப்பக்கேண்மின்றாய்ச்சிறையெகினப்பாகன்
கற்பத்தினணித்தாமுன்னையுகமுதல்கலியீறாக
வற்புறும்யுகத்தின்செய்திவழுவுறாதனைத்துமாதோ. (உ)

முந்தையயுகத்தின்றெய்வம்பிரமனாமுக்கட்டேவைச்
சிந்தைசெய்திருப்பார்நான்குபதத்தொடுந்தருமஞ்செல்லு
மந்தமில்கானம்வெற்புநகரமென்றையுறாது
மைந்தர்வீற்றிருப்பர்தம்மிற்பிரிந்திடாமகளிரோடும். (கூ)

நினைந்தவையாவுமங்ஙகநெல்லியின்முன்னர்த்தோன்று
நனைந்தலையுலகம்விண்ணோர்நாடெனப்பிரிக்கொணது
மனங்களிகூரப்போகமகிழ்வர்யானெனதென்றேழுஞ்
சினங்கொளாங்காரமின்றிமலமெறிசித்தராகி. (ச)

வருந்தறமுன்னமெய்தும்யுகத்தினைவருத்துச்சொன்னோந்
திருந்திரண்டாம்யுகத்தின்செய்தியுந்தெளித்துச்சொல்வாம்
விரிந்தநள்ளிருளின்குப்பைவிழுங்கிவெங்கதிர்கணீட்டு
மிருங்கதிர்ச்செல்வனந்தயுகத்தினிற்றெய்வமென்பார். (ரு)

மூன்பயில்யுகத்தினுற்றமுதுக்குறைவிலமித்தோன்று
மன்பதையதனுன்மூன்போனினைத்தவைமருவல்செய்யா
வன்பொடும்வேறேர்சித்தியனைதலின்மழையுண்டாகப்
பொன்பயிறருக்கள்யாவும்புவியினிற்றோன்றுமன்றே. (சா)

வியன்சினைத்தருக்கணல்கும்விழுத்தகுசிறப்புவாய்ந்த
பயன்படுபோகமாந்திப்பண்ணவர்போலவாழ்வர்
நயம்படுதருமமூன்றுகால்கொடுநடக்கும்வேள்வி
முயன்றினிதாற்றிமுக்கட்பரமனைமுன்னுகிற்பார். (எ)

யானெனதென்னுமுள்ளச்செருக்குறத்தருக்கள்யாவு
மாணிலத்தொளிக்குமைந்தர்மகளிர்பாற்புணரத்தோன்று
மூனுடையாக்கைமாக்களொளித்தமற்றெவையுமெய்தும்
பான்மையசித்திமுன்னப்பரிவுடன்சேருமன்றே. (அ)

கைபுனைந்தியற்றுப்பைம்பூண்கடைந்திடாவமிர்தமன்ன
நைபடுகனிகளாடைநண்ணியதருக்கணல்கப்
பைபடுமல்குலாருமைந்தரும்பயன்கடுய்த்து
மைபடுவிசும்புகாக்கும்வானவர்போலவாழ்வார். (கூ)

காமநோய்வெகுளிவெய்யமயக்கமுன்கவற்றமாந்தர்
பூமலிதருக்கள்யாவுமெனதுனதென்றுபொங்கி
யேமுறவெய்திச்சிறியகலொடுமலைதறன்னு
ளுமறக்காக்குமாங்கணல்குரவுழப்பர்மாதோ. (க0)

நயக்குறுமின்பதுன்பத்தட்பநண்ணரிதாம்வெம்மை
மயக்குறுமானமானமின்மைவண்கொடையுலோபம்
பயக்குறவில்லந்தூசுயழிப்பில்பொன்முதலயாவும்
வியப்புடனுனுற்றிநீட்டுமெலிவொடும்வாழ்வரன்றே. (கக)

கருவிமாமேகமீண்டிக்கனைபுயல்பொழியயாரும்
பொருவ[illegible]டிக்கூன்கொழுப்புதையவூன்றி
யிருநிலங்கிளைப்பவந்தீங்கனிபடுமரங்கள்யாவு

காண்படுபசுக்களேழுங்கனைகதிர்தடுப்பநீண்டு
வான்படர்மாடமோங்கும்வளநகர்பசுக்களேழுந்
தோன்றலுமாந்தருள்ளந்துற்றியநசையானுஞ்
மேன்றெனதுனதென்றேதியிகலுறயாவும்போன. (௧௩)

பிருதுவென்றுரைக்கும்வேந்தன்பெட்பினுட்புவியினுள்ள
வரியநல்வளங்கள்யாவுங்கறந்தினிதளித்தவாற்றான்
மருவியமக்கள்யாரும்பண்டையின்மகிழ்ச்சியெய்தி
யொருவர்வாழ்வொருவர்வவ்வியுட்ற்றிவெம்பூசல்செய்வார். ()

ஆசறநிமிர்ந்துவாசைச்சிமிழ்ப்புறுமுலகம்யாவுந்
தேசறவெண்ணிவேதன்சிறந்திடுவருணமற்றை
நாசிலாச்சிரமம்யாவும்வகுத்திவைநிலையிற்காக்க
வோசைபோமன்னரோடுமகத்தினையுவப்பிற்செய்தான். (௧௫)

தெளிகுநருணர்திரேதாயுகத்தினைத்தெளிந்துசொன்னாங்
களிமிகுதுவாபரத்தின்செய்தியுங்கருதிக்கூறி
னளிகெழுவிண்டுத்தெய்வமறமிருபாதத்தெய்து
நளிகடலவனியெங்குநன்மைநடக்குமன்றே. (௧௬)

ஆசையாலுலோபந்தன்னாலருஞ்சமர்புரிவர்யாரு
மாசிறத்துவத்தையெண்ணித்தெளிகலர்மயங்கல்செய்வார்
தேசுடைவியாதன்வேதந்தெளிகுறநான்கதாக
வேசறுமுலகந்தன்னிற்பிரித்தினிதியற்றினானால். (௧௭)

துவாபரயுகத்தின்செய்திசொற்றனம்புன்மைகோப
மவாவுறுகலியுகத்தின்முறைமையையறையிற்றெய்வந்
தவாதுயர்மகேசனாருந்தருமமோர்காலிற்செல்லுங்
குவாலுறுநிதியம்யாவுங்கொடுப்பதேதருமமாமால். (௧௮)

வெளிற்றறிவுடையபுல்லர்மேதகுசான்றோர்தம்மைக்
களிப்பொடுந்தடிவர்பொய்ம்மைகடும்பசிமூப்புத்துன்பந்
தளிப்புயல்வறத்தலெய்துந்தம்பொருளளியாரோனு
மொளித்துமற்றொருவர்கையிலுறுபொருள்கவர்வரன்றே. (௧௯)

ஒழுக்கமுமளியும்போரினுடற்றுவெந்துயருமின்றி
யிழுக்குவரறத்தினின்றுமிருபிறப்பாளர்யாரும்
விழுத்தகுமறைகளோதாருமகம்விழையாரொன்று
மழுக்குடைமனத்தராகியருநரகதனில்வீழ்வார். (௨௦)

நெறியினோர்போலக்கற்றேய்கலிங்கமெய்நிலவச்சுற்றிக்
கறையெறிவெண்பல்லோடும்பின்னவர்காலையேகி
யுறைபுனல்படிந்துநீதியந்தணர்தம்மையெள்ளி
மறையினைமறையோர்தம்பாற்கற்பர்மாநிலையமெய்த. (௨௧)

ஆறறிமறையோரில்வாழ்மனைவிநொந்தழுங்கப்போகிக்
கூறுபின்னவர்தம்மாதர்குவிமுலைதிளைப்பப்புல்லி
யூறுயரின்பமாந்தியாங்கவர்தம்மோடுண்டு
வீறுயர்விஞ்சைவிற்றுநரகிடைவீழ்வர்மாதோ. (௨௨)

கொலைகளவுறல்கள்ளுண்டல்குருநிந்தையுடன்பாடென்னு
மலைவுறுகொடியபாவமலிந்திடிற்றிறல்கொள்வேந்தர்
கலைபயின்மறையோர்நோவக்கடிவர்கற்றறியாப்புல்லர்
நிலைபெறுதிருவராவர்நீதியோர்வறியராவர். (௨௩)

அந்தணர்மறைகளோதார்பஞ்சராத்திரநூலாய்ந்து
நிந்தனைவாமமோர்ந்துநீற்றொளிபழுத்தமேனி
யெந்தையைவழுத்தாராகிக்கவுதமனிசைத்தசாபந்
தந்ததீவினையால்வெய்யரவுரவநரகிற்றாழ்வார். (௨௪)

கொடுவரிமுதலவாயவிலங்கினாற்கமஞ்சூற்கொண்டற்
படுமழைவறந்தவாற்றாற்படுபுனற்சோனைதன்னாற்
கடுவளியதனால்வெய்யவெயிலினாற்கலங்கிமாந்தர்
மிடலருந்துன்பமெய்திவெந்துயருழப்பரன்றே. (௨௫)

இன்னவெங்கலியின்முக்கணெந்தைதாளிமைப்போதேனுந்
தன்னமருள்ளத்தெண்ணிற்றழலிடையளப்பினாணின்
றுன்னரும்யோகந்தன்னினுறங்கினோர்தமக்குமெய்தா
மன்னருமுத்திவீட்டின்மருவிவீற்றிருக்கலாமால். (௨௬)

எற்றுநீர்வேலைஞாலமீன்றருளெகினப்பாகன்
பொற்றதாமரையின்செல்வன்பூமகள்கொழுநனென்னு
முற்றுமூன்றுகத்திற்றேவுங்கலிக்குத்தேவாயமுக்கட்
கற்றையஞ்சடையோனென்னநான்மறைகழறுமன்றே. (௨௭)

என்றுநான்குகத்தின்செய்தியாவையுமுறையினோதி
மன்றலந்துளவினோனுமலரினான்முகனுங்காணா
குன்றவிற்குழகன்றன்னைக்கண்டனைகுமரவுன்போ
லன்றறிவோரில்யாரோநற்றவமுடையபொன்னா. (௨௮)

விற்றொழில்விசயற்கன்பின்விடையினிதருளிவேதங்
கற்றுணர்வியாதனென்போன்கழிமலந்தன்னினாரு
முற்றிடும்புழுவுமாங்குமாய்வுறினலவாமுத்தி
பெற்றிடுங்காசிதன்னிற்பெட்பொடுமணைந்தானென்றான். (௨௯)

யுகதன்மமுணர்த்தவத்தியாயமுற்றிற்று.

திருவிருத்தம்—௨௨௫௮.

முப்பத்தாறாவது

## காசியின்சிறப்புரைத்தவத்தியாயம்.

கதிர்பிணைந்தாடுசெந்நெற்கழனிசூழ்காசியெய்து
முதுமறைவியாதன்செய்திமொழிகெனமுனிவனோடுந்
ததைமலர்த்தருவினீழற்பண்ணவன்சாற்றமுன்ன
மதமலிமூலமென்னவந்தகார்வண்ணன்சொல்வான். (க)

சயிமுனிவிச்சுவேசன்றாளிணைபணிந்துபோற்று
மயர்வறுவியாதற்போற்றிவழங்குசாங்கியவியோகம்
பயில்வுறுதியானந்தீர்த்தமந்திரம்பழிப்பின்மெய்ம்மை
யியல்புறுமறங்கொலாமைஞானமிந்திரியமடக்கல். (உ)

ஈங்கிவைகொல்லோமற்றுமுளகொலோவுயர்ந்தவீசன்
பூங்கழலடைதற்கென்னப்புகறலும்வியாதன்சொல்வா
னாங்கவையுயர்ந்தவல்லமுத்திவீடடையவேண்டிற்
றீங்கெறிகாசிதன்னிற்சேர்தலேயுயர்ந்ததாமால். (ங)

இன்னவாறுலகம்யாவுமீன்றளித்துதரக்கன்னி
முன்னவனோடுங்கேட்பவீங்கியான்மொழிந்தவாறே
பன்னினன்கடவுட்காசிமாநகரன்றிப்பார்க்கி
னுன்னரிதாகுமுத்திவீட்டின்பமுதவற்பாற்றோ. (ச)

தந்தைதாய்குரவரின்சொன்மறுத்தவர்தணப்பிலாத
வெந்துயர்நரகின்வீழ்வர்மறுத்துவெண்ணீற்றுமேனி
யெந்தைவாழ்காசிதன்னிலெய்தினோரிறைவன்போல
நந்தலிலுருவமெய்திப்பேரின்பநண்ணுவாரே. (ரு)

தவளையைமற்றோர்பாம்புகொல்லவத்தவளையோங்கு
குவளையங்களமுமூன்றுகண்ணும்வார்குழவித்திங்கட்
பவளவார்சடையுமாயப்பாந்தளையணிந்ததென்றா
னவையறுகாசிபோலநன்னகர்பிறிதுமுண்டோ. (சு)

காசியேகடவுடீர்த்தங்காசியேயவ்வியத்தங்
காசியேமுத்திவைப்புக்காசியேகளிகொண்ஞானங்
காசியேயுமையோடீசனுறைவிடங்கங்கைசூழுங்
காசியேபிறவிநோய்க்குக்கருதருமருந்துமாமால். (எ)

எனவுளமகிழ்ச்சிதூங்கச்சயிமுனிக்கினிதினோதி
வினையறுதவத்தின்மிக்கவியாதமாமுனிவனேபோன்
றனதருள்பெறுமாணுக்கர்களிப்புறத்தகவினோடு
நினைவருமோங்காரேசன்சிறப்பினைநிகழ்த்தலுற்றான். (அ)

கங்கைநீர்பெருகிமச்சவுதரம்போற்கலக்குமெல்லைத்
தங்கியவோங்காரேசன்றாளிணைவழுத்தினோர்க
டிங்களங்கண்ணிவேய்ந்தசெஞ்சடைதாங்குமுக்கட்
புங்கவனாகித்தேவர்போற்றவீற்றிருப்பரொன்றோ. (கூ)

விருப்பொடுமற்றோர்கோயின்மேவியவிலிங்கந்தன்னைக்
கிருத்திவாகேசனென்பாராங்கதுகிளர்ப்பன்கேண்மி
னருத்தியிற்பூசிப்போரையடர்கயாசுரன்றன்மேனி
யுரித்துமேற்போர்த்தறன்னுலிப்பெயருற்றதன்றே. (க0)

ஆயிரங்கோடிசன்மமருந்தவம்புரிந்திட்டாலு
நேயநன்முத்தியெய்தார்நிகழ்த்தருங்கிருத்திவாசன்
கோயிலினெய்தினோர்தங்குலைகழல்வணங்கினோரு
மோய்வருமுத்திவீட்டினுறைந்தினிதிருப்பரன்றே. (கக)

என்றருங்கிருத்திவாசன்புகழினிதெடுத்துக்கூறி
மன்றமாணுக்கர்கேட்பமறைதெரிவியாதனென்போன்
துன்றிவானவர்கள்போற்றிதொழுதபார்த்தீசன்காதை
யொன்றியவுவகையோடுந்தெளிதரவுரைக்கலுற்றான். (கஉ)

பொறிவரிமடங்கல்பற்றப்புள்ளிமான்வெருவிமாழ்கிக்
கறைமிடற்றெந்தைகோயில்வலஞ்செயாக்கலங்கியோடி
யிறைவன்முன்னெய்துங்காலத்தெறும்வலியோடும்பற்றிப்
பிறைஎயிறுருகிரானெஞ்சம்பிளந்துயிர்குடித்ததன்றே. (கங)

ஈசன்முன்னிறந்தவாற்றுலிளம்பிறைக்கண்ணிசூடித்
தேசுடைமழுமானேந்திச்சிறந்தமுக்கண்ணினோடும்
வாசவன்முதலோர்போற்றமழவிடையுயர்த்தோனாகி
யாசறுகயிலைவெற்பினடைந்துவீற்றிருந்ததன்றே. (கச)

புதுப்புலவெறியுமான்றோல்புனைந்திடுசங்குகன்னன்
மதித்தருட்ருபிசாசமோசனவாவிதன்னுள்
விதிப்படிதவஞ்செய்காலைவெள்ளெயிற்றலகையெய்தித்
துதித்தலும்யாரையென்னச்சுழல்விழிப்பசாசுசொல்லும் (கரு)

முற்பவமதனில்யானோர்முனிமூதுக்குறைவின்றாகப்
பொற்பினைவியந்துவெய்யப்பொருள்குவித்தறஞ்செய்யாம
லற்புடைமனைவிகோவவயலவர்ப்புணர்ந்துவீய
வெற்பெழுந்தியங்கும்யாக்கைப்பேயுருவெய்தினேனால். (கசு)

இவ்வுருவொழியும்வண்ணமருள்புரிந்திடுதியென்றா
வவ்வியமவித்தசிந்தையந்தணன்பாதம்போற்றக்
கவ்வைநீர்வாவியாடிற்கழியுமில்வுருவமென்னத்
தெய்வநீரதனிற்றோய்ப்பசாசுருத்தீர்ந்ததன்றே. (கஎ)

கங்கையுமறுகும்வாசக்கடுக்கையுமயிர்தந்தூற்றும்
திங்களுந்தரித்தநீலகண்டமுஞ்சிறந்துதோன்ற
வங்கையின்மழுமானேந்திவிர்மணிவிமானமூர்ந்து
வெங்கதிர்ச்செல்வனுட்பட்சிவனுறைநேமிற்றன்றே. (கஅ)

ஆங்கதுநோக்கிமாயையறுத்துயர்சங்குகன்னன்
கோங்கிளமுலையாள்பங்கன்குரைகழல்பணிந்துபோற்ற
வோங்கொளியிரவிகோடியுதித்தபோலிலிங்கந்தோன்றத்
தீங்கறநோற்றமேலோனதனுழைச்சேர்ந்தானென்றான். (௧௯)

மருவருங்காசிதன்னின்மத்திமேச்சுரனைப்போற்றிப்
பொருவருங்கங்கையாடிநிற்றலும்பூதிபூத்த
வுருவொடுமருள்கூர்பாசுபதரவனும்றவிஞ்சைத்
திருவமர்வியாதன்செய்யசேவடிவணங்கினின்றார். (௨௦)

ஆங்கவர்தெளிந்துமுத்தியடையவஞ்செழுத்தினுண்மைத்
தீங்கறுமுனிவனோதச்சிற்பரமாகியோங்கிப்
பூங்கதிரெறிக்குஞ்சோதிதோன்றலும்புனிதமாகி
வீங்குபேரன்பிற்பாசுபதரதின்மேவினாரே. (௨௧)

பேரொளிமறைதலோடும்பேசருந்தவத்தின்மிக்க
வாரியவியாதற்போற்றியருமறைமுனிவர்கேட்பக்
கார்வயிறுடையநீண்டுக்கதிர்மணிமுகடுவேய்ந்த
சீர்கொளாலயத்தின்மேவியக்கதைதெரிக்கலுற்றான். (௨௨)

தண்ணறுந்துளவத்தாரோன்கண்டிகைமாலைசாத்தி
வெண்ணிலாவெறிக்குந்தூயநீறுமெய்விளங்கப்பூசிப்
பண்ணவர்பழிச்சும்பாசுபதருயர்விரதம்பூணா
வெண்ணருங்காலம்வைகியிருந்தவமியற்றினானே. (௨௩)

புரிவருந்தவத்தினோன்மைநோக்கிவெண்ணீறுபூசிக்
கரியுரிபோர்த்தமேனிக்கண்ணுதற்சாமியெய்தத்
திருமறுமார்பனுள்ளமகிழ்ந்துசேவடியின்வீழ
வருள்புரிந்தெழுதியென்னவுரைத்திஃதறையலுற்றான். (௨௪)

உன்னையானாகப்பாவித்துவப்பொடுபணிந்தோர்யாரு
மென்னிருதாளிற்சேர்வரெனவரமளித்தானென்னப்
பன்னருமறைகள்சேர்த்துப்பாரதம்புகன்றமேலோன்
றன்னருந்தீர்த்தம்யாவுந்தோய்ந்தவனுறைந்தான்மன்னோ. ()

மையறுபிரயாகையாதிமகாலயதீர்த்தமீறா
வெய்தியதீர்த்தம்யாவுமினிதினினாடிமுக்கட்
டையலோர்பாகன்பாதந்தாழ்ந்துநாம்மறைவியாத
னையமேற்றுண்டுகாசியமர்ந்தினிதிருக்குநாளில். (௨௬)

இடுபலியேற்பயாரும்வழங்குநரின்றியோர்நாட்
கடவுணன்மறைவியாதன்காசியைச்சபிக்கவெண்ணி
யடைதலுமுலகமீன்றவன்னைமுன்வந்துதோன்றித்
தொடிவளைக்கையாலையங்கடிஞையிற்சொரிந்திட்டாளே. (௨௭)

அய்யமுண்டிருக்கும்வேலையருந்தவவெகுளிமிக்கோய்
மய்யறுகாசிதன்னின்மருவலையென்னவன்னை
செய்யதாள்வணங்கித்தீதிலட்டமிபதினான்கென்ன
வெய்துநற்றிதியிற்போதந்திறைஞ்சுகவருள்கவென்றான். (௨௮)

என்னலுமுருகவேளையங்கரன்றன்னையீன்றுங்
கன்னிமைநீங்காதையனிடப்புறங்கவர்ந்துகொண்ட
வன்னையாங்கதனைநேர்ந்துமறைதலுமறைந்தவண்ணந்
தன்னிகரிலாதோன்முக்கட்டாணுவைப்பணிந்தானென்றான்.()

தவலருந்தவத்தின்மிக்கமார்க்கண்டன்றகவினோடு
முவவுவெண்மதியமானுமொருகுடைநீழறன்னி
னவையறுமுலகங்காக்குநாமவேற்றருமன்கேட்பப்
பவமறுத்துயர்பிரயாகைமான்மியம்பகர்ந்தானன்றே. (௩௦)

அரும்பெறற்பிரயாகைதன்னினுவினையளித்தோராவிற்
பொருந்துநுண்மயிர்களெண்ணிலெத்துணைபுகன்றதாகுந்
திருந்தவத்துணையகாலந்தெய்வவான்றருவினீழல் [ர்
முருந்தவெண்ணகையார்கொம்மைமுகிழ்முலைதிளைப்பவாழ்வா

கருதரும்பிரயாகைதன்னிற்கன்னியைவிதியினீந்தோ
ருருவவானுதலாரோடுமுத்தரகுருவினெய்தி
யிரவுநண்பகலும்விள்ளாதிளமுலைப்போகமாந்தி
விரைகமழ்தருவினீழல்விண்ணவர்போலவாழ்வார். (௩௨)

புண்ணியநன்னீராடப்போகுநரோற்றினேறி
நண்ணுறுந்தீமையேனையூர்திபுநவையதாகு
மண்ணலம்பிரயாகைதன்னினடந்துசென்றாடினோர்கள்
விண்ணிடையளப்பில்காலங்கிளையொடுமேவுவாரே. (௩௩)

பொருப்பெழில்கவற்றிவீங்கும்புணர்முலைக்கழைகொண்மென்
றொருப்பசிபுளினந்தன்னிலாருயிருலந்தோர்யாருங் [ரே
கருப்புரங்கமழுஞ்செவ்வாயரம்பையர்களின்கொண்டோங்கு
மருப்பிளமுலையின்மேவியமரர்மாட்டிருப்பர்மாதோ. (௩௪)

கங்கையம்புனலிற்றோய்ந்தோர்கருதினோரதனின்வீய்ந்தோ
ரங்கதினடைந்துமாகமாடினோரடைந்தபேறு
பொங்குநீர்யமுனையாடப்பொலிவொடும்பெறுவரொன்றா
லிங்கதன்சிறப்பையாரேயெளிதினிலிசைக்கவல்லார். (௩௫)

ஆன்றமூவுலகத்துள்ளநான்மறைந்திடுகடவுட்டீர்த்த
மூன்றரைக்கோடியென்னமொழிகுவரவைகள்யாவுஞ்
சான்றெனவெங்குநின்றுசராசரமனைத்துமுன்ன
மீன்றவன்சடையிற்றூங்குங்கங்கையோடிணைக்கலாகா. (௩௬)

என்றுமார்க்கண்டன்கூறமனுமுதலிறைவர்தோற்றந்
துன்றுசெங்கதிரோன்மாட்சிசுடர்மதிப்பதத்தினெல்லை
குன்றினதளவையண்டத்தியற்கைநீகூறுகென்ன
மன்றநற்றருமன்கேட்பமறைமுனியுரைத்தானன்றே. (கஎ)

காசியின்சிறப்புரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—உஉகூ௫.

---

முப்பத்தேழாவது

## மனுமரபுரைத்தவத்தியாயம்.

குடுமிவரைவிற்கால்குழைத்துப்புரமூன்றெரித்தகுறுநகை
யோனடியின்மலர்தூஉய்வெங்கூற்றைவென்றோன்றருமற்கறை
ந்தபடி, கடவுண்முதுமோட்டாமையுருவெடுத்தோய்கழறுகெ
னவயிரப், படையோனேடும்யாழ்முனிவன்கேட்பவினிதிற்பக
ர்ந்தனனால். (க)

ஆலக்கருஞ்சேறுமிழெயிற்றவுரவின்சுடிகைமேற்கிடந்த
ஞாலம்புரக்குஞ்சுவாயமபுமனுவாநாமவடிவேலோன்
மாலைக்கதிர்வேலுத்தானபாதன்றனையுமறிதிரைநீர்
வேலைப்புவிபோற்றிடும்பிரியவிரதன்றனையுமினிதளித்தான்.(உ)

அரசுவிழுங்கிவாய்கரந்தவைவேலாக்கினீத்தானும்
புரசையானையடல்வேந்தர்போற்றுங்கழற்காலக்கினியும் [னுங்
விரைசென்மான்றேரவ்வியனென்றுரைக்கும் வேந்தர்பெருமா
கரைசெய்கடலந்தானையுடைக்கழற்கால்வாகுவெனும்வேந்தும்.

ஒன்னாரம்பொன்முடியுரிஞ்சிப் பரந்தவொளிர்பொற்கருங்
கழற்கான், மன்னர்போற்றும்வடிவாட்கைவபுட்டிமானுந்துதி
மானு, மின்னுக்கதிர்கானெட்டிலைவேல்விறல்கூர்மேதையெனு
ம்வேந்துங், கன்னற்சிலைவேலெனவெவருங்கழறுமெழில்மேதா
திதியும். (ச)

உலகமனைத்தும்பொதுநீக்கியுரவுச்செங்கோறிசையளப்ப,
நிலவுக்கவிகைதனிநிழற்றுநிகரில்சவனனெனும்வேந்தும், புலவு
ங்கதிர்வேன்மாற்றரசர்புண்ணீர்மாந்தித்தேக்கெறியுங், கொலை
வாட்டடக்கைச்சோதிடுமானென்னுங்குவவுத்தோளானும். (௫)

வேறு.

ஆயிரஞ்சுடிகைப்பணுடவிகிடந்தாங்கலையெறிக்கடல்களே
டுத்த, மாயிருஞாலநிழற்றுசெங்கோலின்மனுமுறைநிறுத்திய
ரிசில், பாயவண்புகழ்சேர்திறலுடைப்பிரியவிரதனும்பார்த்து
பனளித்த, நேயநற்புதல்வராங்கவர்க்கிறைவனீணிலம்புகுத்
மையுரைப்பாம். (சா)

வேறு.

உரைத்தபுகழ்சால்மைந்தர்தமிலொளிர்வேல்மேதையுலம்
பொருத, வரைத்தோடிறலக்கினிவிறல்கூர்வாகுவென்னுமடல்
வேந்தர், நிரைத்தபுலனைந்தையும்பொறியினிகழாவண்ணநிலைநி
றுத்தி, யருத்தியோடுமரசுரிமையிகழ்ந்துமுனிவரராயினரால்.()

சம்புத்தீவுக்கிறையாகத்தழல்வேலாக்கினீத்தானைச்
செம்பொன்மவுலிசூட்டியுலகேத்துந்திறன்மேதாதிதியை
யைம்பொற்பிலக்கத்தீவின்முடிசூட்டவ்புட்டுமானையரு
ணம்பும்புகழ்ச்சன்மலித்தீவினுதனுகமுடிகவித்தான். (அ)

அலகில்கீர்த்திச்சோதிடுமான்றன்னைக்குசத்தீவினுக்கரசா
யிலகுமவுலிபுனைந்தரசரோத்துங்கழற்காற்றுதிமானை
நிலவுபுகழ்சேர்கிரவுஞ்சத்தீவுக்கிறையாகெனநிறுத்தி
யுலகம்புகழ்சாகத்தீவினுயரவ்வியனைமுடிகவித்தான். (கூ)

சான்றோர்புகழ்புட்கரத்தீவைச்சவனற்களித்தானவ்வேந்தன்
மான்றேருடைத்தாதகிதனையுமாவீரனையுமகிழ்வினுட
னீன்றானுயர்புட்கரத்தீவையியன்மாவீரவருடமிக
வான்றபுகழ்த்தாதகிவருடமாகப்பிரித்தாங்கவர்க்களித்தான்.()

தரியார்புகழவ்வியனென்போன்சலதன்குமாரன்சுகுமார
னெரிவேலங்கைமணீசகன்விற்சுகுமோதரன்மதாதியெழி
லுருவந்திகழ்மாத்துருமனையும்பயந்தானுரைக்குமவர்பெயரா
மருவுஞ்சாகத்தீவதனைப்பகுத்தாங்கவர்க்குவழங்கினான். (கக்)

துதிமானென்போன்மனோகரன்றுந்துபிநீள்பிரபைவான்கண்ண
மதிசேரந்தகாரன்முனிநகுலனிவரைமகிழ்ந்தளித்தா [ன்
னுதவுமைந்தர்நாமத்தால்வருடமாக்கியுவப்பினொடும்
விதியினன்றிற்பெயர்த்தீவைவீற்றுவீற்றாய்ப்பகுந்தளித்தான் ()

தூமவடிவேற்சோதிடுமானென்போன்றுகடருதபிதன்விற்
காமனனையவேணுமான்கபிரன்றிருதிசுவையிந்தன்
றாமவடிவேற்பிரகாமனொடிலம்போதரனைத்தந்தவர்த
நாமவருடமாய்ப்பிரித்துக்குசத்தீவவர்க்குநல்கினான். (கங)

ஸ்வைவேற்றடக்கைவபுட்டுமான்சுவேதனரிதன்சீமூத
னெவ்வாச்சீர்த்தியுலோகிதன்சுப்பிரபன்மானன்வயித்துதனுந்
தெவ்வேத்தெடுக்குஞ்சிறுவரையீன் றவர்நாமத்திற்றிகழ்வருட்
வெவ்வேறாகச்சன்மலித்தீவதனைப்பகுந்துவியந்தளித்தான். [ம்

மேதாதிதியென்றுரைத்திடுவோன்விளம்பும்சிசிரன்சாந்தபய
னோதவரியசுகோதயனனந்தன்சிவன்கேமகனொளிறுந்
தீதில்வேற்கைக்கஞ்சனெனுஞ்சிறுவர்ப்பயந்தாங்கவர்பெயரா
லோதும்பிலக்கத்தீவதனைவருடமாக்கியுவந்தளித்தான். (கரு)

வென்வேலாக்கினீத்தானும்வேந்தர்வேந்தனடிகளத்தி
னென்னார்செம்பொன்மணிமவுலியுழுதகழற்கானுபியையுங்
கன்னற்சிலையுமலர்க்கணையுமொளித்தகாமனெனும்பொற்பார்
மின்னுச்சுடர்வாட்கிம்புருடனென்னும்விறல்கூர்வேந்தனையும்.

உடலுஞ்சமத்திற்பகைவருயிருண்ணும்வடிவாளரியினையு
நெடுநல்யானைவயவேந்தர்நிணம்வாய்துய்ப்பினல்லாது
தடறுபுகுதாவடல்வடிவேற்குரிசித்தினையுந்தரியலரூர்
மடியச்சிறிதுவிழிசேக்குமிரண்ணுவானுமன்னனையும். (கஎ)

ஒன்னார்மகளிர்மங்கலநாண்வாங்கவாங்குமுயர்சிலைக்கை
மன்னர்திறல்கூரிரமியனும்வேந்தன்றனையுமருவலரைத் [யாப்
தென்னம்புலத்திற்குடியேற்றி யன்றிக்கடைக்கண் சிவப்பொழி
பொன்னங்கழற்காலிளாவிரத னென்னும்போர்வேலரசனையும்.

குடாதுங்குணதுந்தெனுதுமுயர் குடுமிப்பொன்னங் குன்றுறையும், வடாதுந்தனதுகைப்படுத்தும்வயங்கூர்கேதுமான்றனையுங், கடாமூற்றிருக்குந்திசைக்களிறுகவிக்குங்கொடைப்பத்திராச்சுவனும், விடாதசீர்த்திமன்னனையும்வியப்பினினிதினீன்றனனல். (கசு)

இமயவரைத்தென்புலவருடநாபிக்கீந்தான்கிம்புருடர்க்
கமைவிலேமகூடமெனும்வருடமதனையுவந்தளித்தான்
கமலப்பொருட்டுவட்டவணைக்கன்னிப்பிரியாவரிகாக்க
விமலமாகுநயிடதப்பேர்வருடம்வியப்பினல்கினனல். (உ0)

மேருகிரிசூழிளாவிரதவருடந்தன்னையிளாவிருத
னூர்வமொடுகாத்திடுகவெனவம்பொன்மவுலிசூட்டினன்
கார்தோய்நீலவரையுடுத்தவருடமிரமியன்காக்கச்
சீரசால்கடவுண்மணியிமைக்குந்திருமாமவுலிசூட்டினன். (உக)

வான்றோய்குடுமிச்சுவேதவரையுடுத்துவருடமதிவல்ல
சான்றோர்புகழுமிரண்ணுவான்றனக்குநல்கிக்குருவென்னு
மான்றகேள்வியரசற்குச்சிருங்கவரைக்குத்தரமாகத்
தோன்றும்வருடந்தனியாளச்சுடர்மாமவுலிசூட்டினன். (உஉ)

மேருவரைக்குக்கிழக்காகும்வருடம்விறபத்திராச்சுவனுக்
கார்வமோடுமினிதளியாவுறைந்தவரையின்மேற்காய
சீர்சால்கந்தமாதனமாம்வருடங்கேதுமானென்னும்
போர்வேலரசர்க்கினிதளித்துப்புனைமாமவுலிசூட்டினன். உங

இன்னவாறுதான்பயந்தவிகல்வேலரசரொன்பதின்மர்க்
கொன்னார்குடங்கைத்தலையணையா யுறங்குமம்பொன்மணிமுன்
மன்னனுக்கினீத்தானும்வடிவேற்காளைதனியளிக்குந் [றில்
கன்னதுலகம்பகுத்தளித்துத்தவராமுத்தியெய்தினன். (உச)

இமயப்பொருப்பின்றென்பாலாம் வருடங்காக்குநாபியெ ன்போன், கமலப்பொகுட்டுவீற்றிருக்குமேருவென்னுங்கனக் குழையின், குமுதச்செவ்வாய்நலம்பருகிவிடபற்பயந்தான்கூறு மவ, னமையாவென்றிப்பரதன்முதலரசரொருநூற்றுவர்ப்பய ந்தான். (உ௫)

அரசர்மவுலிமணியுரிஞ்சப்பறைந்தவம்பொற்கனைகழற்காற் பரதனுலகந்தனிகாக்கப்பைம்பொற்கதிர்மாமுடிசூட்டி யுரவுத்திரைநீர்க்கடல்வலைய மொருகோலோச்சியினிதளிக்கும் விரைகொப்புளிக்குநறுந்தெரிய விடபன்முத்திவீடடைந்தான்.

வேறு.

கப்புவாய்ச்சூலநெருப்புவிட்டெறிக்குங் கண்ணுதற்சாமி யைவணங்கித், தப்பறுவாய்மைக்கொருவனென்றுரைக்கும்பர தனீன்றருடனிமைந்த, னெப்புவனத்திலரசரும்வணங்கவெரிம ணிக்கதிர்முடியுரிஞ்சித், துப்புறழ்கமலப்பதந்தழும்பிருந்தசும தியென்றுரைத்திடுந்தோன்றல். (உஎ)

வேறு.

மலையுஞ்சமத்திலொன்னலர்தம்மருமம்முகந்தோள்வாளி கண்மேய்ந், தலையுங்குருதிநிணச்சேற்றிற்பருஉத்தாளாழ்ந்துக ரியலறச், சிலைகால்குழைக்குஞ்சுமதியருண்மைந்தன்றெருண் டோர்தீபமெனக், கலைமுற்றுணரிந்திரத்துய்ம்மனென்னுங்கதி ர்வேற்படையுழவன். (உஅ)

குருதிப்பெருக்காறுவட்டெடுத்துக் கொழிக்கும்வென்வே லாங்கவன்ற, னரியபுதல்வன்பரமேட்டியவன்றன்புதல்வனரு ந்துப்பிற், செருவேற்றெழுந்தவொன்னலர்தஞ்சென்னிபிடுங்கி ப்பந்தடிக்குங், கரடக்களிற்றின்பெரும்பாகன்பிரதிகாரனெனு ங்காளை. (உகூ)

வேறு.

வெளிநெறிகேள்விப்பிரதிகாரப்பேர்வேந்தனீன்றருளிய மைந்தன், களிறெடுத்ததுக்கிக்கருங்கவுட்கிடங்குதூர்த்தெரிக னற்றுகட்பேய்க, ளளறுபட்டொழுகுமரத்தநீர்க்கடலுள்ளாட வெங்களத்திடையெய்தி, யொளிறுவேறிரித்துவாகைகொண்டு லவும்பிரதிகத்தாவெனுமுரவோன். (௩0)

விண்படர்சீர்த்திப்பிரதிகத்தாவின்விறல்கெழுவேலுடை மைந்தன், கண்படாமுரசங்கவிழ்ந்துகண்படுப்பக்கறையடிக்க ளிற்றினங்கோடு, மண்படவீழ்ந்துகருங்கலிற்கிடப்பவாளமர்க் களத்தினிலொன்னார், புண்படவிதிர்க்கும்புலவுவேலுழவன்ப வனெனும்போர்புலியனையான். (௩௧)

ஆங்கவன்புதல்வ னுயர்பவோகினித னவன்மகன்பொற்பி திரலனிந்த, கோங்கிளமுலைகள்சாடலுங்கிழிந்தகுங்குமமழிந்து

விழ்குழம்பு,தேங்கிடுமந்தாரகலமால்யானைத்திறன்மருப்பொடி த்திடுதிறல்கூர், வாங்குவிற்கொருவனெனும்பிரத்தாபனென்றி டும்வயங்கெழுவேந்தன். (௩௨)

மற்றவன்புதல்வன்வாகைவேறுவட்டா வாங்கவனளித்திடு மைந்தன், பற்றலர்மகளிர்கருங்குழற்கற்றைபடர்தருமுளரியல் பரந்து, சுற்றிநின்றிரப்பநெடிபடுகாட்டிஞெளித்திடத்துணைவி ழிச்செருக்கும், வெற்றிவேல்விரசனுங்கவன்புதல்வனரனென வுரைத்திடும்வேந்தன். (௩௩)

விரிகடற்றிரைதாழ்வெண்மணற்குன்றின்மேவுகூன்முதி ந்தகூன்புறத்து, வரிவளையேறியிளவெயிற்காயும்வளங்கெழுசெ ய்தலஞ்சேர்ப்ப, னரனுடைமைந்தனுயர்சதசித்தாங்கவனினித எித்தருண்மைந்த, னிரசசித்தென்னவுலகெலாம்புகழவினுலக த்தினைப்புரப்போன். (௩௪)

முருந்திளமுறுவலமுதுகுகுதலைமங்கையர்முலைநலம்விரு ம்பிக்,கரும்புறப்போந்தைக்கருக்குவாளறுத்தபுரைதொறுங்கா மநீரொழுக, விருந்தெனப்புகுந்துதேவருமடன்மாவேறிடும்வி யனகர்காக்குந், திருந்துசீரிரசசித்தருண்மைந்தன்றிறல்கெழுவி ச்சுவசோதி. (௩௫)

வெள்ளிவெண்முளையவாம்பியுமரிலும் வெண்ணிலாமுன் றிவிற்பூப்பப், பள்ளநீர்க்கரையிற்சுள்ளியினெழுந்துவெள்ளெ ருக்கெங்கணும்படர, நள்ளலார்புரங்கள்பாழ்படத்தாக்கும்வி ச்சுவசோதிநன்மைந்தன்,புள்ளவாய்க்கிடந்துபுகைந்தழலகொ ழிக்கும்புலவுவேலுடைச்சயத்திரதன். (௩௬)

வேறு.

என்றுமனுவின்குலத்துதித்தவெழிவேலரசர்மரபுமவர்
நன்றுபுரியுஞ்சரிதமும்யாநவின்றேமதனைக்கேட்டோர்கள்
துன்றுபாவத்தொடரகற்றித்தொலையாச்செல்வந்தனிஞரு
மொன்றிவாழ்ந்துகடைமுறையிலுலவாமுத்திபுறுவரொன்றான்.

மனுமரபுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௨௩௩௨.

---

முப்பத்தெட்டாவது

## மண்டலவளவையுரைத்தவத்தியாயம்.

பாயதெண்டிரைப்பரவைசூழ்புவிமுதலாக
வேயநல்லுலகனைத்தினதளவையுமிசைக்கென்
றுய்கதிர்ப்பசும்பொன்னகர்க்கரசும்பாழ்முனிவ
மேய்வனப்பொடுகேட்டலுநாரணன்விளம்புவ. (௧)

கரியகூறிருடைத்தவெண்டிங்களங்கதிரோ
ட்ருணமெல்லிதழ்ப்பங்கயவாண்முகமலர்த்து
மிரவிசெங்கதிரொத்துணைநடக்குமத்துணையும்
பரவைமாநிலத்தளவெனப்பகர்ந்தனர்மேலோர். (௨)

குவலயத்தின்மேற்கூறிருட்பிறம்பெடுத்தருந்து
மவிர்செழுங்கதிராதவன்மண்டலத்தளவும
புவருலோகமேற்றுருவமண்டலத்துணைபொருந்தல்
சுவருலோகமென்றுரைத்தனர்மறைப்பொருடுணிந்தோர். (௩)

ஆங்கணுவகன்பிரவகனனுவகன்சிறப்பின்
னீங்குசங்கனிவகன்மேற்பராவகனதன்மே
லோங்கிநின்றதோர்பரிவகனெனும்பெயருடைய
தீங்கில்வாயுசக்கரங்களேழுந்தனிசிறக்கும். (௪)

உரைத்தபாரினூறாயிரம்யோசனையுயர்ந்த
தரத்தவெங்கதிராதவன்மண்டலமதன்மேல்
விரித்தயோசனையத்துணையுயர்ந்ததுவிளங்க
வரைத்தசாந்தினுங்குளிர்மதிமண்டலமாமால். (௫)

சொன்னமண்டலமீதுநூறாயிரத்தொகையின்
மன்னும்யோசனையுயர்ந்ததவ்வுடுவின்மண்டலமா
மன்னதற்குமேலிரண்டுநூறாயிரத்தளவை
முன்னும்யோசனைகிரகமண்டலமெனமொழிவார். (௬)

அதனினேங்குநூறாயிரம்யோசனைக்கப்பான்
மதியின்மேம்படுமேழ்பெருமுனிவர்மண்டலமா
மிதனின்மீதுநூறாயிரம்யோசனையேழுந்
துதியின்மேயதுதுருவமண்டலமெனச்சொல்வார். (௭)

அலகிறுரகைமண்டலங்கிரகங்களனைத்து
நிலைபெறும்படிநிறுத்துவன்றுருவன்மற்றவன்பா
லிலகுமைம்படையேந்தியவெறுழ்வலித்தடந்தோ
ளலர்பசுந்துழாய்மாயனுந்தருமமுமமரும். (௮)

அலர்செழுங்கதிராதவன்மண்டலத்தகல
மூலையிலொன்பதினாயிரம்யோசனையதனிற்
குலவுமும்மடங்கதிகமென்றுரைக்குவர்கோதி
னிலவுகான்மதிமண்டலத்தளவையினெறியின். (௯)

மருவுபூமியின்சாயையாமிராகுமண்டலமற்
றிரவிமண்டலந்திங்கள்மண்டலமெனுமிரண்டி
னுரைசெய்கின்றதோரளவதாயவற்றின்கீழலவுங்
கரியதாகுமற்றதனிறமென்பர்கற்றுணர்ந்தோர். (௧௰)

இந்துமண்டலந்தனிற்பதினறிலொன்றியையு
மந்தில்சுக்கிரமண்டலமதனையெண்கூறு
தந்தவற்றினொன்றேழியவேழ்கூற்றினிற்றயங்கு
நந்தலில்லதோர்வியாழமண்டலமெனநவில்வார். (௧௧)

நவிலவியாழமண்டலத்தினைநான்குகூறுக்கி
யவையிலொன்றொழித்தியன்றமூக்கூற்றினதளவாங்
குவலயந்தருகோதில்செவ்வாயின்மண்டலமூந்
தவலருந்திறற்போகுயர்சனியின்மண்டலமும். (௧௨)

வான்படர்ந்திடுசனியின்மண்டலத்தளவதனி
னொன்கினொரளவாம்புதன்மண்டலங்கைவான்
மீன்கண்மேவியமண்டலமியாவையும்புதன்வா
ழான்றமண்டலத்தளவையுங்குறைந்தவுமாகும். (௧௩)

அந்நநற்சனிவியாழமங்காரகனவிலின்
மந்தகாரியர்மற்றையர்நால்வரும்விளைவி
னுந்துமூர்த்தியினுலாவுவர்த்தக்கணையனத்தி
னந்துவெங்கதிர்கோட்கெலாங்கீழுறநடக்கும். (௧௪)

சேட்டுவெங்கதிர்ப்பருதிமேன்மதிசெலுமதன்மே
லீட்டுதாரகைக்கணஞ்செலவயருமற்றிதன்மேற்
றீட்டரும்புதன்செலவுறும்புன்றடந்தேர்மேன்
மோட்டுவார்கதிர்ச்சுக்கிரன்முறையினினடக்கும். (௧௫)

அறைந்தவெள்ளியின்மீதிலங்காரகனடக்கு
முறைந்தமற்றவன்மேலுயரந்தணனுலவுமப
பிறங்குமற்றவன்மேற்சனிமென்மெலப்பெயருஞ்
சிறந்தவேழ்பெருமுனிவரரவர்க்குமேற்றிரிவார். (௧௬)

துருவனேழ்பெருமுனிவர்மேலுறைந்திடுஞ்சுடர்கா
லிரவிவானவனடவுறுமேழ்பரித்தடந்தேர்
பரவுமொன்பதினுயிரம்யோசனைப்பரப்பாம்
புரவிபூட்டியதண்டதற்கிரட்டியாய்ப்புகல்வார். (௧௭)

அலர்செழுங்கதிர்ப்பருதிதேரச்சினதளவை
யுலவுகின்றநூற்றைம்பத்தேழிலக்கம்யோசனையா
நிலவுநாபிமூன்றேரமைந்தாறுநேமியதாய்த்
தொலைவில்யாண்டுருக்காலசக்கரமதிற்சுழலும். (௧௮)

பச்சைவாம்பரித்தேரினிற்பதிந்திடுமற்றை
யச்சின்யோசனைநாற்பத்தையாயிரத்தைஞ்ஞூ
றுச்சமெய்தியதுருவன்மேலுறையுமுன்னச்சின்
வைச்சநேமிநீண்மானசோத்திரவரைத்திரியும். (௧௯)

வேதசந்தச்சோரேழுமத்தேரினில்விசித்த
திதில்வாம்பரியீராறுபருதியஞ்செல்வ
ரோதமற்றமூவுலகமும்விளக்குவரொன்னி
லாதிமூர்த்தியாமூவருமவருருவென்றுன். (உ0)

மண்டலவளவையுரைத்தவத்தியாயமுற்றிற்று.
ஆ திருவிருத்தம்—உகூ௫௨.

முப்பத்தொன்பதாவது
## ஆதவர்ச்சிறப்புரைத்த வத்தியாயம்.

உரைசெய்பன்னிரண்டாதவர் நாமமுமொழுக்கும்
விரைசெல்தேரினிலேறுநர் நாமமுமவிளம்பென்
றரசனுகியவிந்திரன்முனியொடுமறையத்
தரையொரோழையுமளந்தமாறகவொடுசாற்றும். (க)

வேறு.

விளங்குறுந்தாதா வரியமா வொளிருமித்திரன் வருணன் வெங்கதிர்க, ளங்குசக்கர னீள்விவச்சுவான் பூடாத்துகளில் பர்சன்னிய னஞ்சன், களங்கமில்பக னொளிருவொறிதொட்டா விட்டுணுவென்னநன்கதிரோ, ருளங்கவர் நாமம்பன்னிரண்டேழி ற்றிங்கள்பன்னிரண்டினுமுதிப்பார். (உ)

புலத்தியன்புலகனத்திரிவசிட்ட னங்கிராப்புலனெறிபிருகு, நலத்தகுபாரத்துவாசனல்லறஞ்சேர்கவுதமன்காசிபன்கிருது, வலப்பில்சிரச்சமதக்கினிதவமொழியாக்கவுசிகன்முறையிறுதவரைய, சொலப்படுந்திங்கடோறுமோரொருவர்தொன்மறைபாடிபேதுவரால். (ங)

வருசதக்கிருத்துரதவுசன்சுவாருக்கிருதன்வேற்சுரதனீள்வருண, வருடருசுசேனன்சேனசித்தொடுதாரக்கனல்லரிட்டநேமியனு, டொருவருமிரசசித்துவாட்டடக்கைச்சத்தியசித்தெனுமுரவோர், பருதிதேர்க்கயிறுபற்றியூழ்முறையின்மதிதொறும்பயில்கிராமணியர். (ச)

அரத்தவேற்கேதிதிகழ்பிரகேதியடற்பவுருடேயனிரனிதன், விரித்தசிற்சற்பன்வியாக்கிரன்வடிவேற்றனனியனைதன்வித்தியுத்தோ, டிரைந்துவண்டறைதார்த்திவாகரன்பிரம தேவனிளக்கிரேனுபேத, னுரைதகவாதவர்தந்தேர்முனோர்திங்கட்கொருவராயுலவுவாளரக்கர். (ரு)

வாசுகிசிங்கஞானன்வெஞ்சீற்றத்தக்ககன்வளேந்தமுள்ளெயிற்றுத், தேசுடைச்சர்ப்பபுங்கவனேலாபத்திரன்சங்கபாலன்சீ,ரா சமுமயிராபதன்றனஞ்செயன்மா பத்மன்காற்கோடகனமுல்வா,

யேசில்கம்பளனச் சுவரதன்முறையி னிர்வீதோர்மதிதொறும்ப ரிப்பார். (சு)

மன்னுதும்புருயாழ்நாரதனஞ்சன் வழாதிசைநவின்றிடும காப், பன்னுசீர்விசுவாவுயாசேனன்னசுசியருவாவசுப்பழிப்பி ல், துன்னருங்கேள்விப்பார்வசுத்துகடீர் சித்திரசேன னூரனு யு, வின்னிசையிரவி வாச்சமெனென்றவர்க ளிருதுவுக்கிருவர்பா ட்டயர்வார். (எ)

பட்டுடைக்காஞ்சிப் பாவைநீளல்குற் பணேமுலேசுமந்தறவ ருந்து, மிட்டிடைக்கிருத்த லேயெனுமணங்கு மேர்குடியிருந்த றவீங்கி, மட்டவிழ்நறுந்தார்வா வருடலங்கோட்டுமண்கொ ண்டறவளர்ந்தி, விட்டொளிவிரிக்கும்பிறைவடஞ்சுமந்தவெம் முலேப்புருசிகத்தலேயும். (அ)

யானெனதென்னுஞ்செருக்கறுத்துயர்ந்தவிருந்தவமுனிக் குறும்பகற்றும், பானலங்கருங்கட்செய்யவாய்வெண்பற்பாசி ழைப்பொலங்கொடி வளேய, மேனகையென்னும்வெம்முலேயண ங்கும் விண்ணவர்மடலிவர்ந்திரங்குந், தேன்மொழிச்சகசன்னி யையெனவுரைக்குந்திருவுறழ்தோற்றமாமயிலும். (கூ)

வண்டுவீழொலியின்மாளிகைசூழ்ந்த வணரிருங்கருங்குழ ற்செவ்வாய்க், கெண்டையோடிகலுஞ்சில்லரிநெடுங்கட்கிளர்மு லேப்பிரமலோசனேயுங், குண்டலஞ்சுடரும்வள்ளேவார்காதுகுவி முலேச்சந்தனந்துடைக்கு, மண்டரோக்கறவுபுரிந்திடுமனுமலோ சையென்றுரைத்திடுமணங்கும். (கo)

இலேத்தொழிற்புறத்தவெரியுமிழ்மதாணியிறைவடமணிந் தெழில்சுமந்த, மலேக்கவின்கொண்டமுலேக்கிருதாசியென்றிடு மதர்விழியணங்குங், கொலேத்தொழின்மறலிகற்றிடம்பயிற்றிக்கு ழைபொருதலேக்கும்வாட்டடங்கட், சிலேக்கரும்புருவவிச்சுவா வசியென்றுரைத்திடுந்தேமொழித்திருவும். (கக)

முழுநிலாமுத்த மணிவடஞ்சுமந்து மூரிவேட்கரசியலளித் துத், தழுவுதற்கடங்காவனமுலேச்செவ்வாய்த்தளிரியலுருப்பசி யென்னுங், கழையுறழ்பசுந்தோண் மரகதக்கொடியுங் கவின்சி றகிடந்தமென்கொங்கைக்,குழைமுகம்பூத்தகுளிர்மதிவதனப் ருவசித்தெனுங்கொடியும். (கஉ)

அனுவினேவளையினெண்ணுமென்மருங்குலாடகப்பொல கிரியிணேயை, யணுவெனவுரைப்பவளர்ந்தநீள்கொங்கைத்தி லாத்தமையென்றிடுமணங்குந், துணிகதிர்த்திங்கள்பொருவும் ணெற்றித்துடியிடைக்கரியமென்கூந்தற், பணியரவல்குற்சி ட்டையென்றுரைக்கும்பசுங்கொடியனேயபைந்தொடியும். ()

என்னுமீரறுவரின்னிளவேனில்முதலியபருவமோராறும், பொன்னவிர்குடுமியாழியம்பொருப்பைப் பொலிவொடுவலங் கொடுதிரியு,மின்னுவெஞ்சுடர்காலிரவிமுன்னிருவரிருவராய்மு றைமையின்மேவிக்,கன்னலினமுதிற்கனிந்திடப்பாடிக்கண்மணி குளிர்ப்புறநடிப்பார். (கச)

இன்னணமுறைத்தோர்யாவருங்கதிர்காலிரவியோடியைந் துநாளுரு, மன்னுயிரளித்துமழைவளஞ்சுரந்துமாற்றருந்தீவி னைகடிந்துந், துன்னுவெம்பனியிற்றலங்குதலொழியச்சுடருமி ழ்வெயிற்கதிர்விரித்துப், பொன்னவிர்குடுமிப்பொலங்கிரிதன் னைவலங்கொடுபோக்கயர்ந்திடுவார். (கரு)

மக்கள்வானவர்கள்பிதிர்க்கண்மற்றிவரைவளர்ப்பதுவயங் குமுச்சுடரா, முக்கணெம்பெருமான்முதலமுத்தேவராயதூஉ ம்வேதத்தின்முடிவாய்த், தொக்கவெவ்வுலகினகம்புறந்தழுவிச் சுடர்க்கொழுந்தாய்வெறுவெளியாய்,மிக்கபேரொளியாஞ்சதா சிவன்றானும்வெங்கதிரோனம்மறைவிளம்பும். (கசு)

ஆதவர்ச்சிறப்புரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—உநசுஅ.

நாற்பதாவது

## ஆதவர்கதிர்ச்சிறப்புரைத்த வத்தியாயம்.

ஆதவன்கதிரிலேழ்கதிர்ச்சிறந்தவவற்றினிற்சுசுமுணைத்தோ டு, மேதமற்றெளிருமியலரிகேசமிரண்டுவான்புதற்கொளிவழ ங்குந், தீதறுவிசுவைவிசமெனுங்கதிர்வான் கேழொளிவெள்ளி யைவிளக்கு,மேதகுவசுரம்விளங்குகங்கியமமண்மகள்தனைவிள க்குறுமால். (க)

வயங்கொளியறுவாவசுவெனுங்கதிர்நல்வியாழத்தைமறுவ றவிளக்குந், தயங்கொளிச்சுவராட்டெனுங்கதிர்மிக்கசனிதனை யொளியுறவிளக்கு,மியம்பியவுடுக்கண்முழுவதுமிரவிகதிரினால் விளங்குமெம்புனலும், பயந்ததண்கதிராற்கவர்ந்துடன்மீட்டும் படுமழையுலகினிற்பொழிவான். (உ)

வெய்யவன்கதிர்களாயிரமவற்றின்விளங்கொளிக்கதிர்கண் ணூறு, பெய்ம்மழைபொழியும்பின்னுமுன்னூறு பிறங்கொளிக் கதிர்வெயில்விரித்து, வையகமுழுதுமழைவளஞ்சுரக்கும்வயங் குமுன்னூறுவெங்கதிர்க, ளையசெங்கமலமலர்முகங்கருகவளிப னிக்குறுந்துளிவீசும். (ங)

மாசினீள்வருணன்பங்குனிபூடாச் சித்திரையஞ்சன்வைகா சிக், காசறுதாதாவானியிந்திரனடியிற்சவிதாநலாவணிக்கு, நா

சமில்விச்சு வான்புரட்டாதி பகனலைப்பசிப்பருச்சனிசிர், விசு கார்த்திகைதொட்டாநன்மார்கழிக்குமித்திரன்றைக்குவிட்டுணு வே. (௪)

இலகொளிவிரிக்கும் பகற்செய்வோர்தூய வேழ்பரித்தேர் மிசையிவர்ந்து, மலர்தலையுலகிற்பனியிருவிசும்பிற் பாதலத்தி னிற்றனிமருவிக்,குலவுபேரிருளின்குறும்பெறிந்தோட்டிக்கொ ழுங்கதிர்க்கற்றைகான்றேங்கும், பொலநெடுங்குடுமிவளைவல ஞ்செய்துபுங்கவரோத்திடத்திரிவார். (௫)

ஒற்றைநேமியந்தேர்வருணனோராயிரங்கதிருமிழ்ந்திரு டுருவுங், கற்றையங்கதிராறாயிரமுமிழ்ந்து கனையிருள்சீத்திடும் பூடாச், செற்றுவெங்கதிரேழாயிரம்பரப்பிச்செறியிருள்பருகி டுமஞ்சன், முற்றுவெங்கதிரொண்ணாயிரம்விரித்து முழங்கிருள் விழுங்கிடுந்தாதா. (௬)

இந்திரனொன்பானாயிரங்கதிர்கான் றெண்டிசைமுழுவதும் விளக்கு, நந்தலில்விவச்சுவானொருபதினாரா யிரங்கதிர்விரித்த னநடக்கு, மைந்துடைப்பகன்வெங்கதிர்பதினோராயிரந்தனிவ ழங்கினன்றிரியும், வெந்திறல்புனைந்தமித்திரனேழா யிரங்கதிர் திசைதொறும்விடுக்கும். (௭)

அலங்கொளித்தொட்டாவிரிகதிரொண்ணாயிரத்தொடுமந்த ரத்துலவு, மிலங்கொளிச்சவிதாச்செழுங்கதிரோன்பானாயிரத் தொடுமிருடிரக்கு, நலங்கொள்பர்ச்சனியன் கதிரொருபதினா யிரத்தொடுங்கீழ்த்திசைநண்ணுங், துலங்குவிட்டுணுவெங்கதிர் பதினோராயிரத்தொடுந்துனைவினிற்றிரியும். (௮)

மாந்தளிர்கொழுதிவரிக்குயில்கூவ வருமிளவேனிலின்வெ ய்யோ, னேந்தெழில்கபிலவன்னமாம்வேனிற்காலத்தினிருட்கு றும்பெறிந்து, காந்துவெங்கதிரோரொளிபசும்பொன்னாங்கனை மழைபொழிந்துகார்காலத், தாய்ந்துவெங்கதிரோர்தன்னிறஞ் சுவேதமாகுமென்றுரைப்பர்கற்றுணர்ந்தோர். (௯)

கூதிரினுதித்தோர் மெய்ந்நிறம்பாண்டு வன்னமாங்குளிர்ப னிக்காலத், தாதவன்வண்ணந்தாம்பிரநிறமா மணுகியபின்பனி க்காலத், தேதமில்கதிரோனிறமுலோகிதமாமென்றெடுத்தியம் புவர்மேலோ, ரோதியகிரகமெட்டையுங்கதிரோ ரொளிபெற விளக்குவரன்றே. (௧0)

திங்களஞ்செல்வன்கொடிஞ்சியந்தேரிற்றிரிதருசில்லியோ ர்மூன்று, மங்கதிற்பிணித்தவாம்பரிபத்துங்குருந்தின்மென்மல ர்நிறமாகும், வெங்கதிர்ப்பருதிசுசுமுனையென்னுங் கதிரினாலவ ளரும்வெண்டிங்கள், புங்கவர்தினமோர்கலையருந்துதலாற்பொ ழிகதிர்மழுங்கமெய்தேயும். (௧௧)

வெள்ளிதிண்டேரிற் புரவியோர்பத்து மேதினிப்பிறந்தன வாகு, மொள்ளொளிச்செவ்வாய்க்கொடிஞ்சியந்தடந்தேர்ப் பரியிருநான்கெனவுரைப்பார், தெள்ளுசீர்புதன்றேர்ப்பரிகளோ ரொட்டுந்தீம்புனலகடுளேந்தீன்ற, வெள்ளருங்குருவின்றேர்ப்பரி யெட்டுமெரிபசும்பொன்னிறமாகும். (கஉ)

நீனிறக்கலிங்கம்புனைந்தவெஞ்சனியின் பரியிருநான்குடை நெடுந்தேர், மானிறவிரும்பினியன்றதாமிராகுக்கேதுவின்மணி நெடுந்தடந்தே,ரூனமின்றியங்கும்வாம்பரியவ்வாறுமெனவுரைப்பர்மற்றிவைப், பான்மையிற்றுருவன்காற்றெனுங்கயிற்றிற்பனிவரைவலம்வரவியக்கும். (கங)

ஆதவர்கதிர்ச்சிறப்புரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—உங௮௧.

---

நாற்பத்தொன்றாவது

## உலகநிலையுரைத்தவத்தியாயம்.

துருவமண்டலத்தின்மேலொருகோடி யோசனையளவையிற்றுலங்கும், பொருவரிதாகிச்சிறப்புவீற்றிருக்கும் பொங்கொளிதிகழ்மகலோக, மருவியங்குறைவோராயுளோர்கற்பமென்பர்மற்றதற்குமேலாகி, விரிதருமிரண்டுகோடியோசனைமேல்விளங்கிடும்வியன்சனலோகம். (க)

தாமரைப்பொகுட்டினரசுவீற்றிருக்குஞ் சதுமுகன்முகத்திடைப்பிறந்த, வேமுறுசனகன்சனந்தனனியைந்தசனுதனனியற்சனற்குமார, ருமறான்முனிவராங்கினிதுறைவரதற்குமேனண்ணும்யோசனைகள், காமுறுமூன்றுகோடியினளவைகருதுதற்கருந்தவலோகம். (உ)

மழகதிர்ப்பருதியொளிகெடவிமைக்கும் வனப்புடைத்திறலவிபிராசர், விழைவுடனதனிற்கடவுளர்போற்றவிண்ணவர்சூழவீற்றிருப்பா, ரழகுவீற்றிருக்குமுலகின்மேலுயர்ந்தயோசனையாறுகோடியதாய்த், தழைவுறுமுலகந்தனைமறைதெரிந்தோர்சத்தியலோகமென்றுரைப்பார். (ங)

ஆங்கதிற்கமலப்பொகுட்டுறைமேலோனரசுவீற்றிருக்குமாங்குறைவோர், தீங்கறுதேவனுயுளெத்துணையவத்துணைசிறப்பின்வீற்றிருப்பா, ரீங்கிதன்மீதுசொலற்கரிதாகு மெரிகதிர்க்குப்பைகொன்றிலங்கி, யோங்குசீருலகந்திருமறுமார்பனுவந்துறையுலகெனவுரைப்பார். (ச)

அவ்வுலகடைந்தோர்சகட்டுருள்போலவலம்வரும்பிறவியினடையா, ரிவ்வுலகினுக்குமேலதாவொளிருமெரிகதிர்க்கற்றை

களுமிழுஞ்,செவ்விசேருலகமுளததன்மீதுதிங்களங்கண்ணியெ
ம்பெருமான், கொவ்வையங்கனிவாய்ச்சுணங்குபூத்தலர்ந்தகுவி
முலைக்கொடியொடுமுறைவான். (௫)

ஐந்தவித்தடங்குமுனிவரரிலிங்க பூசனைமகிழ்விறைற்றுனர்
க, ளிந்தியத்துழலாதுளத்துறுகரணமொடுக்கிநல்யோகினிவிரு
ப்போர், நந்தியைமுதலாமெண்ணறுகணங்களுன்முகன்முகுந்
தனேடெய்தி, வந்தனைபுரிந்துமழவிடையுயர்த்தோன்மலரடிநீ
ழல்வீற்றிருப்பார். (௬)

மேலுலகேழும்விளம்பினஞ்சுருக்கிமேதகுகீழுலகேழு, மே
ல்புறவுரைக்கின் மகாதலம்பொன்மை யெறிமணிக்குப்பையோ
டியையும்.பாலுறுசுதலவுலகமும்பொன்னம்பவளநல்லுருவமா
ம்விதலஞ், சால்புறுநிதலம்வெண்ணிறமாகுந் தலநிறங்கருமை
யதாமால். (௭)

இலகொளிவிரிக்கு மகாதலம்வயிடூ ரியநிறமெனவொளிப
ரப்பு, முலைவறவிளங்குதராதலஞ்சிறந்த பத்மராகத்தொளிபர
ப்பு, மலைவறமுன்னஞ்சொல்லியவிதலத் தயக்கிரீவன்மகாசம்
ப, ணிலவுமிழெயிற்றுக்கம்பளவானும் நமுசியர்தயாநிறைந்திரு
ப்பார். (௮)

தலத்தினிலளவில்சர்ப்பம்வீற்றிருக்குந்திகழிரசாதலந்தன்
னி, னலத்தகுகருடன் வாசுகிகாலநேமி நற்றவம்புரிகிலாதன்,
சொலப்படுதார காதியர்முதலோர் துன்றுவர்தாதலந்தன்னி
ல், வெலற்கருமிரணியாக்கன்வெவ்விடவாய்த்தக்ககன்விரோச
னனுறைவார். (௯)

ஈங்கிதன்கீழினளப்பருநிரையாமிவைவிரித்துரைத்திடிற்பெ
ருகு, மாங்குறுமுலகமனைத்தையுந்தாங்கிசேடனுங்கமர்குவன
ழன்று, வீங்குவெங்கதிர்கடிசைதிசையளப்பவிளங்குகாலாக்கி
னியீச, னேங்குவெந்துப்பின்மானுடமடங்கல் மகிழ்வினுங்கு
றைவொன்றுரைத்தான். (௧0)

உலகநிலையுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—உ௩௯௯.

---

நாற்பத்திரண்டாவது

## சம்புத்தீவின்சிறப்புரைத்தவத்தியாயம்.

நவையிலுலகம்பதினுன்குநவின்றபின்னும்விரித்தெமக்குப்
புவியினளவையுரைத்தியெனப்பொன்னுடளிக்கும்புத்தேளுந்
திவவுநல்யாழ்முனிவரனும்பணிந்துகேட்பத்திரைகடல்சூ
ழவனியருந்தியுமிழ்ந்தளித்ததிருமாலினிதினைறைகுவனால். (௧)

சம்புபிலக்கஞ்சான்மலிநீள்குசஞ்சிர்தணவாக்கிரவுஞ்ச
மம்பொற்சாகம்புட்கரமென்றறையுமோரேழ்தீவினையு
நம்புமுவரிகன்னல்சுரைநெய்வெண்டயிர்பானன்னீராம்
பம்புதிரையகடலேழுமுறையிற்பரந்துசூழ்ந்திடுமால். (௨)

உரைத்தநெடுந்தீவோரேழுங்கடலேழுமொருங்கிடுமளவை
வரைத்துக்கூறின்யோசனையோரைம்பான்கோடியெனவகுப்பர்
தெரித்தீண்டுரைத்ததீவெவைக்குநடுவாஞ்சம்புத்தீவதனைத்
தரித்துநடுவண்மேருவெனுஞ்சயிலமதனிற்றனிதுலங்கும். (௩)

மேருவுயர்ச்சியெண்பத்துநாலாயிரம்யோசனைவிளம்பும்
பாரிற்றாழ்ந்துபதினாறாயிரம்யோசனையாமேல்விரிவை [மை
யோரிரெண்ணான்காயிரம்யோசனையென்றுரைப்பர் கீழ்ப்பரு
ரேரிற்பதினாறாயிரம்யோசனையென்றெவருஞ்செப்புவரால்.(௪)

பூமியென்னுங்கமலத்தின்பொகுட்டுப்போலும்பொலங்கிரிசூழ்
நாமவருடவரையனைத்துநவின்மேல்கீழ்கடலளவுந்
தாமம்போலுநிடதவரைதென்பாற்சாருமதன்றென்பா
லேமகூடங்கிடக்குமதன்றென்பாலிமயங்கிடக்குமால். (௫)

பொன்னங்கிரியின்வடபுலத்துமேல்கீழ்புணரியளப்பதற்கு
மன்னுகோல்போனீலவரைகிடக்குமதற்குவடபுலத்திற்
றன்னேரில்லாச்சுவேதவரைசாருமதனின்வடபுலத்திற் [ம்.
பன்னுஞ்சிருங்கவரைகிடக்குமவற்றினளவைப்பகுத்துரைப்பா

மேருவரையின்றென்பாலும்வடபாற்றிசையுமிகவணித்தாய்ச்
சாருநிடதநீலவரைகீழ்மேனீளந்தனிப்பகரி
லோரொன்றிலக்கம்யோசனையாமேமகூடமுரைத்ததனுக்
கீரைந்தாம்யோசனைகுறையுமிமயமதற்கத்துணைகுறையும். (௭)

வடபாற்கிடந்தநீலவரையளவைநன்னினதன்வடபா
லடையுஞ்சுவேதம்யோசனையீரைந்துகுறையுமதன்வடபாற்
படருஞ்சிருங்கஞ்சுவேதவரையதனிற்பத்தோசனைகுறையு
மொடிவிலுயரமகலமிவைக்கீராயிரம்யோசனையென்பார். (௮)

மேருவரைக்குத்தென்பாலும்வடக்குமேல்கீழ்கடலளவாய்ச்
சாருநிடதநீலமெனும்வரையைத்தழுவிநிகவோங்கிச்
சேருமேருவரைதனக்குக்கிழக்குமேற்குஞ்சிறந்தோங்கு
மாரிபடியுமாலியவான்வரையுங்கந்தமாதனமும். (௯)

வழுதிக்கொடிச்சேலெழுதியமால் வரையின்கிழக்காமாலியவா
றழுவிக்கீழ்பாலுறைகண்டந்தயங்கும்பத்திராச்சுவமாம் [ன்
பழுதில்மேருவரைமேல்பாற்பயிலுங்கந்தமாதனத்துக்
கழிவில்மேல்பாலுறுகண்டங்கேதுமாலமெனவுரைவார். (௧௦)

### வேறு.

துலங்குமாலியவானெனும்வரைக்கீழ்பாற் றுன்னியசேடமால்வரையு, மலங்கொளித்தேமகூடமுநீல நிடதத்தையணவியகிடக்கும், விலங்கிவில்லுமிழுங்கந்தமாதனத்தின் மேக்குறுநிடதமால்வரையு, மிலங்கொளிப்பாயத்திரமுமந்நீல நிடதத்தையெய்தியகிடக்கும். (கக)

### வேறு.

எண்பதினாயிரமளவாம்யோசனைத்தாய்க்கீழ்கடன்மேல்கடலையெய்திக், கண்கவரும்வனப்பமைந்த கயிலைவெற்புங்கந்தமாதனமுநாளும், விண்புரக்குமகமுதல வினைபுரியும்பரதகண்டமதனின்மேவித், தெண்டிரைகள்கொழித்தெறியுந்தென்கடலைமிகச்சார்ந்துதிகழுமன்றே. (கஉ)

திரிசிருங்கஞ்சாருதியென் றுரைசெயுமால்வரையிரண்டுங்கிழக்குமேற்கா, மிருகடலுந்தனித்தழுவி யெண்பதினாயிரமாம்யோசனையவாகி, மருவிரியுங்கற்பகஞுடனத்திகழுத்தரகுருவமருவியோங்கி, விரிதிரையசுறவமெறிவடகடலையணியவாய்மேவுமாதோ. (கங.)

### வேறு.

நிடதவரைக்குநிகழ்ந்தேமகூடவரைக்குநடுக்கண்ட
மிடரின்றுயர்ந்தவரிவருடமேமகூடவரைக்குமுயர்
குடுமியிமயவரைக்குநடுக்கோதின்றுயர்கிம்புருடகண்ட
மடையுமிமயவரைத்தென்பாற்பரதகண்டமெனவறைவார். ( )

மேருவடபானீலவரைதனக்குஞ்சுவேதவெற்பினுக்குந்
சாருநடுவணிரம்மியகவருடஞ்சுவேதவரைதனக்கு
நேரில்சிருங்கவரைக்குநடுநெறிசேர்ந்திரணியவருடந்
சீர்சால்சிருங்கவரைவடபாற்சிறந்தபுகழுத்தரகுருவே. (கரு)

சிறந்தவுயர்மேருவின்வடபாற்றென்பாலுரைத்தகண்டங்கட்
கறைந்தவளவையோரொன்றொன்பதினாயிரம்யோசனையாகும்
பிறங்குமேருவரைசூழ்ந்தகண்டம்பேசினிலாவிருத [மாமே.
முறைந்ததிசைநான் கோரொன்றொன்பதினாயிரம்யோசனையா

கீழ்பாலுயர்மந்தரங்கிளக்குந்தென்பாற்கந்தமாதனமேற்
றுழ்பூங்குடபால்விபுலவரைவடபாற்றயங்குஞ்சுபாரிசமாம்
பாழிவரைகளிளாவிருதகண்டத்துறையுஞ்சுடர்ப்பருதி
சூழும்வரையின்கீழ்பாலெற்றுகடீர்கடம்பமாநிற்கும். (கஎ)

மேருவரையின்வடபுலத்தின்வியன்பொற்சினையாலாநிற்கு
மார்வமுறுமவ்வரைக்குடபாலலங்குசினையரசோங்குந
சீர்சால்தென்னம்புமைதனிற்றிசைகளெக்குஞ்சினைபோககிய
கார்வெங்கனிற்றின்மிகப்பருத்தகனிதாழ்நாவனின்றிடுமால். ( )

பணிசேர்விசும்பின்முகடளக்கும்பராரைநாவற்பழமிகவுங்
கனியப்பழுத்துவழிதேறல்கல்லென்றருவியெனவீழ்ந்து
துனைவின்மேருச்சூழ்போதந்தோடுந்துகடீர்பேர்யாற்றை [ர்.
வனைபொற்றிரைகள்கொழித்துலவி வயங்குஞ்சம்புநதியென்பா

காற்றின்வெயிலினந்நதியின் கரையிலுலர்ந்த கொழுஞ்சேற்றை, மாற்றொப்பில்லாச்சாம்புநதப்பொன்னென்றமரரவனைந்திடுவார், தோற்றுநீருண்டவனுறைந்தோர்தொகுநோய்மூப்புநரைதிரைபோ, யாற்றலமரர்கண்டுவப்ப வம்பொன்னுருவினமர்ந்துறைவார். (௨0)

வேறு.

மேருமால்வரையின்கீழ்பால்விரைகமழ்நறையின்வண்டு
சாருவருஞ்சோலைதன்னைச்சயித்திரரதமாமென்பர்
பார்புகழ்தென்பாற்சோலைகந்தமாதனமாமேல்பா
லேர்திகழ்சோலைதன்னைத்திகழ்வயிப்பிராசமென்பார். (௨௧)

அந்தரமளக்குமேருவடபுலத்தமருஞ்சோலை
நந்தனவனமாமென்பர்நவின்றவவ்வரையின்கீழ்பா
லுந்துநீர்வாவிதெண்ணீரோங்கருணோதந்தென்பாற்
சந்தநீர்வாவிமாபத்திரமெனச்சாற்றுவாரால். (௨௨)

அவ்வரைக்குடபால்வாவிதனையசிதோதமென்பர்
செவ்விதின்வடபாலுற்றதீம்புனல்வாவிதன்னைக்
கொவ்வைவாயமிர்தக்கிஞ்சொற்குழைகிழித்துலவுவாட்கண்
மவ்வலங்குழலாராடுமானசவாவியென்பார். (௨௩)

வேறு.

பானலங்கருங்கட்குறத்தியர்முகத்தைப்பான்மதியெனவுளத்தெண்ணி, மீனினமருளவொற்றையாழியந்தேர்வெய்யவன்பரிக்குளம்பிடறிக், காலவிர்பரரைச்சந்தனக்கோட்டிற்கதிர்செய்பொற்பலகையிற்றொடுத்த, தேனிறாலுடையாவருவியிற்றூங்கிவழிதருஞ்சிதாபநீள்குன்றம். (௨௪)

மேலுயர்பளிக்குப்பாறையிற்றோன்றுந்தன்னிழல்வேழமென்றெண்ணி, மாவொடும்பாய்ந்துமருப்பிறத்தோன்றுந்தன்னிழல்பிடியெனமருண்டு, கூலமீதுயர்த்திப்பனைக்கைமேனீட்டிக்கூன்புறத்தசைத்திடநோக்கிப், பால்புரைதீஞ்சொலியக்கியர்மயங்கிப்பரிவுறுகுமுதநுவான்குன்றம். (௨௫)

மூக்கரிச்சிலம்புமுழவினிற்றதும்பமூங்கின்மூலத்தரளமேற்றூக்கக், கத்திகைக்கருமென்கூந்தல்வாழ்வண்டுமிடற்றொடுங்காமரமிசைப்ப, நந்நரிநெடுங்கணியக்கியர்காமக்கூத்தயர்சாலையிற்பிடித்த, சித்திரவெழினிபோன்முகிறவழுஞ் சிறப்புடைக்குசரமால்வரையும். (௨௬)

பகல்கெடவிமைக்கும்பருமணிவரன்றிப்பாய்ந்துவீழ்மாலை வெள்ளருவி, யகில்சுடுபுகையிற்றண்மைதீர்ந்தொழுகவலர்கதிர்த்திங்களங்கோடு, முகில்வயிறுடைப்பக்குறுந்துளிபிலிற்றிமுகம்புலர்ந்திடாததண்சார, னகைமதிமுகத்திற்சூரரமகளிர்நயப்புறுகனகநீள்குன்றும். (௨௭)

கவிழ்தலையருவிக் குழித்தநீளறையிற் கதிர்மணிநித்திலங்குறுவார், துவர்நெடுங்கொடியிற்செய்தநல்லுலக்கைசுருள்விரியரம்பையிற்றூங்கு, நவையில்கூன்புறத்தபுலியடிச்செங்காய்நக்கவிழ்கனிகருந்தினைமே, லவலடிப்பவர்தம்மலையையவிப்பவீழ்தருமேகநீள்குன்றும். (௨௮)

கல்லெனவொலிக்குங்கவிழ்தலையருவிச்சாரலிற்கண்டுயிலுமுழுவை, கொல்புலிபடுக்கும்பெருங்கல்நீளடர்வெங்குறவர்வீழ்த்திடுதலும்வெருவிப், பல்பொறிப்பறழ்தன்வாயினிற்கவ்வியிறுவரைமுழஞ்சினிற்படர, மல்லன்மால்யானைபிடியொடுந்துயிலுமாலியவானெனுங்குன்றும். (௨௯)

உளிகுடைந்துறுத்தவுரற்றலைக்கேழலுழுதிடுங்குழிதொறும்பொன்னு, நளிகதிர்விரிக்கும்வயிரமுமிமைக்குநாண்முதிர்கவலைகொள்குழியிற், களிறுகோட்படுத்துக்குறவர்நின்றுலுங்கம்பலைவெள்ளுளையரிமான், பிளிறொலிவிரிக்கும்விண்டொடுகுடுமிபிறங்குமானீலவான்குன்றும். (௩௦)

கொடிச்சியருவலைக்கூளைதாழொழுகு தெருத்தொறுங்குறுநடைப்புதல்வர், துடித்தலையடியகயமுனியோடுசூழ்ந்தனராட்டயர்ந்துலவ, வொடிப்பமென்கதிர்நீட்டொழுகொளிமணியும்பேரொலியகழ்ந்தவொண்பொன்னு, மிடித்துவெண்டுளிகாலருவிகொண்டிறங்குமிருக்கிசவானெனுங்குன்றும். (௩௧)

மானுடம்பழுக்குங்கிலுத்தநீள்வனத்தின்வாலுளைமடங்கல்கோட்படுப்ப, வூன்விளிம்பெறிந்துவிளங்குபல்லெயினர்களிற்றின்வெண்மருப்பகழ்ந்துகுத்த, பானிலாமுத்தம்வீழ்சுவடொற்றிப்படர்தருங்கல்லதர்மருங்கிற், றேனிறால்தொடுத்தகழைவிசும்பளக்குஞ்சிறப்புடைவிந்தவான்குன்றும். (௩௨)

மைம்மெழுக்கெறிந்தமுகத்திளமந்திகுடச்சுனைமருங்கினிற்பூத்த, செம்மலர்க்காந்தடீயெனவெருவிக்கல்லெனத்தேனிறால்தொடுத்த, கைம்மலையருவிக்கவுளினிற்பாயக்கரடநீர்க்கலுழிகொண்டிறங்கிப், பெய்ம்முகிறவழுஞ்சாரலின்விடுக்குமந்தரமெனும்பெருங்குன்றும். (௩௩)

கூந்தலம்பிடிகளீற்றுளைந்தலறுமோதையுங்குழவிவெண்டிங்க, ளேந்துகோடுழக்கத்தேனிறாலிழியாவிழுமெனவீழ்தருமுழக்குங், காந்தளஞ்செவ்விமுகிழ்விரல்சிவப்பக்கவுரிமுண்டகத்

தயாழ்தெறிக்குஞ், சாந்தமென்முலையார்பாடலுமொழியாத் த
கைபெறுநிடதமால்வரையும். (௩௪)

பாற்குடமுடைந்துசொரிதல்போல்நிலவு சொரிதரும்பளி
க்குநீளறையிற், சூற்பிடிமருட்டத்துணைக்கரிதுஞ்சுந்தண்ணறு
ஞ்சாரல்கடோறுங், கூற்றெளியிட்டுக்கொறுகொறுத்தன்னப
டர்முலையியக்கியர்குருதி,வேற்றடஞ்செங்கையியக்கரோடாடும்
வேணுமானெனுநெடுவரையும். (௩௫)

பொரியரைச்சாந்தப்பசுந்தழைதெவிட்டும்பூணுதற்கூந்த
லம்பிடிக்காங், கெரிகதிர்ப்பசும்பொன்விண்ணகநாட்டினிலைகு
ழைத்துயர்ந்தபொற்றருவின், விரிதழையொடித்துமென்குளக
ருத்தியனுடைச்சாரல்கடோறு,மாசுவாவழங்குஞ்சிறப்புவீற்
றிருக்குமுருசகமாகுநீள்வரையும். (௩௬)

செம்மயிர்க்குறுத்தாட்பேரொலியகழ்ந்தபொற்பிதிர்ச்செ
ழுந்துகளிறைத்துக், கைம்மலைகதிர்சூழ்பொன்மலைநான்குகால்
கொடுநடந்தெனத்திரியு, மைமுகிறவழுஞ்சாரலிலியக்கர்வருப
ணிக்குளிர்கெடமாதர், கொம்மைவெம்முலையைத் தணந்திடா
தொழுகுமுயர்மணிச்சயிலவான்குன்றும். (௩௭)

விரியல்வெண்டோட்டுப்பாசடைக்கமலப்பள்ளியின்வியன்
படைத்தழுவி,யரசிளவன்னங்கண்படைகூர்வாயஞ்சிறைத்தும்பி
தாலாட்டும், பொருதிரைபுரட்டிமுழங்கருணோதவாவியின்கீழ்
புலமதனி,லுணாவுணர்விறந்தயோகியரியக்கரும்பர்தம்முறையு
ளாவதியும். (௩௮)

வேறு.

கள்ளூற்றிருக்குநறுந்தெரியற்குறவர்கலவிதனிலுடைந்த
வெள்வாய்ச்சங்கத்துணியதனைவிரிநீர்சசாரலிடைத்தவிழும்
பிள்ளைமதியோடிணைத்துவளையணிகவென்னப்பெய்வளையா
ருள்ளமயக்கும்பெருவளத்தோடுயர்ந்தவம்பொற்றிரிகூடம். ()

அண்ணாந்தெழுந்துசெம்மாந்தவம்மென்முலையகுறத்தியர்தம்
வண்ணம்வாய்ந்தமுகமென்னமதிமேற்குறவர்பொட்டணியுந்
தண்ணென்சாரலிடந்தோறும்வளர்த்தமுல்லைக்கொடிதவழ்ந்து
விண்ணோர்தருவின்மேற்படரும்பராங்கமென்னும்வியன்குன்றம்

விழுதுபோக்குநள்ளிருளில்விரிந்தவைம்பால்வட்டித்து
கொழுதிச்சுரும்புகறிகற்குஞ்சினைவாய்க்குவளைமலர்குற்றுத்
தழுமுற்றெய்தாமுலைமீதிற்றாளம்புனையுமாமகளி [ம்.
ரொழுதுபாவையெனத்தோன்றுமெழில்சேருசகமெனுங்குன்று

கெண்டைகிடந்துகுழைபுரட்டுமதிவாண்முகத்துக்கிள்ளைமொ
யண்டர்மகளிருயர்வேங்கையூழ்த்தசெம்மற்பூவதனைக் [ழி

கண்டுபுலிவின்பறழெனவேவெருவித்தமதுகண்புதைக்குங்
கொண்டறவழமுகம்புலராநிடதமென்னுமுயுர்குன்றம்.   (௪௨)

வேறு.

துய்த்தலைமந்தியாசிணிப்பலவின்சூழ்சுளையுகிரினாற்போழ்ந்து,கைத்தலத்தேந்திச்சூலிளமந்திக்களித்துளங்களிப்புறச்சேர்தல், பைத்தபாம்பல்குற்குறத்தியர்நோக்கிக்கணவர்தம்வரவுபார்த்துயங்கு, மைத்தவழ்சாரற்றும்பிராதகப்பேர் வான்றொடுகுடுமிவான்குன்றம்.   (௪௩)

புண்ணியத்திங்கள்பொழியும்வெண்ணிலவைப்பூநுதற்பிடியினம்வழங்குந், தண்ணறுஞ்சாரலருவியென்றெண்ணித்தழைசெவிச்சிறியகட்பரூஉத்தா, ளண்ணல்மால்யானைத்தடக்கையால்வாரியண்மையினுனுபுதிரியும், விண்ணுயர்பஞ்சசையமென்றோதுமேக்குயர்குடுமியங்குன்றம்.   (௪௪)

முற்படுகளிற்றின்கடாந்திறந்தோடுங் கலுழியம்பெருக்கினின்மூழ்கிப், பிற்படுபிடியுமடிசெவிக்கன்றுநீந்துபுமென்மெலப்பெயரும், பொற்புவீற்றிருந்தசாரலினுண்காழகில்சுடுகுரூஉப்புகைதவழக், கற்பகநாட்டிலரம்பையர்குழலுக் கூட்டிடுஞ்சிறப்புடைக்கலிங்கம்.   (௪௫)

வரிப்புறவணில்வாழ்செந்தினைகாக்குமிதணினிற்றொடுத்தவான்கொடியுங்,கருப்புரவாழைச்சுருள்விரிகுருத்துங்காற்றினின்மென்மெலவசைந்து, விருப்புறும்விண்ணாட்டரம்பையர்கவரிப்பூசலினரும்புவேர்புலர்த்துந், திருத்தகுமல்லல்வளங்கிடந்தோங்குஞ்சிறப்புடைவேணுநீள்குன்றம்.   (௪௬)

காழ்படுபராரைச்சந்தனக்கோட்டிற்றொடுத்ததேனிறாலினைக்கவைநாப், பாழிவாய்ச்சுடிகைப்பொறியணற்பாந்தள்பைத்துவெங்கதிரொனத்தீண்டுந், தாழ்புனலருவிச்சாரல்கடோறுஞ் சண்பகநறுமலர்கொய்வான், மாழைமென்னோக்கினரம்பையர்வழங்கும்வளங்கெழுகுரவவான்குன்றம்.   (௪௭)

பொரிமருப்பெருமைகன்றுளிச்சுரந்து பொழிந்திடுமறைவறட்டீம்பால், விரைகமழ்கூந்தற்கொடிச்சியரோங்கும் வியன்சினைக்கற்பகநாட்டுப், பருகுதெள்ளமுதிற்களித்திடும்வளங்கூர்சாரலிற்பருமணிவான்றி, யருவிகண்டுயிலாதிழுமெனவொழுகவகன்விசும்பணவுவான்குமுதம்.   (௪௮)

களிறுகோட்படுக்குங்கானவருவகைக் கம்பலைமுழக்கினிற்கலந்து, துளிமுகில்படிகக்கோணிரைத்தனபோற் றூயநீர்த்தாரைகள்சொரியும், வெளிமுகடளந்துமேக்குயர்குடுமிச்சாரலின்மென்றினைகாக்குங்,கிளிகடிமகளிர்கம்பலையொழியாக்கேடில்சீர்சிந்துரக்குன்றம்.   (௪௯)

காய்க்குலைக்கமுகும்பழக்குலைத்தெங்குங் கதிர்விளைந்தாடு மைவனமும்,வேய்த்தலைதொடுத்தபஃறலைமிருஞுமென்றுணர்ப் பசுங்கறிக்கொடியும், வாய்த்தமென்பயறுமுளுந்தும்வெள்ளெள்ளும்வயின்வயினெங்கணுமலியா,வேத்தரும்வளங்கூர்தண்ணமுஞ்சாரலெரிமணியிமைக்குநீளுதாரம். (௫0)

பரந்துவீழருவியெனவிருபுடையும்பாய்மதக்கலுழிநீர்சொரிந்து,கருங்கவுட்சாரல்பரந்துமெய்சுருப்பின்கடும்புறுகடும்பசிதணிய,விருந்தினிதளித்துவீழ்பிடியோடும்வெங்கரிப்பகட்டினம்வழங்க,நரந்தமாவெருவுஞ்சாரல்சூழேகசிருங்கமாநவையறுகுன்றும். (௫க)

முகிழ்த்திடுங்கடைக்கண்வடவைவையமூட்டி முறச்செவிக்காற்றெறிந்தலையப், புகைக்கனலவியவொழுகுவெம்மதத்திற் புவிநெகிழ்ந்திடவுயரடுக்க, நகப்பிணரடியிற்பாதலத்தொளிப்பநடந்திடுங்களிறுகோட்படுத்துப், பகற்கதிரொன்னவிரவெரிமாத்திற்பிணித்தனர்பயிற்றுமாசயிலம். (௫உ)

கருங்கொடிமிளகுஞ்செங்கொடித்துகிருங் கவலையங்கொடியொடுமிடைந்து, விருந்தினருள்ளமயக்குறுசாரலிடந்தொறும் வேல்புனைதடங்க, ணரம்பையரோடும்விண்ணவரொய்தியகன்சுனைநறுமலர்குற்று, வருந்தறவுருள்பூந்தாரவற்போற்றும்வளங்கெழுபசாசநீள்குன்றம். (௫௩)

மண்டுநீரொறிபு மென்சிறுபுழைக்கை மடிசெவிக்கயமுனியோடுங், கொண்டலம்புனிற்றுக்கன்றினந்தவழுங்குறத்தியர்முன்றில்கடோறும், பண்டருகிளவிக்கின்னரமிதுனம்பாற்சுவைமருட்டுபாட்டயரும், விண்டொடுகுடுமிவெயிற்செலவகற்றிமேக்குயர்ந்திடுவசுதாரம். (௫௪)

செங்கயல்கிடந்துகருங்குழைத்தாவும்வெண்ணகையியக்கியர்செறிந்து, குங்குமச்சேறுமெழுக்கெறிந்தன்னச்செப்புறுங்குட்புலநோக்கிக், கங்குல்வாய்க்காமங்காழ்கொளநெஞ்சங்கணவர்பால்நடப்பவேறுடலாய்த், தங்கியோகியரின்மூச்சவித்திருக்குந்தகைபெறுவிசாலநீள்குன்றம். (௫௫)

கூன்முதுகணில்வாலிறடியம்பெரும்போர்பழித்துயர்குஞ்சரக்கன்றும்,கானவர்துவைப்பப்பாசவலிடிக்குங்குறத்தியர்கையகத்துலக்கை, வானுயர்பலவின்முட்புறக்கனிகள்வழன்றிட்தாக்கலுமுடைந்து,தேனவிர்சுளைகள்சுடுபொனின்வீழுஞ்சிறப்புடைத்தந்தியங்குன்றம். (௫௬)

கற்றையங்க[illegible]ரிமயிரினின்மேய்ந்தச்சிறுகுடிக்கானவர்மகளீர், குற்றசெங்கழுநீரனந்தரில்விழித்தகண்ணெனக்குறுவிழிகொள்ளு, முற்றமெங்கணுநீள்பராரைமென்கோட்டுச் சண்பகமுகி

ழ்த்தமென்மலர்கள்,பொற்றகடிழைத்துப்பரப்பியபோலப்பொலிந்திடுமுயர்திரிசிருங்கம். (௫௭)

படுமணிவரன்றிப்பாய்ந்துவீழருவிகாழ்படுமகின்முருடுருட்டித், துடியடிக்கயவாய்க்குஞ்சரக்கன்றுந்துறுமயிர்க்கவிழ்தலையெண்கு,மடுபுலிப்போத்தின்பறழையும்வாரியருவிகொண்டிறங்குதண்சாரன்,மடமயிலாலவழகுகண்படுக்கும்வான்றொடுகுடுமியங்கயிலை. (௫௮)

பளிக்கறைமுன்றிற்பசுந்தினையுணக்குங்குறத்தியர்பழிப்பில்வாண்முகத்தை, தளிப்புனற்சுனையின்முழுநெறியாம்பறண்மதியெனமுகமலர, வளிக்குலமனைத்துந்தாமரையென்னவீழ்தருசாரலினருவி, துளித்துநின்றொழுகச்சிறப்புவீற்றிருக்குந் தோமறுமிமயநீள்குன்றும். (௫௯)

ஆயபொற்குடுமிமால்வரையனைத்துமளிவிரிந்தூட்டுபூங்கமலஞ், சேயிதழ்க்கழுநீர்கருநெறிக்குவளைதேத்துளிபிலிற்றரக்காம்பன், மேயசீர்மாபத்திரமெனவுரைக்குமேதகுவாவியின்றென்பாற், காய்கதிரிரவியோட்டறநிவந்துகண்கவர்வனப்பொடுமிருக்கும். (௬0)

வேறு.

சிறுதினைப்படுபுள்ளோப்பக்குறத்தியர்கவணிற்சேர்த்தி
யெறிதருகோட்டுமுத்தமெரிந்துவீழுடுவின்வீழு
நறியதண்சாரறேறுநகைமதிநுதலென்றெண்ணிக்
கறையினையிபக்கர்கையாற்றுடைத்திடுங்கயிலைக்குன்றும். (௬௧)

கோழரையரம்பையீன்றகொழுமடற்குருத்துநீண்டு
சூழ்சுடர்க்கற்றைகாலுந்தூய்மதியகட்டிற்றோய்தல்
பாழியந்தடந்தோண்மன்னர்வெண்குடைப்பசுங்காம்பேய்க்கும்
வீழ்சிறப்போங்குங்கந்தமாதனமென்னும்வெற்பும். (௬௨)

பொருசினமடங்கலேறுபுணிற்றிளங்களிறென்றெண்ணிக்
கிரிசாத்தெய்திக்கேழல்கிளைத்திடுங்குளிகந்தோய்ந்த
வருவிநீர்மாந்திச்சேர்ந்தமுகிலினத்தகடுகீண்டு
குருதியென்றுண்டுவெள்குங்கோடுயர்சுகந்தவெற்பும். (௬௩)

கைத்தளம்போலத்தூங்குங்கமழ்பசுந்தேனிறாலின்
மொய்த்தவியிரியப்பாய்ந்துமுசுக்கலையுடைப்பவீழ்ந்
தந்துதேனருவிபாய்க்கவைக்கதிர்வரகுசாமை
துய்த்தலையேனல்காய்கருந்தோமில்சீர்சிருங்கவானும். (௬௪)

வேறு

பராரைமாத்துகிர்ந்தழீங்கனிமேய்ந்துகதலிமென்பபெழங்குதட்டி, விராய்மலர்ப்பொதுளுங்குடச்சுனையுழக்கிவிளைகமழ்

பந்தினமணிந்த, மராவழன்றுசியப்பிணர்முதுகுரிஞ்சிச்செங்கணுமான்றிரள்வழங்கும், குராமணங்கமழுஞ்சாரல்சூழ்கிடந்த பாரிசமென்னுநீள்குன்றும். (௬௫)

வரைநடங்தென்னப்பிடியொடுந்திரியுமழைமதக்கலுழிமால்யானை, வெருவரச்சிலைக்குமடுபுலிக்குருளைபயித்திடவேட்டுவச்சிறுவர், நிரைநிரையமைத்தகல்விடார்தோறுநாந்தமான்கோட்படுநெறிய, பொருவருஞ்சாரல்விளிம்புடுத்தோங்குஞ்சுபக்கமாம்புண்ணியக்குன்றும், (௬௬)

கடுங்கழைமிடறுகாய்ந்துறவெடித்தவிடர்பிளிற்கால்புகுந்திசைத்தல், குடங்கையினெடியவாள்புரைதடங்கட்குறத்தியர்குறிஞ்சிபாடுதற்கா, யடங்குறப்பிடித்தசுருதியினிசைப்பவாய்மயிற்கணங்கணின்றுலு, மடங்கலர்விழுச்சீர்கண்படைகூருஞ்சுரசமாம்வான்பெருங்குன்றும். (௬௭)

கோங்கிளமிடையவீங்கியகொங்கைக் குறத்தியர்தண்டொறுமிருந்து, தூங்குறிச்சேக்கைக்குரீஇயினங்கடியுமின்மொழிச்செழுந்துணர்தூக்கு, மாங்குயிலினத்தின்கூக்குரலேய்க்கும்வளங்கெழுசாரல்சூழ்கிடந்த, தீங்கறுகுடுமிவான்முகடளக்குந்திகழ்சிகுநாடநீள்குன்றும். (௬௮)

மாதர்மென்கோட்டுப்பொரியரைப்புன்கின்கறையணல்வெண்பொரிமானும், போதுவாய்திறந்துகாதுமேய்ந்துறங்கும்பொறியரிப்பெயரிளவண்டை, காதலாற்சுரும்புசிறகராற்றடவிக்கழிதுயிலெழுப்பிமேற்புணரு, மேதகுவோங்குசாரல்சூழ்கிடந்தவிழுத்தகுசகடநீள்குன்றும். (௬௯)

பூந்துடும்பின்றகாந்தண்மென்கமலம்பொன்பொதியவிழ்த்தபூங்கொன்றை, யேந்திளம்பாலைதூக்கியகுரவஞ்சந்தனங்காழகிலிலவங், கூந்தலங்கமுகமடந்தையர்முலையிற்கொழுமடற்குடற்கனிதூக்கும், போந்தைசூழ்கிடந்ததண்ணருஞ்சாரறபொருவறுபிங்கலக்குன்றும். (௭௦)

வள்ளைவார்காதினணிந்தபொற்குழைகள்வருமுலைக்குங்குமந்துடைப்பக், கொள்ளைவண்டரற்றுங்குளிர்மலர்க்கூந்தற்சொருக்குமென்கையிற்புறத்துலவ, கள்ளவிழ்நறும்பூஞ்செண்பகக்கோட்டினியக்கியர்வீழ்தருங்கணவ, ருள்ளமுந்தாமுமூசலாட்டயருமோங்குசீர்ச்சுசேணநீள்குன்றும். (௭௧)

மழைமுதுகுரிஞ்சுமசோகின்மேற்பாய்ந்தகருமுகமந்திகள்புறிப்பப், பழமிளகுதிர்ந்தபளிக்கறைச்சாரலிடந்தொறும்வானவர்மகளிர், நிறலுருமெய்யின்வருமுலைப்போகநீப்பறவிண்ணவர்க்களித்த, தழைபடுமென்பூஞ்சேக்கைகள்கிடந்தாவில்சீர்ப்பத்திரவரையும். (௭௨)

கறங்கினிற்சுழலுங்கனலுருகுறுங்கட் காய்சினவாலுளைமடங்க,லுறங்கலாவென்றிவேட்டுவச்சிறுவர்தொண்டகச்சிறுபறையொலியேற், றிறங்கருங்குடுமியிறுவரைமுழையிற்பிணவொடுமிருந்துயில்புரியுந், துறந்தவருளமும்வீழ்நல்வளங்கூர்தோமில்மாமேகநீள்குன்றும். (௭௩)

அறையினிலுறங்குங்களிறுகல்லென்னவமர்ந்திடுங்குறத்தியர்விழித்துக், கறையடிபெயர்த்துநடத்தலுங்கருங்கல்கால்கொடுநடந்ததென்றெண்ணி, புறைதருகணவர்க்காங்கதையுரைப்பவுவந்துதம்மனைவியர்த்தாங்கிச், சிறுகுடிப்பளிக்குப்பாறையிற்றுவுஞ்சிறப்புடைப்பிஞ்சரக்குன்றும். (௭௪)

உரல்முகக்கேழல்கிளைத்திடுபயம்புமொண்ணிறப்பேரொலியுகிராற், றரைபிதிர்த்தாழ்ந்ததாழ்சிறுகுழியுந்தறுகண்மால்யானைகோட்படுப்ப, நிரைநிரையெயினர்தொட்டவான்கிடங்குநெடும்பனைவேங்கைவீழ்தூர்க்கும்,விரைகமழ்சாரல்விளிம்புடுத்தோங்கும்விளங்குபுண்டரிகமால்வரையும். (௭௫)

கூன்புறச்செவ்வாய்ப்பசுங்கிளிநிறத்தகொய்யுளைப்புரவியேழ்பிணித்த, வான்றலைத்திரியுமொற்றையாழியந்தேரோட்டறவிவந்தவான்குடுமித், தேன்கறிகற்குநறுமலர்க்கூந்தற்றேமொழிக்குறத்தியரிவர்ந்து, கான்படுகருவினறுமலர்கொய்யும்வளர்கபிலோதமால்வரையும். (௭௬)

நெடுமுடம்பழுத்தவிரிதலைத்தெங்குநெட்டிலைப்போந்தையுஞ்சுமந்தப, படுபழமூழ்த்துப்புளியடிக்கொடுங்காய்க்கதலியம்பசுங்குலையொடிக்கக்,கடுவன்வீழ்ந்துழக்கியள்ளிலைப்பலவின்கனியினைப்போழ்ந்துசூழ்சுளைகள், சுடுபொனிற்சிதறுமழகுகண்படுக்குந்துளங்கொளிப்பாண்டரவரையும். (௭௭)

நெடுநல்மால்யானைநீர்ச்சிறையழிப்ப விருகரைப்பராரைநீண்மாத்துத், தொடரும்வேர்பறியவீழ்தலும்வரையிற் றொடுத்தகோற்றேனிறுலுடைந்து, கடன்மடைதிறந்தாலெனவிரைத்தோடிக்கானவருவலைவெய்குறுத்தாட், குடிலலைத்தொழுகுஞ்சாரல்சூழ்கிடந்தகிட்டிணமென்னுநீள்குன்றும். (௭௮)

பொன்செயுங்கடவுட்புலவர்கைசெய்யாப்பூண்கிடந்தோங்கிளமுலைகண்,மின்புரைமருங்குலலமரப்பணைப்பவிரிகதிர்க்கோவைமேற்புடைப்ப, மன்பெருஞ்சிறப்பின்வரையரமகளிர் குரவையாட்டயர்தலுமயில்கள், வென்கொடுத்திரியும்விழுச்சிறப்போங்கும்பாரியாத்திரமெனும்வெற்பும். (௭௯)

கோடுயர்சாற றவழுமைம்முகிலைக் கூந்தலம்பிடியெனவெண்ணி,நீடிருங்கையாற்களிறுதைவருதனோக்கியநெடுஞ்சிலைவெற்பன், சேடமைபொருண்மேற்பிரிதலொழிந்துநீங்கரும்பெ

ழ்ந்தியகொங்கை, யாடமைத்தடந்தோண்மகளிர்பாலெய்துமவி ர்மணிக்குமுதநீள்குன்றும். (அ0)

பிறைவளமருப்புக்கவிழ்தலையேனம் பெரும்புலிப்போத்த ழுத்தாக்கச், சிறுகண்மால்யானைசீயமோடேற்றுச்செருச்செயு ம்வளங்குலாய்க்கிடந்த, வறைவளரந்தண்சாரல்கடோறுமாய் கதிர்க்கருந்தினையுணக்கும், குறவர்தம்மகளிர்மின்னெனத்தோ ன்றுங்கோடுயர்லகுடமாகுன்றும். (அக)

இரவலரென்னக்காந்தள்கைவிரிப்ப வள்ளியோரெனமுகம லர்ந்து,பருதிபோக்ககற்றியுயர்ந்தநீள்பராரைக்கொன்றைபைம் பொன்னணிசெரியும், விரைகமழ்சாரலிடந்தொறும்வேடர்சு ட்டிடுஞ்சந்தனச்செழுங்கோ, டருவிகொண்டிரங்குஞ்சாருதி யென்னவலங்கொளிவிரிக்குநீள்குன்றும். (அ௨)

இற்றிடைதேயமேக்குயர்ந்தோங்கியிலும்பிறைபொருவுகா ழணிந்து, பொற்றசும்பேய்க்கும்பொம்மல்வெம்முலையகுறத்தி யர்பொற்புறுமுகமுங், கற்றைவெண்கதிர்கான் மதியமுமறியா துடிக்கணங்கலங்குபுதிரியு,மொற்றையாழியந்தேருரிஞ்சுபொற் குடுமியுயர்மதுமானெனுங்குன்றும். (அ௩)

பாவடிக்களிறுபிணர்முதுகுரிஞ்சவழன்றிடுபராரைமென் சாந்து, நாவியங்கடுவனெற்றியபுழுகு முளவுமானடந்துமேற் பாய,*வேவரவீழ்ந்தக்கருப்புரக்கதலி விரைகமழ்விரியல்வெண் டோடுங், காவதங்கமழுஞ்சாரல்சூழ்கிடந்தவாயிரங்குடுமிநீள்க ல்லும். (அ௪)

வேறு.

பாம்புபைத்தாலிந்தன்னபங்கயபருமவல்குற்
காம்புறழ்பசியமென்றோளியக்கியர்கலவிப்போரி
லாம்பல்வாயமுதமாந்தியைங்கணைக்குமரனன்ற
ரோம்பலுற்றிருக்குஞ்சாரல்சீருந்திரைமணிவான்குன்றும். (அ௫)

வலம்புரியுயிர்த்தமுத்தங்கருவெனவளைக்கைநல்லார்
சிலம்பெனவாற்றுமன்னஞ்சேர்ந்தடைகிடக்குந்தூய
வலங்கிதழ்க்கமலம்பூத்துத்திசழசிதோதமென்னும்.
புலம்புநீர்வாவிமேம்பாற்பொருந்தியகிடக்குமன்றே. (அ௬)

கனைகுரற்சுரும்புவீழ்ந்துகடாக்கருஞ்சேறுநாறப்
பனையுறழ்தடக்கைநீட்டியேறிலம்பாலையந்தண்
சினையமழமுருக்கிம்பாயந்துசினக்கரியுலம்புஞ்சாரற்
டணிமதிதவழுஞ்சங்கரூசமாம்பவளக்குன்றும். (அ௭)

குமரியம்பிடிகளாடுங்குண்டுகட்சுனையின்மாருத்
தமரவெண்டிணாகன்சிந்துந்தாமநீளருவிதன்னிற்

கமழலர்த்துறைசூழ்தூயகலுழிமாநதியினோடு
மமரர்வந்தினிதினாடுமங்கசமென்னுங்குன்றும். (௮௮)

நறவுதேர்வாழ்க்கைவண்டுநாகிளஞ்சுரும்பினோடுங்
கறையடிப்பனைக்கைவேழக்கவுட்புடையினிதுண்டாடி
யுறைமதுத்துளிக்குமந்தண்டருவிடையொளித்துவாழ
நிறைதருமல்லலோங்கும்விடபமாநீலவெற்பும். (௮௯)

குழைபுனைபுனத்திற்சீறாருறுகுறுமாக்களோடு
மழைவிளையாடுஞ்சாரலிடந்தொறுமலர்ந்தகாந்தள் [கை
புழையெயிற்றகல்வாய்ப்பாந்தட் படமெனப்பொறிக்கொடோ
யெழின்மயில்கூத்தவாலுமாகமென்றியம்புங்குன்றும். (௯0)

தாளதாமரையின்மேயதாக்கணங்கென்னச்சார
ஞிளிருமிதனினின்றுகுரீஇயனநெறியினொப்பும்
வாளமர்வந்தகண்ணார்மொழியின்மாங்குதலைத்தீஞ்சொற்
கேளலமென்றுதேவர்கிளத்திடுநேமிக்குன்றும். (௯௧)

அனிச்சமென்மலரிற்றோயிற்கப்பணமிதித்தாலென்னப்
பனித்திடுஞ்செய்யமெல்லென்பஞ்சடிசிலம்புபம்பக்
கனிப்பொறைசுமந்தகாமவல்லிபோலமரர்மாதர்
பணிப்பறைதவழுஞ்சாரற்பயிறருநீலவெற்பும். (௯௨)

ஐதெழில்பரந்தவல்குலம்பனைத்தகன்றகண்ணார்
மைதவழ்சாரறோறுமயிலொடுமுலவமைந்தர்
வெய்தடுபுழைக்கைநால்வாய்வேழமோடினிதினாடுங்
[illegible]ய்தமையாரற்சாரற்கலாஞ்சனமென்னுங்குன்றும். (௯௩)

திரளைத்தெங்கினொண்காய்முசுக்கலைசிந்தவீழ்ந்து
பரியநீள்பலவினெற்றிப்படுபழஞ்சிதறிச்சூழ்ந்த
விரிதலையரம்பையீன்றகூன்புறக்கனிகள்வீழ்த்த
வருவிகொண்டிறங்குஞ்சாரற்சுமேதமென்றறையுங்குன்றும். ()

வட்வர்தந்திட்டவான்கேழ்வட்டத்துமறுகச்சந்தந்
தடமுலைமுகட்டிற்கோட்டித்தக்கவர்கைசெய்யாத
விடுகதிர்ப்[illegible]ம்பூண்யாவும்பருமித்துவிண்ணோர்மாதர்
மடமயிலால்வாலும்வராகமென்றுரைக்கும்வெற்பும். (௯௫)

கலங்குநீர்க்கரையினீன்றபலவினீள்பசுங்காம்புக்கு
நிலம்புக்கவீழ்ந்துசிந்துங்குடக்கனிச்சுளையுநீண்ட
பொலங்கலவலங்கல்சிந்துமிதழியுஞ்சுடுபொனென்ன
விலங்கொளிவிரிக்குஞ்சாரற்புட்கரமென்னுங்குன்றும். (௯௬)

காந்தண்மென்போதினூழ்த்தகடம்பின்மென்போதுதங்கண்
மாந்தளிர்பொருவுமேனியியக்கியர்மலர்க்கைமீதி

லேந்தியபந்துபோன்மென்றியக்கர்மாலுழந்துநோக்குங்
கூந்தலம்பிடிவாழ்சாரல்விரசமென்றுரைக்குங்குன்றம். (கூஎ)

பூங்கழையுகுத்தமுத்தும்புழைக்கைவெண்மருப்பின்முத்துந்
தீங்கதிர்நோக்குநேராய்ச்சிறுமியரினிதுநோக்கு
மோங்கெழிலந்தண்சாரற்பூந்துகளொழியக்கோட்டிற்
றாங்குதேத்துவலைதூற்றுந்துகளின்மாகபிலக்குன்றம். (கூஅ)

இறுவரைச்சாரரேறுமீர்மலர்கொய்யுமாத
ருறைமுகில்பிலிற்றத்தோய்ந்தவுகிருழுதுதறுமைம்பா
லறையுயர்குடுமியேறியகில்சுடுபுகையினாற்றப்
பொறியிளமஞ்ஞையாலும்பொற்புடைமயூரவெற்பும். (கூகூ)

துறந்தவேலரசர்நீத்தசுடர்மணிக்கலன்கள்யாவு
நிறங்கிளர்கதிர்கணீட்டநீளிருவிசும்பினைப்பட்
கறங்கெனத்திரியும்வெய்யோன்கனைகதிரிருளிற்செய்யு
முறங்கலர்வளங்குலாயவோங்குசீர்க்கபிலவெற்பும். (க00)

எரிமணிக்குடுமியின்றவிலகுசெங்கதிரிற்றேய்ந்து
விரிகதிர்த்திங்கள்சேர்ந்துவெங்கதிரொன்னத்தோன்ற
வரியளிதுதைந்துபாடக்குடச்சுனைமருங்கிற்பூத்த
முருகவிழ்கமலம்விள்ளுமொய்யொளிக்கனகக்குன்றம். (க0க)

கானலங்கூந்தலார்தங்கையும்வெண்கழங்கும்போலக்
கூனல்வெண்சுரிசங்கீன்றகுளிர்கதிர்முத்தினோடுந்
தேனவிர்கமலமென்பூவெங்கணுஞ்சிறந்துதோன்று
மானதவாவிசூழ்ந்துவடபுலத்தியங்குமன்றே. (க0உ)

நாற்றிசைதோறுஞ்சொன்னவரைகளினவின்றவெற்பின்
வீற்றுவீற்றுகத்தோன்றும்வெள்ளிடையதனிற்றேவர்
போற்றுறுமியக்கர்சித்தர்கின்னரர்புலவுவாட்கட்
கோற்றொடிமாதரம்பொற்குவிமுலைதிளைப்பவாழ்வார். (க0௩)

சம்புத்தீவின்சிறப்புரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—உ௪கூ௪.

---

நாற்பத்துமூன்றாவது

## மேருவின்சிறப்புரைத்த வத்தியாயம்.

காசுகண்படுக்குமேருவினைப்பட்கதிர்மணிவிளிம்புடுத்தோ
ங்கு, மோசனைபதினாயிரமுடைத்தாமனோவதியென்னுமோர்
நகரிற், பாசடைப்புழைத்தாட்பொன்னிதழ்விரிக்கும்பனிமலர்
க்கமலமென்பொகுட்டின், மாசறுபடிகக்கொடிபுரைமேனிமயி
லொடுநான்முகனுறைவான். (க)

சனகனற்றவஞ்செய்சனந்தனன்சிறந்தசனுதனனுயர்சனற் குமார, முனிவரர்முதலாமருந்தவக்கிழவர்முக்குறும்பறவெறி ந்துயர்ந்தோர், வினையறநோற்றுமெய்ப்பொருளுணர்ந்தவிழுமி யோர்மகம்பலபுரிந்தோ, ரினையர்மற்றெவருமனேவதிநகரின்ம லரயன்மருங்குவீற்றிருப்பார். (௨)

அத்திருநகரின்குடபுலமதனிலாயிரகோடியாதவரின், மொ ய்த்தவெங்கதிர்கான்றிலகொளிபரப்பு முழுமணிமுகடுவேய்ந்து யர்ந்து,சித்திரங்குயின்றநெடுநிலைமாடஞ்சிறந்தொளிர்வைகுந்த நகரிற், பைத்தபாம்பணையிற்றிருமகளோடும்பசுந்துழாய்முகுந் தன்வீற்றிருப்பான். (௩)

பாயொளிப்ரப்பிப்பகலிரவழைக்கும்பருதியொண்சேவடிப ணிந்தோ, ராயவன்றனதுநாமமாயிரமுநவின்றுளோரழன்மகம் புரிந்தோர், காயமுந்தாமும்வேறெனவுணர்ந்தோர்கங்கையங்க டவுணீர்படிந்தோர், மாயவனுருவமருவிமேவரியவைகுந்தமத னில்வீற்றிருப்பார். (௪)

நான்முகக்கிழவனரசுவீற்றிருக்கு நலங்கெழுமனேவதிக்கீ ழ்பாற், பானிலாக்கதிருமங்கியுங்கதிர்கால்பருதியும்பற்பலகோ டி, மேனிவந்தெழுந்ததெனச்சுடர்பரப்பிவிழிகவர்வனப்புவீற் றிருக்கும், கோனகரொன்றுங்கசோவதியென்னுங்கோதறுபெ யரொடும்விளங்கும். (௫)

வெண்ணிறப்பூதிகண்டிகையணிந்தோர்மேதகுசிவனிசியத னிற், றண்மலர்தூவித்துயில்துறந்திருந்தோர்சாமநன்மறைப யிறக்கோர், புண்ணியக்கடவுட்காசியினுவிபொன்றினோர்புலன் வழியுள்ள, நண்ணுறுதடக்கித்தற்பரத்தடைந்தோரசோவதிநக ரினண்ணுவரால். (௬)

அன்னகரதனிலெண்டிசைப்பாலரடுக்கிதழ்தாமரைக்கிழவ ன், மின்னுவிட்டெறிக்குநேமியங்கடவுள்விரைமலர்ச்சேவடி போற்றப், பொன்னவிர்திதலைபூத்தவெங்கருங்கட்புணர்முலையு மைமருங்கிருப்ப,'முன்னதின்முன்னுயுரையுணர்விறந்தமுக்கணு னினிதுவீற்றிருக்கும். (௭)

மற்றிதன்கீழ்பாலொழுகொளிசிந்தாமணியிருநிதியம்வான் சுரபி, பொற்றருவோடும்புணர்முலைசுமந்துபோயிறுங்கொடிம ருங்கென்னச், சிற்றடிச்சிலம்புபூசவிட்டேங்கத்திரிதருமரம்பை யர்நெருங்கி, வெற்றிடமின்றித்திருத்துயிலமரர்பதியெனும்விய னகருளதால். (௮)

உரைத்தவந்நகரிற் றிலோத்தமையரம்பை யுருப்பசிமேன கைமுதலோ, ரரத்தமென்பஞ்சியூட்டியபொன்னஞ்சேவடிபெ யர்த்துநின்றுடக், திருத்தகுதேவர்பணிந்துநின்றேத்தச்செந்து

வர்க்கடிகைவாய்வேற்கண்,விளக்குழற்றீஞ்சொற்புலோமிசை யோடுமிந்திரனரசுவீற்றிருப்பான். (கூ)

வாளமரழுவத்தாருயிர்துறந்தமன்னவர்மன்னவர்க்காக,மூ ளிருஞ்சமத்தினிறந்துசெஞ்சோற்றுக் கடன்கழித்திட்டவர்மு றையே, நீளிருந்தத்தமொழுக்கினினின்றோர்நிகரொறிப்பத்தினி ப்பெண்டீர், நாளுநல்லறத்திறொழுகினோரமார்பதியிடைநண் ணியின்புறுவார். (க0)

புகலருந்தென்கீழ்த்திசையினிற்றேசோ வதியெனும்புண் ணியநகரிற், சிகையழல்விரிக்குமாரழற்கடவுள்சிறந்துவீற்றிரு க்குமற்றதனின், மகவினைபுரிந்தோர்மூச்சவித்திருந்துமறைபுக ல்மந்திரநவின்றோர், தகரிவர்கடவுள்பேருருவெய்தித்தயங்கொ ளியோடும்வீற்றிருப்பார். (கக)

தென்புலமதனிலோசைபோஞ்சையமினியெனுந்திருநகரு ளதாங், கன்புமீதூரப்பிறையெயிற்றகல்வாயந்தகனரசுவீற்றிரு க்கு, மன்பெருங்கற்பிற்சிறந்திடுமகளீர்வாய்மையின்வழாதுநன் குணர்ந்தோ, ரென்பெழுந்தியங்கநோற்றவர்யாருமந்நகரினிது வீற்றிருப்பார். (கஉ)

விளங்கியதென்மேற்றிசையினிலிரக்கோவதியெனும்வியன கருளதாங், கிளம்பிறையெயிற்றவரக்கரோத்தெடுப்பவெறுழ்வ லிநிருதிவீற்றிருக்கும், வளங்கொண்மேற்றிசையிற்சபாவதியெ ன்னுநகரிடைவானவரியக்க, ருளங்களிந்தேத்தக்கோட்சுறவுயர் த்தவுயர்புகழ்வருணன்வீற்றிருக்கும். (கரு)

சிறந்துயர்வடமேற்றிசையினிற்கந்தவதியெனுந்திருநகரத னி, லுறைந்துகந்திருவரரம்பையரோத்தவுலவைவேந்திருந்தர சியற்றும், பிறங்கொளிவடபாற்றிசையினிற்சீர்த்திபதியெனும் பெருநகருளதாங், கறங்கிளர்முனிவ ரியக்கரோத்தெடுப்ப வரு ளொடுமியக்கர்கோனுறையும். (கச)

இல்கொளிவடகீழ்த்திசையிடைவிளங்கு மசோவதியென் னுநன்னகரிற், கலைமதிக்குழவியின்னமுதுறைப்பக் கங்கையோ ர்புடையிலைகொழிப்பக், குலவுசெஞ்சடையமுக்கணீசானன்கு ண்டுகட்செம்மயிர்க்குறுத்தா, ளலகில்பல்பூதகணங்கணின்றே த்தவரியணைப்புறத்துவீற்றிருக்கும். (கரு)

உயர்தருமண்டமுகட்டின்மானவநீரூற்றிருந்தொழுகியகங் கை, முயலடைகிடக்குந்திங்களஞ்செல்வன்முழுமையுநனைந்து வார்ந்தொழுகி, வெயில்கெடவிமைக்குஞ்சத்தியவுலகின்விரித லையருவியின்வீழ்ந்து, துயரறுசீதைசக்குசையளகநந்தைபத்தி ரையெனத்திரியும். (கசு)

ஆங்கவர்தம்மிற்சீதைகவான்றடவு மலங்கொளிமேருவின்குணபால், வீங்குநீர்ப்பெருக்கினிருகரைதேய்த்துவிண்டொடர்வரையகங்கிழித்துப், பாங்கெழிறிகழும்பத்திராச்சுவமாங் கண்டத்தைவழிகொடுபடரா, வாங்குதெண்டிரையின்குணகடலகடுகிழிதரவல்லையினடக்கும். (௧௭)

தெளிபுனலளகநந்தையென்றுரைக்குந் திரையெறிதிருவநீள்கங்கை, யொளிதிகழ்செம்பொன்மேருமால்வரையின் றென்புலத்திழுமெனவொழுகி, வெளிமுகடளக்கும் வரைமுகங்கிழித்துப்பாரதகண்டத்திடைமேவித், துளிமுகில்படியுங்கீழ்கடன்முகட்டினாயிரமுகத்ததாய்தோயும். (௧௮)

எண்ணருந்தரங்கங் கொழித்துமேற்படருஞ் சக்குசையெனும்பெயர்க்கங்கை, யண்ணலங்குடுமிமேருமால்வரையின் குடபுலத்ததிர்ந்துமேலிழிந்து, மண்மகண்முலையினுத்தரீகத்திற்கந்தமாதனவருடத்தி, னண்ணிவெஞ்சுறவந்திமிங்கிலத்தோடுமிரியமேல்கடலிடைநடக்கும். (௧௯)

முத்தமுந்துகிரும்வரன்றிநீண்மேருமுகட்டினில்வடபுலத்தொழுகும், பத்திரையென்னுங்கங்கைநீள்குடுமிப் பாழிமால்வரைபலகிழியா, வுத்தரகுருவினெல்லைவந்தெய்தி யோங்கிருங்கரைக்குறும்பெறிந்து, தத்துநீர்த்தரங்கமலையெனப்புரளும்வடகடல்சாருமென்றுரைத்தான். (௨0)

மேருவின்சிறப்புரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—௨௫௧௪.

---

நாற்பத்துநான்காவது

## நவகண்டத்துறைவோரியற்கையுரைத்த வத்தியாயம்.

உரைத்தபலகண்டத்தினுறைகுநருணவுநிறமுரைக்கியென்ன, வரைக்குறும்புகெடவெறியும் வச்சிரத்தோன்மகிழியாழ்முனிவன்போற்றி, விரைக்கமலப்பொகுட்டினுறை விண்ணவனோடுலகீன்றவுந்தியான்றன், றிருக்கிளர்சேவடிவணங்கிக்கேட்பமகிழ்வோடுமிவைசெப்பலுற்றான். (௧)

ஓசைதிசைமுழுதளப்பவுயர்கேதுமாலகண்டத்துறையுமாந்தர், மாசெறிநீனிறவுருவாயிருப்பரவர்மங்கையர்தமவடிவுநீலம், யோசனையுற்பலமணக்குமவர்மேனிபலவினறுங்கனியூணாகும், பாசிழைமாமகளிரொடு மொருபதினாயிரம்பருவம் பரிவின்வாழ்வார். (௨)

பண்ணவர்கள்புகழ்ந்தேத்தும்பத்திராச்சுவவருடமேவுமாந்தர், வெண்ணிறமாகுவரவர்கண்மருவியிடும்விளரியஞ்சொன்

மடநல்லாருந், தண்ணிலவுக்கதிரொளிக்கும்பளிங்குநிறமுடைய ருண்சாற்றிற்றேவ, ருண்ணமிர்தமதுநுகர்ந்தாங் கொருபதினா யிரம்பருவமுவந்துவாழ்வார். (௩)

தள்ளருஞ்சீரிரமியகவருடத்திலமர்ந்தருநற் றையலாரும், வெள்ளியறவைத்தனைய நிறத்தாவியன்சினையாலின் கனிகடுய்ப் பா,ருள்ளபரமாயுளெல்லைபதினோராயிரத்தைஞ்ஞூறுளதாமெ ன்பர், கள்ளவிழிமகளிரொடுமிளமைதணவாமலென்றுங்களித் துவாழ்வார். (௪)

இன்னிசையபாட்டயருமிரண்மயமாம்வருடத்தி னிருந்து வாழு, மன்னநடைமடந்தையருமாடவருமாயிரக்கா லறவைத் தோங்கும், பொன்னிறத்தர்தித்திக்கு மெலுமிச்சங்கனிநுகர்ந் துபொற்பினோடும், பன்னீராயிரத்தைஞ்ஞூ றுண்டுநரைதிரை யின்றிப்பரிவின்வாழ்வார். (௫)

குருவருடந்தனிலுறையுங் கோதையருமாடவருங் கூடத் தோன்றி, மருவுவர்மற்றவர்மேனிமரகதமாமணிபோலவயங்கி த்தோன்றும், பொருவறுமூன்றன்பாலாஞ் சதாசிவனைப்போற் றுவர்மற்றவர்தம்வாணாட், பருவமொருபன்னீரா யிரத்தைஞ் ஞூறெனவினிதிருப்பகர்வரன்றே. (௬)

கிம்புருடவருடத்தி னினிதுறையுமடந்தையர்தங் கேள்வ ரோடுஞ், செம்பொனிறமாயிருப்ப ரொருபதினாயிரம்வருடஞ் சிறந்துதேன்சோர், வம்பவிழுமிறளிநறுங்கனிநுகர்ந்துமலரோ னைவழுத்திநாளு, மும்பரும்வீழ்வனப்பினொடுமொழியாதவின் னலந்துய்த்துறைவரன்றே. (௭)

அரிவருடந்தனிலுறையுமரிவையருமாடவரு மலங்குசோ தி, யெரிபசும்பொனிறமாகி யிருப்பரவருண்கரும்பின் றீஞ்சா றென்பர், முருகவிழுந்துளவோனைப் பணிந்திடுவராங்கவர்க்கு மொழிந்தவாயு, ளொருபதினாயிரம்பருவமவ்வளவுமிளமையுட னுறைவரன்றே. (௮)

ஏமகிரிசூழ்கிடந்த விளாவிருதகண்டத்தி னினிதுவாழுங், காமனிகராடவருங் கன்னல்புளித்திடமொழியுங் கரும்பன்னாரு ந், தாமரையினகவிதழ்போனிறத்தினருண்சம்புநறுங் கனியின் சார, மாமவர்தமாயுணிலைபதின்மூவாயிரவருடமாகுமென்பார்

வேறு.

பரவருந்திறத்ததாகும்பாரதகண்டந்தன்னின்
மருவும்வேற்றடங்கண்மாதர்வலியுடைமைந்தர்யார்க்கு
முருவமுந்தொழிலுமூனும்பற்பலவுளவாமாயு
டெரிவருநூறுமென்னமறையொருநான்குசெப்பும். (௧0)

இருவினைச்சிமிழ்ப்பினெய்திஃபியம்பியவாயுணூறு
மருவினுமருவுமன்றிமலக்குழியுற்றுவீங்கிக்
கருவுறுமுன்னம்வீய்ந்துகழியினுங்கழியுங்காளைப்
பருவமுற்றிடுமுனுவிபாறினும்பாறுமன்றே. (௧௧)

பாரதவருடமொன்பானுயிரம்பகர்ந்தவெண்ணிச்
சேரும்யோசனைத்தாமேனைக்கண்டங்கடோறுஞ்சேர்வோ
ரோர்கெழுதிருவ்ராகிவாழ்வரிக்கண்டந்தன்னி
லார்வமோடினிதினுற்றுநல்வினைப்பயத்தினுமால். (௧௨)

பாரதவருடமொன்றேபழிப்பருங்கருமபூமி
யோருமிவ்வருடந்தன்னிலுலப்பினல்வினைகள்செய்தோ
ரேர்கெழுதுறக்கமெய்தியிருப்பர்தீவினைகள்செய்தோர்
சேர்வருநரகினெய்தித்தீவினையுழப்பரன்றே. (௧௩)

பங்கமில்சிறப்புவாய்ந்தபாரதவருடந்தன்னிற்
றுங்கநீண்மலையஞ்சையஞ்சுத்திமானிருக்கம்விந்த
மங்குல்கண்படுக்கும்பாரியாத்திரமயேந்திரப்பேர்
தங்கியவனையினேடுஞ்சையமோரேழுண்டென்பார். (௧௪)

இந்திரத்தீவுநாகத்தீவுவாருணத்தீவேய்ந்த
தந்துகாந்திரவத்தீவுசவுமியத்தீவுநன்கு
தந்திடுங்கபத்திமானுந்தீவுதாம்பிரமாந்தீவு
பந்தமில்கசேட்டுமானுந்தீவுப்பாரதப்பேர்தீவே. (௧௫)

உரைத்ததீவொன்பான்றீவொன்றேசனையீரைஞ்ஞூறாய்
வரைத்துமுன்பகுத்ததாகும்பாரதவருடந்தன்னிற்
றரைக்கொருதிலகமானபரதகண்டத்திற்சார்ந்து
நிரைத்திடுநான்குவன்னத்தவர்களுநெறியின்வாழ்வார். (௧௬)

குடக்கினில்யவனர்வாழ்வர்குணக்கினிற்கிராதர்வாழ்வ
ரடுத்திடுநடுவண்வேதமறையவரரசர்நாய்க
ரொடிப்பில்சீர்ச்சதுர்த்தர்யாருந்தத்தமவொழுக்கின்வாழ்வர்
தடுப்பருநதிகள்குன்றப்பெயரிவைசாற்றலுற்றும். (௧௭)

புனிற்றிளந்திங்கட்கண்ணிபுனைசடைப்பவளக்காடுங்
கனைத்துவண்டிமிருங்கொன்றைமாலையுநுதன்மேற்கண்ணும்
பனைக்கைமால்யானைவன்றோற்போர்வையும்படிந்துநெஞ்சி
னினைப்பவர்க்கினிதினல்குநிகொறிகங்கையாறும். (௧௮)

கூன்முதுகிப்பிவெள்ளிவாய்விடக்கொழித்தமுத்தும்
பானிறப்பவளச்செங்காற்படர்சிறைசெழுஞ்சூட்டன்னஞ்
சூன்முதிர்ந்தீன்றமுட்டைத்தொகுதியுமலைகொண்டுந்தி
வானுயர்சனையினுய்க்கும்வளங்கெழுசோனையாறும். (௧௯)

முகிறவழெருத்தயானைமூரிவெண்கோட்டுமுத்தும்
பகல்கெடவிமைக்குஞ்செய்யபன்மணிவரன்றிக்காழ்த்த
வகின்முகிடுருட்டிச்செய்யபேரொலியகழ்ந்தசெம்பொன்
மகரவாருதியினுய்க்கும்வாலுவாகினிப்பேராறும். (௨௦)

பொருந்திறற்சியமாய்ப்பயோசனைகமழ்ந்துபொங்கு
நரந்தமாணிரத்தச்சேறுநாகிளவரிவண்டார்க்குஞ்
செருந்தின்மென்போதுந்தெய்வச்சாந்தமுந்திரையினுய்த்துக்
கருங்கடற்புலவுபோக்குங்கவுரியென்றுரைக்குமாறும். (௨௧)

வண்டொடுஞிமிறுந்தேனுமணிநிறச்சுரும்புமார்ப்பக்
கெண்டையுங்கண்ணினோக்கிக்கேழ்கிளராரந்தாங்கி
விண்டெழுகுமிழியென்னுமென்முலைததும்பத்தெய்வ
வொண்டொடியவரிற்போந்துகடலுறும்விதிசையாறும். (௨௨)

வேறு.

இமிழ்கடன்ஞாலம்பூத்தசிற்றுதரத்திளங்கொடியேந்திளமுலையி, னமிழ்துறழ்தீம்பாலினிதினுகர்ந்தவரும்பெறற்காழிமாமுகிலின், றமிழினிதுவந்தாங்கேடெதிர்போக்கிச்சாக்கியர்தமிழ்க்குறும்பெறியுங், கமழலந்துறையின்வலம்புரிதவழுங்கடவுணீர்வைகைமாநதியும். (௨௩)

சித்திரச்சபையினடம்புரிகடவுள் வார்சடைத்திங்களின்னமுதந், தத்துவெண்டிரைதாழ்கங்கைமென்றுளியுந்தாதளைந்தளியினமுரலுங், கொத்தலர்கொன்றைபிலிற்றுதேற்றுளியுங்குறும்பலவீன்றபொற்சுளையு, முத்தமுங்கொழித்துக்கரையலைத்தொழுகுமுழங்குநீர்ச்சித்திரநதியும். (௨௪)

தென்றலங்குழவியுயிர்த்ததென்மலையிற்றிரையெறிமணிபலவரன்றி, நன்றறிகேள்விக்குறுமுனியாடப்பெற்றதாற்கங்கைமாநதியி, னென்றுநற்புனிதமாநிலக்கதிர்செய்நித்திலந்துறைதொறுமீன்று, பொன்றவழ்நறும்பூந்தாதளைந்தொழுகிப்புணரிசேர்பொருனைமாநதியும். (௨௫)

வேறு.

மண்ணமைமுழவுத்திண்டோண்மணிநிறவண்ணன்முன்னம்
பெண்ணலங்கடந்தவாயர்மகளிணைப்பெட்பினோடு
நண்ணியின்புறுதனோக்கிநங்கையாருருவிற்றோன்றிக்
கண்ணனைப்புணருந்தூயகாளிந்தியென்னுமாறும். (௨௬)

வடமலைபிறந்தவான்கேழ்வட்டத்துமறுகாதுற்ற
கடவுண்மென்சாந்தம்வெய்யகதிர்முலைத்திமிரியாடிப்
படவரவல்குற்செவ்வாயரம்பையர்பரிவிற்றோய
விடலருந்தெய்வவாசங்கமழ்கருவிவாதையாறும். (௨௭)

திங்களங்கண்ணிப்புத்தேள்சேவடிக்கன்புபூண்டு
கங்கையிற்சிறப்புவாய்ந்துகளையலைத்தொழுகுநீருட்
டங்கியகற்கள்யாவுந்தானுவினிலிங்கமாகி
யெங்கணுமோசைபோயநருமதையென்னுமாறும். (உ௯)

தெளிவினேடாழ்ந்துதீதிற்சிறப்புடைத்துறைகள்வாய்ந்து
நளிகடலமிர்தமன்னநன்சுவையுடைத்தாகிநன்கின்
வெளிறெறிகேள்விவல்லோர்கவியெனவிளங்கித்தோன்றுந்
துளியெறிதரங்கஞ்சிந்துந்துற்கையென்றுரைக்குமாறும். (உ௯)

கந்தடுபுழைக்கைவேழங்காலினின்மருப்பிற்ருக்கிச்
சிந்துகாரகிலுமாரச்செழுநறுந்துகளும்வாரி
யுந்துதெண்டிரைக்கைதன்னாலுவரியங்கடலினுய்த்துச்
சந்தனக்கொழுஞ்சேருக்குந்தாபியென்றுரைக்குமாறும். (௩0)

ஆடுநராடநெஞ்சினெண்ணினேரடியிட்டோாகள
வீடுசால்புனலின்சீர்த்திபேசியோர்துளியதேனு
மூடுறுபாவந்தீரவருந்தினேரொல்லையாடக்
கூடினேர்பாவந்தீர்க்குங்குமரியென்றுரைக்குமாறும். (௩௧)

மட்டவிழ்கரியகூந்தல்வானவர்மகளிரொய்தி
யிட்டிடைமெலியவோங்குமிளமுலைதிமிரியாடப்
பட்டதாற்றெய்வவாசந்திசைதிசைபரந்துவீங்கும்
கிட்டினவேணியென்னக்கிளர்த்திடுங்கடவுளாறும். (௩உ)

வள்ளவாய்க்கமலஞ்செங்நென்மாதுளங்கனிநீள்வாசக்
கள்ளவிழ்நீலப்போதுகரும்பொடுநேமியிற்ற
வெள்ளைவெண்கோடுதாங்கித்துதிக்கைமேலெடுத்தவாற்று
லுள்ளுநர்பாவந்தீர்க்குங்களிறுநேருருபையாறும். (௩௩)

அள்ளிலைப்பலவுசாடியந்தளிர்த்தேமாவீழ்த்தி
வள்ளவாய்க்கமலம்பூத்தவான்பெருங்குளங்கண்மோதிக்
கொள்ளைவண்டார்க்குமென்பூங்குளிர்மலர்ப்படப்பைசாய்த்து
வெள்ளம்வந்திடலால்வேழம்போன்றிடும்வித்தையாறும். (௩௪)

கோற்றெடிப்புரிசைமுற்றிக்குளிர்நிழற்பட்பைசாய்த்துத்
தோற்றிடுநாட்டிலுள்ளபலபொருள்சூறையாடி
யேற்றமருடற்றும்வேந்தர்நாட்டினிலிகலினேடும்
வேற்றரசிறுத்தாலென்னமேவும்வைதரணியாறும். (௩௫)

கடைசெலவளர்ந்துநீண்டகருவிளமலர்கள்சிந்தி
மடலவிழ்கமலப்போதுநீலமும்வருத்தமோதித்
தடையறக்குழைகள்சாடிநடத்தலாற்றடமென்கொங்கை
மடவியர்கண்ணிற்செல்லும்வந்தனையென்னுமாறும். (௩௬)

ஓர்பகலாடினோர்க்குமுளத்திடையெண்ணினோர்க்கு
மேர்கெழுதுறக்கவீட்டினினிதுவீற்றிருந்துவாழுஞ்
சீர்கெழுபலத்தைநல்குந்தீம்புனற்பெருக்கத்தாது
வார்திரைகொழிக்குஞ்சம்மண்ணுவதியாம்வள்ங்கொளாறும். ()

சித்திரநதியிற்கங்கையாற்றினிற்சிறப்புவாயா
வெத்தலத்திருந்தேயேனுமெண்ணினோர்பாவந்தீர்க்கும்
பத்தினிப்பெண்டீர்செய்யபாதபங்கயத்திற்றோய்ந்த
தத்துநீரதனையொக்குஞ்சத்துருவென்னுமாறும். (௩அ)

புரவிமாமகங்கள்செய்தோர்பொன்றிடுங்கணவனோடு
மெரிபுகுந்திறந்தோரெய்துந்துறக்கவீடதனிலோர்நாள்
விரிபுனற்றிவலைதோய்ந்தோரொளிதினின்மேவவுய்க்குந்
திரையினின்மீன்கள்சிந்தித்திகழ்நிருவிந்தையாறும். (௩௯)

பாலைநீள்குறிஞ்சிவைகுங்கானவர்பலகையொள்வாள்
கால்வளைவரிவில்வெய்யகடுங்கொடும்பகழிநேமி
வேலிவையேந்திச்செல்லும்வாற்றினல்வேலைமீது
மாலொடுமமர்க்குச்செல்வோர்போலுமந்தகையாமாறும். (௪0)

வேறு.

இரும்புதிரட்டுமுடற்போக்கையெரிவாய்மலர்ந்தவிதழ்மு ருக்குக், குரும்பைதூக்குங்குலைத்தெங்குங்குமரிப்பாளைப்பசுங் கமுகுஞ், சுரும்புகுடைந்துதாதுதிர்க்குஞ்சூதம்பிடுங்கித்திரை க்கரத்தால், விரைந்துகடற்குவிருந்தளிக்கும் வேதச்சுருதியெ னுநதியும். (௪க)

பலவின்சுளையும்பசுந்தாதும் பாளைப்பசும்பூ மிட்றுடைந் து, நிலவிற்சொரியுமலர்ப்பூவுநெடுநல்வாடையெறிந்துகுப்பக், குலவுந்திரைக்கைதனில்வாரிக் கொழுநற்களிப்பான் கையுறை கொண், டுலவுமகளிரெனக்கடல்வா யோடுந்தெண்ணீரிருடிசை யும். (௪உ)

விரிந்தசெழும்பூந்தொடைவேய்ந்துவெண்ணித்திலத்தின் பூணணிந்து, நரந்தங்கோட்டிச்செம்மாந்தமுலைபோற்புளினந ணிதோன்றப், பரந்ததிரைக்கைப்பலகாட்டிப்பாயுங்கயற்கண்வி ழித்தொல்கி, யரங்கக்கூத்தியெனச்செல்லுந்தோயையென்னும கன்யாறும். (௪௩)

அரந்தின்றுகுத்தபசும்பொன்னிற்றுதுதூற்றியளிகுடைய, விரிந்தசெழும்பூங்கொன்றைமலர் தாங்கச்சடையின்மிலைச்சுத லாற், பரந்தவினைதீர்த்திட்வடைந்தோர்பாவக்குறும்புமாற்றுத லாற், புரங்கண்மூன்றுங்கெடநகைத்த புத்தேள்போலத்தாம சியும். (௪௪)

கொம்புகுழையமலர்சுமந்தகுளிர்மென்றேமாமலர்கொழுதி
நம்புகுயில்வாய்விடுமோதையுழவர்கழனிநாட்கொண்டு
பம்புமோதைமதகோதையுடைநீரோதைபரந்தார்ப்ப
வம்பிவழங்குகடற்புகுந்துமலைநீர்ப்பொன்னிப்பேராறும். (௪௫)

கூனற்பசுங்காயிலவுமுயர் கொம்மைக்குடக்காய்முடத்தெங்கும்
வானக்கதிர்க்குங்கவரியெனவயுங்கியோங்குநெற்குலையுங் [கி
தேன்மொய்த்துடைந்துபடுபழமுந்திரைக்கையதனுலெடுத்துங்
மீனக்கடலைக்கிழித்தோடும்விபாசையென்னும்வியனதியும் (௪௬)

வேறேருலகுமிந்திரனும்படைப்பனெனவேவெகுண்டெழுந்த
மாறிறவத்துக்கவுசிகனும்வண்மைக்கடவுண்முனிவனெடு
மீறில்கேள்விக்காதியெனும்விறல்கூர்வேந்தனிடத்துதித்த
பாறேய்திரையகவுசிகையாம்பரவற்கரியபேராறும். (௪௭)

வேறு.

தெய்வயானையும்வள்ளியுந்தொய்தலாற்சிறந்த
மையில்வெண்பிறைக்குடுமியங்குன்றிடைவரலாற்
செய்யதாதவிழ்செழுமலர்க்கடம்பணிந்திடலான்
மொய்கொள்வேலுடைமுருகனைநிகர்பயோட்டிணியும். (௪௮)

அன்னமேவலாற்றமரைமீதமர்ந்திடலான்
முன்னினேர்பவந்துடைத்தலான்முழுதுலகீன்ற
பன்னரும்புகழ்நான்முகனெனத்தனிப்பட்டுருந்
துன்னுதெண்டிரைத்துங்கபத்திரையெனுநதியும். (௪௯)

வேறு.

குலைபொருதலையுங்கொழுமடற்கமுகுங்குயில்குனிந்திருந் துழுக்கொழுது, மலர்சினைபோக்கும்பொரியணர்மாவு மறுபதம் புட்குரலொழியாத், தலைவிரிக்கன்னிக்கமுகிளம்பூவுஞ்சாடிநீள் கரையலைத்தொழுகிக், கலையுணர்நெஞ்சிற்கூத்தியருளம்போற் கவர்ந்துசெல்பாகுதைநதியும். (௫0)

நிலத்தலைபழுத்தபலவின்முட்கனியினீள்சுளைகையரிக்கொ ண்டாங், கிலைத்தலைப்பாளைக்கமுகின்வீழ்பழுக்காயிருகரைமரு ங்கினுஞ்சிதறிக்,குலைத்தலைத்தெங்கின்படுபழம்வாரிக்கோழரை யரம்பைவேர்பறியா, வலைத்தலைக்கடலினுய்த்திடுமந்தச்சலாத லியென்னுமாநதியும். (௫௧)

தண்ணறுஞ்செழும்பூமருதிறத்தவழ்ந்து முல்லையம்புறவி னிற்சார்ந்து, வண்ணவாட்டுங்கட்பொதுவியர்தோயவண்டு கில்கையரிக்கொண்டு,வெண்ணெய்பெய்குழிசியுருட்டிநீள்சினை ய மென்மலர்ப்பூங்குருந்தொசித்துக், கண்ணினிற்செல்லுஞ் சுசோபனையென்னுங்கடும்புனற்கடவுண்மாநதியும். (௫௨)

மங்குல்கண்படுக்குங்கருப்புரக்கதலிவான்றொடர்சண்பகந் தமாலங், கொங்கவிழ்கோங்கங் கோடுயர்வேங்கைக் குங்குமங் கையரிக்கொண்டு, தங்குநீண்முல்லைகுறிஞ்சியிற்செய்துதழலா சிருக்கும்வெம்பாலை, பொங்குநீர்மருதம்போன்மெனச்செய்து புணரிதாழ்தோயைமாநதியும். (௫௩)

கவையடிவருடைபாய்ந்திடவுடைந்தபஃறுளையினுல்கவிழ்த்திடுதேன், றுவர்நிறச்செங்காய்க்கமுகிளம்பாளை சூன்மிடறுடைந்துபாய்தேறல்,குவிமுகிழரம்பைக்கனிகனிந்துகுதேன்யாவையுங்கொணர்ந்தெதிர்மடுத்தாங், குவரியங்கடலுந்தேன்கடலாகவொழுகிடுமுலோகிதநதியும். (௫௪)

முடங்குளையெருத்தமடங்கலஞ்சீற்றத் திராகவன்முன்னர் வைகுந்த, மடைந்திடுநாளிலணிநகரயோத்திப் பறவைபல்விலங்குமென்புமுக்க, டொடர்ந்திடுங்கவிகண்மங்கையரங்கை தாக்குமென்புனிதநீரதனுட், படிந்தவரெவர்க்குந்துறக்கவீடளிக்கும்பாய்திரைச்சரையுமாநதியும். (௫௫)

நெறிமருப்பெருமைகவட்டிடையடங்கா நீர்க்குடமுறழ்மடிபொழிந்த, வறைவறட்டெம்பாறிரைக்கையின்வாரி முல்லையம்புறவினிலடைந்து,குறுநெறிக்கூந்தலாச்சியர்காச்சுங்குழிசிபெய்நறியபால்கவர்ந்து, செறியுவர்க்கடலைப்பாற்கடலாக்குந் தெசாணையென்றுரைக்குமாநதியும். (௫௬)

உந்தியிற்கமலம்பூத்தலாற்சங்கந்தரித்தலாலோங்குநேமியம்புள், மைந்துறவினிதுதாங்கலாற்கடவுண் மணிதரித்தொழுகியவாற்ருல், வந்தினிதடைந்தோர்வினையகற்றிடலால் வண்டுழாய்மாயனைப்பொருவுஞ், சிந்துதெண்டிரையசிக்குரோததியென்றுரைத்திடுந்தெய்வமாநதியும். (௫௭)

கருங்கழுத்தீன்றவெள்ளிவெண்பாளைவிரிதலைக்கமுகறவெறிந்து, குருந்தினஞ்சாய்த்துக்கோழரைப்பலவின்கொழுங்கனி முழுவதுஞ்சிந்திப், பரந்ததெண்டிரையதடங்கட்புகுந்துகவர்ந்திடும்பலகனியனைத்தும், விருந்தினிதளியாவலைகிழித்தொழுகும்வேத்திரவதியெனுநதியும். (௫௮)

ஒள்ளொளியுமிழுநிலாக்கதிர்விரிக்கு முத்தமுமொளிர்செழுந்துகிருந்,தெள்ளுபன்மணியும்யானைவெண்கோடுந்திரளரைச்சந்தனத்துணியுங், கள்ளவிழ்மலருந் திரைக்கையாலெடுத்துக் கணக்கறப்பொழிந்திடுஞ்செயலால், வள்ளியோர்போலுமெனநிலம்போற்றும்வளங்கெழுமந்தகாமினியும். (௫௯)

உட்டெளிவோடுந் தண்ணெனவொழுகும் வாற்றினுலொருவழிப்படாது, தட்டகற்சிறையாம்பந்தனமறுத்துத் தரிப்பற நடந்திடுஞ்செயலான், மட்டவிழ்மலரு மணிகளும்பொன்னுந்

திரைக்கையாலெறிதலுமாயை, விட்டுயர்வனஞ்செல்ஞானியிற் செல்லும்விபாதியென்றுரைத்திடுநதியும். (௬௰)

சுரும்புநீள்கரும்புங்கமலநாண்மலருஞ் சூதமுமசோகமென்போது, மரும்பவிழ்முல்லைமலருமென்கழுநீரலரும்வெண்டிரைக்கரத்தேந்திப், பொருந்தலாற்கண்டோர்கண்கவர்வனப்பினடத்தலாற்பொலிவொடுமுளத்தின், விரும்பினருள்ளங்கவர்தலாலநங்கவேணிகர்கோமதிநதியும். (௬௧)

கலந்திடுமகளிர் சிலம்பெனவொலிக்கு மெகினமென்புள்ளொலிகழனி, யலம்புகுந்துழக்கவுழுதிடுமுழுநரார்ப்பொலியாலைபாய்த்துழனி, மலங்கினங்கவரும்வலைஞரார்ப்போதைவயின்வயினெங்கணுஞ்சிறப்பப், புலம்புதெண்டிரையகடற்புகும்பூதபாவையாம்புண்ணியநதியும். (௬௨)

எல்லுறழ்மணியுமுத்தமுந்துகிருமெறழ்வலியானைவெண்மருப்பும், கொல்புலிநகமுஞ்சந்தமென்றுணியுங்கோட்டமுமுதிர்பழமிளகு, மல்லலங்கிரியினேலமும்பூவுங்குலிகமுங்கொணர்ந்துவந்திடலாற், பல்பொருள்பகரும்வணிகரிற்றோன்றி யொழுகுபன்னசையாநதியும். (௬௩)

கன்னிமந்தாரநாண்மலர்படப்பைக் காடுசாய்த்தகின்முருடுருட்டிப், பொன்னிணர்தொடுத்தபூஞ்சினையிதழி பொரியரைச்சந்தனந்தமால; மன்னுதெண்டிரைக்கைதனினெடுத்தெறிந்துமற்றுமோர்கடலெனப்பெயருந், தன்னிகர்தன்னையன்றிவேறில்லாச்சந்திரபாகைமாநதியும். (௬௪)

கதுப்பெனவார்ந்தகாரறல்சரியநடத்தலாற்கவின்சிறந்திடலான், மதுக்களியாடும்வரிசிறைச்சுரும்பும்வண்டும்வீழ்மலர்புனைந்திடலால், விதிர்ப்பொடுங்கயற்கண்விழித்துடலொல்கிவருதலால்விழைதருகணவர், புதுக்கடிநயந்தமகளிரைப்பொருவுங்குருவெனும்புண்ணியநதியும். (௬௫)

காவதங்கமழுமுல்லையுங்கோங்குங் கடிகமழ்சண்பகப்போதுஞ், சேவல்வண்டாற்றுஞ்செருந்திலுஞ்செய்யகமலமுந்திரைக்கையினேந்தித், தூவிவெள்ளெகினஞ்சிலம்பெனவொலிப்பச்சேரலாற்றுவரிதழ்க் கனிவாய்ப், பூவிலைமகளிர் போன்மெனத்தோன்றிப்புணரிதாழ்சித்திரோற்பலையும். (௬௬)

உட்டெளிவின்றிக்கலங்குநீர்மையினற் செல்வனையொழுகிடாவாற்றாற், றட்டநல்லொழுக்கவரம்பிகழ்ந்திடலாலுளத்தினைத்தளர்வுறமயக்குங், கட்டெளிவருந்துமாந்தரிற்போந்துகதிர்க்குலைப்பழனநாடுழக்கி, மட்டவிழ்படப்பைசாயமேனடக்கும்வளர்கிரிசாமையாநதியும். (௬௭)

வெள்ளைவாரணமூர்ந்தொழுகலால்விண்ணோர்தொழுதளைர்வியந்துபோற்றுதலா, லொள்ளொளிவிரிக்கும்வச்சிரமேந்தியுயர்விசும்பளக்குநீள்குடுமிச், சுள்ளிநீள்வேலிவனைபொருதலைக்குந்தொழிலினுலாயிரஞ்செங்கண், வள்ளலேநிகர்க்கும்புனிதவெண்டாங்கவான்புனல்வானைமாநதியும். (௬அ)

எண்ணறுமகளிர்தோய்தலினவர்தமிளமூலைக்குவட்டினிலணிந்த, தண்ணறுங்கலவைக்காவதங்கமழவருதலாற்றளையவிழ்செழும்பூ, வண்ணமென்குவளைமலர்வனைந்திடலால்வனப்பொடொடர்ந்திமோற்றுற், பெண்ணலம்விழைந்த விடமொனத்தோன்றும்பிரத்தினையென்னுமாநதியும். (௬௯)

ஒருவழிப்படரா தொழுகலாலுள்ளந் தெளிந்திடாதாழ்ந்திடும்வாற்றுற், பொருவருங்குமிழிமூலையு[illegible]ந்திடலாற்பொதியவிழ்மலர்வனைந்திடலான், முருகவிழ்நரந்தமான்மதஞ்சாந்தந்தாங்கலான்மூலைவிலைபகரு, மரிவையரொன்னவொழுகிடும்வேதவதியெனவறைந்திடுநதியும். (எ0)

மற்றுமோர்கடல்போற்கடல்வயிற்புகுந்து மண்டையூவென்னுநீணதியு,மெற்றியதரங்கந்துகிற்கொடிசிதறுந்தேவிகையென்னுமாநதியுங், கற்றவருள்ளமெனத்தெளிந்தோடிக்கரையெறியிரோவதீநதியும், பற்றறப்பாவந்தோய்ந்தவர்க்ககற்றும்பலாகையென்றுரைத்திடுநதியும். (எக)

உலகெலாமேத்தும்புண்ணியநதியென்றுரைப்பர்மற்றீங்கிவையன்றி, யலகறுநதிகளுளவவையுரைப்பிற் பெருகுமென்றறைந்திலமறைந்த, குலவுநீர்க்கங்கைமுதலவாநதியி னுடிஞோர்குறுகிடும்பேற்றை, மலைவறவிந்தவத்தியாயத்தைக் கேட்டவரடைகுவர்மாதோ. (எஉ)

வேறு.

அற்புடைபரதகண்டத்தளப்பறுதேயமுண்டாற்
பற்பலபாடைமாக்கள்பயில்வர்மற்றிதற்கோன்காய்ச்
சொற்படும்யுகபேதங்கடொழில்பலவியற்றல்கூடு
மற்றையவருடமெட்டுமின்னவைமருவிடாவால். (எ௩)

நவகண்டத்துறைவோரியற்கையுரைத்தவத்தியாயமுற்றிற்று,

ஆ. திருவிருத்தம்—உ௫௮எ.

## வானவர்வாழ்க்கையுரைத்தவத்தியாயம்.

பொன்னவிர்குடுமிமதியகடுரிஞ்சும் போகுயரோமகூடத்தி
ற், கின்னரரியக்கர்சித்தர்கிம்புருடர்கிளர்முடியமரரோத்தெடுப்
ப, மின்னுவிட்டெறிக்குமணிவிளிம்புடுத்த மேக்குயர்வியன்சி
னகரத்திற், கன்னலிற்கனிந்த வின்மொழித்துவர்வாய்க் கவுரி
யோடிறைவன்வீற்றிருக்கும். (௧)

முயலடைகிடக்குமுழுமதிக்கதிரின்முழங்குநீர்க்கங்கையா
றொழுகுங், கயிலையம்பொருப்பிற்கடையளந்தறியாக் கண்கவர்
வனப்புவீற்றிருக்கும், புயறவழ்குடுமிநெடுநிலைமாடத் தியக்கர்
கோன்பொலிவின்வீற்றிருந்தான், கயிலையிற்றழல்வாயரவகங்க
ணத்தோனடிமலரிணைவழிபடுவான். (௨)

கவிழ்தலையருவிவீழ்ந்துகற்குழிக்குஞ்சிதாந்தமால்வரையி
னிற்கமலத், தவிசின்வீற்றிருக்குந்திருமகள்கொம்மைத் தடமு
லைக்களிறுபாய்ந்துழக்கு, மவிரொளிநீல வரையுறழ்தடந்தோ
ளைம்படைக்கடவுள்விண்ணேந்தி, யிவர்பொலங்குடுமிச்சினகர
மதனுளிமையவர்போற்றவீற்றிருக்கும். (௩)

ஒன்னலருளத்திற்கருதினுங்கரத்தி னொளிறுவாள்விதிர்ப்
பினுமறியா, வின்னுயிர்கவருங்கூற்றெனத்தெழிக்கு மெந்திரப்
பல்பொறிகிடக்குங், கன்னியம்புரிசைசூழ்வசுதாரவரையினிற்
களிமகிழ்தூங்க, மன்னியவசுக்களெண்மருந்தத்தமனைவியரோ
டும்வாழ்ந்திருப்பார். (௪)

இலகொளிப்பருதியோட்டறநிவந்தவிரத்தினசாரப்பொல
ங்கிரியிற், புலனவித்திருந்தமுனிவரரொழுவர் வயிரவர்பொங்
கொளிவயிர, மலர்கதிரொழிப்பமுகடுவேய்ந்துயர்ந்தவம்பொனீ
ள்சினகரமதனுண், மலரயன்பளிக்குப் பாவைபோன்றிருக்கும்
வாணியோடினிதுவீற்றிருக்கும். (௫)

ஈற்றுளைந்தலறும்பிடிகளுங்கமஞ்சூன் மேகமுமெதிரெதிர்
சிலைக்கு, மாற்றெறியேகசிருங்கமால்வரையிற்சயிமினிவழுத்தி
டக்கரியக், கூற்றினதாவிகுடித்தகுஞ்சிதத்தாட் பொன்னிதழ்க்
கொன்றைதாழ்சடைவெண், ணீற்றொளிபடர்செம்பவளவான்
குன்றம்பச்சிளங்கொடியொடுநிலவும். (௬)

கையினாற்பற்றியொடித்திடப்பொன்னங் கதிருமிழ்சுமேத
மால்வரையி, னையசெங்கதிரோராயிரமெழுந்தாங்கவிரொளிமா
டமொன்றுளதால், வையமோரேழும்பொதிந்திடச்சமைத்தம
ணிநிறச்செம்பெனவோங்குந், தொய்யில்வெம்முலையசசியொ
டுமகவான்விண்ணவர்சூழவீற்றிருப்பான். (௭)

சந்தனக்கோட்டிற்பருதிதேருரிஞ்சவழன்றெழுதண்ணறு ந்துகளா, லுந்துநீரருவிச்சந்தனக்குழம்பி னெழுகிடுமிராசமா ல்வரையி, னந்தமில்வனப்பிற்சத்திகளேத்த வாய்கதிர்மணிச்சி னகரத்திற், பைந்தளிர்பொருவுசீறடித்துர்க்கை பரமனேநினை ந்துவீற்றிருக்கும். (அ)

இந்திரகோபநிறத்தபன்மயிரப்பேரொலியகழ்ந்தொளியெறி க்குஞ், சுந்தரச்சுண்ணம்புதைத்தலின்மாயோன் பொன்னிறத் துகிலசைத்தென்னத், தந்தொளிவிரிக்குநீலமால்வரையிற் றம ணியத்தகடுவேய்ந்துயர்ந்த, நந்தலிபொன்னஞ்சினகரமதனின ண்ணிவெங்கலுழன்வீற்றிருக்கும். (௯)

இன்னிளந்திங்கட்கோடுழவிருல்விண் டிழுமெனப்பாய்ந்த தேனருவி, பொன்வரைவிழுதுவிட்டெனத்தூங்கும்புகழ்திரிசி ருங்கமால்வரையிற், கன்னியந்துளவோனிறத்திடைச்சிறந்தக மலவீடென்னவீற்றிருக்கு, மின்னிடைத்துவர்வாய்த்தடறுவி ட்டொளிரும்வேல்விழிக்கமலையாங்கிருக்கும். (௧0)

ஓங்குநீரருவிச்சகத்திரசிகரமென்றுயர்திருவநீள்வரையிற், றீங்கதிர்மணியின்முகடுவேய்ந்துயர்ந்த செழுநகரொட்டுளவவற் றின், மாங்குயிற்குதலைமடந்தையரோடும்விஞ்சையருறைவரம் மருங்கிற், கோங்கநல்வனத்துச்சினகரத்தீசன் குவிமுலையணங் கொடுமுறையும். (௧௧)

கனைகடாஞ்செருக்கிக்கண்படைபெருதகளிற்றொலிகார்மு ழக்கென்னப், பனைநிகர்ப்பாந்தள்விரித்தவெம்படங்கள்சுருக்கி டும்பாரியாத்திரத்தில், வனைகழலியக்கர்சித்தர்கந்தருவர் வான வர்மகளிரோத்தெடுப்பப், புனையுமுக்கண்ணுஞ் சூலமுமேந்திப் பூமகளினிதுவீற்றிருக்கும். (௧௨)

அமிழ்தினைக்குழைத்துவாக்கியதென்னவவிர்மணியறைமு கங்கிழிய, விமிழிசையருவிகல்லெனவீழுஞ்சுபாரிசமென்னுமா ல்வரையிற், றமிழினுமினியமேன்மையவாகித்தளிரியல்கவற்று சீறடியா, கமழ்நறுங்கூந்தற்கருப்புரமேனிக் கலைமகளினிதுவீற் றிருக்கும். (௧௩)

பான்மதிக்குழவிக்கூன்முதுகுரிஞ்சவுயர்ந்தெழுபாண்டவ ர்வரையில், வானவருலகுநிறையமென்றெண்ணவளங்கெழுநகர நாறுளவா, லானவவ்வுலகின்மைந்தர்கந்தருவரைம்புலக்குறும் பெறிந்தோரை, வேனிலாற்கடிமைப்படுத்தும்வாட்டடங்கண்வ னிதையரோடும்வீற்றிருப்பார். (௧௪)

அஞ்சனவரையினனிச்சமென்மிதிப்பினளியவாய்மூண்மி தித்தனவாய்ப், பஞ்செனச்சிவக்குஞ்சீறடித்துவர்வாயரம்பைய ர்பழிப்பருமமுது, நஞ்செனத்திரிக்கு மின்மொழியியக்கர்மங்கை

யர்நாகர்கந்தருவர், விஞ்சையரளப்பினல்வளங்கிடக்குநகர்தொறுமினிதுவீற்றிருப்பார். (௧௫)

குமுதமால்வரையினுருத்திரகணங்களிருக்கும்வான்குலவு பிஞ்சரத்தி, னைமதுளத்திருப்போன்கணங்கள்வீற்றிருக்குநகர மூன்றுளவவற்றிடையி, னுமையொருபாகனடியர்வீற்றிருப்பரு யர்ந்தெழுகபிலமால்வரையி, னிமயவில்வாங்குமந்தணர்ப்போற்றுமீர்ஞ்சடைநந்திவீற்றிருப்பான். (௧௬)

தளிமுகிலுறங்குசாருதிவரையிற்றகைபெறுசினகரமதனு, ணளிகதிர்ப்பருதிவானவனுறையு மதன்வடபுலத்தினினண்ணித், துளியமுதுறைக்கும்வெண்கதிர்ப்படத்திற்றுன்னிருடிகளறத்துடைக்குந்,தெளிசுடர்த்திங்கள்வானவனுரோணிமுகிழ்முலையிணைப்பவீற்றிருப்பான். (௧௭)

அஞ்சமால்வரையின்மணிவிளிம்புடுத்தவாயிரம்யோசனைப்பரப்பின், மஞ்சிவர்குடுமிச்சினகரமதனுண் மலரயன்வாணியோடிருப்பா, னெஞ்சலில்வரையின்றென்புலமதனிற்சனகனையாதியோரிருப்பார், பஞ்சசைலத்தினகரமூன்றுளவாங்கெறுழ்வலித்தானவர்பயில்வார். (௧௮)

அன்னமால்வரையின்றென்புலமதனி லருந்தவக்கருத்தமனுறைவா, னன்னதன்றென்கீழ்த்திசையினிமயம்புஞ்சனற்குமாரனைமுதன்முனிவர், மன்னுவரொடுத்துவிரித்தினிதுரைப்பின்வருடநூறகன்றிடுமதனன், முன்னிமற்றதனைவிரித்துரையாமற்றெருகுதியாமொழிந்தனமென்றான். (௧௯)

வானவர்வாழ்க்கையுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௨௩௦௬.

---

நாற்பத்தாறுவது

## பிலக்கமுதலானதீவுகளியற்கையுரைத்த வத்தியாயம்.

தேனினினமுதினல்லிசைபயிலுந்திவ்வியாழ்முனிவரனோடும், பானலங்கடந்தபனிமொழித்துவர்வாய்ப்பனைமுலைபுலோமிசைக்கணவ, னேனையதீவினடுக்கினைவிரித்துகூறுதியெனவியம்பிடலுங், கூன்முதுகாமைமோட்டுருவமைந்தகுளிர்பசுந்துளவினோன்மொழிவான். (௧)

உரைத்தநாவலந்தீவளவினித்தீவையுவரியங்கடலுடுத்தோங்கும்,வரைத்திடுபிலக்கத்தீவுவர்க்கடலைவளைந்திதற்கிரட்டியோசனைத்தா, நிரைத்தபல்கேள்விவிஞ்சையின்றுறைபோகிகாறுவிழுமியோர்குழுமித், திருத்தகுதுறக்கவீடடைவோரும்விழைவுறுஞ்சிறப்புடைத்தாமால். (௨)

அகில்வயிருர்ந்தகருங்குழற்செவ்வாயம்பகட்டிளமுலைமாதர், சுகிர்புரிநரம்பிற்காந்தளஞ்செங்கைத்தொகுவிரல்சேப்புறநடப்ப, மகதியாழ்முனியுநாணுறப்பயிற்றுமகரயாழிசையினில்வெய்ய, பகலவன்கதிருந்தண்கதிராகும்பண்புடைச்சோமநீள்குன்றும். (௩)

கவிழ்தலையுளிய மகழ்ந்திடும்புற்றுங் குரும்பியைக்கையினுலளித், தவலரும்பிணவுக்கருத்தியின்புறுதனைக்கியவியக்கியர்தணந்த, திவவியாழ்க்கேள்வித்துறைபடிதலைவர் செலவயர்பிரிவினையெண்ணி, யுவவுவெண்மதித்தீயுள்புகுந்திறப்பவுன்னிடுந்துந்துபிவரையும். (௪)

கள்ளயர்வுயிர்க்குஞ்செழுமலர்க்கூந்தலியக்கியர்கதிர்முலைக்கோட்டிற், பிள்ளைவெண்மதியமலையெனத்தவழ்தல்பிறைவடங்கிடந்ததென்றெண்ணித், தெள்ளிதினியக்க ராங்கதன்களங்கநானமென்சேறெனநெஞ்சத்,துள்ளுபுதுடையாவளமையினுனுமோங்குசீரிடபமால்வரையும். (௫)

கனைகதிர்ச்செல்வன்கொடிஞ்சியந்தேரிற்கூந்தன்மாக்கவிக்குளம்பிடறிச், சினைவிசும்பளக்கும்பொரியமைச்சந்தச் செழுந்துகளெங்கணுமுதிராத், துனைவினிலோடுங்கலுழிநீராற்றிற்சந்தனத்தொய்யிலின்வீழ்ந்து, பனைநெடுந்தடக்கைக்களிற்றினம்வருந்துஞ்சந்திரமெனும்பருப்பதமும். (௬)

சந்திரகாந்தவரையினிற்றிங்கட் டண்கதிர்பரப்பலுநெகிழா, வுந்துநீர்த்தரங்கமெறிந்தலைத்தொழுகிப் பாய்தலுமுயர்சினைமரத்துக், கொந்தவிழ்நறும்பூஞ்சந்தனந்தமாலங்கோங்கின்ந்தழைகுழைத்துயரு, மந்தணற்சாரல்விளிம்புடுத்தோங்குமகன்வயிற்பிராசநீள்குன்றும். (௭)

வேறு.

கடுஞ்சூன்மேதியீற்றுளைந்துகனைத்துக்கமலமலர்மேய்ந்து[வாய்
நெடுந்தாட்குவளைவாய்க்குதட்டி நெடுமூச்செறியுங்குடச்சுனை
வடந்தாழ்கொங்கைக்கொடிச்சியர்வான்மகளிரோடுநீராடு
மடங்காவிழுச்சீருவமேதமென்னுஞ்செம்பொனருவரையும். ()

மாவீழோதியரமகளிராடும்வண்டாமரைச்சுனையிற்
காவிமேய்ந்துகள்ளொழுகுங்கடைவாய்மேதிமுலைமுறுகி
யோவாதொழுகுமறைவறட்பாலொழுகுதேனிற்கரைந்தோடித்
தாவாதருவியெனவீழுஞ்சாரலுடுத்தநாரதமும். (௯)

ஆயவோரேழ்தடவரையுமரந்தின்றுகுத்தபசும்பொன்னின்
மேயசுணங்குகொப்புளிக்கும் வெண்கண்முலையமதர்நெடுங்கட்
பாயவல்குலரமகளிரமரரியக்கர்பதியாகித்
தூயதுறக்கநகருறழும்பிலக்கத்தீவுமிடைத்துலங்கும். (௧௦)

வேறு.

அன்னமால்வரையிற்சித்தர்கந்தருவரடிமலர்ப்போற்றின
ரிசைப்பப், பொன்னிதட்கமலப்பொகுட்டில்வீற்றிருக்கும்புங்
கவன்கடவுளாய்வதியு, மன்னியருங்குறைவோர் நரைதிரையுரு
துவகுத்திவையாயிரம்பருவங், கன்னன்மென்மொழியார்முலை
நலநுகர்ந்துகளிப்பொடுமினிதுவீற்றிருப்பார். (௧௧)

வெண்டிரைகொழிக்குஞ்சுகருதையமிர்தைவிபாவைநீள்சு
கையசந்தத்தை, மண்டுநீர்க்கிலமைகிரிதிவையென்னுமேழ்நதி
யுவ்வழிவயங்கு, மெண்டரும்புகங்கணான்கெனவுரைக்கும்வரை
யறையவ்வழியில்லைத்,தண்டலில்சோமற்றெழுதவணுறைவோ
ர்மகம்புரிந்தவனுழைச்சார்வர். (௧௨)

அன்னநற்றீவின்மறையவர்தம்மை யாரியரென்பராய்கழற்
கான், மன்னவர்தம்மைக்குராரரென்றுரைப்பர்வணிகரைவிதிச்
சியரென்பார், பின்னவர்தம்மைப்பவ்வியரென்பாருரைத்தவிப்
பிலக்கதீவளவிற், கன்னலஞ்செழுஞ்சாற்றிமிழ்திரைகொழிக்கு
ங்கடலதன்புடையுடுத்தோங்கும். (௧௩)

கண்கவர்பிலக்கத்தீவினுக்கிரட்டியோசனைத்தாய்ச்செழுங்
கன்னற், றண்கடலதனை யுப்புறஞ்சூழ்ந்து தடஞ்சினைக்கற்பகச்
சோலை, விண்படுவளனுநிரையமோடிணைப்பவிழுத்தகுவான்சிற
ப்போங்கும், பண்புகண்படுத்துப்பகர்வதற்கரியசன்மலித்தீவெ
ழில்பயக்கும். (௧௪)

களிமதஞ்செருக்கிக்கண்படைபுரியா துழிதருங்காய்சினவு
ழுவைத், தளிமுகிற்றெண்ணீர்புழைக்கையால்வாரிச் சூன்முதி
ர்த்தளர்நடைப்பிடிக்காங், களியுடனருத்தி வெவ்விடாயகற்றி
யாரமென்பூந்தழையொடித்துக், குளகினிதருந்திக்கூன்புறந்த
டவுங்குமுதமென்றுரைக்குநீள்குன்றும். (௧௫)

போகுயர்சினையபராரைநீள்புன்னைப் போதெனநெஞ்சகம
ருண்டு, மேகமீப்பொடித்தவுடுவின்மேற்குருதிக்காந்தண்மென்
மலர்க்கரம்வைக்குந், தோகையர்மடமையெள்ளியதலைவர்தூம
தியவர்முகமென்ன, வோகையிற்றிலதந்தீட்டுதண்சார லுன்ன
தமென்னுமால்வரையும். (௧௬)

கற்பகத்தருவின்வியன்சினையதனிற்கவலைமென்பூங்கொடி
பிணித்துப், பொற்புறவினிதினூசலாட்டயரும்பூங்குழையெயி
ற்றியர்தம்மை, வெற்பினினுடங்குமின்கொடியென்னவெள்ளெ
யிற்றரவினம்வெருவி, யற்படுமனையிலொளித்திடுஞ்சார லருவி
தாழ்துரோணமால்வரையும். (௧௭)

காசுகண்படுக்குங்கைவளரல்குற்குறத்தியர்கதிர்முலைக்கோ
டும், வீசுதெண்டிரையவ்வானயாற்றொழுகும் விண்டொடர்மால்

வரைக்கோடுந், தேசில்வேற்றுமைகடெரிக்கலாவாற்ருற்சித்தர்
கந்தருவர்தம்முள்ள, மூசலாட்டயருமோங்குயர்சாரல்வலர்க்
கமாமெனுமுயர்வரையும். (௧௮)

குண்டுகட்சுனைவாயலர்ந்தபைங்கணைக்காற் குவளையினூறு
தேனருந்தும், வண்டுவான்றருவின்மென்மலர்த்தேறல் வாய்ம
டுத்தருவருத்துமிழா, வுண்டுமுன்கழிந்தசுனைமலர்த்தேறன் மீ
ட்டும்வந்தினிதினிதுண்ணும், விண்டொடர்குடுமிக் குமுத்து
வாமென்னும்விழுச்சிறப்புறங்குநீள்வரையும். (௧௯)

கொங்கவிழ்மலர்த்தேனீயினங்கூட்டும் பஃறுணையிருல்வி
ளைகொற்றேன், றிங்களங்குழவிக்கோடுழச்சிதையாவறைவறட்
பாலினிற்சிந்திப்,பங்கமுற்றிடலும்பாவடிக்களிறுபிடியொடுமள
றுபாய்ந்துழலுங், கங்கமென்றுரைக்குமாயிரமுக்த்தகவிழ்தலே
யருவிதாழ்வரையும். (௨0)

கிழன்றிடுஞ்செங்கோனீணிலவேந்தர் நீத்திடுமுடிமுதற்க
லன்க, ளழன்றெழுகதிரோன்மின்மினியென்னவாய்கதிர்விடுத்
திடுமொருபால், குழன்றவார்கூந்தற்குறத்தியர்விழியுங் குவளை
யுமறிந்திடாதறுகால், சுழன்றிடுமொருபா லிவ்வளங்கிடக்குந்
தோமறுமயிடமால்வரையும். (௨௧)

ஆகியவோரேழ்குடுமிமால்வரையுமம்பகட்டிளமூலத்துவ
ர்வாய்ப், பாகடுதீஞ்சொலியக்கியரியக்கர் பண்ணவர்சித்தர்கந்
தருவர், சேகெறிமுனிவர்க்குறையுளாய்க்கமலச்செங்கணுனல
குறைவோரு, மோகையின்விரும்புஞ்சன்மலித்தீவினுலகெலா
ம்வியப்புறக்கிடக்கும். (௨௨)

தோயசங்கிரைநீள்விமோசனிநிவர்த்திநிதிட்டினையொளிர்
அக்கிலேயென், றேயநன்னுமத்தேழ்நதியுளவாங்குறைபவரிருங்
கலேகட்டவும், வாயுவின்சேயபொலங்கழல்வழுத்திமருவருங்கதி
யினிலுறுவ, ராயுளின்னளவையாங்கவர்க்குரைப்பின் வருடமை
யாயிரமாமால். (௨௩)

ஆறறிபுலமையந்தணர்தம்மைக் கபிலரென்றறைவர்மன்ன
வரை, மாறெறிவடிவேலருணரென்றுரைப்பர் வணிகரைப்பீத
ரென்றிசைப்பா,ரூறுசால்கேள்விப்பின்னவர்தம்மைக்கிட்டிண
ரென்னவோதிடுவார், வீறுயரிலவத்தீவினதளவு மதுக்கடல்வி
ளிம்புடுத்தோங்கும். (௨௪)

மதுக்கடலளவைக்கிரட்டியோசனைத்தாய் மதிப்பருமரும
றைக்கேள்வி, முதுக்குறைவுடையோர்க் குறையுளாய்ச்செறிந்
த மொய்யிருள்குடியிருந்தனைய, கதுப்புடைமகளிர்மொழிக்கு
டைந்தியாழேர்நாரதன்கரமலரொடுத்து, விதிர்த்திசைவீணைமுனி
ர்கிடும்வளங்கூர்மான்குசத்தீவுறவிளங்கும். (௨௫)

கொங்குதேர்வாட்கைப்பலபொறிச்சுரும்பர்கோங்குமென்பூந்துகளாடி, மங்குல்கண்படுக்குஞ்சண்பகப்போதின்வதிந்திடமபேட்டின்முன்வரலு,மங்கதுநோக்கியயற்பெடையணைந்தகோலமென்றாடிநீண்மாலைக், கங்குலிற்கமலம் புகுந்திதழ்க்கதவ மடைத்திடும்வள்ங்கொண்மந்தரமும். (௨௬)

மைம்முகிறவழுஞ் சாரலிற்றுயின்று மடிசெவிமழலைவண்டோச்சக், கைம்முகில்வருதனோக்கியகரடக்கறையடிக்கூந்தலம்பிடிமற், றம்மவோர்பிடியோடிணைந்திவண்வருதறகாதெனவூடியந்தளிர, கொய்ம்மலர்ச்சோலைமருங்குபுக்கொளிக்குஞ் சிறப்புடையரியெனுங்குன்றும். (௨௭)

துகிர்படுசெங்காய்ப்பழுக்குலையீந்தின் றாநிலாக்கதிர்விழுதோட்டும், வகிர்மதிக்கோடுதவழ்தலுமுதிர வூடியமங்கையர்தளிர்க்கை, தகவொடுங்கணவர் பற்றவற்றுதிர்ந்த தயங்கொளிச்செந்துகிர்கடுக்கு, மகின்முருடுருட்டியருவிதாழ்துதிமானெனும்பெயரண்ணலங்குன்றும். (௨௮)

மீயுயர்கோட்டுக் குரவிளம்பாவை பராரைமென்சந்தனம்வேட்ப, வாயிரப்பெருந்தீச்சுடர்விளக்கெடுத்தாலென்னமென்கோடல்வாயலரச், சேயுயர்கழைக்கண்வெடித்துகுமுத்தம்வெண்பொறிச்சிறந்தெனச்சிறக்கும், பாயபல்வளங்கூரோமமென்றுரைக்கும்பனிவிசும்பணவுநீள்வரையும். (௨௯)

மணிதெளித்தனைய வாசநீர்ச்சுனையுள் வலம்புரியீன்றவெண்முத்தம்,பிணிமுறுக்கவிழ்ந்ததாமரைப்பொகுட்டிற் பிறங்குதலசுனையெனும்பேதை, யணிவளைக்கரத்தான் முத்தமென்கழங்காட்டாடுதல்போன்மெனச்சிறக்குந், தணிவருமல்லல்கண்படைகூர்ந்துதயங்கும்வித்துருமவான்குன்றும். (௩௰)

ஆய்தினையவையலிடிப்பவருலக்கையரசினிற்பலாவினிற்றுருக்கச், சேயபொற்சுளையகுடக்கனியுடைந்துதிசைதிசைகாவதங்கமழும், பாயபல்வளத்தசாரல்கடோறுங்குறத்தியர்பசியதேன்வேள்வி, மீயுயர்விசும்பின்மங்கையரமிர்தமளித்திடும்புட்பவான்வெற்பும். (௩௧)

மணிவிளிம்புடுத்தநுண்டுகிற்றுகைமண்ணிடைப்பூந்துகடுடைப்பத், துணிகதிர்த்திங்கண்மணிவடங்கிடந்த துணைமுலைவிசும்பளந்தோங்கப், பிணிமுறுக்கவிழுஞ்சண்பகப்போதுகொய்பவர்பேரொழினோக்கி, யணிமயிஞணியாட்டொழிந்தகலுங்குசேசபமெனுமருவரையும். (௩௨)

என்னுமேழ்வரையுஞ்சுணங்குபூத்தலர்ந்த விளமுலையியக்கியரியக்கர், வன்னமேகலையவரம்பையரமரர்மாண்புடைச்சித்தர்கந்தருவர், துன்னியென்ஞான்றுமுறையிடமாகித்துறக்கமா

நகரொனத்துலங்குங், கன்னியஞ்சிறப்பாருயர்குசத்தீவினுலகெ
லாம்வியப்புறக்கவினும். (௩௩)

பவித்திரையம்பைமகீசிவைதூதபாவைசம்மதைபழிப்பில்
லாப், புவிக்கொருதாளவடமணிந்ததுபோற்புணரிதாழ்வித்தி
யுத்தென்ன, வுவப்புறுநதிகளேழுளவாங்கணுறைபவர்நான்மு
கற்போற்றித், தவத்தினதளவினயனுலகடைந்துதணப்பில்பேரி
ன்பமுற்றிருப்பார். (௩௪)

அந்தணர்தூயதிரவிட்ர்வென்வேலரசர்சுட்டுமியர்நல்வணி
கர்,மைந்துடைச்சினேகர்பின்னவர்தம்மைவயங்கொண்மாந்தே
கமொன்றுரைப்பார்,நந்தலிலாயுளாங்கவர்தமக்குநவிலினாயிர
ம்பருவம், வெந்துயர்நோய்மூப்பிகந்துவேற்றடங்கண்மடவியா
ரோடும்வீற்றிருப்பார். (௩௫)

அறைந்தவத்தீவையத்துணைப்பரப்பி னெய்க்கடல்வளையு
மத்தீவிற், சிறந்திடுமிரட்டியோசனைத்தாகிக்கிரவுஞ்சமெனுஞ்
செழுந்தீவு, பறைந்திடக்காகொணெய்க்கடலதனைச்சூழ்ந்திடு
ம்பரந்தவத்தீவிற், பிறந்தவரையாயிரமுயர்பருவம்பெட்புடன்
வாழ்குவரன்றே. (௩௬)

வீழிவாய்மகளீர்கணவர்பால்விடுப்பவுகிரிறுற்பாசுரம்வரை
ந்த, தாழைமென்றேடுபொற்றகடென்னவருநெறித்தலைதொறு
ங்கிடத்தன், மாழைமென்னோக்கினியக்கியர்நோக்கிமகிணர்பா
ன்மனஞ்செலவிடுக்குங், கோழரையரம்பைச்சாரல்சூழ்கிடந்த
துந்துமியென்னுநீள்குன்றம். (௩௭)

வேறு.

கறையடிப்பிடியினோடுங்களிறுகோட்படுத்துச்செல்லு
மறவர்வெண்பளிக்குவட்டப்பாறையின்மருங்குமற்றோர்
குறுமுயல்கிடந்ததென்னக்குளிர்மதிமுயல்கைப்பற்றச்
சிறுகண்வார்வலையின்வீசுஞ்சீர்கொள்புண்டரீகக்குன்றும். ௩௮

வேறு.

கங்குல்வாய்வீழுங்கணவர்பாற்களவினேகுறுங்கதிர்முலைத்
துவர்வா, யங்கலுழ்மேனிக்குறத்தியர்முகத்தையாய்கதிர்மதிய
மென்றெண்ணித், திங்கள்வெண்மணிக்கற்சிகரியுள்ளுருகியொ
ழுகியதெளிபுனற்பேர்யா, றெங்கணுங்கடத்தலரிதெனமயங்கு
ஞ்சாரல்சூழிரதனவெற்பும். (௩௯)

வான்புகுந்தெறிக்குமிரலைநீண்மருப்பின் மறிந்துவீழ்தாடி
வெம்மறவ, ரூன்றலைப்பொடித்தாலன்னசெஞ்சூட்டுவாரண
மொலிக்கும்வைகறையிற், கான்படுவேட்டமாடுவோர்செந்நாம
டிவிளரிகேட்டலுங்கலங்கிக், கூன்பிறைக்கோட்டுக்களிற்றினமிரி
யுஞ்சலாதரமென்னும்வான்குன்றம். (௪௦)

திவவியாழ்மருட்டுமென்மொழிக்கருங்கட்குறத்தியர்செய்யமென்கரத்தாற், கவலையங்கிழங்குவாரியகுழியிற்கதிருமிழ்செம்மணியிமைக்கு, நவையறுசாரலிடந்தொறுமியக்கர்நங்கையர்முலைநலம்விரும்பி, புவவுவெண்டிங்களுனிலாப்பயன்கொள்ளுமுயர்கிரவுஞ்சமால்வரையும். (௪௧)

வேறு.

தேங்கமழ்நறியகூந்தற்சிலம்பெனவதிரவோங்கி
வீங்கிளமுலையிற்சேர்த்தவுத்தராசங்கம்வீழப்
பாங்கினிலமரர்மாதர்பங்கெறியமலைநீங்கா
மாங்குயிலகவுஞ்சோலைமருவுவாமனகவெற்பும். (௪௨)

பைந்தொடிக்குறவர்மாதர்பல்லினுற்சுகிர்ந்தநாரிற்
கொந்தவிழ்கோடற்பூபோதுகட்டியகுழங்கன்மாலை
சிந்தியகணவரோடூடினர்செல்லுந்தோற்ற
நந்தலின்மின்னிற்றேன்றுநற்றிவாதுகுவாங்குன்றும். (௪௩)

ஆகுமேழ்வரையும்பொன்னங்கிரியெனவழகுவாய்ந்து
போகிதழ்பொருவுமொண்கணரம்பையர்பொருவிறேவர்
சேகெறிமுனிவர்சித்தருறையுளாய்ச்சிறப்பினேடு
மோகையினன்றில்நாமத்தீவினினுறையுமன்றே. (௪௪)

சந்திகைப்புண்டரீகைமனேசெவைகவுரிசாதி
முந்திராத்திரிகுமுத்துவதியெனவதியுமோரே
ழுந்துதெண்டிரைநீர்ப்பேராறுளவவண்முக்கட்டேவின்
வந்தனைவிரதம்வேள்விவரன்முறைவழாதுசெய்வார். (௪௫)

மறையவர்சிறப்புவாய்ந்தபுட்கலர்வடிவேன்மன்னர்
விறல்கொள்புட்கரர்சீர்மிக்கவணிகர்தன்னியரொன்னுரும்
பொறையுடைச்சதுர்த்தரோங்குந்ததீசியரொன்பர்பொற்பி
னிறைபெருந்திருவினேடுநோய்நிரப்பின்றிவாழ்வார். (௪௬)

மண்டுசீர்க்கிரவுஞ்சத்திலளவையின்மதிலையமானும்
வெண்டயிர்க்கடல்சூழ்போமவ்விரிகடற்கிரட்டியாகத்
தண்டலினகத்தீவுதழீஇப்புறங்கிடக்குமாங்க
ணெண்டொடிமடவார்மைந்தர்நரைதிரையுருதுவாழ்வார். ௪௭

ஏட்டைவெம்பசியிற்பாய்ந்தமுடங்குளைமடங்கல்யானைக்
கோட்டினையகழ்ந்துமெல்லென் குருத்துவாய்க்குதட்டவிழ்ந்த
மோட்டொளிமுத்தஞ்சிந்திமொய்கதிருடுக்கள்பூத்த
சேட்டுயர்வானிற்றேன்றுஞ்சாரல்சூழ்சியாமவெற்பும். (௪௮)

அரந்துடைத்தொளிரும்வேற்கட்குறத்தியரந்தண்சாரற்
செருந்திறுழ்நறியகூந்தல்செங்கையாலுளர்தலோடும்

பொருந்தியபேடைமஞ்ஞைத்தோகையென்றெண்ணிப்புல்லும்
விருந்தினருள்ளம்வவ்வும்வளந்திகழுதையவெற்பும். (௪௯)

கைத்தளமென்னப்பூத்தகருஞ்சினைவழையிற்றூங்கு
மொய்த்ததேனிறலிற்பாய்ந்துமுசுக்கலையுடைப்பவீழ்ந்துத்
தத்துதேனருவிபாய்ந்துசந்தனப்படப்பைசாய்க்கு
மத்தமென்னுரைக்குந்தூயவணிமணிக்குடுமிக்குன்றும். (௫0)

கூடியகலவிப்போரினுடைந்திடுங்கொம்பரன்னா
ரூடலும்பிழைத்ததென்கொலுரைக்கெனநாணிநக்குக்
கோடியமுகத்தைநோக்கிக்குறவர்வெண்மதியையெள்ளு
நீடிருஞ்சாரல்சூழுநிகரில்கேசரியாங்குன்றும். (௫க)

வேறு.

பாம்புபைத்தாவித்தென்னமென்காந்தட்பருமுகையவிழ்ந்துதோன்றுதலு, மேம்பலிற்றோகைமயின்முகைகுத்தியன்மையிறுறெறுடுமேகுந், தூம்புடைத்தடக்கைக்கரிவளர்சாரல்சுற்றுபுகிடந்தொளிதயங்குங். காம்புசேர்குடுமியோங்கிடுமாம்பிகேயமாங்கவின்வளர்குன்றும். (௫௨)

அரையிருட்பொழுதிற்கணவர்பாற்களவிற்செலவயராய்த்தொடிமகளிர், நிரவெரிமரத்தீயொளியினல்வெருவிமற்றுமோர்நெறியினைகுழியில், விரிகதிரொன்னச்செம்மணிக்குடுமிவெயில்செயக்கண்டுபோக்கரிதாய்க், கரையெறிகாமங்காழ்க்கொளமயங்குஞ்சாரல்சூழ்காமியவெற்பும். (௫௩)

வேறு.

பொன்சுமந்தோங்குகோங்கின்முலையுறழ்பொலம்பூக்கொய்யு
மின்சுனைமருங்குகண்போன்றெழிறிகழ்குவளைகுற்று
மின்குழாந்திரிவவென்னக்குறத்தியர்வழங்கும்விண்டோய்
மன்பெருஞ்சாரல்சூழ்ந்துவயங்கிரேவதமாம்வெற்பும். (௫௪)

வேறு.

எனுமுயர்குடுமிவரைகளோரேழும் விஞ்சையரியக்கர்கந்தருவர், வினையறநோற்றுமும்மலங்கடிந்தமுனிவரர்மேவுறுமிடனுய்ப், பனியிருவிசும்பின்மேவிவாழ்குன்றும் விழவுறும்பல்வளங்கிடந்து, புனிதமாஞ்சாகத்தீவினில்வீற்றுவீற்றதாய்ப்பொற்புடனமரும். (௫௫)

வேறு.

வேணுகைபெலினிதூயசகுமாரிகுமாரிமிக்க
ரேணுகைகபர்த்திசெய்யவிக்குகையென்னுமோரேழ்
மானுடைநதிகளாங்குமருவுமவ்விடத்துவாழ்வோர்
யாணர்நற்பருவமையாயிரமெனவிசைப்பர்மாதோ. (௫௬)

வேதியர்மாயர்வேந்தர்மகதர்நல்வணிகரானோர்
நீதின்மானரசர்பின்னோர்மந்தகரொன்பர்செய்ய
வாதவன்கமலப்பொற்றாளருச்சனைபுரிந்துபோற்றி
யேதமற்றனனென்றாயமண்டலத்தெய்திவாழ்வார். (௫௭)

உரைபெறுசாகத்தீவினளவையினொலித்துவீங்குந்
திரைகுலாக்கிடந்ததூயபாற்கடல்செறிந்துசுற்றும்
விரவுமக்கடலினப்பண்விண்ணவர்முனிவர்சித்தர்
பரவிடுஞ்சுவேதத்தீவொன்றுளதுபான்மதியிற்றோன்றும். ௫௮

ஆங்கவதரித்தோர்யாருமவிர்மதிநிறத்தர்நாளும்
வீங்குகேள்வியர்தீதற்றமெய்யினர்வெகுளிசெற்றோர்
நீங்கருந்தவத்தோர்நீதிகாழ்கொண்டுகிடந்தநெஞ்ச
ரோங்குநோய்மூப்புநரைதிரையொழிந்துளாரால். (௫௯)

அங்குவந்துதித்தோர்யாருந்திருமறுமார்பராகிச்
சங்கழல்கவிழ்க்குநேமிதாரைவாள்கதைவில்லேந்திக்
கங்குல்சித்தொளிருஞ்செய்யக்கவுத்துவமணிந்துநீண்ட
செங்கண்மாலுருவுதாங்கித்திருவின்வீற்றிருப்பர்மாதோ. (௬0)

தண்டலில்சுவேதத்தீவின்வாழுநர்தயங்குதெய்வக்
கண்டிகைமாலைசாத்திக்கடவுள்வெண்ணீறுபூசிப்
புண்டரமூன்றுநெற்றிப்பொலிவுறத்தீட்டியீசன்
றொண்டராயளப்பிலின்பந்துய்த்தினிதிருந்துவாழ்வார். (௬௧)

கண்கவர்சுவேதத்தீவிற்கணிப்பருநகரமுண்டாங்
கெண்டிசைபுகழுநாராயணனன்புரமென்னவோங்குந்
தண்டுழாய்முகுந்தன்வைகுந்தகைபெறுநகரமற்றொன்
றுண்டதன்றலைமையாரோயிற்றெனவுரைக்கற்பாலார். (௬உ)

காய்கதிர்மணியிற்செய்துகவின்சிறைகிடந்துவான்றோய்
மீயுயர்மாடகோடியுடுத்தவெண்ணிலவுத்திங்கள்
பாயநீள்சதுக்கஞ்சந்திதெற்றிகள்பலவுஞ்சூழ்ந்தோ
ராயிரங்கோடிவெய்யோனலர்ந்தெனக்கதிர்கள்வீசும். (௬௩)

பளிக்குமேனிலங்கள்யாவும்பான்மதிக்காணிற்றெண்ணீர்த்
துளித்திடுமுகடுவேய்ந்தசுடர்மணியிரவியென்ன
வளிக்குலம்வீழுஞ்செய்யகமலங்களலர்ந்துகாட்டும்
வளைக்கையார்மூரல்காணின்மதியெனவாம்பல்விள்ளும். (௬௪)

மங்கையராடற்றெய்வநாரதன்மகதிவீணை
செங்கையாலுளருங்கானந்தீங்குழலிசைக்குமோதை
யங்கலும்மேனிநல்லாரூடியவமிர்தத்தீஞ்சொ
லெங்கணுமமிர்தமாரிபொழிந்தெனவிசைக்குமன்றே. (௬௫)

வெயில்சுரந்தொழுகுஞ்செய்யமணிவடங்கிடந்துவீங்கித்
தொயில்வரைந்தோங்கும்வெய்யதுணைமுலைசுமக்கலாற்ற
மயிலியன்மாதரோடுமாடவர்மதுவுண்டாடிக்
குயில்குடைந்தாடுஞ்சோலைக்கொழுநிழல்வைகுவாரால். (௬௬)

வெள்ளிவெண்ணிலவுதூங்கும்வெண்ணகையமிர்தமன்னார்
கள்ளமுங்குலையுங்கற்றுங்கழிக்கயன்மருட்டுங்கண்க
ளள்ளிலைபூண்செய்திண்டோளாடவர்கமலம்போழ்ந்து
கொள்ளைவண்டாவியுண்டுகூற்றெனவுலவுமன்றே. (௬எ)

மின்பொதியவிழ்க்குஞ்செய்யமணிவிளிம்பெறியுஞ்சேலம்
பொன்புனைக்கொடியினெல்குஞ்பொய்யிடையதனில்வீக்கிக்
கொன்படுபெருதிவைவேற்கொலைவிழிமாதர்கண்டோ
ரொன்புநெக்குருகிமாழ்கவிருநடம்புரிவரன்றே. (௬அ)

உருப்பசியரம்பைவேற்கட்டிலோத்தமையுருவப்பைம்பூட்
கருப்புரங்கமழுஞ்செவ்வாய்மேனகைகதிர்த்துவீங்கும்
பொருப்புறழ்முலைகடாங்கிப்பூஞ்சிலம்பாற்றியார்ப்பத்
தெருத்தலைதோறுமின்னிற்றெரிவிலதிரிவரன்றே. (௬௯)

மரமெலாங்கடவுட்பொன்னங்கற்பகமலர்வாய்விண்ட
விரவுநீர்நதிகள்யாவுங்கங்கையாறொழுகுந்தீம்பாற்
சுரபிகடானுந்தேனுத்தூநகைப்பவளச்செவ்வா
யரிவையர்யாரும்வானத்தரம்பையராவரன்றே. (எ0)

கடையளந்தறியாவின்னவளம்படுநகரிற்காமர்
படுமணிமாடத்தங்கட்பாப்பணைமீதிற்பூமி
மடலவிழ்கமலைசெய்யமலரடிவருடவெய்ய
வுடல்சினத்திகிரிமாயோன்யோகினிலுறங்குமன்றே. (எக)

உலகெலாங்கமலத்தோனேடுந்தியங்கமலம்பூத்த
மலர்செழுங்கதிர்கணீட்டுமரகதமணிக்குன்றன்ன
வலர்கதிர்ப்பருதிநேமியாய்பிழித்துளவினேனே
நிலைபெறுபிரமமாகுநிருமலமூர்த்தியாமால். (எ௨)

இமிழ்திரைகொழிக்குந்தூயப்பாற்கடற்கிரட்டியாகி
கமழலம்பொழில்கள்சூழ்ந்துகவின்செய்புட்கரத்தீவோங்கி
யமைவுறச்சூழுமன்னகண்டத்தையிருகூறாக்கிச்
சிமையவானணவுமானசோத்திரஞ்சிறந்துவைகும். (எ௩)

வேறு.

ஐம்பதினாயிரமாய யோசனைமற்றவ்வரையி னுயர்ச்சியாகு,
மும்பரின்மேற்றலையகலமத்துணையோசனையாகுமுரைத்தவெற்
பிற், கம்பமறுமுப்புரத்திற்கண்டத்தைமாவீதகண்டமென்பா,
ரிம்பருறுமிப்புரத்திற்கண்டந்தாதகிகண்டமென்பரன்றே.(எச)

விழைவுறுமக்கண்டத்தின் விண்டொடுபோகுயர்சினைகள் விழுதுதூக்கும், பழுமரமொன்றுளததன்பாற் பங்கயத்தோனி னிதமர்ந்துபவளமேனி, முழுமுதலைநாரணனைத்தேவரொடுமு துமறைகள்பாடியேத்துங், குழுமியவனுறைவோர்களொன்ப தினுயிரம்பருவங்குலவிவாழ்வார். (எ௫)

நல்வினைதீவினையின்றிநரைதிரைமூப்பொழிந்துண்மைபொ ய்ம்மையின்றிச், சொல்லரியவாச்சிரம வருணமின்றியானந்தந் தொக்குஞானம், வல்லுநராயெல்லோரு மொருதன்மையுடை யராய்மலத்தினீங்கி, யல்லலறதுன்பமின்பமிவையின்றியமரரி ன்வீற்றிருப்பரன்றே. (எ௬)

தெரிதருபுட்கரத்தீவி னளவையிற்றெண் ணீர்க்கடல்சூழ்ந் தொழுகுமிந்த,விரிபுனற்றெண்கடற்கிரட்டிவிளங்கியபொன்னி லஞ்சூழுமதனைசசூழ்ந்து, பொருவருலோகாலோகசக்கிரவாள ப்பொருப்புப்புடையிற்சூழ,மருவியவுட்புறத்தின்வெயிலப்புற த்தினிருட்பிழம்புமலியுமன்றே. (எஎ)

ஒளிநேமிவரைப்பரப்போரிலக்கம்யோசனையாகுமுயர்பும ற்றே, களிசேரொண்டிசைப்பாலரவ்வரையெண்டிசைப்புலனுங் காத்துவாழ்வர், வெளிமூடுமவ்வரையினப்புறத்தினிருட்பிழம் புமிடைந்துசூழ, நளியாரவ்விருட்பிழம்பை யண்டகடாகம்பு தைத்துநண்ணுமன்றே. (எ௮)

இத்தகையவண்டங்களளவிறந்தகோடியவாமிவைகள்யாவு ங், கைத்தலத்தினெல்லியெனவுரைத்திடுமிவ்வண்டம்போற்கரு திக்காண்டி, ருய்த்திதனைச்சூழ்போதுமாவரணமோரேழுமொ ன்றுக்கொன்று, பத்துமடங்கதிகமாமனந்தரிவையனைத்தினையு ம்பரிப்பர்மாதோ. (எ௯)

அவ்வியத்தந்தனைக்கடந்து பேரொளியாய்மகேசுரனுண்ட மர்வனந்தத், திவ்வியமாமவ்வியத்தந்தனிலண்டஞ்சிறந்துதிக்கு மதனுண்மிக்க, வெவ்வமறுமேருமுகட்டியன்மறைதேர்நான்மு கத்தோனுதிப்பனன்னோன், பவ்வமுறைசூழ்கிடந்தவுலகனைத் தும்வரன்முறையிற்படைப்பனென்றான். (௮0)

பிலக்கமுதலானதீவுகளியற்கையுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—உ௯அ௬.

---

நாற்பத்தேழாவது

## மனுவந்தரமுறைத்தவத்தியாயம்.

இறந்திடுமன்வந்தரத்தோடெதிர்ந்திடுமன்வந்தரத்தி னிய
ல்புமாங்குச், செறிந்ததுவாபரந்தோறும்வியாதமுனிவருதிற
னுங்கலிகடோறும், பிறந்தறியாத்தனிப்பொருளின்மாணுக்கர்
வரன்முறையும்பேசுகென்ன, வறம்புரியுநாரதனுமகபதியுங்கே
ட்பமாலறையலுற்முன். (௧)

உலகுபுகழ்சுவாயம்புவெய்யசுவாரோசிடன்பேருத்தமன்
சீ, ரலகில்திறற்றுமசன்வேலிரோவதன்சாக்குடனென்னவறுவ
ராகி, விலகுவடிவேன்மனுக்கள்காலங்களிறந்தனவீண்டிருந்து
வாழ்வோன், புலவுவடிவாட்கைவைவச்சுதமனுவாமெனவெடு
த்துப்புகல்வர்மேலோர். (௨)

ஆதியுறுசுவாயம்புமனுநாளிற்றேவதைகளமரர்கோமா,னீ
திபுரியேழ்முனிவர்பெயரனைத்தும்வழாதுமுன்ன நிகழ்த்தினே
மா, லோதுமிரண்டாமனுசரோசிங்குசுவாரோசிடன்மற்றவன்
காலத்தின், மேதகுவானவர்தம்மைப் பராவதர்நற்றுடிதரென
விளம்புவாரால். (௩)

அக்காலத்திந்திரனைவிவச்சித்தென்றறைகுவரோழ்முனிவர்த
ம்மை, முக்காலங்களுமுணருமூர்ச்சனியற்றம்பமுனிபிராணன்
தாந்தன்,பக்ஷோர்செரலபிரிடிதனற்றிமிரனியலறுவரிவரொன்று
தாவில், பைக்கோலமணிச்சுடிகைப்பாந்தண்மிசைக்கிடந்தநில
ம்பகருமன்றே. (௪)

சொன்னவிரண்டாமனுவின்றேமின்மைந்தர்சயித்திரன்கி
ம்புருடனென்பர்,பன்னியமூன்றுமனுவின்பழிப்பில்பெயருத்த
மனுமவன்றன்காலத், துன்னருஞ்சிரிந்திரன்பேர்சுசாநதியாமி
ராசனூலூர்த்துவாகு, மன்னுசுதபன்சவன்ன்மகன்சுக்கிரனென்ன
வேழ்முனிவர்வண்பேர். (௫)

அன்னகாலத்தமரர்சுதாமருயர்சத்தியர்நீள்சிவர்சீர்த்தி,ம
ன்னுபிரமார்த்தனர்பொன்மவுலிவசவர்த்திகளென்றைந்துகொ
த்தாய்ப், பன்னிருவராயிருப்பர்பகர்ந்திடுநான்காமனுவின் பழி
ப்பினமை, மென்னிலமும்புகழ்ந்தேத்றுந்தாமசனுமிந்திரனைச்ச
வியென்பாரால். (௬)

விண்ணவரக்காலத்திற்சத்தியர்நற்சுரர்மருவி யரரின்மேன்
மை, நண்ணுபுகழ்ச்சுதைய...நான்குகொத்தாயிருபதின்மே
லெழுவராகி, கண்...றைவர்சோதிதாமன்பிருதுக்
காவியன்சீ, ரொண்ணரியசயித்திரனிதனதனிகன்பீவானெனவே
ழ்முனிவரர்வார். (௭)

சிறப்புடையைந்தாமனுவின்றிருநாமமிரோவதனுமகவானு
ம, மறத்துறைபோம்சுகனுகுமமிர்தரறந்தருபாகநிரதர்நாளுந்,
துறக்கருஞ்சீர்வைகுந்தர்சுமேதரொனுநான்கு கொத்தாய்தோமி
ல்விண்ணோர், பிறற்கரியதுறக்கத்தினிருபதின்மேலெண்மராய்
ப்பெரிதுவாழ்வார். (௮)

இரணியரோமன்றிகழுந் தேவார்த்தியிலங்கொளிசேரூர்த்
தவாகுக், கருணைபுரிந்திடுதேவவாகுவியனற்சுதாமன்பர்ச்சனி
யன்காம,• ரருள்புரிமாமுனியென்னவேழ்முனிவர்பெயராரும
னுவினுமம், பொருவருஞ்சாக்குடனுகுமிந்திரன்பேர்மனோசவ
னென்றுலகம்போற்றும். (௯)

ஆர்த்தியர்நற்பிரபாசர் பவியருட்பிரதானர் மானுபாவர்,
வாய்த்தவிலேக்கியரொன்னு மாறுகொத்தாய்ப் பத்தொன்பான்
பெயராய்வானோ, ரேத்தவுறைகுவரறங்கூர்சுமேதனியமோர்விரி
சனவிட்டுமான்சீர், காத்தருளுத்தமன்மதுவத்திரிகருணைச்சயி
ட்டுனுவேழ்முனிவராவார். (௧0)

முழுதுலகுமதிக்கவிகைநிழற்றுசுவாரோசிடனை முதலாய்ப்
பைம்பொ, னெழுவுறழ்தோளிரோவதனையிருநால்வருங்கமலத்
திறையைமானு, மழையுறழுங்கொடைத்தடக்கைச்சுவாயம்புமனு
வினருண்மதலையாய, தொழுநருசிருல்கேத்தும்பிரியவிரதன்
குலத்திற்றோன்றினோரே. (௧௧)

வேறு.

ஏழாமனுவைவச்சுதனென்றோதுவர்மகவான்
றுழாதுயர்பொன்முடினிகளிகுரும்புரந்தரனுஞ்
சூழ்செஞ்சுடராதித்தியர்வசுக்களுருத்திரர்சொல்
வாழ்வாமருத்துவரென்றிவரொருநால்வகையாவர். (௧௨.)

அன்னோர்கண்முப்பதின்மூவர்களவராரருள்வசிட்டன்
றன்னேரொறிபுகழத்திரிசமதக்கினியருள்கூர்
பன்னூலுணாதெளிகோதமன்பாரத்துவமுனிவன்
றென்மாமறைதெரிகாசிபன்றுகடீர்கவுசிகனே. (௧௩)

எனுமாதவரிக்காலையினேழ்மாமுனிவரர்வெம்
மனுவாயசுவாயம்புவின்மன்வந்தரமதனிற்
கனிவாயிதழாகூதிவயிற்றிற்கடல்வண்ணன்
வினைதீர்வருசசிகேசனெனத்தோன்றினன்பிறையின். (௧௪)

சுவரோசிடமன்வந்தரமதனிற்றுடிதப்பே
ரவரோடகலல்குற்குயில்வயினஞ்சனவண்ணன்
றவர்நண்புறுதுடிதப்பெயரிமையோரொடுதாவு
மைவெண்மதிபோலக்காமதப்பேரினுதித்தான். (௧௫)

புகழுததமமன்வந்தரமதனிற்புயல்வண்ணன்
மகிழ்சத்தியனொனும்வானவரொடுசத்தியைவயினி
லிகலுற்றிடுமவுணர்க்கிடரெய்தத்திறலோடுந்
தகைபெற்றுயர்தருசத்தியனெனவந்தவதரித்தான். (கசு)

மன்னும்புகழ்பெறுதாமசமன்வந்தரமதனிற்
பின்னற்றிரைதவழ்பாற்கடனடுவட்டுயில்பெரியோ
னுன்னற்கருமரியேழினிலுயர்வானவரோடும்
பன்னற்கருமறைதேடியவரியாகவுற்பவித்தான். (கள)

மானுத்திசைபெறுரோவதமன்வந்தரமதனி
னுணிற்பொலிசம்பூதிதனன்மாமகவாகச்
சேணிற்பொலிசம்பூதனொனுந்தேவர்களொடுமா
லேணுற்றுயர்சம்பூதனெனத்தோன்றினனன்றே. (கஅ)

மல்லற்றிருவளர்சாக்குடமன்வந்தரமதனின்
வில்லிற்றிகழ்புருவக்கொடியிகுண்டைக்குயில்வயினிற்
சொல்லற்கரும்வைகுந்தனெனுந்தேவர்கடொகையுள்
வெல்லற்கரும்வைகுந்தனெனத்தோன்றினனன்றே. (கக)

வைவச்சுதமன்வந்தரமதனிற்புவிவாழக்
கொவ்வைக்கனியிதழ்வாயதிதிக்கோர்குலமகவாய்ப்
பவ்வக்கடலிடைகண்டுயில்பச்சைப்புயலனையான்
செவ்விக்குறளுருவாகவுதித்துப்பகைசெற்றான். (உ0)

வேறு.

பொருவருமெட்டாமனுவைச் சாவன்னியென்றுரைப்பர் புகலுங்காலை, மருவியசீரிந்திரனை மாவலியென்றினிதுரைப்பர் வானோர்யாரு, முருகவிழ்தார்ச்சுதபர்திறலமிதருயர்முக்கியரா மூன்றுகொத்தாய், தெரிவருஞ்சீரோரொருகூ றிருபஃதாய்வி ண்ணினிடைச்சிறந்துவாழ்வார். (உக)

கீர்த்திமான்காவலனேடிராமன்சீர்த்திக் கிருபனேடச்சுவ த்தாமன்வியாதன்யாரு, மேத்தருஞ்சீர்மிருகசிரங்கனென்னுநா மத்திருந்தவத்தோரேழ்முனிவராகிவாழ்வர், வாய்த்ததிறலொ ன்பதாமனுவினைமம்வழங்குதக்கசாவனனன்மகவானுமங், கோத் தபுகழ்ச்சுதையுலகமுழுதுந்தீற்றுங்குணமுடையற்புதனென்று ங்கூறுவாரால். (உஉ)

பாரவிறன்மரீசிகற்பர்சுமதனொன்றுபகர்ந்திடுமூவகையரா ய்விண்ணோர்யாரு, மோரொருகொத்தொருபதின்மேலிரண்ட தாகி யும்பருலகினில்வாழ்வர் சவனனேங்கு, சீர்கெழுநற்றுதி மானவ்வியன்றன்னேடும் வசுமேதாதிதிறற்சோ திட்டுமான,

பேர்புனைசத்தியனென்னுமுனிவரேழு பிறங்கொளிசேர்மாதவராய்ப்பெரிதுவாழ்வார். (உ௩)

பழிப்பறுபத்தாமனுவெவ்வுலகும்போற்றும் பணிபிரமசாவனனன்மகவானாம, மொழிப்பரியபுகழ்ச்சாந்தியென்பர்நாளு மோங்குசுகர்மனவிருத்தனெனவிரண்டாய்த், தழைத்தபுகழமரரிருகொத்தாய்நூறுபகுதியாய்விண்ணகத்திற்சார்வனென்ன, விழைத்தமறையொருநான்குமங்கமாறு மிதிகாசபுராணமுடனியம்புமன்றே. (உ௪)

அறம்புரியும்விட்டுமான்சுகிர்திசத்தியன்றைதருமாபோமூர்த்திநரடாகன்கீர், சிறந்தபுகழ்ப்பிறிதிமோசனொடுந்தீதிறவச்சத்தியகேதென்னவோதுங், துறந்ததவக்கிழவனொழுமுனிவராகத்தோன்றிடுவர்பதினொன்றாமனுவினாம, மறங்கெழுபேர்த்தருமசாவனியனென்பர்மகவானைவிரிடனெனவழங்குவாரால். (உ௫)

தேவர்விகங்கமர்செறிந்தகாமகோபர்நிர்வாணருசிகனெனமூன்றுகொத்தாய், மேவியொருகொத்தினுக்குமுப்பானாகிவிளங்குவர்நிச்சானொடுமக்கினிதேசென்றால், பாவமறும்வபுட்டுமன்விட்டிணிதிவேள்விபயிலுமறையாருணிநல்லவிட்டுமான்சீர்; தாவில்புகழனகனெனுமுனிவர்தாமே தகைபெறுமேழ்முனிவரெனச்சாற்றுவாரால். (உ௬)

பன்னிரண்டாமனுவீசன்புதல்வனானபழிப்பறுசீர்சசாவணிமகவானாமம், பொன்னுலகுதனியளக்குமிருதுதாமன்புகலமரரிதருரோகிதர்பொற்பார்ந்த, மன்னுதமோனிசர்சுகன்மர்சுராபனென்ன னைந்துகொத்தாய்ப்பத்துவகையாகவாழ்ந்து, கன்னல்புளித்திடமொழியுமரம்பைமாதர்கவிரிதழ்கூட்டுண்டினிதிற்களித்துவாழ்வார். (உ௭)

தாவில்புகழ்த்தவிசியொடுஞ்சுதபன்வெய்யதபோமூர்த்திதபொதிநீடுதிதீவேள்வி, யோவருஞ்சீர்த்தபோதிருதிதபோதானப்பேரூர்வொனோடிங்கிவரேழ்முனிவராவர், மேவுதிறற்பதின்மூன்றாமனுவினாமமுரோச்சியனா மிந்திரன்பேர்விளங்கக்கூறிற், றேவர்புகழ்திவோற்பதியென்றுலகமேழுந் தெளிந்துமறைபகர்ந்ததெனச்செப்புமன்றே. (உ௮)

விண்ணவர்சுத்திரர்மாவிறற்சுதர்மர்வீங்கு சுதன்மனெனமூன்றுகொத்தாய்ப்பிரிந்துபின்னு, நண்ணுவரோர்முப்பத்துமூன்றுபாலாய்நிருமோகன்தத்துவத்தைநயந்துகண்டோன், புண்ணியநற்பிரம்கம்பனிருச்சுகன்சீர் பொங்கொளிசேர்திதிமானவ்வேயன்ஞானங், கண்ணியிடுசுபதனெனுமுனிவர்விண்ணிற்கலந்திடுமேழ்முனிவராய்க்களித்துவாழ்வார். (உ௯)

பரவுபுகழ்பதினான்காமனுவினுமம்பவுமியனுமிந்திரன்பேர்சுசியின்னோர்கள், விரவுதிறற்சாக்குடர்நற்பவித்தரோடுகனிட்டர்பிராசிரவர்சர்விருத்தரென்ன, வுரைபெறுமோரைந்துகொத்தாயுறைவர்நீளக்கினிவாகுச்சுசியுடனொண்சீர்த்தி, மரகதனுக்கினீத்தானீனுத்தனோடுவாழசிதனெனவேழுமுனிவர்வாழ்வார்

உரைத்திடுமிப்பதினான்குமனுவும்வீயினொருபகற்போதொழிந்திடுமொண்கமலத்தோற்கவ், வரைத்தகங்குல்பகல்போலவீரைஞ்ஞூறுசதுர்யுகமருவியிடும்வாசுதேவ, னிரைத்தபொறிப்படச்சேடன்வேனில்வேளா நேமியுடைப்பிரத்துமினன் பிராமியென்ன, விரைத்துளவோன்சதுரவியூராகுமந்தமெய்ப்பொருளாவியாதனெனவிளம்புவாரோ. (௩௧)

மனுவந்தரமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௨௭௧௱.

---

நாற்பத்தெட்டாவது

## வியாதர்வரலாறுரைத்த வத்தியாயம்.

பொருந்தியவைவச்சுதமனுவுலகம்புரக்குநாண்முதற்றுவாபரத்தில், வருந்துறுசுவாயம்புமனுவியாதன்மற்றையதுவாபரந்தன்னிற், றிருந்தியவுயர்சீர்ப்பிரசாபதிவியாதன்சிறந்தமூன்றாந்துவாபரத்தி, லருந்தியவுசனும்வியாதனான்காகுந்துவாபரத்தந்தணன்வியாதன். (௧)

அறைந்திடுமைந்தாந்துவாபரமதனிலாதபன்வியாதனாறுகச், சிறந்தொளிதயங்கத் திகழ்துவாபரத்தின் மிருத்தியுவியாதனேழாய்ப், பிறங்கியவொளிசேர்துவாபரமதனிற் பெய்கழலிந்திரன்வியாத, னிறங்கிளரெட்டாந்துவாபரமதனினிகரொறிவசிட்டனல்வியாதன். (௨)

ஒன்றொழிபத்தாந் துவாபரயுகத்தி னோங்குசாரச்சுதன்வியாதன், மன்றவப்பத்தாந்துவாபரமதனில்வளர்திரிதாமனல்வியாதன், றுன்றுசீர்ப்பதினொன்றாந்துவாபரத்திற்றுகளறுவிடவனல்வியாத, னின்றபன்னிரண்டாந்துவாபரமதனினிகழ்சததேசனல்வியாதன். (௩)

பத்தின்மேன்மூன்றாந்துவாபரமதனிற்பழுதறுதருமனல்வியாத, னுய்த்திடுபதினான்காந்துவாபரத்திற்றரக்குவென்பவனுயர்வியாதன், சித்திகூர்பதினைந்தாந்துவாபரத்திற்றிகழ்திரியாருணிவியாதன், முத்திகூர்பதினாறாந்துவாபரத்திற்றனஞ்செயன்மூதுமறைவியாதன். (௪)

ஒருபதினேழாந்துவாபரமதனிற் கேமகன்வியாதனென்று
ரைப்பர், வருபதினெட்டாந்துவாபரமதனில்ருதுஞ்சயன்வியா
தனாய்வழங்கும், பொருவில்பத்தொன்பான்றுவாபரமதனிற்பர
த்துவாசன்புகழ்வியாத, னிருபதென்றுரைக்குந்துவாபரமதனி
ற்கோதமன்வியாதனென்றிசைப்பார். (௫)

இருபதின்மேலொன்றாந்துவாபரத்தில்வாச்சுவான்வியாத
ன்மேலிரண்டா, மொருபதிற்றிரண்டாந்துவாபரமதனிற்கூட்டு
மாயணனாயர்வியாதன், மருவிருபான்மூன்றாந்துவாபரத்திற்றி
ரணவிந்தாமரைவியாதன், கருதருநான்காந்துவாபரமதனிற்க
டவுள்வான்மீகிநல்வியாதன். (௬)

போற்றுமையைந்தாந்துவாபரமதனிற்பொருவறுசத்திசீர்
வியாதன், சாத்திருபத்தாறாந்துவாபரத்திற்றகைபெறுபராசர
ன்வியாதன், யேற்றமூவொன்பான்றுவாபரத்தினைதீர்சாதுகன்
னென்றிகழ்வியாதன், தோற்றுநாலேழாந்துவாபரமதனிற்றுகளா
றுவியாதனேவியாதன். (௭)

பொன்வரைவிழுதுவிட்டெனக்கிடந்தப்புரிசடையந்தணர்
தொழுதுப், பன்னருமறையைநான்குகூறாகப்பகுத்தனன்பழம
றைவியாத, னன்னநன்மறையினுபநிடதத்தினினிதினிலரசுவீற்
றிருக்குங், கன்னன்மென்மொழியாள்பங்கனேயெல்லாக்கடவு
ட்குங்கடவுளாங்கடவுள். (௮)

சுரதனற்றமனன்சுகோத்திரன்மறைதேர் கங்கணன்றாளங்
குலோகாக்ஷி, பராவரும்யோகியிந்திரன்சைய்கி டவ்வியின்பகர்
ததிவாகன், விராயசீர்விடபன்பிருகுவோடுக்கிரதபன்விறலத்
திரிவாலி, தராதலம்புகழுங் கோதமன்வேத சிரீடபன்றயங்கு
கோகன்னன். (௯)

வருகுகாவாசான்சிகண்டிநற்சடாம லியன்புகழ்வளரட்ட
காசன், பொருவிறுருகனோடிலாங்கலிசுவேதன்சூலிதிண்டாமு
ண்டிபுகழ்சேர், தருசயிட்டுனுநீள்சோமதன்மன்சீர்தழைலகு
லீசனென்றிவர்க, ளிருபதோடெட்டாங்கலியுகந்தோறுமிறை
யருளான்மறைவிரிப்பார். (௧௰)

இன்னரோரொருவர்தமக்குமாணாக்கர் நால்வர்மற்றினிதி
ன்வந்தெய்தித், துன்னருங்கலியின்மறைப்பொருள்விரிப்பபொ
ன்றிவைமுழுவதுந்தொகுத்துக், கன்னவிறிரடோளிந்திரன்வீ
ணைமுனிவரன்கேட்டிடக்கரியோன், சொன்னவாறனைத்துஞ்ச
வுனகர்முதலாமுனிவரர்க்குரைத்தனன்சூதன். (௧௧)

வாழியிக்கதையின்விழுப்பொருளுணர்ந்தோரொழுதினோர் மகிழ்வொடுங்கேட்டோர், சூழ்முறையுரைத்தோர்படிக்குநரிதனிலோரெழுத்தாயினுமுணர்ந்தோ, ராழ்கடலுடுத்தவுலகளித்தங்கீங்குதலைவராயருமகப்பயந்து, காழ்பழுத்திருண்டகறைமிடற்றெந்தைகனைகழல்நீழல்வீற்றிருப்பார். (௪௨)

வியாதர்வரலாறுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—உளஉ௧.

---

பூ ரு வ கா ண் ட

மு ற் றி ற் று.

---



உ

சிவமயம்.

# கூர்மபுராணம்.

## உத்தரகாண்டம்.

### கடவுள்வாழ்த்து.

விழைவொடுதந்தைசென்னிமிலைந்தகூன்பிறையைநோக்கி
முழுமதிசெய்துமென்றோர்கோட்டினைமுறித்துத்தாங்கித்
தொழுதகுமன்பருள்ளத்தறியினிற்றுவக்குண்டோங்கு
மழைமதக்களிற்றின்செய்யமலரடிவணங்கல்செய்வாம். (௧)

சீர்கெழுமமிர்தந்தெய்வமடந்தையர்நாகலோகத்
தேர்கெழுமகளிர்க்கீயப்பணுமணியிமையோர்நாட்டு
வார்முலையவர்க்குநாகமடந்தையர்வழங்கச்செம்பொன்
மேருவிற்குழையவாங்கும்விண்ணவற்போற்றல்செய்வாம். (௨)

திங்கண்மாமணியிற்செய்தநிலத்தினிற்றெய்வநன்னீர்க்
கங்கைமென்றிவலைமாந்திக்கண்கவரழகுபூத்துக்
கொங்குகொப்புளிக்கும்பொன்னங்கொடிநிகரிமயவல்லி
பங்கயமருட்டுஞ்செய்யப்பதமலர்சென்னிவைப்பாம். (௩)

தாருகனுடலம்போழ்ந்துதடிசுவைத்துதிரமாந்தி
யீருள்வாய்ப்பெய்துபுன்றோலென்பொடுகுதட்டிழலா
வார்குடர்விழுங்கிமாருப்பசியொடுங்கடைவாய்நக்கும்
போர்கெழுசுடர்வேலெந்தைபொன்னடிசென்னிவைப்பாம். ௪

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

---

முதலாவது

### வெதிரிகாச்சிரமத்தில்மகேசன்றோன்றியவத்தியாயம்.

குவிமுகிழெருக்கங்கண்ணிக்குழகனேகடவுளென்று
யவனெவனவன்றுள்சேர்க்கும்ஞானம்யாதறைதியென்னப்
பவமறக்கனிவாய்விள்ளுஞ்சூதமாமுனிவற்பாராச்
சவுனகாராதியாயமுனிவரர்சாற்றினரால். (௧)

சாற்றியமுனிவரோடுந்தவத்துறைபோயசூத
னாற்றருந்தவத்தின்மிக்கவருமறைவியாதன்வைகுந்
தாற்றிளம்பூகவேலிச்சாலையினண்ணியேத்தத்
தோற்றியமுனிவன்செய்யதுணையடிவழுத்திச்சொல்வான். (௨)

நயிமிசாரணியமேவுநற்றவமுனிவற்கெந்தாய்
வயிரவாட்படையோன்வீணைநாரதனுணரமாயோன்
செயிரறவுரைத்தஞானமெனக்குநீதெரித்தவண்ணம்
பயில்வுறவுரைத்தியென்னப்பணிதலுமுனிவன்சொல்வான். ௩

ஆய்மலர்க்கொன்றைவேணியந்தணர்ப்போற்றியீசன்
பாயமும்மலங்கள்செற்றசனகனைமுதலாம்பண்பி
னேயநன்முனிவர்க்கோதுமிருளெறிஞானந்தன்னைத்
தூயமாமுனிவர்கேட்பவியாதமாமுனிவன்சொல்வான். (௪)

ஈண்டுநம்போலவையுற்றிருந்தவக்கிழமைபூண்ட
மாண்டகுசனகன்வெய்யவசிட்டனைமுதலாயுள்ளோர்
வேண்டினராகித்தூயவெதிரிகாச்சிரமத்தன்பு
பூண்டருந்தவஞ்செய்காலைநரனுநாரணனும்போந்தார். (௫)

போந்தநாரணனைவேள்விமுனிவரர்போற்றல்செய்ய
வாய்ந்தநூன்முனிவருள்ளங்குறித்தவையறைதியென்னப்
பூந்துழாய்முடியோன்கேட்பப்பொங்கொளிக்கதிர்கணீட்டுங்
காந்தெரியூட்டியுண்ணுங்கடவுண்மாமுனிவர்சொல்வார். (௬)

அருந்தவஞானபாதமறிந்திட்டவறைதியென்னப்
பொருந்தியமுனிவன்செங்கேழ்ப்பொழிகதிர்நேமிசங்க
மிருங்கதைசிலைவாடாங்கிவானவர்க்கமுதமீவான்
கருங்கடல்கடைந்தஞானக்கடவுளாய்த்தோன்றக்கண்டார். (௭)

சேகெறிதவத்தின்மிக்கநரனெனுமுனிவன்றீதி
னாகிளந்திங்கட்கண்ணிவேணியுநாட்டமூன்று
மாகிவெம்புலித்தோலாடையசைத்திடும்பவளக்குன்று
மேகநாயகனிற்றோன்றிநிற்பதுமினிதுகண்டார். (௮)

காண்டலுமுவகைபொங்கிக்கடலிடைக்கவிழ்த்துப்பன்னாட்
டேண்டியநிதியமுன்னம்வந்தெனத்திருமாலாதி
மாண்டகுமுனிவர்யாருமனமகிழ்தூங்கியேத்த
வீண்டிவர்புகுந்ததென்னைமுனிவநீயிசைத்தியென்றார். (௯)

என்றலுங்குடந்தம்பட்டுநாரணனிருகைகூப்பி
நன்றறிமுனிவர்யாரும்ஞானபாதத்தினுண்மை
மன்றவென்னோடுகேட்பான்போந்தனர்மனோவாக்கெய்தாத்
துன்றிருஞானநின்னையன்றியார்சொல்லற்பாலார். (௧௦)

பங்கயத்தவிசின்மேவும்பண்ணவனரன்மாலென்ன
வெங்களோடொருவனாகவிருந்துமுன்னெம்மையீன்றுந்
தங்குமோரொளியாய்வெய்யதழற்பிழம்பாகிநின்ற
புங்கவமுனிவர்க்கந்தவுண்மையைப்புகறியென்றான். (௧௧)

மையவாய்கிடந்துநீண்டமதர்நெடுங்கண்ணிபங்கன்
செய்தவமுனிவர்யார்க்குஞ்சிற்பொருளுரைக்குமேல்லை
பையராச்சுடிகைநெற்றிப்பருமணிமுகடுவேய்ந்த
வையபூந்தவிசொன்றாங்குவிசும்பினின்றணைந்ததன்றே. (கஉ)

சேட்டிளம்பருதியென்னத்திருமணிமுகடுவேய்ந்த
மோட்டிளஞ்சிங்கப்பொற்றாட்டவிசினின்முகிழ்த்துவீங்குங்
கோட்டிளமுலையபொன்னங்கொடிவளர்பவளக்குன்றா
நாட்டமூன்றுடையபெம்மானன்குவந்திருந்தானன்றே. (கங)

இருந்தபின்முகுந்தன்றன்னைமுனிவரர்தம்மையெல்லாம்
பொருந்தியநோக்காற்றூயபரிசத்தாற்புகலும்வாக்காற்
றிருந்துபாவனையாலென்றுந்திகழவுத்திரியாஞ்ஞும்
விரிந்தவெம்பாசநீக்கிமெய்ப்பொருளுரைக்கலுற்றான். (கச)

வெதிரிகாச்சிரமத்தில்மகேசன்றோன்றியவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கஅ.

---

இரண்டாவது

## சாங்கியயோகமுரைத்த வத்தியாயம்.

விண்ணவரியக்கர்சித்தர்முனிவரோனும்வெய்தா
யெண்ணுதற்கரியதாகியினிதினினுணர்ந்தோர்யார்க்கு
நண்ணும்வெம்பிறவிதீர்க்குஞானத்தைநவையில்கேள்விப்
புண்ணியர்க்கல்லால்நெஞ்சம்புலப்படப்புகலொணாதால். (க)

தெண்டிரைக்கடலிற்றுஞ்சுஞ்செங்கண்மான்முடியிற்சூடுந்
தண்டுழாய்க்கமழும்பொற்றாட்டழல்படுநுகற்கணெம்மா
னண்டருமின்னுந்தேறாவருமறைப்பொருளைநீவிர்
தொண்டரானமையானன்கிற் சொல்வனென்றுரைக்கலுற்றான்.

சொச்சமாய்ச்சாந்தமாகிச்சூக்கமாயொன்றாய்நாளு
நிச்சமாய்ஞானமாகியெங்கணுநிறைந்ததாகி
யச்சமிறம்த்துக்கப்பாலாயகேவலமாயென்று
மெச்சமிலான்மாவென்றோன்றினிதுளதென்பர்மேலோர். (ங)

அந்தரியாமியாகவுறைவதுமதுவேயாகு
நந்தலில்புருடன்காலநற்றழலவ்வியத்த
மைந்துடைப்பிராணனீசனைத்துமற்றிதுவேயென்னச்
சுந்தரமறைகள்யாவுந்தொகுத்தெடுத்துரைகுமன்றே. (ச)

உரைத்திடுமான்மாமாயைச்சிமிழ்ப்புறவுலப்பில்காலம்
வரைத்திடவரியயாக்கைமருவிடுமருவினாலும்
பரித்திடுமுடலந்தன்னையெடுப்பதுபழிப்பில்யாக்கை
தரித்திடப்பண்ணுவோனுமன்றெனச்சாற்றுவாரால். (ரு)

பஞ்சபூதங்களன்றுபகருஞானேந்திரியங்க
ளைஞ்சுமன்றுரைத்தகன்மேந்திரியங்களோரைந்துமன்று
மெஞ்சலில்சத்தமாதிவாக்காதியிவைகளன்று
செஞ்சவேமனுதியன்றுதிகழுமவ்வியத்தமன்றே. (௬)

உழிதருபிராணனன்றுகருத்தனன்றுண்போனன்று
தழைபிரகிருதியன்றுபுருடனுமன்றுசால
விழைவுறுமாயையன்றுவிளங்கியவான்மாயாருந்
தொழுதருமறைகளேத்துஞ்சுத்தசைதனியமாமால்: (எ)

வெயிலுநன்னிழலும்போலவிளங்கியசகத்தினோடும்
பயிறருமான்மாவென்றும்பகர்ந்ததற்குபாதியின்றித்
துயின்மலமுண்மைத்தென்னிற்சொல்லுதற்கரியவாய
மயர்வறுசன்மகோடிமருவினுமுத்தியின்றே. (அ)

முத்தராமுனிவரான்மாமுற்றியவிகாரமின்றி
தத்துவங்கடந்துநின்றதனிப்பொருளாகியொன்றாய்
நித்தமாயசலமாகியெங்குநிறைந்துநின்ற
மைத்தவாணவத்தைநீங்கும் பொருளெனமனக்கொள்வாரால்.

யானுயர்கருத்தனென்மேலிளைத்ததுதடித்ததென்று
நோன்மையேன்வெகுளிமிக்கேனெனநனிநுவலுகின்ற
பான்மையாணவத்தின்செய்தியதனொடும்பயின்றவாற்றா
லீனமிலான்மாமற்றையிவைகடன்செயலதென்றும். (௧0)

பொருவில்வேதாந்தத்துண்மையறிந்தவர்புகன்றவான்மா
விரிதருவியாபியென்றுமேவுதத்துவங்கட்கெல்லாங்
கரியதுவென்றுமூலப்பகுதியுங்கடந்துநின்ற
துரியமதாகுஞ்சுத்தவெளியென்றுஞ்சொல்லுவாரால். (௧௧)

யாக்கையிற்சிமிழ்ப்புண்டெல்லாவுருவமாய்க்கருவினெய்திப்
போக்கொடுவரவுசெய்தல்பொருந்துமஞ்ஞானத்தாகு
மாக்குமஞ்ஞானமேதென்றறைந்திடிற்பகுதியோடு
நீக்கருந்தத்துவத்தைவேறென்றாய்நினைதலாகும். (௧௨)

நித்தியமாகியொன்றாய்வியாபியாய்நிறைந்துநின்ற
சுத்தமாய்ப்பரமமாகிச்சுயம்பிரகாசமாகித
தத்துவங்கடந்துநின்றபுருடனங்காரந்தன்னோ [தும்
டொத்துத்தான்வேறென்றெண்ணுன்கருத்தன்யானென்னவோ

விரிந்தகாரணத்தினோடுகாரியமாகிமேவித்
திருந்தியசகத்துக்கெல்லாங்காரணமாகித்தீதி
லரும்பிரகிருதியாகிப்பிரதானமவ்வியத்தம்
பொருந்தலாலான்மாத்தன்னைப்பரமெனப்புலப்படாதால். ௧௩

தன்னைத்தானென்றுதேறவுணர்கலாதாகித்தாழ்ந்த
மின்னல்வெண்டிரைசேர்நீரிற்பிறந்தழிகுமிழிபோல
மன்னியயாக்கைதன்னைத்தானெனமயங்கிமாழ்கித்
துன்னியவின்பதுன்பவல்லியிற்றுவக்குண்டானல். (௧௫)

வருந்துசெய்காமமாகியுடற்பகைவயங்குமான்மாப்
பொருந்தியவியல்பதன்றுமயக்கத்திற்புணர்ந்ததாகும்
விரிந்தவெம்பிறவிநோய்க்குக்காரணம்விளங்கமுன்னம்
புரிந்துதானிழைக்கப்பட்டபுண்ணியபாவமாமால். (௧௬)

நித்தியமாகுமான்மாயேகமாய்நிகழ்த்துமாயா
சத்தியாயளப்பில்பேதமாமுறுபேதஞ்சாற்றின்
வைத்தநீர்க்குடங்கடோறுந்தோன்றிடுமதியம்போல
வுய்த்திடுமுபாதிதன்னாற்பற்பலவுருவந்தோன்றும். (௧௭)

காழ்படுதேக்குவெந்தகரும்புகைக்கழுமப்பற்ற
வேழ்பகலூட்டினாலுமிருவிசும்பழுக்குறாதால்
வாழிமற்றதுபோலான்மாக்கரணங்கண்மருவினின்றுந்
தாழ்தருமவற்றின்பண்புசார்ந்திடாதொழுகுமன்றே. (௧௮)

வெளிற்றறிவெறிந்தமெய்ம்மைமுதுக்குறைவுடையமேலோர்
தளிர்த்தவிச்சகத்தையெல்லாந்தற்பரமாகக்காண்ப
ரளிக்குலம்வீழுங்கண்ணியரவெனமருளுமாபோற்
களித்தபுல்லறிவினோரிச்சகத்தினைசகமாய்க்காண்பர். (௧௯)

விகாரமுங்குணமுமின்றிவியாபியாய்சித்தாயொன்றாய்
மகானெனுந்தத்துவத்தைக்கடந்துயர்மாயையூடு
புகாதொளிர்சோதிதன்னைப்புன்மையோர்சகமாய்க்காண்பர்
தகாததீவினைகள்செற்றோர்தற்பரமாகக்காண்பார். (௨௦)

அடுத்ததுகாட்டுந்தூயபளிங்குபோலான்மாமுன்னர்த்
தொடுத்ததுகாட்டுமிந்தச்சுடரினைமறையாற்கேட்டு
மெடுத்தநல்லுத்திதன்னாலளவையாலெண்ணிநெஞ்சிற்
படுத்தியவுருவந்தானாய்ப்பாவிக்கிற்பரமதாவான். (௨௧)

தன்னுள்ளேசகத்துமந்தச்சகத்துள்ளேதானுமாகப்
பின்னமதின்றியென்றுகாண்குவன்பிரமன்றன்னின்
மன்னியதானலாமைமற்றொன்றுங்காண்கலானென்
றன்னகாலத்தின்முத்தனாகுவன்யோகியன்றே. (௨௨)

உளத்துறைகாமமாதியொழிவதென்றுலப்பில்பூதந்
துளக்கறவொன்றில்வைகுமெனவொன்றுதொகுத்துநோக்கும்
விளக்குறுமான்மாநித்தம்வெறுஞ்சகமனித்தமென்னத்
தெளிக்குமென்றன்றேமுத்தனாகுவன்சிறந்தயோகி. (௨௩)

கங்கையைமுதலவாயபற்பலநதியுங்கலலென்
பொங்குதெண்டிரையவாரிபுகுதிலொன்றுகுமாபோற்
றங்கியஞானபாதஞ்சார்ந்திடிலான்மாயாவுஞ்
சிங்கலில்பிரமந்தன்னிற்பிரிதின்றியொன்றாய்ச்சேரும். (௨௪)

ஆதலாற்பிரமமொன்றேநித்தியமலகைத்தேரிற்
பேதுறத்தோன்றுநீரிற்பிரபஞ்சமருண்டுதோன்றுந்
தீதுறுமனத்தர்தீயபிரபஞ்சம்பிரமம்வேறென்
றோதுவரொக்கநோக்கும்யோகியரொன்றாய்க்காண்பர். (௨௫)

நிருமலமாகியொன்றாய்நித்தியமாகித்தூய்தாய்
மருவிடுஞானஞானமொழிந்ததுமம்மர்பூத்து
விரியுமஞ்ஞானமென்றுஞ்சடமென்றுமெய்ம்மைபூண்டோ
ரொருவிடுமாயையென்றுமோதுவருணர்ந்ததக்கோர். (௨௬)

இன்னணம்பிரமமாகுஞ்சாங்கியமிசைத்தோமீதின்
மன்னுறமனத்தைச்சேர்த்தன்மாண்புடையோகமாகும்
பன்னருஞ்ஞானம்யோககாரணம்பழிப்பில்யோகந்
துன்னுதற்கரியஞானகாரணமாகித்தோன்றும். (௨௭)

யோகியரடைந்தமுத்திச்சாங்கியருற்றுவாழ்வர்
சேகெறியோகத்தோடுசாங்கியத்தெளிவுதன்னை
யேகமாயெண்ணினோரைத்தத்துவமறிந்தோரென்னச்
சோகமோகங்கள்செற்றதொல்லைமாமுனிவர்சொல்வார் (௨௮)

அரும்பெறல்யோகநன்கிற்கைவந்தோரவற்றின்போகம்
விரும்புறின்முத்தியெய்தார்வெறுவெளியதனிற்றோன்றும்
பரம்பொருளாகுமென்னைப்பாவித்தோர்முத்திசேர்வர்
விரிந்திடுபிரமம்யானேயெனமறைவிளம்புமன்றே. (௨௯)

உலகெலாம்யானேயாகியுள்ளுமாய்ப்புறம்புமாகி
யலகறுமுயிர்களைல்கியளித்தவைதுடைத்தல்செய்யு
நிலையுறும்விச்சைக்கென்றுங்கரியதாய்நிற்றன்ஞானக்
கலையுணர்முனிவர்காண்பரேனையோர்காண்டல்செய்யார். (௩0)

பற்பலகந்தமாகியிரசமாயுருவாய்ப்பாய
வற்புதப்பரிசமாகியனைத்துளவொலியுமாகிச்
சிற்பரமாகியொன்றாய்ச்சிறந்தநித்தியமாய்வேதம்
பொற்பொடுபலவாய்க்கூறுமுருவமாய்ப்புருடனாகி (௩௧)

எங்கணுநிறைந்துநின்றவென்னையேடணைகணீத்துப்
பொங்கியகாமமாதியுடற்பகையாறும்போக்கித்
தங்குமுக்குற்றநீக்கிமுக்குணந்தடிந்துநின்ற
சிங்கலில்கேள்விமிக்கமுனிவரர்தெளிந்துகாண்பர். (௩௨)

ாயையைக்கடிந்தவான்மாமாயையாஞ்சகத்தைநாளு
ோய்வறநடத்தேனென்னையின்றிமற்றதுவுமொல்லா
ாயனவயென்கொலென்னிற்காந்தமுன்னுடுமூசி
யயுறவென்முனிந்தவிருஞ்சகடக்குமன்றே. (௩௩)

ன்னைத்தான்றெளியநோக்கித்தன்னிடைத்தணப்பிலாத
ெவன்னுருவத்னிற்சேர்ந்தோனிருவினைச்சிமிழ்ப்பினெய்தி
ன்னியதிகிரிபோலும்பவத்தினின்மயங்காளுகி
புன்னருமுத்திவீட்டினுவந்தினிதிருப்பனன்றே. (௩௪)

பொருவில்சாங்கியயோகத்திற்பொருந்தியஞானந்தன்னை
யரில்கெடவிரிந்தகேள்வியுடையமாணுக்கர்க்கன்பின்
விரிதருமைந்தர்க்குண்மைமேவும்யோகியர்க்குநன்கிற்
பரிவுடனுரைக்கவேண்டியவர்கட்குப்பகரொணுதால். (௩௫)

சாங்கியயோகமுரைத்தவத்தியாயமுற்றிற்று.
ஆகத் திருவிருத்தம்—௫௩.

---

## மூன்றுவது
## சம்பிரதாயவத்தியாயம்.

அவ்வியத்தந்தனிற்காலம்பிரதானம்புருடனிவையமையத்
தோன்றுஞ், செவ்வியெறுமிவைகடமிற்சிறந்தசகந்தோன்றியி
டுமதனலந்த, வெவ்வமறுபிரமத்தினுருவாகுஞ்சகமிதனைச்சக
மென்றெண்ண, ஞெவ்வறுமென்சிப்பியினைவெள்ளியெனமரு
ண்டெண்ணுநோன்மைத்தாமால். (௧)

இந்தியங்களன்றிநின்றுமிந்தியத்தையறிவித்தேயியக்கல்
செய்யு, மந்திலுறுமாதாரந்தனக்கின்றிச்சகத்தினுக்காதாரமா
கு, முந்தியொன்றிற்றேன்றியதன்றெவற்றினையுமுறைமுறை
யேதோற்றுவிக்கும், பந்தமுறுதொடர்ச்சியின்றிப்பற்றுமலெ
வ்விடனும்பற்றிநிற்கும். (௨)

பின்னமின்றிப்பின்னமாய்நித்தியானந்தமாய்ப்பிரமமாகி,
மன்னியிடுங்காட்சிமுத லளவைகளினறியாத மாண்பிற்ருகித்,
துன்னியிடும்விகற்பமில்லாத்தற்பரத்தைக்கேள்விகளாற்றொட
கப்பட்ட, நன்னிலையஞ்செவியுடையதக்கோர்மற்றறிவரெனந
விலும்வேதம். (௩)

உள்ளுமாய்ப்புறம்புமா யுலகனைத்துநிறைந்திருக்கு முண்
மையானுந், தள்ளரியபரம்பொருள்யான்சகமனைத்தும்படைத்
ததனைத்தரித்துநிற்கும், வள்ளலும்யானுபநிடதக்கோயிற்றுறு
ம்வீற்றிருந்தம்மறைக்குமெட்டாத், தெள்ளரியஞானத்தின்றெ
ளிவும்யானெனவெதிகடெரிப்பரன்றே. (௪)

புருடனுடனமர்தானமிதுனமாமீங்கிவற்றைப் பொருந்தக் கூட்டு, மரிதின்வருங்காலமுமற்றவைபோலவிளம்பரியவநாதி யேனுந், தெரிவருமவ்வியத்தத்துக்கன்னியமாமவ்வியத்தஞ்சி றந்தவென்ற, னுருவமாமாதலாலிவைமூன்றுமாங்கதனேடொ ன்றுவன்றே. (௫)

புருடனெனதருளினெடும்பிரகிருதிதனைப்பார்க்கப் பொற் பினேடு, மருவுமகான்முதலாகவிசேடாந்தமாமெவையும்வந்து தோன்றும், பிரகிருதியொடுங்கூடிப்புருடனதன்குணமனைத்து ம்பெட்பினுய்ந்திட, டொருவரிதாய்ப்பொசிக்குமெனவுபுநிடத ப்பொருளனைத்துமுரைக்குமன்றே. (௬)

சொல்லுமகான்றத்துவத்தைப்பிரகிருதிவிகாரமெனச்சொ ல்லுமாபோற், புல்லும்விக்கினாதாவைவிக்கினானசத்தியென ப்புகல்வர்மேலோர்,மல்லன்மகான்றத்துவத்தினங்காரந்தோன் றுமகான்மறைக்குமான்மாத், தொல்லையவாங்காரத்திற்றுவக்கு ண்டவான்மாவுஞ்சொல்லினென்றே. (எ)

ஆங்கதுவேசீவனுமிம்மனங்கரணமாகவழி பவங்கடோறு, நீங்கரியசுகதுக்கம்பொசிக்குமந்தக்கரணத்தி னிகழ்ச்சிதன்மே ற், றுங்குதலாலுயர்சன்மந்தனிலுழலும்பிரகிருதியோடுசார்ந் து, வாங்கரியகாலத்தாற்றேகியாமெனத்தெளிந்தோர்வகுப்பர் மாதோ. (அ)

காலமேயுலகனைத்தும்படைத்தளித்துத்துடைப்பதுவுங்கரு துகின்ற, காலமேநரகசொர்க்கத்திருத்துவதுங்கடவுளராந்தே வரோனுங், காலமேதன்செயலினடத்துவதுமென்றக்காற்கணிக் கொணுத, காலம்வேறொருவர்செயன்மருவாமற்றன்செயலோ காட்டுமன்றே. (௯)

இந்தியங்கள்யாவையினுஞ்சிறந்ததுநன்மனமதனிற்சிறந்த தென்னி,லந்தமறுமாங்காரமாங்கதனிலுயர்ந்ததுமானதனினே ங்கு, நந்தலறுமவ்வியத்தமதிற்சிறந்ததுசீவனதனினும், ப ந்தமறச்சிறந்ததுயர்பிராணனதிற்சிறந்ததுநீள்பரமாகாயம்.(௧௦)

உரைத்தபரமாகாயந்தனைக்கடந்தோங்கொளியினுக்குமொ ளியாயோதும், பரத்தினுக்கும்பரமாகும்பராபரம்யானெனைக்க டந்தோரில்லையானே, வரைத்திடுமிச்சகமதனுண்மருவாமற்கா லத்தால்வருவிப்பேனென், னிரைத்தபொலங்கழல்சேர்ந்தோ ரல்லாதார்முத்தியெனுநெறியிற்சேரார். (௧௧)

சம்பிரதாயவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௬௪.

நான்காவது

## பத்திமையுரைத்தவத்தியாயம்.

மகமுதலுயர்கன்மமருவிமையறுதானந்
தகைபெறுமதியோர்பாலருளொடுதனிநல்கிப்
புகைபடுதழலெய்தித்தவநனிபுரிவோரும்
பகருமென்னடியெண்ணுறொனிலுயர்பதமெய்தார். (க)

உலகெவனுழைபெய்துமுலகிலுளெவனெய்து
மலகறுமுயிர்தோறுமுயிரொனவமர்வுற்றே
நிலைபெறுகரியாகிநின்றவனெவனன்னோன்
மலைவறும்யானுமென்றுணர்பவர்மதிவல்லோர். (உ)

இந்திரன்முதல்வானோரிருடிகண்மனுவாதி
யந்தமிலுயிர்யாவுமின்னமுமருமாயைப்
பந்தமதுறவென்னைப்பரிவுடனறியாவா
னந்தலின்மறையொன்றேயென்னிலைதனிறுடும். (ங)

அருமகநுகர்வோனுமகமுமம்மகம்யாவும்
புரிதருதொழிலோரும்யானுயர்புவிநீர்கா
லெரியுயர்நெடுவானமிவையிவைதொறுமேவும்
பரவருமுயர்ஞானம்பசுபதியெனும்வேதம். (ச)

எவரொவர்தமைநாளுமிறையவரிவரொன்னக்
குவிகையினுடனுளுங்கும்பிடும்வழிபாடா
மவையெனதடிதன்னிலடைதருமெனிலென்போற்
பவமறவருடெய்வமிலையெனமறைபாடும். (ரு)

அலைகடனடுவெய்தாவறிதுயிலமர்வோனு
மலர்தலையுலகெல்லாம்வகைபடவருள்வோனுங்
கலைபயின்முனிவோருங்கடவுளரொவர்தாமு
நிலைபெறவெனைநாளுமடிதொழுநெறியோரே. (சு)

ஆறறிமறையோருமலர்கதிர்வடிவேலான்
மாறெறிதிறல்வண்கைமன்னருநாளுளும்
வீறுயர்பொருள்செய்யும்வணிகரும்விதியாகக்
கூறுதனிலைநின்றேற்றெழினுயர்கதிகூடும். (எ)

மன்னியமகமாதித்தொழிலிவைமருவாத
பின்னவர்முதலாகுமிழிதொழிலினர்பெட்பி
னென்னடிதொழுதென்றுந்தம்நிலையிடைநிற்பின்
மென்மெலமறையோதும்வீடினிதடைவாரால். (அ)

மூசிளவரிவண்டார்முகையவிழ்கமலத்தண்
பாசடைமிசைதெண்ணீர்பற்றறுமதுபோல
மாசறவெனைநாளும்வழிபடவவர்செய்யு
மாசுறவுயர்பாவமவர்தமையடையாவால். (கூ)

என்னிணையடிதக்தம்மிதயமென்மலர்வைப்போர்
பொன்னடியினைநாளும்பூசனைபுரிகிற்போர்
பன்னகவணைமேவும்பரமன்மென்மலரோன்மற்
றன்னவர்தொழநாளுமமருலகடைகிற்பார். (௧௦)

மெல்லிலையுயர்வில்வம்வீழ்சருகலர்தொட்டுப்
புல்லொடுதளிரோனுங்கைந்நிறைபுனலேனு
மல்கியமகிழ்வாலென்மலரடிமிசைபெய்தோ
ரல்லலதடையாஎன்னடியிணையடைவாரால். (௧௧)

தாமரையுறைவோனைத்தந்தருமறையாவும்
யாமுனமருள்செய்தேமிகலொடுமகிழ்வில்லா
மாமுனிவரஎன்னைக்குருவெனமகிழ்செய்வார்
காமுறுமறமென்றன்கற்பனைதனினிற்கும். (௧௨)

இராசதகுணமாகுமென்னொருகலைபைந்தேன்
விராயமென்மலரோனாய்மேவருமுலகினுந்
தராதலமகிழ்வெய்துஞ்சத்துவகுணசத்தி
பராவருமரியாகிப்பல்லுயிர்தனிகாக்கும். (௧௩)

தாமசகுணமேவித்தகைபெறுமுயர்சத்திக்
காமனையெரிசெய்யுங்கண்ணுதலுருவாகித்
தேமலரயனாதிதிகழ்தருவீருக
வேமுறுமுயர்யாவும்மீறுசெய்திடுமன்றே. (௧௪)

பத்தியினுயர்தன்மைப்பான்மையினருள்யோகச்
சித்தியினுயர்ஞானத்தெளிவினினென்னையன்பின்
வித்தகர்பணிகிற்பாரிவர்களின்விழைஞான
தத்துவநிலைநின்றேபணிவரதலைநின்றார். (௧௫)

அலர்கதிர்முனமெல்லென்றாமரையெனுமந்தண்
மலரவிழ்வதுபோலவெனமுனமகிழ்வோடு
முலகுறுகாலத்தினுற்பவமுறுமென்னா
நிலைபெறவுணர்கிற்போரருமறைநெறிகண்டோர். (௧௬)

யோகமுமவைபேணும்யோகியுமெனவேதஞ்
சேகறவுரைசெய்யுந்தெளிபொருளெனுமீசன்
மாகமொள்ளெரிதண்ணீர்மண்வளிமுதல்யாவு
மேகமதாய்நிற்கும்யானெனவறிவீரால். (௧௭)

மன்னியவுயிர்யாவுமருவு * மகத்துவமுந்
துன்னருமிறைமேவுந்துகளில்பரத்துவமும்
முன்னரிதாய்நிற்கும்பிரமமுமுலைவில்லா
வென்னுருவெனநன்கினெண்ணினரறிவுற்றோர். (௧௮)

* மகதத்துவம் - மகத்துவமென இசைநோக்கித் குறுகிநின்றது.

வருபரமானந்தக்களியுறமகிழ்வோடும்
பொருவருநடம்யானேபுரிகுவனெனயாரோ
யுருகிமென்மலர்தூய்மெய்யுணர்வொடீதனனெஞ்சிற்
கருதினரவர்கண்டீர்கடவுளரெனவாழ்வார். (௧௯)

தகவொடுமறைகூறுமிப்பொருடனைநன்கின்
மகவினைபுரிகுற்றேமாசெறிமனனோடு
மிகலொடுநட்பின்றிப்புகலிருவினையற்றே
துகளறுமுனிவோர்பாற்சொல்லுதலியல்பாமால். (௨0)

பத்திமையுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—அ௪.

ஐந்தாவது

## விச்சுவரூபவத்தியாயம்.



ஐயகமலத்தெழில்செயானனமனந்தம்
பையரவகங்கணமணிந்துபடைபற்றுங்
கைகளுமனந்தமுயர்கால்களுமனந்த
மெய்களுமனந்தமுயர்மென்முடியனந்தம். (௧)

ஆகியுயரண்டமவைமுற்றுபுனல்சூழப்
போகுயர்சுடர்க்கனலிமற்றதுபுதைத்தே
யேகியுழல்காலிவைகள்யாவையுமறைக்கு
மாகவெளியெங்குமெய்வயங்கொளிபுதைப்ப. (௨)

கருந்துளவணிந்தமுகில்கஞ்சமலர்மேலான்
புரந்தரன்வசுக்களுயர்புங்கவர்கள்யாரும்
விரிந்தகமலத்தினிடைவீழுமிசைவண்டிற்
றிருந்துமறைபாடியுயர்சேவடியின்வீழ. (௩)

நிற்பனநடப்பனகள்யாவையுநிறைந்த
பற்பலதொகைப்படவிரிந்சுபகிரண்ட
மெற்கதிரிடைப்படுமணுத்தொகையெனன்ன
வற்புதவுயிர்ப்பினலம்வந்திடைவழங்க. (௪)

வெங்கதிர்சுரந்தொழுகுவெய்யவன்வெதுப்பு
மங்கியமிர்தூறியுமிழாய்கதிர்விரிக்குந்
திங்களெனுமுக்கணுமுகத்திடைசிறந்தே
தங்கியவலோகவிருளுந்தனிதுரப்ப. (௫)

கொங்குலவுகொன்றைபுனைகோலமுடிதோறுங்
கங்கைநதிவீழருவிகல்லெனவொலிப்பத்
திங்களுறுகண்ணியமிர்தத்துளிகள்சிந்த
மங்குலெனுமுத்தரிகமார்பிடைவயங்க. (௬)

ஆற்றலுறுநீள்புவனகோடியரிபெய்த
மாற்றரியநூபுரம்வயங்கொளியெயிற்றுக்
கூற்றுயிர்குடித்தகழறேறுமொலிசெய்யச்
சிற்றவரிவேங்கையதண்மெல்லுடைசிறப்ப. (எ)

கையிலனமனறுவழிகாலுமனல்சூலம்
பெய்யுமனனீறுபொதிபேரழல்கடுக்கு
மெய்யிலனவெலங்கணும்விரிந்துசுடர்மண்டப்
பையரவமுப்புரியநூலொளிபரக்க. (அ)

ஒளியிலொளியாமறையுணர்ந்தவரருந்துந்
தெளியமுதாய்ப்பிறவிதீர்த்திடுமருந்தாய்
வெளியில்வெளியாகியிடுவிண்ணவன்மெய்ஞ்ஞானக்
களியுடனடம்புரிதல்கண்டுளமகிழ்ந்தார். (௯)

வேறு.

அண்ணல்சேவடியிலேத்துமருந்தவமுனிவரோடுந்
தண்ணறுந்துளவோன்வீழ்ந்துதயாவொடுந்தொழுதுபோற்றிக்
கண்மணிகுளிர்ப்பவையன்கதிருமிழ்மேனிநோக்கி
யெண்ணருமறைகள்பாடியெந்தையைப்பழிச்சலுற்றான். (௧௦)

என்னுடைத்தோழனுகுநானெனவெண்ணிநின்னைச்
சொன்னவையனைத்துமின்னேபொறுத்தருள்சுரத்தியீன்ற
வன்னையும்பிதாவுங்கேடில்சுற்றமுமறிவுநெஞ்சு
நின்னையேயன்றிவேறுகாண்கிலேனிமலமூர்த்தி. (௧௧)

விண்ணவரியக்கர்சித்தர்முனிவர்மென்கமலப்போதிற்
பண்ணவர்முதலாயுள்ளோரனைவரும்பரவைநாப்ப
ணண்ணியகுமிழிபோலவெழுந்துடனுசமெய்திக்
கண்ணகனுலகத்தோடுந்தோன்றுதனின்பாற்கண்டேன். (௧௨)

கற்பமோர்கணமதாகிக்கணமொருகற்பமாகு
மற்புதக்காலமியாவுமையநின்பாலிற்கண்டேன்
சிற்பரமாகியொன்றாய்த்தேவர்க்குந்தேவனுகு
மற்படுதோளாயுன்றன்மாயையையறிகிலேனால். (௧௩)

பங்கயன்மால்முக்கண்ணனென்னுமுப்பகுதியாகி
யெங்களிலொருவனுகியிருந்தனையொருகாலத்தி
னெங்களையொருகாலத்தினீன்றளித்தனையோர்காலு
மெங்களிலறியொணுதுன்மாயையினியற்கையெந்தாய். (௧௪)

அண்ணனின்பரமானந்தநடத்தினையன்பினுேக்குங்
கண்ணென்னுங்குடங்கைதன்னுற்களியொடுமள்ளியள்ளி
யுண்ணவுந்தெவிட்டாதாகியுடலெலாந்தித்திக்கின்ற
தெண்ணருந்தேனேயென்னுவிணையடிமலரின்வீழ்ந்தான். (௧௫)

வேறு.

வீழுமெய்ம்மயிர்சிலிர்க்குமிகமீட்டுந்
தாழுமிறைநின்றுபுரிதாண்டவம்வியக்குங்
காழ்படுமனத்தினொடுகண்கலுழிநின்றே
யூழ்முறைவணங்குமுயர்யோகினிலுறங்கும். (௧௬)

இன்னபுரிகாரணனையெந்தைமுகநோக்கி
யுன்னுருவமென்னுருவமென்னுருவநீயே
பின்னமிலையென்றுதழுவப்பெரியமாயன்
றன்னிகரிலீசனுருவிற்றனிசரந்தான். (௧௭)

கார்நிறமுகுந்தனொடுகங்கைபுனையெந்தை
யோருருவமாகியவனோடுதலுவந்தே
பேரறிவுசேர்முனிவர்பிஞ்ஞகன்மலர்த்தாள்
வார்சடைமுடித்தலையின்வைத்தனர்பணிந்தார். (௧௮)

வேறு.

வேதாகமங்களுரைசெய்யநின்றதெளிவாகிமேவுமுலகுக்
காதாரமாகியணுவாகியாருமறியாதஞானவுருவாய்ப்
பேதாதிபேதவுருவாகியேகவுருவாய்நிறைந்தபெரியோய்
பாதாரவிந்தமொருநாளுநெஞ்சமறவாதபான்மையருள்வாய்.()

வண்டாகிவேதமறைபாடவென்றுமலர்கின்றபாதமலரோய்
தொண்டாகிநின்னையடைவோர்களன்றியெவரோதொல்வீடுபுகு
தண்டாதுநின்றசகமாயதற்குண்மருவாதியக்குநினையாங் [வார்
கண்டாதரிக்கவெளிநின்றதென்கொல்களைகண்ணதாகுமுதலே.

சேணாடராகிமதியாகிவெய்யகதிர்சிந்துதூயரவியா
யாணாடுகோபமதயானைகொன்றவரியாகியாதியயனா
யூணாகியுண்ணுமவனாகியெங்குமுளனாகிநின்றவொருநீ
காணாதுநின்றவருமாயமென்கொல்களைகண்ணதாயபெரியோய்.

அணுவாமெவைக்குமணுவாயிருத்தியகிலங்கண்மூடியொளிருந்
தணியாதவண்டவுருவாயிருத்திதருபஞ்சபூதமதிவான்
மணியாமருக்கனுயர்சோமயாசிவடிவாயிருத்திமறையுங்
கணியாதிருத்திநினையார்கணிப்பர்களைகண்ணதாயபெரியோய்.

உருவாகிமற்றையருவாகிநீடுமுருவோடியைந்தவருவாய்[றையும்
மருவாயதற்குண்மணமாயொளிக்கு ளொளியாய்மறைக்குண்ம
பொருளாய்வழுத்துமடியாருளத்துவுறைகின்றபோதவுருவாய்
கரியாய்கருத்தினினையார்குணிப்பர்களைகண்ணதாயபெரியோய்

ஓங்காரமாகிவிபுவாகிமேவுமுயிர்தோறுநின்றகரியா
யாங்காரமின்றியடிபேணுகின்றவறவோர்தநெஞ்சமுறைவோய்
நீங்காமலெங்கும்வெளியூடமர்ந்துமறைகின்றகள்வநினையாம்
பாங்காகவுன்றனடியாரினின்றுபணிகின்றதென்றுபகர்வாய். ()

அயனாகிமூர்த்தையுலகங்கட்டுமரியாயளித்துமீளிரும், வெயில்கோடிகக்குமழுவாளனாகிவிரகோடழித்துமவையூ, டியலாதெவைக்குநடுவாகிநின்றவிறைவாநின்மாயைபுரியுஞ், செயலார்தெரிப்பர்வடமேருவெற்போர்சிலையாய்வளைத்ததிறலோய். ()

இதுவன்றுநின்றதிதுவன்றுநின்றதெனவோதலன்றிமறையு
மிதுவென்றுணாக்கமுடியாதுநின்றவெரிதும்முவெய்யமழுவோய்
பதியாகுநின்னையடைகின்றதூயபசுமாயைதீரவருள்வோய்[வார்
முதலீறதின்றியுறைவோய்நின்மாயையெவரோகொன்முற்றுமறி

மின்கோடிகோடிதவழ்கின்றதென்னவெளிமூடிநின்றவுருவ, மன்பேரடுகொணமுடியாதுகண்களயர்கின்றதுள்ளமறவோய், முன்போலுருக்கொடெமையாடியென்று முனிவோர்கணின்றுபணியப், பொன்போலலர்ந்தமலர்மாரிசிந்தியிமையோர்வணங்குபொழுதின். (உஎ)

வேறு.

மலர்தலையுலகம்யாவும்பொதிந்தமாலுருவநீங்கி
யிலகொளிக்கணிச்சிப்புத்தேண்மடங்கலாசனத்தினெய்தக்
கலையுணர்முனிவரீசன்கழலிணைவழுத்திநின்று
ரலர்கதிர்நேமியோனுந்தன்னுருவமைந்துதாழ்ந்தான். (உஅ)

தாழ்ந்துமென்மலர்கவித்தழைத்தபேரன்பினோடுஞ்
சூழ்ந்தனர்மீட்டுமீட்டுந்துணையடிவணங்கியேத்தி
வாழ்ந்தனமென்னநின்றமுகுந்தனைமறையோர்தம்மை
யாழ்ந்தபேரன்பினோக்கியையனீதறையலுற்றான். (உகூ)

விச்சுவரூபவத்தியாய முற்றிற்று.
ஆ திருவிருத்தம்—ககரு.

---

ஆறாவது

## சிவசத்தியின்செயலுரைத்தவத்தியாயம்.

உலகெலாமளித்துங்காத்துமொடுக்கியுமீட்டிமீட்டு
மலகறுமுறையினிவ்வாறியற்றுவான்யானேயம்பொன்
மலரயன்றன்னைமுன்னர்வகுத்தவன்றனக்குஞானக்
கலைமுழுதுணர்த்தியாக்குந்தொழிலையுங்கற்பித்தேனால். (க)

கடல்வயிறுளைந்துபெற்றகவுத்துவங்கதிர்கணீட்டி
விடுசுடர்ப்பருதியோட்டிவெயில்கிடந்திமைக்குமார்பி
னுடல்சினத்திகிரியோய்மற்றுனையளித்துலகம்யாவு
மிடர்கெடவுவந்துகாக்குந்தலைமையுமினிதினீந்தோம். (உ)

கறைக்குறும்பெறியுந்தெண்ணீர்க்கடல்விடமுண்டுவிண்ணோர்
புறக்கும்வெண்ணீற்றுமேனிப்புரிசடைப்பவளக்குன்று
முருத்திரனாகியெல்லாவுயிர்களுநம்பிறந்துஞ்செத்தும்
வருத்தமுற்றிடாமனன்கின்மாய்த்திளைப்பாற்றுவேமால். (௩)

செந்தழற்கடவுடேவர்தென்புலத்தவர்கட்கூட்டு
நந்தலிலவியுமற்றைப்பலிகளும்பரித்தென்னு
மந்தமிலுணவுகன்கினடுதலுண்டவையறுத்தல்
பந்தமிலெமதுசத்திபண்ணியசெயலதாமால். (௪)

ஆழ்கடற்கிறைவனென்றன்சத்தியாலலர்ந்துதோன்றும்
பாழிமாலுலகமெல்லாங்குளிர்விக்கும்பவனவேந்து
சூழ்முறைபிறழாதுள்ளும்புறமுமாயுலாவியாகம்
வாழியபரிக்குமாறுமென்செயலாகுமன்னே. (௫)

இந்திரனுலகுகாத்தன்மறலியெவ்வுயிருங்கோறல்
சந்திரனமரருய்யவமுதினையளித்தருவில்
வெந்திறலருக்கன்வெய்யகதிர்மழைவிடுத்தனு
மந்தமினிதியத்தோமௌகைவேந்தரசுசெய்தல். (௬)

நிருதியொள்ளெயிற்றபேழ்வாயரக்கரைப்பரித்தனெய்தோய்ந்
துருகெழுசூலமேந்துமுருத்திரனுலறுகுஞ்சித்
திருகுவெஞ்சினத்தபூதபதியெனச்சிறந்துநிற்றன்
முருகவேடேவர்சேனைபதியெனமுதன்மையெய்தல். (௭)

ஐங்கரன்கணங்கட்கெல்லாமுதல்வனாயமர்தல்சேடன்
தங்குமிவ்வுலகந்தாங்கறகைபெறுமரீசியாதி
புங்கவருலகம்பூத்தல்பூமகடிருவினெய்தல்
மங்கலவாணிநான்குவாக்கினையினிதுநல்கல். (௮)

கறைக்குறும்பெறியாதொல்லென்கட்விளைவட்டையுண்டல்
விரைத்துழாய்முகுந்தனுதிவிண்ணவரியக்கர்சித்த
ருரைத்திடுகருடர்பூதர்மனுக்கள்சாரணர்களோதுங்.
கருத்துறுகாட்டையாதிபரார்த்தமீறுயகாலம். (௯)

நால்வகைத்தோற்றத்துள்ளசராசரம்புவன்நான்கிற்
சால்வுறுபஞ்சபூதமனமுதற்கரணந்தாவி
னேல்பிரகிருதியெய்துஞ்சகத்தின்காரணமாமாயை
பால்படுதொழிலினிற்றல்பகுதியைப்புருடன்பார்த்தல். (௧௦)

ஈங்கிவையனைத்துமென்றன்சத்திகளியற்றுகின்ற
தீங்கில்காரியங்களாகுஞ்சகத்தினைச்சேர்ந்துநின்று
நீங்கியுநீங்காதுற்றவென்னிலைநிகழ்த்தல்செய்தேம்
பாங்குறவிதனையோர்ந்தோர்பவக்கடல்படிந்துமாயார். (௧௧)

சிவசத்தியின்செயலுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௧௨௪.

ஏழாவது
## விபூதியுரைத்தவத்தியாயம்.

மனவாக்குக்காயத்துக்கெட்டாதுமாயையெனுங்
கனேயிருட்பாழ்கடந்துநின்றதுரியம்யான்கடவுளரு
ளினேவரியபிரமமும்யானித்தியம்யானிட்களம்யான்
றனேயுணர்ந்தோருளமதனிலகலாததத்துவம்யான். (க)

பிரமர்களினான்முகன்யான்பெட்புறுமாயாவிகளிற்
பொருவரியநாரணன்யான்போதமுறும்யோகிகளில்
மருவரியசம்புவும்யான்மடந்தையரிலம்பிகையா
னெரிகதிராதித்தியரிலேத்தரியவிட்டுணுயான். (உ)

உருத்திரரிற்சங்கரன்யானுடுக்கடமிலுடுபதியான்
பரித்தபுகழ்வசுக்கடமிற்பாவகன்யான்பறவைகளின்
விரித்தசிறைக்கலுழன்யான்விண்ணவரிலிந்திரன்யான்
றரித்தவரிவில்லிகளிற்றுழ்தடக்கைபிராமனுநான். (ஙு)

ஆனேகளிற்றிறலயிராவணம்யான்வாளசுரர்தமின்
ஞானமுழுதுணர்ந்தருணுநற்பிரகலாதனன்யான்
மோனமுறுமிருடிகளில்வசிட்டன்யான்முனிவரரி
லீனமறுவியாதன்யான்கணங்கடமில்விநாயகன்யான். (௪)

பொருவரியவீரர்தமிற்புகல்வீரபத்திரன்யா
னொருவரியவிரதத்திற்சத்தியம்யானெப்பரிதாம்
வெருவருநற்றொழிலோரின்விச்சுவகன்மாவும்யான்
றெரிவருநூற்சித்தர்தமிற்சிறப்புடையகபிலனும்யான். (ரு)

வரைகளிற்பொன்மேருவும்யான்பொருபடையில்வச்சிரம்யான்
றெரிவரியசாமத்திற்றிகழ்சேட்டசாமம்யான்
சுருதியறிமனுக்கடமிற்சுவாயம்புமனுவும்யான்
றெரிவரியதேயத்திற்றிகழ்பிரமவர்த்தம்யான். (சா)

நதிகட்மிற்கங்கையானகரிகளிற்காசியான்
றுதியுறுநல்விஞ்ஞைகளிற்சொல்பிரமவிஞ்ஞைநா
னதிகமுறுஞானத்திற்சிவஞானமாவேனுன்
விதியுறுமைம்பூதத்தின்விளங்கியவாகாயம்யான். (எ)

அக்கரங்கடமிற்சிறந்தவகரம்யான்றருக்கடமிற்
றொக்குயரைந்தருவும்யான்சுரபிகளிற்றேனுவும்யான்
றக்கவுயர்கதிகடமின்முத்தியும்யான்சாற்றரிய
மக்கண்மிற்பகையொறுக்கும்வாட்டக்கைமன்னவன்யான். (அ)

பரம்பொருளாங்கடவுளரிற்பகர்பரமேச்சுரனும்யான்
மரங்கடமிலரசும்யான்வகுப்பவற்றிற்காலமும்யா
னரந்தைகெடுமியக்கர்தமிற்குபேரன்யானலைபுனலி
னிரங்குகடல்யான்றேவவிருடிகளினாரதன்யான். (௯)

நச்செயிற்றசர்ப்பத்தில்வாசுகிநாகத்தி
னச்சணங்காரனந்தன்யானரும்பெறற்றென்புலத்தோரி
னிச்சையுறுமரியமான்யானீர்வாழிமையவரிற்
செச்சைபுனைவருணன்யான்றிகழ்மீனின்மகரம்யான். (௧௦)

திரிதருகந்தருவர்தமிற்சித்திரத்தேரவனும்யான்
பொருவரியவிந்தியத்தின்மனமும்யான்பூதத்தின்
மருவுறுநற்சேதனம்யான்மாமறையிற்சாமம்யா
னரிதுணரும்யாகத்திற்சயயாகமாவேனான். (௧௧)

எழிலுடையோரவர்களினும்வேனில்வேள்யான்புனிதந்
தழைபவரிற்கலையூருந்தலைவன்யான்கொல்வோரின்
விழிவுறுநற்கூற்றும்யான்வெல்வார்பால்வெற்றியான்
பழுதறுநற்சந்தச்சிற்பழிப்பறுகாயத்திரியான். (௧௨)

இருதுவனைவளவ்வணறறுஙகளனமாகழுததுஙகள
பொருவரியவஞ்சகத்திற்பொருசூதுபுரோகிதரின்
மருவரியவியாழமுயர்வாகவியல்வெள்ளியென
வுரைசெயிவையனைத்தும்யானுரையாதபொருளும்யான். (௧௩)

என்றென்னையறிமின்களியம்பிடுமான்மாவெல்லாம்
பொன்றவரும்பசுவாகும்யான்பதியாம்புகல்கின்ற
மன்றவுயர்பசுக்கடமைமாயையினாற்பிணிப்பானுந்
துன்றுபிணிவிடுவானும்யானென்னத்துணிவீரால். (௧௪)

மனம்புத்தியாங்காரம்வருபஞ்சபூதமிக
நினைந்திடுஞானேந்தியம்பின்னிகழ்த்துறுகன்மேந்தியஞ்சீர்
புனைந்திடுஞானேந்தியத்தின்விடயங்கள்புகலரிதா
முனம்புகலும்பிரகிருதிசம்பந்தமெனமொழிவார். (௧௫)

சாற்றரியவிருபத்துநான்காயதத்துவமும்
போற்றுபிரதானத்திற்பொருந்தியிடுமவ்வியத்த
மாற்றலுறவமைந்தோங்கிவருசகத்தின்காரணமென்
றாற்றமுறுமறையாவுமொழியாமலுரைத்திடுமால். (௧௬)

முக்குணத்தின்சமத்துவத்தைமொழிந்தபிரதானமென்றுந்
தக்கபிரகிருதியென்றுஞ்சாற்றுவர்கண்மதிவல்லோர்
மிக்கபுகழ்ச்சாத்துவிதகுணம்ஞானமிகுதமத்தின்
[illegible]ணங்கனைமேலோரஞ்ஞானமெனச்சொல்வார். (௧௭)

சாத்துவிதகுணத்தோடுந்தாமதமாங்குணந்தழுவி
னைத்தரியரசோகுணமாமீங்கிவையும்யாவருக்குங்
காத்தலருநல்வினையுந்தீவினையுங்களன்றுயிரை
யார்த்திடுதாம்பாகுமெனவறிவுடையோரிசைத்திடுவார். (௧௮)

பொருந்தவிச்சையறவுமிதம்புகலாசைதுவேசமிக
வருந்தபினிவேசமெனும்வையைந்தும்வளைத்துயிரைத்
திருந்துறக்கட்டிடுபாசஞ்செப்புமிவையனைத்தினுக்கும்
விரிந்திடுமோமாயைதனைக்காரணமாய்விளம்புவார். (௧௯)

வேறு.

மூலமாம்பிரகிருதிபுருடன்மகானாதிகணமோயவிகாரம்யாவும், காலமுடனிகழ்கட்டுக்கட்டுவிப்போனுயர்பாசம் பசுக்கள்யாவுஞ், சால்புடையோர்யானென்பர்தற்பரமாம்பிரமம்யானென்றுதேர்ந்தோர், சீலமுடன்யாவருக்குஞ்செலவரிதாமுயர்வீட்டிற்சேர்வர்மாதோ. (௨௦)

விபூதியுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௧௪௪.

---

எட்டாவது

## பிரபஞ்சத்தோற்றமுரைத்த வத்தியாயம்.

ஒருமுதலாமெனக்கெங்குமுயர்மூலமாயைதனையோனியென்பர், மருவியதிற்கருவைப்பப் பிரதானமுதலெவையும் வந்துதோன்றும், விரிகதிராகாலெரிபசும்பொனண்டமவற்றினிற்றோன்றுமதனுள்வெய்தின், முருகுவிரிச்செழுந்தோட்டுமுண்டகத்துவீற்றிருக்குமுதல்வன்றோன்றும். (௧)

உரைத்தமலரயனிடத்திற்சராசரங்களுதிக்குமிவையனைத்துமுன்னம், வருத்தமறவீன்றவெனைத்தந்தையெனவறியாமன்மறைக்குமாயை, நிரைத்திடும்யோனிகடோறுமுதித்திடுவோற்கியான்றந்தைநிலவுமாயை,யருத்தியுடனீன்றெடுத்தவன்னையெனவறிந்தோரேயறிவுளோரே. (௨)

என்னையுயர்தந்தையெனவறிந்தோர்களிரும்பிறவிக்கடலின்வீழ்க்கு, முன்னைவினைதனைநீக்குமுதுக்குறைந்தோரென்னையன்றிமற்றோர் தெய்வந்,தன்னையளித்தவனென்னவுரைத்திடுவோர்தன்றந்தையகத்துண்மேவ, வன்னியனைத்தந்தையெனும்விலைமாதருள்புதல்வரனையர்மாதோ. (௩)

அழிவதுலகெஞ்ஞான்றுமழியாதபரம்பொருள்யானென்னநெஞ்சின், விழைவினுடனோக்குனர்யாரவர்கடமதுயிர்குறையாமேலோரன்னோர், பழையதுவாயொன்றுசிப்பரம்பொருளா

ந்தற்பரத்திற்சேர்வரொன்ன,வெழுதறியமறையனைத்துந்துயிலா மற்கிடந்தலறியிசைக்குமன்றே. (௪)

சூக்குமங்கடமைமிகவுஞ்சொல்லரியசடங்கத்தைமகேசன்ற ன்னை, நீக்கரியபிராணத்தின்விளியோகந்தனையறிந்தோர்நிமல மாகி, வாக்கினுக்குமனத்தினுக்கு மெட்டாதபரம் பொருளாய வைகுமென்றன், முக்கணங்கார்பதமலரினிழறன்னையென்றுஞ் ஞசார்ந்துவாழ்வார். (௫)

சடங்கமெலாமறிதன்மிகவருதிருதிசாற்றரியவநாதிபோ த, மடங்கலருஞ்சுதந்திருதைகுறையாமல்வபாசத்தியனந்தச த்தி,யடங்குமனத்தொடுஞ்சகலதத்துவத்தின்மயமாகியமர்ந்து நின்ற,வொடுங்கருந்தன்மாத்திரையைச்சூக்குமமென்றறிவுடை யோருரைப்பரன்றே. (௬)

அலகிறந்தவான்மாவையருமாயைபிணித்தல்வினியோகமா கு, மூலகினுக்குக்காரணமாஞ்சத்திதனைக்கடந்துசத்தியோடும் வைகு, நிலவுபுகழ்க்கடவுடனைமகேசனெனநிகழ்த்திடுவரவன் யானென்னைப், பலவெனவு மொன்றெனவும் பதியெனவும்விபு வெனவும்பகரும்வேதம். (௭)

பிரபஞ்சத்தோற்றமுரைத்தவத்தியாய முற்றிற்று.
ஆ திருவிருத்தம்—கஙுக

---

ஒன்பதாவது
## மாயாவிகாரமுரைத்தவத்தியாயம்.

என்றுமுழுமுதலாகியவிறைகூறலுமகிழ்வுற்
றுன்றுவுளமுருகாமயிர்பொடியாவுரைகுழறுப்
பொன்றொடிபணியாவிழிபுனியாமறைபுகலாப்
பைந்நாகணையுறைவோன்முதன்முனிவோரிவைபகர்வார். (௧)

அருவாய்வெறுவெளியாய்மலமணையாதுயரொருநீ
யுருவாகியசகமாயதையுரைநீயெனமொழிய
நரைமால்விடையிவருந்தனிநாதன்மறைகமழுந்
திருவாய்மலர்மலராமுகிழ்நகையோடிவைசெப்பும். (௨)

சகம்யானலனெனையின்றியவுலகின்றுதயங்கும்
புகுமாயைநிமித்தத்ததுபுகலாயுலகுளதாந்
தகுமாயையுமென்முன்னெழிதரின்மற்றதுசடமாம்
பகவொன்செயல்கொடுமாயையுமுலகந்தனிபரிக்கும். (௩)

உருவத்துறுசகம்யாவையுமுறுமாயையுமுதவித்
தருகாரணம்யானுதலினென்னைப்புகறக்கோர்
விரிவிச்சுவவுருபத்தினனென்பாருயர்வேத
[illegible]வென்பகமொன்றென்பதுமெனையே. (௪)

ஒன்றாகியும்பலவாகியுமுளதாயிலதாயு
நின்றோனையிவ்வுலகத்துடனிகழ்காரணமென்று
மன்றென்றுமுரைப்பாருலகழிவுற்றிடுகாலும்
பொன்றாதுயர்வுறுமாயையுகாதேபுரிகிற்பேன். (௫)

வேறு.

உரைப்பரியவவ்வியத்தமூடுபலசத்தி
நிரைத்தெழுமவற்றுளொருசத்திநிகரற்றே
வரைத்தபொருடன்செயன்மறைக்குமொருசத்தி
தெரிப்பருமபேதமுழுபேதமுறல்செய்யும். (௬)

பின்னுமொருசத்திபெறுமுத்தியையளிக்கு
மன்னியமதின்றியழிவின்றியலைவின்றி
முன்னொடுபின்னின்றிமுதலாகியொளியாகி
மன்னியிடுதற்பரமதென்னுருவமாதோ. (௭)

காயமனம்வாக்கிவைகடந்துதனிநிற்ப
தாயபிரமத்திடைபடத்திலமர்நூலி
னேயுமுலகங்களெனினும்மவையிலெய்தேன்
மாயையினியற்றுவன்மறைந்துமறையாதே. (௮)

அணுவிலணுவாயசலமாய்மறைகள்யாவுந்
துணிபொருளதாயொளிசெய்சோதிமயமாகுந்
தணிவரியதத்துவமறிந்தவர்கடாமே
பிணியுறுதுயர்க்கடல்கடந்தபெரியோரே. (௯)

பரம்பரமதற்றுயர்பராபரமதாகிப்
பிரமவொளியாய்வெளியுணின்றொளிபிறங்கு
மிரண்மயமதாயொளிருமென்றனைமென்மெல்லத்
திரமுடையநெஞ்சினிடைசேர்த்தியமிர்தார்வார். (௧௦)

ஏகவுருவாயுயிர்களெங்கணுநிறைந்தே
யோகையொழியாதுறையுஞானவொளியோதுஞ்
சோகமொடுமோகமெறிதொன்முனிவராகும்
யோகியருளத்தினிடையன்றியுறையாதால். (௧௧)

புயன்விழைகலாதுகரும்பலவியற்றின்
மயலறுமதற்றிடின்வயங்கறிவுசேரு
மியலுமறிவெய்திலுறுமிருவினைகள்பாறிச்
செயலொடுமெனைக்கருதுசிந்தைவருமன்றே. (௧௨)

உரையுமனமுந்தனியிறைப்பவரும்யோகம்
புரிபவருநாடரியதாம்புனிதஞான
மருளினுரைசெய்தனமுமக்கிதனையிம்பிற்
றெருளுடையர்பாலலதுசெப்பியிடலாகா. (௧௩)

மாயாவிகாரமுணர்த்தலத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௧௯௪

பத்தாவது

## தத்துவதரிசனமுரைத்தவத்தியாயம்

அலிங்கமவ்வியத்தமாகுமாய்சுடர்ப்பிழம்பாய்நின்ற
விலிங்கமேபிரமமாகுமியன்றகாரணமாயென்றுங்
கலங்கலில்பொருளாயொன்றாய்க்கணித்திடும்பிரமந்தன்னைப்
புலங்கெடவினிதினோற்றபுண்ணியப்புலவர்காண்பார். (௧)

மின்படுமேகந்துஞ்சும்வரைகளின்கானின்மேவி
யென்பெழவினிதினோற்றுத்தீர்த்தங்களெவையுமாடித்
தன்புலன்வித்துவெய்யத்தழலிடைத்தவஞ்செய்தாலு
மன்பினாலன்றியெம்மைக்காண்குதலரியதாமால். (௨)

மைத்தகுமாயையென்னுமதுநுகர்ந்தறிவிலோர்கண்
மொய்த்தரும்பிரபஞ்சத்தைவேறுவேறாகக்காண்பர்
சுத்தராய்ஞானானந்தச்செழுங்கடலதனிற்றோய்ந்து
தத்துவமறிந்தோரொன்றாய்த்தம்முளேசகத்தைக்காண்பார். ()

எண்ணூறுமெண்ணெய்போலவெங்கணுநிரம்பிநிற்கு
நண்ணரும்பிரமந்தன்னினண்ணியசீவன்முத்தர்
விண்முதலாயபூதமெவற்றினுமேவியென்போற்
பண்ணருந்திருட்டியாதிபண்ணினும்பண்ணுவாரால். (௪)

பிரமமேயன்றிவேறுபிரித்துரைத்திடவிரண்டா
மரியநற்பொருளிலாதவாற்றினாலறிவுக்கெட்டா
வொருவனுமீசன்யானேயுளனெனவையமின்றித்
தெருளுறவுணர்ந்துநாளுஞ்சிந்தையுளிருத்துவீரால். (௫)

கண்மலர்திங்களங்கிகனைகதிர்ப்பருதியின்றி
நண்ணியபொருளைத்தன்னதொளியினாறடமாட்டா
தண்ணலம்பிரமந்தன்னைச்சுடர்களாலறியவொண்ணா
தெண்ணரும்பிரமந்தன்னாற்காணலாஞ்சுடர்கள்யாவும். (௬)

நித்தியானந்தமாகிநிமலமாம்பிரமந்தன்னை
தத்துவவித்தாயுள்ளோர்பிரணவந்தன்னாலென்று
முத்தமதியானஞ்செய்யாவுளமுவந்தெனதுதாளிற்
பத்திசெய்தென்பால்பாலிற்பால்கலந்தென்னச்சேர்வார் (௭)

பாருமன்றழலுமன்றுபகலுமன்றிரவுமன்று
நீருமன்றகல்வானன்றுநிகழ்வளிமண்ணுமன்றா
யாருமன்றாகியொன்றாம்யானென்றேபரமாகாயஞ்
சேர்வரும்பிரமந்தன்னைமுனிவரர்தேர்வரன்றே. (௮)

வச்சிரப்படைகடம்மால்வலியினாற்செகுத்தலொண்ணா
தச்சுணங்கெரியாலென்றுமெரிக்கொணாதலைக்கொண்ணீரா
லிச்சையினிரக்கவொண்ணாதென்றுமோர்தகுதியாகி
[illegible] நிற்கு நிருமலமாகுஞ்சோதி. (௯)

இன்னணமறைகள்யாவுந்தெளிந்தெடுத்தியம்புகின்ற
பன்னருஞானமென்னுமமிர்தத்தைப்பரிவுகூர்ந்து
நன்னயத்தோடுஞ்சொன்னகாரணன்முதலாநீவிர்
மன்னுமென்றுண்டராகிவாழ்மின்களென்றுசொன்னான். (௧0)

என்றலும்விழிநீர்சோரவிதயநெக்குருகமேனி
துன்றியமயிர்கள்யாவுங்குச்செனநிரைத்துத்தோன்ற
மன்றலந்துளவோனாதிமுனிவரார்வணங்கியேத்திப்
பொன்றிகழ்கணிச்சியோனோடின்னவைபுகலலுற்றார். (௧௧)

தத்துவதரிசனமுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௧௭௫.

பதினொன்றாவது

## யோகமுரைத்தவத்தியாயம்.

கோங்கிளமுகிழைவென்றுகுலவரையெட்டுமுட்க
வீங்கியதடமென்கொங்கைவேற்றடங்கண்ணிபங்கர்
சாங்கியமனைத்துநின்பாற்கேட்டனந்தவத்தின்மேலோர்
நீங்கரும்யோகந்தன்னைநிகழ்த்தெனநிகழ்த்தலுற்றான். (௧)

மன்னியயோகந்தன்னால்ஞானம்வந்தெய்துமந்த
வுன்னருஞானந்தன்னால்யோகம்வந்தினிதினெய்து
மின்னவையிரண்டுங்கைவந்திறைஞ்சினோன்றனக்கியான்மற்
றன்னியனல்லனன்னோன்றன்னுடனொருவனேவேன். (௨)

சூனியமாகித்தோற்றுத்தன்மையாஞ்சொரூபமேந்த
மோனமாம்யோகந்தன்னைச்சிந்திப்பாரதனைமுற்று
மானவர்பாவயோகமென்பரொன்றோடுங்கூட்டு
மீனமில்யோகந்தன்னைமகாயோகமென்றுசொல்வார். (௩)

எமையுளத்திருத்தும்யோகந்தனக்குமற்றேனைத்தேவர்
தமையுளத்திருத்தும்யோகநிகரெனச்சாற்றலாமே
யமைவுறவென்னையுள்ளத்திருத்தியஞ்செழுத்துமோர்ந்தோ
ரிமையவராகிவாழ்வாரென்பதற்கையமின்றே. (௪)

என்னருடன்னாலென்னையிதயத்துட்காண்பதல்லா
லென்னருளில்லோர்கோடியிவுளிமாமகங்களாற்றிக்
கன்முகடேறிப்பன்னாட்காய்கிழங்கருந்தியெய்தா
வுன்னருந்தவஞ்செய்தாலுமென்னிலையுணரொணாதால். (௫)

இயமநன்னியமமேத்துமாசனம்பிராணயாம
முயர்புலனுளத்தில்வாங்கும்பிரத்தியாகாரமோங்கு
தயையுடன்சித்தஞ்சேர்த்துந்தாரணைதியானமென்று
மயர்வறுசமாதியெட்டும்வகுத்தநல்யோகத்தங்கம். (௬)

ஆங்கவைகளிற்கொல்லாமைமெய்ம்மைகள்ளாமையன்பி
னோங்குமிந்திரியமடக்கலொருவர்பாலேற்றிடாமை
யீங்கிவையியமமாகுமிருந்தவமறைகடேர்த
ருங்கருமகிழ்சிபூசைசவுசன்னியமமாகும். (௭)

இருகுறங்கதனிற்பொற்றாளிரண்டையுமாறியேற்றி
மருளறவிருத்தல்பத்மாசனமெனவகுத்துச்சொல்வார்
பொருவருமுழங்காற்சந்திக்குட்புறந்தன்னுள்மாறி
விரிமலர்ப்பாதஞ்சேர்த்தல்சோத்திகமென்பர்மேலோர். (அ)

இவைமுதலாகநூலோரியம்புமாசனங்கடம்மி
லுவகைகூராசனத்தினிருந்துயர்யோகஞ்செய்த
னவையிலாதாகும்யாக்கைகண்ணியவளிபிராணன்
றவலறவதைநிறுத்தறன்னையாயாமமென்பார். (௯)

சிறந்திடுசெபத்தோடேய்தல்சகற்பமாஞ்சபத்தைநீங்கு
மறங்கிளர்பிராணயாமமகற்பமோங்காரத்தோ
டுறைந்துயர்கின்றகாயத்திரியினையுயிர்ப்பவித்துப்
பிறங்கிடமுக்கானன்கிற்சபித்தலும்பிராணயாமம். (௧0)

போற்றிரேசகனன்மூச்சைவிடுக்குதல்புகன்றவாவி
யேற்றுதறன்னைமிக்கபூரகமாகுமென்ப
ராற்றலினிறுத்தறன்னைக்கும்பகமாகுமென்பர்
சாற்றரும்பிராணயாமங்கைவருந்தகைமையோரே. (௧௧)

இந்தியம்விடயந்தன்னினியன்றிடாதடக்கறன்னைப்
பந்தமுற்றுயர்ந்தோர்பார்க்கிற்பிரத்தியாகாரமென்ப
ருந்தியினிதயந்தன்னினுச்சியிற்சித்தந்தன்னை
மைந்துறநிறுத்தறன்னைத்தாரணையென்பர்மாதோ. (௧௨)

எரியுமிழ்மழுவேர்கையின்மாறொருகரத்தினேந்து
முருவமாயென்னையுள்ளத்திருத்துதறியானமாகு
மருவமாயிடங்களின்றிமந்திரமின்றித்தன்னைத்
தெரிவுறவெங்குநோக்கல்சிறந்திடுஞ்சமாதியாமால். (௧௩)

பன்னிருபிராணயாமம்பயின்றிடுகாலமோதிற்
பின்னமாம்புலன்கண்மீட்கும்பிரத்தியாகாரகால
மன்னதுபன்னிரண்டுமுறைசெயுங்காலமாயின்
முன்னியயோகமாட்சிமருவுதாரணையின்காலம். (௧௪)

தாரணைபன்னிரண்டுசெய்திடுங்காலந்தாவில்
சீர்கெழுதியானகாலந்தியானமோர்பன்னிரண்டாங்
கேர்பெறவியற்றுங்காலஞ்சமாதியின்காலமென்ன
வாரணந்தெளிந்தயோகநிலைநின்றோரறைந்தாரன்றே. (௧௫)

சருகுநீர்புல்லுபுற்றுத்தழல்புறங்காடுசந்தி
வெருவரல்கொசுகியானின்றொழுவுமிகரிவெண்சாம்பர்
மருவியதலத்தின்மாந்தர்தொக்குழிவருத்தமெய்திற்
பொருவறவுயர்ந்தயோகம்புரிந்திடநீர்மன்றே. (௧௬)

வேறு.

நதிக்கரையின்வெற்பின்முழையிற்பலருநண்ணு
மதித்திடுதலங்கடமில்வண்சினகரத்தின்
விதித்திடுதலங்கணினிருந்துமிகயோக
முதுக்குறைவினோடினிதியற்றல்முறையாமால். (௧௭)

என்னையுயமாங்கரனையெண்ணரியயோகி
னன்னிலையுணர்ந்தவரைநற்குரவர்தம்மை
முன்னியுயர்சோத்திகமுதற்பலமொழிந்த
தன்னிகரிலாசனமுறத்தனியிருந்தே. (௧௮)

மூக்குநுனிதன்னையிருகண்கள்முகிழாதே
நோக்கியுயர்மாயைகள்விடுத்துநுவன்ஞானந்
தேக்கியெனையன்பினொடுசிந்தையினிருத்தி
யேக்கறவினோடுபணிவோர்க்கெளியனாவேன். (௧௯)

சென்னிமிசைபன்னிருவிரற்குமிசைசேர்ந்த
நன்னரறமூலமதில்ஞானநெடுநாள
மன்னவனுவாமுதலவெட்டிதழ்வயங்கி
யுன்னரியசித்தினுருவாமுயர்பொகுட்டின். (௨0)

இலங்குகதிராயிரமெழுந்தனவெறித்துத்
துலங்கிடுமெனக்குடிலைசொல்லுமொழிதன்னைப்
புலங்கொளநினைந்துவருபுற்கலனையாங்கே
கலந்துவிபுவாதல்களிகூர்தருதியானம். (௨௧)

ஓதுகமலத்தினிடையொள்ளொளிவிரிக்குஞ்
சோதிமயமாயொளிசெய்தொம்பதமதற்கு
ளாதிநடுவீறிவைகளின்றியருவாகுந்
தீதொருவுதற்பதமிருத்தல்சிவஞானம். (௨௨)

தத்துவமனைத்துமருள்சார்பிரணவத்தாற்
சுத்திசெய்துதன்னுருவமென்னுருவுதோய
வைத்துயர்மெஞ்ஞானமெனும்வான்புனலினாடி
யுத்தமவெண்ணீறணிதல்பாசுபதயோகம், (௨௩)

பிரமசரியம்பொறைதவம்பெருமகிழ்ச்சி
மருவரியவுண்மைதமம்வண்கொலைசெயாமை
பொருவில்சமம்வேதமொழியுண்மையென்ல்பொய்தீ
ரரியவிரதாங்கமெனவாரியருரைப்பார். (௨௪)

இன்னவையினென்றுகுறையாதினிதியற்றின்
மன்னியிடுமிவ்விரதமாதலின்மனத்தி
னுன்னியெனைவேறறவுணர்ந்துமறையுண்மை
பன்னியிடின்முற்றுமுயர்பாசுபதயோகம். (உ௫)

எவவுளவருத்தியுடனென்னைவழிபட்டா
ரவ்வளவினுயபலன்யாமினிதளிப்பேம்
பவ்வுவிகாரசைகளொழிந்துபலிகொண்டு
துவ்வுறல்புரிந்தவர்கள்விட்டுலகுதோய்வார். (உசு)

இழவினொடுபேறுவிகாரகவுளமெண்ணி
விழைவொடுவெறுப்பிவைகள்விட்டிகழ்தறம்மைத்
தொழுதுறவழுத்தினிகொன்றுதுணிகுற்ற
பழுதறுகுணத்தொனுதன்பர்பவமில்லார். (உஎ)

பெற்றவைகள்கொண்டுளமகிழ்ந்துபெறலாகா
மற்றவைகண்மேன்மனம்விடுத்துமருணீங்கிப்
பற்றிகலொடற்றொருருபதிக்கணுறையாத
நற்றவருமென்னடியினண்ணுவர்களன்றே. (உஅ)

நல்வினைகள்பற்பலநடத்தினுமென்மேலன்
பில்லையெனிலத்தொழில்கடூவினையினெய்து
மெல்லையறுதீவினைபுரிந்திடினுமென்மே
லல்லலெறியன்புசெயினல்வினைகளாமால். (உகூ)

வெம்மையொடுதண்மைசுகதுக்கனிமேவி
னம்மவிவைநேருறநினைந்தரியகன்மஞ்
செம்மையுடன்யான்மகிழவன்பினொடுசெய்வார்
தம்மையவர்செய்கருமமேதலைமைசெய்யும். (௩0)

என்னிடைமனத்தினையிருத்தியுயர்கன்மந்
தன்னவலவென்றுபுரிதக்கதென்மனத்தின்
மன்னியிடுமாயையிருண்மாயமறைநான்கு
முன்னரியஞானவொளியாலதையொழிப்பேம். (௩க)

பெற்றமிவனொன்னடிகள்பேணுதல்செய்யாதே
மற்றயதெய்வங்களைவழுத்தியிடுவோர்கள்
குற்றமுறுபேர்க்கதிகூட்டுவதையல்லால்
முற்றுணர்வினோர்கள்பெறுமுத்தியடையாரால். (௩உ)

வானவர்கள்யாரையும்வழுத்தியிடுபோழ்தின்
யானெனவழுத்தினர்களென்னிலுறுமுத்தி
யானவர்கட்த்தமுருவாயுறவழுத்தின்
மோனமுனிவோரடையுமுத்தியடையாரால். (௩௩)

கறங்குதிரிகின்றதெனவேகருதினெய்திப்
பிறந்துடனிறந்துபலபேதமுறுதேவர்க்
கறந்திகழுமுத்தியருளச்செயலுமுண்டோ
மறந்தவரையேற்றொழுதுவீடடைதிர்மாதோ. (௩௪)

மக்களொடுசுற்றமனைவாழ்க்கைவிழைவிட்டே
தொக்கபுலன்வென்றெனவழுத்தினர்துதிக்குந்
தக்கவர்களப்பிறவிதன்னிலழிவின்றி
மிக்ககதியாகியநல்வீடடைவரன்றே. (௩௫)

கருமிகளனைத்தழலினேற்றுவர்கள்கற்றோர்
விரிபுனலிறைதவனில்விண்ணில்வழிபடுவார்
தெருளொடுதெளிந்தமதியில்லவர்கள்செம்பிற்
றருவினுயர்கல்லின்மலர்சாத்திவழிபடுவார். (௩௬)

கற்றுயருஞானமிலராய்க்கருணையெய்திப்
பெற்றுயர்விரத்திநனிபெட்பினுடனுற்றோ
ருற்றசதருத்திரியமோமெனுமெழுத்துத்
தெற்றெனவுணர்ந்திவைசெவிக்கினெனையடைவார். (௩௭)

தத்தமவொழுக்கினிடைசார்ந்தெமைவழுத்து
முத்தமருநற்கதியிதென்றுவரொழுக்க
மெய்த்தகுதவங்குலம்விடுத்தவருமென்மேற்
பத்தியுளரொன்னினுயர்முத்திபடர்கிற்பார். (௩௮)

யோகமிடைவிட்டுயிருலந்தவர்விசும்பிற்
சோகமறுமின்பநனிதுய்த்தவைதொலைந்தால்
வாகைபுனைமன்னர்மறையோர்மரபினெய்திச்
சேகறுமவ்வியோகமுறமுத்தியிடைசேர்வார். (௩௯)

ஓவறுநல்யோகமிடையூறினிடைவிட்டோர்
மேவுடல்வலித்துணையின்மென்மெலவியற்றின்
பாவமறுமற்றுழிவரும்பரமஞானந்
தாவினுயர்ஞானமுறின்முத்திதனிற்சார்வார். (௪0)

புன்றொழிலியற்றிழிகுலப்புலையரோனு
நன்றறிவுகல்விபொறைஞானமிலரோனு
மன்றல்கமழுந்துளவமாலையெனையுள்ளத்
தொன்றெனநினைந்தவர்தமைக்கதியினுய்ப்பேம். (௪௧)

என்றுமுனிவோருட்னியம்புமிறையோனை
மன்றல்கமழ்பைந்துளவமாலுமுனிவோரும்
பொன்றவழ்மலர்ப்பதம்வணங்கிநனிபோற்றக்
குன்றவிவெற்றிலைகுழைத்தவன்மறைந்தான். (௪௨)

பையரவகங்கணமணிந்தபரமன்ற
னையகமலப்பதமகத்தினுளிருத்திப்
பொய்யில்முனிவோரையருள்செய்துலகுபூத்து
வையகமளந்தமுகில்வண்ணனுமறைந்தான். (௪௩)

வேறு.

மையணிமிடற்றிறைவண்டுழாய்முகி
லொய்யெனமறைந்தபின்மறையினுண்மையைக்
கையுறுநெல்லியின்கனியிற்கண்டருள்
மெய்யருந்தவர்க்குயர்வியாதன்கூறுவான். (௪௪)

மலர்தலையுலகெலாம்வயிறுவாய்த்தரு
ளலர்முலைபாகனிங்கறைந்தஞானத்தைக்
கலைமுழுதுணர்சனற்குமாரன்காதலி
னுலைவில்சங்கவார்த்தகற்கோதினரோ. (௪௫)

அன்னவன்சத்தியவிரதனுய்ந்திடப்
பன்னினன்சத்தியவிரதன்பண்பொடு
முன்னரும்புலகனுக்கோதினனவன்
றன்னிலையுணர்ந்தகோதமற்குசாத்தினன். (௪௬)

அங்கிராப்பரத்துவற்கருளிநோதினன்
பங்கமில்கபிலர்கைகிடவன்பன்னுவான்
சிங்கலின்றுணர்ந்திடச்செப்பினாரரு
டங்கியசனகனென்றந்தைக்கோதினன். (௪௭)

எண்ணருந்தவமுடையியற்பராசர
னண்ணல்வான்மீகிதேர்ந்தறியவோதினன்
மண்ணளந்தோன்மறுபவத்தின்வண்டுழாய்க்
கண்ணனுயருச்சுனன்களிப்பவோதினன். (௪௮)

பண்டருதேமொழிப்பங்கன்கூறிய
தண்டலில்ஞானமென்செவியிற்றுக்கலும்
விண்டனவெவ்வினையானுமெம்பிரான்
றொண்டர்தந்தொண்டரிற்றூயனாயினேன். (௪௯)

வேறு.

காதல்கூர்மெய்பபுதல்வரொடுங்கிளைஞரோடுங்கூடியனைவாழ்
மாதரோடுந்தோழமைக்கொண்முனிவரொடுமகிழ்ந்துரைத்த
தீதில்ஞானப்பொருளென்னுந்தீந்தேனருந்தியகங்குளிர்ந்து
நாதன்றனதுசீர்பாடியாடியுய்ம்மினமரங்காள். (௫0)

கண்ணேவாயாயிறையழகைக்களித்துநோக்கிப்பருகுமின்கள்
வண்ணமூக்கேவாயாகவையன்மேனிமணநுகர்மி
னெண்ணுமனனேவாயாகவெழுத்தோரைந்துமுரைமின்க
ளண்ணனுமஞ்செவிவாயாயருந்தியுய்ம்மினமரங்காள். (௫௧)

என்றுகூறும்வியாதன்மொழிகேட்டுமுனிவரெல்லோருந்
துன்றுமுவகைமீதூரக்கண்ணீர்சோரமயிர்பொடிப்பப் [டலை
பொன்றல்செல்லாமெய்ஞ்ஞானப்பொருளைக்கருணைப்பெருங்க
யொன்றவுள்ளந்தனிலெண்ணியுவப்பினோடுமிவையுரைப்பார்.

திருவேயினதுபேரருளாலுய்ந்தேந்திவ்வியாழ்முனிக்கும், பொ
ருவெங்குலிசப்படையோற்கும்புவியேழ்பரிக்குமோட்டாமை,
யுருவினமைந்தநாகணையானுரைத்தகருமநல்லொழுக்கின்,விரி
யையுரைத்தியென்முனிவர்கேட்பவியாதனினிதுரைப்பான். ()

இனிதினுரைத்தசிவகீதை படிப்போர்கேட்போ ரொழுதி
னோர், புனிதக்கேள்விமறையோர்பாற்றுகடீர்பொருளின்வகை
யுணர்ந்தோர், வினையினீங்கிவெறுவெளியாய் விமலமாகிவிபு
வாகித், தனியோர்பொருளாஞ்சதாசிவன்றன்கமலபாதந்தனி
ற்சேர்வார். (௫௪)

யோகமுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௨௨௯.

பன்னிரண்டாவது

## வியாதர்-கருமமுரைத்தவத்தியாயம்.

பழுத்தகேள்விச்சுவாயம்புமனுமுன்றெளித்துத்தனிபகர்ந்த
வொழுக்கங்கேட்டீரழற்கூட்டி யுன்னுமறையோரொழிற்புதல்
கிழைத்தமுன்னூலையாண்டிலிடுகவன்றேயிருநான்காய்த் [ர்
தழைத்தபருவந்தனிவிடுகவிட்டாற்றத்தமறைபயில்க. (

முன்னூற்கருமமுடிந்ததற்பின்முஞ்சிதண்டந்தோல்தரித்துக்
கொன்னேயையமேற்றருந்திக்குருவின்வதனந்தனிநோக்கி
நன்னர்மறைகள்நனிகற்கக்கற்றோயறுவைகலையுரிவைத்
தன்னேரில்லாக்கோவணமேற்றரித்துக்கலைத்தோலுரிபுனைக.

கலையினுரிவையின்றெனிற்கலப்பால்கறக்குங்கற்றாவிற்
புலவுசிவாப்புதுப்போர்வைபுள்ளிமானின்றோல்புனைக
வலமென்றடக்கைமேலெடுத்துப்புனைதல்வியங்குமுபவீத
மிலகுமிடக்கையெடுத்திடுநூலிலங்கும்பிராசீனவீதம். (

புரிநூலிடமிட்டுயர்கருமஞ்செய்தல்புகன்றதென்புலத்தோ
கருதினாட்டுமமைதியினின்றியாகாவலமிட்டு
மருவுகருமஞ்செய்தல்சுபகருமமெவைக்கும்வழக்காகுந்
தெரியுமுஞ்சியின்றெனிற்குசைப்புல்லேனுஞ்சிறப்பாமா

வில்லம்பலாசமுயர்தண்டங்கோடல்விழுமிதாமன்றேல்
நல்லல்மகத்துக்கமைத்திட்டமரங்களனைத்துமாமதற்குச்

சொல்லுநீளமடிதொட்டுத்துகடீர்நுதல்மேன்மயிரளவாம்
புல்லுங்கணுக்கண்டோல்வழன்றலாகாதென்னப்புகலுவார். ௫

சாலவழலுக்கூட்டியல்லாற்றன்பாழ்வயிற்றுக்கிடலாகா
காலைமாலைநன்பகலிற்கடவகழித்தலியல்பாகு
மேலவிவைகள்புரிந்திலரோவிழிந்தோராவர்மறைக்கிழவர்
ஞாலம்புரக்கும்வாள்வேந்தர்நாய்களொன்னுமூவருமே. (௬)

தெண்ணீர்மூழ்கித்தேவர்க்குமுனிவர்தமக்குத்தென்புலத்தோர்க், கொண்ணீரதனுற்றர்ப்பணஞ்செய் தொழுகுதேனினறுமலர்தூய்ப், பெண்ணோர்பாகன்சேவடியை வணங்கிப்பெரியோர்தாள்வணங்கல், நண்ணற்கரியவில்வாழ்வோர்கடனென்றெவருநவின்றிடுவார். (எ)

அபிவாதனத்தாற்பெரியோரைவணங்கலழகிதாமென்பர்
தபுதலில்லாவுயர்ஞானந்தந்தகுரவன்றனைநாளும்
விபுவாமீசனெனத்தொழுதுபழிச்சல்வேண்டும்வேதியரைக்
கபிலப்பசுவைமன்னவரைக்காணிற்றொழுதலியல்பாமால். (அ)

மறையோர்மறையோர்தமைக்காணி னன்மைகொல்லோவெனகமகிழ்ந், தெறிவேலரசர்தமைக்காணிற்பீடையிலதோவெனவுரைக்க, முறையேவணிகர்க்காணினிதிகுறைதலிலவோவெனமொழிக, வறையும்பின்னோர்க்காணினுமக் காரோக்கியமோவெனமொழிக. (௯)

அருமாமறைகளோதிவித்தோர்தந்தைதமயனடல்வேந்த, னுரியவம்மான்மாதுலன்றானுய்யப்பரித்தோன்றாய்தந்தை, மருவுன்றந்தைதனையீன்றோன்வருணசேட்டன்றந்தைக்குப், பொருவில்முன்னோன்பின்னோன்மற்றின்னோர்குரவரெனப்புகல்வார்.

தாயைப்பயந்தாடாய்க்கிளையாடாயின்மூத்தாடவ்வைதனக்
கேயதந்தைதனையீன்றாள்வளர்த்தாளத்தைகுருபன்னி
காயும்வடிவேல்மன்னவர்தங்கடிமாமனைவாழ்மடந்தையர்க
ணேயத்தோடுதனையீன்றவன்னையனையரெனநினைக. (௧௧)

இன்னவோர்பத்தன்னையர்க்குமியல்முக்கரணந்தனிற்பிழைத்தோன், றன்னதுடலிற்றசைநுகர்ந்துதழல்வாய்நரகத்தெய்துவான், பன்னுறுநற்குணமுளரோயெனினுந்தந்தைதாய்பாதஞ், சென்னிசூடாரெனிற்கொடியதீவாய்நரகிற்சேர்ந்திடுவார் (௧௨)

வேறு.

தாயினிற்சிறந்ததெய்வமிலையுயர்தந்தைதன்னி
னேயநற்குருவுமில்லையென்னில்மற்றிவர்கடாளிற்
றூய்மலர்தூவிநாளுந்தொழுதிடுமறிஞர்தாமே
யாய்கதிர்பரப்பும்பொன்னாட்டமரராயினிதுவாழ்வார். (௧௩)

தந்தைதாயருள்பெறுமற்றுன்புரிகருமமியாவு
மந்தில்நற்பலன்கணல்காதழிந்திடுங்கருத்தன்முன்ன
முந்தியசமரிலாவிமுடிந்தவவொவருநாளு
மிந்திரதிருவராகிவானிடையினிதுவாழ்வார். (௧௪)

நந்தலில்குருவின்மைந்தனன்மகம்புரிவிப்போர்க
டந்தைதன்றம்பியம்மானிவர்தமக்கிளையராகில்
வந்திடில்வணங்கலாகாவெழுதல்நல்வழக்கதாகு
மந்தில்வேந்திளையனேனுமடிதொழல்வழக்கதாமால். (௧௫)

சீர்கெழுவேள்வியாற்றுந்திருவினேனிளையனேனும்
பேர்சொலியழைக்கவொண்ணுதிருபிறப்பாளர்தம்மை
யோர்கெழுமரசர்நாய்கர்பின்னவரிறைஞ்சல்வேண்டும்
பார்புகழ்மறையோர்வேந்தராயினும்பணியொணுதால். (௧௬)

பாழியந்தடந்தோள்வேந்தன்வணிகர்சீர்படைத்தாரோனும்
வாழியதென்பதல்லால்மறையவர்வணங்கலாகா
வேழையர்க்கன்பன்றெய்வமிருபிறப்பாளர்தெய்வ
மாழ்சுடரங்கியெல்லாவுயிர்கட்குமதிதிதெய்வம். (௧௭)

வித்தைநற்கருமமாயுள்வியன்கிளைநிதியமைந்து
மொத்துளோனுயர்ந்தோன்விஞ்சைகருமத்தினுயர்ந்ததாகு
மெய்த்தகுகருமியாயுள்மேவினோர்க்குயர்ந்தோனுயுட்
சித்திபெற்றுடையோன்சுற்றமுடையரிற்சிறந்தோனென்பர். ()

மேதகுசுற்றமுள்ளோன்பொருள்படைத்தவனின்மேலோன்
றீதறுமறையோர்வேந்தர்தெரிவையர்கிழவர்கண்ணி
லாதுலர்நோயோர்தம்மையருநெறிதன்னிற்காணிற்
போதருகின்றோர்யாரும்விலங்குதல்புலமைத்தாமால். (௧௯)

அந்தணர்பவதிபிச்சாந்தேகியென்றறைந்துமன்றற்
பைந்தொடையரசர்பிச்சாம்பவதிநற்றேகியென்று
மெந்திரவணிகர்பிச்சாந்தேகிநற்பவதியென்று
நந்தலிலையமேற்றல்நான்மறைவழக்கமாமால். (௨0)

தாயவட்கிளையாளத்தைதன்னுடன்பிறந்தாளொள்ளார்
மேயதன்வருணத்துள்ளார்வீடுதோறையமேற்றல்
தூயனவாகுந்தாயத்தார்தொழுகுரவரில்லி
னேயநற்பிச்சையேற்றலிழிபுவேறிலையேலாகும். (௨௧)

ஐயமேற்புழிமற்றொன்றில்மனம்விடாதுரையாடாமற்
பையெனவேற்றவையம்பயிற்புறுதுண்டல்பண்பா
மெய்தின்மற்றொருவன்வீட்டிஞகர்ந்திடலாகாதென்று
மொய்யெனவடக்குநோக்கியுண்டலுந்தீதாமன்றே. (௨௨)

செந்தளிர்பொருவுங்கால்கைமுகமெனச்சிறந்துதோன்று
மைந்தினுமீரத்தோடுமருந்துகவருந்துமுன்னு
நந்துறவயின்றபின்னுநன்கினுசமனஞ்செய்கச்
சிந்தையிலீசன்பாதஞ்சிந்தனைசெய்கமாதோ. (௨௩)

வியாதர்-கருமமுறைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௨௫௨.

---

பதின்மூன்றாவது

## சுத்தாசமனமுறைத்தவத்தியாயம்.

உண்ணினீர்நுகரிற்றும்மினுறங்கினீர்மூழ்கின்வீதி
நண்ணின்மெல்லறுவைசுற்றினங்கையர்முலையிற்றோயி
னெண்ணருமறைகளோதினிருமலம்விடுக்கினீமய்
கண்ணுறினிருகாற்றூய்மைகருதியாசமனஞ்செய்க. (௧)

இழிகுலத்தினர்மிலேச்சர்சூத்திரர்மிச்சிலேய்ந்தோர்
பழுதில்பின்னவரைத்தீண்டிலவரொடும்பகரிற்கண்ணீர்
விழினுடற்புண்ணீர்சோரின்விதித்தவாசமனமோர்காற்
றொழுதகப்பண்ணலேவேண்டுமென்றனர்சுருதிநூலோர். (௨)

புனிதமிலாடைமாந்தர்மயிர்புனைகோவணந்தீ
வனிதையர்பசுத்தமேனிமற்றிவைதீண்டில்வண்புல்
லினியநீர்பூமிதீண்டிற்புனிதமென்றிசைப்பர்வென்னீர்
தனினுறைப்புனலிற்சுத்தாசமனமாற்றுதறீதாமால். (௩)

சென்னியிற்கழுத்திற்றூசுசேர்ந்திடினுடுத்தசோமன்
மன்னியவிருபான்முந்திகுடுமிமற்றவிழினிற்பிற்
றன்னிருகால்கைநீர்தோய்ந்திலவெனின்மறைத்தண்ணீரி
லின்னகைபுரியிற்சுத்தாசமனநன்கியற்றலாகா. (௪)

அடியினிற்கழல்கள்சேர்த்துமாசனத்திருந்தும்பாயிற்
படியினிற்கிடந்தும்வார்த்தைபகர்ந்துமெண்டிசையும்பார்த்து
மடிமையிற்குனிந்துநின்றுமா[illegible]னால்துறந்துந்தூய்மை
விடுநுரைபுழுக்களங்கம்விர[illegible]நோக்காதேயும். (௫)

பின்னவன்புனிதமில்லான்கொணர்ந்தநீர்தனினும்பெட்பி
னுன்னருமூவர்கலங்கலுற்றநீர்தனினுமோங்கி
மன்னுமேல்விரல்களானும்வயங்குமாசமனஞ்செய்தல்
நன்னெறிவழக்கன்றென்னநான்மறையுரைத்தவன்றே. (௬)

அந்தணரிதயங்காறும்புனல்செலவரசர்வெய்ய
கந்துறழ்களத்தின்காறுநனையநல்வணிகர்நாமட்
டுந்துநீர்தோயச்சுத்தாசமனநன்குவந்துசெய்கப்
புந்திகூர்பின்னோர்நீர்தொட்டிதழ்தொடிற்புனிதமாகும். (௭)

வேறு.

அங்குட்டமூலவரை யொழுகுபுனலரும்பிரம தீர்த்தமங்கு ந, தங்குற்றதற்சனிக்கும்பெருவிரற்குநடுவொழுகுதண்ணீரா ய்திற், பொங்குற்றபிதிர்தீர்த்தங் கனிட்டிகை மூலத்தின்மேற் பொழியுந்தெண்ணீ, ரொங்குற்றமாதவரும்பிரசாபத்தியதீர்த்த மென்பர்மாதோ. (அ)

விரலுனியிற்பொழிதெண்ணீர் தனைத்தெய்வதீர்த்தமென் றும்விளங்குகேள்வி, யிருடிகடந்தீர்த்தமென்றுமியம்பிடுவர்வி ரன்மூலத்திருந்தநீரு, முனைசெயினப்பெயரதாமுள்ளங்கைப்பு னலதனைச்சோமதீர்த்த,மருவருமக்கினிதீர்த்தமெனவுரைப்பர் முழுதுணர்ந்தமதிவல்லோரே. (கூ)

அருள்பிரமதீர்த்தத்தைமும்முறைகொண்டங்குட்டமூலந் தன்று, லிருமுறைவாயினைத்துடைத்துப்பெருவிரலையனுமிகை யோடியையக்கூட்டி, மருவுமிருகண்ணிலொற்றியங்குட்டந்தற் சனியின்மருவக்கூட்டிப், பொருவரியகொடிமூக்கிற்புனிதமுற முறையினிருபுறமுநீவி. (க0)

சிறுவிரலினங்குட்டஞ்சேர்த்திமிருங்கேள்விபெறுசெவியி னீவி, நெறியினடுவிரலோடுமங்குட்டமமைத்திருதோ ணிலவ வொற்றி, யுறுவிரலைந்தையுங்குவியா வுரத்தமைத்துச்சென்னி யிலுமொற்றநூலின், முறைதலையிற்பெருவிரலினுனியினைச்சே ர்த்தலுநெறியாய்மொழிவர்மாதோ. (கக)

மும்முறைநீரருந்துவதற்கனந்தனுயர்வானவர்கள்மும்மை த்தேவ, ரம்மவெனவியக்குவர்வா யிருமுறைதைவந்தனுலலை நீர்க்கங்கை, செம்மைபெறுங்காளுந்தி யுவக்குமிருகண்டொட லாற்பருதிதிங்க, டம்முளமன்புறுமூக்குத்தைவரலான்மருத்து வர்களுவப்பரன்றே. (கஉ)

செவிதொடலாலங்கிவளியுவக்குமிதயந்தொடலாற்றேவர் யாரு, முவகைபுரிகுவர்சென்னியொற்றுதலாற்புருடனுளமகி ழ்ச்சிகூரு, நவையறுசுத்தாச[illegible]ஞ்செய்போதில்வாயினின்று நழுவுந்தெண்ணீர்த், துவலைத[illegible]ச்சிலெனவிகழற்கமெய்யினி டைத்தோய்தலாகா. (கங)

மதுவற்கநுகர்ந்திடினுமுயர்சோமபானத்தும்வளர்பூங்கன் னல், சிதைவற்றகனிகிழங்குதின்றிடினுநூறடைகாய்தின்றபின் னும்,விதியுற்றவாசமனம்புரியாமலொழிந்திடினும்விதியாமென் னக், கதிர்முத்தவடங்கிடக்குமிருதடந்தோள் மனுமுன்னங்கழ றினுல். (கச)

வெண்கலந்தாம்பிரங்கையினிருப்பநீர்விடின்மிச்சில்மேவி லாங்குப், பண்பினவற்றினைக்கீழ்வைத் தாசமனம்பண்ணிநீர்ப்

படுத்திக்கொள்க, வுண்கலங்கையகத்திருப்பமிச்சிலுறினதுத
ரையினுய்த்திடாது, தண்புனலினுசமனந்தான்புரியிற்பாத்திர
மும்புனிதமாமால். (௧௫)

வேறு.

ஆறலைகள்வர்வெய்யபுலிவழக்கருது தூய
வூறுநீரிலாதகானத்துள்ளிருட்பிழம்பினேகின்
வீறுயர்பொருள்கள்கைகொண்டிருமலம்விட்டானேனுங்
கூறியபொருள்கள்யாவும்புனிதத்திற்குறையுறுவால். (௧௬)

முப்புரிநூலைத்தூயவலச்செவிமூலத்தேற்றி
செப்பியபகல்வடக்குத்திசையினையினிதுநோக்கி
மைப்படுகங்குற்போதிற்றென்புலமருங்குநோக்கி
யிப்படிதரையிற்புல்லைவத்திருமலங்கழித்தல்வேண்டும். (௧௭)

தருநிழறன்னினூற்றிற்சந்தியிற்கிணற்றிற்றுழ்வில்
வளைநெடுங்குடிதன்னில்வயங்குதேர்மறுகிற்புற்றி
னெரியினீமத்திற்பைம்புற்றரையினில்வயலின்விட்டிற்
கரியினிலுமியினுவின்கோட்டத்திற்கபாலந்தன்னில். (௧௮)

உழுதமென்புழுதிதன்னிலுவர்நிலத்துயர்பூங்காவில்
முழுகுதண்டுறையிற்கோயின்மறையவர்மாதர்முன்னர்
வழியினிடக்கும்போதின்வண்டுகிலின்றிக்காலிற்
கழல்செரீஇக்குடைகைபற்றிக்கதிர்மதியுடுக்கணோக்கி. (௧௯)

நின்றுமுழியிடிந்தகோயின்மருங்கினீள்குழியின்மிச்சில்
துன்றநீண்மலங்கள்முன்னர்விட்டுழித்தொறுக்கள்முன்னர்
நன்றறிகுரவர்முன்னரிருமலம்விட்டோர்நாளு
மொன்றுதற்கரியதீயநரகின்வீழ்ந்துழப்பரன்றே. (௨௦)

கலங்கனீர்க்குழியிற்சேர்ந்தசேற்றுமண்கட்வுள்வைகு
மிலங்கொளிவிரிக்குங்கோயிலிடத்துமண்கரியிற்கானி
னலங்குநீர்க்கயத்துட்யேவழியினினமைந்தமண்ணுற்
றுலங்கிடச்சவுசம்பண்ணறகாதெனச்சொல்வர்மேலோர். ()

கால்களிற்குளனிலாற்றிற்கரையுறுமண்ணைவவ்விச்
சால்வரும்பாத்திரத்திற்றண்புனற்கொணர்ந்துபோதந்
தேல்வுறநூல்கள்சொன்னமுறையினில்மண்களிட்டுப்
பால்படுசவுசம்பண்ணிப்பண்பினுசமனஞ்செய்க. (௨௨)

சுத்தாசமனமுறைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௨௭௪.

பதினான்காவது

## பிரமசரியமுரைத்த வத்தியாயம்.



குரவன்முன்பாதநீட்டல்குறுநகைபுரிதல்லன்றேன்
மருவியநாமங்கூறல்மற்றவன்போலச்செம்மாந்
துரைபகர்ந்திடுதலன்றேநடத்தல்போலொதுங்கல்வெய்தின்
வெருவரமுனியிற்றானும்வெகுண்டுரையாடலாகா. (௧)

அருளுடைக்குரவன்பன்னியடிமலர்பணியவேண்டி
னிருவிரலகலநின்றங்கிறைஞ்சிடல்வேண்டுமன்றேன்
றிருவளர்கமலபாதஞ்சேய்மையினின்றுதாழ்ந்து
பரிவொடும்வழுத்தலாகாதெனமறைபகருமன்றே. (௨)

ஏதிலார்குருவையெள்ளிற்செவிபுதைத்தகலவன்றேன்
பாதமென்மலர்கண்மேனிபரிவுடன்றைவந்தென்றுங்
காதலாலேவுமுன்னர்க்கருதியவெவையுஞ்செய்க
மேதகுகுரவன்றூயநிழலினைமிதிக்கொணாதால். (௩)

அன்புடைக்குரவனூர்ந்தமரவடிமிதித்தலாகா
பொன்புனையமளிதன்னிற்பொருவிலாசனத்திற்றானு
மின்புறவிருத்தலாகாபணித்தன்றியேகலாகா
முன்புறக்கிடந்தியாவுங்கேட்டிடன்முறைமையன்றே. (௪)

சந்தநீண்மாலைமாதர்தடமுலைநயத்தலாகா
மைந்துடைக்கோபஞ்சூதுமையிடலெண்ணெயாடல்
சுந்தரமகளிர்கூத்துப்பாட்டினைவிழைதறுஞ்சல்
முந்தியவுப்புநெய்யோடயின்றிடல்முனிந்துகோறல். (௫)

பற்கறையெறிதலாடிநோக்குதல்பழையதுண்டல்
பொற்புறவணிதல்மேனிபொலிவுறத்திமிரியாட
லற்புடைக்குருவையெள்ளன்மகளிரோடசதியாடல்
முற்படுபிரமசாரியொழுக்கினின்முறையதன்றே. (௬)

சுடுமண்வேய்ந்துயர்ந்தமாடச்சூழலிலறையினேனுங்
கொடிநெடுந்தேரில்வெற்பிற்குரவனேடிருக்கவன்றேன்
கடிதினினடக்கிற்பின்னேநடக்கக்கால்விசையினேடிற்
றொடருமெய்ந்நிழலேபோலத்தானும்பின்றொடர்ந்துசெல்க. ()

அல்லனபுரியுமேல்வைவிடுத்துரையாடுகின்றோர்
நல்லவைபுரிகிற்போர்கள்குருவினற்புதல்வன்பார்க்கிற்
பல்பகலிளைஞரேனும்வழிபடல்பண்பேயன்றி
மெல்லடிவருடல்மிச்சிலருந்துதல்விழுமிதன்றே. (௮)

பொருந்தியகுருவின்மிச்சில்பொங்கியவிழைவினன்றி
மருந்தெனநுகர்த்தல்வேண்டுங்குரவன்வைதிகத்தினீங்கித்
திருந்தியவொழுக்கந்தன்னைத்திறம்பிடினவனைநீங்கி
யருந்தவம்பழுத்தநீதிக்குரவனையடைதல்வேண்டும். (௯)

குரவன்றன்குரவன்றன்னைக்குரவனில்வழுத்தல்வேண்டுங்
குரவன்பால்வைகுமேல்வைத்தாய்தந்தைகுறுகினோர்
குரவனதருளினாலேகும்பிடல்வேண்டுமற்றைக்
குரவன்றன்பன்னிமக்கள்குரவனில்வழுத்தத்தக்கோர். (க0)

குருவினன்குலத்திலுற்றபன்னியைக்குருவைப்போல
வெருவொடும்பணிதல்வேண்டும்வேற்றுவன்னத்திலுற்று
மருவுமிற்கிழமைபூண்டமங்கையர்தம்மையேத்திப்
பரவுதலொழுக்கமென்னநீதிநூல்பகருமன்றே. (கக)

நெரிசுரிகருமென்கூந்தலுளர்தல்கால்பிடித்துநீவல்
பொருவருமெண்ணெய்வரக்கிப்பூம்புனலினிதினாட்ட
லரிறபமேனிசுண்ணத்தரில்பெறத்திமிரியாட்டல்
குருவினன்மனையாட்கென்றுமியற்றுதல்குற்றமாமால். (கஉ)

குருவினன்மைந்தன்றன்சேய்பொருணனிகொடுப்போன்கோநி
லரசிளங்குமரன்சுத்தனன்பினான்வழிபாடுள்ளோன் [ன்
றருமமேற்சிந்தைவைத்தோன் சாற்றுமுன்பொருள்கடேர்வோ
றிருவினனிவர்க்குவிஞ்சைசெப்புதல்சீர்மைத்தாமால். (கங)

வேதமோர்நான்குங்கற்றோர்விழைந்துவேதாங்கங்கற்றோர்
தீதறுமிதிகாசங்கள்புராணங்கடெளிந்தமேலோர்
காதலினிவுளியெச்சங்கணக்கறப்புரிந்தோரொய்து
மேதகுமுத்திவீட்டின்மேவிவீற்றிருப்பரன்றே. (கச)

வைகறைப்போதினாற்றின்மருவிநீர்படிந்துநாளுஞ்
செய்கடன்முற்றிகாயத்திரியோராயிரந்தெளிந்து
மைகெடச்செபித்தறன்னைச்செபவெச்சமென்னவாய்ந்த
பைகெழுசுடிகைப்பாந்தள்பரித்தபார்பகருமன்றே. (கரு)

ஏதமில்மறைகள்காயத்திரிக்கிணையாங்கொலென்னப்
போதவிழ்கமலப்புத்தேளுயர்புலக்கோலாற்றூக்கி
மேதகவுடைத்துக்காயத்திரியெனவியந்தானென்றூற்
றீதறுமதற்குநேராயாதினைச்செப்பலாமே. (கசு)

ஆவணித்திங்கட்டன்னிற்கன்னிமாதத்தினாதல்
மேவுபூரணையில்வேதம்விளம்புதறுடங்கியோதித்
தாவருந்தைமாதத்திற்பூரணைதன்னின்முற்றி
யோவில்மாசியினில்மீட்டும்வளர்பிறைக்கோதல்வேண்டும். கஎ

தேய்பிறைதனிற்புராணந்திகழ்திகாசமங்க
மாயுநற்றருமநூல்களற்பொடும்பயிறல்வேண்டுங்
காய்கனற்சூறைமாரிமின்னிடிகலுழ்தல்தன்னூர்
மேயினவாகின்மிக்கால்விழுமறையோதலாகா. (௧௮)

ஊர்வயிற்சவங்கிடப்பிற்பூசையோடெவியூட்டாடிந்
பார்நடுக்கெய்தினுங்குப்பலசனமிடையின்மேவி
யேர்கெழுகிரகமொன்றோடொன்றுறினாயாமத்திற்
சீர்கெழுபருதியத்தஞ்சேர்வுழியோதலாகா. (௧௯)

மன்னவரிறப்பிற்றூயவான்சுடரரவுதீண்டி
லுன்னருமேகோதிட்டமுண்ணிலோர்மூன்றுநாளப்
பன்னருமறைகளோதறீதெண்ணெய்பரிவினுடிற்
றன்னமர்தலையினீங்காதெனினுநூல்சாற்றுறுதால். (௨௦)

சூதகமுடையார்வீட்டிற்றுய்த்தநாட்புகையின்மூடிச்
சீதவெம்பனிப்பெய்யுற்றகாலையிற்றிறல்கொள்வேந்தர்
மேதகவமர்செய்நாளினுவர்க்களின்விருப்பமெய்தி
யாதரவோடுசெய்யுமட்டகச்சிரார்த்தநாளின். (௨௧)

ஏழிலைம்பாலைவெள்ளினறுவிலியிலவிருப்பைப
நீழலிற்குரவன்றேழனீளுயிருலந்தநாளின்
வாழியமறைதொடுப்பின்முடிப்பினோர்மூன்றுவைகல்
வீழ்மறையோதலாகாவோதிடினாயுள்வீவார். (௨௨)

சந்திவந்தனையேயாதிகருமங்கட்குரைக்கத்தக்க
சுந்தரமறைகட்கீண்டுச்சொல்லியதோடம்யாவும்
வந்துறுதருமநூல்வண்புராணம்வேதாங்கம்யாவு
நந்துமீருவாவினன்றிநாடொறுநவிறலாமால். (௨௩)

வேதமும்வேதமார்க்கமேவியநூலுமின்றித்
தீதுறுநூல்கள்யாவன்றெரித்தனனவனைப்பஞ்ச
பாதகனென்னச்சொல்வர்பழமறைதெரிந்தமேலோ
ரீதுயர்பிரமசாரிக்கியம்பியவொழுக்கமாமால். (௨௪)

நூல்பலகற்றோனேனும்பொருணனித்தறியானென்னில்
மாலொடும்வாளாகத்துமாணிறக்காகம்போல்வ
னேல்வுறக்கற்றநூலின்பொருடெரிந்திருநூல்சொன்ன
சீலமேயொழுகுகின்றோன்சிவனடிநீழல்சேர்வான். (௨௫)

ஈண்டியாமுரைக்கப்பட்டவொழுக்கத்தினியைந்துநின்றோர்
வேண்டுருவாகியொன்றாய்விமலமாயருவாயென்று
மாண்டகுகுணக்குன்றாகிமதிவகிர்க்கண்ணிசூடு
மாண்டகைபாதநீழலடைந்துவீற்றிருப்பரன்றே. (௨௬)

பிரமசரியமுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—௩௦௦.

பதினைந்தாவது

# இல்லற்முறைத்தவத்தியாயம்.

அரியமறைகளொன்றெனினுமிரண்டாயினுமூன்றாயினுஞ்சீர்
விரவுமறைகணான்கெனினும்வெளிறின்றாகக்கற்றருள்செய்
குரவன்மகிழப்பொருள்வழங்கியவன்றன்னருளிற்குழைகிழிக்கு
முருவவொண்கண்மடந்தையைவேட்பானுஞற்றவேண்டுமால்

விரதமாற்றியருமறைகள்விதித்தசமாவர்த்தனஞ்செய்து
பரிவால்வளர்த்தமயிர்நகங்களெறிந்துகடவுட்பசுஞ்சாந்த
முருகுகமழநறுந்தெரியல்முளரியலர்த்துங்கதிரனைய [தி
குருமாமணிக்குண்டலமணிந்துகழைத்தண்டூன்றிக் குடையேந்

தண்ணங்கதிர்கால்மதியனையவெண்டூசணிந்துதடந்தோளில்
வண்ணம்வாய்ந்தவுத்தரியம்போர்த்துச்சென்னிதனில்வயங்க
நுண்ணூல்வனைந்தவெண்பட்டுச்சுற்றிநோன்றாள்கழல்செருகித்
தெண்ணீரமைந்தகமண்டலங்கைசேர்த்துப்புனிதமாயொழுகி.

தனதுமரபினிழிபுயர்ச்சியின்றியொத்தமரபுதனிற்
கனியினறியதெள்ளமிர்திற்கன்னற்பாகிற்கோற்றேனி
லினியமழலையந்தீஞ்சொலுடையாளாகியிலகொளிய [ளாய்
பனிவெண்டிங்கள்முகத்தினளாய்ப்பயந்தாண்மரபிற்பிறந்தில

மதியினமைச்சர்யேவற்குச்சிலதியாகிவனப்பினுக்குப்
புதுமென்மலரிற்றாக்கணங்காய்ப்பொறையிற்பூமிதேவியாய்
முதிருமன்பிற்றாயாகிமுயங்குமின்பக்கலவிதனக்
கிதயமுருக்குங்கூத்தியெனவீறிலின்பம்பயந்தாளாய். (ரு)

கற்பிற்கினியவருந்ததியாய்க்கண்ணுமனமுந்தனிகவரும்,பொற்
பிற்குயர்வானுருப்பசியாய்ப்புனிதவொழுக்கமுடையளாய்,வெ
ற்போரணுவாமெனப்புடைத்துச் செம்மாந்தெழுந்துவீங்குமு
லை,யற்போருருவுகொண்டனையவணங்கைவிழைவின்மணம்புரிக

தழுமுற்றெய்தாதண்ணாந்துதரளங்கிடந்துவெயிலெறிப்ப
முழுமுற்றாகந்தனிகவர்ந்தமுகிண்மென்முலையார்பூப்பெய்தி
யிழுமென்றிரைநீர்படிந்தநாடொட்டுப்புணர்தற்கியம்பியிடும்
வழுவினாளின்மகப்பெறுதல்தலைக்கீடாகமணந்திடுக. (எ)

பிறந்தநாளிலட்டமியிற்பேசுமாறாம்பக்கத்திற்
சிறந்தபதினான்காந்திதியிற்பருவந்தன்னிற்றுவாதசிபின்
மறந்துமாதர்முகிண்முலையிற்றழுவலாகாதெனவகுத்தா
ரறங்கூர்தருமநூல்வகுத்தமனுவைமுதலாமறிவினரோ. (அ)

அருமாமகஞ்செய்தழற்கருமமொழியாதியற்றலருமறைக
ளுரைசெயொழுக்கந்தனிலொழுகல்பஞ்சவெச்சமியற்றறம்
கருமமிழுக்காதனுட்டுவேங்கையோர்காற்கண்டிருத்தல்
பொருவில்தேவாலயந்தொழுதல்புகன்றவில்வாழ்குநர்கடனே.

புரிந்தபாவமறையாதுபுகறல்வேண்டுமியாவருக்கும்
வருந்தின்றுகவியவன்கள்செய்யவேண்டுமகிழ்தந்தை
திருந்துமொழுக்கந்திறம்பாமனிற்றல்வேண்டுமேடகெனினும்
விருந்தினேடுநுகர்வதலால்வாளாநுகர்தல்விடவேண்டும். (௧௦)

காமவெகுளிமயக்கமுதல்தீமையெவையுங்கடிந்திடுத
லோமச்செந்தீயூட்டியன்றியுண்ணுதொழிதல்தாய்தந்தை [ன்
தோமில்பசுநான்மறைக்கிழவர்போற்றித் தொழுதறுய்ப்பனக
பாமாங்கிளேஞர்மகிழ்சிறப்பவனையாதென்றும் பார்த்தருந்தல்.

தருமமாற்றனன்னெறியிற்பொருள்களீட்டறம்மொழுக்கின்
மருவுங்காமந்துய்த்தறம்மூர்வாழ்த்தவாழ்தலிகழ்வனகள்
புரிதல்செய்யாதுவப்பனவேபுரிதலுலகத்தொடுமொழுகல்[தார்
கருணையொடுமில்லறம்புரிவோர்கடனென்றெவரும் கட்டுரைத்

அயலோர்துன்பமுறிற்றுமுமழுங்கலன்பர்முதுக்குறைவிற்
பயிலும்விஞ்சைபதினன்குங்கற்றல்ஞானம்பகர்ஞானத்
தெயில்மூன்றெரித்தகுறுமூரலெந்தையுவக்குமெஞ்ஞான்றுஞ்
செயிர்தீர்மெய்ம்மையிழுக்காதோர்துறக்கமதனிற்சேர்குவரால்

அல்லல்புரிந்துபொருளீட்டல்காமந்துய்த்தலிவையாகா
யொல்லும்வகையினறமியற்றுங்காலைதுன்பமுற்றிடினும்
புல்லுந்தருமம்விடாதொழுகப்புகலுமுயிர்களனைத்தினுக்கு
நல்லசெய்யக்கடவுளனைமறையையிகழ்தனவையாமால். (௧௪)

இன்னதருமவொழுக்கநூல்பயின்றோர்கேட்டோ ரொழுகி
னோர், மன்னுபொருளின்வகையுணர்ந்தோர்வழுக்காததனின்வ
ழிநின்றோர், பொன்னங்குடுமிநெடுவரையிற்கமலப்பொகுட்டி
னினிதுறையு, மன்னமூர்ந்தமறைக்கிழவனுலகத்தினிதினடைந்
திடுவார். (௧௫)

இல்லறமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௩௧௫.

---

பதினறுவது

## பொதுவிதியுரைத்தவத்தியாயம்.

---

பூதமெவைக்குந்துன்பமியற்றும்பொல்லாருந்
தீதுபயக்குமபொய்ம்மொழிபேசுந்தீயோருங்
காதலின்மற்றேரோதிலர்கன்பொன்கவர்வோரும்
பாதகராகித்திரகந்திற்படிவாரால். (௧)

சேடன்விரிக்குமாயிரவாயிற்றிகழ்நஞ்சு
மோடுகடற்குளுற்றிடுநஞ்சும்விடமன்றே
பாடமைவுற்றதேவர்பொருட்பன்மறையாளர்
தேடியபொன்னேநஞ்சிவைகொள்ளிற்றீதாமால். (௨)

மன்னவர்செம்பொன்வேதியர்பைம்பொன்வளர்தேவர்
நன்னிதியோர்சற்றாயினும்வவ்வநசையுற்றாற்
றன்னுடைமுன்னேக்கைப்பொருளும்போய்த்தாழ்வாகி
யின்னலுழக்குமாருயிருக்குமீறாமால். (௩)

புல்லொடுமெல்லென்றண்மலர்மூலம்புனல்காட்ட
மெல்லடகோடுநன்கனிவிண்ணோர்கடமூற்றற்
கில்லைகொலென்னினீகுனரற்றாற்கேளாதும்
வல்லைகவர்ந்தும்பூசனைசெய்தன்மரபாமால். (௪)

இருநிதியீட்டற்கேதிலர்போற்றுஞ்சமயத்தின்
மருவியுவப்பினன்னிதியெய்திமறித்தேயும்
பொருவருமுன்னைத்தன்சமயத்திற்புக்கோர்க
ளருநரகத்திற்பற்பலதுன்பமடைகிற்பார். (௫)

வேதமிகழ்ந்தோர்வேதியர்தம்மையிகழ்வுற்றோர்
தீதுறுபஞ்சவிராத்திரமெய்துந்திறனில்லோர்
மேதகுதத்தங்கன்மம்விடுத்தோர்பாசண்டத்
தோதியகன்மத்துற்றவர்பாவத்துழல்கிற்பார். (௬)

குரவனையெள்ளுந்தீமையின்மிக்கப்புறங்கூறக்
கருதுதல்பாவமற்றதுதன்னிற்களைகண்ணும்
பரமனையில்லென்றேதுதல்பாவமெனவெண்ணி
யொருவருமீசன்சேவடியெண்ணல்வழக்காமால். (௭)

வடித்தசெழும்பொருணன்மறைதேருமறையோரின்
விடைக்கொடிவேதியனன்பனைநாளும்வெகுண்டோர்க
ளுடுப்புமுகத்தன்கூன்கொழுவானிலுழுகின்றோர்
கிடைப்பரிதாகியதங்குலமேன்மைகெடுத்தோரே. (௮)

தம்மினிழிந்தகுலத்தினின்வேட்டவர்தக்கோரா
மெய்ம்மையினோரைவிடுத்துவெளிற்றறிவுள்ளோரை
யம்மவெனத்தனிமெச்சியளித்தவரயலார்தஞ்
செம்மயிரூரமணந்தவர்நன்னெறிசேராரே. (௯)

பின்னவராணைசெலுத்தியநாட்டிடைப்பேய்பூத
மின்னல்செய்நோய்கள்வருத்தியநாட்டினில்யாதேனு
நன்னெறியின்றியநாட்டினின்முத்தியிலதென்னும்
புன்னெறியோருறைநாட்டினில்வைகுதல்புன்மைத்தே. (௧0)

இமயநெடுங்கிரிவிந்தியவெற்பினதிடமேவுங்
கமைகொள்பெரும்புவிபுண்ணியபூமிகவித்தோங்கு
மிமிழ்திரைநன்கடலெய்தியநன்னதியிரலைப்போத்
தமைவுறுநன்னிலம்விட்டயலேகுதலாகாதே. (கக)

புண்ணியநன்னதியின்கரைவைகுனர்பொற்போடு
மண்ணியதாயுமகன்றுமுறைந்திடலாகாதா
லெண்ணிமுனிந்தவர்தம்மைமுனிந்திடலியல்பாகுந்
தண்ணளியுற்றவர்தம்மைமுனிந்திடறவருமால். (கஉ)

வடுகரிழிந்தகுலத்தினர்புற்கசர்மயிர்கொல்வோர்
படுகொலைசெய்குனர்பதிதர்களித்தவர்கருணைட்
ருடனொருபந்தியிலுண்டிடலோர்மனையிடைவைகல்
நடைபயினூல்கள்பயின்றிடனட்புறனவையாமால். (கங)

ஈங்கிவரோருழையெய்திடின்வார்புனலெரிசாம்ப
ரோங்குயர்தூணுடைவாயிலிடைப்படவுறைகுற்றேற்
பாங்கவரோடுறைபாவமகன்றிடுமயலார்தந்
தீங்குறுவெம்பழிகுறளைபகர்ந்திடறீதாமால். (கச)

வேறொருவன்கழனிப்பயிரானினமெய்குற்றார்
சீறியவர்க்குரைசெய்தறிகைப்புடைநோயாள
ரூறுறவைகுதல்பூப்புறுமாதரொடுரையாட
லாறறிவோர்பெறலீதல்விலக்குதலாகாதே. (கரு)

இந்திரவிற்பரிவேடமழன்றெழுமீமத்தீ
யந்தில்பிறர்க்கெதிர்சுட்டியுரைத்திடலறிவன்றால்
மைந்துறுபலசனமுள்ளவர்தம்மொடுமொருகா
சிந்தையுவந்துதனைப்புகழ்கின்றதுதீதாமால். (கசு)

மாதவரைக்குரவன்றனைமேதகுவானோரை
வேதியரைச்சதுமாமறையைப்புகன்மெய்ந்நூலை
யேதமுரைத்தவரிம்மையின்வெந்துயரிடைமூழ்கிப்
பாதகருற்றிடுபாழ்நரகத்திடைபடிவாரால். (கஎ)

சொல்லவொணாதெனநூல்களுரைத்தவைசொல்லற்க
புல்லியவுட்பகைகொள்ளுதனன்மைபொருந்தாதா
லல்லல்புரிந்தவன்வெம்பழிசொல்லுதலாகாதா
னல்லவரைப்படுபாவியெனச்சொனன்றன்றே. (கஅ)

ஆடியினீரினுதித்தெழுமேல்வையிலத்தத்திற்
கூடுறுகாலையில்வெய்யவராவெதிர்கொள்போதின்
மூடிமுகத்தினைநுண்டுகிலால்முழுமதிதன்னைச்
சேடமைவெங்கதிரைத்தனிநோக்குதறீதாமால் (ககூ)

வெண்டுகின்றியலர் துறைதுறைமெய்யூனங்
கொண்டவர் [illegible]
தண்டவிறங்குதல் [illegible] மேன்மைதனைநதோரைக்
கண்டிடப்பீதெனவுதறிவாளர்களாந்தாரால். (உ0)

எண்ணெயினீரிடைதன்னிழலைக்குதவில்வாழ்வா
ளுண்ணல்புரிந்தெதிர்நோக்குதலுமிச்சிலோடுணையாட்
னன்னுறுபேயர்பிணிபபுறுமாவின்முன்னுண்ணல்
புண்ணியநன்மனையாளொடருந்தலபொருந்தாவால். (உக)

பின்னவருக்குயர்ஞானமுரைத்திடல்பெடபோடு
மன்னம்வழங்கலகருங்கலையீருரியான்பாலநெய
கன்னனறுஞ்சுவைதேனுறுவெண்டயிரகமொள்ளோ
டின்னவைமாமறையாளரளிக்குதலேலலாதே. (உஉ)

வேறு.

வெகுளுநரோடு மாற்றிடைச்செல்லின் வெந்துயருறுவர் தாமளித்தமகவினைவிஞைசைகற்பதற்காகவருத்துதல்வேண்டுறு ங்கீழைத், தகுதியார்சேவைபுரிகுதலாகாமுனிவிறற்பொருள் கொளறகாதாற், றுருகுமனைக்கிழத்தி குணத்தினைப்பிறர்க்குச் சொல்லுநர்தோமுறுமவரோ. (உங)

தன்பழியுரைத்தல்குறங்கின்வைத்தன்ன மருந்துதறன்னு யிரமெலித்தல், வன்புடைநகத்தாற் புவியினைக்கீறல் வருநதியி டைநதிதொட்ட, லென்பெழவருமைப்பசியினொந்திடினுமேற் றவர்க்களித்திடாதருந்தல், புன்புலானுகாதல்புனைதுகிலின்றிப் புனலிடையிறங்குதலாகா. (உச)

தீயினைக்கடத்தல்சென்னியின்வரக்கிமிருந்தநல்லெண்ணெ ய்மெய்தேய்த்தல், பாயபையரவமாடடுதல்பிடித்தல்பஞ்சவிங் கியங்களுந்தொடுத்த, லாயுமந்திரத்தைப்பிறரொடுமுரைத்தல றுதினம்விழைவினேற்றருந்த, லேயவெவ்விடனுங்கிரிகுதலெ லையுமுரைக்குதலெலவைகளுமருந்தல். (உரு)

அளவறவருந்தலெல் [illegible] டாதென்றுமன்னலார்முலைநலநு கர்தல், கிளைநரமபுள் [illegible] சையமிர்தநகேட்பதையன்றிமெழு ஞ்ஞானம், வளர்செய் [illegible] ரகடேட்டிடாதொழிதல்வருபுனல் காலினுழக்கல், தளாவுறுமிலேசசர்பாடைகள்கற்றறவொண வுரைப்பர்கற்றுணர்ந்தோர். (உசு)

இருந்தவாசனத்தைக்காலினுதைத்தல்காரணமின்றியே யுடலைப், பொருந்துறசேட்டையபுரிகுதல்வாளாபுன்னகைபுரி தல்வாளுகிரைத், திருநதுநீண்மயிரைப்பல்லினாற்கடித்தறீம்பு னனீந்தலபொய்யுரைத்த, லருந்துயிலெழுப்பலிளவெயிறகாய் தலழலிடையிருபதங்காச்சல். (உஎ)

காலினூற்றனதுகாலினைத்தேய்த்துக் கழுவுதல்பாழ்மனைத் துயிறல், மாலெலாடுந்தன்னின்மூத்தவடன்னை மருவுதலுண்கல த்துமிழ்தல்,சால்வுறுமீமப்புகையிடைநிற்றல்சலத்திடைமும்ம லம்விடுத்தல், கோலியவோடமொருவனுய்க்கடத்தல்குற்றமெ ன்றுரைப்பர்கற்றுணர்ந்தோர். (உஅ)

இடக்கையாலேனுந்துகிலினூற்றேய்த்துமிரும்புனலருந்து தலாகா, சுடர்த்தொடிமாதர்தங்களைப்புனலுட்டோய்தறீதுயர் ச்'துக்கத்தில், வடுப்படாதோங்குந்தருவினைக்குறைத்தன்மயிர்க ரியென்புவெண்சாம்பர், முடைத்தலைகூர்முட்புனலிடைச்சேர் த்தன்முறையலவென்பர்மூதுணர்ந்தோர். (உகூ)

தீயினையுந்திக்கிழுறத்தாங்கறீக்கெதிர்தனதுதாணீட்டல்,வா யினூதறீயொடுந்தீயைக்கூட்டனீர்வார்த்தஃதவித்தல், மேய வாடையினல்முறத்தினூற்கையால்வீசிமூட்டுதல்மனைவளர்க்கு, மேயமுத்தீயுங்கருமகாலத்தினன்றியேதொடுத்தறீதென்பார்.()

தன்றமரிழித்தமுன்பிறர்க்குரைத்தறவுமிலான்றனைத்தவறு ரைத்தல், மன்றவேமொருவன்றனையவனுட்டல் களைகணீயென் னவந்தடைந்தோர்க், கொன்றியதுயரமியற்றுதல்பறவைவிலங் கினமொன்றொடொன்றிகலிப், பொன்றிடவிடுத்தல்பிறர்மனை நயத்தல்பொறிவழியொழுகுதலாகா. (கூக)

உரைநனிபகர்ந்துநகைத்துநின்றுலவியுண்குதல்புனலிடை ஞாளா, மருவியேகிடத்தல்மகவினைக்குரிய ரல்லரைமகம்புரிவி த்த, லிருளிடையேனுந்தமியனுயேனுந்தொடுகழலின்றியும்வே டர், தருமமொன்றறியார்தம்மொடுநெறியிற் போதனற்றரும மன்றுமால். (கூஉ)

அந்தணர்கிழலைச்சினகரத்தோங்குமவிரொளிச்சிகரநன்னி ழலை, நிந்தையிற்கடத்தல்யோகியையதியை நிகரறுமுனிவரை யிகழ்தல், வெந்தொழிகரியிற்சாம்பரின்மயிரின் மிதித்திடல்வி ளங்கியதூளி, வந்துமேலடையநிற்றல்தோய்துகில்நீர்மேற்படி வதிந்திடறீதாம். (கூகூ)

நிறைகுடப்புனலையெடுத்துநீராட்னீத்தவைகுடித்திட்லருந்த லுறுபிணியாளனிழிந்தவனிவரோடுயர்மரநீழலினிருத்த [ன் லறைபுனனிறைத்த கமண்டலங்கையி னின்றியேயருநெறியேக முறையலவென்றுமனுமுதலாயமூதறிவாளர்கட்டுரைத்தார்.()

பொதுவிதியுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கூசகூ,

பதினேழாவது

## அல்லவையொழித்தலுரைத்தவத்தியாயம்.

பின்னவர்மறுமையில்லெனுஞ்சிதடர் கள்ளுநர்பித்தர்மட்
பகைஞர், கன்னலிற்கனிந்ததேமொழியரங்கக்கூத்தியர்கடவுளை
யிகழ்வோர், மன்னியசோமனன்கொடிபகர்வோர்மருந்துவர்ம
களிர்சொற்கேட்போ, ரின்னர்பாற்செந்நெலரிசியேற்றுண்ட
லிழிதகவெனமறையியம்பும். (க)

ஆண்குறியொழிந்தோர்வேத்திரக்கரத்தரொதிகள்வாளாவ
ழுகின்றோர், மாண்பிகந்தறத்தின்வழியினோரழிந்தோர்யாவரு
மிகழவாழ்கின்றோர், நாண்கெடவரையாதருந்துநர்மறையோ
ர்நன்குலத்துதித்தும்வாட்டொழிலாற், காண்டகவுய்யுந்திருவி
லியிவர்பாலேற்றிடல்கழிமடனாமால். (உ)

அந்தணர்சிறந்த கடவுளர்போந்த வந்தியர்க்களித்திடார
டிசில், சிந்தையில்வெகுண்டுபரிவிலாதளிப்போரடிசில்வெஞ்
சினப்படைபகர்வோர், தந்தருளடிசில்மாமனன்களிக்குமடிசி
ல்தங்குரவனல்லடிசில், வெந்துயர்விளைக்கும்பசியினாலருந்தல்
வெவ்வினைத்துயரடைந்திடுமால். (ங)

தன்னொடும்பைங்கூழ்விளைக்குநராயர்தன்னுடையடியர்நா
விதர்கள், முன்னரோதொன்றுதொட்டுநல்லன்பினொழுகுவோ
ர்களைகணாய்முழுது, மின்னருள்புரிகென்றிரந்துவந்தடைந்தோ
ர்தன்பயிரிடுகுநரளித்த, மன்னியபைங்கூழிடுக்கண்வந்தெய்தி
ன்வாங்கினுமாமெனவுரைத்தார். (ச)

வெண்டயிர்நெய்பாலெண்ணெயெண்ணெயினால்வெந்தவை
விரவுபிண்ணாக்குக், கொண்டவல்பொரிமாப்பின்னவரரிக்கிற
கோடலுமாகும்வெள்ளுள்ளி, தண்டலில்கரியசெய்யவாமுள்ளி
தவிர்ந்திடும்பிசின்பழையனக, ளுண்டிடலாகாமுட்டைநீள்சு
ரைக்காயொழித்திடனன்கெனவுரைத்தார். (ரு)

பாலுடன்கலந்தமோர்மிகுவெண்ணெய் பற்றறப்பிழிந்தபி
ண்ணாக்குச், சால்வுறுமுள்ளமயக்குறுமவைகள் கங்குலில்வெ
ண்டயிரொண்ணெய், யோலிடுவிலங்குகொன்றுவிற்றருந்தலூன்
றினல்கழிமயிர்புழுவோ, டேல்வுறுமன்னம் பூத்தவடொட்ட்
சோறிவையருந்துதறீதாம். (சா)

வள்ளுகிர்ஞமலியானினங்கோழிமானுடர்காக்கைமோந்த
னகள், கொள்ளுதலாகாமறித்துமட்டனகள்கும்பினாகுட்டநோ
யாள, ரொள்ளுறவிழிந்தோர்தொட்டவையாகாவொட்டகமாடி
வற்றுறுபால், துள்ளுகன்றின்றிக்கைவலங்கறந்தபாலிவைதுய்
த்திடல்லாகா. (எ)

ஈன்றநாட்பத்திற்கறந்தபால்கன்றுகொளுத்தியபாலிவையா
கா,தோன்றியவன்றில்பைங்கிளியெருவைதோலடிப்புள்ளுநாய்
கோழி, வான்றிரிகாக்கையுன்றியேமுதலாமண்புனல்விசும்பினு
ள்ளவையி, னூன்றினவுள்ளங்குறிப்பினுநரகத்துலப்பினுள்கிட
ந்தழுந்துவரால். (௮)

குறுமுயலுடும்போடாமைமுட்பன்றி யழுங்கிவைகொண்
டருந்தினுமாம், நறியமீன்புள்ளிமானிவையதிதிக்களித்தபினய
த்தலுமாகு, முறுபிணியாளர்மருந்தெனப்புலவூனுண்கினுமாம
கமுதலா, யறைதருகருமத்தருந்திடவிதித்த புலாலருந்தார்நர
கடைவார். (௯)

கள்விலைபகர்வோர்கள்ளினைநுகர்ந்தோர்கள்ளருந்துதற்கு
டன்படுவோர், கள்ளருந்தினைமகிழுநர்நரகிற் கற்பகாலங்கி
டந்தழுந்தி, யெள்ளுறுந்தீயமலப்புழுவாகிமலததினைநுகர்ந்து
பின்னிறந்து, விள்ளருங்கொடியரவுரவநரகின்மீட்டுமீட்டுழன்
றுநாள்கழிப்பார். (௧0)

சொல்லியவேள்வி முதலியகருமத் தருந்துதலன்றியூன்சு
வையா, தொல்லையின்விடுநர்தினந்தொறுமிவ்வுளி மகம்புரிபலத்
தினையுறுவா, ரல்லலுற்றழுங்கவுயிர்த்தொகையனைத்துமருள்பு
றங்கொடுத்திடநசையாற், கொல்லுநர்தாமேதமதுமெய்த்தசை
தின்றருநரகிடைக்குடியிருப்பார். (௧௧)

அல்லவையொழித்தலுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௩௯0.

---

பதினெட்டாவது

## நித்தியகன்மமுரைத்த வத்தியாயம்.

முட்டாளரத்தச்செழுஞ்சூட்டுக்கோழிகூவுமுனந்துயில்தீர்ந்
தொட்டார்புரமூன்றெரித்தோன்றாள்தருமந்தியுவந்தெண்ணி
மட்டார்சோலைவிளிம்புடுத்தவருபேராற்றங்கரைநண்ணிச்
சிட்டாமலநீக்குழியுரைத்ததருமமியாவுஞ்செய்தியற்றி. (௧)

வருபால்மரத்தின்முண்மரத்தின்வகுத்தநடுவிரற்பருமத்
துரைசெயீராறங்குலத்தில்வடுவில்சினையினொடித்துரைத்த
பொருவினுளிற்பற்கறைகளெறிந்தகொம்பைப்புனறோய்த்து
விரியுக்கீறுதெறிந்திடுகவிரலால்விளக்கறீதென்பார். (௨)

புனிதமாகத்தெண்ணீரின்மூழ்கவதுவும்புரைதீர்ந்த
மனுவாதியரோரெழுவகையாய்வகுத்தார்வகுத்தபடியுரைப்பி
னினியதருப்பைநீர்தோய்த்திட்டிலங்குமேனிதைவருதல்
முனிவர்பிரமதீர்த்தமெனவிதனையெடுத்துமொழிகுவரால். * ()

பால்வெண்ணீற்றின்மெய்முழுதுமாட்டலுயர்பாவகதீர்த்தஞ்
சாலப்பசுவின்காற்றூளியாடல்தனிமாருததீர்த்த
நீலமுகில்வெங்கதிரொழிக்குங்காலைபெய்யுநீராடல்
நூலோருயர்திவ்வியதீர்த்தமென்னமுன்னநுவன்றனரால். (௪)

தெண்ணீர்படிந்துதுளைந்தாடல்சிறப்பினுயர்வாருணதீர்த்த
முன்னீர்மையின்மெஞ்ஞானத்தீமூழ்கலுயர்மானததீர்த்த
மண்ணைல்யோகந்தனிலிருத்தலழிவிலான்மதீர்த்தமென
வெண்ணுமிவற்றினுடலினுக்காங்கியன்றதீர்த்தமாகுகவே. (௫)

தேவர்முனிவர்தென்புலத்தோர்க்கினிதினூட்டியாசமன
மேவவியற்றித்தெண்ணீரின்மீட்டும்படிந்துதருப்பைநுனித்
தாவுபுனன்மந்திரத்தால்மெய்தெளித்துச்சந்திவந்தனைசெய்
தோவில்காயத்திரிசெவியாவுபத்தானத்தின்றொழில்முடிக்க. ()

உள்ளத்திருளும்புறத்திருளு மொழிக்குங்கதிராய்ச்சஞ்தனமா
தள்ளற்கரியசோதியாயசலமாகித்தனியமிர்தாய்ப் [ய்
பிள்ளைப்பிறைசேர்முடியோனுய்க்குடிலையாகிப்பிரமமாய்த்
தெள்ளுமறைதேர்புருடனுஞ்செங்கேழ்ப்பருதிதாடொழுவாம்

மதுகையுருவாய்க்கபர்த்தியாய்வயங்கும்விச்சுவேசுரனுய்
முதிருமறையாய்நித்தியனுய்முக்கட்சுடராய்ப்பினுகியாய்
விதியாய்நீலகண்டனுய்க்கண்ணுயிரங்கொள்மெய்ப்பொருளாய்
பதுமமலரின்முகையவிழ்க்கும்பர்ச்சன்பாதம்பணிந்திடுவாம்.()

அழிவில்பாவநாசனுய்ப்பரமேசுரனுயனைத்துயிரா
யொழிவில்பரமசோதியாயுயிர்கட்கெல்லாமுள்ளுயிராய்த்
தழுவுமுலகாயுலகினுக்குப்பதியாய்த்தையல்பங்கினனுய் [வாம்
விழைவினைவையுந்தனிநுகரும் விண்ணேன்செய்யதாடொழு

என்றுவேதன்மறையனைத்துந்தெளித்துப்புகலாதவவிதியை
யொன்றுமுளத்தோடைம்பானுருவேற்றிடின்மேலெய்துகுட்
துன்றுமுயனேய்முதலாயநோய்களகற்றுந்துயர்நீங்கும் [டக்
வென்றியரசர்பூதத்தாம்கோளாற்றுன்பமேவாவால். (௧0)

இனையநியமத்தொழின்முடித்துமனையினெய்தியாசமனம்
புனிதநெறியிற்றனியியற்றிப்பொங்குதழற்காரியமுடித்து
வனைபொற்கொன்றைமுடியோனைத்திருமாறன்னைவழிபட்டு
நினைதற்கரிதாமருங்கேள்விக்குரவர்பாதநினைந்தேத்தி. (௧௧)

அரியசெழுமாமறையோதி யன்பினடைந்தோர்க்கோதிவித்துத்
தருமநூல்கள்பலதேர்ந்துபொருளீட்டுதற்காய்த்தாவருஞ்சீர்
நிருபர்கோயில்மருங்கெய்திநிகழ்த்துமாசிபலகூறி
மருவுமில்வாழ்வினுக்குரியபொருள்கண்மதியினுலீட்டி. (௧௨)

வெய்யகதிர்கானன்பகலிற்றருப்பையெட்கோமயம்விரைதேன்
பெய்யுமலர்மண்ணரிசிகையிற் கொடுபோய்ப்பெருகுநதிக்கரை
னெய்திமண்கோமயமெய்யினிணிதிற்பூசிமறையோதி [யி
யையபுனலிற்படிந்தாடியாசமனத்தின்றொழில்முடித்தே. (கங)

தேவர்முனிவர்தென்புலத்தோ ருவப்பச்சிறந்ததற்பணஞ்செய்
தோவாதுச்சிக்கடன்கழிப்பினொளிர்கண்டிகைநன்படிகமணி
தாவிறண்டாமரைமணிகைதாங்கித்தோய்ந்ததுகிலென்னில்
மேவுபுனலுட்புலர்ந்ததுகிலென்னிற்கனாயின்மிசைசபிக்க. கச

உச்சிக்கடவகடன்கழிப்பின்மனையினெய்தியுயர்கொன்றைச்
செச்சைக்கண்ணியந்தணன்றுளேத்திப்பஞ்சாக்கரஞ்சபியா
விச்சையோடுந்தியானித்துப்பஞ்சப்பிரமயினிதேத்திப்
பச்சைப்பரியேழுடைத்தேரோற்பழிச்சியெச்சமைந்தாற்றி. ()

மறுகிநின்றோர்பசுக்கறக்குமமைதியதிதிவானோக்கிக், குறுகும
திதிதனையெதிர்ந்துபூசையாற்றிக்கொடிபதித, ருறுநோயாளரி
ழிகுலத்தோர்க் கடிசில்தரையினிடையுய்த்தாங், கறையும்படி
தென்புலத்தோர்க்காய்மறையோனொருவற்கமுதூட்டி. (கசு)

அருந்தக்கவளமொன்றிடுதல்பிச்சையதினான்கினிதளித்தல்
பொருந்தியிடுமக்கிரமாகும்புகலுமவைநான்மடங்களித்தல்
திருந்துமந்தகாரமென்பவிவற்றிலியன்றதினந்தோறும்
வருந்தின்றுகத்துறந்தோர்க்குமேற்றோரொவர்க்கும்வழங்கிடுக.

ஏற்போரின்றேற்பசுவின்முனமிடுகப்பஞ்சமாவெச்ச [ர்
மாற்றல்செய்யாதருந்துகின்றோர்விலங்குபறவையாய்ப்பிறப்பா
போற்றவுரியகடவுளைப்போற்றாதருந்தும்பொறியில்லோர்
மாற்றவருந்தீவினைப்பயத்தாற்பன்றியாகிமலநுகர்வார். (கஅ)

கிழ்பானோக்கியினிதுண்டோர்க்காயுள்நிறையுங்கிளர்நிதியந்
தாழ்வின்றுயருங்குடதிசையேநோக்கியருந்திற்றணப்பருஞ்சீ
ரூழிற்பெருகுந்தென்றிசையைநோக்கியருந்திலொருகாலும்
வாழிமாந்தர்வடதிசையைநோக்கியருந்தல்மாண்பன்றே. (ககூ)

வேறு.

காழ்பழுத்துமணங்கமழும் பொரியயாயநறுஞ்சாந்தக்கல
வைபூசி, யூழினருந்துதற்கிசைத்ததிசைநோக்கிப்புனிதமாயுண்
ணல்வேண்டுஞ், சூழ்சுடரோனத்தவரைத்தோய்பொழுதுமுத
யத்துந்துய்த்தலாகா, வேழ்பரித்தேர்க்கதிரவனே யராத்தீண்டு
முனமருந்தலியல்பதன்றே. (உ0)

திங்களினைப்புவிநிழலோடராத்தீண்டுமுனமருந்தறீதாமற்
றைக், கங்குலிற்பானுள்கழியத்தீண்டியகலினுமருந்தறீதுகாமர்,

வெங்கதிர்வெண்மதியரவோ டத்தமிக்கில்மீட்டுமவை யுதித்தாலன்றித், துங்கமறைநூலுணர்ந்தோரருந்துதறீதெனவெடுத்துச்சொன்னாரன்றே. (௨௧)

விருந்தினர்க்குங்கடவுளர்க்குமதிதிகட்குமல்லாமல்விரும்பித்தாமே, யருந்துதற்கென்றுக்குநருமகவிழைவினன்றியின்பமருந்துவோருந், திருந்தமுதுக்குறைவெய்தக்கற்பதன்றித்திருவெய்தக்கற்கின்றோரும், பொருந்தவரிதாயமக்கட்பதடியெனக்கற்றுணர்ந்தோர்புகல்வரன்றே. (௨௨)

சென்னிதனிற்றுகில்வனைந்து மிருதாளிற்செருப்பணிந்துஞ்சிரித்துநின்று, மன்னும்வடதிசைபார்த்துந்தலைசொரிந்துநனைந்ததுகில்வனைந்தும்வன்பின், முன்னமயின்றனகள்ராப்போதத்துமுடைகலத்துமொழிந்துஞ்சாய்ந்துந்,தன்னவிருகைகொண்டுமூர்தியின்மீதிருந்துமுணல்தருமமன்றே. (௨௩)

ஓடிதருமாசனத்திருந்தும்வழிதுநிலத்திருந்துமிச்சிலுடையோனுயு, மடுவனகளனைத்தினையுமுத்தரியமின்றியுநல்லன்பூண்ட, மடவியர்தம்மொடுங்கரிமேல் வைத்துமுச்சிப்போதினுமேல்வளர்ந்தகங்கு, லிடையிருள்யாமத்துமுணல்தீதென்னநீதிநூலியம்புமன்றே. (௨௪)

இவ்வண்ணமருந்துகவென் றுரைத்தமுறைவிருந்தினொடுமினிதினுண்டு, மைவண்ணக்களத்தெந்தை யிதிகாசபுராணமிவைமகிழ்ந்துகேட்டுச், செவ்வண்ணமருண்மாலைப்போதினுநற்கடன்கழிப்பித்திகழ்மின்றேன்று, மவ்வளவுதனியிருந்தாங்கரும்பேற்றகாய்த்திரியையமைவினோதி. (௨௫)

கங்குலிடைவிருந்தினொடுமதியொடுங்கிளையினொடுங்களிப்பினுண்டு, செங்கமலவிதழ்பொருவுகைகாலினீரங்கள்புலர்த்தித்தேங்கோள், மங்குனிகர்கருங்கூந்தல்வாள்மருட்டுமோட்ரிக்கண்மதர்த்துவீங்குந், துங்கமுலைமனைவியொடு மெல்லணையினின்பமுறத்துயிறல்வேண்டும். (௨௬)

வடபுலத்துங்குடக்கினுமென் றலைவைத்துத்துயின்றிடல்தீதாகுமாண்பி,னெடிதருமஞ்சத்திடையுஞ்சினகரத்துமுறைந்திடுமாசனத்துஞ்செம்பொற், குடமனையகொம்மைமுலைமடவியாைக்குடங்கையுறத்தழுவிக்கொண்டு, விடலருமன்பிற்றுயிலறீதென்னவருமறைகள்விளம்புமன்றே. (௨௭)

நித்தியகன்மமுறைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௩௮௭.

## பத்தொன்பதாவது
## சிராத்தமுறைத்த அத்தியாயம்.

தேய்பிறையிற்பதினான்காம்பக்கமொழியக்கழுஞ்சலரஞ்சிறந்தவாகு, நேயமுடன்றென்புலத்தோர்க்கூட்டிநிறக்கமவர்சிறிகழுந்துகின்ற, தூயதிதிகளிற்றூய்தாமயனத்திலராக்கூட்டைத்திண்டிநாளி, லாயுமாதப்பிறப்பிற்பிறந்தகாட்டவிலிறந்தோர்க்களித்தல்வேண்டும். (௧)

அட்டகையிலிருபத்தேழெனவுறையுநாட்களிற்றென்புலத்தோர்க்கூட்டல், சிட்டர்விழுமியதென்பர்குறுமுயலின்றசையாமைத்தசைகடிதில், கட்கமிருகத்தினறுந்தசைகிழட்டாட்டின்றசைகள்களைங்குந்தெண்ணீ, ருட்டிரியுமுலோகிதமீன்றசைகளினிற்றென்புலத்தோர்க்கூட்டலாமால். (௨)

காரையிலையுளுந்துபழங்காய்கிழங்குகுளச்செந்நெற்கன்னற்கட்டி, சீர்கெழுமெண்ணெற்பொரிகோதும்பையவையிவம்பயறுசெந்நெலான்பா, லார்வமொடுமிவைகளினூற் கங்கைபிரயாகைமுதலாயதூய, வேர்கெழுபுண்ணியதலத்திற்றென்புலத்தோர்க்கினிதூட்டலினல்பாமென்பார். (௩)

புரவிநாளூட்டில்வயப்புரவியெய்தும்பரணிதனிற்பொங்குமாயுள், மருவுகார்த்திகைதன்னிற்றுறக்கமுறுமுரோணிதனிலமைந்தனுண்டா, மிருகசீரந்தன்னிற் காந்தியுண்டாமாதிரையில்விசயமெய்துந், திருவமரும்புனர்தத்திலூட்டினிரும்புவியனைத்துஞ்சேருமன்றே. (௪)

பூசநாளினிலூட்டிற்பொருவரியமதர்நெடுங்கண்மகளிர்சேர்வா, மாசிலாயிலியத்திற்காமமுண்டாமகத்தினிலுதியமுண்டாகுந், தேசுறுபூரத்தில்வித்தை சேருமுயருத்திரத்திற் பாவந்தீரு, மோசைபெறுமத்தத்தில குலமுண்டாந்தென்புலத்தோர்க்கூட்டினோர்க்கே. (௫)

சித்திரையில்மகவுண்டாஞ்சோதியிலூதியஞ்சேரும் விசாகந்தன்னி, லுத்தமமுண்டாமனுடத்திற்கிளையுண்டாங்கேட்டையினிலவணியெய்தும், வித்தகமார்மூலத்தில் விளைபயிர்மெய்வலியுண்டாம்வியன்பூராடத், துத்தமமாஞ்சித்தியுண்டாந்தென்புலத்தோர்க்கினிதாகவூட்டினோர்க்கே. (௬)

உத்திராடந்தன்னிற்காமமுண்டாமோணத்திற்றலைமையெய்துஞ், சத்திபெறுமவிட்டத்தின் விழைந்ததுறுஞ்சதயத்தின் வலியுண்டாகு, மெய்த்தகுபூரட்டாதியில்வெள்ளியுறுமுத்திரட்டாதியில்வீடெய்துஞ், சித்திபெறுமிரேவதியிலாயுளுண்டாந்தென்புலத்தோர்க்கூட்டினோர்க்கே. (௭)

நந்தையிற்புத்திரலாபந்துதிகையிற்கன்னிகைமூன்றாந்திதியினன்கி, ஹுந்துபரியுறுநான்காந்திதியிலானுற்றிடும்பஞ்சமியினுங்கு, மைந்தனுண்டாமோராறும் பக்கத்தில்வாதுவெல்லுமேழாம்பக்கத்,தந்தமில்பைங்கூழுளவாமன்பினொடுந்தென்புலத்தோர்க்கருத்தினோர்க்கே. (அ)

அட்டமியூதியங்கிடைக்குநவமியினிலொருகுளம்பா மனைத்துமெய்து, மிட்டமுறுந்தசமிதனிலிருகுளம்பாமவையெய்துமரிவாரத்தி, லுட்டெளிவாம்வெள்ளியுறுந் துவாதசியிற்பொன்னுளவாம்பதின்மூன்றென்னச், சிட்டர்புகழுந்திதியிற்றென்புலத்தோர்க்கூட்டின்மிகசசிறப்புண்டாமால். (௯)

பொருந்துமியற்சதுர்த்தசியில்வாளமரினுயிர்திறந்துபோன்மினோர்க்கே,யருந்துறவூட்டிடநன்காமலலாமவிறந்தோர்க்கூடடுதலீதாரும், திருந்தியிடும்பதினைன்காம்பக்கத்திலிலனைத்தலைகளனைத்துஞ்சேரும், வருந்தியுளமகிழ்ந்திறந்தசெல்புலத்தோர்க்கினிதூட்டுமோண்பினோர்க்கே. (௧0)

வெங்கதிரோன்வாரத்திற்றென்புலத்தோர்க்கூட்டிடநோய்மேவாதாகும், திங்கள்வாரத்தூட்டிற்றிருவெய்துஞ்செவ்வாயில்விசயமுண்டாம், பொங்குபுதவாரத்திற்காமமுண்டாம்வியாழத்திற்பொருந்தும்விஞ்சை, சுங்கவாரத்தினிதி யுளவாகுஞ்சனிக்கூட்டிற்றன்னுமாயுள். (௧௧)

காலமிடமேற்கின்றோர் நஞ்செய்தவிறந்தோர்தங் கடன்களாற்றிற், சிலமிகவுடைத்தாகுங்கலைமதியைவாளரவுதீண்டினல்லாம், பால்படுகங்குலினிறந்தோர்க்கூட்டல்தகாதரும்புதல்வர்பரிவினீன்ற, வேலையினுந்தென்புலத்தோர்க்கூட்டுதலன்கென மறைகள்விளம்புமன்றே. (௧௨)

வெண்ணீறுபூத்தசெழும்பூசுணிக்காய்வழுதுணைங்காய்சுரைக்காய்மிக்க, பெண்ணைநறுங்கனியவரைக்காய்கோவைவரகரிசிபேழ்வாய்மேதி, நண்ணியபால்தயிரொடுதிப்பிலியிவைகடென்புலத்தோர்தமக்குநாளுந், தண்ணளியாயினிதூட்டலாகாதென்றருமறைகள்சாற்றுமன்றே. (௧௩)

தென்புலத்தோர்க்கூட்டினரோ விடைவொனமறைகள்தெரித்தவாற்றா, லன்பினுடன்றென்புலத்தோர்க் கெல்லிருங்கடனாற்றியலைநீர்க்கங்கை, மின்பயிலும்புரிசடையவெண்ணீறுபூத்தொளிரும்பவளக்குன்றின்,பொன்புனையுஞ்சேவடியேபுகலாகவடைந்தின்பம்பொருந்துவீரோ. (௧௪)

சிராத்தமுறைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம்---௪0௧.

---

## இருபதாவது
## சிரார்த்தபாத்திரமுரைத்தவத்தியாயம்.

குலத்தினிலொழுக்கின்ஞானக்கொள்கையினறிவின்மிக்க
நலத்தகுகேள்விதன்னிலுயர்ந்துளோர்தாமேநண்பாற்
சொலத்தகுஞ்சிரார்த்தந்தன்னில்வரித்திடுந்தூயோரல்லார்
விலக்கருங்கிளையரொக்கோத்திரரெனும்விடுக்கல்வேண்டும். (௧)

தத்துவமுணர்ந்தோனாகியோகியாய்த்தலைமைபூண்டோ
னுத்தமசிரார்த்தமுண்டற்குரைத்தவனவனெய்தானேல்
மெத்தகுவேதங்கற்றபிரமசாரிகளேவேண்டு
மத்தகையவரெய்தாரேலாற்றுமில்லறத்தோர்வேண்டும். (௨)

ஈங்கிவரடையாரென்னினீன்றவட்பயந்தோன்மாம
னுங்குடனுதித்தான்மைந்தன்மகன்மகன்குரவனன்பி
னோங்கியவிருத்தியுக்களுயர்மகம்புரிவித்தோர்கள்
தீங்கறுசிரார்த்தநன்கினுண்டிடுந்திறத்தினோரே. (௩)

தோழனைச்சிரார்த்தத்தூட்டல்தொன்னெறிவழியதாகுந்
தாழ்கொடும்பகைஞர்க்கூட்டல்தகாமறைகல்லாற்கூட்டிற்
பாழிவாய்த்தறுகட்காலபடர்தருசிவையின்மாட்டிக்
காழிரும்பொழுகக்காய்ச்சிவாயிடைக்கவிழ்ப்பரன்றே. (௪)

தன்னொழுக்கிழந்தோன்மூன்றுதலைமுறைவேதமோதாப்
பின்னவரனையோர்மற்றைப்பின்னவர்க்கேவல்செய்யும்
பன்னருமறையோர்கொண்டபார்ப்பனியுயிர்க்குமுன்னஞ்
சொன்னவேளாளர்மாதர்த்தோய்ந்தருமகவையீன்றோர். (௫)

வாட்படைபயிற்றிவிப்போர்மன்னவர்குரவரன்பா
லூட்படக்கிராமங்கட்குப்புரோகிதநயந்துசெய்வோ
ராட்படத்தண்டஞ்செய்வோராகியவிவர்கடம்மைக்
கோட்படுசிரார்த்தத்துண்ணக்கூட்டிடறகைமையன்றே. (௬)

பஞ்சராத்திரங்காபாலம்படித்துளோர்பயிலுங்கான
விஞ்சைகற்றவரொருத்தன்வேட்டவடன்னைவேட்டு
மஞ்சனைப்பெற்றோன்முன்னூல்மார்பினில்வனையான்றன்னைச்
செஞ்சயேயோதிவித்தோன்சிரார்த்தமுண்டிடுதற்காகா. (௭)

சொல்லுமாசிரமமொன்றிலிராதவர்தூயோர்போல, வல்லிதி
னவேடம்பூண்டோர்பிணரொடுமருவுமெய்யர், பல்லுகிர்கேட்
டோர்குட்டநோயராண்குறியிற்பண்பார், புல்லுதோல்குறை
த[illegible]ணர்போர்பொய்மைசொல்வோர். (௮)

பூசுதவடன்னைவெட்டோன்வெந்தனையொறுத்தோன்போற்றி
யார்த்தநல்விடுசுட்டோன்குழிசியோடினிதிலுண்டோன்
மூத்தவன்வேட்குமுன்னம்வேட்டவன்முழுநோயாள [ன்.
னீத்திடுமொற்றைக்கண்ண னிகழ்ந்துபஞ்சாங்கஞ் சொல்வோ

ஞண்டநல்விரதம்விட்டோன்புரைபடவுறுப்பிலாதோன்
வேண்டியவங்கந்தன்னில்மிகுந்தவன்கைமையின்றோன்
மாண்டகுசிறப்பிற்றீர்ந்தகுண்டகன்குறளையார்க்குந்
தூண்டியசொல்வோன்மாதர்சொல்லியமொழியினிற்போன். ( )

தந்தைதாய்குரவனில்லாள்பசித்திடத்தானேயுண்போன்
மைந்தனில்லநதான்பொய்ச்சான்றுரைப்பவன்மடையனென்று
முந்துநீர்க்கடலுட்செல்வோன்செய்நன்றிகொன்றோனேது
நந்தவில்விதிதட்டுநன்மனைகோலுகின்றோன். (௧௧)

போற்றியசமயநூல்களந்தணர்தெய்வம்போற்றான்
வேற்றவன்மனையாடன்னைவிழைபவனிவர்கள்யாருந்
சாற்றியபதிதரின்னோர்தம்முடன்பந்தியாகா
வேற்றிருந்துண்ணலாகாசிரார்த்தவூணிவர்கட்காகா. (௧௨)

சிரார்த்தபாத்திரமுறைத்தவத்தியாய முற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௪௪௩.

---

இருபத்தொன்றாவது

## தென்புலத்தோர்க்கூட்டுமுறைமையுரைத்தவத்தியாயம்

---

உரைத்ததென்புலத்தோர்தங்கட்கூட்டிடுமுன்னைநாளின்
வரித்திடவேண்டுந்தூயமறைபயில்முனிவர்தம்மை
நிரைத்திடும்பிதிர்க்கள்யாருநீதியந்தணரையூட்டிக்
தரைக்கண்வந்தவரோடுண்டுபலநனிதருவரன்றே. (௧)

வேறு.

ஒருவன்கணித்தோனயலோன்பாலுண்டறிதாஞ்சிரார்த்த
முண்டோன், மருவும்வழிசென்றிடல்புணர்தல்மறைகளோத
ல்முனிந்துரைத்தல், கருதுஞ்செபங்களினிதியற்றல்தீதாமென்
பர்கற்றுணர்ந்தோர், பொருவில்சிரார்த்தமிட்டோனுமிவ்வா
றியற்றல்புன்மைத்தே. (௨)

தனதுமனையில்வரைமுகட்டிற்றரங்கம்விரிக்குநதிக்கரையிற் [ற்
டணிவெண்டிங்கள்முதுகுரிஞ்சும் பைம்பொற்குடுமிசினகரத்தி
புனிதமாகுங்கோமயத்திற்பொற்பின்விளங்கமெழுக்கெறிவித்
தனையமறையோர்தமையினிதினன்பாலண்ணையாட்டுவித்தே

எண்ணெயாடிப்புகுமறையோர்தம்மையினிதினடிவணங்கி
வண்ணக்கலசத்தூநீராலன்னோர்வனசத்தாள்விளக்கி
நண்ணற்கரியவருக்கியமேமுதலாயாவுநன்கியற்றி
யண்ணல்மறைவிச்சுவதேவர்பிதிர்க்களிருக்குமிடையிருத்தி.

பொன்னங்கலன்கள்பலபரப்பிமுல்லைமுகையின்பொற்பமைங்
வன்னஞ்சொரிந்துகருணைகொட்டியமைவிற்பல்காற்கைகவிப்
கன்னற்கட்டிநறுநெய்வைபெய்தான்றீம்பாற்கடல்பெருக்கி
பன்னற்கரியபழக்குலைகள்பஞ்சதாரையொடும்பொழிந்தே.

இன்னவாறுதென்புலத்தோர்கருத்துமேல்வையமூதிரங்கல்
தன்னதுடலம்வெயர்வொழுகிற்றல்முனிதறகாதென்ப
ரன்னங்காலாற்றள்ளுதற்கையாற்கழிகளிடலாகா
முன்னம்வேற்றுப்பிடலாகாபறைவையோட்டல்முறையன்றே. (

இரும்பாலியன்றபாத்திரத்திலிடுதறீதுமட்கலத்திற்
பொருந்தவருத்திவித்தோர்கள்பொங்குமழல்வாய்நரகடைவ
விரிந்தபொன்னின்வாழ்மானின்கொம்பிலத்தியன்மரத்திற்
றிருந்தச்சமைத்தபாத்திரத்திலளித்தல்மிகவுஞ்சிறப்புடைத்தே

அயிலுமறையோரயில்வனகடூதுநன்றென்றறையிலவண்
பயிலும்பிதிர்க்களகன்றிடுவரதனாற்பகராதிருந்தருந்த
லியல்பதாகுமிறந்தோர்கட்கருத்துமெவையும்வரையாமாற்
றயையோடருந்தலன்காகும்வளாந்துறுகர்தறகாதென்பார். ௫

இறந்தோர்க்கூட்டுமேல்வைதனில்வேதம்புராணமிதிகாசஞ், சி
றந்தகருமநூலினிதிற்கேட்பித்திடுதல்சிறப்பாகு, மறங்கொண்
மறையோரினிதருந்திக்கைபூசிப்பினவிரொளிய, நிறங்கொள்ப
ணியாசனத்திருத்திநிகழ்ந்துஞ்செழும்பறகடையுதவி. (௬

அனையோருள்ளமகிழ்பூப்பவறுவையுயர்தக்கணையுதவி [ண்டிப்
வினைசெய்தென்னந்திசைநோக்கி யிறந்தோர்ப்பழிச்சிவரம்வே
புனிதமறையோர்தமக்குவிடைபுகன்றுவிரித்ததருப்பையினில்
லனையும்பிண்டமொருமூன்றுமறித்துமறித்துநிரைவைத்தே. ()

கரிசேர்தருப்பைமிசைதூவிக்கலையினூலின்மிடைசேர்த்தி
யுரியதெண்ணீர்மறித்தொழுக்கியுவந்துபிதிர்க்கடமையேத்தி
மருவுநடுவிற்பிண்டத்தையிளக்கிமனையாடனக்குதவி
யிருபிண்டமுமான்மறையோர்கட்களிக்கவன்றேற்புனலிடுக. ()

உரைத்தபடியின்னிலமுழுதும்புனிதமாக்கியொழுக்கநூல்
வரைத்தகூத்தாசமனஞ்செய்தியன்றவடிசில்மகிழ்விறொடு [ற்
நிரைத்தகிளைஞரேவல்செய்வோர் கருத்தினிகரில்மைந்தரொடு
விரைத்தாழ்கூந்தல்மனைவியொடும் வெவ்வேறாகவிருந்தருந்தி.

அற்றைக்கங்குறென்புலத்தோர்க்கருத்திரேனுமருந்தின்னுங்
கற்றைக்குழலார்கதிர்முலையிற்புல்லாதிருத்தல்கடனாகு
மற்றிங்கிவ்வாறொழுகாதுமடவார்முயக்கம்விரும்பினோர்
கொற்றமறலிமுனிவெய்யதக்கொடியநரகத்திடைகுளிப்பார். ()

இறந்தோர்க்கூட்டித்தன்மனையினுண்ணுதெரிவெம்பசியினும்
மறந்தும்வேறோர்மனையருந்தினழல்வாய்நரகினிடைவீழ்வ
னறஞ்சேரன்னமேலாவேலரிசியோனுமளித்திடுச்
சிறந்ததாகும்பின்னவர்க்காங்கரிசியதனாற்செய்கடனே. (௧௪)

வறுமையதனாற்புகல்றனகளோலாவென்னின்வளர்கனிகாய்
நறியமூலமெண்ணீராலெனினுமிறந்தோர்கடனல்க
வறையுந்தந்தையுள்ளோர்களாற்றொனுதாம்விடல்வேண்டி
லுறையுந்தந்தைமுதலாகமறையோர்க்கூட்டிலுரித்தாமால.௧௫

நல்லகருமஞ்செய்கின்றோர்நந்திமுகராம்பிதிர்கட்குச் [டுடு
சொல்லுஞ்சிராத்தஞ்செய்போழ்திற் றாய்தாமுன்னாவலமு
புல்லும்வடக்குநுனியாக்கிப்புகன்றோரொற்றைப்படாதியன்ற
மல்லல்மறையோரிரட்டைபடவைத்துத்தாய்க்குமுன்னூட்டி.

பின்னர்ப்பிதிர்கட்கினிதூட்டிப்பொட்டிமேனுடுமினிநின்ற
வன்னைதந்தைவருக்கத்துக்கமைவினூட்டவியல்பாகு
மின்னற்கருமமனைத்தினையுங்கிறுக்குமுகமாயினிதியற்ற
நன்னரோடுமிவ்வாறுபுரியாதொழுகலவையாமால். (௧௭)

தென்புலத்தோர்க்கூட்டுமுறைமையுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௪௮௦.

---

இருபத்திரண்டாவது

## சூதகாசௌசமுரைத்தவத்தியாயம்.

அருமறையோர்ஞாதிகட்குச்சூதகமோடாசௌசமறையுங்கா
லை, மருவுறுமேழ்தலைமுறைக்குமபத்துநாள்மருவியிடுமருவிற
ன்னுற், றிருமருவுபூசைமுதல்நல்வினைகளனைத்தினையுஞ்செய்த
றீதா, மொருவரையுந்தொடலாகாவோமமும்வேறொருவனைக்
கொண்டுஞற்றல்வேண்டும். (௧)

பெருந்தேவிபொறையுயிர்த்தசூதகத்திற்றாய்தந்தையன்றிப்
பெட்பிற், பொருந்தியிடுஞாதிகளேமூன்றுநாட்செலிற்றொடலா
ம்புனிதஞானங், கிருந்துறக்கைவந்தோனைசசெயற்கரியவருமா
கங்கள்செய்துளோனை, வருந்தியிடுஞ்சூதகதோடாசௌசமொ
ருநாளீமருவாதன்றே. (௨)

வேறு.

முன்னூலிடுமுன்னிறந்தொழியின்மூன்றுநாளாசவுசமுள
வன்னமுன்னூல்வனைந்ததற்பின்னுறு வியழியில்மறையோர்க்குக்
கொன்னைபத்துநாளைக்குமுளதாங்கொடியவாசவுச
மன்னுகுரவனிறந்திடிலாசவுசமூன்றுநாள்மருவும். (௩)

முல்லையரும்பிறப்பற்றேன்றுமுன்னமிறப்பின்ஞாதிகட்காங்
கொல்லைநீரிற்படிந்தெழுந்தாலொழியுஞ்சூழ்ந்தவாசவுசஞ்
சொல்லுந்தந்தைதாயவர்க்குப்பத்துநாளுந்தொடர்ந்தெய்து
நல்லகுறவன்மகனிறப்பின்னுமொருநாளாசவுசம். (௪)

குரவன்பன்னியிறந்தாலுமொருநாளாகுங்கோதில்மைந்தர்ப்
பருவமிரண்டுசென்றதற்பினிறப்பிற்பகருந்தாய்தந்தைக்
கொருபதாகுநாளுளவாமுனைக்குந்தாயத்தார்தமக்கு
மருவுங்கொடியவாசவுசமூன்றுநாளைக்கெனவகுப்பார். (௫)

வேறு.

மயிர்வினைசெய்முனமிறப்பினோர்நாள்நீள்குடுமியினைவைத்தபின்ன, ருயிரழியின்மூன்றுநாளுபநயனம்பண்ணியபின்னுலந்துபோகிற், செயிராறுமோர்பத்துநாளுயிர்ப்புழிவீய்ந்திடிற்றெண்ணீர்மூழ்கிற்றீரும், பயில்வுறுஞாதிகடமக்காங் காசவுசமெனமறைகள்பகர்ந்தவன்றே. (௬)

பிறந்துழிவீய்வுறிற்றாய்க்குந்தந்தைக்கும் பத்துநாட்பிடிக்கும்பெட்பிற், சிறந்தவுடன்பிறந்தவர்க்குத்தெண்ணீர்மூழ்குழியகலும்பத்தாநாளி, லிறந்திடின்மற்றுடன்பிறந்தார்க் கெய்துமொருநாளிசைக்கும்வாத்தியாரு, மறிந்திடிலோர்நாளுண்டாமாசவுசமெனமறைகள்வகுத்ததன்றே. (௭)

ஒருத்திபொறையுயிர்த்திட்டவொன்பதுநாள்களிலொருத்தியுயிர்த்தாளென்னிற், றிருத்தகுசூதகமிரண்டுமுன்னுயிர்த்தாள்பத்தாநாட்டீர்ந்துபோகும், வருத்தமொடுபொறையுயிர்த்தபத்தாநாள்மற்றொருத்தியுயிர்த்தாளென்னி, னருத்தியுறுபன்னிரண்டாநாளிருவர்சூதகமுமகன்றுபோமால். (௮)

தாயத்தானிறந்தவொன்பானாள்கடமில்மற்றுமொருதாயத்தானு, நேயத்தானிறந்திடிலப்பத்தாநாள்களினீங்கும்பத்தாநாளிற், காயத்தாலுருபாரம்வேறொருவன்கழித்திடிற்பன்னிரண்டாநாளின், மாய்வுற்றவிருவருக்குமாசவுசநீங்குமெனவகுத்தாரன்றே. (௯)

தமரிறந்தவொன்பானாள்ஞாதிகளிலொருத்திமகவுயிர்ப்பிற்றாழா, தமைவுறுமாசவுசமுமச்சூதகமும் பத்தாநாளளவிற்றீருங், கமைபிகழ்ந்துசேட்சென்றோனிறந்தமைமும்மதியந்தனிற்

கேட்பிற்காதற்,சுமையுறுமவ்வாசவுசமூன்றுநாடம்மிலறத்தொ
லேயுமன்றே. (௧0)

ஆறுதிங்கடனிற்கேட்பி னென்றனைநா டனிற்றொலேயுமா
றேடாறு, யேறுதிங்கடனிற்கேட்பினொருநாளிற்கழிந்திடும்யா
ண்டிறந்துகேட்பி, னூறுபுனறனிற்படிவினொழிந்திடுமாசவுசமு
யர்மாமன்மாமி, பாறினர்நல்லுயிரொன்னின்மூன்றுநாளாசவுச
ம்பற்றுமன்றே. (௧௧)

வம்பலன்றன்மனேயெய்திமறியிலொருமூன்றுநாட்கிராமந்
தன்னி, லேம்புலன்செற்றோரிறப்பி னொருநாளாசவுசமருமறை
யோர்வேந்த, ரிம்பருறுநல்வணிகர்பின்னவர்க்குச்சூதகமாசவு
சமீரைந், தும்பருறுபன்னிரண்டுபதினேந்தோர்முப்பானுளுறு
ங்களன்றே. (௧௨)

அந்தணர்க்குச்சூதகவாசூசமெய்தினவன்வேட்ட வரசக
ன்னி, நந்தலில்வாணிகமடந்தைசதுர்த்தகன்னியெனுமிவர்கள்
நயந்துபெற்ற, மைந்தர்களோர்மூவர்க்கும்பத்துநாளுறும்வேந்
தன்மணந்தநாய்கள், பைந்தொடிபின்னவர்மாதர்மைந்தர்க்கும்
பன்னிருநாட்பற்றுமன்றே. (௧௩)

வணிகர்க்குச்சூதகவாசூசமெய்தினவன்வேட்டசதுர்த்த
மாதர், பணிவருநன்மைந்தர்க்குமாங்கவர்போலேம்மூன்றுநாளு
ம்பற்றுந், தணிவருமுக்குணத்தோர்க்குப்பிறந்திடுபின்னவர்க்
குச்சூதகமாசவுச, நணுகினயகர்க்கறுநா ளரசர்க்கோர்மூன்று
நாள்மறையோர்க்கோர்நாள். (௧௪)

அந்தணர்க்காயினும்வேந்தர்க் காயினும்வந்தவதரித்துப்பி
ன்னோர்மாதர், சந்தமுலேமணந்துமக வுயிர்த்தநாயகர்க்குச்சூத
கமாசவுசம்,வந்திடின்மற்றவரீன்றபின்னவர்க்கைம்மூன்றரசர்க்
காறுமற்றை, நந்தலினன்மறையோர்க்குமூன்றுநாட்பற்றுமெ
னநவில்வர்மாதோ. (௧௫)

மறையவர்பால்வந்துதித்த வணிகமடந்தையைச்சதுர்த்த
மயிலேவேட்ட, விறைவனுக்குச்சூதகமாசவுசமெய்திலந்தணர்க்
கோரறுநாளெய்து, மறைகழல்மன்னவனின்றவணிகர்க்குப்பத்
துநாளரசனின்ற, நெறியுடைவேளாளர்க்குப்பன்னிருநாளுண்
டென்னநிகழ்த்தினரே. (௧௬)

தாயமல்லர்மறையோனுகமெத்திற்றழற்கரும மியற்றியுண்
டோற், காயவன்றாயம்போலப் பத்துநாளாசவுசமடுக்குமேத்,
தேயவன்செய்தவன்மனேயி னுண்ணுதுதன்மனேயி னெய்தியுண்
டோற், காய்வுறுநாள்மூன்றளவுமாசவுசமெய்துமெனவுனைப்
பயாதோ. (௧௭)

தீதிலேழ்தலைமுறைமேற் பதினான்குதலைமுறையுஞ் சேர்ந்துளோரைச், சோதகமொன்றுரைப்பரவர்க்காசவுசநாண்மூன்றிற்றொலைந்துபோகு, மேதமறுதாய்கிளைஞரிறப்பினொருமூன்றாசவுசமெய்து, மாதுலர்க்கிமக்கரும மாற்றினோன்முழுகியிழுதருந்திற்றீரும். (௧௮)

பொன்விழைவாற்றம்வருணத்தவர்கருமம்புறங்காட்டிற்புரிந்துளோர்கட், கன்னவருணர்க்குரைத்தவாசவுசமெய்துமுயர்குலத்துளோர்க்கு, மன்னுமிழிகுலத்துள்ளோர்புறங்காட்டிற்கடன்முடிப்பின்மாய்ந்துளோர்க்குச், சொன்னநாளளவுமிவர்க்காசவுசமெய்துமெனச்சொல்வரன்றே. (௧௯)

இழிகுலத்தோர்க்குயர்குலத்தோர்புறங்காட்டிற்கடனியற்றினிறந்துளோர்க்கு, மொழிதருநாளளவுமிவர்க்காசவுசமெய்துமுயிர்முடிந்துபோன, பழுதறுநான்மறையோன்பின்செல்மறையோன்மூழ்கிநெய்யுட் பருகுபோழ்தி, னொழிதருமாசவுசமெனவருமறைகள்முழுதுணர்ந்தோருரைத்தாரன்றே. (௨௦)

இறந்திடுமன்னவன்பின்னரெய்தினொருநாளளவுமெய்துமாவி, மறிந்தவணிகன்பின்னர்சென்றிடினிரண்டெய்துமறிந்தபின்னோன், புறந்தனிற்பின்றொடர்ந்தேகின்மூன்றுநாளெய்துமாசவுசம்பொற்பிற், சிறந்தமறைவிளையாடுஞ் செந்நாவேதியர்க்கென்றுசெப்புநூலே. (௨௧)

பின்னவற்குக்காடாற்றுமுன்மறையோனவன்மனையிற்பெட்பினெய்தின், மன்னுமொருமூன்றுநாளாசவுசங்காடாற்றிவந்தபின்ன, ரன்னவன்றன்மனையெய்தினொன்றிற்றீருமுயரரசர்நாயகர், நன்மனையிற்காடாற்றுமுனமெய்தினொன்று நண்ணுமன்றே. (௨௨)

சுடலையாற்றியபின்னர் மன்னவர்நாயகர்மறையோர்துணைவினெய்தி, யடைவினுயர்பகற்காணிற் பகற்றீருமிரவுறிலவ்விரவிற்றீருங், கெடலரும்வேதியரிறப்பினவர்மனைமுக்குலத்தோருங்கிட்டிற்றெண்ணீர்,படிதரிற்றீர்ந்தொழியுமுயராசவுசமெனமறைகள்பகர்ந்தமாதோ. (௨௩)

வருணநான்கினுமிறந்தோர்மனையினொருநாணசையின்மகிழ்ந்துண்டோர்க்குப், பொருவருமவ்வருணத்துக் குரைத்தநாளாசவுசம்பொருந்துமென்ப, மருவருநல்குரவதனாலருந்தினோர்க்கருந்தியநாளளவுமாறு, தொருவருமாசவுசமுறுஞ்சாந்திபண்ணினொழிந்திடுமென்றுரைப்பர்மாதோ. (௨௪)

அருமகமாற்றுநரிறப்பிற்புறங்காட்டினழற்கருமமாற்றுநாட்டொட், டொருவருமாசுசமெய்துமேனையோர்க்குயிர்குலங்கநா

டொட்டெய்துந், திருமறையோர்க்கொருமூன்றுசாதியினுதீங் வேட்பினனையோரன்பிற், றருபுதல்வர்க்கொருமூன்று தலைமுறையும்பிண்டமிடல்தக்கதன்றே. (௨௫)

வள்ளியோர்சீவன்முத்தர் பன்னுளுமகவினைகள் மகிழ்ந்து செய்வோ, ரொள்ளொளியமுடிவேந்தர்நீராடிளுசௌச மொழியுமெச்சந், தன்னைப்பிரிவிற்றுருவையர்நாளமுகில்வறந்த காலந்தாவுந், தென்னுறுமாபுனலாடிளுசௌசமொழியுமெனத் தெரிந்தாரன்றே. (௨௬)

மன்னவராயிடியேற்றால் வாளரவால்நீரினுல் நெருப்பால் மற்றுந், துன்னமராற்பிராயோப வேசத்தாலந்தணர்க்காய்த் தொறுவுக்காந், வின்னுயிர்விட்டோர்தமக்குந்துறந்தோர்க்கும் பிரமசாரியர்க்குமென்று, முன்னரும்வானப்பிரத்தர் தங்களுக் குமாசௌசமுற்றிடாவால். (௨௭)

விடநுகர்ந்துநான்றுகொண்டுமொழ்கயத்தின்வீழ்ந்துமுயிர் வியந்துளோர்க்கு, மடைவழியவிளிந்தோர்க்கு மீமத்திற்செய் கடன்கண்முதலபிண்ட, மிடுதலெவையுமிலாயயாவுமில்லையரவ றியாதெதிரந்துநீண்ட, முடியுமவர்க்கிங்கிவைகளனைத்துமுள வெனமறைகண்மொழிந்தவன்றே. (௨௮)

மகவின்றுணைன்மனையினெல்லரிசிபொன்பசுவான்கரும்பெட்டோரா, தகரிமுதுகிணையுப்புவிறகுசருககைதென்னீர்தயிர் பாலெண்ணெய், புகலருநோய்தீர்மருந்துவாகருகலாமகம்புரிந்தோனுவிடொன்றி, னிகழ்கருநன்மகத்தியாற்சுடுகபிறர்க்கெத் தீயுமிலைய்ந்தாமால். (௨௯)

ஒருவனிறந்துறியறியாதுடலமுங்காணுதொழியிற் பலாசு தன்னல், மருவுமவனுடல்போலவமைத்திமக்கடன்கழித்தல்வழக்கதாகும், பொருவிலுயிரிறந்தோர்க்குத் தாயத்தார்நினைந்து துசில்புனைதுவைகி,யிருபொழுதுநீருகுத்துப்பிண்டமிடலொழுக்கென்னவிசைத்தாரன்றே. (௩௦)

இறந்துளோன்மனையிலற்றை நாள்நால்வர்க்கூட்டிடுகவெதிர்ந்தகுன்றி,னறைந்தமயிர் வினைமுடித்துக்காடாற்றியைந்தா நாளொன்பாநாளிற், சிறந்தபதினொன்றுநாளொற்றைபடுமறையோரைத் தெவிட்டவூட்ட, னிறைந்தசவச்சிராத்தநாட் பதினொன்றினிரப்பிடுகவேகோதிட்டம். (௩௧)

பன்னிருதிங்களுமிவ்வாறியற்றியுயர்பன்னிரண்டா மாதந் தன்னின், மன்னியபாத்திரநான்கினிர்வார்த்தோர்பாத்திரத்தில்வார்த்தங்கா, முன்னுறுபாத்திரமூன்றினுடன்கலந்துவரித்த மறைமுனிவர்தம்மைத், தன்னமருமப்பிரிக்கொளவரிச்சிந்தாநகின்னமுதந்தகவிறாடு. (௩௨)

பிண்டநான்கினிதமைத்துப் பிரேதபிண்டந்தனைமூன்றுபி ண்டத்தோடுந், தண்டமில்லாதுடன்கூட்டல்சபிண்டியெனவெ டுத்துரைப்பர்சபிண்டிசெய்தாற், கொண்டவுயிரிறந்தோரைப் பிரேதமெனவுரைத்திடுதல் குற்றமாகு, மண்டுநீர்க்குடமனத் தோர்பருவந்தினந்தோறும்வழங்கல்வேண்டும். (௩௩)

இவ்வாறுதந்தைக்குமைந்தர்கடன்கழித்திடுதலியல்பதாகு ஞ், செவ்விமைந்தரிலரொன்னிில்மனையாளிக்கடனனைத்துஞ்செ ய்யவேண்டு, மவ்வகையாற்றிடமனையா ளிலளென்னிலுடன்பி றந்தோராற்றல்வேண்டும், பவ்வநெடுங்கடல்வலையத்தில்லொ ழுககமிழுக்காமற்பகர்ந்திட்டேமால். (௩௪)

சூதகாசூசமுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—சசுச,

இருபத்துமூன்றாவது

## அழற்கருமமுரைத்தவத்தியாயம்.

இல்லறம்புரிகின்றவர்யாவருங்
கல்லெறுழிமுகட்டிற்கதிரவன்
புல்லும்போழ்திற்புகன்றவழல்வினை
யல்லறீர்ந்திடவாற்றிடவேண்டுமால். (௧)

புதியசெந்நெற்புகுதினுவாத்தொறும்
விதியினீட்டியயற்றல்விழுமிதா
முதிருநல்லயனத்தின்முறைமையிற்
கதிர்கொணன்பசுப்பண்ணல்கடனதே. (௨)

மருவுமார்கழிதையொடுமாசியி
லருளிேனாடுமமரபக்கந்தனிற்
றெருளுமட்டகமென்னுஞ்சிரார்த்தமாங்
கொருவிடாமலுஞற்றிடவேண்டுமால். (௩)

பருவமூன்றுபசிகெடவுண்பதற்
குரியசெந்நெலுளதெனிலாங்கவ
ரரியமைமகமாற்றுதல்வேண்டுமென்
றிருமறைப்பொருள்யாவும்விளம்புமால். (௪)

சவுதமென்றுஞ்சமர்த்தமென்றும்புகழ்ந்
தெவருமேத்துந்தருமமிரண்டுள
வவையுரிந்திலனென்னிலறிவுளோா
தவலிலாநெறிநிற்றறகமையே. (௫)

பொருவிலாவிதிகாசபுராணங்கள்
தெருளுமாந்தர்சிறப்புளராகுவர்
தருமநூலும்புராணத்தின்றன்மையுங்
கருதியோர்தவரோகலைவல்லரோ. (௬)

அழற்கருமமுறைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௪௭௦.

---

இருபத்துநான்காவது

## இல்லறபேதமுறைத்தவத்தியாயம்.

இல்லறஞ்செய்வோர்தம்மிலிருந்திறந்தோருளரவரிலெச்சமாற்றிப், பல்கலையும்பயின்றேற்றுப் பைங்கூழ்கள்விளைவித்துநிதியத்திலீட்டி, வெல்படைகள்பயில்வித்துப்பயின்றுளோனசாதகனுமேவுஞானத், தல்லுமுயர்நன்பகலுமமர்ந்துளோன்சாதகனென்றறையுஞாலம். (௧)

சாதகனுக்காறுகன்ம மசாதகற்குமூன்றுகன்மந் தகைமைவாய்ந்த, வேதமறுஞ்சூரதரணிகற்கியைந்தவிரண்டுகன்மமீரேழாய, மூதுலகும்புகழ்கும்பதரணிகற்கோர்கருமமெனமொழிவொன்று, நீதிசாலறத்தினொடும்பொருளினொடும்வீட்டின்பநிகழ்த்தினரோ. (௨)

சாதகராய்ப்பொருளீட்டுந்தன்மையோர்தமையறிந்துதலைமைபூண்ட, மாதவர்க்குங்கடவுளர்க்கு மதிதிகட்குந்தென்புலத்தின்மருவினோர்க்கும், பேதமறப்பார்த்தருந்தி நல்லசெய்துபொருளீட்டிற்பிழையுறுதென், றேதமறமுழுதுணர்ந்தகலைவல்லோர்யாருமெடுத்திசைத்தாரன்றே. (௩)

இன்னமனைவாழ்க்கையறம்புரிந்தோருங்கேட்டோருமெழுதினோருங், கன்னலிற்பாகினிலமிழ்திற்கோற்றேனிற்றித்திக்குங்கனிந்ததீஞ்சொ, லன்னநடையரம்பையர்தமஞ்சுணங்காரிளமுலைதம்மகலந்தாக்கப், பொன்னுலகிலிந்திரனுமேக்கறவுற்றிடவினியபோகந்துய்ப்பார். (௪)

இல்லறபேதமுறைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௪௭௪.

---

இருபத்தைந்தாவது

## தானமுறைத்தவத்தியாயம்.

ஓராறுதலையிட்டவீரைந்துமாதானமுதலாயுறுஞ்
சீர்மேவுதானங்கள்கேண்மின்கணீரொன்றுதிசையாவையும்
பாரேழும்விண்ணேழுமிணையில்லையெனவோதுபழமாமறைக்
கார்மேகமெனநின்றுமொழிகின்றமுனிசுகதைவானரோ. ௧

வேறு.

உலகமனைத்தும்பொதுநீக்கியொருகோலோச்சியினிதாளு
நிலவுக்கவிகைமுடிவேந்தர்நிகழ்த்துந்துலைபுக்கிடவேண்டிற்
குலவுபலாசில்வில்லத்திலரசிற்கருங்காலியிற்கோநின் [தே.
றிலகுகஜைழயிற்றிக்கயந்தாங்கெழில்சேர்மணிமண்டபஞ்சமைத்

மழைகண்படுக்குநெடுவாயினான்குமணித்தோரணநிறுவித்
தழூஉமுற்றெய்தாமணித்தாமந்தருப்பைமாலையிடைதூக்கி
யெழில்சேர்விரலீராறுயரத்தியம்புமோரேழ்முழப்பரப்பிற்
பழுதிறாளம்விளிம்புடுத்தபைம்பொற்றிண்ணையினிதமைத்தே

இருந்திசைகளோரொட்டுங்குண்டமமைத்தீசானதிக்கும்
பொருந்துமகவான்றிக்கினுக்குநடுவணுகைப்பொற்பமைத்து
திருந்தியுயரும்பிரதானகண்டம்பிறைபோலத்தேருருள்போல
விரிந்தகமலம்போலிவற்றின்விளங்கவியன்றபடியமைத்தே. (௪)

வில்லமரசுகருங்காலிபலாசமென்னவிரித்துமறை [திற்
சொல்லுமரத்தினியன்றவற்றிற் றாக்குந்துலைத்தூணெனமுழத்
புல்லுமிரண்டுநெற்கிடைநீளத்தினளவைபுகல்நீளம் [ன்.
வல்லோருரைத்தசுற்றளவோர் விரலின்முழமொன்றும்வகுப்பி

ஒன்றுக்கொன்றுநான்குமுழத்தளவினிடைவிட்டுறுகுழியிற்
சென்றமுழமோரிரண்டாகச்சிறப்புவாய்ந்ததூணிறுவி
மன்றச்சதுரமொவ்வொன்றுவகுத்தபத்துவிரற்பரப்பிற்
றுன்றுமுழமோராறமைந்ததுகடூர்மணியுத்திரஞ்சேர்த்தி. (௬)

உரைத்தவெட்டுத் துலாத்தெனினுமொழியாதாறுதுலாத்
தெனினு, நிரைத்தசாண்மூன்றரைப்பரப்பினிகழ்த்தியிடுமுள்ள
கலத்தின், வரைத்ததராசுத்தட்டதனின்வயங்கச்செறிகுண்டல
ஞ்சேர்த்துப், பரிக்கும்வல்லிதோரணநாத்தண்டம்பகர்ந்தபடி
யமைத்தே. (௭)

சாற்றுமணியுத்திரத்தமைத்தவளைக்குறங்கிற்றராசதனைத்
தோற்றிவிளங்கும்படிதூக்கித்துலங்கச்சமைத்தவேதிகையி
னாற்றலுடனங்குரமியற்றியணிசேரட்டமங்கலம்வைத்
தேற்றவாயினான்கினெடுமியைந்ததனிமண்டலங்கீறி. (௮)

எழுதுமுயர்மண்டலநாப்பணிலங்குகமலந்தனிவரைந்து
பழுதிலபஞ்சவன்னத்திலதைகளதனின்பால்கீறி
வழுவில்வயிரப்படைசத்திதண்டம்வால்நீள்பாசமெழி
லொழுகுதுவசங்கதைசூலமெழிற்கிழக்குமுதற்கோட்டி. (௯)

வடகீழ்த்திசைக்குங் கீழ்த்திசைக்கு நடுவணேமிவரைந்து
தென்பா, லொடிவில்கமலமினிதெழுதியோர்நாளுண்டியிகந்து

பின்ன, ரடைவினாந்திமுகமியற்றியாசாரியனாதியனைவரைத், தி
டர்தீர்காயத்திரியின்முதற்குண்டத்தோமமினிதியற்றி. (௧௦)

வயிரப்படையோன்றிசைமுதலாந்திசையின்வகுத்தகுண்
டத்தின், பயிலத்திசைதோறுறைதேவர்மறையாற்பலாசிலமன்னா
த்திற், செயிர்தீர்நெய்யினூற்றெட்டாகுதிப்பேறமனுச்செய்துமை
யோ, டுயர்வெண்டிங்கட் பசுங்கண்ணி யுரவோன்றன்னைநடுவி
ருத்தி. (௧௧)

இடப்பான்மாயன்வலப்பாலிற்கமலக்கிழவனெண்டிசையுந்
தொடப்பால்வைத்த விந்திரனை முதலோர்ப்பழிச்சிமலர்தூவி
மடற்பூங்கமலநாயகனைவழுத்திமறையோர்க்கினிதூட்டி
தடப்பாடமைந்தகுணவாயிற்புகழ்ந்துசதருத்திரஞ்செபித்தே.

கடல்சேப்புறவந்தெழுந்தவெயில் கவிழ்க்குமணிமாமவுலிபுனை
தடல்சேர்வேந்தன்கேடகத்தோட லங்குவடிவாள்கைபற்றி
வடபாற்றட்டிலினிதிருந்துதனதுநிறையின்மறுதட்டிற்
சுடர்கால்பசும்பொன்னுயர்குடுமிமேருவென்னநனிசொரிந்தே

தானமேற்போர்சிகிகாயத்திரியைச்செபிப்பத்தங்கோர்க
ளாறுதரியமறைபாடவரசனெற்போர்க்காறுது
பானுண்டுகிலின்மறைப்பவணிகலன்வாள்பரிசையணியாடை
மானத்துலைப்பொன்னொடுநூறுகழஞ்சூட்டிசுவழங்குகவே (௧௪)

அரியமறைதேர்புரோகிதனையாசாரியனைமுதலவர்க்கும்
பொருவில்சென்னியணிதூசுபுனையும்பசும்பொற்றூசுகண்மேன்
மருவுகலன்கைவளையாழிவயங்குகாதினிடையணியு
முருவமணிக்குண்டலமிவைகளுவப்பினோடும்வழங்குகவே. ௧௫

கூறுமறைதேரிருத்துவிக்களாசான்கோதில்புரோகிதற்கு
நூறுநூறுகழஞ்சளிக்கநுவலுமறையோர்யாவர்க்கும்
வேறுவேறோர்கழஞ்சாகவியப்பினளிக்கவேத்துநர்க்கு
மீறில்கடவுளீசற்குமியன்றநிதியமீந்திடுக. (௧௬)

வேறு.

ஆயிரம்பசும்பொற்கும்பத்தமைத்தபால்பிரமகூர்ச்சந்
தோயுநீர்நறுநெய்பஞ்சகவ்வியந்துகளிறீர்ந்தேன்
சேயமுக்கனியிவற்றாற்றிங்களங்கண்ணியோனை
மேயபேரன்பின்வேதவிதிமுறையினிதாட்டி. (௧௭)

ஆயிரநாமமோதியருச்சனைபுரிந்துவாச
மேயநற்றூபதீபம்விருப்புடனினிதினேத்திப்
பாயபொற்கலன்கடோறும்பரிவினின்னமுதமேற்றி
யேயநூல்வழியினைந்தைபூசனையினிதியற்றி. (௧௮)

ஆதுலரிரப்போர்தீராவருப்பிணியுற்றோர்யார்க்கு
மேதகுநிதியநல்கிவிலாவிறவடிசிலூட்டித்
தாதவிழ்மாலைசாந்தமளிக்குதறவலில்கேள்வி
மூதறிவுடையநீரார்மொழிதுலாபுருடமென்பார். (௧௯)

இரவியையரவுதீண்டற்போற்றுலையேறநன்காம்
விரிகதிர்மதியந்தீண்டில்வெள்ளியந்துலைவியப்பா
முருகியநறுநெய்பெய்ததுலைபுகினொளியுண்டாகும்
பெருகுதேத்துலையினேறிற்பெறலருந்திருவனுவன். (௨0)

எண்ணெய்பெய்துலையினேறினினியநன்மகப்பேறுண்டா
நுண்ணியவாடைபெய்ததுலைபுகினூயிற்செய்யா
விண்ணவராடையெய்தும்வெள்ளுப்புத்துலையினேறிற்
கண்விளக்குறுசெஞ்சோதிகவினொடுமினிதுவாழ்வான். (௨௧)

சருக்கரைத்துலையிற்றூங்கினோயுருசெய்யசாந்த
நிரப்பியதுலையினேறினிகழ்த்தருமுருவமுண்டாம்
விருப்பொடுபஞ்சதாரைத்துலைபுகின்மேவார்தம்மைச்
செருக்களமதனில்வெல்வனெனமறைதெரித்ததன்றே. (௨௨)

குங்குமத்துலையில்வெய்யகுவிமுலைமகளிரோறிற்
பங்கமில்கொழுநற்சேர்வர்பாற்றுலைபதனிற்றூங்கின்
வெங்கொடுந்தாபந்தீரும்வெண்கலத்துலையிற்றூங்கிற்
றங்குலப்பிதிர்க்கள்யாருந்தாங்கருமகிழ்ச்சிபூப்பர். (௨௩)

செம்புபெய்துலையினேறிற்றென்புலத்தோர்கள்யாரு
மும்பரின்மகிழ்ச்சிகூர்வருவந்திவையளித்தோர்யாரு
மெம்பிரானுமையினோடுமகிழ்ந்திடவெண்ணில்காலம்
வம்பவிழ்தருவினீழல்வாழ்ந்தினிதிருப்பரன்றே. (௨௪)

இரணியகருப்பதானமியம்புதுமகிழ்ந்துகேட்டிர்
மருவுமண்டபநற்பூசைமற்றுளகருமமியாவும்
பொருவருந்துலைக்குச்சொன்னவிதிப்படிபுரிகபோற்று
மரியகீழ்க்குழிசிபொன்னோராயிரக்கழஞ்சிற்செய்க. (௨௫)

மொழிந்ததுதனக்கைஞ்ஞூறுகழஞ்சினொன்மூடிசெய்தாங்
குழுந்திறலதனைப்பூசியுளைத்தகீழ்க்குழிசிதன்னை
விழைந்திடுமயன்மாலங்கியெனவெண்ணிமேலின்மூடிக்
குழந்தைவெண்டிங்கள்வேணிக்குழகனொயினிதினெண்ணி. (௨௬)

புருடனைத்தன்னையெண்ணிப்புகன்றவேதிகையின்மீது
மருவுபாத்திரத்தைவைத்துமறையினுலாவினைந்து
மூரியபாத்திரத்தின்வாக்கித்துலையினுக்குரைத்தவண்ண
மானுறுபூசையோமமியாவையுமினிதினாற்றி. (௨௭)

இலங்கொளித்தருமராசப்பிரதிமையிடக்கைபற்றி
வலம்படுவலக்கைதன்னின்மலரயன்விம்பமேந்தி
யலங்கொளிக்குழிசிபுக்குக்குணதிசையதனைநோக்கி
நலம்படுமீசன்காயத்திரியினைநவின்றுவைகி. (௨௮)

அந்தணர்கருப்பதானஞ்சீமந்தமாதியாய
நந்தலில்கருமஞ்சத்திவீசத்தானயந்துசெய்ய
வந்தெழுமுயிர்ப்போரைந்தினளவுமற்றதனுள்மூழ்கி
யுந்துபல்லியங்களார்ப்பவதனினின்றுதித்தபின்னர். (௨௯)

சிறப்புடைச்சாதகன்மமுதலியவனைத்துஞ்செய்தாங்
கறத்துடனலவாய்செய்தற்கந்தணர்தம்மையூட்டி
நிறுத்திடுசவுளமுன்னூலாதியாய்க்கருமநீங்கா
மறைப்படிவழுவுறாமலினிதினின்மகிழ்வினாற்றி. (௩0)

முப்பதின்கழஞ்சுபொன்னின்முகிழ்முலைப்பாவைபண்ணித்
தப்பறவெட்டுத்திங்கடாழ்சடைக்குரிசிற்கியா
வொப்பறுபசும்பொன்யாவுந்துலையினுக்குரைத்தவண்ணந்
தப்பிலாமறையோர்தம்பாற்றக்கணையோடுநல்க. (௩௧)

உயர்பிரமாண்ட்தானஞ்செய்யின்மண்டபநல்லோம
மயர்வறுமறையோர்தம்மைவரித்திடல்துலைக்குமுன்னஞ்
செயிரறவுரைத்தவண்ணஞ்செய்திடல்வேண்டுமென்னப்
பயின்மறைமுழுதுமாய்ந்தமுனிவரர்பகர்ந்தாரன்றே. (௩௨)

இருபதுபலத்தினெஃகாதாயிரம்பலத்தினீறா
யொருபதிற்றிரட்டிகொண்டவிரலிழிபுயர்ச்சிநாறாய்
மருவருசெம்பொன்றன்னில்வாயிலிகும்பம்போலத்
தெரிவரப்பொருத்தினொன்றாய்ச்சேர்ந்திடவினிதிற்செய்தே.()

தேம்படுமதமாவேரொட்டெண்டிசைகாக்குந்தேவர்
காம்பிசைகுறிக்குமாயன்வசுக்களாதபன்முக்கண்ண
னும்பல்வாய்க்கமலையெல்லாவகிலமுமீன்றவெந்தா
யேம்பலில்கமலத்தோனைச்சூழ்ந்திடவினிதிற்செய்தே. (௩௪)

மலைவறுபிரமாண்டத்தைவலஞ்செய்துபூசையாற்றிக்
குலவுமான்பத்துவேதமுனிவரர்கொள்ளநல்கி
யலைவறுமாசானுதிமறையவர்க்கதனையன்பிற்
றலைநிதியளித்தல்போலத்தொகுத்தினிதளித்தல்வேண்டும். ()

உரைத்தவித்தானமீந்தோர்தீவினையொல்லைநீங்கி
விரைச்செழுங்கமலப்புத்தேள்வியனுலகாதியாக
நிரைத்திடுமுலகத்துள்ளநிகரறுபோகந்துய்த்துப்
பரைக்கொருபங்குநல்கும்பரமன்றாளிணையிற்சேர்வர். (௩௬)

ஆயிரக்கழஞ்சுபொன்னிற்கற்பகத்தருவுண்டாக்கிச்
சேயமென்றளிர்காயோங்குஞ்சினைபழமலர்கள்யாவும்
பாய்கதிர்விரிக்குமொன்பான்மணியினும்பரிந்துபண்ணித்
தூயமென்பளிங்கிற்செய்தவேதிகைதுலங்கச்சேர்த்தி. (௩௭)

பன்னிருவிரலினெட்டுச்சாகைகள்பரிவிற்செய்த
பொன்னவிர்தருவினீழல்புரந்தரன்முதலோர்சூழ்ந்து
துன்னிடவிலிங்கமொன்றுசுடர்மணியதனிற்செய்து
மன்னுபொற்றுலையினீசற் பழிச்சல்போல்வழுத்தல்வேண்டும்.

அனையபொற்றருவையீசற்காயினுமறையோர்க்கேனுந்
துணைவினினல்கியாசான்முதலதொன்மறையோர்யார்க்கும்
புனைகலன்றூசுசெம்பொன்புகன்றவாறினிதினல்கும்
வனைகழல்வேந்தனெல்லாமன்னர்க்குமன்னனாவான். (௩௯)

ஆயிரத்தெட்டுநல்லானளிக்குமாறுரைப்பன்கேண்மின்
மேயமண்டபநற்பூசைவிளம்பியவோமம்யாவு
மேய்வுறத்துலைக்குச்சொன்னவண்ணமேயினிதினாற்றித்
தூயபாலருந்திமூன்றுதினந்தொழுவிரதமாற்றி. (௪௦)

குடம்புரைசெருத்தநல்லானாயிரத்தெட்டிற்கோதின்
றடங்குமானெட்டுத்தூசாலலங்கரித்தணிகொள்கொம்பின்
மடங்கலில்செம்பொனோரோர்கழஞ்சினால்வனைந்துவெள்ளி
கடந்திடுகுளம்பிற்சேர்த்திக்கழஞ்சினற்பட்டங்கட்டி. (௪௧)

மழவிடையொன்றுசெம்பொன்மணியினாலணிந்தோரொட்டாம்
விழுமியபசுக்களோடும்விதிமுறைபூசையாற்றிக்
குழுமுமாயிரத்தெட்டாயவானொடுங்குலவுமேற்றை
யழலினுக்கூட்டியுண்ணுமந்தணர்க்களித்தல்வேண்டும். (௪௨

பதின்கழஞ்சேனும்பத்துக்கழஞ்சினிற்பாதியேனும்
விதம்படுமறையோர்யார்க்கும்வீற்றுவீற்றாகநல்கி
யிதம்படுநூலைபோன்முக்கணிறைவனையேத்தினோர்கள்
சதம்படுவேள்வியாற்றுந்தேவெனத்தருக்கின்வாழ்வார். (௪௩)

ஆயிரக்கழஞ்சுதொட்டீரைம்பதுகழஞ்சீறாக
வேயினபசும்பொன்றன்னாற்பெற்றமொன்றினிதிற்செய்து
மேயபொன்பத்திலொன்றிற்கன்றினைவிதியிற்பண்ணிப்
பாய்கதிர்மணிகடம்மாலுறுப்பெலாம்பதிதல்வேண்டும். (௪௪)

துலையினுக்குரைத்தவண்ணமமைத்துமண்டபத்திற்றூய்தா
யிலகொளியானினோடுங்கன்றினையினிதினேற்றிக்
கலையிரண்டதற்குச்சுற்றிக்காய்கனலோமம்பூசை
மலைவறத்துலைக்குச்சொன்னவாறுபோலினிதினாற்றி. (௪௫)

முப்பதுகழஞ்சுபின்னுந்தக்கணைமுறையிற்கூட்டித்
தப்பறமறையோர்க்கீகவிங்கிவைதயவினீந்தோர்
செப்பெனப்பணைத்துவீங்குந்திரண்முலையுமையாள்பங்க
னொப்புமையிலாதபாதநீழலிலுறைவரன்றே. (சசு)

ஆயிரக்கழஞ்சிறைகூறாற்றெட்டுக்கழஞ்சிறைதல்
பாய்பரிபொன்னிற்பண்ணிப்பஞ்சகலியாணியாக
வேயநல்வெள்ளிதன்னலீரிருகுளம்புதம்மிற்
றூயநன்னெற்றிதன்னிற்றுவக்குறவணிதல்வேண்டும். (சஎ)

இந்திரனுகமற்றோரிருபிறப்பாளன்றன்னைச்
சிந்தையினினைந்துகீழ்பாலிருத்தியசெம்பொன்வேதி
மைந்துறவமைத்தசெம்பொனிவுளியைமலர்க்கைதன்னு
லேந்துபொற்கழஞ்சிறேடுமளித்திடவேண்டுமென்றே. (சஅ)

பொன்னெடும்புரவிபூண்டபொலங்கொடேர்த்தானஞ்சொல்லி
மன்னியசாலையோமமுனிவனைவரித்தபீசன் [ன்
பொன்னடிப்பூசையாற்றல்பொருள்பகுத்தளித்தூழியில்
துன்னருந்துலைக்குச்சொன்னவாறெனச்சொல்வர்மேலோர். ()

பலமொருமூன்றின்மேலீராயிரம்பலமீறுகப்
பொலமியன்றனகொண்டெட்டுப்புரவியாயினுநான்கேனு
மலதிரண்டேனும்பூண்டவலங்கொளிப்பொற்றேர்பண்ணி
யிலகுமிந்திரநீலத்தினெரிமணிக்கூம்புசேர்த்தி. (ரு0)

இந்திரன்முதலவாயவெண்டிசைப்பாலர்சூழ
வுந்துபொற்றடந்தேர்நாப்பணொருகுழையொருவர்சேர்த்தி
மைந்துடையாழிகாப்பான்மருத்துவரிருவர்தம்மைக்
கந்துகத்தழகுவாய்ந்தகவிகுளம்பிவுளிசேர்த்தி. (ருக)

மடங்கலந்துவசம்வீக்கிவண்டுகின்மாலைசாந்தந்
தொடுங்கழல்கவிகையுக்கஞ்சாமரந்துலங்கச்சேர்த்திக
கடுங்கலையுரிவைதன்னிற்கரியவெட்பரப்பிப்பொன்னந்
தடங்கொடேரதனில்வைத்துவலம்வந்துதாழ்ந்துபோற்றி. ()

மற்றுளகருமமியாவுந்துலைக்குமுன்வகுத்தவாறே
தெற்றெனவியற்றிக்காலமிடனிவைதெரிந்துவேதங்
கற்றுணர்முனிவர்க்கீதல்கடனென்னநுணங்குகேள்வி
முற்றுணர்ந்தடங்குந்தூயமுனிவரர்மொழிந்தாரன்றே. (ருஉ)

பொற்கரிபூண்டபொன்னந்தேருறுதானங்கூறின்
வெற்புறழ்சோலையோமம்வேதபாரகனைக்கூட்ட
லற்புடனவர்க்குச்சொன்னமளித்திடல்பூசையாற்றன்
முற்படுதுலைக்குச்சொன்னவாறெனமுனிவர்சொன்னார். (ருச)

ஒருபலந்தன்னிலஃதாதுனைத்தவோர்பாரமீரு
மெரிபசும்பொன்னினன்குகளிறுதாங்கிரதஞ்செய்து
பொருவிலெண்டிசைகாப்பாளர்பூமகள்கொழுநன்வேதா
வரனிவர்தம்மைத்தேர்மேலழகுறவினிதிற்செய்தே. (௫௫)

மலர்மகள்யாழ்கைக்கொண்டாங்கிருந்திடவகுத்துவெண்பட்
டிலகொளிக்கும்பநான்குசாமரையதனினேற்றி
யலர்சிறைக்கருடன்றீட்டுகொடியுமாங்கமைத்துவெய்தாக்
கொலைகெழுபிறைவெண்கோட்டுக்குஞ்சரமுகனைவைத்தே. ()

ஆடிவெண்குடைநற்றீபம்பாதுகையாங்குவைத்துப்
பீடுறுகலைத்தோறன்னினெட்சொரிந்ததனிற்பெட்பா
னிடுபொற்றடந்தேர்வைத்துமற்றதைநிரலேசூழப்
பாடமைபசுவோரொட்டுநிறுவிநன்பூசைபண்ணி. (௫எ)

தானியமீரொன்பானெண்டிசைதொறுஞ்சொரிந்துதாவின்
மானெடுந்தேரைச்சூழ்போய்வகுத்ததக்கணையினோடு
மீனமின்மறையோர்க்கிகவீய்ந்தவைநான்குகூறிட்
டானவோர்கூற்றையாசானுவந்திடவளித்தல்வேண்டும். (௫அ)

மற்றைபமூன்றுகூறுந்துலைக்குமுன்வகுத்தவாறே
நற்றவர்க்களித்தல்வேண்டுமெனமறைநவிலுமீது
சொற்றனமறைகள்யாவுந்தொகுத்தெடுத்தியம்பாநின்ற
வற்றமில்குணத்தபஞ்சலாங்கலமளித்தல்சொல்வாம். (௫கூ)

சந்தனமரத்தினாதறேக்கினாதருவி
லைந்துநீள்கலப்பைபண்ணியவிரொளிச்செம்பொன்றன்னான்
மைந்துறழ்கலப்பையைந்துவகுத்திமிலேறீரைந்து
நந்தலில்சாலைதன்னிற்கொணர்ந்தலம்நன்கிற்பூட்டி. (கூ0)

கொம்பினிற்செம்பொன்சேர்த்திக்குளம்பினில்வெள்ளிகட்டிச்
செம்பொனின்பட்டநெற்றிதிகழுறவினிதின்வீக்கி
யும்பர்சேருடுவினன்னவொளிர்கதிர்முத்தமாலை
கிம்புரிவடிவிற்செய்துவாலொளிகிளரச்சேர்த்தி. (கூக)

சாற்றியசாலைதன்னிலுருத்திரமறைபாற்றுவி
லாற்றல்சாலோமமாற்றியற்றைநாண்முழுதுந்தூய
வேற்றினமனைத்துமாங்கணிறுவிவேதியரீரைவர்ப்
போற்றுமுவழிநாடன்னில்வர்க்குறுபூசையாற்றி. (கூ௨)

கொடிநெடுமாட்வீதிக்கோனகரேனுமின்றே
லொடிவருசிற்றூரேனுமோர்பசுவுரிவையெல்லைப்
புடவியதேனுமேய்ந்ததக்கணையோடும்பொன்னால்
வடிவுசெய்கலப்பைபூண்டவேற்றினம்வழங்கல்வேண்டும். ()

பஞ்சலாங்கலதானத்தின்பகுதியைச்சுருக்கிச்சொன்னோஞ்
செஞ்செவேயிதனையீய்ந்தோர்பலத்தினைச்செப்பொணாதாற்
றுஞ்சலின்மறைகள்யாவுந்தொகுத்தினிதெடுத்துசொன்ன
வெஞ்சலில்சொன்னபூமித்தானமீண்டிசைக்கலுற்றாம். (௬௪)

அரும்பெறற்றுலைக்குச்சொன்னபடியகல்சாலையோமம்
விரும்புமந்தணருக்கூட்டல்வியனதிக்களவைகூறிற்
பொருந்துமோர்துலாத்தினாதலைத்துலாம்பொன்னினாத
றிருந்துகாற்றுலாத்தினாதல்சதுரமாய்த்தகடுசெய்தே. (௬௫)

ஏழ்பெருந்தீவுமேழுகடலுமேழ்வரையும்வான்றோய்
வாழியமேருவெற்பும்வருடமால்வரைகண்முற்றுஞ்
சூழ்தருநதிநதங்கடெய்வதத்தொகைக்ணீண்ட
காழ்படுதருக்கள்யாவுங்கற்பநல்விதியிற்செய்தே. (௬௬)

இளம்பிறைக்கண்ணிசூடுமெந்தைநற்பூசையாற்றி
வளங்கெழுசெருத்தனல்லானைந்தினால்வனப்புவாய்ப்பக்
களங்கமொன்றின்றிசெய்தபுவியினைக்கலசமாட்டித்
துளங்கலின்மறையோர்கொள்ளத்துலைப்படியீய்தல்வேண்டும்.

தூயநற்சொன்னபூவிவழங்குதறொகுத்துச்சொன்னோ
மேயநல்விசுவநேமிவழங்குதலிசைப்பன்கேட்டி
யாயிரமன்றேலைஞ்ஞூறன்றெனிலிருநூற்றைம்பா
னேயபொன்னிருபத்தெட்டுப்பலத்தினிற்குறையாநீட்டி. (௬௮)

எண்ணிருகோணந்தன்னாற்சக்கரமினிதிற்செய்து
நண்ணுறவதனினாப்பணாவிரண்டிதழினோடும்
வண்ணவான்கமலம்பண்ணிமற்றதினான்குசெங்கைக்
கண்ணனையமைத்தோரெட்டுக்கன்னியரிதழிற்சேர்த்தி. (௬௯)

மற்றையாவரணந்தன்னிற்குணதிசைமருங்கினீரி
னுற்றறிதுயில்கூர்மாயனுருவமைத்தொழிந்ததிக்கிற்
கற்றவத்திரிவசிட்டன்பிருகுகாசிபனல்வேந்தன்
சொற்றமீனாதியீரைந்துருவமுந்துலங்கச்செய்தே. (௭0)

மூன்றாமாவரணந்தன்னிற்சத்தமாதாக்கண்மொய்ம்பி
னான்றவெண்வசுக்களோடுங்கவுரியையமைக்கநான்காய்த்
தோன்றுமாவரணந்தன்னிற்பன்னிருசுடரினோடு
மேன்றநல்வேதநான்குமுருவுறவினிதிற்செய்தே. (௭௧)

பஞ்சபூதத்தோடீசர்பதினொருவரையும்பண்ணி
யஞ்சாமாவரணஞ்சேர்க்கவாறாமாவரணந்தன்னி
லெஞ்சலில்களிறோரெட்டுமெண்டிசைப்பாலரோடுஞ்
செஞ்சவேமுறைவழாதுசேர்த்திடவேண்டுமென்றே. (௭௨)

வாள்கதைசூலஞ்சத்திகுந்தமங்குசம்வண்சாப
நீள்குடைசங்கமுத்தஞ்சேர்த்திகுநிதியமாடி
கோளில்சாமரஞ்செஞ்சாந்தங்கோரோசனையிவையீரெட்டு
மோளியினுற்றவேழாமாவரணத்தினுய்க்க. (எ௩)

எட்டாமாவரணந்தன்னிலிரண்டாமாவரணத்தோதப்
பட்டனசேர்த்தியானேற்றுரியிலெட்பரப்பிமுன்போற்
கட்டியசாலைதன்னில்விதிமுறைகருமமாற்றி
யுட்டெளிமறைவல்லோர்க்குத்தக்கனையோடுநல்க. (எ௪)

அற்பொடுவிசுவநேமியளித்திடுமடைவுசொன்னேங்
கற்பகலதையைநல்கும்விதிமுறைகழறுகிற்பே ,
முற்படுதுலைக்குச்சொன்னமண்டபமுதலாயோமம்
பொற்புடனியற்றியீசன்பூசனைபுரிதல்வேண்டும். (எ௫)

ஆயிரம்பலந்தொட்டைந்துபலமுடிவாகச்செம்பொ
னேயவன்கொண்டைந்துகற்பகலதைகள்பண்ணித்
தூயநற்பலங்காய்பைம்பொற்றாசிவைதொகுத்தீரைந்து
சேயநற்பொன்னாற்செய்தகின்னரமிதுனஞ்சேர்த்தி. (எ௬)

கற்பகலதையைத்தூயவேதிகைகவினச்சேர்த்தி
யற்புடன்பிராமியோடுமனந்தசத்தியையாங்குய்த்த
பொற்புறுகமலஞ்சேர்ந்திப்பூசனையினிதினாற்றி
முற்றுணர்மறையோர்கொள்ளமுகமனோடளித்தல்வேண்டும்.

கற்பகலதைகணல்கும்விதியினைக்கழறல்செய்தேந்
தற்பரமளிக்குஞ்சத்தசாகரதானஞ்சொல்வாம்
பொற்புறுசாலையோமம்பூசனைமறையோர்க்கூட்ட
லற்புறுதுலைக்குச்சொன்னவண்ணமென்றறைவர்மாதோ.(எ௮)

இயைந்தநற்பலமீரைந்தூறுதியேழ்பலமீறாக
வயங்குநற்பொன்னிலொட்டையோர்முழந்தளவுவாய்ப்பப்
பயின்றவேழ்குண்டஞ்செய்தெட்பரப்புமானேற்றின்றோலிற்
றயங்கவைத்துப்புநெய்பாறயிர்கன்னன்மதுநீர்வாக்கி. (எ௯)

உப்பினிற்பிரமன்பாலின்மாளெய்யிலுயர்மகேசன்
செப்பியகன்னற்சாற்றிலாதவன்றயிரிற்றேவி
லொப்பருமகவான்றேனிற்றிருமகளூரவுநீரிற்
றுப்புறழ்தொண்டைச்செவ்வாய்வளைமடலங்கச்சேர்த்தி. ()

குண்டமோரேழினுள்ளுங்குலமணிதுலங்கச்சேர்த்தித்
தண்டலின்மறையோர்கொள்ளத்தக்கனையோடுநல்கல்
மண்டுமேற்கடற்றானத்தைவகுத்தனமிரத்தினதேனுப்
பண்டைநான்மறையோர்க்கீயுமுறையினைப்பகரலுற்றும். (அ௩)

துலைக்குமுன்னுரைத்தவண்ணமண்டபமோமந்தூய்தாய்
விலக்கரும்பூசைசெய்துவெள்ளுப்புபரப்பியாங்குப்
புலப்படக்கன்றினோடும்பசுவினைப்பொறித்துமுக்கில்
நலத்தகுபுருடராகநூற்றினைநயந்துவைத்தே. (அ௨)

முகத்தினிற்பத்மராகமெண்பத்தொன்றமைத்துமுத்தின்
வகுப்புறநெற்றிசெய்துவயங்குபொற்பட்டஞ்சேர்த்தி
மிகைப்படநூறுமுத்துக்கண்களில்விளங்கச்சேர்த்தி
நகைக்குமொள்வயிரநூறுசென்னியினன்கின்வைத்தே. (அ௩)

புருவத்திற்பவளநூறுவைத்துப்பொற்கொம்புசேர்த்தி
யிருசெவியென்னமுத்துச்சிப்பியையிலங்கச்சேர்த்தி
யுருவுறுகழுத்திற்கோமேதகமொருநூறுசேர்த்தி
வெரிநிடையிந்திரநீலநூற்றினைவிளங்கவைத்தே. (அ௪)

ஓரிருபுறமுநூறுசிவரத்தினத்தையொட்டிச்
சேருறவெயிற்றினூறுபளிங்கினைச்சேர்த்திவாலி
லாரமோர்நூறுசேர்த்தியறையின்மாணிக்கநூறு
சார்வுறவைத்துப்பொன்னாற்குளம்பினையினிதுசாற்றி. (அ௫)

திங்கள்வெண்மணியினோடுஞ்செங்கதிர்க்காந்தகல்லைப்
பங்கமின்முக்கினுற்றவாரந்திற்பதியவைத்துந்
தங்கியநாபிதன்னைவெள்ளியாற்சமைத்துச்சாந்தங்
குங்குமக்கருப்பூரத்தாலுரோமகூபங்கள்பண்ணி. (அ௬)

காருடப்பச்சைநூறுபாதத்திற்கவினவைத்துச்
சீர்கெழுசந்திதோறுநவமணிதிகழச்சேர்த்தி
யேர்கெழுகன்னறன்னிலிலங்குகோமயமதாக்கி
வார்தருநறுநெய்தன்னைக்கோசலமாகவைத்தே. (அ௭)

கன்றுமிவ்வாறுபண்ணிக்கற்பவென்கலமும்வைத்துத்
துன்றியவாலின்மற்றோர்கவரியுமினிதுதூக்கி
மன்றநற்பைங்கூழ்தன்னைவாயின்வயின்குவித்துப்பின்ன
ரொன்றுதக்கணையினோடுமறையவர்க்குதவல்வேண்டும். (அஅ)

பொருவருமிரத்தினதேனுவளிக்குமாபுகன்றேம்பொற்பின்
மருவுமாகடதானத்தையளிக்குமாவகுத்துச்சொல்வாங்
கருதருஞ்சாலையோமங்கறைமிடற்றெந்தைபூசை
பரிவொடுந்துலைக்குச்சொன்னவாறெனப்பகர்ந்தாரன்றே. அ௯

ஒட்டையிற்குறையாதோங்குநூறுமேல்விரலினேமு
மட்டுறவியன்றபொன்னின்மாகடமொன்றுசெய்து
விட்டொளிவிரிக்குந்தூயவயிரத்தாலதனைவேய்ந்து
வெட்பொடுநறுநெய்யான்பால்கட்டத்தினிற்பெய்தபின்னர். (௯0)

கற்பகதருமுன்போலச்செய்தொளிர்கடத்தினேற்றிப்
பொற்புடைதருவினீழற்புண்டரிகத்தின்மீதே
யற்புடைப்பிரமன்மாயனரன்றனேயினிதுவைத்து
வெற்புறழ்பனைக்கைவேழமுகத்தனைவிதியிற்செய்தே. (௯௧)

கண்டிகைமாலைதாங்கிமுதன்மறையிருப்பக்காமர்
புண்டரிகங்கைதாங்கிப்பொருந்திடவிரண்டாம்வேதம்
பண்டருவீணைவேணுப்பரித்துயர்சாமநிற்ப
வெண்டருநான்காம்வேதந்தர்மனையினிதினேந்த. (௯௨)

கண்டிகைமாலையோடுகமண்டலந்தாங்கியோர்கை
தண்டலில்வரதமாகப்புராணதெய்வதமுன்சார
வெண்டருமுருவமைந்துமினிதினிற்பண்ணித்தூய
மண்டபமதனிற்பொன்னங்குடத்திடைமருவவைத்தே. (௯௩)

பொற்குடஞ்சூழப்பைங்கூழ்சொரிந்துபொற்கலன்களாடி
யெற்படுதீபம்பொன்னங்குடைசெருப்பிருக்கைமஞ்சம்
பற்பலநீர்பெய்கும்பம்வைத்துபவாசம்பண்ணி
யற்புடைமறையோராட்டக்கும்பநீரினிதினுடி. (௯௪)

புகழ்மறைக்குரவனேடும்பொற்குடம்வலஞ்செய்தாங்கண்
மகிழ்வொடுமறையோர்கொள்ளமாகடமதனையுள்ளத்
தகவொடுமினிதினல்கியாதுலர்விருந்தர்தக்கோர்
நகைபடுநோயர்கொள்ளநன்னிதிவழங்கல்வேண்டும். (௯௫)

இனையவெண்ணிரண்டுதானம்விதிப்படியினிதினீந்தோர்
கனைமதுவுறையும்பொன்னங்கற்பகநீழல்வாழ்ந்து
பனையுறழ்தடக்கைநால்வாய்ப்பகட்டுரிபோர்த்தவெந்தை
வனைகருங்கழலிற்சேர்ந்துபிறந்துழலாதுவாழ்வார். (௯௬)

வேறு.

நித்தியநயிமித்தியங்காமியநின்மலமெனநான்காய்ப்
பைத்தபாம்பின்மேற்கிடந்த நீள்புவியினிற்றனத்தைப்பகர்கிற்
முத்தராகியமுனிவரர்க்கருளொடும்பலத்தினை முன்னுது [பார்
கைத்தலப்பொருளளிப்பதுநித்தியதானமாய்க்கரைகிற்பார். ()

பாவநீந்திடவேண்டுமென்றுளத்திடைப்பரிந்துநான்மறைகற்று
நாவலர்க்களித்திடனயமித்திகநன்மகராநிதிவேட்டுத்
தாவில்கேள்வியோர்க்குதவுதல்காமியஞ்சங்கரனுவப்பெய்த
வோவில்ஞானிகட்குதவுதனிருமலமெனவுரைத்தனரன்றே. ()

இடமுங்காலமுங்கொள்பவனியற்கையுமுணர்ந்தளிக்குதமுன
மடைவிற்றனநன்களிக்குநரோநிதியீட்டியபொருண்மீதி [கின்ற
லுடையவன்பரோபுலோபிபிளளித்திடாதொண்பொருள்புதைக்
மடமைநெஞ்சினர்நிதியினிசையிலாதழித்திடுபவர்மாதோ. ()

ஊசிமென்னுனேயூன்றிடமாயினுமந்தணர்க்குவந்தீவோ
ராசினற்கதியடைகுவரொன்றிடிலமுதுகுகமைழசெந்தேன்
மாசினல்வளனிறைந்தநற்கிராமமொன்றளிப்பவர்பலம்வாயாற்
பேசிலாகுமேபேசிடினுன்முகப்பிரமற்குமரிதாமால். (க00)

சொன்னமாயிரமந்தணர்க்கீயினுஞ்சுடிகைவாளராநெற்றி
மன்னுபூதலம்வலங்கொடுதிரியினும்வளர்சிகையழனுப்பட்
டுன்னிமாதவம்புரியினும்பசியினுற்றளர்ந்தவர்துயர்தீர
வன்னமீபவர்பலத்தினிலாயிரத்தொன்றும்வந்தடையாதே. ()

பொருவில்வித்தியாதானநல்குநர்மலர்ப்பொகுட்டுறைவே
தாவின், றிருநகர்க்கணினுறைகுவர்பருவமோராந்தினுஞ்சிவ
பூசைக், கரியநன்பொருள்வழங்குநரரனுலகடைவரொள்ளிணே
யீந்தோர், கரியமாயவனுலகில்வாழ்மடந்தையர்தம்மொடுகளி
ப்பாரால். (க0உ)

மாகமாதத்திற்சுக்கிலபக்கத்திற்றுவாதசிமருவுற்ருற், சே
கெறிந்திடும்வெண்டுகிலணிந்துயர்திலத்திருலோமஞ்செய், தா
கம்வாடநோற்றந்தணர்க்கெள்ளொடுமமு தினையளிக்கின்றோர்,
தோகைபாகனற்றிருவடிநீழலில்விண்ணவர்தொழவாழ்வார். ()

செல்வம்வேண்டுநரிந்திரன்சேவடிபூசனைசெயல்வேண்டுஞ்,
சொல்லுதற்கருஞானம்வேண்டுநரரன் கழலிணைதொழல்வே
ண்டு, மல்லனோய்கெடவேண்டுநர்செங்கதிராதவற்றொழல்வே
ண்டுங், கல்விவேண்டுநர்மலரயன்சேவடிகருத்தொடுந்தொழ
ல்வேண்டும். (க0௪)

தருமம்வேண்டுநர்பாவகன்சேவடிதயாவொடுந்தொழல்
வேண்டுங், கருமம்வேண்டுநர் கணபதிசெய்யபொற்கழலிணை
தொழல்வேண்டு, மூரியபோகமேவேண்டுநருடுபதியொண்க
ழறொழல்வேண்டும், வெருவரும்பலம்வேண்டுநர்வஸிக்கிறை
மென்பதந்தொழல்வேண்டும். (க0ரு)

சிவிகைமெல்லணைமஞ்சநன்களித்தவர்திரண்முலைப்பணை
மென்றோ, ணவையில்கற்புடைமனைவியரிளமுலைநலநுகர்ந்து
றைகிற்பார், கவிகைநல்குநர்வெயிலெனுமுழந்திடாரடைந்தவர்
தமைக்காப்போர், குவிகையோடுநின்றொருவர்பாலிரந்திடாத
மரர்கோனெனவாழ்வார். (க0சு)

அளிப்பவன்றனைவிலக்குநர்மலப்புழுவாகிவெந்துயர்கூர்
வார், தளிக்கரும்புயல்வறந்தநாட்டானியமீட்டுநன்தயாவோ
டுங், களிப்பவெம்பசியுழந்தவர்க்களித்திடானென்றிடிற்கழல்
வேந்த, ரொளித்தகைப்பொருணல்லுடன்கவர்ந்தவனுலேந்தி
டச்செயல்வேண்டும். (க0எ)

பாவிவெம்பசியுழப்பினுமாங்கவர்க்களித்திடல்பழுதாகு
மோவினல்லறமுடையவர்கைப்பொருளுள்ளவரானுலுந்
தாவினன்பொருளளித்திடினன்மையேபயந்திடுந்தயவோடுந்
தேவராலயங்கட்டுநர்புதுக்குநர்சிவனடியடைவாரே. (௧0அ)

தானமுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௫அஉ.

இருபத்தாருவது

## வானப்பிரத்தமுரைத்தவத்தியாயம்.

ஆயுளினுலாங்கூற்றிரு திபினினரைதிரையடைந்துமூப்பெய்திச், சேயினற்சேயுமைந்தரையுயிர்த்தாற்றிருவர்பான்மனைவியையிருத்திக், காயெரியோடும்போகினும்போககடிமனையோடுபோகினும்போ, யேய்மதிப்பக்கத்துத்தராயனத்திற்கான்புகுந்திருந்தவம்புரிக. (௧)

ஊழ்த்தமென்சருகுகாய்கிழங்களுந்நியதிபூசனையுவந்தாற்றிக், காழ்த்தநீள்சமிதைகொண்டழற்கரும்பஞ்சவெச்சங்கடியற்றிச், சூழ்ந்துவண்டரற்றுங்கொன்றைவேணியனைத்தொழுதுநீண்மயிர்நகநீட்டிப், பாழ்ந்தவெம்பிறவியகற்றுவான்மூன்றுகாலமுநீரிடைப்படியா. (உ)

எட்டுமென்கவள மேற்றயின்றிட்டி யிருவாவினுநனியியற்றி, மட்டுநுண்டேறனுகர்தலான்றின்ன லொழிந்துவெவ்வனத்திலேயல்லாற், பட்டினத்துள்ளயாவையுந்துணந்துகங்குலூணிகழ்ந்துபார்ப்பதியை, யுட்டெளிவோடுமினைந்திடல்வானப்பிரத்தர்தம்மொழுக்கமென்றுரைப்பார். (௩)

நெடிபடுகானிற்றவம்புரிவோர்களேரிழைமகளிரைக்கலப்பி,னடைவுறுமொழுக்கமழிந்திடுமாங்கண்மைந்தரையுயிர்த்திடினவரை, யொடிவிறன்மறையோர்தீண்டுதலாகாவோதிவித்திடுதலுமாகா, படியினிலெவருமாங்கவன்மரபுபழிபடுமாமெனவுரைப்பார். (௪)

வேந்தரும்வானப்பிரத்தராய்மேவி வின்னணம்புரிகுதல்வேண்டுங், காந்தவெம்பாறைபால்படுமிடத்திற்கண்படைபுரிகுதல்வேண்டு, மேய்ந்திடுபெருவமொன்றினுக்கல்லாலருந்துகூறீட்டுதலாகா, சாந்தணிமுலையார்தடமுலைபுல்லினரகணித்தாமவர்தமக்கே. (௫)

ஏற்பெறநோற்றேரைப்பசியடையினீட்டியவனைத்தையுமளிக்க, வெற்பினைவனநெற்புல்லூரலாகவுமியொழித்தருந்துதல்

வேண்டு, மற்புடனுள்களொன்றுவிட்டேனுமாறுநாளிடையொழித்தேனும், பொற்புடனருந்தல்வேண்டுமற்றென்னப்புலமைநூல்வல்லவர்புகன்றார். (௬)

புலவுசீவாதோல்புனைந்ததுவே போர்வையாய்மெய்யினிலணிந்து, மலைமகள்கேள்வ னருளினைவழுத்தி யாங்கவன்மந்திரஞ்செபித்துக், கலைகளினுயர்ந்தவுபநிடதத்தின்பொருடெரிந்தழல்வினைகருதி, யுலவுதல்வானப்பிரத்தர்தம்மொழுக்க மெனமறைமுழுவதுமுரைக்கும். (௭)

வானப்பிரத்தமுறைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௰௮௬.

---

இருபத்தேழாவது

## சன்னியாசமுறைத்த வத்தியாயம்.

ஆயுளோம்பதனிற்றவம்புரிவானப் பிரத்தனையெழுபத்தஞ்சகன்றாற், றூயநல்லெதியாய்க்கிடமேபோலவொருவயிற்றுஞ்சிடாதுழன்று, காயமுந்தானும்வேறெனவுணர்ந்து புலன்வழிக்கருத்தினைச்செலுத்தா, தேயினபருவநூற்றையுங்கழித்தலெதியொழுக்கெனமறையியம்பும். (௧)

ஞானசன்னியாசம்வேதசன்னியாசங்கருமசன்னியாசமாநலங்கொ, ளீனமிலெதிகளொழுக்கமோர்மூன்று மிந்தியபந்தனைநீங்கித், தானதுவாகவொழுகுதல்ஞானம்வதிறன்னற்பலன்விழையா, தூனமில்யோகம்பயின்றிடல்வேதவெதியொழுக்கெனவுரைத்திடுவார். (௨)

தழலினையான்மாவிடையினிலொடுக்கி மனத்தினன்மகந்தனியியற்றி, மழவிடையுயர்த்தோன்றனைநினைந்திருத்தல் கருமசன்னியாசிமாணெக்காம், பழுதறுமிவரில்ஞானசன்னியாசி யுயர்ந்தவன்பற்றிகலின்றி, விழைவொடுபேறுமிழப்புமொன்றாகநினைந்திடும்விமலதையதனால். (௩)

ஆற்றிடைச்செல்விற்பல்லுயிர்தாளின்வீந்திடுமெனவுளத்தெண்ணி, தூற்றுமைப்புயல்சேர்திங்களோர் நான்குமோர்நகரிடைத்தனிதுன்னி, யேற்றுணவருந்தியல்லசெய்யாமலிலகொளிப்பிறையெயிற்றகல்வாய்க், கூற்றுயிர்குடித்ததாமரைப்பொற்றாள்குறித்திடலெதியொழுக்காமால். (௪)

வேறு.

கற்றோயிரத்தத்துகில்புனைந்துகழுத்தினளவுமயிரொறிந்து
பற்றார்புரந்தீயெழநகைத்தபரமன்சரிதைபாராட்டி
மற்றோர்தெய்வமெண்ணுதுபசுநூலுளத்தின்மதியாமல்
வெற்றோருணாகள்விளம்பாதுநடத்தலெதிகள்வியனெறியே. ()

முக்கோமுங்கிச்சிகைதரித்துமுன்னூலணிதறவிராது
தக்கோரோத்தும்வேதாந்தமுறையினின்றுதம்முளத்தி
னெக்காலத்துஞ்சிவன்பாதமெண்ணலொழியாதிருந்தோரு
மைக்கார்மிடற்றுப்புத்தேளிர்கமலபாதமருங்கடைவார். (சா)

சன்னியாசமுறைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—ருகூரு.

---

இருபத்தெட்டாவது

## முற்றத்துறந்தோர்பிராயச்சித்த முறைத்தவத்தியாயம்.

இல்வாழ்விரர்செய்தொழினீங்கியிருந்தகாலத்தேழ்மனை யின், மெல்லப்புகுந்தேயுறுவேற்றெண்பிடியாங்கருந்தல்விய ன்மூங்கின், மல்லற்சுரையின்மெல்லோடுமரப்பாத்திரமண்பா திரமே, சொல்லுமெதிகட்பாத்திரமாஞ்சுரையோடிவற்றிற்சிற ந்ததுவே. (க)

இதயமலரிற்றிருமாலையிருத்திற்றிருமாவிதயத்திற்
கதவெங்கரியினதளுரித்தகண்மூன்றுடையோன்றனையிருத்தி
விதியிற்றியானஞ்செய்வோர்கள்வீட்டினடைவரறத்துறந்தோர்
முதிருங்கங்குல்பகல்மாலைமுக்கணனைத்தொழல்வேண்டும். ()

முற்றத்துறந்தோர்முதுக்குறைந்தோர்முகிண்மென்முலையார்த
மைத்தீண்டிற், பற்றற்றிரிந்துகிரிச்சரங்கள்பண்ணிப்பிராணுயா
மஞ்செய்,துற்றநியமம்பலவியற்றியுலவாப்பாவமொழிப்பதற்கு,
வெற்றிமதனைவிழித்தெரித்தவிமலன்பாதந்தொழல்வேண்டும்()

துறந்தோர்பொய்ம்மையுரைத்திடுதறீதுதோமில்மாயையி
ஞல்,மறந்தோர்பொய்ம்மையுரைத்தாரேல்வருந்தியொருநாளு
ண்டியொழிந், தறங்கூர்பிராணுயாமமொருநூறுற்றிடுககளுரு
ளரேற், சிறந்தசாந்திராயணமோர்வருடஞ்செய்யவேண்டுமால்

அறியாதொன்றிஞவியினைச்செகுத்தாரென்னினுளமஞ்சிச்
செறியுஞ்சாந்திராயணங்கள்செய்துசிவபூசனைபுரிக
நறுமென்குழலார்முலையின்மன நடந்ததென்னிலெண்ணிரண்
குறைவில்பிராணுயாமங்கள்கோதின்றியற்றவியல்பாமால் [டிற்

முகிழ்த்துவீங்குமிளமுலையார்முறுவனேக்கிமனத்தினிடை
மகிழ்ந்துகாதுப்பகல்வீழின்மூன்றுநாளுண்மறுத்துளத்தி
னிகழ்ந்ததன்னையொருநூறுபிராணுயாமமியற்றிடுக
நிகழ்ந்தநெறியினிருந்தோர்கள்பாவமனைத்துநீங்கிடுமால். (ரு)

நலிவெம்பசியின்பிடித்துநதநவச்சிரார்த்தந்தனிநுகரி
னெலிவெண்டினையின்வெள்ளருப்புவாளாநுகரினூந்தினரு

னலகில்பிராசாபத்தியமாங்கிரிச்சரங்களினிதாற்றிக் [மால்
கலைவெண்டிங்கள்முடித்தபெம்மான் கழற்றுள்வழுத்தவேண்டு.

எண்டோண்முக்கட் பெருமானுக் கிணையாந்தெய்வமுண் டென்போர், புண்டோய்நரகத்தடைவரொன்றாற் புவிதீவளிநீர் வெளியாகி, விண்டோய்ந்துலவுமிருசுடராயெச்சனுகிவேதாந் தந், தண்டாதுறையுந்தனிச்சுடரின்பாதந்தொழுதறகைமைத்தே

இன்னவாற்றினெறிநிலைமையுரைத்தேமீதுநான்முகத்தோன்
முன்னமுனிவர்க்குரைத்ததிதன்பொருளையோகமுயன்றோர்க்கு
மன்னுங்காதற்புதல்வருக்குமாணுக்கருக்குமல்லாது [தார்
கொன்னேபிறர்க்குவிரித்துரைப்பிற்குற்றம்பயக்குமெனவுரைத்

முற்றத்துறந்தோர்பிராயச்சித்தமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௪௦௪.

---

இருபத்தொன்பதாவது

## பிரமகத்திப்பிராயச்சித்தமுரைத்த வத்தியாயம்.

செய்தக்கசெய்யாதொழிந்தாரெனிற்செய்தலாகா
வெய்துற்றகன்மமிழைத்தாரெனின்மேன்மையெய்தி
யைதுற்றநெஞ்சத்தவர்பாவமகற்றும்வண்ண
நொய்திற்புகன்றாரவையானுநொடிதலுற்றேன். (௧)

கொலைசெய்தல்கள்ளல்குருநிந்தைகள்ளுண்டலின்ன
வலகில்கொடும்பாதகர்ச்சேருதலாகவைந்தா
நிலையின்றியலுங்கொடும்பாவநினைக்கலாது
மலைவின்றிக்கூடுமவர்தன்மைவகுக்கலுற்றாம். (௨)

கொலையாதிபாவம்புரிந்தோர்கொடும்பாவமெண்ணு
துலையாதுபேசியுடன்வைகிமற்றொக்கவுண்டு
மலையாமலுற்றோர்பருவமுடன்வைகினானே
லலையாதிபாவம்புரிந்தோர்கொடும்பாவியாவான். (௩)

வேறு.

பஞ்சமாபாதகரொன்றவர்தன்மையறிந்திருந்தும்பரிந்துநெ
ஞ்ச, மஞ்சுறாதாங்கவரோடொருகணமாயினுங்கூடியமர்ந்துவா
ழ்வோர், செஞ்சவேயவர்போலப் பாதகரென்றறிவுடையோர்
தெளிந்துசொல்வா, ருஞ்சுபோமற்றவர்க்குப்பிராச்சித்தவிதிசெ
றிதிங்குரைத்துமன்றே. (௪)

அழலூட்டிப்பின்னுமொரு மருந்தவத்தோர்ச்செருத்தோர்க டண்டந்தன்னிற், கழிபுலாற்றலைவிக்கியிராறுபருவநகரக்கண் ணுறாது, நிழல்காலுமணிமுடிப்பொற்சினகரத்துச்செல்லாதுநீ

சர்போல, வொழியாதுநகர்ப்புறத்தின்மென்மெலச்சென்றைய மேற்றுண்டல்வேண்டும். (ரு)

எண்ணரியகொடும்பாவம் புரிந்தனமென்றுளத்தினிடை யெண்ணியெண்ணி, நண்ணரியகொடுங்கானின்வெவ்வெரியிற்ற வம்புரிந்துநாளுநாளும், புண்ணியராமேச்சுரத்தை வலங்கொண்டுசேதுவினன்புனலிற்றோய்ந்து,மண்ணலஞ்சேர்க்கங்கைதனிலாடியுமிக்கொடும்பாவமகற்றல்வேண்டும். (சு)

பற்பலவும்புகன்றென்கொல் காசிநகர்தனிலெய்திப் பவளவேணி, யற்புதமாம்வயிரவன்றன்கபாலமோசனதீர்த்தத்தருளினுடிற், சொற்றவரும்பிரமகத்திதொலையுமெனச்சுடர்க்கொழுந்தாங்கடவுடன்னை, வற்பினொடும்பிரமகத்தி தொடர்ந்தகதையுரைத்தியெனவழங்கலுற்றான். (எ)

பிரமகத்திப்பிராயச்சித்தமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—சுகக.

---

முப்பதாவது

## வயிரவன்பலியிரந்த வத்தியாயம்.

கொண்டறவழ்ந்துவிளையாடுங்குடுமிமேருவரைச்சாரல்
வண்டுஞ்சுரும்புமொருகோடி வழங்குங்கமலப்பொகுட்டுறையு
மண்டர்பெருமான்முகநோக்கிச்சனகனுதியருமுனிவர் [ர்
தண்டாவுலகமெவற்றினுக்குந்தலைவனெவன்கொல்சாற்றென்று

கனவெண்டிரைசூழுலகனைத்தும் படைத்துக்காத்துக்காய்ந்திடுத, வினையுமெனதுவிளையாட்டே லபயவரதம்பிடித்துநெளித்,தெனையொப்பவர்யாரெனத்திசைதோறிருக்குந்தேவரெல்லோரு, முனிவீரென்னையிணையொவ்வார்யானேமுதல்வனெனவுரைத்தான். (உ)

என்னமலரோனுரைத்திடலும் பெடைவண்டிவஞ்சூன்முதிர்ந்துறங்கும், கன்னித்துளவந்துயல்வருதோட்காயாவண்ணன்விரைந்தெய்தி,முன்னமெனதுந்தியிற்பிறந்தநீயோமுதல்வன்முறைபிறழச், சொன்னதெவன்கொலெனக்கனன்று சொல்லாச்சுடுசொற்பலசொன்னான். (ங)

இருவர்மொழியுங்கேட்டிகழாவிருக்குவேதமாங்கெய்திப்
பருவமுகில்போனிறத்தோயும்பங்கேருகமேலுறைவோயும்
விரியும்புவனமனைத்தினுக்குங்கடவுளல்லீர்விரிகடலிற்
கருகும்விடமுண்டுமையளித்தகருணைக்கடலேமுதலாவான். ()

என்னுவிருக்குமறைபகர விரண்டாம்வேத மாங்கெய்தி, யொன்னார்புரமூன் றெருங்கெரியமுறுவல்கோட்டுமொருமுத

லே, முன்னேன்முன்னேனெனமேற்கோள் காட்டிமுதிர்ந்தமு
துக்குறைவாற், றன்ஞைத்தழும்பமுறையிட்டுக் கனம்போலதிர்ந்
துசாற்றியதே. (ரு)

இறந்தும்பிறந்துமெவ்வுயிருமொழியாதுலவியெஞ்ஞான்றுங்
கறங்குபோலத்திரியவெவணியற்றுங்கருணைக்கடல்யாவன்
சிறந்தவந்தச்சங்கரனேதேவதேவனென்பதல்லான்
மறந்தும்பிறனையெண்ணற்கவென்றுசாமம்வழங்கியதே. (கா)

ஒன்றாய்ப்பலவாயுயிர்க்குயிராயுலகமனைத்துந்தானுகி
நின்றுங்கவற்றிற்பொருந்தாதநீறுபூத்தசெழும்பவளக்
குன்றயன்பரிதயமலர்க்கோயிருருமினிதமரும் [துவே
பொன்றாழ்சடையோன்முதல்வனென நான்காம்வேதம்புகன்ற

வேதநான்குமிவைகூறவெகுண்டுகமலத்திறைபுகல்வா
ஞதிப்பிரமமொருபங்கினணங்கையமைத்துநீறுடிப் [ங்
பூதத்தொகுதியொடுங்குனித்துப்பொறிவாளரவக்கச்சசைத்து
காதலோடுமென்மகவாய்ப்பிறக்குங்கொல்லோகழறுதிரால்(அ)

என்றுகமலத்திறைகூறக்குடிலையெழுந்துநகைகோட்டி
நன்றுசொன்னுயெனவெள்ளிநாதன்பனையோடியைந்திடுத
றுன்றுமாபோலிருப்பதல்லாற்றேய்ந்துந்தோயான்பனைகன்னி
குன்றவில்லியெஞ்ஞான்றும்பிரமசாரியெனக்குறிப்பார். (கூ)

இமிவேறிவர்ந்தானெனவுரைத்தாயென்றுந்தருமமாதவிஞ
லமலனதனினினிதுறைந்தானன்றிச்சுடலையாடியெனக்
கமலயோனியிகழ்ந்துரைத்தாய்புவனமுழுதுங்கனற்றியநாள்
விமலனுறையப்புறங்காடேயன்றிவேறேரிடனுண்டோ. (க0)

என்னக்குடிலைதெருட்டவுளந்தெருளாதெகினபாகனெடுங்
கன்னிப்படலைத்துழாய்மார்பன்செம்மாந்துறைதல்கண்ணுற்று
துன்னற்கரியபேரொளியாமுக்கட்பெருமானெருகோடி [ங
மின்னுக்கதிரொண்டிசையளப்பவிசம்பூடறுத்துவெளிநின்றான்.

சுடர்பன்னிரண்டுமின்மினியிற்றோன்றவெறிக்கும்பேரொளியும்
படைகடிருக்குமெண்டோளுமுகமோரைந்தும்பானிறத்த
வடலையணிந்தவெழின்மெய்யுமலங்குசோதிமுக்கண்ணு
முடையவுருவநோக்கியயனஞ்சாமுகமீதுரைத்ததுவே. (கஉ)

முன்னமெனதுநுதனுப்பணுதித்தநீயோமுதல்வனெனப்
பின்னும்வெகுண்டுகூறுதலும் பிள்ளைப்பிறைதாழ்மணிமவுலிப்
பொன்னங்குடுமிவரைகுழைத்தபுனிதன்காரிமுகநோக்க [ன்
வன்னேனிடக்கைநகநுதியான் மலரோனைந்தாந்தலையகழ்ந்தா

உலகம்பூத்தகனிமுதல்வனைந்தாந்தலையையுயர்காரி
யிலகுமுகிரினகழ்ந்திடலுமிறத்தனோக்கியுளமிரங்கிக்
கலவமஞ்ஞையொருபாகனுயிரளிப்பக்கடிக்கமல [தான்
மலரோன்றுயிலேற்றவர்போலக்கடிதினெழுந்துவாழ்த்திசைத்

மூவாமுதலாயெவ்வுலகும் படைத்தாய்போற்றி முதுக்கு
ன்றைவாழ், காவாப்புலன்கடனிகாக்குமுனிவர்கருத்தி னடம்புரி
யுந், தேவாபோற்றிவேடன்மலர்க்கண்ணுந்திருமால்விழிக்கமல
ப், பூவும்புனையவருள்பொழியும்பொன்னேபோற்றிபோற்றியே.

என்னுமிறைஞ்சுஞ்சூழ்போதுமெந்தைகமலச்சேவடிக
டன்னதுளத்தினீங்காமலிருத்துமறைநூறனிற்பழிச்சுங் [யே
கொன்னேதமியேனிழைத்தபிழை பொறுத்தியென்னுங்குற்றடி
னுன்னைவணங்குமனந்திரியாதிருப்பவரநீயுதவென்னும். (௧௬)

என்றிவ்வாறுமறைக்கிழவனிரந்துகேட்டவரமருளிப்
பொன்றுதுலகினறநிறுத்தவுளத்தினெண்ணிப்புதுநறவங்
கொன்றைதுளிப்பப்பண்டரங்கங்குனிக்குங்கூத்தப்பிரானயனை
வென்றகாரிமுகநோக்கிவிழைவோடிதனைவிளம்புவான். (௧௭)

தருமவொழுக்கம்யாம்புரிந்தவாறேயன்றித்தருமுறையின்
விரியும்புவனத்துள்ளோர்கள்புரியாரதனால்விரிதலையோட்
டரிதிற்பருவமீராறுமையமேற்றுப்பிரமகத்தி [ன்
விரைவினொழித்தீண்டடைதியெனத்தருமமோர்ந்துவிளம்பினு

காசிநகரந்தனிற்காரியடையுமளவும்பிரமகத்தி
மாசின்மடவாருருக்கொடவன்பின்னேதிரிதியெனவழங்கிப்
பேசுமுலகமுழுதீன்றபெரியோன்றனக்குவிடைநல்கி
யோசையல்லாதணிபுனையாவரவோன்மறைந்துபோயினன். ()

வேறு.

மையணிகண்டனுருவினைக்கண்டோர்மாரவேளுருவினை
நோக்கின், வெய்யநன்குரங்கினுருவெனவிகழ்ந்துவிழிமலர்பு
தைத்தநர்நகைப்பச், செய்யதாமரைக்கண்மாலெனமாதர்நல்லு
ருவினிதினிற்றேர்ந்திவ், வையனைப்புணரத்தவமிழைத்திலமெ
ன்றமரரேக்கறவொடும்வணங்க. (௨0)

கொழுதிவண்டினங்கள்கோடிவீழ்ந்தரற்றுங்கொழுமலர்க்
கொன்றைதாழ்சடையோன்,மழையுறழ்மேனிக்கண்ணனுமயனு
மயனுமோர்கோடிநாள்வருந்தி, யெழுதினுமெழுதற்கரியநல்லு
ருவந்தன்னொடுமிருநிலவலாப்பிற், பழுதறுவிண்ணிற்பாதலம
தனிற்பலியிரந்திடவெழுந்தனனால். (௨௧)

தளிமுகில்பைந்தேன்மாரிபெய்தென்னத்தழல்படுகாட்டி
டையுலந்த, முளிசினைக்கருவும்பசுந்தழைநுழைப்பமூரியேறு

யரியகடவுள், களியொடுஞ்சாமகீதம்வல்லிரும்புங்கல்லுநின்று ருகிடப்பாடி, யளியொடும்புவியின்மகளிர்பின்றொடரவணிநக ரெங்கணுந்திரிந்தான். (௨௨)

கொலைக்கரும்புருவவரிக்குயிலன்னார்கோமறுகெய்தமெல் லடிதோ, யலத்தகக்குழம்புதோய்ந்தமென்சுவட்டின்வீழ்ந்து வீழ்கூந்தன்மென்போது, சிலைத்தலைகுழைத்துவேள்விடுங்கணை களீசனைத்தொடர்ந்துசென்மாதர், முலைத்தலையுருவிக்குருதிவா ய்மூழ்கிவயின்வயின்மொய்த்தனகடுக்கும். (௨௩)

வேறு.

மட்டவிழ்கொன்றையானைக்காணியமறுகிற்செல்வாள்
பட்டிகையவிழ்ந்துகாலிற்கிடப்பதுபசும்பொற்சுண்ணங்
கொட்டியமுலையாற்புல்லார்கேண்மைபோனொருங்குன்று
மிட்டிடைவருந்துமேகலென்றடிபிடித்தல்போலும். (௨௪)

அரிக்குரற்சிலம்புகாலினவிழ்ந்திடவெடுத்தபோதின்
விரைக்குழன்மாதரையவ்வீதியிற்போந்தானென்ன
வுரைத்தலுமங்கைத்தாங்கியோடுதல்விரைவிற்சென்ற
திருக்கிளர்தாளிற்பேயலெனநனிசேறல்போலும். (௨௫)

கறைகெழுசூலத்தானைக்காணியவிரைவிற்செல்வாள்
பிறைவடங்கிடந்தபொம்மலிளமுலைததும்பல்போதுற்
றிறுமிறுமென்னத்தேய்ந்தவிடுகிடைதாங்கலாது
பொறையினையாற்றியாற்றிவைப்பதுபோலுமாதோ. (௨௬)

புழுகுநெய்நானஞ்சாந்தங்குங்குமங்குழைத்துப்பூசா
தழலவிர்சூலத்தெந்தைவரவுகேட்டயர்ந்துவைத்து
விழைவொடுஞ்சேறல்கண்டுமீண்டவனழகின்வீக்க
மெழுதிடவன்னம்யாவுங்குழைத்துவைத்தேகல்போலும். (௨௭)

மங்கையரடியீட்டத்தமறுகிடைச்செல்லுமாதர்
பொங்கியவோர்காழ்முத்தமுலையிடைப்புடைத்தற்கஞ்சிச்
செங்கையாலமைத்தலென்முன்செல்லலையிறையாலென்னாத
தங்கியவெருளியோடுமனத்தினைத்தடுத்தல்போலும். (௨௮)

வேறு.

வீதிவாயெய்தியவிமலர்க்காணிய
வாதரவொடுமறுகணைந்துசெல்லுவாள்
காதினிலோலைமுன்கழன்றுவீழ்வது
சாதனவோலைமுன்விடுத்தல்சாலுமே. (௨௯)

ஐயனைமறுகிடைக்கண்டவந்நலார்
கையினின்மலர்கடூஉய்த்தொழுதல்கன்னியர்
மெய்துளைபட்டிடக்காமன்வில்வளைத்
தெய்திபூங்கணைகண்முன்னிட்டல்போலுமால. (௩௦)

மழவிடையுயரியவரதர்க்காண்குறும்
விழைவினவாகலின்விழிகண்முற்றுமை
யெழுதிடினூழினுளிறக்குந்தீட்டலென்
றழுதனடொழுதனளன்னைதன்னையே. (௩௧)

வேறு.

நைவளம்பாடியையமேற்றிடுநாதற்காண்பான்
மைவளைந்தாவியுண்ணுமதர்விழியொருப்பாடெண்ணிக்
கைவளைகழற்றியந்துண்கலிங்கமுமனுவும்வீக்கித்
தெய்வதம்பராவியன்னைவிடுத்தனடிகைத்துநின்றாள். (௩௨)

குன்றிடைபிறந்தமெல்லென்குறுநடைபயிலுமந்தண்
மன்றலங்குழவித்தென்றல்வருதொறும்வசந்தகாலம்
பொன்றுணர்த்தாதுநீக்கிப்பூங்கொடியசைதல்போல
வென்றிவேற்கண்ணாரெங்கைவிழாவணிவீதிபுக்கார். (௩௩)

முதுக்குறைவாளர்காணாமுதல்வனையெளிதிற்காண்பான்
விதிர்ப்புறுநசையாலுள்ளநீங்கவேற்றுடலமாகிக்
கதுப்பினிலணியுந்தாமங்கைவளையாகச்சுற்றி
மதுக்களிமாதர்போலமலரடியிடரச்சென்றார். (௩௪)

அலத்தகமணிந்தசெம்பொனடிச்சுவடழுந்தலோடு
நிலைத்தலைசிவந்ததந்நிலத்தலத்தழுந்திமாதர்
மலர்ப்பதம்பூமிகைம்மாறளித்தெனச்சிவப்பவந்தாங்
கிலைத்தலைசூலவேற்கையெந்தையைத்தொழுகின்றாரும். (௩௫)

மயிற்குலம்வருதல்போலமறுகிடைமொய்த்தமாதர்
வெயிற்கதிர்ச்சூலவேற்கைவிமலனையினிதுநோக்கித்
துயிற்சுவைமறப்பக்கண்களெம்முடைநாணினோடு
முயிர்ப்பலிகொளவோவெந்தைபோந்ததென்றுரைக்கின்றாரும்

பையரவல்குனல்லார்பலிபொடும்வளைகணல்கி
மையணிமிடற்றோய்கேட்டிமறுகிடையினிதுபாடி
யையமேற்றுண்பார்க்கெல்லாமரிமதர்நெடுங்கணார்தங்
கையணிசங்கங்கொல்லோகறியமுதென்கின்றாரும். (௩௭)

செய்யனைக்காண்டலோடுநாணொடுசேலம்போக்கி
மெய்விளர்த்தாங்குநிற்குங்கன்னியைவெகுண்டுநோக்கி
யையனையணைந்தாய்போலுமாங்கவனணிந்ததூசுந்
துய்யவெண்ணீறுநின்மேற்றோன்றலாலென்கின்றாரும். (௩௮)

மயர்வொடுமறுகினெய்துமங்கையர்பலிபெற்றெய்து
மியவுனைக்காண்டலோடுமாரனையெரித்தமாற்றம்
பயனில்சொலெரிந்தமீட்டும்பனிமலர்வாளிதூவி
யயர்வுறமடவாராவியுண்ணுமோவறைதியென்பார். (௩௯)

அந்தணர்ப்பிழைத்தபாவமகற்றவோர்பன்னீராண்டு
மெந்தைநீயையமேற்றுண்டாற்றுவானிருக்கின்றாயேற்
சுந்தரமடவார்தம்மைநாணொடுந்துலைத்தபாவ
நந்திடும்விரதம்யாதோபயின்றதுநம்பவென்பார். (சo)

கண்ணினான்மதனைமுன்னங்கனற்றினையவன்றன்சேனை
வண்ணமேகலையாரொன்னமனத்திடைநினைந்துகொல்லோ
தண்ணளிபுரிக்கேயெம்மைத்தழுவுறாதாவிவாட்டப்
பண்ணுலாஞ்சாமகீதம்பாடிமீண்டகல்வதென்பார். (சக)

இன்னணம்புவியின்மாதர்மாலொடுந்தொடரவேகிப்
பன்னகநாட்டினெய்திப்பலியிரந்தெய்தவங்கண்
மன்னியமடவார்சூழ்ந்துன்வனப்பினைக்கேட்டகண்க
ளென்னநற்றவஞ்செய்தோவுன்னுருவினைக்கண்டதென்பார். ()

வருமுலையோடுந்தோன்றவளர்தொறும்வளர்ந்துமாதர்க்
குரியவாநாணுந்தூசுமொழிந்திடவளையுநெஞ்சு
மரியதம்முயிரும்பூணுமையமோடளித்துமாழாந்
தெரியுமுத்தலைவேலண்ணல்பின்றொடர்ந்தேகினாரால். (சங)

பாதலத்துறையுமாதர்விஞ்சையர்மாதர்பண்பிற்
காதல்கொளரக்கர்மாதர்சூழ்வரக்கடிதினேந்தி
யேதமில்கணங்கள்சூழவிளம்பிறைமுடித்தபுத்தேள்
மேதகவமரர்வாழும்விண்ணுலகெய்தினானே. (சச)

வேறு.

நெய்திடாப்பூந்துகில்நெகிழக்கைகளாற்
கொய்திடாமலர்புனைகூந்தல்சோர்ந்திடப்
பையரவல்குலார்பலியிரந்திடு
மையனைச்சூழ்ந்திவையறைதன்மேயினார். (சரு)

எங்குளவுயிர்களுமெரிகொளுத்திட
வங்கியையோர்கரத்தமைத்தகண்ணுதல்
மங்கையர்தமைச்சுடமனத்தினெண்ணியோர்
திங்களங்குழவியைச்சடையிற்சேர்த்ததே. (சசு)

வேறு.

பொரியரையாரநறுங்குறடுரிஞ்சாப்புண்ணியத்தேவையின் மூழ்கி,யிரவுநன்பகலுமிடுகிடைவருந்தமார்பிடங்கொண்டதை யல்லாற்,பரியவெண்முத்தங்கிடந்தவெம்முலைகாள்பையரவணிந்தவெம்பெருமான், றிருவமர்மார்பந்திளைந்திடத்தவநீர் செய்திலீரெனச்சிலர்துயர்வார். (சஎ)

சேயரிபரந்து கடைக்குழைபொருந்து நிறைகடலேழினும் பெருத்துப், பாயகூர்விழிகளிளைத்திடாதிருந்தபலமடைந்தே

ம்பசுந்துளவோ, ஞயிரங்கற்பம்பன்றியாயுலகங்கீண்டுநாடியுமி னமறியாத்,தூயபங்கயத்தாளெளிதினிற்காணப்பெற்றதாலெனச்சிலர்தொழுவார். (சுஅ)

காந்தளஞ்செவ்விவீயுகுத்தென்னக்கைவளையொடும்பலியிடுவார், சாந்தமென்கொங்கைமேருவிற்பெரிதோதடக்கையிற்பிடிக்கிலையென்பார், மாந்தளிர்மேனிமகளிரின்னணஞ்சூழ்ந்திரந்திடவயிரவன்போகிப், பூந்துழாய்முகுந்தனரசுவீற்றிருக்கும் புண்ணியவுலகினிலடைந்தான். (சுகூ)

பங்கயன்றலையோடேந்தியகாரிமாலுழைப்பட்ர்தலுஞ்சினவிச், சங்கொடுநேமிநாந்தகம்வரிவிற்றண்டமென்றுரைக்குமம்படையுஞ,சிங்கவேறனையவிச்சுவசேனனெடுத்தமர்திளைப்பதற்கெண்ணி, யங்கிகொப்புளிக்குஞ்சக்கரந்திரியாவழலின்வீழ்பதங்கமொத்தெதிர்ந்தான். (ருo)

விச்சுவசேனன்வெகுண்டுமுன்னெய்திவெஞ்சமம்புரிதலுநகைத்துக், கச்சையங்களிற்றினீருரிபுனைந்தகனலுமிழ்கண்ணுதற்காரி, யச்சணங்கெரிகால்முத்தலைப்படையி ஞங்கவனுடலினைக்கோத்துப், பச்சைமாலுறையுளெய்தலுமாயனெழுந்தடிபணிந்திவைபுரிவான். (ருக)

உரியநற்பலியானுதவுவனென்னவுலகுமோரடியினிற்படுத்த கரியவனேமிப்படையினுற்றனதுகவின்வளர்மத்தகம்பிளந்து குருதிநீரருவிபோலநின்றெழுகக்காரிகைகொள்கபாலத்திற் பருவமாயிரமாங்குருக்கவுங்கபாலம்பாதியுநிறைந்திலதன்றே.

ஆயிரம்பருவஞ்செங்கண்மாலுதவினருவிபோலரத்தம்வாங்கியதான், மேயதன்னுடலமெலிந்துமூர்ச்சனையான்மெலிதலும்விரைமலர்ப்பொகுட்டு, நாயகிவெருவியிருகரநெரித்துநாட்டநீர்துளித்திடக்கலுழ்ந்து,பாய்புலிப்போத்தினதள்புனைகாரிபதமலர்பழிச்சினளன்றே. (ருஉ)

வேறு.

மருவார்செழுங்கூந்தல்வாணிகலன்பூண்டிருப்பத்
தருநீழன்மேவிச்சசிவாழ்வினோடிருப்பத்
திருவோதிருவிழப்பாள்தேவர்சூளாமணியே
கரியோனுயிரளித்தென்மங்கலநாண்காப்பாயே. (ருச)

திங்கண்முடித்தோய்திரிபுரமுன்றீயூட்டு
மெங்கள்பெருமானேயேத்துவார்கண்மணியே
கங்கைமணாளாவென்காதலனையுய்வித்து
மங்கலநாண்பிச்சைவழங்காய்வழங்காயே. (ருரு)

காலன்விழமுன்னங்கஞ்சப்பதம்பணித்துப்
பாலனுயிர்காத்தோய்பண்ணவர்கள்வியாம
லாலவிடமயின்றவாதிப்பரஞ்சுடரோ
மாலினுயிரளித்தென்மங்கலநாண்காப்பாயே. (௫௬)

மூவரெனவோதுமுதற்றேவரிலொருவ
னாவியழிந்தாலவுணருனையேசாரோ
தேவரிடர்தீர்ப்போய்சிற்றடிச்சிமங்கலநாண்
காவல்புரியாயேயென்றுங்களைகண்ணே. (௫௭)

என்றுகமலைதொழுதிரப்பமாமேருக்
குன்றவரிவிற்குழைத்தகோமானருள்பூத்து
மன்றற்றுளவோன்றனையெடுத்துமார்பணைத்துத்
தன்றுணைக்கையாலவன்றன்மேனிதடவந்தான். (௫௮)

ஐயன்கரத்தாற்றடவரலுமார்கலிசூழ்
வையமளந்தமணிவண்ணன்மூர்ச்சனைதீர்ந்
துய்யாவெழுந்திட்டுரவோன்மலரடியிற்
கையான்மலர்தூஉய்ப்பழிச்சியிவைகட்டுரைப்பான். (௫௯)

அன்னையுமாயெவ்வுயிர்க்குந்தந்தையுமாயாண்டருளு
முன்னவனேநின்னைப்பிரமகத்திமுற்றுமே
நின்னகராங்காசிதனினீயடையிற்பின்றொடர்ந்தாங்
கென்னைபுரியுங்கொடும்பாவமெந்தாயே. (௬0)

என்னக்கமலத்தவனோடுலகீன்ற
முன்னோனுரைப்பமுகிழ்நகைசெய்தெம்பெருமான்
கன்னியெயில்சூழ்கிடந்தகாசிப்பதியேக
வன்னோன்கரத்திற்கபாலமவண்வீழ்ந்ததுவே. (௬௧)

பேராதுபின்செல்பிரமகத்திவிண்டோயு
மாராமஞ்சூழுமகன்காசிகண்ணுறலும்
வேர்விதிர்விதிராமெய்ந்நடுங்கிப்பாதலத்துள்
யாரோனுங்காணாதவண்ணமொளித்தேகியதே. (௬௨)

எந்தையடியீடுபோற்றியியற்காசிதனில்
வந்தநெடுமால்மலரோன்றலையெறிந்த
சிந்தாமணிதன்னைத்தேவர்சூளாமணியை
நந்தாவிளக்கைப்பணிந்துநவில்கின்றான். (௬௩)

சிங்கஞ்சினவிற்றறுகட்டிறல்வேழத்
தங்கம்பிளந்தளைவதல்லாமற்சிற்றெறும்பைப்
பங்கப்படுத்துமேபாற்கடலோர்பாலர்க்குப்
பொங்குமுவகையாலீந்தபுராதனனே. (௬௪)

என்றுதிருமாலிரப்பநெடுஞ்சூலத்திற்
பொன்றிக்கிடந்தபுயல்போனிறத்தானைச்
சென்றவுயிரளித்துத்தீயுமிழுஞ்சூலத்தான்
மன்றற்றுளவோன்மணிவண்ணன்கைக்கொடுத்தான். (௬௫)

உய்வந்தசேனைமுதலவனோடும்வந்து
மைவந்தகண்டற்பணிந்தவன்றன்மாணருளால்
கைவந்தவுள்ளநடுக்கமகலநாரணன்போய்ப
பைவந்தவெந்தறுகட்பாப்பணையின்மேவினான். (௬௬)

தன்னைந்துளவோனகலத்தணவாத
வண்ணலஞ்சீர்காரியகன்காசியிலமர்ந்தா
னெண்ணருமிக்காதைபயின்றோரிரும்பாவ
நண்ணலராய்க்காசிநகர்நண்ணினார்பேறடைவார். (௬௭)

வயிரவன்பலியிரந்தவத்தியாயமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௬௮.

முப்பத்தொன்றாவது

## மாபாதகப்பிராயச்சித்தமுரைத்தவத்தியாயம்.

அருட்பெறற்கொன்னைங்கள்ளுநர்மறையோராயினுமாங்க துதீட்டியான், விரும்பினொன்னிவிரும்பினன்முசலம்பண்ணிய வ்வியனகராச, னிருந்துழியெய்திக்குசெயலுரைத்துக்கதை யைமற்றவன்கையினீயிற்,றிருந்தவோரடியம்மன்னவனடிப்பவி றந்திடிற்றீருமப்பாவம். (௧)

கள்ளுநரீதுபுரிந்திடாரென்னிலந்தணர்கடிந்தவர்கருளை த்த, வெள்ளருமவிரதமியற்றுகவன்றே லிவுளிமாமகம்புரிவேந் தர், தெள்ளிநிறுடும்தாயநீரதனிற் சென்றுநீர்படிகவொல்லா தே, லொள்ளொளிச்செம்பொன்றன்னிறைமறையோர்க்குதவி யக்கொடும்பழியொழிக்க. (௨)

கள்ளெனவறியாதுண்டவெம்பாவந் தீர்த்திடவுளத்திடை க்கருதி, றுள்ளமாழாந்துதனையிகழ்ந்திறை மலரடிநெஞ்சிடை யுன்னித், தெள்ளிதின்மறையோர்ச் செருத்தவர்க்குரைத்ததீக றுவிரதமாற்றியபின், வள்ளவாய்க்கள்ளைக்காய்ச்சிவாய்ப்பெய் யமறிந்திடிலொழியுமப்பாவம். (௩)

அன்றெனிற்குடிமிவரைமிசையேறிவீழ்ந்துயிர்வீய்ந்திடின லுங், துன்றுவெங்கழலின்வீழ்ந்துயிர்துறப்பிற்புண்ணியப்புன லிடைவீழ்ந்து,பொன்றிடிலலதேற்கிரிச்சிரமியற்றிற்புரவிமாம கமுடித்தாசர், சென்றுநீராடும் புனலிடைத்தோயிற்றீர்ந்திடு மெய்யயாதகமே. (௪)

குருவுடைப்பன்னியெனவறியாதுகுலிமூலமணந்தவர்பாவ, மரிதினிற்றீர்க்க வேண்டிடினுருக்கா லாங்கவனுருவினைப்பண்ணி, யெரியமுற்காய்ச்சித் தழீஇக்கொளலன்றேலாண்குறியினையறுத்தேந்தி, வெருவொடுமறலிதிசையினிலேகிவீயினப்பாவம்விட்டகலும். (௫)

அந்தணர்ச்செகுத்தோர்க்குரைத்திடும்விரதமாற்றிடினழலில்வீழ்ந்திறப்பி,னந்தவில்சாந்திராயணவிரதங்கிரிச்சிரம்பற்பல நடத்திற், சுந்தரப்புரவிமகம்புரிந்தோர்க டிபவிரதத்திடைத்தோயில், வந்தனைக்குரியகுருவினைப்பிழைத்தோர் மாற்றருந்தீவினையகலும். (௬)

ஈங்கிவர்நால்வர்தம்மொடுமன்பினியைந்தவர்கொடியவெம்பாவ, நீங்கிடவேண்டிலாங்கவர்தமக்குநிகழ்த்தியதண்டமேயிவர்க்குந், தீங்கறுதண்ட மன்றெனிற்சிவனைச சிந்தையிலிருத்திவெவ்வழலின், வீங்குதண்புனலின்வீழ்ந்துதம்மாவிவிடுப்பினும்வெவ்வினையகலும். (எ)

மாபாதகப்பிராயச்சித்தமுறைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்—கூ௲௫.

---

முப்பத்திரண்டாவது

## பிராயச்சித்தமுறைத்தவத்தியாயம்.

தன்னுடன்பிறந்தா டன்மகள்மைந்தன் றனிமனைக்கிழத்தியைமணந்தோன், மன்னியபாவ மகற்றுறவேண்டின் மதிமுடிபண்ணலைநினைந்து, துன்னருந்தழல்வீழ்ந்திறந்திட வேண்டுமாமியையத்தையைத்தோயி, னின்னல்செய்பாவஞ்சாந்திராயணஞ்செய்திறந்திடற்றீருமென்றிசைப்பார். (க)

தன்னுடன்பிறந்தோன்மனைவிதன்னொடுமுதித்தவள்மகள்முலைதழுவிற், பன்னிருசாந்திராயணமிழைக்கினங்கவன்பாதகமொழியு, மன்னைமுன்பிறந்தாள்பின்பிறந்தாடன்மக்களையணைந்திடின்யார்க்குந், துன்னருந்தழலின்வீழ்ந்துதானுவிதுறந்திடிற்றுறந்திடும்பாவம். (உ)

பூத்துநீராடுமுன்மடந்தையாளைப்புல்லினோர்மூன்றுநாளன்ன
நீத்திடிற்பாவமகன்றிடுமிழிந்தநேரிழையவர்ப்புணர்பாவ
மேத்துசாந்தபனகிரிச்சரந்தத்தகிரிச்சரமியற்றிடினகலுங்[றியும்
காத்திடாதுள்ளங்கன்னியர்ப்புணரிற் சாந்திராயணஞ்செயிற்க

கன்னியரிடத்தின்மிருகயோனிகளிற்றுதுவைக்கழித்தவர்பாவந், துன்னருஞ்சாந்தி ராயணம்புரியிற் றொலைந்திடுங்காமமீதூரப், பன்னுநாற்குலத்தும்பிறர்மனைக்குரியமடந்தையர்ப்புண

ர்ந்திடிற்பாவம், வன்னியின்வீழ்ந்துதனதுடற்பொறையைவலி
தின்மாய்த்தொழிந்திடிற்றீரும். (௪)

மரபொழுக்கிழுக்கி யழிந்தவர்தம்மைத் தவம்புரிமகளிரை
யெங்குந், திரிகழாய்க்கூத்தக்கன்னியைத்தேவதாசியைச்சிலதி
யைப்புணர்வோ, ருரியவெம்பாவஞ் சாந்திராயணத்தா லொழி
ந்திடுந்தூசுதூய்தாக்கு, மரிவையைப்புணரிற் கிரிச்சரம்பத்துச்
செய்திடினகன்றிடும்பாவம். (௫)

இழுதையிற்பிரமசாரிமங்கையர்தம்மிளமுலையினிதினிற்றோ
யிற், கழுதையின்புன்றோல்மேனியிற்போர்த்துக்காலையுமாலையு
முழுகிப், பழுதறத்தான்செய் பாவமாங்குரையா. வேழகத்தேற்
றுவெம்பலியுண், டொழுகியோர்வருடந் திரிந்திடிற்பாவமொ
ழியுமென்றுரைப்பர்கற்றுணர்ந்தோர். (௬)

மறையவர்முதலோர்மன்னவர்ச்செகுப்பின்மறையவர்ச்செ
குத்தவர்க்குரைத்த, குறைவறுதண்டம் பூண்ணுதல்வேண்டுங்
கோதில்பார்ப்பனிதனைச்செகுப்பி, னறைதருபிரமகத்திதீர்ப்ப
தற்காயறைந்தவாரெட்டியாண்டிழைக்க,நிறைபொருள்வணிகற்
செகுப்பின்முப்பருவநிகழ்த்துநோன்பாற்றிடிற்றீரும். (௭)

அரசர்கன்னியரைக்கொன்றிடினுருண்டந்தணர்ச்செகுத்த
வர்க்குரைத்த, விரதமாற்றிடுக வணிகர்கன்னியரைவீட்டினோர்
விளம்புமவ்விரதம், புரிகழுவாண்டுபின்னவர்மகளிர்ச்செகுத்த
வர்புகலுமவ்விரதம், பருவமொன்றுற்றினரிதினிற்றீருமெனம
றைப்பகர்ந்ததையன்றே. (௮)

நாயினைச்செகுத்தோரொண்ணிருவைகனகர்ப்புறம்போய்த்
தலையோட்டிற்,றூயவேழ்மனையேற்றுண்டிடிற்பாவந்தொலைந்தி
டுமென்பிலாதவற்றை, வீயுமாசெய்தோர்வியப்பொடும்பிராணு
யாமமாங்கியற்றின்வெவ்வினைபோந், தாயமென்றவனையெலியி
வைதடியிற்சாந்திராயணஞ்செயிற்றீரும். (௯)

பன்றிவெம்பூனைகுதிரையைங்கிரி கொன்றவன்கிரிச்சரம்ப
ண்ணிற்,றுன்றியபாவந்தொலைந்திடுமரவந்தொலைத்தவன்வருந்
தியோர்திங்கண், மன்றவோர்குடங்கைபாலினையருந்திவையினை
மறையவர்க்களிக்கி, னொன்றியபாவமொழிந்திடுங்கிளியையொ
றுக்கிலானுதவிடிற்றீரும். (௧௦)

பறவைகள்செகுத்தோர்விரதநன்கியற்றிப்பழமறையவர்க்
கிருநிதியங், கறவையோடளிப்பிற்றீர்ந்திடும்பாவங்காய்பழம்பூ
நனியுடைத்தாஞ், செறிமரங்குறைத்தோர்சிலகொடியறுத்தோ
ர்தீங்கறுமிருக்குநூறோதி,நறுநெயாங்கருந்திமூன்றுநாணோற்பி
னண்ணியபாவம்விடடொழியும். (௧௧)

ஆனையைமுதலாம்விலங்கினையொறுத்தோரளப்பறுவிரத நன்கியற்றித், தேனெய்பாலோடுமறையவர்க்கூட்டிற்பீர்ந்திடும் பாவமென்றுரைப்ப, ஞனுடையாக்கை யுணர்ந்திடாதொறுத் தோன்வினையொழிந்திடுமுணர்ந்தொறுத்தோன், ருனுறுபாவ மளப்பினுணரகிற்றங்கியலாதொழிந்திடாதால். (௧௨)

வேறு.

ஏதிலர்மனைபொருள்பழனமேரிதங்
காதலின்வவ்வினோர்கவர்ந்தயாவையு
மேதகவிழந்தவர்க்களித்துமெய்ம்மையா
யோதுசாந்திராயணமுஞற்றல்வேண்டுமால். (௧௩)

புல்லுநீள்விறகுவெம்புலால்வெண்டுசெலா
மல்லலக்காரந்தோல்வவ்வின்மற்றவை
யொல்லையினிழந்தவர்க்குதவியூனொழிந்
தல்லறீர்த்தாவினைந்தருந்தல்வேண்டுமால். (௧௪)

காரண்டங்கொக்குவெம்பூனைகாகைவெங்
கிரிநீர்த்தவளையூர்க்குருவிகிள்ளைபுள்
வார்சிறைப்புரவுதின்றோர்கள்வல்வினை
யீராறுநாளுணவிகழ்ந்திற்றீருமால். (௧௫)

உறுபுலாலுணங்கல்வெண்கோழிமுட்டையோ
டறைதருமுருங்கையின்காயொடத்திக்காய்
செறிசுரைக்காயிவைதின்னிலோர்மதி
முறைகொள்சாந்திராயணமுடித்தல்வேண்டுமால். (௧௬)

கடவுளர்க்கதிதிகட்கன்றிக்காதலா
லடிசில்பால்பூபநெய்தனக்கென்றேயமைத்
தொடிவில்பாழ்வயிற்றினுக்கூட்டுபாதக
மடைவுடன்கிரிச்சரமாற்றிற்றீருமால். (௧௭)

வேறு.

தீயினுக்கூட்டாதுண்ணுந்தீமையோனில்லெனுண்டோ
ரேயநற்குலத்தோரன்றியிழிந்துளோர்மனையினுண்டோர்
தூயவாநவச்சிராத்தஞ்சூதகாசவுசத்துண்டோர்
மேயநற்கிரிச்சரங்கள்விதியினிற்செய்யவேண்டும் (௧௮)

மானுடர்விலங்குபுள்ளின்வருசலமலங்கட்டிமை
யூனுடையாக்கைதன்னிற்றடவியுள்ளருந்தினோர்கள்
மானுதலிலவாஞ்சாந்திராயணமகிழ்வினோடு
நூனெறிவழாமலாற்றினெய்தின்வெம்பாவந்தீரும். (௧௯)

அருந்துழிமலமோர்மூன்றும்விடுக்குநொண்ணையாடிப்
பொருந்துநீராடுமுன்னமீங்கிவைபோக்கினோர்கள்
மருந்தினுமினியவேனுமிச்சிலைமகிழ்வினுண்டோரா
திருந்துசாந்திராயணங்கள்பற்பலசெய்யவேண்டும். (௨௦)

தன்னுடைமிசிலேனும்பிறர்நுகர்தண்ணீரேனு
மன்னுகட்குடத்திற்பெய்தவான்புனலேனுமுண்ணிற்
றுன்னியபாவந்தூயகோசலத்தியையவாக்கிப்
பன்னிருவைகலுண்ணிற்பழிப்பறத்திருமன்றே. (௨௧)

நெறியில்சண்டாளர்கூபப்புனலவர்குடத்திற்றெண்ணீ
ரறிவுறுதருந்தினானந்துகிரிச்சரமாற்றல்வேண்டு
மறவியன்றுகவுண்ணுமாண்பிலிதனக்குவேத
முறையினில்முன்னூல்பின்னுஞ்சேர்த்திடமொழிந்தனன்றே. ()

பூத்துநீராடாதுற்றமகளிர்சண்டாளர்பொல்லாத்
தீத்தொழிலாளர்தம்மையுண்புழித்திருந்தக்காணி
னீத்தொருமூன்றுவைகலுணவினைநெறியினோடு
மேத்திடுமாவினைந்துமருந்திடினிரியும்பாவம். (௨௩)

வான்புனல்படியுமுன்னமறந்துணவருந்தினானேல்
மூன்றுநாளுணவுநீத்தல்முறைமையாம்பழையதுண்ணி
லான்றனிமோந்ததுண்ணிலற்றையூணொழிகவேதஞ்
சான்றவரல்லாற்கோதிற்றவம்புரிந்திடுதல்வேண்டும். (௨௪)

ஏதிலர்க்காபிசாரமியற்றினும்வேட்டவன்றண்
மேதகவாற்றுசெந்தீயவியினும்வேதநூலைத்
தீதறுபுலவர்தம்மைத்தேவரையிகழ்ந்தானேனு
மூதறிவோடுந்தத்தகிரிச்சரமுயற்றல்வேண்டும். (௨௫)

இல்லறம்புரிவோர்சந்திகழித்திடாதருந்தியாருஞ்
சொல்லரும்பிரமசாரிசுடுதழற்கூட்டாதுண்ணிற்
புல்லியவொழுக்கநீங்கிற்றுகிலின்றிப்புனலின்மூழ்கின்
மெல்லவாயிரக்காற்காயத்திரியினைச்செபித்தல்வேண்டும். (௨௬)

அந்தணர்கருமைசெம்மையாகியவறுவைசுற்றின்
மைந்துடனற்றைநாளினுணவின்றிமற்றைநாளி
னைந்துதண்புனலினாடியாவினைந்துண்ணல்வேண்டு
மந்தில்மானுடர்தமென்புதீண்டினீராடல்வேண்டும். (௨௭)

மூவகையுள்ளிகள்ளுந்தீண்டிடின்மூன்றுநாளைக்
கோவறமுணவுநீங்கிப்பசுவினெய்யுண்ணவேண்டுந்
தாவிநாய்காலிற்கவ்வின்மூன்றுநாடனிப்பாலுண்க
மேவருஞ்சிரத்திற்கவ்வின்விடுகவூண்பத்துநாளே. (௨௮)

பூத்துநீராடுநாடொட்டீராறுநாளும்பொற்பின்
வாய்த்ததம்மனைவியின்பமகிழ்ந்திடார்பருவந்தோறு
மேத்திடுமிட்டிபண்ணார்பொய்ம்மொழியிசைத்தோர்மேவுந்
தீத்தொழிலொழியவத்தகிரிச்சரஞ்செய்யவேண்டும். (௨௯)

கடவுளர் தம்மைவேதமுனிவரைக்கடவுட் கற்பின்
மடநலார் தம்மைக்கூசவேன்மன்னரைமுனிந்துசீறிச்
சுடுசொலாலிகழ்வோர்பாவந்தொலைந்திடவேண்டினவைக்
கடியவெங்கொள்ளிதன்றூற்கருக்கிடவேண்டுமன்றே. (௩0)

திங்களங்கண்ணிவேய்ந்தசெல்வனையிகழ்ந்தபாவ
மிங்கிதுதன்னிற்றீராதெண்ணறுவிரதமாற்றிப்
பொங்கழலுப்பண்ணைவைகியருந்தவம்புரிந்திட்டாலு
மங்கவனருளினன்றித்தீர்ந்திடவரியதாமால். (௩க)

தேவராலயத்தினந்தவனத்தினிற்சிந்தையோரா
தோவின்மும்மலம்விட்டோர்தம் மாண்குறியறுத்திட்டொல்லை
மேல்வருகிரிச்சராதிகிரிச்சரம்விழைந்துசெய்யிற்
பாவவெந்தீமைநீங்கிப்பழிப்பறுபுனிதனுவான். (௩உ)

கங்குலின்முகத்திற்றிங்கட்கண்ணியோன்பாதம்போற்றி
லெங்குளாநகருமெய்திக்கடவுளர்ப்பழிச்சியேத்திக்
கங்கையைமுதலாயுள்ளகடவுணீத்துறைகளாடிற்
பொங்குதீவினைகணீங்கிப்புண்ணியராகிவாழ்வார். (௩௩)

காதலன்பாவியேனுந்தன்றெடுங்கற்பின்மிக்க
மாதர்மென்றேக்கிசெந்தீப்புகுந்துயிர்மடிந்தாளென்னிற்
ருதனைந்தினவண்டூதாத்தண்மலர்த்தருவினீழன்
மேதகுதிருவனுகியினிதுவீற்றிருப்பனன்றே. (௩௪)

வெற்பெடுத்துயர்ந்ததிண்டோளிராவணன்விரகத்தெய்திப்
பொற்புடைச்சீதைநெஞ்சமெலிவுறப்புன்மைசெய்து
கற்பெனுங்கனலிபற்றக்கிளையொடுங்கரிந்தானென்னி
லற்புடையவர்க்குத்தீமைபுரிவரோல்நரகிழும்வார். (௩ரு)

இன்னநல்லொழுக்கந்தன்னையியம்பினேரினிதுகேட்டோர்
கன்னலங்குதலைசெவ்வாய்ப்புதல்வரைக்களிப்பினீன்று
பன்னகமுடியின்வைகும்பார்பொதுநீக்கியாண்டு
பொன்னுலகாள்வரொன்றுவியாதமாமுனிவன்போனுன். (௩௬)

பிராயச்சித்தமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—எஉக.

---

முப்பத்துமூன்ருவது

## திரிபுரதகனமுரைத்தவத்தியாயம்.

பழமறையினிதுகோத்தபராசரன்புதல்வனேக
முழுதுணர்முனிவர்யாருஞ்சூதனைமுகமன்கூறி
யெழுவுறழெண்டோளெந்தைதிரிபுரமெரித்தகாதை
வழுவறவுரைத்தியென்னமனமகிழ்ந்துரைக்கலுற்றுன். (க)

காரதவழ்மேருவெற்பைக்கடவுளர்வெருவியோட
வேரொடும்பிடுங்கிமீட்டும்வைத்திடும்விறல்கொண்டிண்டோட்
டாருகன்றன்னைவெற்றியறுமுகன்சாய்த்தபின்னர்
சீர்கெழுமவன்றன்மைந்தர்திசைமுகற்பழிச்சலுற்றார். (௨)

தகைபெறுவித்துன்மாலிவிறல்கெழுதாரகாக்கன்
சுகனமோமாமோறும்வெள்ளாகுஞ்சிவக்கமலக்கண்ணன்
புனைபொருந்துமைகம்பாவும்புழுங்கவேழ்புரவிப்பொற்றேர்ப்
பகல்கரந்தொளிப்பக்கோடிபருவம்வெவ்வழலினின்றார். (௩)

அருந்தவம்புரிதனோக்கியாய்பிழித்திவலைதூற்றி
விரிந்தசெங்கமலப்புத்தேள்விண்ணவரோடுமெய்தித்
திருந்தநீர்விழைந்தயாவுந்தருகுவன்செப்புகென்னப்
பொருந்தலர்க்கடந்தசீற்றத்தாருகன்புதல்வர்சொல்வார். (௪)

விண்ணிடைப்பறக்குமூன்றுவியனகருலவாவெற்றி
யெண்ணறுமாயுளெய்தியூறுபட்டழியாவாக்கைத்
தண்ணறுந்துளவோனாதியமரர்வெருசமரினேற்றெங்
கண்ணெதிர்ப்படினுமஞ்சுங்கடுந்திறலருள்கவென்றார். (௫)

ஆங்கவையனைத்துந்தந்தோமாயிரம்பருவஞ்செல்லிற்
றீங்குறுமெயில்கண்மூன்றுமொருவயிற்சேருமஞ்ஞான்றின்
வாங்குவிற்பகழியொன்றான்மாய்ந்திடின்மாய்வதல்லாற்
றீங்குறாவென்னவோதித்திசைமுகன்மறைந்துபோனான். (௬)

தேசுறுசெம்பொன்வெள்ளியிரும்பினிற்றிசைகடோறு
யோசனைநூறுகொண்டதோரொருநகரமாகக்
காசுகண்படுத்துவெய்யகவின்வளர்மாடமுற்று
மாசறுநகரமூன்றுமயனினிதியற்றினானே. (௭)

பொன்னெயில்விளிமபுமுற்றும்பொலிவுடைநகரந்தன்னிற்
கன்னவின்றோங்குதிண்டோட்கதிர்முடித்தாரகாக்கன்
மின்னகுபருதியொள்வாளிந்திரன்வேலைகிட்டித்
தன்னடிப்பரவப்பைம்பொற்றருவமருலகின்வாழ்ந்தான். (௮)

கண்ணகன்ஞாலத்துள்ளோர்தொழுங்கமலாக்கனென்போ
னொண்ணலர்முற்றாவெள்ளியிஞ்சிசூழ்நகரந்தன்னிற்
பண்ணவரியக்கர்நாகர்விஞ்சையர்பருதியொள்வாள்
விண்ணவர்பணிந்துபோற்றவிசும்பிடையிருந்துவாழ்ந்தான். ()

மருப்புடைக்களிறோட்டும்வயிரவாட்படையினோனும்
வெருக்கொளக்கடைக்கண்சேக்கும்விறல்கெழுவித்துன்மாலி
யருப்புமென்முலையாரோடுமகனிலவளாகந்தன்னி
லிருப்பெயிலுடுத்தவெய்யநகர்வயினிருந்துவாழ்ந்தான். (௧௦)

இந்திரன்முதலதேவரினிதினேவல்கேட்ப
நந்தலில்புவனம்யாவுந்தமதடிப்படுத்திநாகர்
வெந்திறலியக்கர்சித்தர்வெருவொடுந்திறைகணல்க
சந்திரமவுலிபாதம்பழிச்சலாற்றருக்கின்வாழ்ந்தான். (௧௧)

பங்கயத்தண்ணல்போலப்படைப்பினும்படைப்பர்நேமிச்
செங்கண்மால்போலவன்பினளிப்பினுமளிப்பர்சீற்றத்
துங்கவெள்விடையோன்போலத்துடைப்பினுந்துடைப்பரிந்த
வங்கண்மாலுலகம்யாவுமாங்கவர்நினைப்பின்மாதோ. (௧௨)

ஆயிரகோடிவெள்ளங்களிறிவற்றிரட்டியாய்மாப
பாய்வயப்புரவித்திண்டேர்பத்தனைக்கச்சமாருங்
காயெரிகவிழ்க்குஞ்செங்கட்கதழ்சினத்தவுணர்வெள்ள
மாயிருஞாலத்துள்ளகணிதராய்வருக்கொருத்தல. (௧௩)

இரணியனிரணியாக்கன்சூரனந்தகனென்றோது
மூரமிகுமசுரரின்றேருயிர்ப்பினில்மொத்துண்டந்துண்
சருகெனப்பரப்பமொன்னிற்றழலுமிழ்தறுகட்சீற்றத்
தருவரைத்தோளினூர்கட்கியாவரையிணைக்கலாமே. (௧௪)

இருநிதிசுரபிசிந்தாமணிவியன்றருக்கள்யாவும்
பரவிநின்றேவல்கேட்பப்பண்ணவர்பணிந்துபோற்ற
வருவினைவிஞ்சைவல்லமயனொடுமன்புபூண்டு
பொருவருமவுணரெல்லாவுலகமும்புரக்குநாளில். (௧௫)

கொன்படுகுருதிவைவேலவுணர்தங்கொடுமைக்கஞ்சிப்
பொன்பிறழுலகங்காக்கும்புரந்தரனியக்கர்விண்ணோர்
தென்புலங்காக்குங்கூற்றமுதலியதேவர்சித்தர்
மன்பதைத்தொகுதியோடும்வைகுந்தநகரிற்சேர்ந்தார். (௧௬)

மட்டலவிழ்கமலப்போதிற்கடவுளோவயிறுவாய்ந்த
வடிகள்வெம்புரங்கண்மூன்றின்வாழ்வுறுமவுணர்தம்மா
லிடைமகன்கொன்றவின்றுமாமெனவிடைந்துநாளு
முடன்மெலிந்தாவித்தேய்ந்தேமுய்யுமாறருள்கவென்றார். (௧௭)

சிவையிடைச்சுடுபொனேய்க்குஞ்செழுமலர்க்கொன்றைசூடும்
பவளவார்சடையோன்பூசைபண்ணிமேம்பாடுவாழு
மவுணரையெம்மனோராலடர்க்குமாறரியதெல்லாப்
புவனமோரேழுமுண்டபுண்டரீகாட்சன்சொன்னான். (௧௮)

ஐயநீயீதுகூறினடுதொழிலவுணர்க்காற்றி
யுய்கினிதிருத்தலொல்லேமென்றுவானவர்களோதச்
செய்யதாமரைக்கண்மாயன்றேவர்களோடுமேகி
மைதிகழ்மேருவெற்பின்வடபுறமருவிற்சார்ந்தான். (௧௯)

காட்டைமுகூர்த்தங்கணமிலவமச்சாய்க்கணக்கிலநிறந்தங்க
ளீட்டுகொடியாய்டுக்கணங்கள்விதானமாகவிருந்துறக்கம்
வாட்டமறுசீர்மேல்விரியாய்மகங்கள்கிடுகாய்நாட்பக்க
மீட்டும்வருடங்கடுப்பாகப்பூதமியன்றவலியாக. (௩௮)

நேமிவரையுமந்தரமுநிகழ்த்துமீளதண்டமாய்த்
தாமவரைகணேகளாய்த்தரங்கக்கடல்களோரேழுந்
தாமம்புரையுமெழினிகளாய்த்துலங்குஞானவிந்தியங்கள்
காமவெகுளிமயக்கமிவைகலன்களாகக்கலைமுளையாய் (௩௯)

மனமாங்காரமவ்வியாத்தம்வழங்கும்வண்டியோர்மாய
நினைதற்கரியதத்துவங்களனைத்துநிகழ்த்துங்குழிசியாய்ப்
புனையாவேதமொருநான்கும்புரவியாகப்புராணங்கள்
வினையுமங்கஞ்சாத்திரங்கள்மனுநூலிவைகள்மணியாக. (௪0)

சத்தமருத்துக்களும்படியாய்த்தணப்பில்வையம்வையமாய்
முத்தமுரிஞ்சுமுகிழ்முலையகங்கையதிதிமுதலாய
பைத்தபாம்பினகலல்குற்றெய்வமகளிர்பரிவினொடுந்
தத்தங்கையிற்சாந்தாற்றிக்கவரியேந்துந்தரத்தினராய். (௪௧)

உலகம்பூத்தமறைக்கிழவன்பாகனாகவுயர்குடிலை
குலவும்வேதப்பரிக்கடவுமுட்கோலாகக்குளிர்விசும்பி
லலகிலமரரொல்லாருமம்பொற்சுணங்கார்பொம்மன்முலைக்
கலவமஞ்ஞைபாகனுக்குக்கடிதிற்றடந்தேரினிதமைத்தார். ()

பொன்னங்குடுமிமேருவளாச்சிலையாய்ச்சேடன்புரிநாணாய்க்
கன்னித்துளவத்திருநெடுமால்கணையாய்த்தூவல்கடுவளியாய்
மின்னுக்கதிர்காலகலல்குல்விழுங்கும்பகுவாய்வெங்கூற்றுமக[ப்
கொன்னார்நுதிவெவ்வடவையொடுங்கூடுங்காலக்கொடுந்தழலா

கமலப்பொகுட்டுவட்டவணைக்கடவுணாவினுறைவாணி
திமிரமேயும்பொலங்குடுமிச்சிலையிற்றூங்குமணியாக
விமையோர்யாருமினிதமையாவெறிவேலுண்கணீலமல
ருமையாள்கணவனினிதுறையுங்கயிலைமலையினுய்த்தனரால். ()

சிறகர்வண்டுதுதைந்தாதுஞ்செழும்பூந்தாமங்கண்படுக்கு
நறவங்கோதையயிராணிநயக்குந்தேவன்முதலமரர்
பிறைவெண்டாமம்புனைசடிலநந்திபிறங்குங்கழல்போற்றி [தார்
யிறைவர்க்கெமதுநிலையனைத்து மியம்புகென்ன விரைந்துரைத்

விண்ணோர்மொழிகேட்டருணந்தியவையினெய்திவிமலனிரு
தண்ணார்கமலப்பதம்போற்றிப்புகுந்தவாறுசாற்றுதலு
மண்ணோர்தொழுந்தமுலையுமையாள்பங்கனமரர்த்தருதியெனத்
துண்ணென்றேகிவிண்ணோரைக்கோகைபாகன்முன்னுய்த்தான்

ஞாலம்பூத்த தனிமுளரிநாராயணனேமுதற்றேவ
ராலமயின்றோன்றாள்போற்றியடியேமிடர்தீர்த்தருள்கென்னக்
காலகாலனவைநேர்ந்துகமலப்புத்தேடோனுன்றி
மாலோன்முதலதேவரொடுமணிதாழ்வாயிற்புறத்தணைந்தான்.

பானுகம்பனாயிரம்வாய்தோறும்பணிலமெடுத்தூத
வானஞ்செவிடுபடவாணன்மயிர்க்கண்முழவந்தனிதாக்கக்
கானம்பயிலுந்தும்புருவுங்கலைநாரதனும்பாட்டயரக் [தான்.
கூனற்பிறைதாழ்சடைக்கடவுள் கொடிஞ்சிமான்றேர்கடிதிவர்ந்

எழில்கண்படுக்கும்பொம்மன்முலையிந்திராணிமுதலாய
மழைமானனைக்கினரமகளிரடியீடேத்திவாழ்த்தெடுப்பக்
குழைமேனடந்துகுமிழ்மறியுங்கொழுங்கட்கமலைதொழவுலக
முழுதுமீன்றாளுடனங்கேறின் முக்கட்பெருமானொடுமிவர்ந்தாள்.

ஐயன்மான்றேரேறுதலுமச்சுமுறியவெறுவெய்திச்
செய்யகமலப்பொகுட்டுறைவோன்வேழமுகன்பூசனைசெய்யா
நொய்தின்முரிந்தவச்சியற்றிநொறில்வெம்பரித்தேர்மீதேறிக்
கையில்முக்கோல்பற்றிநணிகறங்குமணித்தேர்கடாயினான்.(௫0)

மூன்றுகோடிதலையிட்டமுப்பானமரர்சூழ்போத
நான்றவருவியொடுங்கயிலைநடந்ததென்னமுன்செல்லுங்
கான்றுகாடமதமொழுகுமயிராவணத்தினுயிரக்கட் [றான்.
டோன்றலேறிப்பிறைமுடித்ததொல்லோற்றொழுதுமுன்சென்

பறவைக்குன்றுந்தாருகனுமுருவவடிவேற்பணிகொண்ட
நறவூற்றிருக்குமுருள்பசுந்தார்க்குமரனாலாயிரவெள்ள
மறவெங்கதிர்வேற்கணஞ்சூழவிமையாக்கருங்கண்வான்றோகை
சிறகர்மயிலின்மேற்கோடிசெங்கேழ்ப்பருதியெனச்சென்றான்.

தழல்கட்பேழ்வாயெரிகுஞ்சிவெய்யகுறுந்தாட்பூதகண
மெழுபத்தெண்ணாயிரவெள்ளஞ்சூழவெரிகட்பேரொலிமே
லழிவெம்மதத்தபிறைகோட்டவலைநீர்பருகியெதிர்வீசும்
புழைவெங்கரத்தவேழமுகன்விண்ணோர்பரவப்போயினனால்.()

அண்டமுகட்டின்முடியுரிஞ்சவம்பொற்றடந்தேர்திசையளப்ப
சண்டன்மணிமான்விறனந்திசங்குகன்னன்பிருகுவிறற் [ச்
கண்டாகன்னன்கோகன்னன்கதிர்வேறிருக்குமாகாளன்
றிண்டாமுண்டிபலகோடிகணங்கள்சூழச்சென்றனரால்.(௫௪)

கொடியவடவைதளிப்புயல்காலாமியென்னக்குளிர்தூங்க
படுவெஞ்சினத்தநுதற்கண்ணிலழன்றுகாலக்கனலொழுக
வடிவேற்றக்கன்மகமழித்துவாகைகொண்டவிறல்வீரன் [தான்
விடையூர்ந்தெண்ணாயிரகோடி வெள்ளஞ்சூழவெருண்டெழுந்

இன்னோர்யாரும்புடைசூழப்பூசநாளினெம்பெருமா [கெயதல
னென்னார்புரத்தின்வெகுண்டெய்திப்புரங்கண்மூன்றுமொருங்
முன்னிநோக்கிவடவரைவிற்குழையாவுலகமுழுதளந்த
மன்னுபகழிநாண்கொளுவித்தடந்தோள்கழியவாங்கினான். ()

அந்தாமரையோன்முதற்றேவரவுணர்புரங்களொருமூன்று
மெந்தாயகலிற்கோறலரிதின்னேபகழிவிடுத்தியெனச
செந்தார்ப்பசியகிள்ளைமொழிப்பாகன்சிறிதுநகைமுகிழ்ப்ப
வெந்தாங்கவுணர்புரமூன்றும்விளிந்துசாம்பராயினவால்.(௫௭)

தண்ணங்கமலப்பொகுட்டுறைவோனெங்கைகமலத்தாள்போற்
விண்ணோருள்ளம்வெள்காமற்கோத்தபகழிவிடுத்தியென [றி
வண்ணவுலகமுழுதளந்தவம்பொற்பகழிவிடுத்திட்டு
நண்ணுவவுணர்கிளையோடுநாமற்றொழியமுருக்கியதே. (௫௮)

ஐயன்முகிழ்த்தகுறுமூரற்றழலினுவியழிந்ததனால்
வெய்யவவுணரெல்லாரும்விண்ணோருலகமேவினார்
பையாடரவினறிதுயில்கூர் பைந்தார்த்துளவோன்முதற்றேவர்
தையல்பாகனடிபோற்றித்தண்டிற்பணிந்தாங்கிவைசொல்வார்.

உய்ந்தேமடியேமினதடியிற்பிரியாவரமீண்டுதவென்னத்
தந்தேமென்னக்கடவுளர்க்குத்தத்தம்பதியின்விடைநல்கிக்
கந்தார்கரடக்கரியுரித்தகரியமிடற்றுக்காமாரி [ந்தான்
மந்தாகினிபோன்கொழித்தொழுகுங் கயிலைவரையின்வந்தடை

இன்னகாதைபடிக்கின்றோர்கேட்டோரினிதினெழுதினோர்
மன்னுமுலகந்தனிகாத்துமகப்பேறெய்திமிகவாழ்ந்து
பொன்னஞ்சிகரிகால்வளைத்துப் புரமூன்றெரித்தபுரிசடையெம்
முன்னோனருளாற்கயிலைவரை யடைவரென்னமொழிந்தனனால்.

திரிபுரதகனமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௭௮௨.

---

முப்பத்துமூன்றாவது

## சிவபூசைப்பலனுரைத்தவத்தியாயம்.

விண்ணவர்தொழுகழன்மகபதியும்வீணையினிசைதெரிமு
னிவரனு, மூண்மகிழ்வுறமழைமுகில்பகருஞ்சிவகதைதனிலொ
ருகதைபுகலென், றெண்ணறுமுனிவரர்மொழிகுதலுமெழுதரு
மறைபுகன்முனியடியி, னண்ணியமனனெடுசூதனெனு நவைய
றுமுனிவரனறைகுவனால். (௧)

ஆதியின்மனுவியருலகேழுமருளொடுபுரவுசெய்திடுநாளி
னேதமில்புகழுடைநரவாமனெவ்வுலகமுமொருகுடைநீழற்
றீதறவறநெறிபிறழாமற்றிசைதிசையுயர்புகழ்சென்றேற
மேதகமகிழ்வொடுநனிகாவல்மேவின னருளொடுமுன்றவேலை.

உருவினில்யாவருநிகரொவ்வாரொருபதினுயிரமடநல்லார், வருமுலைதோள்வளையிடைபுல்லா மகிழ்வுறுநாளினினிணையில்லார், வரிமதர்வாள்விழி யொளிர்செவ்வாயமிர்துறழ்சாயலோர்மயிலன்னு, டிருநலனுல்நரபதியில்வாழ்தெரிவையர்யாரினுநலனுற்ருள். (ங)

ஆயசுதேவியெனுங்கோதையாலநுகர்ந்தவரன்கோயிற்
றூயனசெய்துதினந்தோறுந்தூய்மலர்சந்தநறுந்தூப
மேயினவன்பினெடும்பேணியீர்மலர்மாலைபுனைந்தீசன்
வாயினறுந்துகள்கைநீவாமன்னிவிரும்பினள்செய்ந்நாளின். ()

வேறு.

வள்ளக்கமலவிதழருந்திமலர்ப்பூங்கொட்டைவாய்குதட்டிக்
கள்வாயொழுகமோட்டெருமைகழுநீர்சறித்துத்துயில்கூறு
மள்ளற்பழனப்பாஞ்சாலத்தரசன்மனையாண்முகநோக்கித்
தெள்ளுமறைதேர்காலவப்பேர்முனிவனிதனைச்செப்புவான். ()

வளங்கொளுலகம்பொதுநீக்கி யொருகோலோச்சும்வாள்வேந்த, னுளங்கொண்மாதர் தமிற்சிறந்தீங் குயிர்போலொழுகுமொண்ணுதலார், துளங்குமதியஞ் சடைக்கணிந்த தூயோன்கோயினுளும், விளங்கத்துடைத்துமெழுக்கெறிந்து மெலிவதென்கொல்விளம்பென்ருன். (சா)

மறையோர்நான்குமங்கமொடு வழங்குஞ்செந்நா முனிகேட்டி,முறையாலுன்றன்சிற்றடிச்சிமுன்னைப்பவத்தினூனுகருஞ், சிறையவெருவைப் பெடையுயர்ந்த செம்பொற்குடுமிக் கிட்கிந்தை, யுறையுமீசற்கேற்றடிசிலுண்பானெண்ணிச்சென்றனளுல்.

செல்லுமேல்வைப்பூசைபுரிமறையோனெய்தச்சிந்தைவெரீஇ
வல்லையெழுந்துவலமாகபபறக்குமெனதுச்சிறைவளியா
லொல்லையீசன்றிருமுன்னர்த்துகள்போயகன்றதுயர்பலத்தா
லெல்லாவுலகுந்தனிபுரக்கும் வசுவின்மகளாயினிதுதித்தேன்.

முன்னைப்பவத்தினறிவோடும்பிறந்தேன்பருவமுதிர்ச்சிகண்டு
மின்னுக்கதிர்வேலென்ருதைமிடறுமிடைந்தசூற்கமுகின்
கன்னித்தாற்றுக்குலைசிதறக்கயவாய்வாளைக்கன்றுகளு
மன்னத்தடஞ்சூழ்பாஞ்சாலத்தரசற்கென்னையளித்தனனுல். ()

கொள்ளைவண்டுபொட்டயரக்கொழுமென்போதினறுந்தேறல்
வள்ளியோரின்முகமலர்ந்தபரிசிலளிக்கும்வண்கமலத்
தெள்ளாரமுதத்திருவனையபதினுயிரம்பொற்றெரிவையரின் [ன்
னுள்ளமென்மேலுறவேந்தன் பன்னுளுவப்பினெடும்வாழ்ந்தே

தவளைப்பகுவாய்கிண்கிணிபொற்சதங்கைபுலம்புந்தளர்நடைய
குவளைப்பைந்தார்முருகுறழுங்குமரற்பயந்துசெம்மாந்து

கவளக்களிற்றைநிகரரசனளப்பில்கருணைக்குறையுளர்
யுவரிக்கடல்சூழுலகேத்தவுலவாச்செல்வமொடுமுயர்ந்தேன்.()

**வேறு.**

முற்படுபவத்தினுணர்ந்திடாதிழைத்தநல்வினைமொழிவத
ற்கரிதாம், பொற்பொடுமரசர்குலத்தினிற்றோன்றியரசரிற்புகு
ந்தளப்பரிய,வற்புடைச்செல்வம்பெறவளித்ததனுலறிவொடுஞ்
சினகரம்புதுக்கிப், பற்பலமலர்கொண்டிறைஞ்சுவோர்பேற்றை
யாவரோபகர்ந்திடவல்லார். (கஉ)

என்றலுமறையோனுளமகிழ்ந்தினிதினேந்திழைகேட்டியா
ரோனு, மன்றநல்லிலிங்கத்தொருசருகிடினுமணிமுடியவர்தலைக்
கணியா, மன்றியுமிறைவ னஞ்செழுத்துணர்ந்தோர் முத்தியி
னடைகுதல்சரதம்,பொன்விடுபோதிற்சிவசிவவென்னிற்புலைய
ருமடைவர்சாரூபம். (கங)

அறிவினுலேனுமருளினுலேனு மருவிளையாட்டினுலேனு
ங், கிறியினுலேனும் வஞ்சகத்தேனுங் கிளர்பொருணசையினு
லேனு, மிறைவநல்லிலிங்கபூசனைசெய்தோ ரெந்தைதன்பெயரி
னைநவின்றோர், குறைவருதுறக்கமடைவதுதிண்ணங்கொன்றை
வேணியன்றிருவாணை. (கச)

சிவகதைநன்கிற் பயின்றுளோரினிதி னுங்கதன்பொருடெட்
ரிந்துணர்ந்தோர், நவையறவன்பிற்பாடினோரீசனுயிரநாமத்தி
னெருபே, ருவகையினுரைத்தோர்தமையருங்கூற்றும்வணங்கி
டுநான்முகனுவக்குங், குவலயமவராற் புனிதமாமன்னோர்கொ
ன்றைவேணியன்பதமடைவார். (கரு)

திங்களஞ்சடையோன்சினகரஞ்செய்தோர்திருவிழாவினி
தினமைத்தோ,ரங்கவன்றடந்தேர்பண்ணுவித்தோர்கள்சாற
யர்மறுகமைத்திட்டோர், கொங்கவிழ்தருவி னீழலிற்பன்னுட்
குலிசன்வாழ்த்தெடுப்பவீற்றிருந்து, மங்கையோர்பாக னுலகி
னினடைந்துமலரடிநீழல்வீற்றிருப்பார். (கசா)

இன்னணமறைதேர்புரோகிதனணங்கோடிசைத்தனனே
கலுழ்ந்நதேவி, மன்னவனோடுமெளப்பினுள்வாழ்ந்துமைந்தனைம
ணிமுடிசூட்டி,யன்னமன்னவனைத்தணந்திடாதவனோடடையல
ர்புரங்கண்மூன்றெரியப், பொன்னவிர்குடுமிநெடுவரைகுழைத்
தோனடிநிழல்புக்கனளென்றான். (கஎ)

சிவபூசைப்பலனுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆஉ திருவிருத்தம்—எகூகூ.

முப்பத்துநான்காவது

## சிவன்றிருநாமமறியாதுரைத்தோர்பலனுரைத்த வத்தியாயம்.

ஈசனன்னுமைமென்றுதம்முளத்தினெண்ணிடாதாங்கவனு மம், பேசினுரேனு முயர்கதியடைவ ரென்றனைபேருலகத்தின், மாசறவிவ்வாறுரைத்துநற்கதியின்மருவினேர்காதையையுரைக் கென், முசறுமுனிவர்கூறலுஞ்சூதன கமகிழ்ந்தாங்கஃதுரைப் பான். (க)

பழுதறவிளங்கும்பாற்மகற்பத்தின்முதலுகந்தனிற்படர்சீர் த்தி,வழுதியர்குலத்தினினிதினிற்றேன்றுமிந்திரத்துய்ம்மனன் மைந்தன், ஞெழுதகுவென்றிமுருகுறழ்தோற்றத்தோன்றல்சு த்துய்மினனென்போ,னெழுபெருந்தீவுந்தனதடிப்படுத்தியிந்தி ரச்செல்வமுற்றிருந்தான். (உ)

கல்லெனவொலித்துவெண்டிரைபுரட்டுங்கங்கையாற்றகன் கரைமருங்கின், மல்லலம்பிரதிட்டானமாநகரின்வரிச்சிறைது ம்பிபாட்டயரு, மெல்லிதழ்க்கொன்றைவேணியோர்ப்பழிசசி வேந்தனுங்குறைதருநாளிற், றேல்புகழ்த்திரணவிந்துவென்று ரைக்குந்தோமறுமுனிவன்வந்தடைந்தான். (ங)

நானநெய்விளக்கநறும்புகையடிசிறுண்மலர்வான்முறையே ந்திக்,கானமர்கடுக்கைபுனைதருவேணிக்கடவுடன்பூசனையாற்றி, மோனமாமுனிவர்ப்பணிந்துநீயீண்டுப் புகுந்தமைமொழிதியெ ன்றுரைப்ப, மானவேலிறைநீ முற்பவத்துரைப்பி னுதித்தமை கேட்பவந்தனனுல். (ச)

என்னலுமுனிவன்றுளிணைவணங்கியெதிருரைக்கங்கையாந் துறையுங், கன்னியும்புரந்து மேருமால்வரையிற் கயற்கொடி பொறித்துலகளிக்கு, மன்னவர்திலகனெனதுமுற்பவத்தின்வா ன்முறையினிதுகேட்கென்னத், தன்னமர்கரத்திற்செய்யவாய்பு தைத்துத்தணப்பில்பேரன்பொடுஞ்சாற்றும். (ரு)

பின்னல்வெண்டிரையிற்றுகிர்க்கொடிவரன்றிப் பெய்மலர் ப்பூம்பொழில்சாடிக், கன்னியங்கதலிக்கூன்புறப்பசுங்காய்க் க விழ்குலைகையரிக்கொண்டு, செங்நெலம்பழனவேலிசாய்த்தொ ழுகிச்சிறந்தகோதாவிரிக்கரையின், மன்னுமுற்பவத்தினெயின ர்தம்பதியாயாறலைவாழ்க்கையின்வதிந்தேன். (சு)

ஆற்றெதிர்ப்படுமோர்பொருளிலாரேனுமவருடல்கழுகுதொ ட்டருந்த, வேற்றெதிர்துணித்தும்வம்பலர்கையினிருநிதியளப் பிலகவர்ந்தும், கூற்றினுங்கொடியனிவனெனவுலகங் கூறநாள் பற்பலகழிப்பின், மாற்றருங்கிழவுத்தன்மைவந்தெய்த மறலியூ ர்கடிதினிற்புகுந்தேன். (எ)

தூதுவர்கொடுபோய்மறலிமுனென்னை விடுத்தலுமாங்கவ
ன்றனைவிற், றீதுதீர்கேள்வித்துறைபடித்துயர்ந்தசித்திரகுத்த
னைநோக்கி, மாதவர்முனிவர்வரவுகண்டென்னவீங்கிவன்மேல்
மனமகிழ்ந்த,தியாதிவன்செய்தநல்வினையெனலுமிருகரங்கூப்பி
னரிசைப்பார். (அ)

ஆறலைகள்வர்தம்மொடுமிவன்போ யரகரப்பிறகரவென்று
ச், சீறியாங்குரைத்தமொழியினதிற்றினரனெனும்பெயர்சிவணி
யதா, லேறியபாவமிவனைவிட்டகன்ற தென்னலுமெந்தைபேர்
நாளுங், கூறியவாற்றுற்கடவுண்மற்றிவனு மென்னவெங்கூற்று
வன்பணிந்தான். (கூ)

உருப்பசியரம்பைதிலோத்தமைமுதலாமேனகரிபரந்தவா
ட்டடங்கட், கருப்புரச்செவ்வாயரம்பையரமர்ந்தகதிர்மணிகு
யின்றெளிவிரிக்கும், திருத்தகுவிமான மவ்வுழிக்கொணர்ந்து
தேவதூதுவரென்னையழைப்ப, வருத்தியின்மறலிபணிதலைக்கொ
ண்டுவிமானமூர்ந்தவருலகடைந்தேன். (க0)

உறங்கலாதின்பந்துயத்திடுமுலகி னொருபதினாயிரம்பரு
வ, நறுங்குறடுரிஞ்சாத்தெய்வமென்சாந்தநகைமணமுலைமுகங்
கோட்டி, யறைந்துவண்டிமிரக்கற்பகமாலை யறல்புரைகருங்கு
ழல்வேய்ந்து, மறங்கொள்வேற்றடங்க ணரம்பையர்முகிழ்த்த
வாணகைவிருந்தயின்றிருந்தேன். (கக)

தாமரைக்கிழவனுலகினோர்கற்பந்தகைபெறவிருந்தபின்வி
ண்ணோர், கோமகன்மவுலியூழிபட்டொழியக்கொழுங்கதிர்மணி
த்தொடிப்பணித்த, நாமவேல்வழுதிநன்குலத்துதித்தவிந்திரத்
துய்ம்மினனென்றும், பூமகடலைவன்செய்தவப்பேற்றாற் புதல்
வனாயிங்குவந்துதித்தேன். (கஉ)

ஏயுறமனத்தினெண்ணுறு தொருபேரியம்பியபலமிவைபெ
ன்னிற், பாய்புலிப்போத்தினீருரிபுனைந்தபனிமதிக்கண்ணியெ
ம்பெருமா, னாயிரம்பேருமுணர்ந்துரைக்குநர்பேறென்கொலா
மெனவகத்தெண்ணி, மாயிரும்புவியினிலிங்கமற்றெவையும்வ
ரன்முறைவழிபடாநின்றேன். (கங)

என்றலுந்திரணவிந்துமாமுனிவனிறைமகன்பேரறிவதனை,
நன்றுநன்றென்ன வியந்துமெய்தழுவி நற்றவச்சாலையினடைந்
தான், வென்றிவேல்வழுதிகதையினைக்கேட்டோர்வியந்துளோ
ர்படித்துளோர்யாரும், கொன்றையஞ்சடையோன்சேவடிநீழ
ல்குறுகிவீற்றிருப்பரென்றுரைத்தான். (கச)

சிவன்றிருநாமமறியாதுரைத்தோர்பலனுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்—அசங.

முப்பத்தைந்தாவது

## உபமன்னியுப்பேறுபெற்ற வத்தியாயம்.

ஓங்கும்புகழுபமன்னியுவென்னுந்திறலுரவோன்
றீங்கில்கதையிசைநாரதனொடுதேவர்கடேவர்க்
காங்கண்ணெடுமால்கூறியபடியோதெனவருளால்
வீங்கும்முனிவரர்கூறலுமெய்ச்சூதனுரைப்பான். (௧)

அலகில்புகழ்ப்புலிக்கால்முனியருளோடினிதளித்த
வுலகம்புகழுபமன்னியுவென்னுமொருசிறுவன்
மலமற்றுயர்தவமாற்றியவசிட்டனுறைக்குறுகி
நலனுற்றுயரான்பாலினைநன்கினுகர்ந்தனனால். (௨)

அற்றைப்பகலொழியத்தவமுனிவன்னருள்சிறுவன்
முற்றத்தவமுறுதாதைதனகன்மாமனைமுடுகி
நற்றாயொடுநுகர்போதினினன்பாலருளெனலுங்
கற்றைக்குழனென்மாநனிகரையாவினிதிந்தாள். (௩)

பாலன்றிதுவெனநின்றழுமைந்தன்றுயர்பாரா
வேலங்கமழ்குழலாளிருகண்மாரியிறைப்ப
மாலொன்றியமனனோடுதன்வறுமைக்குளமுருகி
யாலந்திகழ்கண்டன்றிருவருளெண்ணியிருந்தாள். (௪)

ஆயுந்தவமுறுதந்தையும்யானின்றுறவழவுந்
தூய்தாகியபாறந்திலவொன்னத்துயர்சிறுவன்
பாயுந்திறல்விடையோனணிபயிலாலயமருவி
நேயங்கலுழ்வதுபோல்மலர்விழிநீருகநின்றான். (௫)

பாலுக்கழுசிறுவன்றுயர்பாராமகிழ்வோடு
மாலைப்பிறைபவளப்புரிசடைமீதணிவள்ள
லாலிற்றுயினெடுமாலுறைபாலாழியையருளால்
வேலைக்கடலகன்ஞாலம்வியப்பெய்தவளித்தான். (௬)

தன்முன்றிலினிடையெய்தியபாலாழிதனைக்கண்
டென்னன்பினிரங்காவிதுதந்தானெனிலீசன்
பன்னுந்தவமுனிவோர்குறைபகராதனவல்லான்
மன்னும்புரிசடையண்ணல்வழங்காதவுமுளவோ. (௭)

என்றென்றுவியக்குந்தருபாலாழியையினிதி
னன்றென்றுகுடிக்குஞ்சிவநாமம்பலபகருந்
தன்றந்தைதவத்தின்செயலிதுவென்றடிதாழு
மொன்றும்புகழுபமன்னியுவென்னுந்திறலுரவோன். (௮)

பின்னுந்தவமுயல்வுற்றருள்பெறுவானுளமெண்ணித்
தன்னன்புறுதாய்தந்தையரருள்கொண்டுதவத்தோர்
மன்னுந்திரளருவிப்புனலிமயாசலமருவி
யன்னம்பயினீர்புக்குயர்தவமன்பொடுசெய்தான். (௯)

வேறு.

பெட்பினருமாதவம்புரியுமுனிவன்பிரமரந்திரத்திற்
கொட்பினெழுந்தபுகைப்படலம்விசும்புபுதைப்பக்குலிசன்மன
திட்பமொருவாவெருவுற்றுச்செங்கட்கரியோன்முன்னெய்தி [ந்
நட்பினேடுங்தொழுதுமுனிசெய்தியாவுநவின்றனனல். (௧0)

பிள்ளைவண்டுதுயில்கூரப்பெடைவண்டோடும்வரிச்சுரும்பர்
வள்ளைபாடுமகளிரொனவரிபாட்டயர்ந்துதாலாட்டுங்
கள்ளார்கமலமயில்கேள்வன்றேவர்சூழக்கடிதேகி
நள்ளார்புரந்தீயெழநகைக்குநம்பற்றொழுதிங்கிவைபுகல்வான்.

தழைவேய்குறுந்தாட்சாலையுறைபுலிக்கான்முனிவன்றரு புதல்வன், விழைவதென்னேபுகைப்படலம்விசும்புபோர்ப்பச் சுடர்விரிக்கு, மழல்வாய்நாப்பணருந்தவமன்றாற்றானின்றனெ ணலோடு,மழவேறுயர்த்தோன்வளையெறிந்தவயிரப்படையோ னுருவெடுத்தான். (௧உ)

கயிலைநெடுமால்வரைநான்குகாலினடந்தாலெனநடக்கு
மயிராவணத்தின்மீதேறியந்திங்குதலைவேய்மென்றோண்
மயிலஞ்சாயலயிராணிவடிவினுமையாண்மருங்குவரப் [தான்.
புயல்வானளக்குமுயர் குடுமிபொங்கு மிமயப்பொருப்படைந்

மைந்தவுனதுதவநோக்கிமகிழ்ந்தோம்விழைந்துசேட்டனகள்
சிந்தையுவந்துதருதுமெனச்சிறுவன்சிறிதுநகைகோட்டி.
யெந்தையடியார்கேட்டவரநீயோதருதிவெளிறியன்ற
புந்தியுடையையினிவாளாபோகியென்னப்புகன்றனனல். ()

ஐயமேற்றுச்சுடுகாட்டிலமர்ந்தாங்கலகையுடனடிக்குந்
தையல்பாகனொருமூன்றுதலையிட்டுயர்முப்பதுகோடி. [வ
மையிலமரர்தொழுமென்னிற்சிறந்தான் கொல்லோமறைச்சிறு
வுய்யவேண்டிவிழைந்தவரங்கேட்டியென்னவுரைத்தனனல். ()

ஆற்றுமாயைப்புணர்ப்பதனலரக்கன்மகவானுருவெய்திக், கூற் றையுதைத்தபெருமானையிகழ்ந்தானிவனுருயிர்குடித்துச், சாற் றற்கருந்தீமொழிகேட்டுமிறவாவெனையுந்தழற்படுத்திக், தோற் றும்பாவந்துடைப்பனெனத்துகடீர்முனிவன்றுணிந்தனனல்.

ஆற்றலுடையமறைச்சிறுவனகோராத்திரத்தையுளத்தெண்ணி
நீற்றையள்ளியெறிந்துதனையழற்றானையினின்றெரிப்ப
மாற்றுமிறைகணவின்றிறைவனழற்றானையமாற்றுதலுங் [ன்
தோற்றுநந்திமுனிவிட்டவ கோரத்திரத்தைத்தொலைத்திட்டா

அன்னகாலைமுனிவனுளத்தன்புநோக்கிமகிழ்பூத்துத்
துன்னுபருதியொருகோடியெழுந்தாலென்னச்சுடரொறிப்பப்

பொன்னஞ்சடையுமைம்முகமும்புயமீரைந்துவந்தெய்தத் ·
தன்னதுருவாயுமையோடுந்தனிநாயகன்வந்தெதிர்நின்றான். ()

கண்டானுண்மைச்சுடர்க்கொழுந்தைக்கண்டலோடுங்களிநறவ, முண்டார்போலக்களிப்பெய்தியுவந்தானிரண்டிறைன்றான், விண்டான்பவத்தின்வாசனையும்விட்டான்விடயந்தனிலொழுகல், பண்டேதொடராணவமலத்தின்பற்றுமொழிந்துமகிழ்வுற்றான். (க௯)

மீட்டுமீட்டுந்தொழுதேத்தும்வேதமுனிவன்றனையுவந்து
தாட்டாமரையினெழில்கவர்ந்ததடக்கைம்மலராற்புறநீவி
யீட்டும்விழுச்சீர்நாரணர்க்கும்வானோரிறைக்குமேக்கறவு
பூட்டுஞ்செல்வங்கணங்கடொழுந்தலைமையளித்துப்போயினன்

இன்னபுலிக்கான்முனிமைந்தன்காதைகேட்டோரொழுதினோர், பன்னியுரைத்தோர்நாடோறும்படித்தோர்படிக்கமனம்வைத்தோர், முன்னியிதனிலொருமொழித்துமொழிந்தோர்பவளவேணியன்றன், பொன்னார்கமலசேவடிக்கீழடைவரொன்னப்புகன்றனனால். (உக)

உபமன்னியுப்பேறுபெற்றவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—அ௲௪.

முப்பத்தாறாவது

## சலந்தரன்வதையுரைத்தவத்தியாயம்.

சலந்தரனுடலமீசன்போழ்ந்ததுந்தயங்குமாழி
வலம்புரிநிரித்தசெங்கைமாயனுக்களித்தவாறும்
புலங்கொளமகவானோடுமுனிக்குமால்புகன்றவண்ணம்
நலங்கொண்மாதவத்தோர்கேட்பநவையறுசூதன்சொல்வான்.

சீர்கெழுமண்டமுற்றுந்தெண்புனற்பெருக்கினூடு
நீரிடைவெய்தாத்தோன்றுநெருப்பெனவினிதுதோன்றி
வார்கழலவுணரோத்துஞ்சலந்தரன்வானோர்யாரும்
போர்முகத்துடையவென்றுநான்முகன்பதத்திற்புக்கான். (உ)

எறும்வலிப்பொறுவிறிண்டோட்சலந்தரனிகலினேற்ற
வெறிமலர்க்கமலப்புத்தேள்வென்கொடுத்தோடவென்று
பொறியரவணையிற்றுஞ்சும்புண்ணியமூர்த்திவைகு
மறிதிரைப்புரட்டுமந்தண்பாற்கடன்மருங்குபுக்கான். (௩)

புக்கவாளவுணனோடும்பூந்துழாயலங்கன்மார்பன்
செக்கர்வானென்னவன்னோனிறந்திறந்துதிரமாரி
கக்கவெம்பகழிதூண்டிக்கார்முகக்கலவிகாட்டிப்
பக்கமும்விசும்புமெங்கும்பாய்கணைபரப்பினனே. (௪)

விடுத்தவெம்பகழியாவுமவுணர்கோன்விழுங்கிநக்காங்
கடுத்தமாதவனைப்பற்றவனுகலுமுள்ளமஞ்சிப்
பிடர்த்தலைபாதந்தாக்கவிளைவினிற்பேதுற்றோடிக்
கடுத்திகழ்கண்டன்வாழுங்கயிலையினெய்தினானே. (ரு)

எய்திமுன்னிறைஞ்சிநின்றமாயனையினிதுபுல்லி
வைதிகர்க்கன்றித்தோன்றாமழுவலானஞ்சலென்னாக்
கைதலைமீதுவைத்துக்கருணைகூர்ந்திருக்குமேல்வைப்
பைதலுற்றோடுமாலைப்பற்றிவாளவுணன்சென்றான். (சு)

மீயுயர்புவனமெல்லாம்விழுங்கினும்விழுங்கவல்லார்
காயெரிகவிழ்க்குங்கண்ணார்காலனைக்கையிற்பற்றி
வாய்வழிகுருதிகக்கக்குத்தியவயிரத்தோளா
ராயிரகோடிவெள்ளந்தானவரழன்றுசெல்ல. (எ)

விண்டுமுன்புவனமுண்டவியப்பினைக்கேட்டுநக்காங்
கண்டகோடிகளுந்தன்றோரங்கையினள்ளியள்ளி
யுண்டுமீண்டுமிழ்ந்தவெற்றிச்சலந்தரனூரப்பியீசற்
கண்டுளங்கனன்றுவெம்பியிங்கிவைகழறலுற்றான். (அ)

ஐயமேற்றருந்தும்பித்தகேட்டியான்பிறந்தவன்றே
செய்யதண்கமலத்தோனைப்பிடித்துவெஞ்சிறையினுய்த்தேன்
மையலங்களிறோரொட்டும்வானவர்முதல்வனோடென்
கையினிற்பற்றிமற்றையண்டத்திற்காவல்செய்தேன். (கூ)

காய்சினத்தறுகட்புள்ளேற்றரசொடுங்கரியோன்றன்னை
யோசனைநூற்றுக்கப்பால்வீழ்தரவொல்லைபற்றி
வீசிமுன்னெறிந்தேன்விண்ணோர்மகளிரைப்பற்றியென்றன்
றாசியர்தம்மினுய்த்தேனென்னையார்தடுக்கற்பாலார். (கO)

இலகுவாளெயிற்றபேழ்வாயிராவணன்முதலினோரை
யுலகெலாம்வெருவியோடவொல்லையிற்சிறையினுய்த்தேன்
மலர்தலையுலகினெய்தும்வானதியதனைத்தட்டேன்
புலவுநீர்க்கடல்களேழும்பெரும்புறக்கடலோடுண்டேன். (கக)

அஞ்சனமிடற்றோய்வெய்யவழிமதுக்களிறுவீழும்
வெஞ்சமத்துடைந்துபோந்தமாயனைவிடுத்துன்னாவி
யுஞ்சுபோகுதியோவன்றியுடற்றுவெஞ்சமரினேற்றுத்
துஞ்சுதிகொல்லோவென்னாத்தோட்புடைகொட்டியார்த்தான்.

திங்களங்கண்ணிப்புத்தேனுதல்விழிதிறப்பவாங்க
ணங்கியம்பொறியொன்றெய்தியாயிரகோடிவெள்ளம்
வெங்கண்வாளவுணர்தம்மைச்சாம்பராய்விளியநூறப்
பொங்குவெஞ்சீற்றத்துப்பினவுணர்கோன்போரினேற்றான். கங

ஏற்றிகலவுணன்றன்னையெம்பிரானகைத்துநோக்கி
யாற்றலையெனதுவாளிக்கெனவுரைத்தலங்குசெம்பொற்
காற்றலைவிறலாற்கீறிக்கடும்பிறோர்நேமிபண்ணித்
தோற்றுமீதெடுக்கிலுன்றோடமர்செயத்துணிவலென்றான். ௧௪

என்றலுமவுணர்கோமானிலங்குவாளெயிறுதின்று
பொன்றவழ்கிரிக்கூற்றைவருந்தொடுமெடுத்துப்பொங்கித்
தன்றலைமீதுவைப்பத்தலைமுதலடியீறாகக்
[illegible]ன்றிருகூறுசெய்தாலெவ்வுடல்குறைத்ததன்றே. (௧௫)

ஆங்கவனுடலம்போழ்ந்தவழலுமிழ்நேமிப்புத்தே
ளங்கறவீசன்கையிற்சேர்தலுமவுணன்மெய்யின்
வீங்குநீர்வேலையென்னவரத்தநீர்வெள்ளங்கோத்தும்
தாங்கருமுலகமியாவுந்தணப்பறப்பரந்ததன்றே. (௧௬)

வெண்ணிணமூளைநெய்த்தோர்தசைவிழுக்குடர்களியாவு
மண்ணலோர்குண்டந்தன்னினமைத்துவான்பிலத்திலூடு
நண்ணருநரகமாகநாகர்வானியக்கர்சித்தர்ப்
பண்ணவர்முதலோர்யாரும்பணிமலர்த்தூவியார்த்தார். (௧௭)

சிறைபடுமலரோன்விண்ணோர்வெந்துதிக்கயங்களுகள்
முறையினிற்றத்தம்வாழ்க்கையடைந்தனர்முகுந்தன்முக்கட்
கறைமிடற்றண்ணல்செம்பொற்கழலிணையினிதுபோற்றி
மறையொருநான்கும்போற்றும்வைகுந்தமடைந்தானன்றே. ()

சலந்தரன்வதையுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—அ௫௨.

முப்பத்தேழாவது

## மாயோனேமிபெற்ற வத்தியாயம்.

சலந்தரன்கிளைகளாயவவுணருந்தறுகட்பேழ்வாய்
வலங்கெழுவயிரத்திண்டோளரக்கரும்வந்துநந்தங்
குலங்கெடமுருக்குகின்றவமரரைக்கொன்றுநாமென்
றிலங்கொளிவிரிக்குமாடத்திந்திரனகரிற்சேர்ந்தான். (௧)

கூற்றெனவுரறியார்த்துக்கொல்சினத்தவுணர்வெம்போ
ரேற்றமர்புரியுமேல்வையிந்திரன்முதலதேவ
ராற்றலராகிநெஞ்சமழிந்துவென்கொடுத்துப்போகி
மாற்றலர்தானைமுற்றும்வைகுந்தநகரிற்சேர்ந்தார். (௨)

பாவடிப்பருமயானைபரவமுன்வந்துகாத்த
தேவர்கடேவவெய்யதீத்தொழிலவுணர்தம்மா
லோவறுதுயரமுற்றேமுய்திறங்காணேமென்னத்
தாவருந்துதிகள்கூறிவருந்தொடுஞ்சாற்றலுற்றார். (௩)

இலங்குவெண்டிங்கட்கண்ணியெம்பிரான்வெகுண்டுமுன்னஞ்
சலந்தரனுடலம்போழ்ந்தசக்கரம்பெற்றுயென்னில்
வலங்கெழுமவுணர்தம்மைமாட்டுதலெளிதாமென்றுப்
புலன்களுமனனும்வேறய்விண்ணவர்புகன்றரன்றே. (௪)

வேறு.

இமையாக்கருங்கண்முலைதாங்கியிடுகுமருங்குலயிராணி
யமையார்தடந்தோணலனுகருமண்ணன்முதலாநமரங்கா
ளுமையாள்கணவன்றள்போற்றிநேமியடைந்தீங்குடற்றவுணர்
தமைவேரோடுந்தடிந்திடுவன்றளரோலென்னவிடையளித்தான்

தண்ணங்கமலத்திறையோடுமுலகம்பூத்ததனியுந்தி
யண்ணலிமயவரையெய்தியந்தண்சாரற்சினகரமொன்
றெண்ணற்கரிதாயினிதியற்றியெந்தையிலிங்கமாங்கமைத்து
விண்ணோர்போற்றும்பாசுபதவிரதம்பூண்டுவழிபட்டான். (௬)

மோட்டானைந்தினினிதாட்டித்தீபமுருகார்ப்புகையடிசில், வே
ட்டாதரவினுடனேந்திவிளைகொப்புளிக்குந்துழாய்மார்பன்,கூ
ட்டாடரவகங் கணத்தோன் பெயராயிரநாடொறுந்துதித்துத்,
தாட்டாமரையாயிரஞ்சாத்தித்தயாவின்வழிபட்டிடுநாளின். ()

வையமளந்தசேவடியுங்கண்ணுமுகமும்வாய்மலருஞ்
செய்யகரியதிருநெடுமாலன்புநோக்கத்தெறுசினத்த
வெய்யமதவெங்களிறுரித்தோன் விளைகொப்புளிக்குநறவுயிர்க்
மையகமலமாயிரத்திலொருபோதறியாதகற்றினன். [கு

வெண்ணெய்கமழுஞ்செங்கனிவாய் விமலனிமிலே றுயர்த்தரு
மண்ணல்பெயராயிரமோதிப்பொற்றளிணையிலருச்சிக்குங் [ளு
தண்ணங்கமலமாயிரத்திலொன்றுகாணுன்றளர்வெய்திக் [ன்
கண்ணென்றுரைக்குஞ்செய்யமலர்க் கமலம்பறித்துச்சாத்திறு

கடவுட்புள்ளேறுயர்த்தருளுங்காயாமேனித்திருநெடுமா
லுடையப்பேரன்பினைநோக்கியுள்ளத்துவகைமீதூர
வடைவின்வழிபாடினிதியற்றுமிலிங்கத்திடையாயிரகோடி
சுடராங்கெழுந்தாலெனவருட்கட்டோகைபாகன்றேன்றினன்.

கான்றவிட்வாளரவணையிற்றுயிலுங்காயாமலர்நிறத்தோன்
சான்[illegible]ண்ணுமெண்டோளுந்தாங்கிமுற்றுமதிசூடித் [ஞ்சி
தோன்றுங்கங்கைவேணியனைவலங்கொண்டிருதாடொழுதிறை
யான்றவுவகைமீதூரவருமாமறையினேத்தினன். (௧௧)

வையம்பொதிந்தசெங்கனிவாய்மாயோனன்புக்குண்மகிழ்வுற்
றையன்கையாற்புறநீவியடியிற்பூனைந்தமலர்க்கண்ணு
மெய்தால்கிச்சுதரிசனமென்னுஞ்சுடராழியுமீந்து
செய்யகமலக்கண்ணனெனும்பெயருஞ்சிறப்பினெடுமளித்தான்

இன்னும்விழைந்தவரங்கேட்டியளிப்பனென்னவிறைகூற
கன்னிப்படலைத்துழாயலங்கலுடுத்ததிணிதோட்கடல்வண்ண
னின்னதடியினெஞ்ஞான்றுநீங்காப்பேரன்பளித்தியென
வன்னதளித்துவிடையுயர்த்தவமலன்மறைந்துபோயினான். ௧௩

வடவைகவிழ்க்குஞ்சுடர்த்திகிரிப்படையாலவுணருயிர்வவ்
விக், கடவுளமிராவணப்பாகனிழந்தவரசுங்கடிதருளி, யிடர்தீர்
ந்துலகமுழுதோங்கவெழிதெண்டிரைநீர்சிவப்பமுனாஞ், சுடர்
ன்றெழுந்தகவுத்துவந்தாழ் மார்பன்சுவேதத்திவடைந்தான்.

மணிவாருடுத்துச்செம்மாந்துவளருங்கொம்மைமுலைத்திருவிற்
கணியாரகலங்கொடுத்தருளுமண்ணல்நேமிபெற்றகதை [ற்
தணியாவுவகையொடுங்கற்றோர்கேட்டோர்தமதுதடங்சண்ணி
பிணியாங்கொழிந்துநனிவாழ்ந்துமீளாமுத்திபெறுவரொன்றுன்.

மாயோனேமிபெற்றவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௮௬௪.

---

முப்பத்தெட்டாவது

## சுவேதன்கூற்றினைக்கடந்தவத்தியாயம்

விழுத்தகுமகதிநல்யாழ்முனியொடும்விசும்புகாக்கு
முழுத்திறல்வயிரவொள்வாட்புரந்தரன்கேட்பமுன்ன
மழைப்புயலனையான்சொன்னவண்புனற்றீர்த்தவண்மை
தொழத்தகுமுனிவர்கேட்பச்சூதமாமுனிவன்சொல்வான். (௧)

உலகினிற்றீர்த்தம்யாவுமுரைத்திடினுலப்பின்றாக
நிலவியவவற்றிற்காதையுள்ளனநிகழ்த்தலுற்றேங்
தலமுழுதேத்தவோங்குஞ்சத்தசாச்சுவமென்றோது
மலிபுனற்றீர்த்தந்தன்னின்மங்கணசித்தனென்போன். (௨)

தவத்தினிற்செம்மாந்தாடத்தாணுவந்தாங்கணெய்திப்
பவத்துயரகற்றுநீறுலைவழியொழுகப்பாடி
யுவப்பினோடாடனேக்கியாணவமொருவிச்சித்தன்
குவட்டிளமுலையாள்பங்கிற்குழகனைவழுத்தல்செய்தான். (௩)

வழுத்திநின்றினிதினேடுமங்கணசித்தன்கேட்பப்
பழிப்பின்மெஞ்ஞானம்யாவும்பகர்ந்திறைமறைந்துபோனான்
றழைத்துயர்வளங்கூர்சத்தசாச்சுவதீர்த்தந்தன்னின்
விழச்சிறப்புறைத்தேமீதிலாடினோர்விண்ணோராவார். (௪)

கோடிமாமறையோர்கண்டுகொழுமலர்தூவியேத்தக்
கோடிபேருருவுமீசன்கொண்டவணமர்ந்தவாற்று
லோடுசீர்த்தீர்த்தந்தன்னையுருத்திரகோடியென்பர்
நாடொறுமதனிற்றேய்ந்தோர்நான்முகனுலகின்வாழ்வார்.(௫)

தெண்டிரைபுரட்டுங்காலாஞ்சரமெனுந்தீர்த்தமாங்கொன்
றுண்டதினுலகம்யாவுமொருகுடைநிழற்றவாண்ட
மண்டமர்கடந்தவென்வேற்சுவேதனென்றுரைக்குமன்னன்
றண்டலிற்றனதுவாழ்நாடனக்குநாளணித்தென்றெண்ணி. (௬)

மணிமுடிதுறந்துதூயசடைமுடிபுனைந்துமன்னன்
வணிகதிர்த்திங்கட்கண்ணித்தோன்றறன்பூசையாற்றிப்
பணிதருநாளிற்காலப்பகுதியோர்ந்தினிதிற்கூறுங்
கணிதர்முன்சொன்னவற்றமின்றெனக்கருத்தினெண்ணி.

ஒன்னலருதிரமாந்தியூன்சுவைத்தொளிரும்வேற்கை
மன்னவன்சுவேதனென்போன்மதிவகிர்கண்ணிசூடு [க்
முன்னவன்கமலப்பொற்றாணிணைந்துகண்முகிழ்த்துத்தூய்தாய்
தன்னைமற்றவனுமெண்ணித்தாழ்ந்தனனிருக்குமெல்லை. (௮)

படர்மருப்பெருமையூர்ந்துபைநிணத்தொய்யில்பூசு
மடல்கெழுசூலமேந்தியுருமெனவதிர்ந்துபொங்கி
யுடல்சினத்தறுகட்பேழ்வாயொள்ளெயிறிலங்கநக்குக்
கடல்விடமெழுந்ததென்னக்கரியகூற்றடைந்ததன்றே. (௯)

பாற்றினஞ்சூழலும்வெய்யபருப்புடைத்தண்டஞ்சுற்றிக்
கூற்றெதிர்ந்திடவுநெஞ்சம்வெருவலனாகிக்கொன்றை
யூற்றிருந்தழிதேன்காலுமொண்பிறைச்சடையோன்பாதம்
போற்றிநாண்மலர்கடூவிப்பூசனைபுரிந்தானன்றே. (௧0)

தண்ணறுந்துளவோன்செய்யதாமரைப்பொகுட்டுமேலோன்
விண்ணவரியக்கர்சித்தர்முனிவரர்விஞ்சைவேந்த
ரெண்ணிலரொன்கைப்பாசத்தாருயிரிறந்தாரொன்னின்
மண்ணுறுமனிதனோவென்பாசத்தைவிலக்கவல்லான். (௧௧)

என்னவெங்கூற்றஞ்சீறிவருதலுஞ்சுவேதனென்னு
மன்னவனிலிங்கந்தன்னைமகிழ்வொடுந்தழுவிக்கொண்டு
பன்முறைசபதங்கூறிப்பணிந்தறம்புரியாரோனுந்
தன்னுடையன்பர்ப்பேணுந்தாணுவைவழிபட்டானே. (௧௨)

வழிபடுசுவேதன்முன்போய்வாய்மடித்தெயிறுதின்று
கழிபுலால்கமழநக்குக்கண்ணிணைவடவைதூங்கப்
பழிபடுமொழிகள்கூறிப்பாசமோர்கையினேந்தி
யழலுமிழ்சூலஞ்சுற்றியழன்றுநின்றுரப்பியார்த்தான். (௧௩)

அங்கவனார்த்தனோக்கிச்சுவேதனன்பொழுகநின்று
சங்கரமகேசவீசதாமரைக்கண்ணன்காணாப்
புங்கவகாமற்செற்றோய்புராரிமுக்கண்ணதூய
மங்கையோர்பங்கவென்னுமழுவலான்றோன்றினனே. (௧௪)

ஆயிரமவுலிபொற்றேளாயிரமலங்கற்றிண்டோ
ளாயிரமிலகுமேதியாயிரந்தாங்கிவெய்யோ
னுயிரமெழுந்ததென்னவலர்கதிர்விரிந்துதோன்ற
வாயிரநாமத்தண்ணலணிவிடையிவர்ந்தானன்றே. (௧௫)

மரகதவல்லியென்னமங்கையோர்பங்கிற்றேன்ற
வரகரவென்றுதேவரணிமலர்தூவியார்ப்ப
நரைவிடைகடிதினூர்ந்துநாமவேற்சுவேதனென்னும்
ரவலனஞ்சலென்னுப்புண்ணியமூர்த்திவந்தான். (௧௬)

ஏறணிமணிகளார்ப்பநடவியேறுயர்த்ததோன்றல்
பாறுதாழ்சூலம்வெய்தாத்திரிவித்துவருதல்பார்த்துத்
தாறுறுத்தெருண்மையோட்டுந்தடக்கையுமுளமுஞ்சோர்ந்து
மாறுசெய்மறலியாவிமறிந்துகீழ்விழுந்தானன்றே. (௧௭)

கூற்றுவனுவிபோகக்கொன்றையஞ்சடிலத்தெந்தை
நீற்றொளிபழுத்தமேனிச்சுவேதனைநெடிதுநோக்கி
மாற்றருங்கணங்கட்கெல்லாநாதனுய்மவுலிசூட்டி
தோற்றருமளப்பில்செல்வத்தொகுதியுமளித்தானன்றே. (௧௮)

இலமலர்ச்செவ்வாய்க்கோதையீசனையினிதுநோக்கிக்
கொலைபுரிதொழிலினி முன்னங்கொடுத்தனையதனுலின்றே
னலமிகுசுவேதற்கொல்வானடந்தவைபொறுத்துநம்ப
வுலைவுறுமறலிக்காவியுதவிடவேண்டுமென்றாள். (௧௯)

மறலியைமுனிந்திலேன்யான்மறிந்தனன்கொல்லோவென்று
விறைவனம்மறலிக்காவியினிதினிலளித்துப்போனன்
கறைகெழுசூலவேற்கைக்காலனுஞ்சுவேதற்போற்றித்
தெறுசினப்பகட்டினேறித்தென்புலமதனிற்புக்கான். (௨0)

இன்னநற்றீர்த்தத்துற்றகாதையையியம்பினோரும்
துன்னியமறலிபாசத்துவக்கினிற்பிணிப்புறுமற்
றன்னலங்குதலைபாகன்கயிலையிற்கணங்கட்கெல்லா
முன்னவராகிநாளுமொய்ம்பொடும்வாழ்வரன்றே. (௨௧)

சுவேதன்கூற்றினைக்கடந்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—அஅஅ.

முப்பத்தொன்பதாவது

## தீர்த்தமகிமையுரைத்தவத்தியாயம்.

குறைவறுபிரமதீர்த்தங்குருக்கமர்த்தங்கோகன்ன
மறைபுகழ்சித்தவாசமதுவனங்கன்னிகங்கைக்
கறையறுசோமதீர்த்தம்விசுவதீர்த்தங்காவேரி
நிறைபுனல்விரசையாறுமகாகாளந்கிரில்வைகை. (௧)

கனக்லதீர்த்தங்கோதாவிரிவயிதரணிகாமர்
வினைகெடவொழுகுஞ்சித்திரநதிதிகழ்வியாததீர்த்தங்
கனைபுனற்பிருதுதுங்கங்கவுசிகங்கனககந்தை
நினைவருதெசாச்சுவமேதமாதுங்கநிகரில்தீர்த்தம். (உ)

சீர்கெழுசுவாமிதீர்த்தஞ்சுழுமுனாதீர்த்தஞ்சிந்து
வேர்கெழுபுண்டரீகமேகரானனங்குபேரதுங்கம்
பார்தனிபுகழும்பஞ்சநதிதீர்த்தம்பாவநாசம்
பேர்கள்சொன்னவதிதீர்த்தம்பிலக்காவதானதீர்த்தம். (௩)

மாதீர்த்தங்காலசற்பிமானசவாவிதீர்த்தங்
கேதாரமசுவதீர்த்தங்கிட்டிணவேணியீசன்
பாதம்வைத்திடுமாகாளமொக்கிசபிரிட்டம்பண்பா
ரோதமில்தன்மதீர்த்தம்புருடைநீள்யமுனாதீர்த்தம். (௪)

சந்திரதீர்த்தஞ்சாளக்கிராமம்வாருதியிற்சாரு
மந்தமினதிநதங்களருவிகள்வாவியாவு
நந்தலில்தீர்த்தமாகுநண்ணிமற்றிவற்றினாடிற்
பந்தமில்துறக்கவீட்டிற்பரிவொடுமுறைவர்மாதோ. (௫)

புண்ணியத்தலங்கயோநதிநதம்புகலிலிங்க
நண்ணரும்வாவியாவுநன்றறிபுலவரானோ
ரண்ணலந்தீர்த்தமென்பராங்கவைதன்னிலீசன்
றண்ணறுந்துளவோன்வைகுந்தாருகாவனநன்றுமால். (௬)

தீர்த்தமகிமையுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—அகூச.

---

நாற்பதாவது

## தாருகாவனத்திற்பலிபிரந்தவத்தியாயம்.

என்னலுஞ்சிறப்புவாய்ந்ததாருகாவனத்திலீசன்
மன்னிமுன்னையமேற்றகாதைவாசவற்குத்தூய்தா
யின்னிசைமுனிக்குமாயோனினிதினினுரைத்தவண்ணம்
பன்னுதியென்னச்சூதன்பரிவொடுமுரைக்கலுற்றான். (க)

கருமமேபலத்தைநல்குங்கடவுள்வேறில்லையென்னு
மருவருஞ்சமயத்தெய்திமாதவமுனிவர்யாரும்
பெருமயலுழத்தநீரப்பெண்ணொருபாகம்வைத்தோன்
மருமலிதுளவினானைமங்கையாய்வருதியென்றான். (உ)

வேறு.

ஆட்கப்பசும்பொன்னிலையிடையுருக்கியாயிரக்காலமுற்புகு
த்தி,யோட்டவைத்தென்னமெய்யொளியெறிப்பவொளிர்பொலங்

குழைவெயிலெறிப்பச், சேடமைபருதிவாண்முகமிலங்கச்செவ்விசேர்தடம்புயஞ்சிறப்ப, வாடவரோனும்பெண்ணுருவிரும்புமழகுடைமார்பொளிசிறப்ப. (௩)

கண்வழுக்கெய்துமெழில்கனிந்தொழுகக்கடிஞையோர்கரத்தினிலேந்தி, மண்ணமைதுடியோர்கரத்தினியக்கிமணிமிடற்றிடையினுள்ளாளம், பண்வரவெழுப்பிக்கனிவுறப்பாடிப்படுமதகளிறெனநடந்து, தண்ணறுங்கடுக்கைத்துயல்வருஞ்சடையோன்றாருகாவனத்திடைச்சார்ந்தான். (௪)

கூற்றினைவெய்யகொலைத்தொழில்பயிற்றிக்கூறருமருந்தவக்குறும்பு, மாற்றிவேள்சமயமுலகினினிறுவிவாளொடுந்தோழமைக்கொண்டு, சேற்றிதழ்க்கமலமலரிடைப்புறளுஞ்செழுங்கயலெனக்குழைபுரட்டும், வேற்றடங்கண்கடுறந்தமாதவரைக்காமநோய்க்கடலிடைவீழ்ப்ப. (௫)

வெருவருமுலகத்திருளுலகடைந்துவெயிற்குறும்பொன்றறப்பருகிக், கருகிமைந்தூற்றநூலெனநீண்டுகடைகுழனறவுநெய்த்திருண்டு, முருகுகொப்புளிப்பமூசுவண்டரற்றுமொய்ம்மலர்வேய்ந்துபைங்கூந்த, லுருவுகொண்டறவோருளத்துமால்காழ்க்கொண்டொழுகிடக்கியிற்புறத்தொளிர. (௬)

வேறு.

தமரக்கட்ல்சூழ்நிலவலயந்தன்னிற்காமநூலொழிய
வமையுஞ்சமயமனைத்துமினியழியுந்தருமநூலாதி
நமரங்காளென்றறமாற்றிநடப்பச்செவ்வியழிந்தொழுகுங்
கமலமுகத்திற்புன்மூரற்கதிர்வெண்முத்தநிலவெறிப்ப. (௭)

வேறு.

வெண்ணிலாக்கற்றை விளிம்புவிட்டெறிக்கு மணிவடஞ்சுமந்தறவீங்கித், தண்ணறுங்கலவைச்சேற்றினுளலர்ந்ததாமரைமுகிழ்நலங்கவற்றி, வண்ணம்வீற்றிருந்துசுணங்குபூத்தலர்ந்தவருமுலையுலகமோரேழு, முண்ணியவெழுந்தகூற்றிரண்டென்னவுத்தரீகத்திடையொளிர. (௮)

வாளெனப்பிறழ்ந்துகடைக்குழையெறிந்துமதர்த்தரிபரந்துயிர்பருகி, யாள்வழக்கறுக்கு மதர்விழிக்கூற்றமாடவரசுலுமினென்னத், தாளதாமரையிற் பெய்தபொற்சிலம்புந்தவளைவாய்ச்சதங்கையுமாற்ற, நீளிரும்பிடியுமன்னமென்பெடையுநிகரழிந்திடத்தனிநடந்தே. (௯)

இன்னணமாயன்மடவரலுருவிற்பின்செலவெம்மையாளிறைவன், கன்னலினமிழ்தின் விளைந்தகோற்றேனிற்கனியினிலிசைகளிந்தொழுகப், பன்னருஞ்சாமகீதமாமுனிவர்பன்னியர்ம

யல்கொளப்பாடி, மென்மெலபபொருமால்விடையெனநடந்து வியன்மனை தொறும்பலியிரந்தான். (க0)

வெள்ளிவாயிப்பிவெடித்தவெண்முத்தநிறைத்தனமென்ன கைத்துவர்வாய்க், கள்ளவிழோதிப்பார்ப்பனிமகளிர்கடிஞையி ற்பலியிடுவார்போ, லுள்ளம்வேள்கணைபோம்புழைவழியொழு கமதிமருண்டுறுபசியோடு, வள்ளைவாய்க்கமலக்கைவளையனைத் தும்வறுநிலத்துகுத்தனர்நிற்பார். (கக)

தொய்யில்வெம்முலையார்முழுமெயும்விளர்ப்பச்சுடர்விடு கதிர்மணிச்சூட்டுப், பையரவல்குன்மேகலையோடும்பைந்துகி ன்மென்மெலநடப்பச், செய்யபங்கயத்தினெழினலங்கவற்றுசீ றடிசேப்பவந்தெய்தி, மையறீறணிந்தவம்பரம்வாங்கியணிந்த வர்போலெதிர்நிற்பார். (கஉ)

துளங்கொளிவிரிக்கும்வெள்வளைக்கமலத்துணைமலர்த்தா ளினிலணைந்து, விளிம்புவிட்டெறிக்குஞ்செழுஞ்சுடர்க்கற்றை சிலம்புமென்கூந்தலின்மிலைந்து, யிளம்பிறைநுதன்மேலஞ்சன ந்தீட்டியிணைவிழிமீதுபொட்டணியா, வுளங்கவர்ந்தேகுமைய னைத்துடர்ந்தெம்முணர்வளித்தேகெனத்தடுப்பார். (கங)

குமரிவண்டறைந்துகூட்டுணுந்தெரியல்கொடிபுனைமருங் கினிற்புனைவார், திமிரமேய்ந்தொளிருஞ்செம்மணிக்காஞ்சிதே மலர்க்கூந்தலினணிவார், கமழ்நறுஞ்சாந்தமுலைமுகட்டணியுங் கதிருமிழ்நித்திலக்கோவை, யமையுறழ்பசியதோளிடைசசுற்றி யாருயிரலம்வரநிற்பார். (கச)

வீங்குகூலிப்பிவெடித்தவெண்முத்தமணிவடமெனச்சுணங் கணிந்த, கோங்கிளமுலையிலணிதலும்வேறோர்வடமெனக்கொ ப்புளங்கொள்ள, வாங்கவைபரிந்து பலியிரந்துலவு மழகனைக் கண்மணிக்குளிர்ப்பத், தீங்குறுகாமந் தலைக்கொளநோக்கி நா ணொடுங்கெருத்தலைதிரிவார். (கரு)

இன்னணங்கன்னிக்கற்பினையன்றிக்கடவுள்வேறின்றெனவி ருந்த, வன்னலார்யாரும்பின்றுடர்ந்தேகவஞ்சனமணிமிடற்றெ ந்தை, பன்னருமறைகள்பாடுகின்றாடும் பற்பலவினோதமாங்கிய ற்றும், பொன்னடிச்சாத்திமுனிவரர்முன்றிற்றலைதொறும்பொ ற்பொடுமுலாவும். (கசு)

அற்பொடுங்கவஞ்செய்முனிவர்பன்னியர்தம்மகத்திடைவ விதினிற்பூண்ட, கற்பினைக்கரந்துகாமநோயூட்டிக்கங்கையஞ்ச டையினோன்றிரிய, வெற்பெழுந்தியங்கநோற்றுயர்காமமகற்றிய விருந்தவர்குழுவிற், பொற்புறுமாயோன்மோகினியுருவாய்ப்பு ரிந்தவையாவையும்புகல்வாம். (கஎ)

வேறு.

தண்டலில்வனப்புடையமோகினிதயங்குந்
தெண்டிரையுயிர்ப்பவருதெள்ளமுதமென்னக
கண்டவர்கள்கண்டவர்கள்கல்வியொடுநெஞ்ச
முண்டுகயல்போல்விழிமுகத்திடையுலாவ. (௧௭)

மல்லலுலகத்துறையுமாமுனிவகேண்மின்
கொல்லுமிவள்வெய்யமுலைகூற்றகலுமென்னச்
சில்லரியகிண்கிணிசிலம்பொடுசிலம்ப
மெல்லெனநடந்துதவவேதியர்முன்வந்தாள். (௧௯)

காருறழுமோகினிகைசெயுநர்போல
வார்வமுறுமாமுனிவராருயிர்முடிக்கும்
வார்முலையினுண்டுகில்சரிந்திடமறைந்தாங்
கோரிடையிறுணிறுமென்மெலவொதுங்கும். (௨0)

மாதவமியற்றுநர்மனம்பறையடிப்பக்
காதலுறநின்றணிகள்கந்துகமடிக்கு
மேதமறயாழ்விசிநரம்பினிதியக்கி
மேதகுமுனிக்கணும்விரும்பவிசைபாடும். (௨௧)

கண்வலையெறிந்துசிலர்காமுறமருட்டும்
பண்மொழியினிற்சிலர்தமாருயிர்படுக்கும்
வெண்ணகையுனிற்சிலரைவேற்றுடலமாக்கு
மொண்ணுதறனித்தனிபுரிந்தசெயலொன்றோ. (௨௨)

மின்னிடைவிளைத்தசெயல்கண்டுளம்விரும்பி
முன்னருமருந்தவமுனித்தலைவர்யாருந்
தன்னிலைதிரிந்தெழில்சொடாமரைமருட்டும்
பொன்னடியின்வீழ்ந்தறிவுபோயிவையுரைப்பார். (௨௩)

எங்கள்செய்தவப்பயனடைந்தவியல்பன்றோ
மங்கையிவண்வந்ததெனவாய்குழறவோதிக்
கொங்கையெனவெற்பிணைசுமந்துகுழைகின்ற
வங்கலுழுமேனியடிபோற்றியயர்கிற்பார். (௨௪)

துப்புறழுமென்சடைநிலத்துகடுடைப்ப
மெய்ப்படருமுத்தரிகமுந்துகிலும்வீழச்
செப்பவரிதாகியதவத்துறைதிறம்பிப்
பொய்ப்படுமெருங்குலைவிடாதருகுபோனார். (௨௫)

இன்னணம்வருந்தியெழின்மாயையுடனேகுத்
துன்னரியயோகுபுரிதொன்முனிவர்யாருந்
கன்னிமையுநாணுமொழியக்கலையிகழ்ந்தே
பன்னியர்களீசனிருபால்வருதல்கண்டார். (௨௬)

காண்டலும்வெகுண்டுவிழிகாலவடவைத்தீ
மூண்டெரியவெண்ணறுமுனித்தலைவர்யாரு
மாண்டகையின்மிக்கதிறலையன்முனமெய்தி
யீண்டியுயர்சாபமொழியெண்ணறவிசைத்தார். (உஎ)

மறையவர்வெகுண்டுநனிவைதனகள்யாவு
மிறைவனையடுத்திலவெனாச்சினமிகுத்துத்
தெறுநழலினையவிசெழுமகழியுகுத்தாங்
கறைவரியதீயமறையாவையுமறைந்தார். (உஅ)

வேறு.

மலர்சினைப்பலாசின்பச்சிலைச்சுருக்கினறுநெய்மொண்டா
ரழலவாக்கி, யலகறுமுனிவர்மருளொடுஞ்செய்தவாவிசாரத்தி
டைப்பிறந்த, கொலைவிடப்பாந்தள்பிறையெயிற்றலகை துடிம
ழுமான்கொடுஞ்சினத்த, புலியழற்பகுவாய்முயலகன்செந்தீயி
சன்முன்பொங்கிவந்தனவே. (உகூ)

பாந்தளையணியாவலகையோடாடிப்பயில்துடிமழுமறியே
ந்திக், காந்துவெந்தறுகட்புலியுரித்தசைத்துக்கனல்விழிமுயல
கன்முதுகிற், சேந்தபொற்கமலத்தாளினூன்றிதெறுதழலொ
ருகரத்தமைத்தாங், கேந்திளங்கொங்கைமாதுமைகண்டுவப்பவெ
ம்பிரான்றிருநடம்புரிந்தான். (௩0)

முனிவரரழல்வாய்ச்சாபமுமாவி சாரமுமுமறைப்பொ
ருளாம், புனிதன்மேற்செல்லாதொழிதலும்வெருவிப்புண்ணி
யமூர்த்திமுன்னெய்தி, யனகனியாரையருப்பிளமுறுவலணங்கி
வள்யாரெனவினவக், கனிமொழியென்றன்மனைவியான்கயிலைக்
கடவுண்மாமுனிவரனுமால். (௩க)

தாருகாவனத்திற்றவஞ்செயப்புகுந்தே மௌனவிறைசாற்ற
லுமுனிவர், வேரியங்கூந்தற் கணிகையிற்றிரியும் வெள்வளைத்
தோளியைவிடுத்துச், சீரியதவநீசெய்கெனநீவிர்தெரிவையரு
டன்றவம்புரித, லாரியவொழுக்கேபன்னியர்கற்பீங்கீதெனிலழ
குடைத்தாமால். (௩உ)

என்றுமாமுனிவர்தமையிகழ்ந்துரைத்துவசிட்டனற்சாலை
யினெய்தி, மன்றலங்கூந்தலருந்ததிபூசைமகிழ்ந்துவான்றொட
ர்பொலங்குடுமிக், குன்றவிற்குழகன்பெண்ணுருவமைந்தகுளி
ர்பசுந்துளவினனோடு, மன்றனுண்மலர்தூய்வானவரோத்தமகிழ்
வொடுமறைந்துபோயினனால். (௩௩)

எம்பிரான்றன்னைக்கண்ணுறக்கண்டுமறிந்திலிதேத்தலாமை
யினால், வெம்புவெந்நோயிற் பசியினிற்றுயரில் முனிவரர்மிகவு
மெய்யவருந்தி, வம்பவிழ்கமலப்பொருட்டினிலுறையும் வானவு

ன்மருங்குசென்றெய்திக், கம்பமுற்றுடலநடுங்கவாய்புலர்க்கட் வுண்மாமுனிவரரிசைப்பார். (௬௪)

எல்லியும்பகலும் வெப்புநோய்முதல பிணியினாலெண்ண றுதுயரா, னல்குரவதனான்மெலிந்தன மிதற்குக்காரணநவிலுதி யெனலுந், தொல்லைமாமறைகளின்னமுமறியாத்தோன்றலைக்க ண்ணுறக்கண்டு, மல்லல்செய்தமையாலடைந்ததித்துயரென்ற ருமறைக்கிழவனுங்குரைத்தான். (௬௫)

வங்கமேறாட்டும்பாய்மரமதனிலினிதினில்வதிந்தமாப்பற வைக், கங்கதுவல்லாற்பற்றிலாததுபோலாருயிர்த்தொகையனை த்தினுக்குங், கங்கைவேணியன்ற னல்லருளல்லாற் கனைகள்வே றுளதுகொலதனாற், றிங்களஞ்சடையோனிலிங்கபூசனைநீர்வை கலுஞ்செய்ம்மினென்றுரைத்தான். (௬௬)

முண்டகப்பொகுட்டி னரசுவீற்றிருக்கு முதல்வனைல்லரு ளொடுமுனிவர், கண்டிகைமாலைபூதிமெய்ம்முழுதுமணிந்துமு கங்குலும்பகலும், வண்டுறுமலர்தூஉயிசனஞ்செழுத்தும்புகன் றவனடிமலர்வழுத்துந், தொண்டனாயேத்திமனைவியரோடுமி லிங்கபூசனைத்தொழில்புரிந்தார். (௬௭)

தாருகாவனத்திற்பலியிரந்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௬௬௧.

நாற்பத்திரண்டாவது

## தாருகாவனத்துமுனிவர்க்குச்சிவனருள்புரிந்த வத்தியாயம்.

அள்ளிலைக்கமல மெல்லிதழ்வாட்டு மரும்பனிப்பருவநீர் பாடிந்து, முள்ளுநர்பருகும் பங்குனிப்பருவத் தோங்குமந்தழ லிடைநின்றுந், துள்ளிநீருறைக்குங்கார்படிபருவஞ்சோனைமா மழையிடைநின்று, மெள்ளருமுனிவர்வளியயின்றினிதினிலிங் கபூசனைபுரிந்திருந்தார். (௧)

ஆங்கவர்மம்மர்க்கிழங்கினையகழ்வானறணிப்புரிசடைப்பெ ருமான், கோங்கெழில்கவற்றிக்கவின்வழிந்தொழுகுங்குவிமுலை க்கொடியொடும்போந்து, மாங்குயிற்றொழுதி யின்னிசைமுழ வர்வண்டுபாட்டயர்தரத்தோகை, யாங்கணுநடிக்குந்தாருகாவ னத்தினெய்திமற்றிங்கிவைபுரிவான். (௨)

ஓரிடைகுனிக்கு மோரிடைதீந்தே னுகுத்தெனவருமறை பாடு, மோரிடையையமேற்குநர்போலவுலாவருமோரிடையெ ய்திச், சீர்கெழுவியோகம்பயின்றுவீற்றிருக்குமோரிடைவற்த்

னிற்சிரிக்கு, மோர்கலிங்தொழுகுமிளமுலைக்கோதையிணைவிழிக விப்பவெம்பெருமான். (ங)

அன்னவைநோக்கி யருந்தவமுனிவர் பன்னியரோடும்மாங் கெய்திக், கன்னலங்குதலைமங்கையோர்பங்கன்கழலிணைமலர்க டேஎய்ப்பழிச்ச, வென்னையாளிறைவனுயிரகோடியெறிகதிரொறி த்தெனவயங்கும், தன்னுருக்காட்டிநிற்றலுமளப்பின்மறையினு ற்றனித்தனிதுதித்தார். (ச)

மெய்ம்மயிர்சிலிர்ப்பக்கண்கணீர்வாரப்பழிச்சுமெய்த்தவர் தமைநோக்கி, யம்மநீர்கட்வுளின்றெனக்கருமம்பண்ணியவரிற பவோர்ந்து, நும்முன்யாமுன்னம் போந்தனமென்ன நுவன்று மெஞ்ஞானமுமுறையா, வெம்முடையிலிங்கபூசனைபுரிகென்றி றைவியோடிறைவனுங்ககன்முன். (ரு)

இமயவிற்குரிசில் சேவடிபோற்றி யிருந்தவப்பிருகுவை முதலோ, ரமையறுபூசையளப்பினுட்பண்ணியிருத்தலுமாயிர கோடி, யுமிழ்கதிர்ப்பருதி யோங்குவந்தகல் வானுதித்தெனவி மயவெற்பளித்த, கமழ்நறுங்கூந்தலுமையவடோன்றக்கடவுண் மாமுனிவரோத்தெடுத்தார். (சு)

அன்னைதாளிறைஞ்சிமுனிவரர்போற்றுமமைதியினறிவரு ம்பொருளா, மென்னையாளுடைய வோர்குழைமுக்கணீர்ஞ்ச டையந்தணன்றோன்றி, யுன்னருந்தவத்துமுனிவரர்தெளியச் சாங்கியயோகமாங்குரைத்துப், பின்னரும்வேட்டநல்வரமளித் துப்பிராட்டியோடகன்றனன்பெரியோன். (எ)

கோசிகன்வசிட்டனத்திரிபிருகுமுதலியகோதறுமுனிவ, ராச றுமிலிங்கபூசனையாற்றியருவினைத்தொடரறுத்திருந்தா,ரேசிலி க்காதைபடித்தவர்கேட்டோரொழுதினோரனைவருமீசன், றேசு றுகமலத்தாளினிலடைந்துசிறப்பொடுமினிதுவீற்றிருப்பார்.()

தாருகாவனத்துமுனிவர்க்குச்சிவனருள்புரிந்தவத்தியாயமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கூஙகூ.

நாற்பத்துமூன்றாவது

## நருமதையின்சிறப்புரைத்தவத்தியாயம்.

தருமன்முன்கேட்பவிழைந்துமார்க்கண்டன்சாற்றியநரும தைச்சிறப்பைப், புருவவோடரிக்கட்புலோமிசைகணவன்யாழ் முனியுவந்திடமுன்னங், திருவமர்துளவோனுரைத்திடும்வண் ணஞ்சிறப்புடனுரைத்திடுகென்ன, வரிதுணர்கேள்விமுனிவரர் கேட்பச்சூதமாமுனிவரனறைவான். (க)

குட்டம்புரைச்செருத்தற்குவிமுலைப்பசுவோர்கோடியோர் கோடிகொய்யுளைமா, வடம்புனைகொங்கைக கன்னியர்கோடிம றையவர்க்கினிதளித்திடினு, மிடைந்தகல்லனைத்துமிலிங்கமாய் த்திகழும்வியப்புறுநருமதையாற்றி, னடைந்துநீராடப்பெற்ற வர்பேற்றிலாயிரத்தொன்றும்வந்துறுதால். (உ)

கங்கைமாநதியங்காசியினெய்திற்புண்ணியதீர்த்தமாங்கட வுட், டுங்கவெண்டிரைசேர்சரச்சொதிகுருக்கேத் திரத்துமிற் றாய்தெனவுரைப்பா, ரெங்கணெய்திடினுநருமதைநன்னீர்ச்சிற ப்புறுமென்றுநான்மறையு, மங்கமோராறுமறைந்திடுமென்னவ ருந்தவமுனிவரருளைப்பார். (ங)

அமரகண்டத்தினருமதையொழுகுந்துறையினிலாடியபெ ரியோர், கமழ்நறுந்தூற்றுங் கற்பகத்தருவினிழலிற்கரும்புறழ் தீஞ்சொற்,குமரிவண்டாரற்றுக்கொழுமலர்க்கூந்தலரம்பையர்கு விழலைதோயா, விமயவர்நாட்டிலெண்ணறுபருவமிந்திரன்வா ழ்த்தவீற்றிருப்பார். (ச)

நருமதையாற்றின்றென்கரைமருங்கிற்கபிலைமாநதியுளதத னில், விரிதலைக்கோட்டுமரமுயர்கொடிகளரில்வளர்புல்விழுந் தாலும், திருவநீடுறக்கன்னகரதனிற்செஞ்சிலைக்காமனேயனை ய, வுருவினையெடுத்தாங்கரம்பையரோடும்பல்பகலுவந்துவீற் றிருக்கும். (ரு)

அந்நதிக்கரையில்விசாலியகரணியெனுநதியுளததிற்றோய் ந்தோர்,கன்னலங்குதலையயிலுறழ்நெடுங்கட்காம்புறழ்பசியமெ ன்றடந்தோள், வன்னமேகலைசூழ்பையரவல்குலரம்பையர்வரு முலைபுணர்ந்து, பொன்னகரதனிலிந்திரனுவப்பப்பொற்பொடு மினிதுவீற்றிருப்பார். (சா)

வேறு.

உளத்தினைப்புனிதமாக்குமுருத்திரதீர்த்தமாதி
துளக்கறுகாளிதீர்த்தமிறதாய்த்தொகுத்ததீர்த்த .
மளப்பிலவாகுந்தூயநருமதையாற்றினென்னக்
களித்தபேரன்பின்மிக்ககடவுண்மாமுனிவர்சொல்வார். (எ)

மாயிருஞாலத்துள்ளமன்னுயிர்த்தொகைகட்கெல்லா
மாயிரநாவுண்டாகியறையினுமறையொணாதற்
பாய்புலியுரிவைபோர்த்தபண்ணவனருளினோங்குந்
தேய்வறுபுகழின்மிக்கநருமதைச்சிறப்புமாதோ. (அ)

அன்னமாநதியிற்றோய்ந்தோனுங்கதன்மருங்கிற்சென்றோன்
றன்னிருகையாற்றொட்டோன்றுளிணைவிளக்குகின்றோன்
பன்னிருகாதத்தேயுமிருந்துளம்பாவிக்கின்றோ
னுன்னருந்துறக்கவீட்டினுவப்பொடுமிருப்பான்றே. (கூ)

நருமதைக்கேகவெண்ணியோரடியிட்டோர்கன்னின்
முருகவிழ்கரியகூந்தன்முகிழ்முலைத்தெய்வமாதர்
திருநலங்கனியுஞ்செவ்வாய்ச்செந்துவர்த்தேறன்மாந்தி
யிரவுநன்பகலுமன்புற்றிமயவர்போலவாழ்வார். (௧0)

வேறு.

மாற்றெறிந்தோங்குநருமதைநதியிற்படிந்தவர்வானுலகெய்திக், கூற்றிருந்தாலுங் கொலைவிழிமகளிர் குங்குமச்சேதகம்பொறித்த, தாற்றிளம்பெண்ணைக்குரும்பையிற்சிறந்ததடமுலைக்கோடுபாய்ந்துழக்க, ஆற்றிருந்தழிதேனொழுகுமென்மலர்தாள்கற்பகநீழலினுறைவார். (௧௧)

நருமதைச்சிறப்புணர்த்த வத்தியாயமுற்றிற்று.
ஆ திருவிருத்தம்—கூ௫0.

---

நாற்பத்துநான்காவது

## நந்திக்குமுடிசூட்டியவத்தியாயம்.

என்றலுமகவான்யாழ்முனியோடும்வினவமாபவவினிதிசைத்த, பொன்றிடாநந்திகாதையையெமக்குப் புகலெனமுனிவரர்கேட்ப, வொன்றியவுணர்வின் மெய்ம்மயிர்சிலிர்ப்பவுவப்பொடும்வியாதனைத்தொழுது, துன்றுபேரன்பின்விழிகளீரவாரச்சூதமாமுனிவரனுரைப்பான். (௧)

கண்டுகேட்டுயிர்த்துண் டுற்றறிபுலன்கள் காத்தமெய்க்கட்வுண்மாமுனிவர், வண்டுபாட்டயருமுண்டகப்பொருட்டுவானவனுலகினிலெய்தி, விண்டுவுமறியாவீசனைப்போற்றிவிழுத்தவமினிதினிலாற்ற, வண்டர்நாயகவோர்தலமருள்கென்ன வடியிணைபரவிநின்றுரைத்தார். (௨)

சேற்றினிற்பிறவாச்செழுங்கமலப்பூந்தவிசினிலினிதுறைசெல்வன், மாற்றருநேமியமைத்திஃதுருட்டின்வாய்மடிந்தொழிதருமிடத்தி, ளுற்றருந்தவநீர்புரிகுதிரென்னவளித்தலுமயன்மொழிப்படியே, தோற்றியநேமியுருட்டிவாய்மடிந்ததலத்தினிற்றொல்தவம்புரிந்தார். (௩)

நேமியின்கூர்வாய்படிந்தவித்தலத்தைநயிமிசாரணியநீள்வனமென், றுமுறைபுணர்ந்தோருறைக்குவரிந்தப்புண்ணியதலத்திளிலமர்ந்து, காமனையெரித்தகண்ணுதன்மூர்த்திகழலிணைமனத்திடையிருத்தி, யாமமும்பகலுமாயிரம்பருவஞ்சிலாதனல்லிருந்தவம்புரிந்தான். (௪)

மனநெறிப்படரு மைம்பெரும் பூதமடக்கியமாதவக்கிழவன், வினையறவாற்றுந் தவத்தினைநோக்கி வெண்ணிறப்பூதிமெய்

யணிந்து, கனைகடாஞ்செருக்கிக்கண்படைபெறாதகளிற்றுரிமெ
ய்யினிற்போர்த்த,நனைமலர்க்கொன்றைவேணியெம்பெருமான
ைாவிடையிவர்ந்துமுன்னின்றான். (ரு)

பொன்னுறைகழித்தபுலவுறாச்சூலப்புங்கவனுளமகிழ்கூர்
ந்தாங், குன்னுளம்விழைந்தகேட்டியென்றுரைப்பவுவப்பொடு
முனிவரன்வணங்கி, யென்னையாளிறைவபிறப்பிறப்பின்றியெம்
பிரான்போலெழிறிகழ்ந்து,தன்னிகர்தன்னையன்றிவேறில்லாப்
புதல்வனைத்தருதியென்றுரைத்தான். (சா)

அன்னநன்மகவுதந்தனமென்னவைம்முகக்கடவுளாண்டக
லப், பன்னருஞ்சிறப்பிற்சிலாதனுண்மகிழ்ந்துபழிப்பறுமகமி
ணிதியற்றிக், கொன்னுனிக்கொழுவாய்நடந்தநீள்சாலிற்குருகு
பேர்க்குன்றறவெறிந்த, பொன்னெயில்கரத்தமுருகுறழ்சாயற்
புதல்வனல்லெழிலொடுமுதித்தான். (எ)

உதித்திடுஞ்சிறுவன்றனைக்கடிதெடுத்தாங்குச்சிமோந்தரு
ந்தவசிலாதன், மதித்திடுமுனிவர்குழுவொடுஞ்சாதகன்மமே
முதலவற்றெவையும், விதிப்படிபுரிந்துமுப்புரிநாலுமேதகுவி
ழைவினிற்புனைந்து, முதுக்குறைவுற்றமுனிவரான்மறைகண்
முழுவதும்பயிற்றுவித்தனனால். (அ)

அருமறைச்சிலாதமுனிவரன்புதல்வனருளொடுமுருத்தி
ரசமகந், தெருளொடுங்கோடியுருவினிதேற்றத் திங்களங்கண்
ணியோன்றோன்றிக், கருதியதளித்துங்கேட்டியென்றுரைப்பக்
கண்ணுதலின்னுமோர்கோடி, யுருவுயர்சமகஞ்செபித்திடவா
யுறுதவுதியெனவருள்புரிந்தான். (கூ)

பின்னுமோர்கோடியுருசசெபித்திடலும்பிஞ்ஞகன்மீட்டு
ம்வந்தெய்தி, யின்னுமோர்கோடியுருச்செபித்திடுதற்காயுணீ
யருளெனவியம்ப, முன்னவன்வழங்கியேகலும்பின்னுமுறையி
னிற்சமகமோர்கோடி, பன்னருமறைதேர்சிலாதனற்புதல்வன்
பரிவொடுஞ்செபித்தினிதிருந்தான். (க0)

ஆடகப்பகம்பொன்விழுதுவிட்டன்னவவிர்சடையந்தண
ன்றோன்றி, நீடிருந்தவத்தாலுவந்தனம்விழைந்தகேளெனநிரு
மலவின்னுங், கோடிநற்சமகமோதுவான்வாழ்நாளருள்கெனக்
குன்றவிற்குழக, னேடவிழ்கமலத்தாழ்தடக்கையான்முதுகு
தையந்திவையிசைப்பான். (கக)

அருமறைச்சிறுவவுருத்திரசமகஞ்செபித்திடலொழியள
விறந்த, மருமலர்ப்பொகுட்டுப்பிரமர்தங்கற்ப மல்லலந்திரு
வொடும்பொலியா, வுருகெழுதோற்றக் கணங்கட்பதியாயினி
தினிலுறைந்தொளியெறிக்கும், பொருவருஞானச்சுடர்ப்பிழ
ம்பாதீமெனதுழைப்பொருந்துதியென்றான். (கஉ)

எண்டிசைப்பாலர்தாமரைக்கிழவ னிருநிலமளந்தசேவடி யோன், றிண்டிறலவுணரியக்கர்கந்தருவர்சித்தர்சாரணர்புகழ் ந்தேத்தக்,கொண்டலின்முழவந்துவைப்பவெண்சங்கங்குரறிட வலம்புரியார்ப்பப், பண்டருகுதலைப்படர்மூலைத்துவர்வாயரம் பையர்பதம்பெயர்த்தாட. (கங)

பொய்யிடைத்துவர்வா யரம்பையர்கையினலங்குசாமரை பொதியவிழ்ப்ப, மையிருள்பருகும் வாண்மதியன்ன மணிக்கு டைவிஞ்சையரெடுப்ப, வெய்யசெங்கதிர்காலருக்கர்பன்னிருவ ர்மின்மினியெனவொளியெறிப்பச், செய்யபன்மணியின் மூகடு வேய்ந்துயர்ந்ததிருத்தகுமவுலிசூட்டினனால். (கச)

விரிகதிர்மவுலிசூட்டியபின்னர்விளங்கொளிநித்திலமுருவ, லரிமதர்மழைக்கட்சுயசையைச்சிலாதனரும்பெறற்புதல்வனுக் கினிதி,னெரியழற்சான்றாய்த்திங்களங்கண்ணியெம்பிரான்மண ம்புரிவித்துத், திருமகள்கொழுநனுன்முகன்பெறாதசெல்வமு மினிதளித்தனனால். (கரு)

இத்தகைநந்தி காதையைப்படித்தோர் நயிமிசாரணியத்தி லீசன், வித்தகமலர்த்தாள் வழுத்தினோர்வியந்தோர்விண்ணவ ருலகினிலெய்தி, முத்தகமூரிஞ்சும் படர்மூலைத்துவர்வா யரம் பையர்முகிழ்நகைமாந்திப், பைத்தபாம்பணிந்தகண்ணுதற்சா மிபதமலர்நீழல்வீற்றிருப்பார். (கசு)

கங்கைசூழ்கிடந்தகாசியைமுதலாக்கருதருஞ்செபேச்சுர மீறாய்த், துங்கவெள்விடையோனமர்ந்தநற்றானமளப்பிலசொ ல்லிடிற்பெருகு,மங்கவைகருதிச்சுருக்கியாமுரைத்தேமறையுமி க்காதையைக்கேட்டோர், திங்களங்கண்ணி புனைந்தவெம்பெரு மான்சேவடிசேர்வரென்றுரைத்தான். (கஎ)

நந்திக்குமுடிசூட்டியவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௩௩௬௭.

நாற்பத்தைந்தாவது

## நைமித்திகப்பிரளயமுரைத்தவத்தியாயம்.

தோற்றமனைத்தும் விரித்துரைத்தாய் துகடீரொடுக்கப்பகுதியி [னைச்
சாற்றுகென்னநாரதனுந்தவளக்களிற்றுப்புத்தேளும்
போற்றிக்கேட்பத்திருநெடுமால்புகன்றவண்ணமுனிவராருக்
காற்றல்சான்றவிருந்தவத்துச்சூதமுனிவனறைகுவனால். (க)

பேசவரியநித்தியஞ்சேர்நயிமித்தியநீள்பிராகிருத [ன்ப
மேசலருமாத்தியந்திகமென்றொருநால் வகைத்தாமொடுக்கமெ

ரசிவிவற்றினித்தியமென்றறைதனடக்குஞ்சாக்காடு
ராசினயிமித்திகன்பிரமன்பகற்போயுலகமடிந்திடுதல். (உ)

டைத்தற்கரியபிராகிருதமொண்டாமமைமேலுறைவோர்க்கு
பரைத்தவாயுள்கழிந்தொழியவுலகம்யாவுந்தனிமடிந்து
தரித்தற்கரிதாய்ப்பிரகிருதிதன்னிலுறலாத்தியந்திகஞ்சீர்
விரித்தஞானத்தாலான்மாவிளங்குமுந்திதனிலடைதல். (௩)

வேறு.

நான்முகக்கிழவன்பகன்முடிவதனினளிகதிரிரவிநாற்முண்டு
வானுயர்பூமிபாதலமனைத்தும்வகையறத்தழற்கதிர்பரப்பிக்
கூன்முதுகாமைமுதுகினிற்கிடந்தகுவலயமுடுத்தவேழ்கடலு
மேனையபுனலும்பசையறப்பருகியெறிகதிரோழ்சுடராகி. (௪)

சுடுபொறிச்சிதறு மெரிமுகக்கடவுடன்னெடுஞ்சுடருமிழ் கதிர்க, ளடுதொழில்புரியுங்கூற்றின்வெங்கூற்றின்பணியினாற்கா லத்தினமைத்து, படிபுவலோகமுயர்சுவலோகம் பாதலந்திகழ் மகலோக, முடிவுறவுருக்கிச்சராசரமனைத்துமுழங்கெரியாலெ ரித்திடுமால். (௫)

பருவமோர்நூறுமுகிற்குலங்குழுமிப்பாவடிக்களிற்றினீள் கரம்போன்,மருவுமற்றேரோர்தாரைகள்விடுத்துவானுருமேற் றெடுமெதிர்ந்தாங், குருகெழுபருதி வெங்கதிர்செந்தீ முழுவது மொன்றறவவித்துப், பெருகுதண் புனலிற் பிரளயங்கோப்ப வொழிவரச்சோனைபெய்திடுமால். (௬)

இன்னணமுரைத்தகாரணந்தன்னிலெழுதருபழமறைக்கி ழவ, னுன்னருஞ்யோகத் துறங்குவன்சாத்து விதத்தொடுமொ ன்றுமிக்கற்பந், துன்னரும்வாரக்கற்பமென்றுரைப்பர்தூய்மல ருந்தியான்றனையு, மன்னமூர்தியையுமீன்றவனீசனெனவுணர்ந் தவர்நரகடையார். (௭)

நைமித்திகப்பிரளயமுரைத்தவத்தியாயமுற்றிற்று.

ஆக திருவிருத்தம்—௲௭௪.

---

நாற்பத்தாறாவது

## பிராகிருதபிரளயமும் ஆத்தியந்தப்பிரளயமுமுரைத்த வத்தியாயம்.

உரைபெறுநைமித்திகப்பிரளயத்தைநவின்றனமுயர்பிரா கிருதப், பிரளயமுரைப்பன்கேண்மினீர்பார்த்தவிரண்டுசென் றுலுயர்பிரம, னுருகெழுசீற்றத்துருத்திரன்பாதத்தொடுங்கும வ்வுருத்திரன்கோடி, யிரவினல்லுருவாயுயர்பிரமாண்டமெரிப டுதற்கணுலெரிக்கும். (௧)

ஒள்ளொளிப்பிரமசிரசினுங்கணையான்மகேச்சுரனுலப்பி
னுளமரு, மெள்ளருந்தேவர்தானவர்யாருமிறப்பவோர்கணத்தி
னிலெரித்துத், தள்ளரும்பிரமர்தலையொடென்பணிந்துசங்கரி
கண்டுகண்களிப்ப, வள்ளிலைச்சூலவேழிரித்தினிதினனந்தநடம்
புரிந்திடுவான். (௨)

உலகெலாமீன்றவன்னையுமகேசனுருவிடைமாலொடுங்கா
க்கு, மலகிலவிளையாட்டாடியவெந்தையமலமாய்நிட்களமாகி,
நிலவுதற்பரமாய்ப்பரமமாய்ச்சித்தாய் நித்தியமாய்வெறுவெளி
யாய், மலைவறநின்றநன்னுருவெய்தியெங்கணுஞ்சிறந்தொளிவ
யங்கும். (௩)

மாநிலம்புனலிலொளிக்குமப்புனல்போய் வன்னியிற்கரக்
குமவ்வன்னி, யூனமில்வளியிற் சேருமவ்வளிபோயுயர்விசும்ப
டையுமவ்விசும்பாங், கேனையவாங்காரத்திடையொளிக்குமாங்க
துமகானிடையெய்து, மானவம்மகான் போயுயர்பிரகிருதி தன்
னிடையினிதினிலமரும். (௪)

ஒளியினுள்ளொளியாயுண்மையாய்நின்றமகேச்சுரனுலப்பி
லாதோங்கும், களியினிற்சிறந்தபுருடனைப்பிரதானங்கலந்திடா
தருளொடும்பிரிக்கு, மளியுடைப்பிரதானமுதல்விசேடாந்தந்
துடைத்தவையாக்கிநின்றளித்தல், வெளியினுள்வெளியாய்வி
மலமாய்நிறைந்தசிவனெனவருமறைவிளம்பும். (௫)

உரைத்திடுமுயர்தி கடந்தருமாயைச் சிமிழ்ப்புறுத்தைம்பு
லொடுக்கிக், கருத்துறத்தம்மைத்தாமெனவுணருங்கடவுண்மா
முனிவராக்கினிதி, னருத்தியிற்றாய்தாய்விளங்குமாத்தியந்தப்
பிரளயமாகருவிப்பதுவும், விரிந்துநான்மறையுந்திங்களங்கண்
ணிவிமலனென்றினிதெடுத்தியம்பும். (௬)

உலகெலாமளந்தோன்மலரயன்மகவானுள்ளழற்கடவுள்
வெம்பருதி, நிலவுகொப்புளிக்குந்திங்களஞ்செல்வனுதியாய்நிக
ழ்த்திடுந்தேவ, ரலகறுசீர்த்திமகேச்சுரன்கூற்றென்றறைவரொ
க்கடவுளையேனு, மலர்கடூய்ப்பழிச்சின்மதிமுடிக்கண்ணிவான
வர்ப்பழிச்சியதாமால். (௭)

சிறந்திடுந்தேவர் யாவரைத்தொழினுஞ் சிவனடியிறைஞ்சி
யதாமாற், பிறந்திறந்துழலுந்தேவரையுளத்துப்பேதுறவான்ம
திமருண்டு, மறந்துமேத்திடாமன்மதிதவழ்குடுமிமாணிக்கமலை
யினையேற்றிக், கறங்கெனத்திரியும்பிறவியிற்புகாதுமுத்திவீட்டி
ருந்துளங்களிப்பார். (௮)

அன்னநின்மலமாயுறைமகேச்சுரனேபிரமமாமன்றெனம
திக்கிற், கன்னியாம்புரிசையுடுத்துயர்காசிப்பதியினிற்கடவுண்மு

னின்று, முன்னவஞ்சவித்தோங்கந்தணர்கேட்பமுகுந்தனைப் பிரமமென்றழிய, தனனருஞ்செருக்காற்கையெடுத்துரைத்தவி யாதனெய்தியபயன்சார்வார். (௯)

எம்பிரான்பரமவுருவினையுளத்தி னெண்ணுதற்கரிதெனிற் பிறைதாழ், தும்பையஞ்சடையுங் கண்ணொருமூன்றுநீற்றொளி துதைந்தவெண்டோளும், வம்புலாங்கொங்கை மலைமகளிடனு மாகியமானுருவதனை, யைம்புலனடக்கியுளத்திடைநினைப்பின ரும்பெறன்முத்திவீடடைவார். (௧0)

சீர்கெழுகூர்ம புராணமுற்றுணர்ந்தோர் சிவனடிநீழலி னுறைவா,ரோர்பதங்கற்றோர் விண்டுவினுலகினுறைகுவரோரொழு த்துணர்ந்தோர், பார்முழுதாண்டுநன்மகவுயிர்த்துப்பரிவொடு மினிதுவீற்றிருந்தாங், கோர்கெழுகமலப்பொகுட்டுவீற்றிருக்கு மிறையொடுமுத்திவீடடைவார். (௧௧)

என்றுயர்கூர்மனிந்திரத்துய்ம்மற்கியம்பியகாதையாழ்முனி க்குந், துன்றிருவிசும்பு காக்கும்வாசவற்குஞ் சொல்லியவண் ணமாய்ந்தினிதிற், கன்றுவெங்காமக்குரும்பறவெறிந்தகடவுண் மாமுனிவரர்கேட்ப, நன்றறிகேள்வியியாதனைப்பணிந்துசூதமா முனிவரனவின்றான். (௧௨)

வாழிநான்மறையோர்வாழியெவ்வுலகும் மழைவளமெங்க ணுஞ்சுரக்க, வாழிவாள்வேந்தரானினம்வாழிவைதிகச்சைவம் வாழ்ந்திடுக, வாழியிப்புராணங் கற்றவர்கேட்டோரினிதெனம கிழ்ந்தவர்யாரும், வாழிநற்றருமமரனடித்தொண்டர்வைகலுமம கிழ்ந்துவாழியவே. (௧௩)

எதிர்மலைந்தேற்றவெஞ்சமத்தரசரிடுதிறைகடையளந்தறி யா, மதுரையும்புகாரும் வஞ்சியும்புரக்கு மானவேல்வழுதியர் பெருமா, னதிர்பொலங்கழற்காலடலதிவீரனரிறபத்தெரிந்து நன்கிசைத்த, முதுதமிழ்க்கூர்ம புராணமுற்றுணர்ந்தோர்முத் திவீட்டினிதுவீற்றிருப்பார். (௧௪)

பிராகிருதப்பிரளயமுமாத்தியந்தபிரளயமுமுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—௯௮௮.

---

உத்தரகாண்ட முற்றிற்று.

பாயிரமுட்பட காண்டம் உ - க்கு அத்தியாயம்—௯௭ - க்கு

திருவிருத்தம்—௩௭௬௭.

---

கூர்மபுராணம்

முற்றிற்று.

# விளம்பரம்.

இதனடியிற் கண்டிருக்கும் புத்தகங்களை வேண்டியவர்கள் சென்னைத் தண்டையார்பேட்டை இலக்ஷ்மீவிலாஸ அச்சுக்கூடத்ததலைவராகிய ம-ா-ா-ஸ்ரீ, பு. சு. கிருஷ்ணசாமிபிள்ளை அவர்களிடத்திலும்.

சென்னைச் சிந்தாதிரிப்பேட்டை ஐயாமுதலியார்வீதி - ௩௬ - வது கதவிலக்கமுள்ள ம-ா-ா-ஸ்ரீ, கொன்றமாநகரம் முருகப்பமுதலியாரவர்கள் வீட்டில் அருணாசலமுதலியாரவர்கள் குமாரர் சண்முகசுந்தரமுதலியாரிடத்திலும்,

சென்னைத் தங்கசாலைவீதி சுமைதாங்கிக்கடுத்த-௨௨௧-வது கதவிலக்கமுள்ள வீட்டில் வே. குமாரசுவாமிஐயரிடத்திலும் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

| | ரூபா. | அணா. | பை. |
|---|---|---|---|
| இலிங்கபுராணம் | ௧ | ௮ | 0 |
| கல்லாடம் - உரை | ௩ | 0 | 0 |
| பாதசாத்திரம் | 0 | ௮ | 0 |
| வசவபுராணம் படத்துடன் | ௧ | ௮ | 0 |
| பழமலையந்தாதி பதவுரை | 0 | ௩ | 0 |
| திருப்புகலூரந்தாதி பதவுரை | 0 | ௩ | 0 |
| தில்லைக்கலம்பகம் | 0 | ௧ | ௬ |
| பிள்ளைப்பெருமாளையங்கார்பிரபந்தம் | 0 | ௮ | 0 |

---

சைவசித்தாந்தசாத்திரம் பதினான்கினுள் உரையுடன் அச்சிட்டிருக்கும் சாத்திரங்களின் விபரம்.

| | | ரூபா. | அணா. | பை. |
|---|---|---|---|---|
| திருவுந்தியார் | மூலமுமுரையும் | ௧ | ௮ | 0 |
| திருக்களிற்றுப்படியார் | ஷை | | | |
| இருபாவிருபஃது | ஷை | | | |
| உண்மைவிளக்கம் | ஷை | | | |
| வினாவெண்பா கொடிக்கவி உண்மைநெறிவிளக்கம் | ஷை | | | |
| போற்றிப்பஃறொடை | ஷை | | | |
| சங்கற்பநிராகரணம் | ஷை | | | |
| இவைகளொன்றாய்ச்சேர்த்துக்கட்டியது | | | | |
| சிவஞானசித்தியார்பரபக்ஷம் | ஷை | ௧ | ௮ | 0 |
| சிவப்பிரகாசமூலமுமுரையும் | | ௧ | ௮ | 0 |



ஙின்றா...ழுன்னவஞ்சவித்தோங்கந்தணர்கேட்பமுகுந்தனைப் ரமெ...றழிய, தனனருஞ்செருக்காற்கையெடுத்துரைத்தவி தனெய்தியபயன்சார்வார். (கூ)

எம்பிரான்பரமவுருவினையுளத்தி னெண்ணுதற்கரிதெனிற் றைதாழ், தும்பையஞ்சடையுங் கண்ணொருமூன்றுநீற்றொளி தைந்தவெண்டோளும், வம்புலாங்கொங்கை மலைமகளிடனு கியமாணுருவதனை, யைம்புலனடக்கியுளத்திடைநினைப்பின ம்பெறன்முத்திவீடடைவார். (க0)

சீர்கெழுகூர்ம புராணமுற்றுணர்ந்தோர் சிவனடிநீழலினு றவா,ரோர்பதங்கற்றோர்விண்டுவினுலகினுறைகுவ்ரோரொழு துணர்ந்தோர், பார்முழுதாண்டுநன்மகவுயிர்த்துப்பரிவொடு னிதுவீற்றிருந்தாங், கேர்கெழுகமலப்பொகுட்டுவீற்றிருக்கு றையொடுமுத்திவீடடைவார். (கக)

என்றுயர்கூர்மனிந்திரத்துய்ம்மற்கியம்பியகாதையாழ்முனி நந், துன்றிருவிசும்பு காக்கும்வாசவற்குஞ் சொல்லியவண் மாய்ந்தினிதிற், கன்றுவெங்காமக்குறும்பறவெறிந்தகடவுண் முனிவரர்கேட்ப, நன்றறிகேள்வியாதனைப்பணிந்துசூதமா னிவரனவின்றான். (கஉ)

வாழிநான்மறையோர்வாழியெவ்வுலகும் மழைவளமெங்க வஞ்சுரக்க, வாழிவாள்வேந்தரானினம்வாழிவைதிகச்சைவம் ாழ்ந்திடுக, வாழியிப்புராணங் கற்றவர்கேட்டோரினிதெனம ழ்ந்தவர்யாரும், வாழிநற்றருமமரனடித்தொண்டர்வைகலும ழ்ந்துவாழியவே. (கந)

எதிர்மலைந்தேற்றவெஞ்சமத்தரசரிடுதிறைகடையளந்தறி r, மதுரையும்புகாரும் வஞ்சியும்புரக்கு மானவேல்வழுதியர் பருமா, னதிர்பொலங்கழற்காலடலதிவீரனரிறபத்தெரிந்து ன்கிசைத்த, முதுதமிழ்க்கூர்ம புராணமுற்றுணர்ந்தோர்முத் வீடடினிதுவீற்றிருப்பார். (கச)

பிராகிருதப்பிரளயமுமாத்தியந்தபிரளயமுமுரைத்தவத்தியாய முற்றிற்று.

ஆ திருவிருத்தம்—கூஅஅ.

---

உத்தரகாண்ட முற்றிற்று.

பாயிரமுட்பட காண்டம் உ - க்கு அத்தியாயம்—கூஎ - க்கு

திருவிருத்தம்—௩எசஎ.

---

கூர்மபுராணம்

முற்றிற்று.

# விள்ம்பரம்.

இதனடியிற் கண்டிருக்கும் புத்தகங்களை வேண்டி [illegible] டையார்பேட்டை இலக்ஷ்மீவிலாஸ அச்சுககூடத்துத [illegible] ா-ஸ்ரீ, பு. சு. கிருஷ்ணசாமிபிள்ளை அவர்களிடத்திலும்.

சென்னைச் சிந்தாதிரிப்பேட்டை ஐயாமுதலியார்வீதி - ௩௬ - வது கதவிலக்கமுள்ள ம-ா-ா-ஸ்ரீ, கொன்றமாநகரம் முருகப்பமுதலியாரவர்கள் வீட்டில் அருணாசலமுதலியாரவாகள் குமாரர் சண்முகசுந்தரமுதலியாரிடத்திலும்,

சென்னைத் தங்கசாலைவீதி சுமைதாங்கிக்கடுத்த-௨௧-வது கதவிலக்கமுள்ள வீட்டில் வே.குமாரசுவாமிஐயரிடத்திலும் விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்.

| | ரூபா. | அணா. | பை. |
|---|---|---|---|
| இலிங்கபுராணம் | க | அ | 0 |
| கல்லாடம் - உரை | ௩ | 0 | 0 |
| பாதசாத்திரம் | 0 | அ | 0 |
| வசவபுராணம் படத்துடன் | க | அ | 0 |
| பழமலையந்தாதி பதவுரை | 0 | ௩ | 0 |
| திருப்புகலூரந்தாதி பதவுரை | 0 | ௩ | 0 |
| தில்லைக்கலம்பகம் | 0 | க | ௬ |
| பிள்ளைப்பெருமாளையங்கார்பிரபந்தம் | 0 | அ | 0 |

---

சைவசித்தாந்தசாத்திரம் பதினான்கினுள் உரையுடன் அச்சிட்டிருக்கும் சாத்திரங்களின் விபரம்.

| | | ரூபா. | அணா. | பை. |
|---|---|---|---|---|
| திருவுந்தியார் | மூலமுமுரையும் | | | |
| திருக்களிற்றுப்படியார் | டிை | | | |
| இருபாவிருபஃது | டிை | | | |
| உண்மைவிளக்கம் | டிை | | | |
| விநாவெண்பா கொடிக்கவி உண்மைநெறிவிளக்கம் | டிை | க | அ | 0 |
| போற்றிப்பஃறொடை | டிை | | | |
| சங்கற்பநிராகரணம் | டிை | | | |
| இவைகளொன்றாய்ச்சேர்த்துக்கட்டியது | | | | |
| சிவஞானசித்தியார்பரபக்ஷம் | டிை | க | அ | 0 |
| சிவப்பிரகாசமூலமுமுரையும் | | க | அ | 0 |

